ஓம்

# ரிக் வேத ஸம்ஹிதை

# RIK - SAMHITA

## (First Ashtaka)

## முதலஷ்டகம் மூலமும்

## "நவநீதம்" என்னும் உரையும்

[திருத்தமான புதுப் பதிப்பு]


சென்னை, இராயப்பேட்டை, வேதப்ரவசன மந்திரத்து
சிவத்தியாநாநந்த மஹர்ஷி
தமிழிற் கண்டது.


எனைத்தானும் நல்லவை கேட்க ; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.—குறள்


சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை, சென்னை.

1937

விலை ரூபா 8] [தபாற்கூலி வேறு

# உரிமையுரை

ரிக்வேதி குடும்பத்திற் பிறந்தவளும், ரிக்வேதம் தனது குழந்தையாகவே இருக்க வேண்டும் என்று தனது உடல் பொருள் ஆவி மூன்றையும் இந்நூலுக்கென அர்ப்பணம் செய்தவளும், நியாபதி சேஷகிரி ராவ், ஹநுமாயியம்மை என்னும் தந்தை தாயரின் பெயர் விளங்க உதித்தவளும், எனது பார்யையுமான ரிஷி பத்தினி **ஜாநகியம்மாளின்** ஞாபகார்த்தமாக இந்நூல் வெளிவருவது. (1-1-1937).

---


புத்தகம் கிடைக்குமிடங்கள் :

1. முருகவேள் புத்தகசாலை,
12, கணபதிமுதலி தெரு,
இராயப்பேட்டை, சென்னை.

2. வேதப்ரவசன மந்திரம்,
27, முத்துமுதலி தெரு,
இராயப்பேட்டை, சென்னை.



| ரிஷி பத்தினி<br>ஸ்ரீமதி, ஸௌ.<br>ஜாநகியம்மாள் | ஷியாபதி<br>சேஷகிரிராவ் பந்தலு B. A.<br>மாஜீ ஸால்டு இன்ஸ்பெக்டர் | ஸ்ரீமதி, ஸௌ.<br>ஹநுமாயி அம்மை |
| --- | --- | --- |

# ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்
# ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு

நம்முடைய அன்பார்ந்த அரசரும், சக்கரவர்த்தியுமான ஐந்தாம் ஜார்ஜ் மன்னரவர்களுடைய உதாரகுணத்தையும், தயாள சிந்தையையும், இந்தியாவின்பா லிருந்த அன்பையும் கருதி அவர்களுடைய இனிய ஞாபகம் என்றும் குன்ற திருந்துவரும்பொருட்டு இந்தப் பரிசு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் ஸ்வாமிகளால் ஏற்படுத்தப்பெற்றது. இந்தப் பரிசின் நோக்கம் தமிழ்மொழிப் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் ஆதரவு அளிப்பதேயாகும். "ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு" என இது வழங்கப்பெறும்.

இந்தப் பரிசுக்குரிய மூலதனமாக இப்பொழுது உள்ள தொகை முப்பத்தையாயிர ரூபாய் (ரூ. 35,000); இத்தொகை நூற்றுக்கு வருஷத்துக்கு $3\frac{1}{2}$ வட்டியோடு காலவரையறையில்லாத சர்க்கார் கடன் பத்திரமாக உள்ளது. இதிலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூபாய் ஆயிரம் (ரூ. 1000) வருஷந்தோறும் ரொக்கப் பரிசாக அளிக்கப்பெறும். 1935-36ஆம் வருஷத்துச் சென்னைச் சர்வகலாசாலைக் காலண்டர் தொகுதி 1, பகுதி 2 - இல் கண்ட 7-D விதிப்படியமைந்த தனித் தமிழ் வித்துவான் பட்டத்துக்குரிய முடிவுப் பரீட்சையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி பெறுவோர் இப்பரிசைப் பெறும் தகுதியுடையோராவர். மூலதனத்தில் வட்டியில் இவ்வாறு செலவானது போக வருஷந்தோறும் எஞ்சும் தொகை மூலதனம் லக்ஷம் ரூபாய் (ரூ. 100,000) ஆகும்வரையில் அதனோடு சேர்க்கப்படும். அதன்பின் மூலதனத்திற்குக் கிடைக்கும் வட்டி முழுதும் வருஷந்தோறும் பரிசுத் தொகையாக உரியவருக்கு அளிக்கப்படும்.

பரிசளிப்பதற்குரிய விதிகளும் நிபந்தனைகளும் வருமாறு:—

1. இப்பரிசு ஆண்பாலார் பெண்பாலாராகிய யாவருக்கும் சாதி மத வேறுபாடு கருதாமல் அளித்தற்குரியது.

2. ஸெனெட் சபைக் கூட்டமொன்றில் இந்தப் பரிசு உரியவருக்கு வழங்கப்பெறும். எந்த வருஷத்திலேனும் பரிசுக்குரியவர் நேரில் வந்து பரிசைப் பெற்றுக்கொள்ள முடியாமற்போனால் ஸிண்டிகேட் சபையார் பரிசுத்தொகையை அவருக்கு அனுப்புவதற்குரிய ஏற்பாட்டைச் செய்வார்கள். பரிசு வழங்குவதற்கு முன் அப்பரிசுக்குரியர் இறக்கும்படி நேர்ந்தால் அத்தொகை சட்டப்படி அவருடைய வார்சாக இருப்பவரிடம் சேர்க்கப்படும்.

3. இப்பரிசுத்தொகை பணமாகவேனும் (Cheque) உண்டிலாகவேனும் அளிக்கப்பெறும். இந்தப் பரிசுத்தொகையை எந்தக் காரணத்தைக்கொண்டாவது பகுக்கவோ குறைக்கவோ கூடாது. எந்த ஒரு வரு

ஷத்திலேனும் அல்லது தொடர்ந்து பல வருஷங்களிலேனும் பரிசு கொடுக்கப்படாமல் இருந்தால் அங்ஙனம் கொடுக்கப்படாமல் இருந்த பரிசுத்தொகை முழுவதையும் சேர்த்து எந்த வருஷத்தில் பரிசு வழங்கப்படுகிறதோ அந்த வருஷத்தின் பரிசுக்குரியவருக்கே அளிக்கப் பெறும். பரிசுத்தொகைக்கு மேலே கிடைக்கும் தொகைதான் மூலதனத்தோடு சேர்க்கப்படும்.

4. வருஷந்தோறும், பரிசளிப்பு விவரம், பரிசு பெறுபவரின் பெயர் விலாசம் ஆகியவற்றோடு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்களுக்கும், அவர்களுக்குப் பின் வரும் உரிமையுள்ளவர்களுக்கும் (Successors-in-interest) தெரிவிக்கப்படல்வேண்டும்.

5. பரிசு ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு வேறுபட்ட எந்தக் காரியத்துக்கும் இந்த நிதியை உபயோகிக்கக்கூடாது. இனி எப்பொழுதேனும் சர்வகலாசாலையாரின் 7-D விதிப்படியமைந்த தனித்தமிழ் வித்துவான் பட்டப் பரீட்சைக்குப் பிரதியாக ஏதேனும் ஏற்பட்டாலும், ஷை பரீட்சைக்குரிய விதிகள் மாறுபட்டாலும், பரீட்சை ஏற்படுத்தியவர்களுடைய நோக்கமாகிய தமிழ்க் கல்வி யபிவிருத்திக்கு ஏற்றதென்று கருதும் வகையில் ஸிண்டிகேட் சபையார் இந்தப் பரிசை உரியவருக்கு அளிக்க ஏற்பாடு செய்யும் உரிமையைப் பெறுவார்கள்.

6. பரிசு கொடுத்ததுபோக எஞ்சும் வட்டித் தொகையையும், மூலதனத்தையும் கவர்ன்மெண்டார் எப்பொழுதேனும் திருப்பிக் கொடுக்க நேர்ந்தால் அத்தொகையையும் எந்த விதமான பத்திரங்களிலேனும் வேறு வகையிலேனும் வைத்துப் பாதுகாக்கும் உரிமை ஸிண்டிகேட் சபையாருக்கு உண்டு.

காசிவாசி சாமிநாதத் தம்பிரான்.

---

குறிப்பு :—1. மேலே கண்ட நன்கொடை சென்னைச் சர்வகலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்றுவிட்டது; 1937-ஆம் வருஷ முதல் அமுலுக்கு வரும்.

2. பொருள் முட்டுப்பாடுள்ள இந்தக் காலத்தில் மேலே கண்ட தர்மத்துக்குரிய மூலதனத்தை ஒரே தொகையாகச் செலுத்தச் சாத்தியமானதற்குப் பெரும்பாலும் காரணமாக இருந்தது, அமெரிக்காவில் டொரண்டோ நகரிலுள்ள 'தி மானிபாக்சரர்ஸ் லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியார்' நாம் எடுத்துக்கொண்டுள்ள 4, 46, 416-ஆம் எண்ணுள்ள பாலிஸியின்மேல் சௌகரியமான நிபந்தனைகளோடு ஒரு பெருந் தொகையைக் குறிப்பிட்ட காலத்தில் கடனாகத் தர இயைந்த அன்புடைமையேயாகும்.

# KING GEORGE V MEMORIAL TAMIL PRIZE

This Prize is founded by His Holiness Srilasri Kasivasi Swaminatha Thambiran Swamigal Avargal of Tiruppanandal, to keep ever fresh and green the sweet memory of our beloved Sovereign and EMPEROR GEORGE V for his benevolence, large-heartedness and love for INDIA. The Prize is intended for the encouragement of the pursuit and study of Tamil and it shall be styled as "KING GEORGE V MEMORIAL TAMIL PRIZE."

The Endowment at present consists of Rs. 35000 (Rupees Thirty five Thousand) invested in Government Securities, 3½ per cent Non-terminable Promissory Notes. Out of the annual interest accruing, a sum of Rs. 1,000 (One Thousand) shall be paid in cash as PRIZE, annually, to the candidate who stands first in the first Class in Tamil in the Oriental Title examination, Vidvan (Final) Examination, taking Tamil alone as the subject, under Regulation 7-D in Chapter LVIII of the University Calender, Volume 1, Part II, 1935—36, or the corresponding Regulations of any subsequent issue of the University Calender. The unexpended interest of the Endowment Fund shall be added, to the corpus of the Fund annually and allowed to accumulate until the Capital of the Endowment amounts to Rs. 100,000/- (Rupees one Lakh.) Thereafter, the entire interest accruing from the Capital Fund shall be paid as Prize Amount to the Winner each year.

The terms and conditions of the award of the Prize will be as follows :—

1. The Prize is open to all (male or female) candidates irrespective of caste or creed.

2. The Prize shall be awarded to the Winner at a meeting of the Senate. If, in any year, the Prize Winner is unable to attend personally to receive the Prize, the Syndicate shall make arrangements to send the amount to him. In case of demise of the Prize-Winner before the actual award, the amount shall be payable to his or her heirs according to Law.

3. The Prize amount shall be paid in Cash or by Cheque. The award amount shall on no account be divided or reduced. If, in any year or series of years, the Prize is not awarded, the Prize amount of the year or years shall be added to the Prize amount of the year when the prize is awarded and the full amount shall be paid to the Prize-winner of that year. Only the extra amount available over the Prize amount of every year shall be added to the corpus of the fund.

4. The award of the Prize with the name and address of the recipient each year shall be communicated to His Holiness Kasivasi Swaminatha Thambiran Avargal of Tiruppanandal or to His Successors-in-interest for information.

5. The Endowment shall not be diverted to any purpose other than the one intended by the Donor. If, at any future time, the Oriental Title Vidvan (Final) Examination under regulation 7—D Tamil alone of the University is replaced and the rules or regulations for the Examination are modified, it shall be competent for the Syndicate to make such arrangements for the award of the Prize to a candidate who, in their opinion, satisfies the intention of the Donor, i. e., to stimulate and advance the study of Tamil.

6. It shall be competent for the Syndicate to invest, in any Securities or otherwise, amounts available for investment from the interest available over the Prize amount and the Capital amount of the endowment, in case the Government Securities in which the amount is now invested, are tendered for payment by Government.

Kasi Mutt, Tiruppanandal<br>15—7—1936 } **Kasivasi Swaminatha Thambiran**

---

*N. B.*—I. The above Endowment has been accepted by the University of Madras and comes into force from the year 1937.

II. The payment of the above endowment in one lump sum especially in these days of financial depression was made possible mostly by the willingness with which THE MANUFACTURERS' LIFE INSURANCE COMPANY, TORONTO, AMERICA, accommodated to us in time on liberal terms with a substantial loan on our Life Insurance Policy No. 4,46,416.

## 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌤𑌿𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌃

𑌋𑌷𑌿𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌵𑌤𑌾𑌰𑍈𑌃 𑌕𑌲𑌿𑌭𑌯𑌨𑌿𑌰𑌾𑌸𑌾𑌯 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑌾𑌨𑍍
𑌸𑍍𑌵𑌯𑌂 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑌟𑌨𑌧𑌿𑌯𑌾𑌽𑌽𑌨𑌨𑍍𑌦𑌵𑌤𑍇 |
𑌧𑍃𑌤𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍍𑌰𑍀𑌗𑍍𑌰𑌾𑌮𑍇 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌭𑍍𑌯𑌃 𑌆𑌨𑌨𑍍𑌦𑌸𑌂𑌵𑌿𑌤𑍋
𑌶𑌿𑌵𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌨𑌨𑍍𑌦𑍇 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌨𑌵 𑌭𑌾𑌷𑍍𑌯𑌾𑌨𑍍 𑌵𑌿𑌜𑌯𑌤𑍇 ||

கலியின் துன்பத்தைப் போக்குவதற்காக வியாசபகவான் வேதார்த்தங்களைப் பிரகடனஞ் செய்யவேண்டும் என்னும் எண்ணத்தோடு, குன்னூர், ஸ்ரீசிவத்தியாகாநந்த மஹர்ஷி என்னும் புது சரீரத்தோடு விளங்கி வருகிறார்.

23-4-'22

𑌸. 𑌹𑌰𑌿𑌹𑌰𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌿
𑌅𑌯𑌾𑌰𑍍𑌣𑌾𑌵𑌰𑍍𑌣 𑌨𑌿𑌵𑌾𑌸𑍀.

---

𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌪𑌰𑌂 𑌨 𑌕𑍋𑌽𑌪𑌿 𑌪𑌤𑌨𑍍𑌤𑌿
𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑌂 𑌨𑌾𑌕𑍇
𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌚𑍍𑌚 𑌸𑍍𑌵𑌧𑌿𑌷𑌣𑌾
𑌸𑍍𑌵𑌾𑌭𑍀𑌷𑍍𑌟𑌾𑌕𑌨𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌕𑌂 |
𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌦𑍋𑌷𑌚𑌯𑌾𑌨𑍍 𑌕𑌲𑍇𑌃 𑌪𑌰𑌿𑌹𑌰𑌨𑍍
𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌤
𑌤𑍍𑌯𑌾𑌗𑌾𑌨𑌨𑍍𑌦 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌰𑍇𑌷 𑌯𑌶𑌸𑌾
𑌜𑍇𑌜𑍀𑌯𑌤𑌾𑌂 𑌸𑌨𑍍𑌤𑌤𑌮𑍍 ||

சிலருக்கு வேதம் தெரியும். ஆனால் பொருள் தெரியாது. சிலருக்குத் தெரிந்தாலும் தங்கள் புத்தியினால் வேறு ஒரு பொருள் கற்பிப்பர். இத்தகைய தோஷங்களை யெல்லாம் பரிஹரித்து வேதத்துக்குப் பொருள் சொல்லும் சிவத்தியாகாநந்த மஹர்ஷி உலகத்து நிலவட்டும்.

𑌤𑍍𑌰𑌿𑌶𑌿𑌰𑌪𑍁𑌰𑌂
19-2-24

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌨𑍋𑌦
கெ. எஸ். 𑌰𑌾𑌮𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌶𑌰𑍍𑌮𑌾

ஶிவஜ்ஞாநாநந்தோ த்ரவிடகவிராஜோ த்விஜவரோ
வராம் ஶ்ரீமத்கைர்வாணீம் ஸமதுரம்ருத்வாந்த்ரீம் பாஷாநிபுண:
மஹர்ஷிர்மேதாவீ மஹிதநிகமார்த்தப்ரகடநம்
விதந்வந் த்ராவிட்யா ஹ்ருத்யதமயா வாண்யா விஜயதே ‖

சிவத்தியாநாநந்தன், தமிழ்க் கவியரசன், துவிஜவரன், மேன்மை பொருந்திய ஆங்கிலம் கீர்வாணம் மிருதுவும் மதுரமுமுள்ள தெலுங்கு இப்பாஷைகளில் நிபுணன், மஹர்ஷி, மேதாவி எனுமிவன் பெரிய வேதங்களுக்குப் பொருளளித்துக் கொண்டு தமிழில் அமிர்தமயமான வாக்கோடு உலாவுகிறன்.

ஸிம்ஹபுரம்
10-2-26

ஶ்ரீஹம்ஸகாமேஶ்வரஶர்மா

---

# FOREWORD*

BY

**The late Rao Bahadur, T. Sundara Row Avl., B.A., I.S.O.,**
(*Retired Deputy Collector*,)

BEULA, COONOOR.

This Samhita comprises the first eight Ashtakams of the Rig-Veda, each Ashtakam consisting of 8 chapters. Others will follow in due course.

The book supplies a longfelt want and enables a Tamilian who is not a Sanskrit scholar to read the Vedas. It contains a literal metrical translation of the hyms as well as a prose rendering of the same with explanatory remarks by the author on the different readings of the Sanskrit Text and on the commentaries, Indian and European. The work is appreciated by Tamil Scholars and the verses are easy and free from conventional pedantry. There are no signs of difficult labour and the author appears to work by inspiration if he can be said to *work* at all. Though these verses do not conform to the Vedic tunes, they can be chanted like the Thevaram and the Thiruvaimoli prabandhams.

The collection will be a great help to those who are religiously inclined and will exercise their devotional instincts, while it may have the opposite effect of disillusion on the critical reader who is cosmopolitan in his taste. In either case the book will be a valuable acquisition to any library.

It must be very interesting to the Historian and philosopher to trace the evolution of the Hindu Religion and philosophy from these hymns onward to the Upanishads and to find out whether there is any connection between them and the old Egyptian, Chaldean, and Jewish records. It is also interesting to note how far our present customs, social and religious, were extant in the period of the Rig-Veda.

It is often thrown out as a reproach by other religionists that the non-Brahman is debarred from reading the Vedas and acquiring the spiritual merits infused by them. But how little of the Veda does the average Brahman read and how much less does he understand of what he reads ! At this time when the study of Sanskrit is so much neglected, both the Brahman and the non-Brahman must welcome a work like this.

An attempt was made in Bombay some time ago to give prose translations of the Vedas in Mahratti, Hindi, Gujarati and English. But the attempt appears to have been given up after a time. Those translations did not reflect the personality of the translators, while this does, and it is by no means improbable that it will eventually obtain rank as a classic like Kamba-Ramayanam.

Beula, Coonoor.
*29th October, 1918* } **T. SUNDARA ROW.**

# அபிப்பிராயங்கள்

## இருக்குவேத சங்கிதையின் தமிழ்மொழி பெயர்ப்பு

ஞானசாகரப் பத்திரிகை, பல்லாவரம்

இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களில் இருக்கு வேதம் ஒன்றே மற்றை மூன்றற்கும் முந்தியதும் பழமையானதுமாகும். இஃது ஆரிய பாஷையில் அமைந்திருத்தலால், ஈது இதுகாறுந் தமிழ் மக்கள் படித்தறியக் கூடாத அருமறையாய் இருந்தது. ஆரியந் தமிழ் என்னும் இருமொழியிலும் வல்லவரா யிருந்த நம் முன்னோர்களில் எவரும் இதனைத் தமிழில் மொழி பெயர்த்து வையாமை ஒரு பெருங் 'குறையா யிருந்தது. அக்குறையினை நீக்குதற்கு உள்ளம் உவந்து, ஸ்ரீமத் சிவத்தியானனந்த மகருஷிகள் இவ்விருக்கு வேதத்தை இனிய செந்தமிழில் பாட்டும் உரையுமாக மொழிபெயர்த்து வெளியிட்டு வருகிறார்கள். "செயற்கரிய செய்வார் பெரியர்" என்ற திருமொழிப்படி செய்தற்கரிய இப்பெருங் காரியத்தைக் கைம்மாறு கருதாது தமிழிற்குந் தமிழ் மக்களுக்குஞ் செய்து வரும் ஸ்ரீமத் சிவத்தியானனந்த மகரிஷிகளுக்கு இத் தமிழுலகம் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றது. தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் இதனை வாங்கிப் படித்து வேதத்தின் உண்மை அறிய வேண்டுவது இன்றியமையாத கடமையாம்.

---

**2. Mr. P. Subrahmanya Aiyer**, M. A., *Sanskrit Curator, King's Library, Bangkok, Siam.*

To-day when the Vedic literature, though venerable as ever, has ceased to offer solace and inspiration to suffering millions, ignorant as they are of its language ; when the western Scholars alone—all honour be to them—have taken the trouble of explaining our religious literature, imperfectly of course owing to their lack of faith in it, and still more because of their defiance for such accredited scholars as the great Sayana and others ; when the weight of controversial religious literature and meaningless babbling for reforms, embarass every sensible man, your translation of a literature which needs no expatiation upon it, marks, I say with truth, **a red-letter day** in our national history.

---

**Swami Vedachallan**, *Samarasasanmarga Nilaya Guru, Pallavaram, Writes :—*

Received with thanks your Vaingkataramanam and The Rigveda. Really your Tamil Poems are admirable and you seem to be a good Siva Bakta for whom I have the greatest veneration and regard. You have also a very good command of the Tamil Language : as such you can render a great service to our sweet Tamil.

---

# சிறப்புப் பாயிரம்

காசிவாசி - ஸ்ரீமத் ஆதிமூர்த்தி அய்யர் அவர்கள்

[இரங்கோன் பத்திரிகை 'சுதந்திர'னில் வெளிப்படுத்தியது.]

**அறுசீரடி**

1. மலையிருந்த அகத்தியன்போல் நீலகிரி மலையிருந்தாய், மதியான் மிக்க
கலையிருந்த வசிட்டனென அயோத்தி நிகர் இரங்கோனில் கலந்து வாழ்வாய்;
நிலையிருந்த வடவேதம் தென்வேத மாக்குகின்றாய், நிஜமாய் நீதான்
தொலையிருந்த முன்னாளின் மகரிஷிகள் அவதாரத் தோற்றம் தானோ?

2. யார்செய்த மாதவமோ, தமிழ்மொழிதான் நற்காலம் அடையும் நாளோ,
நார்செய்த "வாதரா யணமுனியே" யுலகிலறம் நாட்ட வேண்டிப்
பேர்செய்த "சிவத்தியா னனந்த மகரிஷியாய்"ப் பிறந்து வந்து
சீர்செய்தான் மறைகளைநம் தித்திக்கும் தென்மொழியில் செகத்தோர்மெச்ச.

3. நான்படித்த கவிகளிலே மஹரிஷியுன் கவிபோலும் நயத்தைக் காணேன்!
தேன்படித்த "கம்பனிலும், கச்சியப்ப முனிவனிலும்" தெரியக் கூறின்;
வான்படித்த வடவேதம் நான்கினையும் தென்மொழியில் வகுப்பான் வேண்டி
கான்படித்த "வாதரா யணமுனியே" நீயாகக் காண்கின் றாயே. [க்

4. இருடிகளும் முனிவர்களும் மனிதவடி வாயுலகி லெய்தி னாலும்,
அருடியிவண் வந்தென்ன அழைத்தன்பு பெறக்கூற வறிந்தோ ருண்டோ!
பொருடிறமும் அறிவுயர்வும் உள்ளோர்கள் சிலரன்றிப் புலவர் தம்மைத்
தெருடியுப சரிக்கவல்லார் யாருள்ளார்? கலிகாலம் தெரியி னம்மா.

5. நாமறிந்த தமிழ்ப்புலவர் பலரெனினும் அவர்கவிதை நயங்க ளெல்லாம்,
தோமிலவே யானாலும், தூய்மையினும் இனிமையினும் சுவையி னாலும்,
நாம"சிவா னந்தரிஷி" யுனதமுத மொழிக்கிணையாய் நவிலப் போமோ!
ஆம்இதுவே வுண்மையென வறிந்தென்று மானந்த மடைந்து ளோமே.

6. உனைவசிட்ட னெனக்கொண்டும் உபசரியா ரிவ்வுலகி லொருவ ருண்டோ!!
தனையெவரு மொப்பில்லாத் தமிழ்க்கவியாய் வடமொழிக்கும் தானே யாகி
அநகமுறும் வேதமெலாம் தமிழாக்கிப் பேருதவி யளிக்க லுற்றாய்
புனித! வுயர் பூசுர!! நீ பொலிந்துசிறந் தோங்குக விப் புவியி னம்மா.

10—2—28

பா. ஆதிமூர்த்தி, காசி.

---

காலஞ்சென்ற திருக்கோணமலை
ஸ்ரீமத். த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள், B.A., இயற்றியது

**சந்த விருத்தம்**

1. முந்து புக பூாரியர் மொழிந்த முதுவேதம்
நந்து தமிழாக நனி யாத்து நமக்கீந்தான்
இந்து வளர் சந்து செறி ஏகன் மிகு குன்றூர்
வந்துசிவ த்யாநனென மகிழு முனி வரனே.

2. தக்க பொருண் மிக்க வுயர் சந்த செனு முண்மை
ரிக்கு முதல் வேத மிது காறு மெமர்க்காகா
தொக்க வொளித் தோதுவது மின்றுகிடந் தொல்கிப்
புக்க புலம் பின்று முதற் பொன்றிவிடு மன்றே.

3. அந்தணரு மாரியரு மன்று முதலின்று
மந்தணமா வைத்திரு மாமறையி னுள்ளம்
சந்தணவு குன்றைமலை வந்த சிவத்யானி
தந்த தமிழாற் புலைஞர் தாமு மறிவற்றே.

---

குன்னூர் N. S. இராமசாமிப் பிள்ளையவர்க ளியற்றியது

1. சுந்தரஞ்சேர் மொழிபெயர்ப்பும் சுவைதிகழும்
மொழியமைப்பும் சொற்க ளெல்லாம்
கொந்தலர்கற் பகநாணப் பலபொருளைக்
கொடுத்தொளிருங் கூறு பாடும்
முந்துமொரு நூலிதைப்போ லில்லையென
வெல்லாரும் மொழிந்து நிற்பச்
செந்தமிழ்ச் சிந்தாமணியாய்ச் சிறப்பித்தான்
சிவத்யாநா நந்தச் செல்வன்.

2. பரம்பரையாய்த் தமிழ்படித்தார் மனமிகவுங்
களிகூரப் பண்பு நாட்டிப்
பெரும்புவிக்கோ ரணிகலமாய்த் தமிழ்ப்பாவால்
வேதமதைப் பிறங்க வைத்தான்
தரம்பெறுநன் மதுரமொழிச் சல்லாபன்
சொற்பலிதம் தழைந்து நிற்போன்
பொருந்துறுமோ வேதமது மற்றவருக்
கென்றிருந்தார் போக்கைத் தீர்த்தோன்.

3. இன்னநாட் டினிலெவரே இதுகாறும்
வேதமதை எமக்குச் சொன்னார்
முன்னதது முன்னதெனும் வெளிற்றுரையே
பலநாளும் மொழிந்து நின்றேம்
அன்னதோர் அவிவேகக் கோதுரையின்
முட்டறுத்தான் அறிஞர் யாரும்
உன்னரிய பாக்கியத்தை இருகரத்தாற்
பெற்றனரென் றுரைக்க மாதோ.

# முன்னுரை

உலகத்து நடைபெறும் மதங்களிற் சிறந்தவை எட்டு. அவை ஜாரதுஷ்டிரம், புத்தம், ஜைனம், சைவம், வைஷ்ணவம், சிக்கியம், இஸ்லாம், கிறிஸ்தவம் என்பவையாம். இவற்றுள் முதல் ஆறு மதங்கள் வேதக்கொள்கைகளை யநுசரித்தவை. பின்னவை இரண்டும் யூதக் கொள்கைகளை யநுசரித்தவை. இவ் யூதக் கொள்கையும் ஆரிய தர்மத்தைப் போன்றதே யென்று எண்ணச் சரித்திரம் இடங் கொடுக்கிறது. எனினும் 'அறிவு பெற்று மனிதன் பாவியானன்' 'பாவத்துக்குத் தண்டனை மாரணம்' என்னும் கொள்கை பேதம் உடையன.

அவ்வாரிய தர்மந்தான் யாது? 'உலகம் நிலைக்களம் அன்று. ஆத்மதத்துவமே சரீரதத்துவத்தினும் உயர்ந்தது. அதனால் சரீரத்தை வருத்துவதால் ஆன்மலாபம் கிடைக்கிறதானதுபற்றி ஐஹிகசுகங்களை வெறுத்து ஆன்மலாபத்தையே கருதவேண்டியது' என்பதாம். இத்தர்மத்தை இருவகையாகப் பிரித்துக் கர்மம், ஞானம் என இரண்டு மார்க்கப்படுத்தினர். கர்மத்தை யக்ஞகர்மம் என்றும், தேவபூஜை யென்றும் இரண்டாக்கினர். இப்பாகுபாடு ஏற்படுத்துவதற்கு முன்னரே ஜாரதுஷ்டிரர் என்ற ஆரிய வகுப்பினர் ஆரியர்களது சமூகத்தினின்றும் பிரியத் தலைப்பட்டனர். இக்காலமே ஆரியர்களுக்குள் தேவ வகுப்பினரென்றும் அசுர வகுப்பினரென்றும் இரண்டு பிரிவுகள் ஏற்பட்ட காலம். அசுர வகுப்பினர் யக்ஞ கர்மத்தினல் பெரும்பயனும் வலிமையும் அடையக்கூடுமென்பதைப் பல முறையும் காட்டியுள்ளார்கள். என்றாலும், வலிமையைக் காட்டிலும் பெரும் பயனை அளிப்பது ஞானமே என வற்புறுத்தி யக்ஞ கர்மங்களோடு உபாஸனகர்மத்தைப் பலப்படுத்தினவர்கள் இத்தேவ வகுப்பு ஆரியராவார்.

அதனுல் வேதத்தைப் பாகுபாடுசெய்த தேவ ஆரியர், முதல் முதல் உபஸானைக்கெனவே ரிக்வேதத்தைத் தொகுத்தனர் என்று சொல்லவேண்டி யிருக்கிறது. ரிக் விதானம், பிரஹத்தேவதை முதலிய நூல்கள் இவற்றையே தெளிவுபடுத்தி யுரைக்கின்றன. என்றாலும் அசுரமதத்தைப் பின்பற்றினவர்கள் இவ்வாரியர்களுக்குள் இல்லை என்று முழுதும் துணிவாகக் கூறமுடியாது. ஒரு சில அசுரர்களும் தேவ வகுப்பினரைப் பின்பற்றி யக்ஞத்துக்கும் உபஸானையை ஒரு உபஸாதனமாகக் கொள்ளத் தலைப்பட்டனர். ஆகவே ஆகமங்கள் தேவ அசுரக் கொள்கைகளிரண்டையும் தழுவித் தேவபூஜை, யக்ஞம் என இரண்டையும் தம்முள் உடன்கூட்ட லாயின. அதனுல் தேவ

தத்தனும் யக்ஞதத்தனுமான இருவரும் வைதிக தர்மத்துக்குள் அடங்கலாயினர்.

நாளடைவில் யக்ஞ கர்மத்துக்குரிய முக்கியதை நழுவும வண்ணம் புராணங்கள் எழுதப்படலாயின. இப் புராணங்களை யொட்டிச் சில ஆகமங்களும் புதிதாக ஏற்படலாயின. இந்த நிலையில் மனிதர்களுக்குள் நியாயாநியாய உணர்ச்சி பெருகத் தலைப்பட்டது. இந்நியாயாநியாய உணர்ச்சியை மனிதர் அனுபவிக்கலாகாதென வற்புறுத்தி ஆகமங்கள் ஏற்படுத்தின பிரிவுதான் இப்போது யூத வகுப்பென விளங்குவது. அவ்வகுப்பின் முக்கிய நூலே குணங்குடி மஸ்தான் முதலியோரால் சொல்லப்பெறும் ' துய்ய சதுர்வேதம் ' ஆம்.

இவ்வகை நன்மைக்கும் தீமைக்குமாக விரவிக் கிடக்கும் ஆகமங்களைப் பிரித்து முவ்விதப்பட்ட எழு வகை யாகங்களாக வகுத்தவர் தேவ ஜாதி ஆரியரெனப்படுவர். அதுவன்றி இவ்வெக்ஞ கர்மங்களை அபிசாரமாகச் செய்ய உபதேசித்தவர்கள் அசுர ஜாதி ஆரியர் ஆவர். இத்தேவஜாதி ஆரியருக்குப் பிருஹஸ்பதி, பிருஹ்மணஸ்பதி, பிரஜாபதி என்பவர்கள் குருக்களாக ஏற்பட, அசுரஜாதி யாரியருக்கு, பிருகு, சுக்கிரன், துவட்டா, விசுவரூபன் ஆகிய இவர்கள் குருக்களாயினர்.

யக்ஞ கர்மங்களால் ஏற்பட்ட ஜீவஹிம்ஸையைக் கண்டிக்கப் புத்த மதமும், ஜாதிப் பிரிவினையைக் கண்டிக்க ஜைநமதமும் தொடங்கின. புத்தமதத்தின் வளர்ச்சியாக வேத பாஷைக்கு ஏற்பட்ட உயர்வு குறையவும், ஜைந மதத்தின் ஆதிக்கத்தினால் கர்மங்களுக்குள்ள ஏற்றம் குறையவும் தலைப்படவே, மீமம்ஸா நூல் ஏற்பட்டு வைதிக கர்மங்களை வலியுறுத்தலாயிற்று. புத்த ஜைன மத ஜாதகக் கதைகளையும், அர்ஹத் சரித்திரங்களையும் தொலைக்கப் புராணங்கள் ஏற்படலாயின.

இப்புராணங்கள் வேத நெறிகளை முதற்கண் உருவகப்படுத்திக் கதை ரூபமாக விளக்க ஏற்பட்டனவாயினும், அவை பௌராணிக மதம் என்ற மற்றொருவகைக் கர்ம மார்க்கத்திற்கு மூலகாரணமாக வாயின. இவ்வகையாகப் பல்வகைப்பட்ட கர்ம மார்க்கங்களும் விரியத் தலைப்படவே, இக் கர்மங்களையே முற்றும் ஒழித்துக் கேவலம் ஞானத்தையே விசாரிக்க, உபநிஷத்துக்கள் ஏற்படலாயின. இவ்வுபநிஷத்துக்களின் ஸாரத்தைக் குரோடீகரித்துத்தான் உத்தர மீமாம்ஸை ஏற்படலாயிற்று. இதுவே வேதாந்தம் என்னும் பெயரோடு விளங்கியது. இது ஏற்பட்ட காலமே வேதத்தின் முடிவு காலம் என்னலாம்.

அறிவை நுனிப்பிக்கும் மத பரிசோதனை யளவாக நின்ற பண்டையோர் வழக்கினைக் கைவிட்டு, இவ் வேதாந்தத்தைப் பிரகடனம் செய்யத் தொடங்கிய பிற்காலத்தவர், புத்தமதப் பிரசாரகர்

களையும் ஜைனமதப் பிரசாரகர்களையும் பின்பற்றி மேற்காசியாவில் தொடங்கிய கிறிஸ்தவ மதத்தின் வாசனையைத் தொடர்ந்து, ஆள் கூட்டத்தில் நம்பிக்கை கொண்டு, சைவ வைஷ்ணவக் கூட்டத்தின ரைப் பெருக்கி மனித சமூகத்தைப் பிரித்தாளத் தலைப்பட்டனர். அதனால் அறிவு நூல்கள் எல்லார்க்கும் பொதுவென விருந்த கொள்கை போய் ஒரு சிலர்க்கே அவை யுரியனவென்னும் பேத வுணர்ச்சி ஏற்படலாயிற்று. உண்மையில் சைவமே கிறிஸ்தவத்தைப் போன்ற ஸத்புத்திர மார்க்கமாகும். வைஷ்ணவமே இஸ்லாம் போன்ற தாஸ மார்க்கமாகும். இந்நான்கு மார்க்கங்களுமே முன்னிருந்த ஆரிய தர்மங்களையும், அசுர தர்மங்களையும், பூத தர்மங்களையும் தொலைக்கத் தலைப்பட்டன. பழையகாலத்திருந்த சுவர்க்க நரகங்களை மாற்றி, கைலா யம், வைகுண்டம், பரமண்டலம் முதலிய சில சாசுவத லோகங்களை, பின்னர் வந்த இம்மதங்கள் சிருஷ்டித்தன. வேத மதத்தில் காணப் பட்ட ஸமரஸ பாவனையையும் மோட்சத்தையும் இவை மறைக்க லாயின. இம் மதங்கள் கூறும் நித்திய லோகங்களில் நித்திய சேவை செய்வதே மோட்சமெனக் கூறும் இவை, இப்பொழுது லோகயாதனுல் லியமென அறிஞரால் மதிக்கப்பெறுபவையாகும்.

ஜீவன் அல்லது ஜீவாத்மாவென்றும், ஈசுவரன் அல்லது பர மாத்மா வென்றும், ஜடம் மாயை அல்லது மூலப் பிரகிருதி யென் றும் மூன்று சாசுவதமான தனிப் பொருள்களைக் கற்பித்து, ஜீவன் ஈசுவரனை யடுத்து ஜடமாகிய மாயையை வெல்லுகிறுனென்றும், அதன் பயனுக ஸாலோக, ஸாமீப, ஸாரூப, ஸாயுஜ்யங்களைப் பெறு கிறுனென்றும், இவற்றுள் ஸாயுஜ்யமாவது இறைவனது திருவடி நிழலில் ஒடுங்கி ஆநந்தமயமா யிருப்பததா னென்றும் கூறத் தலைப் பட்டன. இத்தகைய மதாநுஸாரிகள் தமது கொள்கைகளுக்கு வேதமே இடங் கொடுப்பதாகவும் கூறத் தொடங்கி, ஒரு சில வேத சூக்தங்களை, புருஷ ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், தேவீ ஸூக்தம், பஞ்சருத்ரியம் என வலிந்து பொருள்படுத்திக் கூறித் தங்கள் தங்கள் மதங்களைப் பிடிவாதமாகச் சாதிக்கலாயினர். ஆனல் உண்மையான வேத தர்மம் அவையல. இவ் வுண்மையை யறிந்த வேறு சிலர் வேதத்தையே வேண்டாமெனக் கைவிட்டுப் பிரபந்தங் களையும், திருமுறைகளையும், புராணங்களையும் மட்டுமே வேதமாகக் கொள்ளத் தலைப்பட்டனர்! இவ்வகையாக வேதம் என்ற பெயரை மாத்திரம் தாங்கள் ஒப்புக்கொள்ளுவதாகச் சொல்லிவிட்டுத் தங்கள் நடைக்குப் புதுவகையான ஒழுக்கங்களையும் முறைகளையும் கைக் கொண்ட பின்னரும், தாங்கள் வைதிக சைவர், வைதிக வைஷ்ணவ ரென்று கூறிக் கொண்டு உபய வேதாந்திகளெனப் பட்டப் பெயரும் வைத்துக் கொண்டு ஒழுகுபவரது நடனமானது நகைக்கத் தக்கதே யொழிய வேறென்றுமில்லை. உண்மையில் இவர்கள் வேத வழக்கைக் கைவிட்டவர்கள் என்று சொல்வது தவருகாது. இவரது அபிப்பிரா

யப்படி வேதம் என்பது ஞானமென்ற பொருளுள்ளதே யன்றி ஒரு தொகைநூலின்பெயராகாது. ஆனால் வேததர்மம் என்பது தானென்ன? அதில் சொல்லப்படும் பலவேறு தேவதைகள் யார்? அவற்றைப் பூஜை செய்வதனாலோ அவற்றிற்காக யக்ஞகாரியங்களைச் செய்வதனாலோ நாம் பல தெய்வ வணக்கம் செய்தவர்கள் ஆவோமா? இவற்றைப் பற்றி எல்லாம் கவனிக்க வேண்டியது அவசியம் ஆகும்.

முதற்கண், ரிக்வேதத்தில் கூறப்படும் தேவதைகளுக்கு அர்த்தவாதங்கொண்டு பொருள்படுத்தி, அவ் வர்த்தவாதத்தினால் குறிக்கப்படும் பொருள் ஸர்வேசுவரனது ஒரு நிலை யென்று கொள்ள வேண்டுமென்பதையும், அத்தகைய தேவதைகளுக்குக் குணப் பிரதிபாதனம் சொல்லலாமே தவிர ரூபப் பிரதிபாதனத்தைப் பூர்ணமாகக் கொள்ளப்படாதென்பதையும் அறியவேண்டியது அவசியமாகும். பிருஹத் தேவதைக்காரர் எல்லாத் தேவதைகளும் ஒரே பரமேசுவரனது பலவித அவஸரங்களென்பர். பரமேசுவரன் ஒருவனே பூமியில் அக்கினியாகவும், அந்தரத்தில் (மாதரிசுவான்) வாயுவாகவும், பரம வியோமமாகிய விண்ணில் சூரியனாகவும் காணப்படுகிறானென்பர். இவ்வகையாகப் பதினொரு தேவதைகளும் அப்பரமேசுவரனுடைய ஒவ்வொரு அவஸரங்களானது பற்றி அவற்றைக் காலாநுஸாரமாக வணங்க வேண்டுவது அவசியமென்றும் அப்படி வணங்குவது அந்தப் பரமேசுவரனையே வணங்கினதாகும் என்றும் கூறுவர். இதனால், காத்தலிக் கிறிஸ்தவர்கள், அர்ச்சிய சிஷ்டர்கள் (Saints) என்று கூறி ஒவ்வொருவரும் தங்களுக்கிஷ்டமான தேவதைகளை வீட்டில் வைத்து வணங்கி வருவது போன்றதுதான் இத் தேவதாவணக்கங்களாகும். இத் தேவதைகளுள் எல்லாரையும் இருவகைப்படுத்தி, அக்கினி அம்சமுள்ளவர்களை யெல்லாம் ருத்ரன் அல்லது சிவனது அம்சம் என்றும், ஜல அம்சமுள்ளவர்களை யெல்லாம் நாராயணன் அல்லது விஷ்ணுவின் அம்சமென்றும் மாற்றி, வலிமையினது அம்சமாக விருந்த இந்திரனையே விஷ்ணு அம்சத்துக்குள் அடக்கித்தான், சைவ வைஷ்ணவ மதங்கள் தலைக் கிளம்பத் தொடங்கின. ஆதியில் ஒவ்வொருவரும் சிவத்தையாவது விஷ்ணுவையாவது உபாஸனைக்குரிய கிருஹதேவதையாக வைத்துக் கொண்டு ஸமரஸமாக நிற்பதே சரியென விருந்தனர். இதுவே வேதாந்த மதமுமாகும். ஆத்மா வேறு ஈசுவரன் வேறு என வைத்துப் பார்த்து, அவ்வாத்துமாவே ஈசுவரனோடு அபேதமாக ஐக்கியப்பட்டு நிற்பதை யுணர்ந்த ஒரு வேதாந்தி இவ்வுபாஸனா மூர்த்தங்களெல்லாம் ஈசுவரத்துவத்தை எய்தும் அத்துவாக்களென்றே கொள்ளத் தலைப்பட்டதனால், இம்மாதிரி பலவகைப்பட்ட சொற்பொருள்களால் விளக்கப்படும் தேவதைகள் வணங்கத்தக்க முக்தர்களென்றும், ஒரு தேவதைமூலமாகப் பெறும் உண்மை யநுபவம் இதர தேவதைகள்மூலமாகப் பெறும் உண்மை யநுபவத்துக்கு ஒத்ததாயிருப்பதால் எத்தேவதையின்

வழியாகவும் ஜீவன் முக்திநிலையைப் பெறலாமெனவும் கொள்ளலாயி னர். இதுதான் வேதத்தில் உணரக்கூடிய ஸமரஸ நிலை. இச்சம ரச நிலை, பிடிவாதமாக ஒரு தேவதையையே எல்லாவற்றிற்கும் மேலெனக் கூறும் மத நிலையைக் காட்டிலும் உயர்ந்த நிலை. தற்கால முள்ள சைவ வைஷ்ணவ மதங்களில் வாழும் ஒரு பகுதிப்பட்ட மாந் தர், இதனை யறியமுடியாமலும் இந்த ஸமரஸத்தை அநுபவிக்கும் விதியில்லாதும் இடர்ப்பட்டு நிற்பர். அதற்குக் காரணம் அவர்கள் வேதத்தைப் படிப்பதையும் அதன் கருத்துக்களில் பழகுவதையும் நிறுத்திவிட்டுப் புற மதங்களாகிய கிறிஸ்தவம் இஸ்லாம் இவற்றின் கொள்கைகளைப்போலவே தங்களது கொள்கைகளையும் பட்சபாதக மானவையாகச் செய்யவேண்டுமென நூல்களை எழுதத் தொடங்கி யதேயாகும்.

முற்காலத்து, கொள்கைகளைப் பரிசீலித்து, அக்கொள்கைகளி லுள்ள சரி பிசகுகளை எடுத்துக்காட்டி, அவற்றைக் கைக்கொள்வோ ரது மனப் பண்புக்கும் அறிவாற்றலுக்கும் ஏற்ப, வேண்டிய அம்சங் களை எடுத்துக்கொண்டும் வேண்டாதவற்றை விட்டுவிட்டும் ஒழுகலா மென்றும், பொதுவாக மனித சமூகத்திற்கு வேண்டிய ஆசார தர்மங் களை மட்டும் எப்பொழுதும் விட்டு நிற்கக்கூடாதென்றும் ஏற்படுத்தி யிருந்ததனால்தான் ஜாதிப் போராட்டம் மதச் சண்டை முதலியவை ஒழிந்து சமூகத்தி லில்லாமலிருந்தன. தற்காலம் இதர தேசத்தின ரும் மதத்தினரும் இப் பிடிவாதங்களில் நிற்பது கண்டு, நம்மவர் களும் மதத் துவேஷமும் ஜாதித் துவேஷமும் பாராட்டத் தலைப் பட்டுவிட்டனர். இவற்றை மாற்றுவதற்கு முக்கிய சாதனம் இவ் வேத உணர்ச்சியேயாகும். இவ்வேதமே, தாயுமானுர் வாக்கின்படி, 'சைவ முதலாம் அளவில் சமயமும் வகுத்து மேல்சமயம் கடந்த மோன சமரச'த்தையும் அமைத்து, ஈசுவரனை அபேதமாகக் காணு மாறு செய்வது. அப்பொருளும் ஆன்மாவும் ஆரணநூல் ஒன் றென்றே கூறும். இந்நிலை கைவந்தாலன்றி மோட்சம் எய்துதல் என்பது கூடாத காரியமானது பற்றியே, ரிக் வேதத்தைத் தமிழ் நாட்டு மக்களின் நன்மைக்காகத் தமிழில் வெளிப்படுத்துவதற்கு இறைவனது திருவுள்ளத்தை முன்னிட்டுத் தொடங்கியதென அறிக. இவ் வேதவுணர்ச்சி யில்லாவிடில் சைவமும் வைஷ்ணவமும் இதரக் கிறிஸ்தவ இஸ்லாம் மதங்களைப்போலவே வேதபாஹ்ய மதங்களாக மாறிவிடும். அதனுல் விளையும் அநர்த்தங்களுக்கு அளவில்லாமல் போய்விடும். அதனுல், மக்களாய்ப் பிறந்தோர் ஒவ்வொருவருக்கும் இவ்வேதவுணர்ச்சி யிருக்கவேண்டியது அவசியமாகும்.

ஒருசிலர் வேதத்தை மறையோர் தவிர இதர வகுப்பினர் படிக்கலாகாது எனக் கூறித் திரிவர். பிராஹ்மணன் சமூக நன்மைக் காக ஏற்பட்ட பலவகைத் தொழிலாளிகளில் ஒரு வகையினன்,

அவன் தனது தொழிலைக் கைவிடுவானாயின், இதரர் அதனை எடுத்துக்கொள்வதில் வந்த பிழை என்ன? வேதக் கருத்துக்களை விரித்துக் கூறிப் பூர்வாசாரங்களிருந்த நிலையை வெளிப்படுத்திச் சமூகத்தினிடத்து ஆன்ம அறிவு பரவச் செய்வதற்கான தொழில் பிராஹ்மணனுடையது. அவன் அதைச் செய்யத் தவறுவானாயின் ஏனையோர் அத்தொழிலைக் கைக்கொள்ள வேண்டியது முறைமையே. மேலும் ஒரு காலத்து இவ்வேதங்களை யுணர்வதும் கற்பதும் கஷ்டமாயிருந்தன. அப்பொழுதும், நக்கீரர், நம்மாழ்வார் முதலாயினோர் வேதக் கருத்துக்களை நன்குணர்ந்திருந்தனர். தற்காலத்து அச்சுத் தொழில் மலிந்து வேத சம்பந்தமான நூல்களெல்லாம் அச்சரங்கமேறிய பின்னர் அவற்றைப் படித்து வேதப்பயனை யடைய முயலாது கண்மூடித்தனமாக விருப்போமென நிற்பது மாந்தரது அறியாமையையே யுணர்த்தும். அவ்வறியாமை விரைவில் நம்மவர்களிடையினின்றும் அறவொழிய வேண்டியதும் அவசியமானது பற்றியும் இக் *கேள்விநூலை அச்சிடலாயிற்று. இதனோடு இணைத்திருக்கும் மேனாட்டுக் கீர்வாண பண்டிதர்களின் வரலாற்றையும் படித்தறிந்து இக்கருத்தின் உண்மையைக் காணுவார்களாக!

இனி இம் மொழிபெயர்ப்பு சென்ற ஆயிரக்கணக்கான வருஷங்களாக ஏன் வெளிவரவில்லை யென்ற வினா எழுகிறது. இக் கேள்வி நூல் இற்றைக்குச் சுமார் ஐயாயிர வருஷங்களுக்கு முன்புதான் சௌநகர் என்ற ஒருவரால் தொகுக்கப்பெற்றதாகும். அவரும், வேதத்தில் பல நூதனக் கொள்கைகளும் அபிப்பிராயங்களும் நுழைந்துகொண்டு வருவதைக் கண்டும், வேத லக்ஷணத்தை யொத்த லக்ஷணங்களோடு கூடிய நூதனக் கவிகள் வேதமென வழங்கத்தொடங்கியதை யுணர்ந்தும், ரிக்வேத மந்திரங்களை யெல்லாம் ஒருசேரத் தொகுத்து இச்சம்ஹிதையை அமைக்கலானார். இதற்குப் பத்து அட்டவணைகளை அநுக்கிரமணிகள் என்ற பெயரால் ஏற்படுத்தி, இத் தொகைநூலில் வேறொருவரும் இடைப்புகுத்தாதபடி வேண்டிய பாதுகாப்புக்களைச் செய்து வைத்தார். அதன் பின்னர் இத்தொகை நூல் அவர் தொகுத்துவைத்தபடியே வழங்கி வரலாயிற்று. இது நடந்த சுமார் ஆயிரத்திருநூறு வருஷங்களுக்குப் பின்னர், காத்தியாயநர் என்பவர், இத்தொகை நூலுக்குச் சம அளவான பாகுபாடுகள் செய்யவேண்டுமென்று, அதனை 64 அத்தியாயங்கள் ஆக்கி, எவ்வெட்டு அத்தியாயங்களை ஓர் அஷ்டகமாக்கி, ஸர்வாநுக்கிரகமணி என்ற ஓர் அட்டவணையைக் கூட்டி வைத்தார். தற்காலம் இவ்விருவரது முயற்சியினாலும் ஏற்பட்ட ஒழுங்கிலேயே இவ் விருக்குவேதம் நிலைபெற்று வழங்கி வருகிறது. காத்தியாயநர் செய்த ஸர்வாநுக்கிரமணிக்கு ஷட்குரு சிஷ்யர் என்பார் ஒருவர் வேதார்த்த தீபிகை

*கேள்வி நூல், எழுதா மறையாயிருந்த வேதங்கள்.

யென்று ஒரு உரைவிளக்கம் எழுதிவைத்துச் சென்ருர். இதற்கிடையே, பதங்களுக்கு அர்த்த நிர்ணயம் செய்யத் தொடங்கிய பல நிருக்த ஆசிரியர்களான யாஸ்கர், காணகிரி முதலியோர் தங்களது சொற்பொருள் நிர்ணயங்களுக்கு வேத நூல் வழக்கை மேற்கோள் காட்டி நிருக்தம் என்ற நூலை எழுதிச் சென்றனர். இவற்றையும் மற்ற வேதாங்க நூல்களையும் துணைக்கொண்டு விஜய நகர ராஜ்யத்தை உருப்படுத்திய மாதவாசாரிய ரென்ற வித்யாரண்யரும் அவருக்குப் பிறகு அவரது தம்பியாகிய *ஸாயணரும் வேதத்துக்கு வடமொழியிலேயே இற்றைக்குச் சுமார் அறுநூறு வருஷங்களுக்கு முன்பு பாஷ்யம் செய்து வைத்துச் சென்றனர். நிருக்தக்காரர்களது போக்கைமாத்திரம் கைக்கொண்டு இதர வேதாங்க நூல்களைக் கைவிட்டதனுலேயே ஒருசில ஸமாஜத்தினர் இன்னும் பூரணப்படாமல் அந்தாஸ்வர்க்கத் தமர்ந்திருக்கின்றனர் என்பதையும் நம்மவர்கள் கருதுவார்களாக.

அச்சாயண பாஷ்யம் அச்சரங்க மேறுவதற்கு முதற்காரணமாக விருந்தவர்தாம் மோட்சமூலர் (Max Muller) என்ற ஜர்மன் †கீர்வாண வித்தியார்த்தியாவர். இந்நூல் அச்சரங்கமேறிய பின்னர்ப் பல பதிப்புக்கள் பாரத வருஷத்திலும் பதிப்பிக்கப்படலாயின. அப்பதிப்புகளுக்கு வங்காளி, ஹிந்தி முதலிய பாஷைகளில் மொழிபெயர்ப்புக்களும் ஏற்படலாயின. காசியிலிருந்த ஸம்ஸ்கிருத கலாசாலைத் தலைமையாசிரியரான வில்ஸன் முதலில் ஸாயண பாஷ்யத்தை ஆங்கிலப்படுத்தினர். அவரது சீடராய் இந்நூலில் மேனுட்டாசிரியர் என்று விதந்து கூறப்படும் கிரிப்பித்து (Griffith) என்பவர் வேதங்களையெல்லாம் இங்கிலீஷில் கவிகளாகவே பாடி முடித்தார். இவ்வளவு சௌகரியங்கள் வேத நூலை யறிவதற்கு ஏற்பட்ட பின்னர்த் தான் தமிழிலும் அதனைச் செய்ய முடிந்ததானது பற்றி இத்தமிழ் மொழிபெயர்ப்பு இக்காலத்துக்கு முன்னர் வெளிவர முடிந்திராதென்றே தீர்

---

*ஸாயணரது நிர்யாண காலம் கி. பி. 1387 என்று செந்தமிழ்ப் பத்திரிகை கூறும். இவருக்குப் பிதா மாயணர், மாதா ஸ்ரீமதி, மாதவர், போகநாதர் சகோதரர்கள் ஆவர்.

†கீர்வாணம் என்பது வேத பாஷைக்குப் பெயராகும். அதனின்றும் திருத்தமடைந்த பாஷையே இப்பொழுது ஸம்ஸ்கிருதம் என்று கூறப்படுவது. கீர்வாண இலக்கணத்தை (அதாவது வேதப் பிராதிசாக்கியங்களை அல்லது ஐந்திர ஒழுங்கை)ப் பின்பற்றித் தமிழ் வளர்ந்தோங்கியதென வறிக. அதனுல் பாணினி இலக்கணத்துக்கு வெகு காலத்துக்கு முந்தியது தொல்காப்பியமென்பது தெளிவாகும்.

மானமாகச் சொல்லலாம். பண்டையோ ரெல்லாரும் ரிக்வேத ஸாரம், யஜுர்வேத ஸாரம், ஸாமவேத ஸாரம், அதர்வணவேத ஸாரம் எனச் சில வேதக் கருத்துக்களை மட்டும் தங்கள் தேவாரம், திருவிருத்தம், திருவாய்மொழி முதலிய திருமுறைகளிலும் பிரபந்தங்களிலும் கூற முடிந்ததே யொழிய முற்றும் தமிழ் செய்ய முடியாதிருந்ததையும் உய்த்துணர்ந்து நோக்குக.

இம்முன்னுரையை முடிக்குமுன்னர், தமிழில் ஓர் அழியாநூ லியற்றத் தூண்டிய திருக்கோணமலை திருவாளர் த. கனகசுந்தரம் பிள்ளையவர்களுக்கும், அந்நூல் ரிக்வேதமாக விருக்க வேண்டுமெனக் கட்டாயப்படுத்திய எனது மனையாள் ஸ்ரீமதி ஸௌ. ஜானகியம்மாளுக்கும், அதற்கு ஸாயண பாஷ்யம் வாங்கி உதவிய ஈரோடு ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி நாயக்கரவர்களுக்கும் இத்தமிழுலகம் கடப்பாடுடைய தாகுமென்பதை அறிவித்துக் கொள்ளுகின்றேன்.

இவ்விருக்குவேதம் முழுவதும் வெளிவந்த பின்னர், அதனுள் உள்ள அநேக அருமைகளை எடுத்துக் காட்டிப் பெரியதோர் விளக்க வுரை யொன்று இறைவனது திருவுள்ளத்தை முன்னிட்டுக் கொடுப்பல். அதுவரை இப்பாயிரவுரை முதலஷ்டகத்தின் கண் நின்று நிலவுவதாக! ஓம்தத்ஸத்.

'வேதப்ரவசனமந்திரம்'
இராயப்பேட்டை,
சென்னை.
4—8—1933

சிவத்தியாகாநந்தமஹர்ஷி.

—

# மேனுட்டு கீர்வாண பண்டிதர்களின் வரலாறு

## A short sketch of the Western Vedic Scholars

கீர்வாண வாங்மய சரித்திரத்திற்கு நல்ல வழி காட்டினவர்கள் மேனுட்டுப் பண்டிதர்களாவர். அவர்களுள் ஜெர்மெனி தேசத்து ஸம்ஸ்கிருத பண்டிதர்கள் முக்கியமானவர்களாம். அவர்கள் ஸம்ஸ்கிருத கிரந்தங்களைப்பற்றி நூல்களெழுதிய பின்னரே பாரதீய பண்டிதர்களது நோக்கம் அவ்வழியில் செல்லலாயிற்று. கிட்டத்தட்ட இரண்டு நூற்றுண்டுகளாக மேனுட்டார் கீர்வாண வாங்மயத்திற்கு அகண்ட சேவை செய்து வருகிறுர்கள். பட்சபாதமின்றி இவ்விஷயத்தை நினைத்துப் பார்க்கும்போதெல்லாம் அறிவாளியான எந்தப் பாரதீயனுக்கும் ஆச்சரியமும், வெட்கமும், கிருதக்ஞதையும் தோன்றுமலிராது. ஸம்ஸ்கிருத பாஷையைப்பற்றி அதற்கு முன்னுல் மேனுட்டாருக்கு அவ்வளவு தெரியாது. அப்பாஷையிலுள்ள கிரந்தங்களை உணர்ந்து, சுமார் 150 வருஷங்களுக்குக் கீழ் அவ்வுணர்ச்சியை அவர்கள் (Discovery of Sanskrit) ஸம்ஸ்கிருதத்தைக் கண்டு பிடித்துவிட்டதாக எடுத்துக் கூறினுர்கள்.

பாரதீய ஸாரஸ்வதத்தில் எந்த சாகையைப் பார்த்தாலும் அது அபாரமாகக் காணப்படுகிறதென்று ஸர் வில்லியம் ஜோன்ஸ் பண்டிதர் கூறியுள்ளார்.

வேறெரு மேனுட்டு ஸம்ஸ்கிருத பண்டிதர், "ஸம்ஸ்கிருதம் சம்பந்தப்பட்ட மட்டில், அதன் கிரந்த விஸ்தாரமும், பழமையும், அதன் இலக்கண அமைப்பின் தெளிவும், அதன் எழுத்து உச்சாரண அழுத்த முறையின் முதன்மையும், சுதேச பண்டிதர்கள் அதற்குச் செய்துள்ள இலக்கண ஒழுங்கும், மற்றப் பாஷைகளுக்கெல்லாம் முற்பட்டவை யென்று இந்தோ ஆரியபாஷா பரிசீலகர்கள் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியாது" என்று கூறுகிறுர்.

---

[Adapted from the 'Samskrita Vangmaya Charitra' by Brahmasri Malladi Suryanarayana Sastriar Avl., with the kind permission of the Andhra University.]

[இவ்வுபயோகமான சரித்திரம் தெலுங்கிலுள்ள ஸம்ஸ்கிருத வாங்மய சரித்திரம் என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது. இவ்வரலாற்றை உபயோகித்துக் கொள்ள அநுமதித்த ஆந்திர விசுவகலாபரிஷத்தார்க்கு நன்றி கூறுகிறேம்.]

ஸர் மானியர் வில்லியம்ஸ் (Sir Monier Williams) என்பவர் 'தற்கால ஹிந்து தேசம்' என்னும் நூலில் ஸம்ஸ்கிருதத்தின் சிறப்பை நன்றாக வெளிப்படுத்தியிருக்கிறார். ஷ்லெகெல் (Schlegel) என்னும் ஜெர்மானியப் பண்டிதர் 'ஸாரஸ்வதேதிஹாஸ விசாரம்' என்னும் நூலில் ஸம்ஸ்கிருத பாஷையின் பெருமையை நன்றாக வற்புறுத்தி யிருக்கிறார்.

வைதிக நூல்களைச் சம்பாதித்து அச்சிட்டு அவ் வைதிகக் கிரந்தங்களுக்காகப் பாடுபட்ட மேனாட்டுப் புலவர்களுக்குப் பாரதீயர்கள் மிகவும் கடம்பட்டுள்ளார்க ளென்பது நிச்சயம். அவர்கள் தூக்கமின்றி எடுத்துக்கொண்ட சிரமத்தினாலேயே நம் நாட்டு வைதிக நூல்களெல்லாம் புழுப் பூச்சிகளது வாயில் போய்விடாமல் சூரிய வெளிச்சத்தைக் கண்டன. முதல் முதல் கி. பி., 13, 14-வது நூற்றாண்டுகளில் அரேபியர்கள் வழியாக மேனாட்டார் பாரதீய சாஸ்திர விஞ்ஞான வைபவத்தை உணர்ந்தார்கள். கி. பி. 16-வது நூற்றாண்டில் ஐரோப்பிய மதப்பிரசாரகர்கள் நமது ஸநாதந பாஷையின் பெருமையைப்பற்றிக் கேள்விப்பட்டதுமட்டுமன்றி அதனைப் பரிசயமும் படுத்திக்கொண்டார்கள். 1651-ல் ஆப்ரஹாம் ரோஜர் என்ற பாதிரி பர்த்திருஹரியின் 'ஸுபாஷித த்ரிசதி'யைப் போர்த்துக்கேசிய பாஷையில் தர்ஜிமா செய்வித்துப் பின்னர் அதை டச்சு பாஷையில் மொழி பெயர்த்தார். ரெவரண்டு ராபெர்ட்டோடி நொபிலியஸ் (Rev. Robertode Nobilius) என்னும் ஜெஸுஇட்பாதிரி வேதநூல்களுக்காகத் தேடிச் சென்னைராஜதானியிலிருந்து யஜுர்வேதத்தைக்கொண்டு வந்ததாக ஐரோப்பாவில் பிரகடனம் செய்தார். வால்டேர் (Voltaire) அதைப் படித்துப் பிரான்ஸ் தேசராஜாங்க நூல் நிலயத்தில் சேர்த்து வைத்தார். ஆனால் அது உண்மையான யஜுர்வேத மல்ல. இப்படியே (Colebrooke) கோல்ப்ரூக் பண்டிதரும் கூட மோசம் போனார். அதன் பின்னர் (Colonel Polier) கர்னல் போலியர் என்பவர் 1798-ல் பகிரதப் பிரயத்தனம் செய்து ஜயபுரத்திலிருந்து நான்கு வேதங்களையும் சம்பாதித்து அவற்றை (British Museum) பிரிட்டிஷ் காட்சிச் சாலையில் சேர்த்தார். பொய்யாக வேதநூல்களென்று கொண்டுபோய் ஐரோப்பாவில் பிரசம்ஸித்ததனால், வேதமே இல்லை யென்றும், அலெக்சாந்தர் படையெடுப்புக்குப் பிறகு கிரேக்கர்களோடு பழகிய பிராஹ்மணர்கள் ஸம்ஸ்கிருத பாஷையைச் சிருஷ்டித்துக் கொண்டார்களென்றும் ஐரோப்பியரில் ஒருசாரார் பேசலாயினர்.

1830-ல் ரோஸன் (Prof. Rosen) பண்டிதர் ரிக்வேதத்திற் சில சூக்தங்களை லண்டனில் பிரசுரித்தார். 1838-ல் லண்டனில் இவர் பிரசுரித்த ரிக்வேத முதலஷ்டகத்திலிருந்தே வைதிக தத்துவ விசாரணை உண்மையாகத் தொடங்கிற்றென்னல் வேண்டும். இவர் அகால மரண மடைந்த காரணத்தினால் மற்ற அஷ்டகங்கள் வெளிப்

படுத்தப்படவில்லை. என்றாலும் இவருடைய வைதிக நூல் சேவை மேனாட்டாருடைய மனத்தில் வேரூன்றிற்று. இதன் பலனாகப் பிரான்ஸ் தேசத்தில் (Eugene Burnouf) பர்நாப் பண்டிதரின் தலைமையின்கீழ் வேதாத்தியயநத்துக்கு விதை விதைக்கலாயிற்று. அவரது சிஷ்ய சிகாமணியாகிய (Prof. Rudolf Roth) ராத் பண்டிதர் 1846-ல் 'வேத பாஷையும் சரித்திரமும்' என்னும் விஷயத்தைப் பற்றி ஒரு நூலெழுதி வெளியிட்டார். இதில் சில பாகங்களை மூயிர் (J. Muir) பண்டிதர் வங்கதேசத்தில் நடந்த ஆசியா ஸங்கப் பத்திரிகையில் 1817-48ஹு-ல் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். லிட்லி (Lydley) பண்டிதரின் அபிப்பிராயத்துக் கிணங்கி அச்சங்கம் 'பாரதீய கிரந்தமாலை' (Bibliothica Indica) என்ற பேருடன் 1847ஹுலிருந்து நூல்களை வெளியிடத் தொடங்கியது. அவ்வருஷத்திலேயே (Dr. Roer) ரோயர் ஆசிரியர் ரிக் வேத முதலிரண்டு அஷ்டகங்களை ஆங்கில மொழி பெயர்ப்போடு வெளியிட்டு வந்தார். ஆனால் கிழக்கு இந்தியக் கம்பெனி (East India Company) மூலமாய் (Prof. Max Muller) மோட்சமூலர் ஸாயண பாஷ்யத்தோடும் வில்ஸன் (Prof. H. H. Wilson) பண்டிதரின் ஆங்கில மொழி பெயர்ப்போடும் ரிக் வேதத்தை வெளியிடுகிறாரென்று தெரிந்ததும் அவர் அதை நிறுத்திவிட்டார். 1849-75க் கிடையில் மோட்சமூலர் ரிக் வேதத்தைப் பீடிகை, சொல்லட்டவணை யிரண்டும் கூட்டி ஆறு பாகமாக வெளியிட்டார். இவரே 1856-59க்கிடையில் ரிக்வேத முதலஷ்டகத்தையும் 1873-ல் ரிக்வேத முழுவதையுமே பத பாடத்தோடு அச்சிட்டார். 1877-ல் (Prof. Th. Aufrecht) ஔப்ரெட் பண்டிதர் ரிக்வேதம் முழுவதும் ரோமன் லிபியில் அநுக்கிரமணியோடு அச்சிட்டார். 1848-51-ல் இவ்வேதம் பிரெஞ்சு பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டது. 1876-ல் லுட்விக் (Alfred Ludwig), பண்டிதரும் 1876-7-ல் கிராஸ்மான் (Prof. Hermann Grassman)பண்டிதரும் ரிக்வேதத்தை ஜெர்மன்பாஷையில் மொழி பெயர்த்து வெளியிட்டார்கள். போட்லிங்கு (Prof. Bohtlingh) பண்டிதரும், ராத் (Prof.R.Roth) பண்டிதரும் 1853-75க்கிடையில் ருஷியா தேசத் தலைநகரான ஸெண்டுபீடர்ஸ்பர்க்கு நகரத்தில் ஸம்ஸ்கிருத ஜெர்மானிய பெரிய அகராதியும் வெளியிட்டார்கள். 1848-52க்கிடையில் ராத் பண்டிதர் யாஸ்கருடைய நிருக்தத்தை வியாக்கியானத்தோடும் தமது உரை விளக்கத்தோடும் வெளியிட்டார். 1863-ல் (Prof. Martin Haug) ஹாக்பண்டிதர் ஐதரேய பிராஹ்மணத்தை ரோமன் எழுத்தில் இரண்டு சம்புடங்களாக வெளிப்படுத்தினது மாத்திரமன்றி அதற்கு ஆங்கில முன்னுரையும் மொழி பெயர்ப்பும் கூடவெளியிட்டனர். 1864-65ல் (Prof. Stenzler) ஸ்டென்ஸ்லர் பண்டிதர் ஆசுவலாயன கிருஹ்ய ஸூத்திரத்தை ஜெர்மன் மொழிபெயர்ப்போடு வெளியிட்டார். அதே சமயத்தில் (Prof.

Herman Oldenburg) ஒல்டென்பர்க் பண்டிதர் ஸாங்கியாயன கிருஹ்ய சூத்திரத்தை பாஷாந்தரத்தோடு கூட வெபர் (Prof. Weber) பண்டிதர் பிரசுரித்து வந்த (Indische Studien) 'இந்தியாக் கல்வி' என்னும் பத்திரிகை மூலமாக வெளியிட்டார். 1857-58ல் ரிக்வேதத்தின் சௌநகப் பிராதிசாக்கியத்தையும் பாஷாந்தரத்தில் மொழிபெயர்த்து பிரெஞ்சு தேசத்து வேத பண்டிதர் (Prof. Regnier) ரேனீர் வெளியிட்டார். 1856-59ல் இதையே மாக்ஸ்முல்லர் ஜெர்மன் பாஷா மொழிபெயர்ப்புடன் அச்சிட்டார். வெபர் பண்டிதர் தம் பத்திரிகையில் 1858-ல் 'பாணினீய சிட்சை'யையும், 1863-ல் ரோமன் எழுத்தில் பிங்களனது 'சந்தஸ் ஸூத்ர'த்தையும் வெளியிட்டார். 1877-ல் (Rudolf Mayer) மேயர் பண்டிதர் 'ரிக்விதானம்' 'பிருஹத்தேவதை' இவற்றை முன்னுரையோடு வெளியிட்டார். 1862-ல் (Dr. Fitz Edward Holl) ஹால் வித்துவான் ரிக்வேதத்தின் மேலுள்ள ராவணபாஷ்யத்திற் சில பாகங்களைப் பிரசுரித்தார். 'ஆசிய ஆராய்ச்சிகள்' (Asiatic Researhes) என்னும் பத்திரிகையில் இம்மாதிரி வைதிகக்கிரந்தங்களாகிய பூமியைக் கஷ்டப்பட்டு உழுது பயிர் செய்துவந்த மேனாட்டு ஸம்ஸ்கிருத பண்டிதர்கள் மூலமாய் 'ஷட்விம்ச ப்ராஹ்மணம்', 'ஸாமவிதான ப்ராஹ்மணம்', 'சுக்ல கிருஷ்ண யஜுர்வேதங்கள்', 'அதர்வ வேதம்', 'பாதஞ்சல மஹா பாஷ்யம்', 'சாங்கர சாரீரக பாஷ்யம்', 'இராமாநுஜ ஸ்ரீபாஷ்யம்' முதலிய அநேக நூல்கள் வெளியிடப்பட்டன. மேலும் இவர்கள் வைதிக பௌராணிக நூல்களைக் கடைந்து அநேக வியாசங்கள் வெளியிட்டார்கள்.

### மேனாட்டாரின் ரிக்வேத ஸமன்வய ஒழுங்கு

மேனாட்டு வேத வித்வான்களில் (Prof Theodor Goldstucker) கோல்ட்ஸ்டக்கருக்குப் பழைய வேத பாஷ்ய கர்த்தாக்களாகிய யாஸ்கர், மஹீதரர், ஸாயணர் முதலியவர்களிடத்து அளவற்ற கவுரவமுண்டு. வேதத்துக்கும் அதன் பாஷ்ய வியாகரண நிர்மாதாக்களுக்கும் உள்ள கால எல்லைக்குத் தக்கபடி இவர்களிடத்து நமக்குப் பிராமாண்யம் குறையும். பாணினி எழுதின வைதிக சப்த விவரணத்துக்கும் அதற்குமுன் யாஸ்கர், கர்க்கர், சாகல்யர், சாகடாயனர் முதலிய பழையோர் எழுதியவற்றிற்கும் பேதமேற்பட்டால் யாஸ்காராதியரின் விவரணங்களே பிரமாணதரமாய் அங்கீகரிக்கப்படவேண்டுமென்பது கோல்ட்ஸ்டக்கரது அபிப்பிராயம். ஏனைய மேனாட்டுப் பண்டிதர்களிற் சிறந்தவர் 'ராத்' என்பவர், வேதாத்யாபனத்திலும், வைதிகவைதுஷ்யத்திலும் தமக்குச் சமானமானவரில்லை யென்பது அவரது அபிப்பிராயம். தமது ஸம்ஸ்கிருதப் பேரகராதிப் பீடிகையில் இவர் ஸாயணர் முதலியவர்களை நிராகரித்து நூதனமான தமது வேதப்பதப் பொருள்களை விளக்கியுள்ளார். ராத் பண்டிதரது நெறியைக் கோல்ட்

ஸ்டக்கர் கண்டித்து எழுதியுள்ளார். அதன் விரிவைத் தெலுங்கிலுள்ள 'ஸம்ஸ்கிருத வாங்மய சரித்திரம்' என்னும் நூலில் ஸ்ரீமான் ஈயுண்ணி வேங்கட வீரராகவாச்சார்யர் அவர்கள், பி. ஏ. எழுதியுள்ள விஞ்ஞாபனம் V, VI பக்கங்களைப் பார்க்க. ராத் பண்டிதரைக் காட்டிலும் கோல்ட்ஸ்டக்கரே அதிக சாஸ்திர ஞானமுள்ளவரென்பது இவ்வாங்கில ஆசிரியரது அபிப்பிராயம். நிற்க,

வேதத்தைப் பொருள்படுத்துவதில் மேனாட்டுப் பண்டிதர்களது மார்க்கம் வேறு வேறாக வுள்ளது.

1. போட்லிங், ராத், க்ராஸ்மான் இவர்கள் பாரதீய வேத பாஷ்யக்காரர்களைத் திரணப் பிராயமாக நினைத்துள்ளார்கள்.

2. கோல்ட்ஸ்டக்கர், வில்ஸன் இவர்களது மதம் வேறு. ஸாயணர் முதலிய பாரதீய பாஷ்யக்காரர்களே வேதங்களுக்குச் சரியான அர்த்தம் கண்டவர்களென்பது அவர்களது நம்பிக்கை.

3. லுட்விக் முதலிய பண்டிதர்கள், "யாஸ்கர், ஸாயணர், மஹீதரர் முதலியோர் பரம்பரையாய் வந்த ஸநாதந ஸம்பிரதாயப் பொருள்களை யறிந்தவர்களாதலின் அவர்கள் பாஷ்யங்கள் தள்ளக் கூடியவையல்ல. ஆனால் அவர்கள் சொன்னதே பரமார்த்தமென்று எண்ணாமல் அவர்களது அபிப்பிராயங்களை நன்றாய் விமர்சனம் செய்து ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று கூறுவர்.

4. 'ராத்' 'லுட்விக்' பண்டிதர்களிடத்திலுள்ள குணங்களை மட்டும் கிரகித்து, 'பிஷெல்' 'கெல்ட்நர்' (Geldner) பண்டிதர்கள் மற்றொரு மார்க்கத்தை நிருமித்தார்கள். 'வேத வித்துக்களாக விளங்க விரும்புவோர் ஸாயணரது அபிப்பிராயம் எவ்வளவு பொய்யாயும், பரஸ்பர விரோதமாயும் காணப்பட்டாலும் அதனை நிராகரிக்கக் கூடாது. அச்சாயண பாஷ்யத்தைப் படிப்பது கேவலம் உமியைக் குத்துவதுபோலக் காணப்பட்டாலும், மொத்தத்தில் உள்ளூற ஸாரப் பிரயோஜநமாக வுள்ளதே. கிழக்கு மேற்குப் பத்ததிகளை ஸமரஸப் படுத்தி அநூதன முறையில் வேதத்தின் பொருளைக் கொள்ளக் கூடும்' என்பது இவர்களது அபிப்பிராயம். இவ்வித நெறியே உத்தம நெறி யென்பது எம் அபிப்பிராயமும் ஆகும். இனி ஸம்ஸ்கிருத பாஷையிலும் வேதத்திலும் உழைத்துப் பெருவேலை செய்துள்ள சில மேனாட்டு மகனீயர்களின் பெயரைக் கூறுவாம்:—

1. சார்லெஸ் வில்கின்ஸ் (Charles Wilkins) 1750—1836. இவர் வாரன்ஹேஸ்டிங்ஸ் அளித்த உற்சாக பலங்கொண்டு பகவத் கீதை, ஹிதோபதேசம் இவற்றை மொழிபெயர்த்தவர்.

2. ஸர் வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) 1746-94. இவர் மேனாட்டு ஸம்ஸ்கிருத பண்டிதர்களில் மஹர்ஷி. கூர்மையான புத்திவாய்ந்தவர். ஸர்வதோமுக பண்டிதர். கல்கத்தாவிலிருந்த நியாயாதிபதி. 28 பாஷையறிந்தவர். 1784-ல் ஆசியா வித்வஜன ஸங்கத்

தைக் கல்கத்தாவில் ஸ்தாபித்தார். கீழ்நாட்டுக் கல்வியைப் பரப்ப (Journal of the Asiatic Society) ஆசியா ஸங்கப் பத்திரிகையை நிறுவினார். 1789-ல் சாகுந்தலம், மநு ஸ்மிருதி இரண்டையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். பழைய ஸம்ஸ்கிருத நூல்களை நாகர லிபியில் முதல் முதல் அச்சிட்டவர் இவர். தாமே நாகர எழுத்துக்களைச் செதுக்கி வார்த்து முதலில் ஐரோப்பாவில் நாகர அச்சு அளித்தவர் இவரே........ ........ஸம்ஸ்கிருதமானது ஜெர்மன், லத்தீன் பாஷைகளுக்கு மூலமென்றும், இவை ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவை யென்றும், ஜெர்மன், கெல்டிக், பாரசீக பாஷைகளுக்கும் கூட ஸம்ஸ்கிருத ஸம்பந்த முண்டென்றும் கூறி நிரூபித்துக் காட்டினார். பழைய பாரதீய தேவதைகளுக்கும் கிரீஸ் ரோமன் தேவதைகளுக்கும் அத்தியந்த ஒற்றுமை யுளதென ஸித்தாந்தப்படுத்தியுள்ளார்.

3. ஹென்றி தாமஸ் கோல்புருக் (Henry Thomas Colebrooke) 1765-1837 ஸர் வில்லியம் ஜோன்ஸ் ஏற்படுத்திய 'பிராச்சிய விக்ஞான தீபிகை'க்கு இவர் பேருதவி செய்தவர். பாரத மக்களது தர்மசாஸ்திரம், தரிசனங்கள், மதம், வியாகரணம், கணிதம், ஜோதிஷம் முதலியவற்றை நன்றாகக் கற்று அநேக காரியங்கள் செய்தார். 1805-ல் வேதங்களைப்பற்றிப் பிரமாண பூர்வமாய் அநேக வியாசங்களெழுதி மேனாட்டவருக்குத் தெரியப்படுத்தினார். அநேக ரூபாய் செலவழித்து இவர் சம்பாதித்த ஸம்ஸ்கிருதக் கையெழுத்துப் பிரதிகள் இப்பொழுது லண்டனிலுள்ள 'பாரதீய பவன'த் ((India office)தில் இருக்கின்றன. 19-ம் நூற்றாண்டில் 'ஜெர்மனி, பிரான்ஸ் தேசத்தவர்கள் அநேகரை ஸம்ஸ்கிருதப் படிப்பிலிறக்கிவிட்ட மஹான் இவரே.

4. ஷ்லேகல் (Friedrich Schlegel) 1772-1829. இவர் 'பாரதீய பாஷா விக்ஞானம்' (On the Language and Wisdom of the Indians 1808) என்ற நூல் எழுதினார்.

5. ஆகஸ்டு வில்ஹேம் வான் ஷ்லேகல் (August Wilhelm Von Schlegel) 1767-1845. இவர் மேலே சொன்னவரது சகோதரர். போன் (Bonn) ஸர்வகலாசாலையின் கீர்வாணாசிரியராயிருந்தவர். இவரே ஜெர்மெனியின் முதல் ஸம்ஸ்கிருத பண்டிதர்; 'பாரதீய கிரந்தாவளி' (Indishe Bibliothek) என்ற பத்திரிகை ஆரம்பித்து நடத்தினர்.

6. சேஜி (A. L. Chegy) 1773-1832 பிரான்ஸ் தேசீயக் கலாசாலையில் (College De France) முதல் கீர்வாணாசிரியரா யிருந்தவர். ஷ்லெகல் பண்டிதருக்குப் பரமோபகாரி.

7. பிரான்ஸ் பாப் (Franz Bopp) 1791-1867. ஜெர்மெனி தேசஸ்தவராயினும் சேஜீயிடத்து ஸம்ஸ்கிருதம் கற்று, கிரீக், லத்

தீன், பாரஸீகம், ஜெர்மன் பாஷைகளிலுள்ள வினைச் சொற்களை ஒப்புநோக்கி (Conjugations System) அவற்றின் மாறுபாட்டொழுங்கைப் பற்றி ஒரு நூலெழுதியதுமன்றி 'பாஷாந்தர ஒற்றுமை நூல்' என்னும் ஒரு கிரந்தமும் எழுதினர். மற்றும் கோல்புரூக் பண்டிதர் எழுதிய வேதாங்கில மொழிபெயர்ப்பை ஜெர்மன் பாஷையில் மொழிபெயர்த்தார். ஸம்ஸ்கிருத அகராதி ஒன்று எழுதி வெளியிட்டார்.

8. பர்நாப் (Prof. Eugene Burnouf) 1801-'52 இப் பிரெஞ்சுப்பண்டிதர்மூலமாகவே ஐரோப்பாவிலுள்ளவர்கள்வேதாத்தியயனத்தைத் தொடங்கினர். "சேஜீ' பண்டிதருக்குப் பின் இவர் பிரான்ஸ் கலாசாலையில் கீர்வாணுசிரியர் பதவியை வகித்தார். இவரிடத்திலேயே பாப், ராத், மோட்சமூலர் முதலியோர் வேதபாடங் கேட்டு வைதிக சிரோமணிகளாயினர்.........

9. லாஸ்ஸென் (Christian Lassen) 1800-76. இவர் ஷ்லெகல் (A. W. Von. Schlegel) பண்டிதரின் சீடர். 'பாரதீய புராதத்வகோசம்' என்று நான்கு ஸ்ம்புடங்களில் ஒரு பெரு நூல் எழுதினர்.

இதுவரையில் ஐரோப்பா ஸம்ஸ்கிருத பண்டிதர்கள் சாகுந்தலம், பகவத்கீதை, மநுஸ்மிருதி, பர்த்ருஹரி, ஹிதோபதேசம் முதலிய நூல்களே ஸம்ஸ்கிருதத்தில் முக்கிய நூல்களென்று எண்ணியிருந்தனர். ஆனல் 1805-ல் கோல்புரூக் பண்டிதர் வேதங்களைக் கற்று அவற்றின் முக்கியதையைப்பற்றி வியாசங்களெழுதினராயினும், அடியிற் கண்டவர்களே வைதிக ஞானத்தை ஐரோப்பா கண்டத்தில் பரப்பத் தீர்மானித்தனர்.

10. ரோஸன் (Friedrich Rosen) 1805-'37. இவர் ஜெர்மெனி தேசத்திய வைதிகாக்ரணி. கிழக்கு இந்தியா பவனத்தில் (East India House) இருந்த ஆயிரக்கணக்கான பனையேட்டுச்சுவடிகளைப் படித்து ரிக்வேதம் முதலஷ்டகத்தைப் பரிஷ்கரித்து வேதபத விசாரணைக்கு வழி காட்டினர். இவர் அதிக காலமிருந்திருந்தால் அநேக நூல்கள் வெளியிட்டிருப்பார். 1838-ல் அகால மரணமடைந்தார்.

11. பென்வே (Theodor Benfey) 1809-1881. இவர் 'பாப்' பண்டிதரின் சீடர். 1848-லிருந்து (Gottingen) காட்டிஞ்சன் விசுவவித்தியாலயத்தில் கீர்வாணுசாரிய பீடம் வகித்தவர். பூலர் (Buhler) ஸெநார் (Emile Senart) பண்டிதர்கள் இவரது சீடர்கள். 1848-ல் இவர் ஸாமவேதத்தையும் 1866-ல் ஸம்ஸ்கிருத ஆங்கில நிகண்டையும் வெளியிட்டார்.

12. மோட்சமூலர். (Prof. Friedrich Max Muller) 1823-1900. இவர் பென்வேயோடுடன் மாணுக்கராயிருந்தவர். பர்நாவ், பாப் பண்டிதர்களின் சீடர். ஜெர்மெனி தேசத்து வைதிக சக்ர

சூடாமணி. பர்நாவ் பண்டிதரின் உதவி பலங்கொண்டு (1849-75) வருஷங்களுக்கிடையில் ரிக் வேதத்தை ஸாயண பாஷ்யத்தோடு அச்சிட்டவர். அபிநவபோஜன் என்று பெயர் பெற்ற விஜயநகரப் பிரபு ஆநந்த கஜபதீந்திரரது உதார குணத்தினால் அவர் அதையே இரண்டாம் முறை பிரசுரித்தார். 'பிராசீன ஸம்ஸ்கிருத ஸாரஸ்வத சரிதம்' 'பாரதீய தர்சன ஷட்கம்' முதலிய நூல்களை எழுதி வெளியிட்டார். 'பிராச்ய ஸாரஸ்வத பவித்ர கிரந்தாவளி' என்ற பேரால் அநேக நூல்களை வெளிப்படுத்தினார். (Comparative Mythology) புராண தத்துவ சாஸ்திரத்துக்கு மூல புருஷர்.

13. ராத் (Rudolph Roth) 1821—'95. இப்பண்டிதர் டூபிஞ்ஜென் விசுவவித்யாலயத்தில் கீர்வாணாசிரியரா யிருந்தவர். மோட்சமூலரோடு கூடப் படித்தவர். பர்நாவ் பண்டிதரின் கடைசிக் காலத்திலிருந்தவர். விட்நி (William D. Whitney 1827-94) லான்மன், கெல்ட்நர் பண்டிதர்களுக்கு ஆசிரியர். 1846-ல் இவர் வைதிக நூல்களையும் வைதிக சரித்திரங்களையும் கற்று, 'வேதநூலும் சரிதமும்' என்று ஒரு கிரந்தம் ஜெர்மன் பாஷையில் வெளியிட்டார். அந்நாளிலிருந்து அத்தேசத்தார்கள் வேதவேதாங்கங்களை நன்றாக மதிக்கத் தொடங்கினர். 19 - வது நூற்றாண்டின் பிற்பாதியில் பாரதீய புராதத்வ பரிசோதனை அதிகமானதற்கு இவரே மூலகாரணர்.

14. ஆட்டோ, போட்லிங்கு (Otto, Bohtlingk) 1815—? என்னும் இவ்விரண்டு ஜெர்மெனி தேசத்து வைதிகப் பண்டிதர்கள் ஏற்படுத்திய பிருஹத் ஸம்ஸ்கிருத நிகண்டு(The Sanskrit—Worterbuch) 1852-75க்கிடையில் ஸெண்ட் பீடர்ஸ்பர்க் (Lenin grad) நகரத்தில் சாஸ்திர கலாபரிஷத்தவர்களால் (Academy of Arts and Sciences) பிரசுரிக்கப்பட்டது. ஜர்மானியர்கள் தூக்கமின்றிக் கங்கணம் கட்டிக்கொண்டு கீர்வாண பாஷைக்காகப் பாடுபடுகிறார்களென்பது இந்த ஒரு நூலைப் பார்த்தால் தெரியவரும்.

15. தியடார் ஔபிரெட் (Theodor Aufrecht) 1822-1907. மோட்சமூலர், பென்வே இவர்களோடுகூடப் படித்தவர். பாப் பண்டிதரின் சீடர். எடின்பரோ (1862-75) பான் (1875-89) ஸர்வகலாசாலைகளில் கீர்வாணாசிரியராக விருந்தவர். மோட்சமூலர் ரிக்வேதப் பிரசாரம் செய்யுங்காலத்து அவரோடு ஒத்துழைத்து அது அச்சிடப்பெற்ற காலத்திலேயே (1849-75) இவர் ரிக்வேதமூலத்தைப் பூர்த்தியாய் அச்சிட்டு (1861-63) வைதிக நூலுக்கு விசேஷ சேவை செய்தார். 40வருஷ காலம் உழைத்து, அச்சிட்ட நூல்களுக்கும் அச்சில் வராத நூல்களுக்குமாக ஒரு பெரிய பட்டி 3 ஸம்புடங்களில் (Catalogus Catalogorum) வெளியிட்டார். இப்பெருங்கோசத்தில் அகராதியாக வரையப்பட்ட நூல்களின் பெயரும் நூலாசிரியர்களின் பெயரும் ஆயிரக்கணக்காகக் காணப்படுவனவேயன்றி நூற்றுக்கணக்காகவல்ல. ஏதாவது ஒரு நூலின் பிரதிகள் கிழக்கு மேற்கு நூல்நிலை

யங்களில் எங்கெங்கே எவ்வளவுள்ளன வென்பதையும், அந்நூலாசிரியர்கள் எவ்வளவு நூல்கள் செய்திருக்கிறார்க ளென்பதையும் அறிவதற்கு இது கல்பதரு போன்றது.

16. ஜியார்ஜ் பூலர் (Dr. J. George Buhler) 1837-98. இவர் பென்வே பண்டிதரின் சீடர். பிரேக் (Prague) ஸர்வகலா சாலையில் கீர்வாணாசிரியராய்க் கீர்வாணபாஷா சரித்திரமொன்று ஜெர்மன் பாஷையில் எழுதியுள்ள வின்டர்நிட்ஜ் (Winternitz) பண்டிதர் இவருக்குச் சீடர். 1863-லிருந்து அநேகவருஷம் பம்பாய் எல்பின்ஸ்டன் கலாசாலையிலும், பின்னர் 1880-லிருந்து வியன்னா சர்வகலாசாலையிலும் ஆசிரியரா யிருந்து வியன்னா பிராச்சிய விஞ்ஞானப் பத்திரிகை (Vienna Oriental Journal)யை நடத்தினவர். பாரதீயர்களது சரித்திரம், மதம், தரிசனங்கள், நூல்கள் முதலியவற்றை யெல்லாம் போதிக்கும் 'ஹைந்தவ ஆர்ய சப்ததத்துவ புராதத்துவ விஞ்ஞான ஸர்வஸ்வம்' (Encyclopaedia of Indo - Aryan Philology and Archeology or briefly Encyclopaedia of Indo-Aryan Research) என்னும் நூலை எழுதத் தொடங்கினார். இப்பெரிய நூல் 1897-லிருந்து வெளிவரத் தொடங்கியது. இப்பெரிய நூலை யாக்குவதற்கு ஜெர்மெனி, ஆஸ்திரியா, இங்கிலாந்து, அமெரிக்கா, இந்தியா, அரேபியா முதலிய தேசங்களிலுள்ள திக்கஜங்களையொத்த பண்டிதர்கள் தோட்கொடுத்தனர். இதை யாரம்பித்த வருஷத்திலேயே பூலர் பண்டிதர் இறந்தார். இவர் காலத்து 9 ஸம்புடங்களே வெளிவந்தன. பின்னர் கீல்ஹார்ன் (Prof. Kielhorn) பண்டிதர் இதை வகிக்கலாயினர். இப்பொழுது இப்பெரும் காரியத்தை லியூடர்ஸ் (Prof. H. Luders) பண்டிதரும், (Prof. J. Wackernagel) வாகெர்நகெல் பண்டிதரும் வகித்து வருகிறார்கள். இது பெரும்பாலும் ஜெர்மனி பாஷையில் எழுதப்பட்டு வருகிறது. இந்தியர்களுக்கும் தெரியும் விதமாக இதனை ஆங்கிலத்தில் எழுத வேண்டுமென்பதே பூலர் கருத்தாயிருந்தது. வைதிக தேவதைகளைக் குறித்து மாக்டாநெல் (Prof. A. A. Macdonell) பண்டிதர் எழுதின (Vedic Mythology) வைதிக தேவதா தத்துவம் என்ற நூலும், புளூம்பீல்டு எழுதி வெளியிட்ட அதர்வ வேதமும், ஜகரியா (Zachariae) பண்டிதரது ஸம்ஸ்கிருத நிகண்டின் சரித்திரமும் இந்த ஸர்வஸ்வத்தைச் சேர்ந்தவைகளே.

17. கெல்நேர் (Prof. Karl Friedrich Geldner) 1853-1929 இவர் ஜெர்மானியர்; ராத்பண்டிதரின் சீடர். பெர்லின் நகரத்திலும் (1890-1907) மார்பரி (University of Marbury)யிலுமுள்ள விசுவவித்தியாலயங்களில் கீர்வாண ஆசிரியராயிருந்தவர். வேதங்களைப் பொருட்படுத்தும் முறையில் ராத் அநுஷ்டித்த முறைகளை இவர் கண்டித்தார். வேதங்களுக்கு அநேக இடங்களில் ராத்பண்டிதர் தப்பர்த்தம் செய்துள்ளாரென்றும், அந்தந்தப் பாகங்களுக்கு

ஸாயணர் செய்துள்ள பாஷ்யமே ஸரியென்றும் எழுதி, அமெரிக்கா ஐரோப்பா கண்டத்துப் பண்டிதர்கள் ஸாயண பாஷ்யத்தை எவ்வளவு பரிகசிக்கத்தக்கதாக எண்ணினாலும் வேதத்தைப் பொருள் செய்யும் நெறியிலிறங்கினவர்களுக்கு அப்பாஷ்யமில்லாமல் ஒரு பதத்தைக் கூட மொழிபெயர்க்கமுடியாதென்றும் இவரும் (Prof R. Pischel) பிஷெல் பண்டிதரும் 'வேதப்படிப்பு' (Vedische Studien) என்னும் நூலின் முகவுரையில் எழுதியுள்ளார்கள். இவர் வசன நடையில் ரிக் வேத முதற்பாகத்தை ஜெர்மன் மொழியில் 1923-ல் வெளியிட்டார். இதற்கு (Harvard Oriental Series) ஹார்வார்டு கீழை நூல் மாலைகள் என்ற நூல் வரிசைகளில் லான்மென் பண்டிதர் இங்கிலீஷ் மொழி பெயர்ப்புச் செய்துள்ளார்.

18. லான்மேன் (Prof. Charles Rockwell Lanman) இவர் (William Dwight Whitney) விட்நி பண்டிதரின் சீடர். விட்நிபண்டிதர் (1827-1894) வுலங்களுக் கிடையிலிருந்தவர். லான்மென்பண்டிதர் ஹார்வார்டு ஸர்வகலாசாலையில் கீர்வாண ஆசார்ய பீடாதிபதி. 1891-லிருந்து 'ஹார்வார்டு பிராச்சியக்கிரந்தமாலை' என்ற பெயருடன் வெளியிட்டு வந்தார். இவற்றுள் முக்கியமானவை மாக்டாநெல் திருத்தி எழுதிய பிருஹத்தேவதை(1904),விட்நிபண்டிதர் வெளியிட்ட அதர்வவேத இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு (1905), புளூம்பீல்டு (Prof. Maurice Bloomfield பண்டிதர் எழுதிய (Vedic Concordance) வேத வாக்கிய அகராதி, பெரிடேல் கீத் (Prof. A. B. Keith) பண்டிதர் எழுதிய தைத்திரீய ஸம்ஹிதையின் ஆங்கில மொழி பெயர்ப்பு (1914), ரிக்வேத பிராஹ்மணங்களின் மொழிபெயர்ப்பு, (1920) வேத உபநிஷதங்களிலுள்ள மத தர்சனங்கள் (The Religion and Philosophy of the Vedas and the Upanishads 1925), கீத் பண்டிதர் பரிசோதித்த ஐதரேயாரண்யகம், புளூம்பீல்டு எழுதிய ரிக்வேத புனருக்தி யட்டவணை (Rig-Veda Repetitions 1916), மாக்டாநல் பண்டிதர் திருத்திய காத்தியாயநாது ஸர்வாநுக்கிரமணி முதலிய நூல்கள் இக் கிரந்தமாலையைச் சேர்ந்தவைகளே.

19. மாக்டாநெல் பண்டிதர் (Pref. Arthur Anthony Macdonell 1854-1931) இவர் பென்வே பண்டிதரின் சீடர். கோபதநகரம் Oxford) ஸர்வகலாசாலையில் கீர்வாணாசாரியரா யிருந்தார். பூலர் பண்டிதரின் 'விஞ்ஞான ஸர்வஸ்வ'த்திற்கு இவர் 'வைதிக தேவதை'களைக் குறித்து எழுதினாரென்று முன்பே சொல்லப்பெற்றது. வைதிக நாமங்களுக்கும் விஷயங்களுக்குமாக ஒரு அகராதி (Vedic Index of names and subjects), வேத இலக்கணம், ஸம்ஸ்கிருத ஆங்கில அகராதி இவற்றை வெளியிட்டார். ஹார்வார்டு புத்தக மாலையில் இவர் எழுதியுள்ள நூல்கள் பிரஸித்தமானவை. 1928-ல் கோபத நகரத்தில் கூடிய தேசாந்தரக் கீழைக் கல்வியாளர் மகாநாட்டிற்கு அக்கிராசனம் வகித்

தார். வெகு நாட்களுக்கு முன்பே இவர் 'உலக பாஷா சரித்திர மாலை' என்னும் கிரந்தாவளியில் 'ஸம்ஸ்கிருத பாஷா சரித்திரம்' என்னும் சிறந்த நூலொன்று வெளியிட்டுள்ளார். 1927-ல் 'பாரத வர்ஷப் பிராசீன வைபவம்' (India's Past) என்னும் நூலெழுதினார்.

20. 'பேரிடேல் கீத்' (Prof. Arthur Berriedale Keith) இவர் மாக்டானெல் பண்டிதரின் சீடர். குருவையும் மறக்கச் செய்யும் பேராசிரியர். எடின்பரோ ஸர்வகலாசாலையில் கீர்வாணாசிரியர். ஸம்ஸ்கிருத பாஷையில் இவருக்குத் தெரியாத நூலே யில்லையாம். அநேக நூல்களை யியற்றியுள்ளார். தைத்திரீய ஸம்ஹிதையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். கர்ம மீமாம்ஸை, ஸம்ஸ்கிருத நாடக சரித்திரம், ஸம்ஸ்கிருத பாஷா லௌகிக சரித்திரம் இவற்றையும் எழுதி வெளியிட்டுள்ளார்.



ஓம்! வேதபுருஷாய நம:

# இருக்குவேத சங்கிதை.



## காப்பு.

வேதப் புருடன தடியிணை தொழுபவர்
ஏதப்படுவதி லெனு மறைமொழியே
ஓதப்பிரணவ மறையிணை யுணர்பவர்
மேதைப் புலவர்க ளெனுநிறை மொழியே.

(இ-ள்.) வேத புருஷனது உபய பாதாரவிந்தங்களையும் வணங்குவோர் துன்படையாரென்று மறைமொழிகூறும். யாவராலும் ஓதப்படும் பிரணவ மந்திரத்தினுண்மையை யுணர்ந்தவர்கள் ஞானவான்களாகிய தேவராவாரென்று நிறைமொழியாகிய வேதங்கூறும். அதனாற் பிரணவத்தையும் வேத புருஷனையும் இந்நூல் இனிதின் முடியுமாறு கருதுவாம்.—(எ-று.) பிரணவமறையின தண்மையினை அஷ்டாதச ரஹஸ்யம், உபதேச வுண்மை, உபநிடதம் ஆதிய நூல்களிலும் இவ்வாசிரியரது திருநான்மணிமாலை 9-வது பாட்டிலும் நோக்குக. அ, பண்டறிசுட்டு.

---

## நூன்முகம்.

1. ஓதுமொரு கோதில்மொழி யுற்றவெழில் கொண்டே
யாதமிலி யானொருவ னார்ந்து வலியாலே
வேதமெனு ஞானமொழிக் குன்றை விரைந்தேற
லோதுவது கையறையன் வான்றொடுத லொக்கும்.

(இ-ள்.) குற்றமற்ற அருட்குரு 'போற்றியங்கி' என முதல் தந்து கூறிய மொழிப்படி ஆதாரவில்லாத யான் என் மனோவலியினால் வேதத்தைப் பாடுவேனெனத் தொடங்குவது கையிலாதான் வான்றொடுவதனை யொக்கும்.—(எ-று.) கோதில் மொழியென்றார். முக்குண வயத்தின் நில்லாத அப்பிராகிருத குருவினது அசரீரி வாக்கானமைபற்றி. ஏன்? குருவெனத் தாலத்துள் வாழ்கின்ற பேரைக் குறிக்கொள்ளுமியல்பு, இந்நூலாசிரியர்க்கின்மையால். 'தீது பயிலாத குரு ஓதுமொழி கொண்டே' என்றும் பாடம். அப்பாடத்தினும் இப்பாடமே ஓம் என முதலீறு பெற்றுள்ளதாற் சிறந்ததெனக.

2. பண்டிதர்கள் விண்டுபுகழ் சாயணரைப் பண்டு
மண்டி யுரைகூற விடைதந்தவர்க ளியாரென்
றண்டியுரை மண்டில மிதைய விதில்யானுங் [ளாரே.
கொண்ட துணிவென்னே ? எனைக் கோடேனக்கொ

(இ-ள்.) பண்டிதர்கள் உயர்வாகக் கொள்ளும் சாயணாசாரியாரையே உரையெழுதியதற்காகக் கடிந்துகொள்ளுவார்கள் இப் பாரதவருடத்தோராயின், என் துணிபுதான் என்னே? ஆயினும் என்னையும் தள்ளிவிடமாட்டார்கள்.—(எ-று.) பாரத வருடம், பரதகண்ட மென்பன, இந்தியாவின் பரியாய நாமங்கள்.

3. மேற்குறையுந் நாட்டிகர்கள் வேண்டி யகராதி
யேற்கவமைத் தெம்மறையை யெங்கணும் விரித்தார்
பாற்கர னொத்தே யொளிரும் பாரதவருடத்
தார்க்க வதைப் பன்மொழியி லாக்குத றகாதே !

(இ-ள்.) மேனாட்டார் (St. Petersburg Lexicon) வேத அகராதியமைத்து நம்வேதங்களை இங்கிலீஷ், ஜெர்மன், லத்தீன் முதலிய பாஷைகளிற் பாடியுள்ளபோது இப்பரதகண்ட பாஷைகளில் செய்யக்கூடாதென்ப தென்னே ? இது பெருநகைப்பை விளைக்கின்றது.—(எ-று.)

4. கம்பனெனும் வம்பன்மொழிக் கண்ணும் பலகுற்ற
மம்புவி யுரைத்தகவி யார்ந்த விடமீதாற்
றெம்பு சிறிதேனு மின்றித் தீயசொற் புகுத்தி
வம்புபெறக் கூறுமென்றன் வார்த்தை யிது வொன்றோ !

(இ-ள்.) கம்பன் கவிக்கும் நூறுகுற்றங்காட்டிய கவிகள் பழகிய வித்தேசத்தே ஒருயோக்கியதையு மில்லாத யான் சொல்லும் இம்மொழியை ஒருபொருட்டாக வெண்ணி அதனைப் பெரியோர் பரிசீலிப்பார்களா? மாட்டார்கள்.—(எ-று.) தணிகைப்புராண நூலுடையாரைச் சுட்டியபடி.

5. குற்றமுணர் மாந்தர்தமக் குற்றகுணந் தோன்று
வற்றெனிலென் மாற்றமதி லற்பமெலா நீக்கி
முற்றுகுண முள்ளவையே மூதறிஞர் கொள்ளி
னுற்றவென திச்செயலுக் கொத்தபலன் முற்றும்.

(இ-ள்.) தோஷக்ஞர்களுக்குக் குணந்தோன்றாது. அதனாற் பெரியோர் இதிலுள்ள குணத்தை மாத்திரங் கிரகிப்பார்களாயின் எனது இவ்வேலை ஸபலமாகும்.—(எ-று.)

## நூன்முகம்.

6. அந்தணரோ டல்லவர்க ளாடியி னுணர்ந்தே
நந்துறும் வேதப்பொருளை நன்மையி னடைவான்
முந்துற வுரைத்த கவியார் நிறைமொழியை
யிந்த வுலகத்தவர் விருந்தென நுகர்வார்.

(இ-ள்.) அந்தணரும் அல்லாதவருந் தெளிவாகவுணர்ந்து வேதப்பொருளை நன்கடையும் பொருட்டுப் பாட்டும் வசனமுமாகச்செய்த விந் நிறைமொழியை, இவ்வுலகத்தவர் விருந்துண்ணுவதுபோலப் படிப்பார்.—(எ-று.)

வேதமானதுபற்றி நிறைமொழியென்றார். நுகர்வாரென்றது செவியுணவாகையால்.

7. அங்கிலநா டொன்றுதவ மன்றுயிர்த்த தென்ன
மங்கலிலா நற்புகழிற் கிரிபித்தெனு ஞானி
தங்கியுறை நல்லிடத்தின் வாடையெனைத் தாக்கிச்
சிங்கலி லிப்பணி தருகிற் செப்புவது மென்னே !

(இ-ள்.)—ஆங்கிலதேசஞ் செய்த தவம் பலித்த தென்னும்படி தோன்றி, வடமொழி நன்குணர்ந்து வேதங்களையெல்லாம் மொழி பெயர்த்துள்ள கிரிபித் (Griffith) தென்னும் ஞானி வசித்திருந்த கோத்தர்கிரி யானுறைந்த குன்றூருக் கடுத்ததாதலால், அவ்விடத்துக் காற்றுவீசி என்னை இத்தொழில் செய்யுமாறு தூண்டிற்று.—(எ-று.) இந்நூல் ஆதியில் நீலகிரி குன்னூரில் இவ்வாசிரியர் வசித்தபோது தொடங்கியதென வறிக.

8. செந்தமிழு மாரியமுஞ் சேகரன தன்பி
னந்துமொழி யென்பதுல கோரும்வகை நந்தத்
தந்தவென தித்தமிழக் கேள்வியினைச் சந்த
முந்துறு முழுமுதலு மோரணியா மோயும்.

(இ-ள்.) தமிழும் ஸம்ஸ்கிருதமும் கடவுளுக்கு ஒத்த அன்புவாய்ந்த பாஷைகளென்பதை யுலகோர் அறியும்படி யான் செய்த இந்தத் தமிழ் வேதத்தை முழுமுதற் கடவுள் ஒரு ஆபரணமாகத் தரிப்பார்.—(எ-று.) மோயும், தாங்கும், திசைச்சொல். தமிழக்கேள்வி, தமிழிற் காணப்பெற்ற வேதம்.

## நூல்.

முக்கிய குறிப்பு:—வேதத்தின் பொருள் கூடுமானவரையிற் கெடாமற் பாட்டின்கண் அமைக்கப்பட்டுள்ளது. ஆயினும் ஒரு நூலை யொருமொழியிலிருந்து மற்றொரு மொழிக்குக் கொண்டுவரும்போது அந்நூலின் முழுப்பொருளும் வருவது

துர்லபம். ஆனதுபற்றி உரை பெரும்பான்மை வடமொழி வியாக்கியானங்களுக்கிணங்கவும், வடநூலின் மூலபதங்களை யங்ஙனே யமைத்தும் எழுதப்படுகிறது. இவ்விரண்டையும் ஒத்துநோக்கிப் படித்தால் வடமொழி ரிக்குக்களின் பொருள் நன்குவிளங்கும். பலபெரியோரின் இச்சையிவ்வகையிருந்ததால் இப்படிச்செய்யலாயிற்று. மேற்கோள்களின் எண்களெல்லாம் மண்டல சூக்தச் செய்யுட்களின் எண்களையே காட்டும்.

---

## முதல் மண்டலம்.

இருக்குவேதத்தில் 10 மண்டலங்களுண்டு. ஒவ்வொரு மண்டலத்திலும் பல அநுவாகங்களும் ஒவ்வொரு அநுவாகத்திலும் சில சூக்தங்களுமுண்டு. இம் மண்டலத்திற்குச் சதர்ச்சீ மண்டலமென்று பெயர். ஒவ்வொரு ரிஷியும் கிட்டத்தட்ட நூறு தனிச் செய்யுட்களைக் கண்டாளுதலின் அதற்கு அப் பெயர் அமைந்தது. இம்மண்டலத்தில் 24 அநுவாகங்களும், 191 சூக்தங்களுமுண்டு. ஒவ்வொரு சூக்தமும் பல இருக்குக்கள் (தனிப் பாடல்கள்) கொண்டது. இவ்வகை, மண்டலம், அநுவாகம், சூக்தமெனப் பாகுபாடு செய்தவர் சௌநகராம். இவர் பத்து அநுக்கிரமணி செய்தவர். அவற்றுள் மண்டல அநுவாக அநுக்கிரமணி வருமாறு:—

---

## சௌநகர் அநுக்கிரமணி.

| மண்டலம். | | | அநுவாகம். | சூக்தம். |
|---|---|---|---|---|
| 1-வது | சதர்ச்சீ மண்டலம் | .... | 24 | 191 |
| 2-வது | கார்த்ஸமத மண்டலம் | .... | 4 | 43 |
| 3-வது | விசுவாமித்திர மண்டலம் | .... | 5 | 62 |
| 4-வது | வாமதேவ மண்டலம் | .... | 5 | 58 |
| 5-வது | ஆத்திரேய மண்டலம் | .... | 6 | 87 |
| 6-வது | பாரத்வாஜ மண்டலம் | .... | 6 | 75 |
| 7-வது | வாஸிஷ்ட மண்டலம் | .... | 6 | 104 |
| 8-வது | ப்ராகாத மண்டலம் | .... | 10 | 92 |
| 9-வது | பவமான ஸௌம்ய மண்டலம் | | 7 | 113 |
| 10-வது | க்ஷுத்ர ஸூக்த மஹாஸூக்த மண்டலம் | | 12 | 191 |
| | ஆக மண்டலம் 10-க்கு அநுவாகம் | | 85 | சூக் 1016 |

## நூன்முகம்.

இருக்குவேதத்தில் எட்டு அஷ்டகமுண்டு. ஒவ்வொரு அஷ்டகமும் எட்டு அத்தியாயங்கள் கொண்டது. ஒவ்வொரு அத்தியாயத்திலும் பல வருக்கங்களுண்டு. ஒவ்வொரு வருக்கத்துக்கும் பெரும்பான்மை 5 இருக்குக்களிருக்கும். இவ்வகை, அஷ்டகம், அத்தியாயம், வருக்கமெனப் பிரித்தார் காத்தியாயனர். இவர் ரிக்வேத ஸர்வாநுக்கிரமணிக்கு ஆசிரியர். அவ்வநுக்கிரமணி வருமாறு :—

---

### காத்தியாயன ரநுக்கிரமணி.

| அஷ்டகம். | | | | சூக்தம். |
|---|---|---|---|---|
| 1-வது | .... | .... | .... | 121 |
| 2-வது | .... | .... | .... | 119 |
| 3-வது | .... | .... | ... | 122 |
| 4-வது | .... | .... | .... | 140 |
| 5-வது | .... | .... | .... | 129 |
| 6-வது | .... | .... | .... | 124 |
| 7-வது | .... | .... | .... | 116 |
| 8-வது | .... | .... | .... | 145 |
| ஆக அஷ்டகம் 8-க்குச் சூக்தம் | | | .... | 1016 |

இன்னொரு பன்னிரண்டு சூக்தங்களும் உண்டு. அவற்றைச் சேர்த்து 1028 ஆகும். இவற்றின் வரலாற்றைப் பின்னர் விவரிப்போம். காத்தியாயனர் பாகுபாட்டின்படி அஷ்டகம் அத்தியாயம், வருக்கம் என 3 பிரிவுகளுண்டு. அவற்றின் அட்டவணை ஒவ்வொரு அஷ்டகத்தோடும் சேர்க்கப்படும். சூக்தம் ரிக்கென்னும் வகுப்புகள் இரண்டு அநுக்கிரமணிக்கும் பொதுவாம். சூக்தம் பதிகம் போன்றது. ரிக் அப் பதிகத்திலுள்ள தனிச்செய்யுள் போன்றது. ஆதியில் ரிஷிகள் பாடிவைத்த பல ரிக்குக்கள் அடங்கிய சூக்தங்களைத் திரட்டியே, சௌநகரும் காத்தியாயநரும் அநுக்கிரமணி செய்தார்களென்க. ஸர்வாநுக்கிரமணிக்கு வேதார்த்த தீபிகை என்னும் உரைவிளக்கம் ஷட்குரு சிஷ்யர் என்பவரால் செய்யப்பெற்றுள்ள தறிக.

இந் நூலின் உரை, வடமொழி மதத்தைப் பின்பற்றி, இந் நூலாசிரியராலேயே எழுதப்படுகிறது. பல உரை நூல்களையு மாராய்ந்து அவற்றிலுள்ள ஸாரங்களை வெண்ணெபோலத் திரட்டி இவ்வுரை யெழுதப்பட்டிருப்பதால், இதற்கு 'நவநீதம்' என்று பெயரிட்டுள்ளார்.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

## முதலத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 19 சூக்தமும், 37 வருக்கமும், 194 இருக்குக்களுமுள்ளன.

### 1. மண்டலம் 1. அநுவாகம் 1. சூக்தம் 1.
### 9 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி: விசுவாமித்திர வம்சத்து மதுச்சந்தஸ்;
வடமொழிச் சந்தம்: காயத்திரி; (தமிழிற் கலிவிருத்தம்.)
தேவதை: அக்கினி.

1. போற்றி யங்கி புரோகித னியாகத்தே
வாற் றிருத்துவிக் கழகிய தூதனே
டேத்தரா தந மேற்றம்பெற விவட்
பாத்தளிக்கு நற்பண்பினி லுத்தமன்.

(இ-ள்.) புரோகிதனும், யாகத்தேவனும், இருத்துவிக்கும், ஹோதாவும், உத்தம ரத்நதாதாவுமாகிய அக்கினிக்கு நமஸ்காரம்—(எ-று.) ஹோதா, தேவாநாம் ஆஹ்வாதா, தூதன்.

2. பண்டைக்கால விருடிக ளன்றிப்பார்
மிண்டு மிற்றைய மேன்மையருஞ் சிறந்
தண்டி யேத்தத் தகுந்தவ னக்கினி
கொண்டுவந்து பஃறேவரைக் கூட்டுவான்.

(இ-ள்.) இவ்வக்கினி, பூர்வகாலத்து ரிஷிகளால் மாத்திரமேயன்றித் தற்காலத்துப் பெரியோராலும் துதிக்கப்படும் பெருமை வாய்ந்தவன், பல தேவர்களையும் எக்கியதலத்தே கொண்டுவந்து சேர்ப்பான்—(எ-று.)

3. அங்கி யிங்ங னளவறு செல்வமும்
பொங்கு கீர்த்தி பொருந்திய வீரரு
மங்குறாது வளர்ந்திட நாட்குநாட்
பங்கமின்றிப் பகருந் தகையனே.

(இ-ள்.) இவ்வக்கினி, (பின்னும்) அளவற்ற செல்வத்தையும், கீர்த்தியையும், வீரராகிய மக்களையும், நாளுக்கு நாள் விருத்திசெய்யும் பெருமையன்—(எ-று.) வீரர், வீரியத்திற் பிறந்தவர், புத்திரர் என்றபடி.

## மண்டலம் 1. சூக்தம் 1.

4. அங்கி யிப் பரிபூரண வெக்கியம்
பங்கநீங்க வெப்பக்கமு மோங்குவாய்
துங்க வின்னது தேவர்க டந்திசை
யங்கமாக வணையு மிஃ துண்மையே.

(இ-ள்.) அக்கினியே! இவ்வெக்கியத்தை எல்லாப்பக்கமும் நீ சூழ்ந்து காப்பாய். அதுவும் தேவர்களிடத்து அவசியமாகச் செல்லும்—(எ-று.)

5. உண்மை ஞான முயர்த்திடுந் தூதனுந்
திண்மை தங்கிய சித்திரக் கேள்வியோய்!
வண்மை யங்கி மகிழ்பிற தேவரோ
டெண்மையாக விவண் வந்தருள்கவே.

(இ-ள்.) ஹோதாவும், கவியும், கிருதுவும், சத்தியனும், சித்திரக் கேள்வியனுமாகிய அக்கினிதேவன், பிறதேவரோடு வருக—(எ-று.)

கவி, திவ்ய ஞானமுள்ளவன், தூரதிருஷ்டியுள்ளவன்.

### வருக்கம் 1.

6. எத்தகைச் சுக மாயினு மேத்துவோற்
கொத்தளிக்கு முறுதி யடைந்தநின்
சித்தமுண்மையைச் செப்புவர்; அங்கிரா
சத்திய மிதனிற் பிறதில்லையே.

(இ-ள்.) தாசுடனுக்கு எல்லாச் சுகங்களையும் கல்யாணகரமாக அளிக்கிறாய். அங்கிரா! இது உனது உண்மைக்குணம்—(எ-று.)

தாசுடன், யாகஞ்செய்பவன். அங்கிரா—அக்கினிக்கோர் பெயர்.

7. இருளகற்றி யியையு முன்கட் டினந்
தெருள்பொருந்து நின் றிப்பிய நாமத்தின்
பொருள்செறிந்த துதியினைப் போற்றியே
யருள் பொருந்துற வங்கி யணைவமால்.

(இ-ள்.) இருட்டினையோட்டு மக்கினியே! தினந்தோறும் ஞானம் பொருந்திய உனது திருவடிகளுக்குப் பிரணாமந்தாங்கி யுன்மாட் டணைகுவோம்—(எ-று.)

8. அத்வரர்களுக் கான்ற வரசனுய்த்
தத்துவத்தைத் தளர விடாதுகாத்
தொத்த காந்தி யொளிர்ந்திட வோங்குவா
யுத்த மாங்க முளவுன் னறையினே.

(இ-ள்.) யாகஞ்செய்வோருக்கு ராஜாவாய்த், தத்துவங்களை வளர்ப்பவனுன சுயஞ்சோதியே! உனது கிரகத்தில் வளர்பவனே!—(எ-று.) உத்தமாங்க முளவென்னும் விசேஷணம் எதுகைக்காகச் சேர்க்கது. இவ்விளிகளை ஏழாவது ரிக்கின்வினையோடு கூட்டி முடிக்க.

தத்துவம், ரிதம். இவ்வேத பதத்துக்கு வேறு பல பொருள்களு முண்டு.

9. தந்தை தன்மகற் சார்ந்து நெருங்கியே
சொந்தமாக வுறைவது தூக்க, யாம்
வந்தனைகள் புரிந்து வளம்பெற
வந்தமாக வுடனுறை வாற்றலே.

(இ-ள்.) பிதாவினது வீட்டிற் புத்திரனுறைவதுபோல எங்களுக்கு இலகுவாகத்தோன்றுக; அக்கினியே! எங்களுக்குச் சுகத்தையளித்துக்கொண் டெம்மோ டிருப்பாயாக—(எ-று.) உவமை, இரண்டிற்கும் பொதுவாகக் கூறியதாகும்.

வருக்கம் 2.

## 2. மண்டலம் 1. அநுவாகம் 1. சூக்தம் 2.
## 9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: விச்வாமித்திர வம்சத்து மதுச்சந்தஸ்.
வடமொழிச் சந்தம்: காயத்திரி.

தேவதை. 1-3 வாயு; 4-6 இந்திரவாயுக்கள்; 7-9 மித்திராவருணர்கள். இச்சூக்தமும் இதனடுத்த சூக்தமும் ப்ரஉக சஸ்திரமாக ஹோதாவாற் கூறப்படுமென்க. மண்டலம் 2, சூக்தம் 41 பார்க்க.

1. தோற்றஞ் சான்ற வனில! துகளற
வாற்றி யாமளி சோமத்துளிகளை
யேற்றமாகக் குடித்தெம் பிரார்த்தனைக்
கூற்றஞ் சேரச் செவிதந் துதவவே.

(இ-ள்.) அழகிய வாயுவே! உனக்காகச் சோமந் தயாராயிற்று. அதனைக்குடித்து எங்களது பிரார்த்தனையைக் கேட்பாயாக—(எ-று.)

## மண்டலம் 1. சூக்தம் 2.

2. பொழுதறிந்து புகழ்மறை கூறிப்பின்
றொழுது சோமத் துளிகளை யூற்றியே
விழுமியோர்கள் விழைந்து வந்திப்பராற்
பழுதில் வாயு நின்பண்பினை யோர்ந்துமே.

(இ-ள்.) வாயுவே! பகற்பொழுதையறிந்து, சோமமூற்றித் தமது உக்தங்களால், ஓதுவார் உன்னை வணங்குவர்.—(எ-று.)

3. பவஞ்சமூடு பாவிடு முன்காம்
நவஞ்செய் சோமக் குடியினை நாடியே
தவஞ்செய் தாசுடன் சாரிடஞ் சாருமாற்
பவனதேவ பரந் ததிதூரமே.

(இ-ள்.) வாயுவே! பிரபஞ்சமெல்லாம் பரவு முனதுகாம் சோமபானத்தை யெண்ணி யாகஞ்செய்வோனிடத்திற்கு அதி தூரத்திலிருந்து பரந்துசெல்லும்.—(எ-று.)

4. வாயுவிந்த்ர வழங்கு மிச்சோமமு
மேயு முங்களுக் கென்ன வியைந்ததால்,
மேய நீவி ரிருவிரு மேவியே
தோய, மீக்களி தூங்குந் துளிகளே.

(இ-ள்.) வாயு வீந்திரர்களே! இந்தச் சோம முங்களுக்காகச் செய்யப்பட்டது. அது உங்களது வயிற் சந்தோஷிக்கும்.—(எ-று.)

5. சோமங் கூட்டிச் சுவைபெற வாக்கிய
நேம வுண்டி யவிகினைத் தொண்பொரு
ளேம விந்திர வாயு விருவிரும்
ஓம நோக்கி யுடனே வருகவே.

(இ-ள்.) செல்வமிக்க வாயு வீந்திரர்களே! எங்களது அவியையெண்ணி உடனே இங்கு வருக.—(எ-று.)

### வருக்கம் 3.

6. சோமாட்டை சுவைபெற வாற்றிய
வேமமான மதுவினை வீரர்காள்!
சேமமாகப் பருகத் திரும்புவீ
ரோம சூக்த முரைத்த ததற்கென்றே.

(இ-ள்.) வாயு வீந்திரர்களே! சோமாட்டையிற்செய்த மதுவைப் பருக வருக. அதற்கென்றே உண்மையிற் சூக்தஞ் சொல்லப்பட்டது.—(எ-று.)

7. திவ்ய சக்தி சிறந்திடு மித்திர !
தெவ்வழித்துச், சிறப்புட னெய்சொரிந்
தெவ்வ நீங்க வியற்று கிரியையைச்
செவ்வை யாக்கும் வருண ! செபிப்பனே.

(இ-ள்.) தூய வலியுள்ள மித்திரனே ! ஓமக்கிரியைகளைப் பூரணஞ்செய்யும் ரிசாதஸனாகிய வருணனே ! உங்களை யான் அழைக்கிறேன்.—(எ-று.) ரிசாதஸன்=பகைவரையழிப்பவன்.

8. ரிதத்தின் றன்மையா லோம்புவரால் ரித
மிதத்தின் வேண்டுவோ ரெண்ணினதாற் பகல்
விதத்த மித்திரன் மேவிய வாருணன்
கதித்து நின்ற வலியினைக் கைக்கொண்டார்.

(இ-ள்.) மித்திரா வருணர்கள், ரிதத்தின் சுபாவத்தாலும், அதனை விருத்தி செய்வோராலும், ஒழுங்கை விரும்புவோரது நினைப்பினாலும் பெருவலிபெற்றனர்.—(எ-று.) ரிதம்—தத்வம், ஒழுங்கு, உண்மை, யாகம் என்னும் பொருளுடைத்து. விதத்த, விதந்த, வலித்தல் விகாரம்பெற்றது.

9. தோற்றஞ் சான்று துகளறு மாட்சி சால்
பேற்ற மித்ர வருணரை யேத்திடி
னாற்றஞ் சான்ற நடைக் குயர் வீகின்ற
வாற்றல் சார்த லறைவர் கவிகளே.

(இ-ள்.) உயர்ந்த பிறப்போடு கூடி விலாசமான ஆளுகை யையடைந்த வுங்களைத் துதிப்பின், மித்திரா வருணர்களே ! ஆசாரசீல முயருமென்று நமது ரிஷிகள் சொல்லுகிறார்கள்—(எ-று.)

வருக்கம் 4.

## 3. மண்டலம் 1. அநுவாகம் 1. சூக்தம் 3. 12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷெடி மதுச்சந்தஸ்.

வடமொழிச் சந்தம்: காயத்திரி.

தேவதை: 1—3 அசுவினிகள், 4—6 இந்திரன், 7—9 விசுவதேவர்கள், 10—12 ஸரஸ்வதி.

1. நன்மை தந்தரு ணாயகர் செல்வராம்
வன்மை தங்கு கரம்விரி யச்வினீ
யென்மை தேவர்கா ளெங்கள் பலியையெம்
இன்மை நீங்க வெடுத்துப் புசியுமே.

## மண்டலம் 1. சூக்தம் 3.

(இ-ள்.) சுபப்பதிகளும், யாகதனமுள்ளோருமான அசுவினிகாள்! எமது இல்லாமைகெட உங்கள் விரிந்த கரங்களால் நீங்கள் விரும்பிய அன்னத்தைப் புசியுங்கள்.—(எ-று.)

இன்மை நீங்கவென்பது முதனூலிலில்லை. என்மை, எல்லின்றன்மை, ஒளி என்றபடி.

2. சொற்பெறத் துதித் தேத்தத் தகுந்தநல்
லற்புதம் புரி யச்வினி தேவர்நும்
மற்பெரும் பொறிவன்மையைச் சாற்றுமெ
மெற்பெறுங் கவி யேற்றுக்கொண் டாள்கவே.

(இ-ள்.) பலவித அரிய செயல்களையும் புரியும் அசுவினியரே! உமது வல்லமையைக் கூறு மெம்போற்றை யேற்பீராக.—(எ-று.) இச்செயல்களிற் சிலவற்றை மண். 1, சூ. 112-ல் காண்க.

3. வய்யகத்து வழிக்கட் பகையழப்
பொய்மை யின்றி யிங் கற்புத மாற்றுவீர்!
கொய்தருப்பையிற் கூடுஞ் சுதையினைக்
கய்யி னேற்கக் கடிதின் வருகவே.

(இ-ள்.) வழிதோறுமுள்ள பகைவரை யழுவித்துப், பொய்மையில்லாமல் அரிய செயல்களைச்செய்யும் வீரர்காள்! நறுக்கின தருப்பையிற் சொரியும் சோமத்தை யேற்க வருவீர்களாக—(எ-று.) நாஸத்யா, தஸ்ரா என்பன அசுவினியரின் நாமங்கள். நாஸத்யா, அஸத்தியமில்லாதவர்கள்; தஸ்ரா, அற்புதச்செய்கை புரிபவர்களென்பார் மேனாட்டாசிரியர், அழகிய தோற்றமுடையவர்களென்பார் ஸாயணர்.

4. சித்ர காந்தி திகழ்ந்திடு மிந்திர
மெத்த நன்கு வடிக்கட்டி மேவியே
சுத்த மான வமிழ் துனக்காகவே
சித்தமாயிற்றுச் சீக்கிரஞ் சேர்கவே.

(இ-ள்.) சித்திரபானுவாகிய விந்திரனே! இங்கே சோமம் (ரித்விக்குக்களது விரல்களினால்) உனக்காகப் பிழிந்து சுத்தமாக்கப்பட்டுள்ளது; விரைவின் வருக.—(எ-று.)

5. பாடல் தூண்டிடப் பண்ணிசைப்போர் தூண்டக்
கூடி யிங்குள விப்பிரர் கூவிடத்
தேடி யீயு மவியுணவைச் சீரி
னாடி யேகுக விந்திர நன்கினே.

(இ-ள்.) மமறைபாடுவோரும், மறையும், மற்றைய விப்பிரர்களும் அவியுணவோடு கூவுவதைக்கேட்டு, இந்திரனே, வருவாயாக.—(எ-று.)

6. வருக வென்றனை வாவிதிற் கூப்பிடும்
அரிவ வெங்கண் மறையினை யாதரித்
தொரு கணமெனுந் தாழ்த்திடா திங்குற்றுப்
பெருகு மெங்க ளமிழ்தின் மகிழ்கவே.

(இ-ள்.) குதிரையோடுகூடிய விந்திரனே! எங்களது மறைகளைக்கேட்டு விரைவின்வந்து சோமச்சுதையில் மகிழுவாயாக.—(எ-று.) அரிவ, ஹரிவ: குதிரைநாயகன், இந்திரன் என்பதன் விளி.

வருக்கம் 5.

7. மக்க டம்மை வளர்த்துப் பலன்றந்து
மிக்க நற்பரி சீந்து விளங்குவோர்
தக்க தாசுடன் றாங்கிய சோமத்தை
நக்கத், தேவ ரியாவரு நாடவே.

(இ-ள்.) மனிதர்களைப் பாதுகாத்துப் பலனை யளித்துக் காக்கும் விச்வ தேவர்கள் எக்கிய கர்த்தாவினது சுதையை உண்ண வருக.—(எ-று.) சுதை, ஸோமம்.

8. சட்டெனத், தொழில் சாதிக்குந் தேவர்காள்,
கொட்டில் செல்லுங் கற்றுக்களை மானவே
யொட்டி யும்மை யுளத்தமைத் தாக்கிய
தட்ட நற்சுதை சாப்பிடச் சாருமே.

(இ-ள்.) காரிய சாதனத்திற் சிறந்த விச்வதேவர்களே! கற்றுக்கள் தத்தம் கன்றுகளை நாடிக் கொட்டிலுக்குப் போவது போல் விரைவாகச் சுதையை யுண்ணவாருங்கள்.—(எ.று.) கால மழைபெய்விக்கும் விச்வதேவர்காள், சூரிய கிரணங்கள் பகலை நோக்கி விரைவதுபோலச் சோமம் பருக வாருங்கள் என்பது யாஸ்கர் மதம். சாயணருரை—தேவர்காள் என்றது அதிகாரத்தால் விச்வதேவர்களைக் குறித்தது.

9. குற்ற மற்றுக் குறைவொன்று மில்லவர்
பற்று சிந்தைத் துரோகம் பயிலாதா
ருற்ற ஞானிய ரொண்டிருக் கூட்டுவோர்
தெற்றென் விச்சுவ தேவ ரவிகொளல்.

(இ-ள்.) அட்சயரும், துரோகமற்றவரும் செல்வமளிப்பவரு ஞானியருமான விச்வதேவர்களை அவிகொண்டு சேவிப்போமாக.—(எ-று.) அல்லது தேவர் அவி கொள்ளுக.

மண்டலம் 1. சூக்தம் 4.

10. தூயவள் பொரு ளோய்க்குங் கருத்தினள்
மேய வுண்டி விளைத்திடும் வாணி, எம்
பாய நல்லவி பாரிக்கும் யாகத்தை
யேய விச்சை மகிழ்வி னியைகவே.

(இ-ள்.) பாவகியும், வசுவைக் கூட்டுபவளுமாகிய ஸரஸ்வதி, அவிபொதிந்த வெமது யாகத்தை விரும்பி வருக —(எ-று.) வசு, செல்வம்.

11. நற்கவிக்கு நடையை யளிப்பவள்,
எற்றருபவ ளேற்றம் பெறுமன
முற்றவர்க், கவளுநன்னித் தருமவி
முற்று மெய்ய மொழிமக ளேற்பளே.

(இ-ள்.) சத்தியவாக்விகளாகிய கவிகளை உற்சாகப்படுத்துபவளும் நன்மனமுள்ளாருக்குக் காந்தியளிப்பவளுமாகிய ஸரஸ்வதி, அவளைக்குறித்துச்செய்யும் இவ்வெக்கியத்தைக் கைக்கொள்வாள்.—(எ-று.)

12. எல்லையில் பெருக்கேன்ற மொழிமகள்
பல்லுணர்வையும் பாரித் துயர்த்துவோ
ணல்ல தன்னொளி கொண்டு நடையெலா
மெல்லுறச் செயும் வன்மை யியைந்தவள்.

(இ-ள்.) கரையற்ற வெள்ளத்தினளும் உணர்வை யுயர்த்துபவளும் தனது ஒளியினால் ஞான நடைகளையெல்லாம் பிரகாசிப்பிப்பவளும் ஸரஸ்வதியாம்.—(எ-று.) முன் சூக்தமும் இதுவும் ப்ரஉக தேவதைகளைப் போற்றுமென்பதை 2-ம் சூக்தத்தொடக்கத்திற் கூறினோம். ப்ரஉக தேவதைகளாவார், வாயு, இந்திரவாயுக்கள், மித்திரா வருணர்கள், அசுவினிகள், இந்திரன், விசுவதேவர்கள் ஸரஸ்வதி என்னும் எழுவரும் ஆம். இவர்களது முறை பிறழலாகாதென வுணர்க.

வருக்கம் 6.

## 4. மண்டலம் 1. அநுவாகம் 1. சூக்தம் 1.
## 10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஷி மதுச்சந்தஸ்.
வடமொழிச் சந்தம் : காயத்திரி.
தேவதை : இந்திரன்.

1. ஆயன் பால்கறப்பான் பசுதன்னையே
கூயழைத்தலிற் கூர்நல் லுருவத்தின்
மேய நற்றொழில் வேந்தனை நாடொறுந்
தோயு மெந்துணை யாக வழைப்பமே.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

(இ-ள்.) பால்கறக்கும் இடையன் பசுவை யழைப்பது போல் தினந்தோறும் யாம் நற்கரும நாயகனை யிந்திரனைத் துணைக்காக வழைப்போம்.—(எ-று.) வேந்தன் என்னுஞ்சொல் பெரும்பான்மை யிந்திரனையே சுட்டி நிற்கு மிந்நூலில்.

2. சோமபானியே, சோமங் குடிக்கவெஞ்
சோம மாற்றுஞ் சவனந் துதைக; பின்
சோம மாந்துக; வான்களிச் செல்வவா
னேம நன்மத மாக்களை யீயுமே.

(இ-ள்.) சோமபானியாகிய இந்திரனே! எங்களதுசோமம் பிழியுஞ் சவனத்துக்கு வருக; சோமத்தைப் பருகுக. செல்வவான் சந்தோஷப்பட்டால் பசுத்தானஞ் செய்வான் (அது போலவே நீயும் எங்களுக்குத் தருவாய்.)—(எ-று.) செல்வவானது மதம் ஆக்களை யீயுமென்க.

சவனம் யாகப்பொது. வேற்றுப்பொருள் வைப்பணி. மதம் குடிவெறியன்று. மதமென்பது சோமத்தைக் குடிப்பதால் நற்காரியத்தைச்செய்ய வெழும் ஊக்கம் என்றும் அதற்குச் சமமான பதம் வேறு பாஷைகளில் இல்லையென்றும் (Max Muller) மோட்சமூலர் கூறுவர்.

3. பின்ன ருன்ற னருகிற் பிறங்கிடு
நன்னய மதி வாய்ந்தவர் நாப்பணெம்
மன்னு புந்தி வயங்கிட வுன்னுவோம்;
துன்ன வீண்டெமைத் தோயா தொழிகலே.

(இ-ள்.) சோமபானாநந்தரம் உன்னருகிலுள்ள சுமதிகளுக்கு மத்தியில் எங்களுக்கு நற்புத்தியுண்டாகும் வண்ணம் உன்னை நினைப்போம். நீ எங்களை உல்லங்கனம் செய்யாது சண்டுவருவாயாக—(எ-று.)

4. பண்டிதன் மெய்ப் பராக்கிரமன் பகை
கண்டகன் கடலேயெனுங் கல்வியான்
மிண்டு நண்பரின் மீச்சிறந்தோங்கும் ஆ
கண்டலனைக் கடுகிப் பிரார்த்திப்பாம்.

(இ-ள்.) பண்டிதனும், பராக்கிரமசாலியும், பகைவதைப் பவனும், மேதாவியும், நண்பரிற் சிரேஷ்டனுமான இந்திரனை யணுகிக் கேட்போமாக.—(எ-று.) கடலேயெனும் என்ற வுவமை மூலத்தி லில்லை.

5. எம்மவர்க ளரியினை யேத்தல்; பின்
எம்மை நிந்தித் திகழு மெதிரிகள்
செம்முக பிறதேயம்; அரிதனை
நம்பி யூழிய நாட்டுவோர் நிற்கவே.

(இ-ள்.) எங்களைச் சார்ந்தவர்கள் இந்திரனை யேத்தட்டும; எங்களை நிந்திப்போர் பிறதேயம் போகட்டும்; இந்திரனை நம்பிப் பணிசெய்வோர் தங்கட்டும்.—(எ-று.)

வருக்கம் 7.

6. பகைவதைப்பவ வுன்னருளாற் றெவ்வர்
மிருதனத்தை விழைந்து பெற்றுரெனத்
தருமெந் நண்பர்கள் சாற்றுகின்றார்; அரி
சுகமளிக்கப் பொருந்திச் சுகிப்பமே.

(இ-ள்.) சத்துருக்களை வதைப்பவனே! பகைவரும் உன்னருளாலேயே செல்வவான்க ளாயினரென்று எம் நண்பர்கள் சொல்லுகிறார்கள். அத்தகைய இந்திரன் சுகத்தை யளிக்க யாம் அதனை யநுபவிப்போம்.—(எ-று.) வேதத்திற் படர்க்கையும் முன்னிலையும் அடிக்கடி சேர்ந்துவரும். முதலில் முன்னிலையாகக் கூறிப் பின்னர்ப் படர்க்கையாக அம்முன்னிலையையே மாற்றிக் கொள்ளுவர்.

7. எக்கியத் திரு வேய்ப்பது வேகமார்ந்
தொக்க மாந்தர்க் குவப்பை யளிப்பது
தக்க கன்மந் தருவது நண்பனை
யெக்களிப்பி னிருத்துவ தேய்க்கவே.

(இ-ள்.) எக்கியத்துக்குக் கீர்த்தியைத் தருவதும், விரைவில் சவனத்திரயங்களில் பரவுவதும், நரர்களுக்குக் களிப்பைத் தருவதும் சற்கருமங்களைக் கொண்டுவருவதும், நண்பனை (இந்திரனை) அதிக மகிழ்ச்சிப்படுத்துவதுமாகிய சோமத்தை விரைவிற் சேர்ப்பீர்களாக.—(எ-று.) நண்பன் ஈண்டு இந்திரன்.

8. மகங்க ளூறியைத் தோங்கு மொருவனே!
சுகங் கொடுத்துயர் சோமங் குடித்த பின்
அகந்தை யார்ந்த விருத்திரர்ச் செற்றனை:
அகங்கொள் போரினர்க் காற்றினை வன்மையே.

(இ-ள்.) சதக்கிருதுவே! சோமத்துளிகளைப் பருகி விருத்திர னதியரைக் கொன்றாய்; போரிற் பொருநரைக் காத்தாய்.—(எ-று.)

9. மகங்க ணூறு மருவிய விந்திர
வகங் களிக்கத் தனத்தினை யாம்பெற
வுகந்த போரி லுறுதி மலியுனை
மிகுந்த வல்லப மேவுறச் செய்குவோம்.

(இ-ள்.) சதக்கிருதுவே! யாம் செல்வம்பெறுமாறு யுத்த களத்தில் வலிமை பொருந்திய வுனக்குப் பின்னும் வலிமையை யூட்டுவோம்.—(எ-று.) சதக்கிருது=வெகு கர்மத்தோடு கூடியவன் என்பார் சாயணர்.

10. மகம் புரிபவர்க் குற்ற மறுவில்நண்
பிகம் விளங்கு மகா னிருஞ் செல்வத்தை
யுகந்தளிக்கு மொருவ னரிபுகழ்
பகர்ந்தொளிருங் கவியினைப் பாடவே.

(இ-ள்.) யக்ஞஞ் செய்வோருக்கு நண்பனும், மகானும், செல்வத்துக்கு நாயகனுமாகிய இந்திரனது கீர்த்தியைக்கூறும் கவிகளைப் பாடுக.— (எ-று.) இருத்துவிக்குக்களே, நீங்கள் பாடுங்களென்க.

வருக்கம் 8.

## 5. மண்டலம் 1. அநுவாகம் 2. சூக்தம் 2.
## 10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி மதுச்சந்தஸ்.

வடமொழிச் சந்தம்: காயத்திரி.

தேவதை: இந்திரன்.

1. *தோழர்கா ளிவண் டோமங்க டாங்குவீர்
வாழி நீவிர் வருக விரைவின், உம்
பீழை நீங்க வமர்ந்து பிறங்கியே
கேழி னிந்திரன் கீதங்கள் பாடுமின்.

(இ-ள்.) ஸ்தோமங்களைத் தாங்கும் தோழர்களே! உடனே வந்து அமர்ந்து இந்திரனது கீதங்களைப் பாடுமின்.—(எ-று.) வாழி, பீழை நீங்க, கேழின், இவை எதுகை நோக்கிவந்தன. வடமொழி ரிக்வேதத்தில் மோனை எதுகை முதலியன கிடையா. *இக்குறியுள்ளன குளகமாம்.

மண்டலம் 1. சூக்தம் 5.

2. * பலர்விரும்பிடும் பண்புடை யுத்தமன்
பலவிதப்பொரு டம்மைப் பரிந்துகாத்
திலகு நாயக னிந்திர னுக் கெனக்
குலவி யாவருஞ் சோமச் சுதைகொடே.

(இ-ள்.) பலரும் விரும்பு முத்தமனும், பலவித தனங்களுக்கும் ஈசானனும் ஆகிய இந்திரனுக்காகச் சோமச்சுதையைப் பிழிந்துகொண்டு.—(எ-று.) கீதங்களைப்பாடுமின் என மேற்பாட்டோடு கூட்டுக.

3. அன்னவ னெமக் காக அறமுதல் ;
அன்னவ னெமக் காக பொருண்முதல் ;
அன்னவ னெமக் காக பெருமதி ;
யன்னவ னெமைச் சார்க வுணவொடே.

(இ-ள்.) அத்தகைய விந்திரன் எங்களுக்குப் புருஷார்த்தமாக வோங்கட்டும் ; பொருட்காரணனாக வாகட்டும் ; எமக்குப் பேரறிவளிக்கட்டும் ; உணவுப்பொருள்களோடு எம்மாட்டு வரட்டும்.—(எ-று.) அறம் ஈண்டு புருஷார்த்தங்களைக்குறித்து நின்றது.

4. கொற்ற வாசி குலவு நற்றேரினி
னிற்றலோடு நெருங்கிப் பகைவர்கள்
சற்றும் வந்தெதிர் சாற்றலா வல்லபம்
பெற்ற விந்திரன் பேச்சினைப் பாடவே.

(இ-ள்.) தேரில் (இரண்டு) குதிரைகளைப்பூட்டி நிற்குங்கால், சத்துருக்கள் பயந்தோடும் வல்லபத்தையுடைய இந்திரனது துதியினைப் பாடுங்கள்.—(எ-று.) துவி வசனமாக ஹரீ யென முதனூலிலுள்ளது. ஹரி=குதிரை, வாசி.

5. தயிர் கலந்து தயங்கிய சோமத்தின்
செயிரகன்ற சிறப்புத் துளிகளும்
உயிரடைந்த வுடல் களியெய்துவான்
வயிறு முற்றப் பருகிட வந்தவே.

(இ-ள்.) தயிர்கலந்த பரிசுத்தமான சோமத்துளிகள் சோமபானியின் பானத்துக்கென வமைந்தன.—(எ-று.)

வருக்கம் 9.

6. நன்மை செய்பவ விந்திர நாடியே
நன்னர் சோம நலக்கக் குடிக்கவும்
மென்மை தங்கு முதன்மையை மேவவும்
மன்னினு யொர்கணத்தின் வலியையே.

(இ-ள்.) நற்காரியங்களைச் செய்பு மிந்திரனே! சோமங் குடிக்கவும், (தேவர்களுக்குள்) முதன்மை பெறவும், ஒரு நிமிஷத்தில் உற்சாகத்தோடு வலிமையைப் பெற்றனை.—(எ-று.)

7. பண்ணின் மீக்களி யிந்திர வொல்லையிற்
பண்ணுஞ் சோமப் பருந்துளி யுன்னகத்
தொண்ணி நிற்க! வுனதரு ஞானத்தின்
வண்ண நன்மை யுருவின் வயங்குக.

(இ-ள்.) பண்ணிற் களிக்கும் இந்திரனே! விரைவாகப் பரவுமிச் சோமம், உனக்குள் நுழையட்டும்! உனக்குச்சிறந்த ஞானத்தைத் தரும்பொருட்டு நல்லவுருவோடு தோன்றட்டும்.—(எ-று.)

8. சதமக வுனைச் சாற்றிடுந் தோமமு
மிதமு றுக்தமு மீடில் வலியளித்
தெதிர வுனைச் செய்தனவா லெம
துதியு மத்தொழி றுன்னுக வின்றுமே.

(இ-ள்.) சதக்கிருதுவே! உன்னைப் புகழுந் தோமங்களும் உக்தங்களும் உன்னை யாவர்க்கும் பெரியவ னுக்கின. எங்கள் பண்களும் அப்படியே உன்னைச் செய்யட்டும்.—(எ-று) ஸ்தோமம் ஸாமகனுல் பாடப்படுவது. உக்த சஸ்திரங்கள், பேசப்படுவன—சாயணர். இதமுறு உக்தம் எனப் பிரிக்க.

9. என்று மாரு வுதவி யிவையப்பவ
வொன்று மாண்மை யெலாம்பொதிந் தோங்கியே
துன்று மிப்பலி யூணுனக் கிந்திர
வொன்று நூற்றுப் பத்தான துதவுக.

(இ-ள்.) அட்சயமான வுதவியைத்தரு மிந்திரனே! வீரிய மெல்லா நிறைந்த இப் பலியுணவு, ஆயிரக்கணக்காகப் பரவியது (சோமமென்றபடி) உனக்கு அளிக்கப்படட்டும்.—(எ-று.)

10. பண் செவிமடுத் தாநந்தம் பாவிய
விண்ணி னீசனு மிந்திர வெம்மெய்யை
மண்ணின் யாரும் வருத்தா தெடுத்தெம
கண்ணினும் வதை காணுது காக்கவே.

(இ-ள்.) கிர்வணனே! இந்திரனே! எம்முடலை ஒரு மர்த்தியனும் வருத்தாமற் காப்பதுடன், வதையினின்றும் எங்களை நிவர்த்திப்பாயாக.—(எ-று.) கிர்வணன், பாட்டுக்கேட்டு மகிழ்பவன்.

வருக்கம் 10.

## 6. மண்டலம் 1. அநுவாகம் 2. சூக்தம் 3.

## 10 இருக்குக்கள்கொண்டது.

*ரிஷி : மதுச்சந்தஸ். வடமொழிச் சந்தம் : காயத்திரி.*
*தேவதை 1, 2, 3, 10 இந்திரன் ; 4, 6, 8, 9*
*மருத்துக்கள் ; 5, 7, இந்திரா மருத்துக்கள்.*

1 *துன்று சூரிய னங்கி சுலவுகா*
*லென்ருெளிரு மவனை யியைந்து சூழ்ந்*
*தென்று மோங்கிய சீவர்க டந்தொழி*
*னன்றிணைப்பர் ; நபத் தொளிருந் நாளே.*

(இ-ள்.) சூரியன், அக்கினி, வாயு என்னும் உருவங்களின் விளங்கும் இந்திரனைச் சூழ்ந்து திரியும் (மூவுலகத்துச்) சீவர்களும், தந்தொழில்களைத் தெய்வச்செயலோடு சேர்ப்பார். (இந்திரனுடைய மூர்த்தி விசேஷங்களில் ஒன்ருகிய) நட்சத்திரங்களும் வானிற் பிரகாசிக்கும்—(எ-று.) மேனுட்டார் வேத பதங்களுக்கெல்லாமுள்ள பொருள்களை ஓரே மாதிரியாக்கி எங்கும் அப் பதங்களை யப்பொருள்களிலேயே உபயோகிப்பர். அதற்குச் சுட்டாக இப்பாட்டைக் காட்டுவர் :

"அவனைச்சூழ்ந்து நிற்பவர், அவன் செல்லுங்கால், ஒளி பொருந்திய சிவந்த வாவிற்குக் கலினம் பூட்டுவார். வானில் வெளிச்சங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும்." சுற்றி நிற்பவர் மருத்துக்களா யிருக்கலாம். அக்குதிரை சூரியனுகவு மிருக்கலாம்.—(Griffith) மேனுட்டாசிரியர்.

இந்நூலில் மேனுட்டாசிரியர் என வந்த இடங்களிலெல்லாம் கிரிபித்தென்பவரையே கொள்க. ஏனைய மேனுட்டாசிரியர்களது பெயர் தனித்தனியே சொல்லப்படும். மேனுட்டாசிரிய ரெல்லாருக்கும் சாயண ருரையில் நம்பிக்கை குறைவு.

2. *சிவந்து தீரத்தின் வீரரைத் தாங்கிடு*
*முவந் தெவரும் விரும் பிரு மாவினை*
*நிவங்கொ டேரிரு பக்கமு நேடியே*
*துவம் பெறவே தொடுத்து விடுப்பரால்.*

(இ-ள்.) அவனது தேரி னிருபக்கத்திலும் விரும்பத்தக்க இரண்டு சிவந்த குதிரைகள், சாரதி முதலிய வீரரைத்தாங்கும் தீரம்பொருந்தியவற்றை யிணையாகப் பூட்டுவார்.—(எ-று.) சாரதிகள் தோன்ரு எழுவாய். நிவங்கொள், எதுகைபற்றிச் சேர்த்தது.

3. களங்க மாரிடங் கண்ணி யொளிர்ந்துரு
விளங்கலாத் தல மக்காள் விளங்கவிட்
டுளங்கொள் காந்தி யுஷஸாக்க ளோடவ
னிலங்கு தோற்ற மெடுத்தன னன்கினே.

(இ-ள்.) மரண தர்மம் பொருந்தியவர்களே! (ஒரு ஆச்சரியம் கேளுங்கள்.) இருட்டு நிறைந்த விடமெல்லாம் உருவைக் காட்டி வைகற்பொழுதுகளோடு பிறந்தான் (சூரிய ரூபமான) அவ்விந்திரன்.—(எ-று.) சூரியனையும் இந்திரனையும் ஒன்றாய்க் கருதுவது வேதமரபு. உஷஸாக்களோடு, உடசுக்களோடு எனவும் பாடம் கொள்ளலாம். உஷஸ்—விடியல்.

4. பின்னர்த் தோன்றிடு நீரொ டுணவெண்ணி
நன்ன ரெக்கிய நாட்டுறு நாமத்தைத்
துன்னி நிற்பவர் மீட்டுங் கருப்பத்தை
யுன்னி யன்னத்தைத் தூண்டிட லுற்றனர்.

(இ-ள்.) (வருஷாகாலந் தீர்ந்தபின்) இனியுண்டாகவேண்டிய நீரையும் உணவுப்பொருள்களையும் எண்ணி, யக்ஞத்துக்குகந்த (தேவ) நாமந்தரித்தவர் (மருத்துக்கள்) மறுபடியும் (ஒவ்வொரு வருஷமும், மேகமத்தியில்) ஜலகர்ப்பத்தைத் தூண்டி விடுவார்கள்.—(எ-று.) மருத்துக்கள், புயல்கள்; இப்பொருளிலிருந்த இச்சொல் தேவ கணங்களைப்பின் குறிக்கலாயிற்று. அதனால் மருத்துக்களும் ரிபுக்களைப்போலப் பின்னர்த் தெய்வமாக்கப்பட்டவர் என்பது மோட்சமூலர் மதம்.

5. உறுதி வாய்ந்தவை யேனு முடைப்பவர்
அறுதி வாய்வுற வொன்றினைப் பேர்ப்பவர்
உறு துணையெனக் கொண்டிடு மிந்திர,
குறுகி நற்குகை யாக்களைக் கண்டனை.

(இ-ள்.) பலமானவற்றைக்கெடுத்து ஒன்றை இலேசாக இடம் மாற்ற வல்லவர்களை (மருத்துக்களை)த் துணையாகக் கொண்ட இந்திரனே! குகைக்கண் வைக்கப்பட்ட கறவைகளை (யும்)நீ கண்டாய்.—(எ-று.) இதற்கு ஒரு இதிகாசமுண்டு: பணிகளால் தேவலோகப் பசுக்கள் கவரப்பட்டு இருட்டி லடைக்கப்பட்டன. அவ் வசுரர்களைக் கொன்று மருத்துவருடைய துணையினால் இந்திரனே அப்பசுக்களை மீட்டான் என்பது—சாயணர். மேனாட்டாசிரியர் இக்குகை காளமுகிலைக் குறிக்குமென்றும் பசுக்கள் நீர்த்தாரைகளாமென்றும் கூறுவார். அற்றேல் "கருமுகில்களி னீர்வாக் கண்டனை" என்னல் தகும்.

மண்டலம் 1. சூக்தம் 6.

6. தேவர் வேண்டும்பண் செம்மையி னோதுவார்,
பாவு ஞானியைப் போற்றுதல் போலத்தம்
மேவு மேன்மையைத் தோற்றிடுஞ் செல்வத்திற்
றூவுசீர்ப் பெரியார் வரப் பாடுவார்.

(இ-ள்.) (மருத்துத்) தேவர்கள் விரும்பும் பண்களைப் பாடும் இருத்துவிக்குக்கள், ஞானியை (இந்திரனை)ப் பாடுவது போலவே, தமது மகிமை விளங்குந் தனம் வாய்ந்து கீர்த்தி பரந்த மகான்களை (மருத்துக்களை)யும் பாடித் துதிப்பார்.— (எ-று.) ஓதுவார் பாடுவாரென முடிக்க.

7. அச்சமில் வலி யிந்திர னண்ணியே
பொச்சமில் களியோடு பொருந்தியே
தற் சமான வொளியொடுஞ் சார்ந்துநின்
றிச்சகத்தவர் கண்மு னெதிர்கவே.

(இ-ள்.) பயமில்லாத இந்திரனோடு நெருங்கி, என்று முற் சாகத்தோடு விளங்கும் (மருத்துக் கூட்டம்) (இந்திரனுக்குச்) சமானமான காந்தியோடும் எங்கள் கண்ணிற் படட்டும்.— (எ-று.) முன்பு இந்திரன் விருத்திரனை வதைத்த காலத்து அவனுக்குத் துணைநின்ற எல்லாத் தேவரும் விருத்திரனது சுவாசம்பட ஓடிப்போயினர். அப்போது விருத்திரனது சகல சேனையையும் வெற்றி கொள்ளுமாறு மருத்துக் கணம் சேர்ந்தது என்பது இதிஹாஸம்—சாயணர்.

8. மாசகன்றவர் வானத் தெழுபவர்
பேசெவரும் விழைதரு பெற்றிய
ராசி லிந்திரற் கான வலிக்கண
நேசத் திம்மக நேடி யின்பூட்டுமே.

(இ-ள்.) தோஷரஹிதரும் வானலோகத்தை நோக்கிச் செல்லுபவரும், (பயனளிக்குந் தன்மையால்) யாவராலும் விரும்பப்படுபவரும், இந்திரனுக்குப் பலம்போலக் கூடினவருமான மருத்துக்கூட்டத்தாருக்கு, இம்மகமும் (பலத்தையும்) இன்பத்தையு மளியாநின்றது.—(எ-று.) மகஞ் செய்வோன் அளியா நின்றான் என்று இலக்கணையாற் கொள்ளுக.

9. எங்கு மேகுவீ ரேயு முமதிடந்
தங்குறு திவட் சாருக விண்ணின்றும்
பொங்கொளிக்கதிர் தன்னிட நின்றுமே ;
யிங்குறு பண் ணதனை யிச்சித்ததே.

(இ-ள்.) எல்லாவிடமுஞ் சூழ்ந்து செல்லுகிறவர்களே! (மருத்துக்களே!) (இவ்விடத்துக் கூறப்படும் பாட்டுக்கள் உமதுவரவை மிகவும் விரும்புகின்றதால்,) நீர் உமது (அந்தரிட்ச) உலகத்திருப்பினும், வானத்திலிருப்பினும், அல்லது சூரிய லோகத்திலிருப்பினும், (எங்கிருப்பினும்) வருவீர்களாக. இங்குரைக்கப்படும் பண் அதனை விரும்புகிறது.—(எ-று.) துணிவுப்பொருளில் வந்த இறந்தகாலம், இச்சிக்கின்றது என்பது பொருள்.

10. இவவி லிந்திரன் விண்ணிருந்தோ விங்குக்
குவலயத்தினி னின்றுகொண்டோ வன்றி
யுவமை யற்றக லந்தரத் தோங்கியோ
தவலறுந் துணையாக விரப்பமே.

(இ-ள்.) விசும்பிலிருந்தோ வல்லது பூமியின் கண்ணிருந்தோ, இந்திரன் நமக்குத் துணைசெய்யவேண்டுமென்று (பொருளளிக்கவென்று) யாசிப்போம்.—(எ-று.) இவவு=இழிவு.

வருக்கம் 12.

## 7. மண்டலம் 1. அநுவாகம் 2. சூக்தம் 4.
## 10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷெி மதுச்சந்தஸ்.
வடமொழிச் சந்தம்: காயத்திரி.
தேவதை: இந்திரன்.

1. தலைவ னிந்திரனே யெனச்சாற்றுவார்
கலைவல் வாக்கி னத்வர்யு வாதியரும்
நிலை யிருக்கு நிறுவு மோதாக்களுந்
தலைமை கான வுற்காதாக்க டாமுமே.

(இ-ள்.) சாமகானத்திற் சிறந்த உத்காதாக்களும், இருக்கோதுவதிற் சிறந்த ஹோதாக்களும், (கலைவல்ல) வாக்கோடு கூடிய அத்வர்யு முதலியவர்களும், இந்திரனே பெரியவனென்று புகழ்வார்.—(எ-று.) உத்காதா சாமவேதமும், ஹோதா இருக்கு வேதமும் அத்வர்யு யஜுர்வேதமும் தெரிந்தவர்கள்; யாகத்துக்கு உதவி செய்வோர் இவர்.

2. பொன் னணிந்த குலிசப் புலோமசித்
துன்னு சொற்பெறத் தேரி னியைவுற
மன்னு பிங்கல மாக்க ளெக்காலமுந்
துன்னு தன்கடைத் தோய்வுறப் பெற்றவன்.

(இ-ள்.) பொன்னுபரணமும் வச்சிராயுதமுந்தரித்த இந்திரன், தன்சொற்கேட்டவுடன் தேரிற் பூண்டுகொள்ளும் பிங்கலநிறக் குதிரைகள் எப்போதும் தன்னருகே யிருக்கப் பெற்றவன்.—(எ-று.)

3. நீண்ட தூர நிமிர்ந்து கண்டோன்ற மார்த்
தாண்டனை விண் டயங்க வுயர்த்தினன்
ஈண்டெதிர் முகிலுகத்தை யிந்திரன்
பூண்ட நீர்ப்பசு காணப் புடைத்தனன்.

(இ-ள்.) சூரியன் நன்றாய் யாவர்கண்ணிலும் படும்படியாக அவனை இந்திரன் உயரத் தூக்கினன்; மேலும் இடைப்பட்டு நின்ற மேகமாகிய மலையைத் தான் கொண்ட நீராகிய பசு வெளித்தெரியும்படி புடைத்தனன்.—(எ-று.) அத்ரி, மேகத்துக்கும் மலைக்கும் பொதுப்பெயர். உஸ்ரியா, மழை நீருக்கும் பசுவுக்கும் பெயர். இவ்வுஸ்ரியாவென்பது சூரியகிரணமென்ற பொருளிலும் வருவதுண்டு. மண்டலம் 1. சூக்தம் 1. இருக்கெட்டி னுரையிற் காண்க.

4. தடையி லாயிரஞ் சூறையெனுந் தரு
முடுகு போரின் முழங்கிட, விந்திர,
கடுமை தங்கிய காவல, நின்பெருங்
கடுமைவாய் துணை யெம்மைக் கடுகவே.

(இ-ள்.) இந்திரனே! (பகைவரைக்) கடுமையாக நடத்துங் காவலனே! ஆயிரக்கணக்கான பொருள்களைத் தரும் பெரிய யுத்தத்தில் உனது பலமான வுதவியை நீ யெங்களுக்களிப்பாயாக.—(எ-று.) சூறை யெனினு மென்றபடி.

5. நச்சு மீத்தன நல்கு சயத்திலு
நிச்சலுஞ் சிறு பூசலிலுந் துணை,
வச்சிரத்தை விருத்திரர்க் கென்னவே,
வைச்சிருக்கு மரியை வழுத்துவாம்.

(இ-ள்.) மிக்க செல்வத்தைத் தரும் பெரும்போரிலும், அற்பப் பூசல்களிலும், வச்சிரத்தைத் துணையாகவுடைய இந்திரனை யழைத்துக் கூவுவோமாக.—(எ-று.)

வருக்கம் 13.

6. காளை யீண்டு கழல்வரு மாண்மையோய்!
நாளு மெங்களை நாடிக் கொடைதரும்
மீளி, யப்புனன் மேவிய மேகத்தைக்
கோளுறுத்தித் திறந்து கொடுக்கவே.

(இ-ள்.) காளையே ! தவறாத ஆண்மையனே ! வள்ளலே ! அம் மேகத்தைப் புடைத்து நீரையளிப்பாயாக.—(எ-று.) விருஷன் என்னும் பதத்திற்குக் காளையே என்றது மழை பெய் விப்பவனே யென்பார் சாயணர். கழல்வு அரும் எனப்பிரிக்க.

7. வச்சிரத்தை வழங்கு கை யிந்திரற்
குச்சிக் கூப்பி யுரைத்திடுந் தோமங்க
ளுச்ச மொன்றி ளென் றோங்குவதன்றி மற்
றிச்சகத் தவற்கேற்றன காணிலேன்.

(இ-ள்.) தேவர்க்கென்று கூறப்படும் ஸ்தோமங்களில் உத்தம மானவையெல்லாம் வச்சிரியாகிய இந்திரனது புகழை மேலும் மேலும் உயர்த்துவனவே யன்றி அவனது பூரண வல்லமையையுங் காட்டுவனவற்றை என்னு லறிய முடிய வில்லை.—(எ-று.)

8. துதிக்குங் காளை யாக்கூட்டந் துளைதலின்
எதிர்க்கலாக் கலி யீசன், கொடையினன்
மதிக்கு மாண்மை வலத்தின், மனிதரைக்
கதிப்பிற் கூடுவன் கண்டீ ரரியுமே.

(இ-ள்.) பகைவர் எதிர்க்கமுடியாத வலியுள்ளவனும், ஈசானனும், இச்சைகளை வருஷிப்பவனுமான (இந்திரன்,) அழகிய நடை பொருந்திய காளைமாடு பசுக்கூட்டத்தைச் சாருவது போலத், தன் பலத்தினால் (அநுக்கிரகிக்க) மனிதரை யடைவான்.—(எ-று.) மேல் ஆறுவது பாட்டில் விருஷாவென்னும் பதத்துக்கு மழை வருஷிப்பவனென்றவர் ஈண்டுகாமியங்களை வருஷிப்பவனென உரை கூறினார். மேனாட்டாசிரிய ரெப்போது மச்சொல்லைக் காளையென்றே மொழிபெயர்ப்பார்.

9. *ஒருவனுகை வெவ்விந்திரன் மாந்தரைத்,
திருவமர்ந்திடு செல்வத் தொகுதியை,
மருவு மைவகை மானவர் வம்சத்தைப்,
பருவ மோர்ந்து பரித்திடுந் தன்மையன்,

(இ-ள்.) எந்த இந்திரன் ஒருவனுகை நின்று மக்களையும், தனங்களையும், (குடியிருப்பதற்கு அருகமான) ஐவகைமானவர் வம்சங்களையும் காப்பவன்.—(எ-று.) அவனைத்துணைக் கழைப் போமெனப் பத்தாம் பாட்டோடு கூட்டுக. ஐவகைமானவர் வம்சம், ஐந்து வருணத்தவரைக் குறிக்குமென்று சாயணரும், துர்வசர், யதுக்கள், அநுக்கள், துருஹ்யுக்கள், புருக்கள் என்னும் ஐந்து ஆரியக் குடியேற்றவகுப்புக்களைக் குறிக்குமென்று மேனாட்டாசிரியருங் கூறுவர். மேல் மண் 1. சூக் 108. செய் 8-பார்க்க.

10. *உங்களுக்கென வுன்னி, யெல்லாரினுந்
துங்கனைப், பிறமக்களைத் தோயுறு
தெங்குநின்று மெமிந்திரற் கூவுவேம் ;
நங்கட்கே யவ னற்றுணை யாகவே.

(இ-ள்.) இருத்துவிக் யஜமானர்களே ! எல்லா ஜனங்களுக்கும் மேலான விந்திரனைப் (பிறரைச் சாராதபடி) உங்களுக்காக வழைப்போம்; அவன் கேவலம் எம்மையே யடைந்து துணை செய்யட்டும்.—(எ-று.)

வருக்கம் 14.

## 8. மண்டலம் 1. அநுவாகம் 3. சூக்தம் 1.
## 10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஷை மதுச்சந்தஸ்.
வடமொழிச் சநதம் : காயத்திரி.
தேவதை : இந்திரன்.

1. *முற்று மின்ப மளிப்ப, தொன்னார்களை
வெற்றி கொள்வது, வெற்றி கொள்வோனது,
மற்று மேலும் வளர்வதா மொண்ணிதி
யிற்றை யிந்திர வேந்த றுணையென.

(இ-ள்.) பரிபூரண இன்பத்தை யளிப்பதும், பகைவர்களை வெற்றி கொள்வதும், ஜயசீலனுடையதும், மேலும் மேலும் விருத்தியாவதுமான செல்வத்தை, இந்திரனே, இன்று (எங்களுக்குத்) துணையாகத் தருவாயாக.—(எ-று.)

2. *கொற்ற வெம்பரி யோடு குறித்து நீ
முற்றவெஞ்சார் முழுத்துணையா நிற்கப்,
பற்றலர் தமைப் பற்றி யெம் முட்டியா
லெற்றி வெங்புரிந் தேற்றம் பெருகவே.

(இ-ள்.) குதிரை (முதலிய சேனை) யோடு நீ எங்கள் துணையாக நிற்கையில், எதிரிகளோடு முஷ்டி யுத்தம்செய்து அவர்களை யாங்கள் தோற்கடிக்கவும் —(எ-று.) உதவி செய்யுந்தனத்தைத் தருவாயாக வென மேற்பாட்டோடு கூட்டுக.

3. மெச்சு நின்றுணை மேவியிங் கிந்திர
வைச்ச நற்றிட வச்சிரந்தன்னை யாம்
நச்சிக் கையகத் தேந்திப் பகைவரை
நிச்சலும் மொறுத் தாற்றிச் சயிப்பமே.

மண்டலம் 1. சூக்தம் 8.

(இ-ள்.) இந்திரனே! உன்றுணையை யடைந்து உனது உறுதியான வச்சிராயுதத்தை ஸ்வீகரித்துப் பகைவரை வெல்வோமாக.—(எ-று.)

4. அத்திரங்க ளடைந்திடு சூரர்க
ளொத்த நற்றுணை யாக, விங் கிந்திர
யுத்த பூமியி லுற்ற பகைவரை
மெத்த நின்றுணை கொண்டு விரட்டுவோம்.

(இ-ள்.) இந்திரனே! அஸ்திரங்களோடு கூடிய சூரர்களை எங்களுக்குத் துணையாகக்கொண்டு, யுத்தத்தை விரும்பி நிற்கும் பகைவரை யுன்னுதவியா லோட்டுவோம்.—(எ-று.)

5. தேக வன்மையு மிந்திரற் குள்ளத்தி
னோகை வன்மையு மென்று முறைந்திட:
மாக மன்ன வலியுங் குலிசத்தின்
வாகை யுள்ளவற் கென்று மருவவே.

(இ-ள்.) இந்திரன் சரீரதிடத்தோடு குணச்சிறப்பு முள்ளவன். இவ்விருவகை வலியும் அவனுக்கு அமையட்டும். வச்சிரியாகிய அவனுக்கு விசும்புபோற் சேனுபலமும் பரந்து நிற்கட்டும்.—(எ-று.)

வருக்கம் 15.

6. போரில் வெங்கொடாப் புத்திரர் கூடவு
மேரி னல்லறி விச்சிக்கு மேதையர்
சாரு மாறுந் தயக்கிடு மவ்வலி
கூர வேண்டுவோ ரன்னவற் கூப்புவார்.

(இ-ள்.) யுத்தத்தில் பலம்பொருந்திய புத்திரர்களையாவது, பிரக்ஞாகாமிகளாயுள்ள மேதாவிகளையாவது பெற விரும்புவோர் அவ்விந்திரனைத் துதிப்பார்.—(எ-று.)

7. மட்டில் சோமத்தை மாந்தி யவன் வயி
றெட்டலாத விடங்கொள் பரவையின்
வட்டமாகப் பருத்து வளர்ந்ததோ
டொட்டி வாயுறு நீரினையொத்ததே.

(இ-ள்.) சோமத்தை யுத்தமமாகக் குடிக்கு மவன்வயிறு கடலைப்போல் உருவில் வளர்ந்ததுமன்றி, வாய் நீரூற்றுப்போல (வற்றாமலும்) இருந்தது.—(எ-று.) மேனுட்டாசிரியர் 'வானின் றிழியும் பல நீர்த்தாரைகளைப் போலவுமாயிற்று.' என்பார். அற்றேல் 'ஒட்டி வான்பெருக் கொத்துச் சிறந்ததே.' என்க.

8. பெருமை வீரியம் பேசுறு நன்னல
மிருமை யானிதி யாவும் பொருந்தியே
யருமை வாய்ந்த வவன்குணந் தாசுடர்க்
குரிய தீங்கனிச் சாகையி, ேனாங்குமே.

(இ-ள்.) பெருமையும் வீரியமும் முதலிய பலநலங்களும், பசுச்செல்வமும் சார்ந்த அவனது குணம் யாககர்த்தாவுக்குப் பழநிறைந்த மரக்கிளையை யொத்துநிற்கும்.—(எ-று.) தாசுடன் = யஜமானன், யாகஞ்செய்வோன். இவ்வேதத்தில் யஜமான் என்னும் சொல் யாககர்த்தாவென்னும் பொருளிலேயேவரும்.

9. இந்திர வுன் விபூதிக ளென்னைத்துத்
தந்து போற்றுறுந் தாசுடற்குத் துணை
நந்து மாறிவ ணுளைக்கு முண்மையின்
வந்து நிற்கு மிவ்வண்ண நிலைக்கவே.

(இ-ள்.) இந்திரனே! உனது விபூதிகள் (ஐசுவரிய விசேடங்கள்) என்போன்ற யஜமானனுக்குத் துணையாக இன்றைக்கும் வரும்.—(எ-று.)

10. அற்றே யன்னவ னன்புக் கொடைகளும்;
உற்ற சோம முவப்பிற் பருகுவான்
முற்று நல்லிசைத் தோமமு மிந்திரன்
வெற்றி கூரு முக்தங்களு மோங்குக.

(இ-ள்.) அவனது விரும்பத்தக்க கொடைகளும் அத்தன்மையனவாம்; சோமங் குடிக்கும்வண்ணம் இந்திரன் பொருட்டு ஸ்தோமங்கள் பாடப்படட்டும்; உக்தங்களுரைக்கவும் படட்டும்.—(எ-று.) ஸ்தோமம் = ஸாமகன்பாட்டு, உக்தம் = ரிக்வேதி யுரைக்கும் சஸ்திரம் என்பார் சாயணர். விரும்பும் வண்ணமாகவும், புகழும் வண்ணமாகவும் இந்திரனுடைய சோமபானத்தின் பொருட்டு ஸ்தோமங்கள் பாடப்படட்டும்; சஸ்திரங்கள் உரைக்கப்படட்டும் என்பார் சாயணர்.

வருக்கம் 16.

## 9. மண்டலம் 1. அநுவாகம் 3. சூக்தம் 2.
## 10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மதுச்சந்தஸ். வடமொழிச் சந்தம்: காயத்திரி. தேவதை: இந்திரன்.

1. வருக விந்திர சோம மகம்புரி
பருவம் யாவும் பருகிக் களிகொள்க
திருகு மொன்னலர்த் தீமை விலக்கிடும்
பெருகு மாற்றற் பிரபல மோங்கவே.

## மண்டலம் 1. சூக்தம் 9.

(இ-ள்.) இந்திரனே! சோமம் பிழியுங் காலந்தோறும் அதனைக்குடித்து மதம்பெறுவாயாக; சத்துருக்களை வதைக்கும் பெருமையனாக விருப்பாயாக.—(எ-று.)

2. உலகில் யாவு முறு முதலாகிய
வல மருவிடு சக்கிரி யுள்ளத்தி
னிலவ வின்ப நிரப்பிடுஞ் சோமத்தை
யுலவு மிந்திரற்கா விழைத் தூற்றவே.

(இ-ள்.) எல்லாக் கர்மங்களையுந் தூண்டும் பலவானாகிய சக்கிரியினது உள்ளத்தில் களிப்பூற மதமூட்டுஞ்சோமத்தை யிந்திரனுக்காகப் பிழிந்து ஊற்றுங்கள்.—(எ-று.)

3. அழகுசார் கதுப் பன்பார்த நாயக
பழகு மின்பம் பரிக்கு மிப்பண்களில்
விழைவி னுநந்த மேவிச் சவனத்தி
னுழை மகிழ்ந் தமரர்பிற ரோடுற.

(இ-ள்.) கன்ன வழகுள்ளவனே! யஜமானர் யாவர்க்கும் நாயகனே! (எல்லா யாக கர்த்தாக்களாலும் துதிக்கப்படுபவனே!) இன்பவேதுவாகிய தோமங்களில் மகிழ்ந்து மற்றைத் தேவரோடும் வருக.—(எ-று.)

4. எந்த மெண்ண மியைத்திடு நாயக
விந்திர வுன் னெழிலுரை கீர்த்தனை
வந்தனையின் வயக்கினெ னன்னவை
நந்து முன்றனை நாடி யின்பாற்றுமே.

(இ-ள்.) இச்சைகளை யளிப்பவனே! யஜமானர்களுக்குப் பதியாகிய விந்திரனே! உன்னிடத்து மேலோங்கிச் சேவிக்கும் வண்ணந் துதிகளை யாற்றினேன். அவை யுனக்குச் சந்தோஷத்தை யளித்து நின்றன.—(எ-று.) வடமொழி ரிக்கிலுள்ள அஜோஷா: என்பது தவறென்றும், சாமவேதத்தில் இந்த ரிக் ஸஜோஷா: என்றிருப்பதே சரியென்றும், லுட்விக்கென்னும் மேனாட்டார் கூறுவர். அஜோஷா என்பது சரியாயின் அவை உன்னைப் பிரீதியோடு சேவித்துந் திருப்தியடைவதில்லை, என்னல் வேண்டும்.

5. சிறப்பி னோங்கிய சித்திரச் செல்வத்தை
யிறப்ப விந்திர வீந்தரு, ளெவ்வகைச்
சிறப்பு மார்ந்த விபுவு னின்வேறிலர்,
வறப்பரும் பொரு ளுயகன் றூனுமே.

(இ-ள்.) இந்திரனே! சிரேஷ்டமும் (மணி முத்துக் களோடுகூடிச்) சித்திரமுமான தனத்தை எம்பொருட்டுத் தரு வாயாக; பிரபுவும் விபுவும் நீயே யாவாய்.—(எ-று.) விபு போகபரிபூரணத்தை யுணர்த்துமென்றும், பிரபு அதற்கு மேலுள்ள ஐசுவரிய முடைமையை யுணர்த்துமென்றும் சாய ணர் கூறுவர்.

வருக்கம் 17.

6. அளவில் செல்வத் தரி யிங்கருந்தொழில்
பழகிக் கீர்த்தி பரவிய வெங்கண்மாட்
டொழிவிலாப் பொருளுற்றிட வவ்விடத்
துளமருவித் தொழில்வயி னூக்கவே.

(இ-ள்.) அளவில்லாத செல்வமுள்ள விந்திரனே! அருந் தொழிலைச்செய்து கீர்த்தி பரவிய வெங்களிடத்துப் பெரும் பொருள் சேரும்வண்ணம் எம்மை எங்களெங்களது தொழிற் கண் ஊக்கப்படுத்துவாயாக.—(எ-று.)

7. நூன்ற வாயுள் பொருத்துவ, தாக்களோ
டான்ற தன்மை யளவும் பெருத்தது,
தோன்று மட்சயம் வன்மை துதைந்ததா
யேன்ற செல்வ மெமக்களி யிந்திர.

(இ-ள்.) இந்திரனே! தீர்க்காயுளைத் தருவதும், ஆக்க ளதிக மாக வுள்ளதும், குணத்திலும் பரிமாணத்திலும் பெரியதும், விநாசரகிதமானதும், வல்லமை யுள்ளதுமான செல்வத்தை எமக்கு நன்கு தருவாயாக—(எ-று.)

8. பண்டி கொண்டு பரந்து களத்தினின்
மண்டி யேற்றி மடக்கி யில்லந்தரு
முண்டி யாயிர மொண்ணிதி, யிந்திர,
யிண்டு சீரும் விளங்க வளிக்கவே.

(இ-ள்.) வண்டிகளின்மே லேற்றிவரும் யவமாதி தானிய ரூபமான வுண்டியையும், ஆயிரக்கணக்கான தானத்தோடு கூடிய செல்வத்தையும், நெருங்கிய மகத்தான கீர்த்தியையும் எங்களுக்குத் தருவாயாக.—(எ-று.)

9. எங்க ளாக்கத் தியன்று துணைசெயுஞ்
சங்க மென்னு நிதிபதி யிந்திர
னங்க மாக வருபவ னென்று, பாப்
பொங்க நல்லிசைப் போற்றி னழைப்பமே.

## மண்டலம் 1. சூக்தம் 10.

(இ-ள்.) எங்களுடைய செல்வப் பாதுகாப்புக் குதவிசெய்யும் வஸுபதியாகிய விந்திரனை யாகசாலைக்கு வருபவனென்று பாட்டுக்கள் பாடிக் கூவுவோம்.—(எ-று.) வஸு=செல்வம், சங்க மென்றது மூலத்திலில்லை.

10. சுதை யளித்திடு தோறு மமர்ந்திடும்
மதிமகத்துவ வாகண்டலன் பெரு
மதுகை மந்திர மோதி யர்ச்சிப்பபாற்
கதிதரு மகங் காண்பவர் யாருமே.

(இ-ள்.) எல்லா எஜமானர்களும், (இந்திரனுக்காகச்) சோமம் பிழிந்து தரும்போதெல்லாம், நியமிக்கப்பட்டவிடத்தில் அமரும் பெரியவனாகிய இந்திரனது பெரும் பலத்தை யர்ச்சிப்பார்கள் (புகழ்வார்கள்.)—(எ-று.)

வருக்கம் 18.

## 10. மண்டலம் 1. அநுவாகம் 3. சூக்தம் 3.
## 12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மதுச்சந்தஸ்.
வடமொழிச் சந்தம்: அநுஷ்டுப் (தமிழிற் கலிநிலைத் துறை.) தேவதை: இந்திரன்.

1. ஓங்கு நூறியா கத்தினி னுயர்ந்தவ வுனது, [ப்பார்,
தேங்கு தூய்மறை செப்புவோர் சிறப்பெடுத் துரை
ஈங்கு பண்ணிசைத் துன்புக ழேத்துவோர் பலரால்;
தாங்குதங்குடியுயர்த்தலொத் துயர்த்தினர் மறையோர்.

(இ-ள்.) சதக்கிருதுவே! உன்னைக் காயத்திரியோதுவார் காயத்திரியாலும், அர்ச்சிப்போர் பண்ணிலும், புகழ்ந்து பேசுவார்கள். பிராமணர்கள் தங்கள் குலத்தை யுயர்த்துவதுபோல (இச்செய்கையால்) உன்னை உயர்த்துகிறார்கள்.—(எ-று.) தூய்மறை=காயத்திரி. "வம்சமிவ" வென்பதற்கு மூங்கில்போல எனப்பொருள்கொள்வது மொன்று. கழைக்கூத்தன் மூங்கின் மேலாடும்போது அதனை நிமிர்த்திப் பிடித்தல்போல என்க. அற்றேல், "மூங்கில்போல மாகம் பெற வுயர்த்தினர் முதியோர்." என்று படிக்க. சதக்கிருது வெகு கன்மமுள்ளோன், பேரறிவுள்ளோ னென்பார் சாயணர்.

2. சிகர மொன்றினின் றொன்றினைச் சேர்ந்து தன்சிரம
மிகவு நோக்கிடா தாற்றுமேம் படுதொழி லுணர்ந்து
தகைகொளப்பணித்தகுதியை மனங்கொளும் வள்ளல்
தொகைகொ ளீட்டமோ டேகுவன் சுவைக்க விந்திரனே.

(இ-ள்.) (ஸோமலதை, ஸமித்து, முதலியவற்றைச் சேக ரிக்க) ஒரு மலையுச்சியிலிருந்து மற்றொரு மலையுச்சிக்குத் தன்சிர மத்தைப் பாராமற் சென்று அவற்றைக்கொண்டுவந்து செய்யும் (சோமயாகக்) கருமத்தின் பெருமையை யறிந்து, அதற்காக அவனுக் களிக்கவேண்டிய பிரயோஜனத்தையும் மனதி லெண்ணி, வள்ளலாகிய இந்திரன் தன் (மருத்துக்) கூட்டத் தாரோடு (யாக பூமிக்கண்) வருவான்.—(எ-று.)

3. கல்லணைக்குளே நிறை பரு முடலினி னிளைய
புல்லு நெட்டுளைப் புரவியி னிணையிணைப்பூட்டி
யெல்லும் யாமமுஞ் சோமமே பருகு மிந்திரனே
சொல்லும் பாவினைக் கேட்டுள மகிழ்ந்திட வரவே.

(இ-ள்.) சோமம்பருகுமிந்திரனே! கலணைக்குள் நிறைந்து புஷ்டியான வுடலோடுகூடி, யிளமைவாய்ந்து, நீண்ட கழுத்து மயிரோடு கூடிய குதிரை யிரண்டையும் (தேரிற்) பூட்டி யாங் கள் சொல்லும் கீதங்களைக்கேட்டு மகிழ வருவாயாக.—(எ-று. கலணை, கல்லணை, குதிரைமேற்றவிசு.

4. ஏகி யிங்ஙன மெமதுபாக் கேன்ற நற்குரலி
னோகை யோடெதி ரோமன வுரைத்திசை பாடி
வாகை யிந்திர வழங்கு மெந்தோத்திரம் பயனுற்
றோகை யெய்த விவ்வெக்கிய மோங்கிட வளர்ப்பாய்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய (செல்வகாரணனை) இந்தி ரனே! இவ்விடத்து வந்து, (உத்காதாக்களுடைய) ஸ்தோத்தி ரங்களையும் (அத்வர்யுக்களி னுக்தங்களையும், ஹோதாக்களின் சஸ்திரங்களையும்) நோக்கிச் (சந்தோஷசித்தனாய் எல்லா ரித் விக்குக்களையும் புகழ்ந்து) எதிர்க்குரல் கொடுப்பாயாக; பின்பு எங்களுடைய மறைகளையும் யாகத்தையும் வளர்ப்பாயாக.—(எ-று.) பிரஹ்ம=மறை, அன்னமென்பார் சாயணர். சஸ்திர மெனினும் உக்தமெனினும் ஒக்கும்.

5. சத்துருக்கள் பல்லோரையுந் தடிபவ னெமது
மித்திரர்களுஞ் சுதர்களு மேம்படு மாறு
சித்தம் வைப்பவன் சக்கிரன் பெருமையி னோங்க
வுக்த மிந்திரற் கெங்களா லுரைபெற றகுமே.

(இ-ள்.) பகைவர் பலரையும் வாட்டுபவனும், எமது புத்திர மித்திரர்களை மேம்படச் செய்பவனுமான சக்கிரனது பெருமை யோங்குமாறு இந்திரன் பொருட்டு நாங்கள் உக்தங்கள் கூற வேண்டும்.—(எ-று.) சக்ர := சக்கிரன் = சக்திமான்.

மண்டலம் 1. சூக்தம் 10.

6. தோழ னுகென வவனையே விழைகுவந், தோன்று
மாழை யீகென விளிக்குவம், வீரியம் வாய்ந்த
பாழி வெம்புய வலியினை யாசிப்ப, மவனே
தாழில் செல்வத்தை யுதவிடுஞ் சக்கிர னதனல்.

(இ-ள்.) குறைவில்லாத செல்வத்தை யளிக்குஞ் சக்திமானவனுதலால் அவனையே தோழனுகவென்றும், பொன்னளிக்கவென்றும், பலந்தருகவென்றும் கேட்டு அடைவோம்.—(எ-று.) சக்கிரன்=சக்திமான்.

வருக்கம் 19.

7. நீயளிப்பவை யிந்திர விரைவினிற் றிறந்து
சேயகற்றுவா னெளியவாச் செறிந்திடு மியல;
தூய கொட்டிலி னுக்களைச் சுறுக்கென வெளிவிட்
டேயுஞ் செல்வத்தை வச்சிரி யெமக்கென வியைப்பாய்.

(இ-ள்.) உன்னுல் அளிக்கப்படும் செல்வமானது இலகுவாகப் பலவிடங்களிற் போகக்கூடியதும், சுகமாய் மிச்சமில்லாமல் அடையக்கூடியதுமானதுபற்றிக், கொட்டிலை (மேகத்தை)த் திறந்து வெளிவரும் பசுக்களாகிய (நீராகிய) செல்வத்தையெங்களுக்குத் தருவாயாக.—(எ-று.) மழையை யளித்து எங்களது பயிர்களை வளர்ப்பாயாக வென்பது பொருள்.

8. கோப மூண்டபோ துன்னையிக் குவலயத் தோடு
சோபை யுள்ள வா னிரண்டுமே தாங்குத லரிதால்;
ஆப மேகத்தி னுள்ளன வெமக்கென வணைந்து
தாப நீக்கவும், பசுக்குழு சருவவு மமைப்பாய்.

(இ-ள்.) சத்துருக்களை வதைக்கும்போது உன்னைப் பூமி வானமிரண்டும் தாங்கமுடியாது; நீயே ஜயிப்பாய்; மேகத்தினுள்ள மழையும், பால்தரும் பசுக்களும் எங்களைச்சேரச் செய்வாய்.—(எ-று.)

9. கூர்ஞ்செவிப்புல னியைந்தவ, வெனதழைப் பினைக்கேள்,
வய்ஞ்ச பாவினிற் செவிகொடாய் இந்திர, வென்னாத்
தோய்ஞ்ச தோமமுந் தோமது நண்பினு மருகில்
வாய்ஞ்சுன் போதத்தி னுள்ளுற வாவிதி னமைக.

(இ-ள்.) எப்பொழுதுஞ் செவிகொடுக்கவல்ல விந்திரனே! யான் கூப்பிடுவதைக்கேட்டு, என்பாட்டைச் செவிக்கொண்டு, எனது ஸ்தோமமானது உனது நண்பர்களைக் காட்டிலும் அதிகமாக உன்மனதிற் பதியும்படி செய்வாயாக.—(எ-று.)

10. போரிற் கூவி யாமழைப்பதைக் கேட்பவ, வுனையுஞ்
சீரின் யாரினும் வலிசிறந் தவனென வறிவேம்;
பாரி னுயிரக் கணக்கினிற் பரிந்தெமக் களிக்கும்
ஏரி னுத்தமக் காளையுன் றுணையினை விழைவோம்.

(இ-ள்.) போரினில் யாம் துணைகூவுவதைக் கேட்பவனே! நீ மிக வலியுள்ளவனென்று எங்களுக்குத் தெரியும்; ஆயிரக் கணக்கான கொடைகளைத் தரு முத்தமனே! உன்றுணையை விரும்பியழைப்போம்.—(எ-று.) வ்ருஷந்தமம்=உத்தமவள்ளல் என்பார் சாயணர். வ்ருஷ சப்தம் வருமிடமெல்லாம் மேனாட் டாசிரியர் காளையென்றும், சாயணர் காமாநாம் வர்ஷிதாரம் என்றும் உரை கூறுவர். அதனால் 'சீரின்யாவையுஞ் சிறந் தளிப்பவனென வறிவேம்.' என்றும் பாடபோதம்.

11. கோசிகக் குடியுதித்த தெய்வம்மெனச் சாரு
நேச விந்திர மலர்முகத் தெமசுதை நேர்க;
ஆசில் கன்மமா ராயுணீண்டுற வெமக்கமைக்க;
பேசு மாயிரம்பல னிந்த விருடிக்கும் பெருக்கல்.

(இ-ள்.) கோசிகக் குடியிற் பிறந்த விந்திரனே! களிப் புடன் எமது சோமத்தை யேற்க; சற்கருமத்தோடுகூடிய தீர்க் காயுளை யெங்களுக்குத் தருக: ஆயிரக்கணக்கான பலன்களை இவ்விருடிக்குத் தருவாயாக.—(எ-று.) மதுச்சந்தஸ் விசுவாமித் திர வம்சத்திற் றோன்றியவன். குசிகன் இந்திரனுக்குச் சமான மான பிள்ளையை விரும்ப அவனே காதிபுத்திரனாகப் பிறந்தா னென்று அநுக்ரமணிகை கூறும்.

12. பாக்க ளனந்தம் பரிந்துகொள்பவ வுனை யெமது
பாக்க ளன்கு பக்கத்தினும் வளைந்து சூழ்ந், துறுதி
யாக்கு மாயுணீட்டத்தினின் வலிபெற வமைத்துத்
தேக்கு மின்பத்தை யளிக்குமா றுன்வயிற் சேர்க.

(இ-ள்.) பாட்டுக்களினுவப்பவனே! எமதிப்பாக்களுன்னைச் சூழ்ந்து எப்போதும் நிற்கட்டும்; தீர்க்காயுளைப்பொருத்தி உனது பலத்தை வளர்த்து எமக்குச் சுகத்தைத் தருமாறு உன்னிடத்திற் சேரட்டும்.—(எ-று.)

வருக்கம் 20.

## 11. மண்டலம் 1. அநுவாகம் 3. சூக்தம் 4.
## 8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : மதுச்சந்தஸின் புத்திரன் ஜேதா ;
வடமொழிச்சந்தம் : அநுஷ்டுப் ;
தேவதை : இந்திரன்.

1. மகரதர்களி லுத்தமன், வலியினுக் கரசன்,
றகுபெரும்பதி, யிந்திரன், சமுத்திரஞ் சிவணக்
ககன மெங்கணும் பரவுவான், கதித்துறு மெல்லாத்
தகவு பாக்க ளிந்திரன்றனை யுயர்த்தின வன்றே.

(இ-ள்.) தேர் கடாவுவோரி லுத்தமனும், வலியுள்ளவர்களுக்குஞ் சன்மார்க்கர்களுக்கும் பதியும், சமுத்திரம்போல் எங்கும் வியாபிப்பவனுமாகிய இந்திரனது புகழை (எமது) பாக்களெல்லாம் விருத்திபண்ணின.—(எ-று.)

2. கொற்ற நாயக னானவுன் னண்பினைக் கூடி
முற்ற வீட்டுவ மிந்திர வெம்பய முழுதும்;
வெற்றிகொள் ளபராஜித விழைந்துனைத் துதியா
லற்ற நீங்கவே புகழுவ மிடைவிடா தழகின்.

(இ-ள்.) வலிக்கு நாயகனும், (யுத்தத்தில்) வெற்றிகொள்ளும் அபராஜிதனுமாய உன்னை, இந்திரனே, எப்போதும் துதித்துப் புகழ்ந்து எமது பயமுழுவதையு மொழிப்போம்.—(எ-று.)

3. மகத்தணைந்து தோத்திரங்களை யியம்பிடு மகருக் [ன்
குகக்கக் கோக்கொடை யுறுத்திடும் பொழுதினி, லரியி
றகைக்கொடைகள் பூர்வத்தினின் றுதவுறு துணைக
ளிகத்தி னென்றுமாறா வியலெய்திய வாமே.

(இ-ள்.) யாகப் பிரதேசத்துக்குச்சென்று ஸ்தோத்திரஞ் செய்வோருக்குப் பசுக்கொடையை யவன் ஆற்றும்போது அவனாற் றரப்படும் தட்சிணைகளும், அநாதிகாலந்தொட்டு அவன் செய்யும் உதவிகளும் அவனுக்கு இயல்பாக வந்தன.—(எ-று.) கொடைகளும் துணைகளுமென வும்மை விரிக்க.

4. வச்சிரப்படை யிந்திரன் ஞானவா னிளைஞன்
நச்சலர்ப்புரம் பொடிப்பவ னனிதுதி யணைந்தோன்
எச்சமின்றி யெல்லாக் கருமங்களுந் தரிக்கப்
பொச்சமில் வலி யமிதமாப் பொருந்தியே பிறந்தான்.

(இ-ள்.) வச்சிரப்படையைத் தாங்கினவனும், கவியும், (மூப்படையாத) இளையவனும், (அசுரராகிய) 'பகைவரது' கோட்டைகளை யழிப்பவனும், பலவிதமான துதிகளைப் பெற்றவனுமான இந்திரன் எக்கருமங்களையு நடத்துவதற்கேற்ற அளவில்லாத வலிமையோடேயே தோன்றினன்.—(எ-று.)

5. வலனெனு மசுரன்றன தாநிறை மலையின்
பிலம் பிளந்திடத் தகர்த்தனை, தேவர்க ளுனது
நலம்பொருந்திய சார்பினி னெருங்கி நன்மனத்தே
யுலமரல் சிறிதும்மிலா தோங்கினர் குலிச.

(இ-ள்.) வச்சிராயுதந் தரித்தவனே! வலனென்னு மசுரன் பசுக்களை யடைத்துவைத்திருந்த பிலத்தினைப் பிளந்தாய், அதனால் வருத்தமடைந்த தேவர்கள் மனக்கலக்கமில்லாம லுன் பக்கத்தே வந்து நின்றார்.—(எ-று.) அத்ரிவ:=மலைபோன்ற வச்சிராயுதத்தை யேந்தினவன் என்பது பொருள். வலன் ஒருகாலத்துத் தேவரது பசுக்களையொரு பிலத்திலடைத்து வைத்தான். அவற்றை இந்திரன் கண்டு தன்சேனையோடு சென்று திறந்து விட்டானென்பது இதிஹாஸம்.

6. கொடைநினைத்துனைச் சூரனே யணுகுவான் குறித்துன்
கொடை மடத்தினைப்புகழ்ந்துற்றேன்; சிந்துவையீண்டு
மிடைந்து பல்லறிவாளரு மமர்ந், ததற்குறுதி
யடைந்த பன்மொழி விளம்பினர் பண்ணுவப்பவனே.

(இ-ள்.) யுத்தத்திற் சௌரியம் வாய்ந்தவனே! பண்கேட்டு மகிழ்பவனே! ஈகைபொருந்திய உன் (வரையாது கொடுக்கும்) வள்ளன்மையைப் புகழ்ந்தடைந்தேன்; பல அறிவாளரும் சோமத்தொட்டியை (சிந்துவை)ச்சூழ்ந்து இந்தச் சோமபான யாகத்தில் நீ தருங்கொடையைப் புகழ்ந்து பேசினர்கள்.—(எ-று.) அதற்கு—அக்கொடைமடத்திற் கென்க.

7. மாயை யாவையுஞ் செய்யவல் சுட்டுணன்றனை யுன்
மாயை கூடிய சத்தியான் மடித்தனை யிந்தத்
தூய செய்கையை ஞானிக ளுணக்கியே துதித்தார்
நீயு மத்துதி பின்னுற வருஞ்செய னிறுவல்.

(இ-ள்.) மாயைகளெல்லாம் செய்யவல்ல சுட்டுணனையுனது ஞான சக்தியாற் கொன்றனை; இச்செய்கையை ஞானிகள் அறிந்து துதித்தார்கள்; அத்துதியைக் காட்டிலு மதிகமான செய்கைகளைச் செய்வாயாக.—(எ-று.) சுஷ்ணன்—சுட்டுணன்; பூதங்களைச் சுஷ்கஞ்செய்வோன். மண். 1 சூக். 104 ரிக் 8 பார்க்க.

மண்டலம் 1. சூக்தம் 12.

8. விலைபொருந்திய வீகைக ளாயிரக் கணக்கி
னிலை பொருந்துறப், பன்மடங் கின்னமு மீள,
வலி பொருந்து மீசான னு மிந்திரன் றனை யெம்
வலம் பொருந்திய தோமங்கள் மாண்புயர்த்தினவே.

(இ-ள்.) யாருடைய செல்வக்கொடைகள் ஆயிரக்கணக்காகவும், அதற்குமேலும் அமைந்து கிடக்கின்றனவோ அந்த ஈசானனாகிய விந்திரனைப் பலம்பொருந்திய எமது ஸ்தோமங்கள் எப்பொழுதுந் துதித்துப் பெருமைப்படுத்தின.—(எ-று.) ஸ்தோம: என்பதற்கு ரித்துவிக்குகள், ஸ்தோத்திரஞ் செய்வோர் எனப்பொருள்கொண்டு, துதிப்பார்களென முடிப்பார் சாயணர்.

வருக்கம் 21.

## 12. மண்டலம் 1. அநுவாகம் 4. சூக்தம் 1.
## 12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கண்ணுவ புத்திரன் மேதாதிதி;
வடமொழிச் சந்தம்: காயத்திரி.
தேவதை: அக்கினி.

1. வேதம் யாவையு மோர்ந்தவன், மேன்மைசால்
தூத, ஹோதா, சுவைபெற விம்மகத்
தீது நீக்கிடு மக்கினி தன்னைத் தேர்ந்
தாதரவென வார்ந்து துதித்தனம்.

(இ-ள்.) விச்வவேதஸனும், தூதனும், ஹோதாவும், இம்மகத்தை நன்மைப்படுத்துபவனுமான அக்கினியைத் தேர்ந்து துதித்தோம்.—(எ-று.) விச்வவேதஸன்—எல்லாவிதமான செல்வங்களுமுடையவனென்றும், (ஓதா) ஹோதா தேவர்களைக் கூட்டிவருபவனென்றும் பொருள் கூறுவார் சாயணர்.

2. மிக்க வெந்துதி மீதுறக் கூவியே
யிற்கு நாயகன் மீயன் பியைந்தவன்
றக்க வொள்ளவி தாங்கிடு மக்கினி
பக்கல் சார வெப்போது மழைப்பரே.

(இ-ள்.) யாகவில்லங்களுக்கு (ஹோதா முதலியவர்களுக்கு) நாயகனும், மிகுந்த வன்பிற் கிருப்பிடமும், (யஜமானன் தரும்) அவியைத் தேவர்கள் மாட்டுச் சேர்ப்பவனுமாகிய அக்கினியைச், சதா (ஹோதாக்கள்) அழைக்கிறார்கள்.—(எ-று.) வடமொழி இருக்கில் அக்நிம் அக்நிம் என்றுள்ளது. உருவத்தால் ஒன்றாயினும் பிரயோகபேதத்தாலும், ஆகவநீயாதி ஸ்தான பேதத்தாலும், பாவகாதி விசேஷண பேதத்தாலும், பலவிதப்படுவதால், அக்நிம் அக்நிம் என்றா ரென்பார் சாயணர்.

3. உருப்பெற் றோங்கி யரணியெழு மங்கீ!
தருப்பை கொய்குவோர் தந்துணைக் காகவிங்
கருப்பிற் றேவரை யாக்குக, தூதனீ
விருப்பி னெந்நிதிக் கேற்றவன் றானுமே.

(இ-ள்.) அக்கினியே! அரணியிற் றோன்றுபவனாகிய நீ தருப்பையை நறுக்கிப் பரப்புவோருக்கு உதவியாகத் தேவரை யழைத்து வருவாயாக. ஹோதாவும், யாங்கள் போற்றத்தகுந்தவனும் நீயே.—(எ-று.)

4. அங்கி தூத கரும மடைந்து நீ
பொங்கு மெம்மவி பொந்த விரும்புமவ்
வங்க தேவர்க் கறிவித் தவரொடும்
தங்கு வாயிவ ணார்ந்த தருப்பையின்.

(இ-ள்.) அக்கினியே! நீ தூதகருமத்தை யடைந்தவனாய், எங்களது அவிப்பொருள்களை யடைய விரும்பும் அந்தத் தேவர்களுக்கு அவிபெறவாருங்களென்று அறிவித்து அவர்களோடும் இக்கர்மத்தில் பரப்பப்பட்டுள்ள தருப்பையில் தங்குவாயாக.—(எ-று.)

5. நெய்யி னாவுதி நேடி யளிக்கக்கொள்
செய்ய வெஞ்சுட ரக்கினி தேவனே!
வெய் யரக்க ருதவெம் பகைவராங்
கையர் தம்மைக் கடிதி னெரிக்கவே.

(இ-ள்.) நெய்யாவுதியேற்கும் பிரகாசம்பொருந்திய அக்கினியே! கொடிய அரக்கர்களி னுதவிபொருந்திய எம்பகைவரை யெரிப்பாயாக.—(எ-று.)

6. மற்றொ ரக்கினி மாட்டி யிவ்வக்கினி
யுற்ற தன்னொளி யோங்கி யொளிரும்; இவ்
விற்பதிக் கவிக் காளை யவிகொள்வோன்
பொற்புவாய் முகம்போந்த சுருக்கினன்.

(இ-ள்.) (ஆகவநீயமென்ற) விவ்வக்கினி (அரணிகடைந்த) நெருப்பினால் மூட்டப்பட்டொளிர்கிறான்; இவனே கிரஹபதியும், (நித்திய யௌவனம்) காளைப்பருவம் வாய்ந்தவனும், கவியும் (மேதாவியும்), சுருக்கை (நெய்யூற்றுந் துடுப்பை) யழகிய முகமாகக் கொண்டவனு மாம்.—(எ-று.) ஜுஹ்வாஸ்ய : ஜுஹூ ரூபமான முகத்தோடு கூடியவன். சுருக்குமுகம் போந்தவன் என்பது மேனாட்டாசிரியருரை.

வருக்கம் 22.

மண்டலம் 1. சூக்தம் 12.

7. சத்தியத்தைத் தருமத்தைப் பாலிக்கு
முத்தமக்கவி, துன்ப மொழித்திடச்
சித்தங்கொள் ளெரிதேவனை யாகத்தே
மெத்த வேத்திப் புகழ்ந்து விளம்பலே.

(இ-ள்.) சத்தியத்தையுந் தருமத்தையும் பரிபாலிக்கும் மேதாவியாகிய அக்கினிதேவனை, (சத்துருக்களாலும் ரோகத்தாலும்வரும்) துன்பத்தை யொழிப்பவனை, யாகத்தில் (ஸ்தோத்திரஞ் செய்பவர்) புகழ்ந்து கூறட்டும்.—(எ-று.)

8. சுவைக்கத் தேவரைக் கூட்டிடு தூதனை
மவிக்கு நாயக வக்கினி தேவநீ
புவக்கக் கைகுவித் தேத்து மொருவற்குப்
புவிக்க ணல்லா ணகைப் பொருந்துக.

(இ-ள்.) அக்கினி தேவனே! அவிப்பதியே! தேவரைக் கொண்டுவருந் தூதனாகிய வுன்னைப் போற்றுவோனுக்கு நீ அவசியமாக ரக்ஷகனா யிருப்பாயாக.—(எ-று.)

9. தேவர் நல்விழாக் காலத் தவிசொரிந்
தேவ னக்கினி யேயென் றழைப்பவன்,
பாவு தூய்மை பரப்பிடும் பாவக,
ஆவலோ டவனுக் களி செய்கவே.

(இ-ள்.) தேவரது விழாக்காலத்து எவன் அவியைச் சொரிந்து உன்னை யழைப்பவனோ அவனைப், பாவகனே, சுகத்தி லிருத்துவாயாக.—(எ-று.)

10. பாவகப் பெயர்ச் சோதி பரவியோய்!
தேவர் தம்மைச், சிறப்பி னிவ்வெக்கிய
மேவி யெம்பலி யேற்க விழைந்திவட்
பாவும் வண்ணம் பரிந்து கொணர்கவே.

(இ-ள்.) மிகுதியான பிரகாசத்தோடு கூடிய பாவகனென்னு மக்கினியே! இவ் வெக்கியதலத்தின்கண் வந்து எமது பலியை யேற்க நெருங்கும்படி தேவரைக் கொண்டுவருவாயாக.—(எ-று.) பாவகன் = வஸ்துக்களைப் பரிசுத்தஞ்செய்பவன் அல்லது சோதிப்போன்.

11. மிக்க காயத்திரியை விழைந்திசை
தக்கதான நவீன மறைதரு
மெக்கியத்த ரெமக்கு நல்வீரரோ
டொக்க மேவிடு முண்டி பொன் னீகவே.

(இ-ள்.) காயத்திரிச் சந்தஸில் (புராதனராற் சொல்லப் படாத) புதிய சூக்தத்தால் துதிக்கு மெமக்கு, வீரர்களோடு கூடிய உணவுஞ் செல்வமுஞ் தருவாயாக.—(எ-று.) எக்கியத் தாராகிய வெமக்கென்க.

12. வெண்சுடர் விரி யக்கினி வேண்டியெத்
திண்பெறுஞ் சுரர் தம்மையுஞ் சேர்க்குறும்
பண் பழகிய நீயிங் கியாமிசை
யெண்பெறுந் துதி யேன்று களிக்கவே.

(இ-ள்.) வெண்மையான காந்தியோடு விளங்கு மக்கினி யே! எல்லாத் தேவர்களேயும் கூட்டக்கூடிய தோத்திரங்களோடு கூடிய நீ, எங்களது இந்தப் போற்றிலுங் களிகொள்ளுவா யாக.—(எ-று.)

வருக்கம் 23.

அடுத்த சூக்தம் ஓர் ஆப்ரி ஸூக்தமாம். இம்மாதிரி ரிக் வேதத்தில் 10 ஸூக்தங்களுண்டு. அவையாவன :—

1. மண். 1. சூக். 13. காண்வகோத்திரத்து மேதாதிதி கண்டது. (இரண்டாவது அஷ்டக முதற்கணுள்ள ப்ரவரத்தில் அல்லது 49 கோத்திரங்களில் 24-வது பார்க்க.) (அக்கினி) 12 ரிக்குக்கள்.

2. மண். 1. சூக். 142. ஆங்கிரஸ கோத்திரத்து உச்சத்யன் புத்திரன் தீர்க்கதமஸன் கண்டது. (மேல்சொன்ன ப்ரவரப் பட்டியில் 17-வது பார்க்க.) (இந்திரன்) 13 ரிக்குக்கள்.

3. மண். 1. சூக். 188. அகஸ்திய கோத்திரத்து அகஸ்தியன் கண்டது. (49-வது கோத்திரம் முதல் வகுப்பைப் பார்க்க.) (தனூநபாத்) 11 ரிக்குக்கள்.

4. மண். 2. சூக். 3. ஆங்கிரஸ கோத்திரத்துச் சுநஹோத்திரன் புத்திரனும், பார்க்கவ கோத்திரத்துச் சுநகனது ஸ்வீகாரபுத்திரனுமான க்ருத்ஸமதன் கண்டது. (7-வது கோத்

ரத்தைப் பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.

5. மண். 3. சூக். 4. விசுமித்திர கோத்திரத்துக் காதி புத்திரன் விசுவாமித்திரன் கண்டது. (38-வது 39-வது கோத்திரங்களைப் பார்க்க. (தநூநபாத்.) 11 ரிக்குக்கள்.

6. மண். 5. சூக். 5. ஆத்ரேய கோத்திரத்து அத்திரி புத்திரன் வஸுச்ருதன் கண்டது. (27-வது கோத்திரம் பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.

7. மண். 7. சூக். 2. வஸிஷ்ட கோத்திரத்து மைத்திரா வருணர்களின் புத்திரன் வஸிஷ்டன் கண்டது. (45-வது கோத்திரத்தைப் பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.

8. மண். 9. சூக். 6. காச்யப கோத்திரத்து தேவலன் அல்லது அஸிதன் கண்டது. (44-வது கோத்திரத்தைப் பார்க்க.) (தநூநபாத்) 11 ரிக்குக்கள்.

9. மண். 10. சூக். 70. பாத்ர்யச்வ கோத்திரத்து ஸுமித்ரன் கண்டது. (6-வது கோத்திரத்தைப் பார்க்க.) (நராசம்ஸன்.) 11 ரிக்குக்கள்.

10. மண். 10. சூக். 110. ஜாமதக்ந்ய கோத்திரத்து ஜமதக்கினி அல்லது அவன் புத்திரன் ராமன் கண்டது. (2-வது கோத்திரத்தைப் பார்க்க.) (தநூநபாத்.) 11 ரிக்குக்கள்.

ஆப்ரீ ஸூக்தங்களென்றால் சாந்தப்படுத்தும் ஸூக்தங்கள் என்பது பொருளாம். ஆனால் இவை தேவதைகளைச் சமனப்படுத்தும் நோக்கமுள்ளவையல்ல. இதைப்பற்றிய மோட்சமூலர் மதத்தைப் பின்னர்க் கூறுவாம். இச்சூக்தங்கள் பெரும்பாலும் பதினொரு ரிக்குக்களுள்ளவை. ஒவ்வொரு ரிக்கும் ஒவ்வொரு தேவதையைக் குறித்துக் கூறும்.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

| | |
|---|---|
| முதல் ரிக்கு, | அக்கினி இத்மனை அல்லது ஸுஸமித்தனை அதாவது (மூட்டப்பட்ட அக்கினியை)க் குறித்துநிற்கிறது. |
| இரண்டாவது ரிக்கு, | தண்ணீருக்குள் அல்லது மேகங்களுக்குள் மறைந்து நிற்கும் சூரியனாகிய தநூநபாத்தையாவது, அல்லது மனிதர்களாற் புகழப்படும் உதய சூரியனாகிய நராசம்ஸனையாவது குறித்துநிற்கிறது. |
| மூன்றாவது ரிக்கு, | தேவதானங்களான இளா (இளை)க்களைக் குறித்தாவது அல்லது அவற்றைக் கொண்டுவரும்படி பிரார்த்திக்கப்படும் (ஈளிதா) அக்கினியைக் குறித்தாவது நிற்கிறது. |
| நான்காவது ரிக்கு, | யாக தர்ப்பையாகிய பர்ஹியைக் குறித்துநிற்கிறது. |
| ஐந்தாவது ரிக்கு, | விண்ணின் கபாடங்களாகிய தேவீர் துவாரங்களைக் குறித்துநிற்கிறது. |
| ஆறாவது ரிக்கு, | விடியலும் இரவுமாகிய உஷாஸாநக்தங்களைக் குறித்துநிற்கிறது. |
| ஏழாவது ரிக்கு, | இரண்டு தேவர்கள், இரண்டு ஹோதாக்கள், இரண்டு ப்ரசேதஸர்கள், இவர்களைக் குறித்துநிற்கிறது. (இரண்டு தேவர்களென்றது அக்கினியும் ஆதித்யனுமென்றும், இரண்டு ஹோதாக்களென்றது அக்கினியும் வருணனுமென்றும், இரண்டு ப்ரசேதஸர்களென்றது ஆதித்யனும் வருணனுமென்றும், ஷட்குரு சிஷ்யர் சொல்லுவார்.) |
| எட்டாவது ரிக்கு, | ஸ்ரஸ்வதீ, இளா, பாரதி, இம்மூன்று ஸ்திரீ தேவதைகளைக் குறித்துநிற்கிறது. |
| ஒன்பதாவது ரிக்கு, | சிருஷ்டி கர்த்தாவாகிய துவஷ்டாவைக் குறித்துநிற்கிறது. |

## மண்டலம் 1. சூக்தம் 12.

| | |
|---|---|
| பத்தாவது ரிக்கு, | யாகஸாதனமாகிய வனஸ்பதியைக் குறித்துநிற்கிறது. |
| பதினொன்றாவது ரிக்கு, | ஸ்வாஹா க்ருதிகளைக் குறித்துநிற்றது. (இந்த ஸ்வாஹாக்ருதிகள் விச்வ தேவர்கள் என்பார் ஷட் குரு சிஷ்யர்.) |

இப் பத்து ஸூக்தங்களிலும் இரண்டாவதாக அழைக்கப் படும் தேவதையின் பெயராலேயே பேதமேற்படுகிறது. 3, 5, 8, 10, எண்களால் குறிக்கப்பட்ட ஸூக்தங்களில் தநூநபாத் தென்றும், 4, 6, 7, 9, எண்களாற் குறிக்கப்பட்ட ஸூக்தங்களில் நராசம்ஸனென்றும் கூறப்பட்டுள்ளன. 1, 2, எண்களாற் குறிக் கப்பட்ட சூக்தங்களிலோ இவ்விரண்டு நாமதேவதைகளுக்கும் தனித்தனி யொரு ரிக் கேற்பட்டுள்ளது. அதனால் அச்சூக்தங் களுக்கு 12 ரிக்குக்களாயின. 2 எண்ணினால் குறிக்கப்பட்ட சூக்தத்தில் இந்திரனுக்கும் ஒன்றைச்சேர்த்துப் பதின்மூன்றாக ஆக்கியுள்ளார்கள். இச்சூக்தம் முதல் சூக்தமாம்.

நிற்க, மோட்சமூலர், ரிக்வேத ஸம்ஹிதை பலராற் பல விடங்களில் வரன்முறையின்றித் தொடுக்கப்பட்ட தொகை நூலென்று கருதுவது தகுதியல்ல வென்பார். பத்து மண்டலங் களிலும் 8 மண்டலங்களில் அக்கினிக்கு முதற் சூக்தமும் இந் திரனுக்கு இரண்டாவது சூக்தமும், விச்வதேவர்களுக்கு மூன்றாவது சூக்தமும் வந்திருப்பதாலும், ஒவ்வொரு கோத் திரக்காரரும் தமது மண்டலத்தில் இவ் வாப்ரீசூக்தங்களிருக்க வேண்டுமென்று பிரயாசைப்பட்டு அமைத்துக்கொண்டதாகத் தெரிவதாலும், இம்மண்டலத்தைத் தொகுத்தபோது ஒரு மேல் விசாரணைக்கர்த்தாவால் நடத்தப்பட்டதென்பது அறியக் கிடக்கிறதென்பர். பிராஹ்மணங்களிலும் சூத்திரங்களிலும் ஒரு ரிஷியினது ஸூக்தத்தையே ஒருவித யாகத்திற் கூற வேண்டுமெனக் குறிப்பிட்டிருக்கும்போது, வேறொரு ரிஷியி னது அதே கருத்துள்ள சூக்தத்தை அதற்குப் பிரதியாக வுரைத்தல் மகா தவறு. ஆனால் இவ் வாப்ரீசூக்த விஷயத்தில் அந்த நிர்ப்பந்தமில்லை. இவ்விஷயத்தைப்பற்றி ஐதரேய ப்ராஹ் மணத்திற் சொல்லப்படுவதாவது: 'எந்த ரிஷியினது ஆப்ரீக் களை ஆசாரியன் உபயோகிக்கிறானோ அந்த ஆப்ரீ ரிஷியினது பந் துத்துவத்தை யவ்வாசிரியன் யாககர்த்தாவுக்குக் கூட்டிவைக்கி றான்.' என்பது. ஆசுவலாயனர் இதனையே கொஞ்சம் விஸ்தரித் துக் கூறுவர். 'சுநகர்கள், க்ருத்ஸமதனது சூக்தத்தை யுபயோ

கிக்கவேண்டும். வஸிஷ்டர்கள் வஸிஷ்டனது சூக்தத்தையுபயோகிக்கவேண்டும். ஜமதக்நி அல்லது ராமனது ஸூக்தத்தை இச்சுநக வஸிஷ்டர்களைத் தவிர மற்றையோர்கள் உபயோகிக்கலாம். ஆனால் ஒவ்வொரு கோத்திரத்தானும் தனது ரிஷியின் ஆப்ரீ ஸூக்தத்தை யுபயோகிப்பது உசிதமானது.' என்பர். இவ்விருடிகளின் பெயரைச் சௌநகர் ஒரு சுலோகத்தாற் குறிப்பிட்டிருக்கிறார்.

> 'கண்ணுவர், அங்கிரர், காணு மகத்தியர்,
> வண்ணச் சுநகர், வளர்விசு வாமித்ரர்,
> நண்ணிய வத்திரி, நாடும் வசிட்டரோ,
> டொண்ணிய காசிப, ரோங்குப த்ர்யாச்சுவ,
> ரெண்ணுஞ் சமத்க்நி யே.'

(இ-ள்.) முதலுக்குக் கண்ணுவரும், இரண்டாவதற்கு அங்கிரரும், மூன்றாவதற்கு அகஸ்தியரும், நான்காவதற்குச் சுநகரும், ஐந்தாவதற்கு விசுவாமித்திரரும், ஆறாவதற்கு அத்திரியும், ஏழாவதற்கு வஸிஷ்டரும், எட்டாவதற்குக் காசிபரும், ஒன்பதாவதற்குப் பத்ர்யாச்வரும், பத்தாவதற்கு ஜமதக்நியு மாவர்.—(எ-று.)

காணகிரியென்னும் ஓர் பழைய வாசிரியர் எல்லாக் கோத்திரத்தாரும் ஒரே ஆப்ரீ ஸூக்தத்தை யுபயோகிக்கலாமென்று கூறி அதனால் எல்லா ஆசிரியரும் உண்மையில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களே யென்று வாதிப்பர். இதனால் இவ்வாப்ரீ ஸூக்தங்கள் ஒரு குடும்பத்தாருக்கும் மற்றொரு குடும்பத்தாருக்கும் உள்ள வைஷம்யங்களை மாற்ற வந்தனவாம் என்பர் மோட்சமூலர்.

மேலும் இவ் வாப்ரீ ஸூக்தங்கள் சமிதா (யாகப் பசுவைக் கொல்பவன்) யாகபலியைச் செய்வதற்கு முன்பு ஹோதாவினால் உரைக்கப்படும் மந்திரங்களாம். இம் மந்திரங்களைப் பரிசீலித்து நோக்கின் ஒரு சூக்தத்துக் கருத்துக்களேயன்றிப் பதங்களும் மற்றுஞ் சிலவற்றில் ஒரே மாதிரி அமைந்திருப்பதை யறியலாம். மேலும் ஒருவர்க்கொருவர் விரோத புத்தியோடு கூடிய வஸிஷ்ட விசுவாமித்திரர்களது ஆப்ரீ ஸூக்தங்களிலுங்கூட இப் பதவொற்றுமைகளைக் காணலாம்.

நிற்க, இம் மண்டலம் 142-வது சூக்தத் தலைப்பில் ஸாயணரது பாஷ்யத்தில் அச்சூக்தத்துக்குத் தேவதா நிர்த்தாரணஞ் செய்திருக்கும் முறையிது: இத்ம, தநூநபாத் இவை யக்ஞ

அவயவங்களாதலால் யக்ஞமே தேவதையாம் என்பது காத்தாக்யரது மதம். அக்கினியையே ஸமித்து முதலியவற்றாற் சொல்வதால் அக்கினியே தேவதையென்பது சாகபூணாது மதம். நிருக்தத்தில் ப்ரயாஜ அநுயாஜர் சந்த தேவதைகள் யாரென்று வினவி வெகுவித பட்சாந்தரங்களை விவரித்துக் காட்டி அதற்காகப் பிராஹ்மணங்களையும் உதாஹரித்து இதர பட்சங்களை அர்த்தவாதப் படுத்தி அக்கினியே தேவதையென்று ஸித்தாந்தப்படுத்தியுள்ளார். அவரே இவ் வாப்ரீஸூக்தங்கள் மூன்றுவகையென்பர்: 'வாஸிஷ்டர், ஆத்ரேயர், வாத்ரியாச்வர், கார்த்ஸமதர் இவர்களது ஆப்ரீக்கள், நராசம்ஸனைக் குறித்தவையாம். மேதாதிதி தீர்க்கதமஸன் இவர்கள்செய்த ஆப்ரீக்கள் தநூநபாத், நராசம்ஸன் இருவரையும் குறித்தவையாம். மற்றவை தநூநபாத்தையே குறித்தவையாம்.'—நிருக்தம். இச்சூக்தம் இடைவகுப்பைச் சேர்ந்ததால் தநூநபாத் நராசம்ஸன் இருவரையுங் குறித்தது.

## 13. மண்டலம் 1. அநுவாகம் 4. சூக்தம் 2.
## 12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி. வடமொழிச் சந்தம்: காயத்திரி. தேவதை: அக்கினியின் பல ரூபங்களான, 1. ஸுஸமித்தன், 2. தநூநபாத், 3. நராசம்ஸன், 4. இளன், 5. பர்ஹி, 6. தேவீர் துவாரங்கள், 7. உஷாஸாநக்தா, 8. தேவஹோதாக்களிருவர், 9. இளா, 10. துவஷ்டா, 11. வனஸ்பதி, 12. ஸ்வாஹா, என்பவர்களாம்.

1. நற் சமித்த னெனும்பெய ரங்கியே,
   பொற்பி னல்லவியோற் கருள் பொங்கிட
   வற்பிற் றாதுவ, தேவ ரணைத்திட,
   சொற்பெற மகம் பாவக வாற்றவே.

(இ-ள்.) ஸுஸமித்தன் என்னும் பெயரையுடைய அக்கினியே! ஹோதாவே அவிதருவோனுக் கநுக்கிரகிக்குமாறு தேவர்களைக் கொண்டுவருவாயாக. பாவகனே! யாகமுஞ் செய்வாயாக. (அவர்களை நீயும் வணங்குவாயாக).—(எ-று.)

2. தன்னுடலினிற் றேனே யுதித்தவ!
   மன்னு நற்கவி, மாகர்களுக் கின்று
   துன்னு மெக்கிய மொண்சுவை தோய்குவா
   லுன்னி யாற்றுக சாறய ருண்டியின்.

(இ-ள்.) தநூநபாத்தென்னும் பெயரையுடைய வக்கினியே! மேதாவியே, தேவர்களுக்காக வேறபட்டுள்ள இவ்வெக்கியம் இன்று அவர்கள் உண்ணுதற்கு ரஸமுள்ளதாகச் செய்வாயாக.—(எ-று.) தநூநபாத்=தன் சரீரத்திற் றானே தோன்றினவன் என்பது பொருள்.

3. நரர்க ளேத்து நராசம்ஸன், அன்பினேன்,
பருகுசீர் மதுப் பண்புறு தாலுவான்,
பரிவி னெம்மவி பக்குவஞ் செய்பவன்
வருக வென்றிம் மகத்திடை யேத்துவாம்.

(இ-ள்.) நராசம்ஸனென்னும் பெயரையுடையவனும், அன்பிற்குக் காரணனும், தேன்றுளிக்கு நாவனும், எமது அவியைப் பக்குவஞ் செய்பவனுமாகிய (அக்கினியை) இவ் யாகத்தின் கண் வருகவென்று அழைப்பேன்.—(எ-று.)

4. எங்கள் போற்றுற் றிளனெனு மங்கியே!
தங்கு மிச்சுகத் தேரினிற் றேவரை
யிங்குசேர்க்க, இதத்தின் மனுவென்பா
னங்க மாக வமைத்த நற் றாதனீ.

(இ-ள்.) இளன் (இட்) என்னும் பெயரையுடைய அக்கினியே! எங்களால் துதிக்கப்பட்டவனாய், உத்தமமான சுகமமைந்த தேரினில் தேவரையேற்றி யவர்களை இங்கு சேர்ப்பாயாக. மனுவென்பான் அன்போடு அமைத்த (தேவ)ஹோதா நீயே.—(எ-று.)

5. அமல புந்தி யடைந்த நன்மேதைகாள்,
அமுதந் தோன்றிடு மவ்விடந் தக்கதாக்
குமுத நெய்யொடு கூடியவற்றை நீர்
அமையும், வேண்டு மொழுங்கி னடுக்கியே.

(இ-ள்.) ஞானவான்களாகிய இருத்துவிக்குக்களே! மரணத்தன்மையில்லாத (பர்ஹி யென்னும்) அக்கினி காணப்படும் அந்தவிடத்தில், நெய்யோடு கூடிய தருப்பைகளை யடுக்கவேண்டிய முறைப்படி யடுக்கி யமைப்பீர்களாக.—(எ-று.) குமுதம்= தருப்பை, பர்ஹி யென்பதும் அது.

6. இன்று மிப்போ தியற்றிடு மிட்டியி
னின்று மெய்யொழுங் கோங்கு நியமன
மொன்றி மாந்தருக் கோவல வாயில்கள்
நன்றொளியினங்காந்து நலந்தரல்.

(இ-ள்.) ஸத்தியமாகிய ரிதத்தினைக் காக்கும் துவாரங்கள் இன்றும் இப்போது நடக்கும் இஷ்டிகளுக்காகப் புருஷர்களை யுள்விடுவனவாய்த் திவ்விய ஒளியோடும் (தங் கதவுகளைத்) திறந்து நலஞ்செய்யட்டும்.—(எ-று.) ஒவல-கெடாத.

வருக்கம் 24.

7. சொல்லு மிப்புகழ் யாகந் துதைந்திவ
ணல்ல வண்ணம் பரப்பிய நாணவின்
அல்லும் வைக லழகினின் வைகுறப்
புல்லவென்று பொருந்தி யழைப்பமே.

(இ-ள்.) நக்தோஷஸா என்னும் (இரவையும், உஷையையும் குறிக்கும்) பெயரையுடைய அக்கினி, எங்களுடைய (இந்தவேதியிற் பரப்பப்பட்ட) தருப்பையில் சோபன ரூபத்தோடு அமரும் வண்ணம் அழைக்கின்றேன்.—(எ-று.) வைகலும் உம்தொக்கது.

8. தேவ வோதா விருவர் சிறந்தவர்,
மேவு தாலுவின் மேன்மை யதிந்தவர்,
பாவு ஞானியர், பண்பி னிவ்வெக்கிய
மோவுறு தொளிர்ந் தோங்கிடக் கூவுவாம்.

(இ-ள்.) யாகப்பிரசித்தி பெற்ற தேவஹோதாக்களும், அழகான நாக்கோடு (நன்மொழியுள்ளவர் அல்லது அழகிய சுவாலையோடு கூடியவர்) கூடியவரும், கவிகளும், ஆகிய இருவர் இவ்வெக்கியத்தை நாங்கள் நன்கனுஷ்டிக்கும்படி வந்திருக்க வேண்டுமென்று கூவியழைப்போம்.—(எ-று.) இவ்விருவரும் அக்கினியும் ஆதித்தனுமோ, அன்றி அக்கினியும் வருணனுமோ, அன்றி வருணனும் ஆதித்தனுமோ, யாராயிருப்பார்களென்று ஐயமுற்று வினவுவர் மோட்சமூலர் (Max Muller.)

9. இளை ஸாஸ்வதி பாரதி இம்மூவர்
திளையு மின்பச் சுகந்தரு தேவிமார்
தள முறவே பரப்பு தருப்பையில்
வளம் அருகா வகையினின் வைகலே.

(இ-ள்.) இளை, ஸாஸ்வதி, (மஹி) பாரதி என்னும் (வன்னி மூர்த்தங்களாகிய) இம்மூவர் சுகத்துக்குக் காரணரான தேவியர்களும் அட்சயமில்லாதவராய்த் தருப்பையில் அமர்வார்களாக.—(எ-று.) மகியெனினும் பாரதியெனினு மொக்கும்.

10. எதற்கு முன்னுதித் தெவ்வகை ரூபமுங்
கதித்தணைந்து கணக்கில் பலதொழில்
இதத்தி னூற்றுந் துவட்டா வெமக்கென்றே
யுதித்த நற்றுணை யாகவிங் கேத்துவாம்.

(இ-ள்.) சிரேஷ்டனும், விச்வரூபனும், எவ்வகை (யந்திரத்) தொழிலையு மாற்றுபவனுமான துவட்டா (என்னும்நாமம்வகித்த அக்கினி) கேவலம் எமக்கே அதிகமாக அநுக்கிரகம் செய்யட்டும் என்று இவ் யாகசாலையி லழையாநிற்போம்.—(எ-று.) துவட்டா சப்தத்துக்குப் பலவிதத் தொழிலாளிகளினது வேலைகளையும் செய்வதிற் சிறந்தவனென்பது பொருள்.

11. தேவ, தேவர் தமக்கென விவ்வவி,
யாவலோடு வனப்பதி, ஆர்த்தியின்
ஈவு செய்தளி; இவ்வவி தந்தவன்
மேவு ஞான மிளிர்ந்து வளர்கவே.

(இ-ள்.) தேவனே! வனஸ்பதியே! (அவிபுசிக்குந்) தேவர்களுக்கு இவ்வவியைப் பங்கிட்டுத் தருவாயாக. இவ் வவிதரும் யஜமானனுக்கு. (யாக கர்த்தாவுக்குப்) (பரலோக விஷய) ஞானம் (உன்னருளால்) ஓங்கி நிற்கட்டும்.—(எ-று.)

12. அந்தமா யஜமான னகத்தினின்
மந்திரங்கள் சுவாகா வயக்கியே
யிந்திரற்குறித் தீக விவ்வெக்கியம்;
நந்து தேவரை நாடி யழைப்பெனுல்.

(இ-ள்.) யஜமானனது யக்ஞ கிருஹத்தில் ஸ்வாஹா என்னு மீற்றோடு கூடிய மந்திரங்களைச்சொல்லி (ரித்விக்குகள்) இம் மகத்தைச் செய்யட்டும். யான் தேவர்களை ஈண்டழைப்பேன்.—(எ-று.) அக்நயேஸ்வாஹா போன்றவை.

வருக்கம் 25.

## 14. மண்டலம் 1. அநுவாகம் 4. சூக்தம் 3.

## 12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி மேதாதிதி. வடமொழிச் சந்தம்: காயத்திரி. தேவதை: விச்வதேவர்கள். அத்தியயன ஸம்பிரதாயக் கிரமத்தோடு கூடியுள்ள மூலப் பிரதியில் இதனை விரித்தெழுதியுள்ளதாவது: 1-ம், 2-ம், அக்கினி; 3 விச்வதேவர்கள்; 4 முதல் 12 முடிய மீண்டும் அக்கினி, என்பதாம்.

## மண்டலம் 1. சூக்தம் 14.

1. சோமபானஞ் சுவைக்கப் புரிந்திட
ஓோம வக்கினி, யொள்ளிசை நாடியே
யேம தேவ ரெல்லாரொடு மீண்டுறல்;
சேமஞ் சேர்ந்திட நீயும் வணங்குக.

(இ-ள்.) அக்கினியே! எங்களது பண்ணைக்கேட்டுச், சோமபானஞ்செய்யும் யாகத்திற் கூடும் எல்லாத்தேவர்களோடும் நீ வருக; வந்து நீயும் யாககருமஞ் செய்வாயாக.—(எ-று.)

2. கண்ணுவக் குடியோ ருனே, விப்பிர!
எண்ணி, யக்கினி, யாகக் கழைத்தனர்,
ஒண்ணு முன்றொழில் கூட்டி யுரைத்தனர்,
திண்ண மாகநீ தேவரோ டண்மவே.

(இ-ள்.) விப்பிரனே! அக்கினியே! கண்ணுவ வம்சத்தினர் உன்னை யாகத்துக்கு வருமாறழைத்தனர். உனது கருமங்களை யெல்லாஞ் சொல்லுகிறார்கள். தேவரோடு வருவாயாக.—(எ-று.) 'ஒண்ணு முன்னிசை கூட்டி யுரைத்தனர்' என்றும் பாடம். அற்றேல், உனது கீர்த்தனங்களையு முரைக்கின்றார்கள் என்பது பொருள். தியா:, கருமங்கள், இசைகள்.

3. வாயு விந்திரன் மா விருகற்பதி
யாயு மித்திர னக்கினி யாதித்த
னீயுஞ் செல்வப் பக னிரும்பூடனும்
ஏயு மாருத ரீட்ட மிவர்தமை.

(இ-ள்.) இந்திரவாயு விருவரையும், பிரகஸ்பதியையும், மித்திரனையும், அக்கினியையும், ஆதித்யனையும், பகனையும், பூஷனையும், மருத்துக் கணங்களையும்.—(எ-று.) 'அக்கினி! வணங்குவாயாக' என இரண்டுபதங் கூட்டுகவென்பார் சாயணர். 'கண்ணுவர்கள் வணங்கட்டும்' என்பார் மேனாட்டாசிரியர். பிரகஸ்பதி, பிரம்மணஸ்பதி, தேவர்களிடத்து மனிதர்க்காகப் பிரார்த்தனை செய்து பயனைப் பெறுவிப்பவன், தேவபுரோஹிதன், பிராஹ்மணர்களுக்குத் தலைவன். பூஷன் சூரியாபிமானி தேவதை, கன்று காலி பயிர்பச்சைகளை விருத்திசெய்பவன். பகன், செல்வந்தருபவன், அதனாலேயே ஈயுஞ் செல்வப் பகனென்றார். ஆதித்தியர் அதிதியின் மக்கள் பன்னிருவர், அழியாத சோதியர். மருத்துக் கணங்கள், ருத்திரனுக்கும் பிருச்நி (பன்னிறமுள்ள பூமி)க்கும் புத்திரர்கள். புயலுக்கும் காற்றுக்கும் நாதர்கள். மித்திரன், அர்யமான் 1-79-3, பார்க்க.

அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

4. வாகின் வள்ளத் திருக்கு மதுத்துளி
யோகை யோடு மதத்தை யுறுத்துவான்
பாகஞ் செய்தன சோமரச மிவை
தாகந்தீரச் சமைந்த வுமக்கென.

(இ-ள்.) பாத்திரங்களிலுள்ள சோமத்துளிகள் மதத்தை விளைவிக்குந் தன்மையோடும் உங்களுக்காகப் பக்குவஞ் செய்யப் பட்டமைந்தன.—(எ-று.) இந்திராதி தேவர்களே! என்ற சொற்றொடரைத்தலைக்கண் வருவிக்க என்பார் சாயணர்.

5. கண்ணுவர்கள் கடிதுணை வேண்டியே
யெண்ணுற விரிக்குங் குசை கத்தரித்
தொண்ணும் யாவு முஞற்றி யவியொடு
வண்ணமாக வணங்கின ருன்னையே.

(இ-ள்.) காவல்பொருந்திய (தேவராது) துணையை விரும்பியவர்களாய், வேதிமீது பரப்புவதற்கு வேண்டிய தருப்பைகளை நறுக்கிக்கொண்டவர்களாய், அழகாக எல்லாக் கிரியைகளையும் செய்துகொண்டவர்களாய், அவியை யேந்தியவர்களாய், கண்ணுவர்கள் உன்னை (அக்கினியை) வணங்கித் துதித்தார்கள்.—(எ-று.)

6. நெய் யொழுகுவ நீடு மனத்தினு
லெய்யுறு து தொடுக்கு மெழிலின,
ஐய வுன்னுடை வன்னிக டேவரைச்
செய்ய சோமங் குடித்திடச் சேர்க்கவே.

(இ-ள்.) (அக்கினியே!) நெய்யொழுகுவனவும் மனத்தினால் நினைத்தவுடனே (தேரிற்) பூட்டிக்கொள்ளுவனவும், (தேவரைச்சுமந்து வருபவையுமான) உனது வாகனங்கள் (குதிரைகள்) சோமபானஞ்செய்வதற்காகத் தேவரைக்கூட்டிக்கொண்டு வரட்டும்.—(எ-று.) வன்னிகள்-வாகனங்கள் என்பது பொருள்.

வருக்கம் 26.

7. அங்கி, மெய்வளர்ப்பார் துதிக்கானவர்,
துங்க சிக்குவை தோய்ந்தவ, கள்ளினை
யங்க மாக மனைவியர் தம்மொடே
யிங்கருந்த வணங்கி யிசைக்கவே.

(இ-ள்.) நல்ல நாக்கோடு கூடிய அக்கினியே! உண்மையை வளர்ப்பவரும், ஸ்தோத்திர பாத்திரமானவருமான தேவரைப் பத்தினிகளோடு கூடினவர்களாய்ச்செய்க. அவர்களுக்குச் சோமபானத்தை யூட்டுக.—(எ-று.) பாட்டில், துதிக்கான

வர் கள்ளிஜையருந்த அவரை மனைவியரோ டியைக்க, வென் றுள்ளது. இரண்டும் பொருள் ஒன்றுதான்.

8. எவரெவ ரவி யேற்கத் தகுந்தவர்
எவரெவ, ரங்கி, போற்றற்குரியவர்
அவரவ ருன்றன் சிக்குவையான் மது
சுவைபெற 'வஷட்' தோய்ந்ததை யுண்கவே.

(இ-ள்.) எவரெவர் யாகபலிக் குரித்தானவர்களோ, எவ ரெவர் போற்றத் தகுந்தவர்களோ, அவ்வத் தேவர்களெல்லா ரும், அக்கினியே, உனது நாக்கின் துவாரா, 'வஷட்' என்னும் சுற்றோடு கூடிய மறைகளைக்கூறும் இந்த யாகத்தில் மதுவை யுண்ணட்டும்.—(எ-று.) வஷட், அக்கினியில் ஆவுதிபெய்யும் போது சொல்லப்படுமோர் பிரயோகச்சொல்.

9. எல்லி னல்லொளி யேய்ந்த விண்ணின்றுமே
நல்ல விப்பிர ஹோமை நடத்துவோன்
வல்ல தேவ ரெல்லாரையும் வைகறை
யெல்லுற விங்கழைத்துத் தருகவே.

(இ-ள்.) சூரியவொளி பரந்த விண்ணுலகத்தினின்றும், காலையில் விழிக்கவல்ல தேவர்கள் யாவரையும் உஷஸ்காலத்தில், விப்பிரனும் ஹோதாவுமாகிய அக்கினி கொண்டுவரட்டும்.— (எ-று.)

10. வாயு தன்னொடும், மித்திரன் மாட்டுவாய்ந்
தேயு நல்லொளி தம்மொடும், இந்திரன்,
தூய விச்சுவ தேவர் தொகையொடுந்,
தோயு மக்கினி சோமமக்க ளார்கவே.

(இ-ள்.) வாயுவினேடும், மித்திரனது தேஜோ விசேஷ ரூபங்களோடும், இந்திரனேடும், விச்வதேவர்களோடும் (அல் லது எல்லாத்தேவர்களோடும்) கூடிய அக்கினியே! (உனது பாக மாகிய) சோமமதுவைக் குடிப்பாயாக.—(எ-று.) இந்திரனேடு மெனவிரிக்க.

11. அங்கி நீ மனு வாக்கிய தூதனும்;
அங்க மாகவே யாகத் தமர்கிறாய்;
யிங்குதோன்று மிவ் வெக்கியந் தன்னையுந்
துங்க மாக்க வணங்கித் தொடங்குக.

(இ-ள்.) அக்கினியே! நீ மனுவினல் இதமாக வமைக்கப் பட்ட ஹோதா வாவாய். அழகாக யாகந்தோறு மமர்கிறாய். இங்கு நடக்கு மிவ்வெக்கியத்தையும் பரிசுத்தப்படுத்தி யமை வாயாக.—(எ-று.)

12. ஆவலோடுங் கதிமதி யார்ந்தன,
மேவு மாந்தரைக் கொண்டு செலுத்துவ,
தேவ, தேரின் வடவையைப் பூட்டுக;
தேவரை யிங்கழைத்து வருகவே.

(இ-ள்.) நடையிற் சிறந்தனவும், ரதாரூடர்களைக் கொண்டு செல்லுவனவும் ஆனவைகளை (குதிரைகளை)த் தேரிற்பூட்டுவாயாக. தேவர்களை இங்கு சுமந்துகொண்டு வருவாயாக.—(எ-று.) இவ் வடவைகளுக்கு ரோஹிதர்களென்று பெயர், செந்நிறம் வாய்ந்துள்ளதா லென்க. கதிமதி=கதிக்சானமதி.

வருக்கம் 27.

## 15. மண்டலம் 1. அநுவாகம் 4. சூக்தம் 4.

## 12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி. வடமொழிச்சந்தம்: காயத்திரி. தேவதை: முதல் 6 இருக்குக்களுக்கு முறையே இந்திரன், மருத்துக்கள், துவஷ்டா, அக்கினி, இந்திரன், மித்திராவருணர், இவர்களாம்; அடுத்த 4 இருக்குக்களுக்கு செல்வகாரணனை அக்கினி; 11-க்கு அசுவினிகளிருவர்; 12—க்கு மீண்டும் அக்கினி.

இவர்கள் ஒவ்வொருவரோடும் இருதுவையுங் கூட்டுக. இவ்விருதுக்கள் (இரண்டு மாத) காலாபிமானி தேவதைகள்.

1. இருதுவோ டியைந் திந்திர சோமத்தைப்
பருகுக; நிறை வுள்ள மளிப்பன,
சருவதா வுன் அகட்டி லுறுவன,
பருகு மிந்துக்கள் பண்பி னுழைகவே.

(இ-ள்.) இருதுவினோடியைந்து, இந்திரனே, சோமத்தைப் பருகுவாயாக: திருப்தியைத் தருவனவும், என்றும் உன்வயிற்றில் தங்குவனவுமான இந்துக்கள் (சோமத்துளிகள்) உனக்குள் நுழையட்டும்.—(எ-று.) சருவதா-ஸர்வதா, எப்பொழுதும்.

2. மருதரே நீர் மருவு மிருதுவோ
டரித்திற் போத னமைக்குங் கலங்கொடே
பருக; வெம்மகந் தூய்மைப் படுத்துக;
உரைதருவ ரித்தன்மையை, வண்மையீர்.

(இ-ள்.) மருத்துக்களே! இருதுவோடுகூடப் போதனது பாத்திரத்திலிருந்தே (சோமத்தைப்) பருகுவீராக; எமது எக்கியத்தைப் பரிசுத்தப்படுத்துக. சோபன தானத்தோடு கூடியவர்களே, உமது இப் பரிசுத்தப்படுத்துந்தன்மை உலகப்

## மண்டலம் 1. சூக்தம் 15.

பிரசித்தம்.—(எ-று.) போதன், பரிசுத்தஞ்செய்பவன்: மருத்துக்களுக்கென்று சோமத்தையூற்றி யாவுதி செய்பவன்.

3. அரதநங்க ளழகி னளித்திடும்
வரத னாதலின் மன்னு மனைவியோ
டிரத மார்க்க விருதுவைக் கூட்டியே
சரத நேட்டா தரிக்க விவ் யாகமே.

(இ-ள்.) மனைவியோடு கூடிய நேஷ்டாவாகிய துவஷ்டாவே! நீ இரத்தினங்க ளளிப்பவனாதலாற், சோமத்தை இருதுவோடு குடிப்பாயாக.—(எ-று.) நேஷ்டாவும் துவஷ்டாவும் ஒருபொருளன. துவட்டாவின் பொருளை மண். 1. சூக். 13. ரிக். 10—னுரையிற் காண்க.

4. அங்கி யிவ்விடந் தேவ ரணைத்திடாய்;
அங்க மாக வமை மூவிடத்தினுந்
தங்கு மாறு தயக்கி யிருதுவோ
டிங் கவரை யலங்கரித் தார்கவே.

(இ-ள்.) அக்கினியே! இந்த யாகதலத்துக்குத் தேவரைக் கூட்டிக்கொண்டு வருவாயாக. மூன்று சவனங்களிலு மவர்களுக்கேற்பட்டவிடங்களி லவர்களை யமைப்பாயாக. அவர்களை யலங்கரிப்பாயாக. சோமத்தை இருதுவினோடு குடிப்பாயாக.-(எ-று.)

5. பனவன் பொற்கலச் சோமம் பருகுக
வினவிருது குடித்ததன் பின்னரே;
யினிதி னிந்திர நின்னிருந் தோழமை
துனிதராத குணத்திற் றுதைந்ததே.

(இ-ள்.) பிராஹ்மணனது தனகாரணமான பாத்திரத்திலிருந்து சோமத்தை இருதுக்கள் குடித்த பின்பு, இந்திரனே! நீயுங்குடிப்பாயாக; உன்தோழமை பிரியக்கூடியதல்ல.-(எ-று.)

6. விரதங் கைக்கொளு மித்ர வருணர்காள்!
சரத மாக வளர்ந் தெப்பகைவருங்
கருதி வாட்ட வியையாக் கடிமகத்
திருதுவோடு மியைந்தீ ரிருவிரே.

(இ-ள்.) விரதத்தை மேற்கொண்டவர்களாகிய மித்திரா வருணர்களே! விருத்தியாவதும் பகைவரால் நாசஞ்செய்ய முடியாததுமான இவ்வெக்கியத்தினிடத்து இருதுவோடு நீங்களிருவரும் வந்து சேர்ந்தீர்கள்.—(எ-று.)

வருக்கம் 28.

7. நல்வகையினிற் சோம நசுக்கிடக்
கல்லினைக் கரத் தேந்தியோர் யாகத்தே
செல்வம் வேண்டி, யச் செல்வந்தரு மெரிக்
கெல்பெறுந் துதி யோமத் தெடுப்பரே.

(இ-ள்.) ஸோமலதையை நசுக்குங் கற்களைக் கைகளிலேந்திய இருத்துவிக்குக்கள் செல்வ ஆஸக்தியுள்ளவராய்ச் செல்வத்தைத் தரும் அக்கினிதேவனை அக்கினிட்டோமாதி யாகங்களிற் றுதிப்பார்கள்.—(எ-று.) ஆதியென்றதனால் சோமயாகமாகிய உக்தியத்தையுங் கொள்ளுக.—சாயணர்.

8. ஆக்க மீபவ னுக்கும் புகழ் வளர்ந்
தோக்க மெய்தும் வசு வெமக்கீகவே ;
ஊக்கி யாங்க ளொளிபெறு தேவர்நின்
றுக்குவோ மித்தகைமைய செல்வமே.

(இ-ள்.) செல்வந் தருபவனாகிய அக்கினி, கீர்த்தி பெருகுகின்ற செல்வத்தை யெமக்குத் தரட்டும். யாங்கள் தேவர்களிடத்திலிருந்து இத்தகைய செல்வத்தையே பெறுகிறோம்.—(எ-று.) 7, 8 ரிக்குக்களில் இருதுக்கள் சொல்லப்படாமையின் அவை பின்னர் கூட்டப்பட்டவையோ என்று ஐயுற இடமுண்டு. ஆக்க மீபவன், திராவிணோதா, அக்கினிக்கோர் பெயர்.

9. நிதிதருபவ னோர்ந் திருதுக்களோ
டதியுவப்பி னணைந்து துவட்டாவின்
றதியுறுங் கலஞ் சார்ந்து குடிப்பனால் ;
கதியொடு மவி தந்தபிற் செல்கவே.

(இ-ள்.) திராவிணோதா (செல்வந்தருபவன்) ஆகிய அக்கினிதேவன் இருதுக்களோடு நேட்டா (துவட்டா) வினது பாத்திரத்திலிருந்து குடிக்க விரும்புகிறான். ஓமத்தலத்துக்கு வந்து ஓமஞ்செய்த பின்னர்ச் செல்லுங்கள்.—(எ.று.)

10. செல்வ மீபவ! சீரி னிருதுக்கள்
மல்க வுன்னை மதித்துத் துரீயமாய்ப்
பல்துதியாற் பரவு மெமக்கு, நீ
நல்வளந்தரு நாயக னுகுக.

(இ-ள்.) செல்வந்தரு மக்கினி தேவனே ! இருதுக்கள் வளம் பெற உன்னை நான்காமுறை பூரணமாக வணங்கினோம். அதனால் எங்களுக்கு நீ கட்டாயமாய்ப் பொருள்கொடுப்பவனுகுக.—(எ-று.) துரீயம்=சதுர்ணம் பூரணம். இந்திரன், மருத்துக்கள், துவட்டா, அக்கினி, என நான்காவதாக வைக்கப்பட்டிருந்த

லால் 'நான்காவனுக உன்னைத் துதிக்கு மெமக்கு' என்றும் பொருள் கொள்ளலாம் என்பர் (Ludwig) லுட்விக்கென்பவர்.

11. தூய செய்கை துதைந்த விரதரே !
பாடெரி யொளி ரச்சினி தேவர்காள் !
ஏயு மெக்கிய மேற்பீ ரிருதுவோ
டேயு மிம்மது வேன்று பருகவே.

(இ-ள்.) சுசியான விரதமுடையவர்களே ! பிரகாசம் பொருந்திய அக்கினியோடு கூடிய அச்வினி தேவர்களே ! இவ் வெக்கியத்தை நிர்வகிப்பவர்களே! இருதுக்களோடு மதுரமான சோமத்தைப் பருகுங்கள்.—(எ-று.) அச்சினி, அசுவினி.

12. இல்லி னேங்கிடு தீயி னிருதுவி
னல்ல வெக்கிய நாடி வளர்க்கிறாய் !
சொல்லும் பத்தி துதைந்தவற், கைகையோய்,
மல்லற் றேவரைப் போற்றி வணங்கவே.

(இ-ள்.) தாதாவாகிய (அக்கினியே!)நீ காருஹபத்திய அக்கினியாய் இருதுவோடு யக்ஞத்தை நிர்வஹிக்கிறாய். அதனால் தேவகாரியப்பிரியனை யஜமானனுக்காகத் தேவர்களை வணங்குவாயாக. (எ-று.) இருதுவின், இருதுவினேடு என்றபடி.

வருக்கம் 29.

## 16. மண்டலம் 1. அநுவாகம் 4. சூக்தம் 5.
## 9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : கைவ மேதாதிதி.
வடமொழிச் சந்தம் : காயத்திரி.
தேவதை : இந்திரன்.

1. இச்சை தோய்த்திடு மிந்திர சோமத்தை
நச்சி நீகுடித் தாநந்த நண்ணுமா
றச்சுவங்க ளுனையிங் கணைக்கவே ;
யெச்சமில் லொளிக் கண்ணின ரேத்தவே.

(இ-ள்.) இச்சைகளையளிக்கு மிந்திரனே ! சோமபானுர்த்தம் உனது குதிரைகள் உன்னை யிங்கே சுமந்து கொண்டுவரட்டும். குறைவில்லாத ஒளியாகிய (சூரியனைப்போன்ற) கண்ணினை யுடைய இருத்துவிக்குக்கள் (உன்னைத் துதிக்கட்டும்)—(எ-று.) ஏத்தவே என்ற பதம் வடமொழி மூலத்திலில்லை, சாயணருரையிற் கண்டது.

2. நெய்யுறையும் பொரி யிவணேர்ந்தன,
வைய மீச்சுகம் வாய்ந்ததி னேற்றியே
பைய விந்திரன் றன்னைப் பரியிரண்
டைய கூட்டி யழகி னமைக்கவே.

(இ-ள்.) நெய் கலந்த பொரி யிங்கே யுள்ளவற்றை யுத்தே சித்துச் சுகதமமான தேரில் (இந்திரனது) குதிரைகளிரண்டும் அவனை யேற்றி (வேதிக்குச் சமீபத்தில்) கொண்டுவந்து விடட்டும்.—(எ-று.) பாட்டில் முதலடி தனியே பொருண்முடிவோடு கூடியுள்ளது போலுளது; நேர்ந்தனவற்றை என்க.

3. இந்திரன்றனை யெல்லுறும் வைகலின்,
இந்திரன்றனை யாக நடக்கையில்,
இந்திரன்றனைச் சோமங் குடிக்கென
வந்தமாக வழைப்ப மியாங்களே.

(இ-ள்.) இந்திரனைப் பிராதஸ் ஸவனகாலத்திலும், இந்திரனை ஸவனமத்தியிலும் (அல்லது மாத்தியான்ன ஸவனத்திலும்); (ஸவன முடிவிலும்) அல்லது ஸாயங்கால ஸவனத்திலுங் கூட, (அதாவது ஸவனத்திரயத்திலும்) இந்திரனைச் சோமங் குடிப்பதற்காக வழைப்போம்.—(எ-று.) () இக்குறியிட்டகோடுகளுக்குளிருப்பன மூலத்திலில்லாமல் வியாக்யான கர்த்தாக்களால் விரிக்கப்பட்டுள்ளவற்றை எடுத்தெழுதியவை யாகும். இந்நூல் முழுமையும் இதுவே நடப்பு.

4. உளைநெடும்பரி யூர்ந்திவ ணிந்திர
களிதருஞ் சுதை காண வருகவே;
துளிதரு மது தோய்ந்த பொழுதுனை
விளிதருங் குரலோடும் விளிப்பமே.

(இ-ள்.) நெட்டுளைகளோடுகூடிய குதிரைகளின் மேலேறி, இந்திரனே, சோமத்திற்கருகில் வருவாயாக. ஸோமாபிஷவ காலத்தே யுன்னை (உரக்க) வழைப்போம்.—(எ-று.) அபிஷவம், நசுக்கிப்பிழிதல்.

5. புகழியம்பிப் புரிந்திடும் யாகத்தி
னகனமர்ந்து வந் தாதரித் தாளுக;
மிகவும் வேட்கை மிகுத்த கவுரமா
விகல, நற்சுதை யெண்ணிக் குடிக்கவே.

(இ-ள்.) (இந்திரனே!) உனது புகழ்த்துதிகளைக் கூறிப் புரிகின்ற இச் சோமங்கூடிய ஸவனத்தினிடத்து வருக: நீர்வேட்கை மிகுந்த கௌர மிருகத்தைப்போலச் சோமத்தைக் குடிப்பா

யாக.—(எ-று.) கௌரமிருகம்=மான்; ஒருவகை யெருமை (Bos Gaurus) யென்பார் மேனாட்டாசிரியர்.

வருக்கம் 30.

6. இங்கு நீள வியைத்த தருப்பையிற்
பொங்கு வள்ளம் பொருந்து சோமச்சுதை
யங்க மாக வணைந்தன, இந்திர
மங்குறு வலி வாய்ந்திட மாந்தவே.

(இ-ள்.) இங்கு விரிக்கப்பட்ட தருப்பையின்மேற் சோமத் துளிகள் பாத்திரங்களி லமைந்துள்ளன; இந்திரனே? பலம் பொருந்துமாறு அவற்றைக் குடிப்பாயாக.—(எ—று.)

7. இவண் டலைமை யியைந்த வித்தோமமுஞ்
சுவையி னுன் னிதயந்தனைத் தோய்ந்து சீர்
எவையினும் மிகவேய்ந் துனைத்தோய்ந்தபிற்
சுவையிற் சோமச் சுதையினை மாந்தவே.

(இ-ள்.) (இந்திரனே!) இங்கு யாங்களுரைக்குந் துதிகள் தலைமையெய்தி உன்மனத்துக் கங்கீகாரமாய் உத்தம ஸுகத் தைத் தரட்டும். அதற்குப்பின், பிழியப்பட்ட சோமத்தைப் பருகுவாயாக.—(எ-று.)

8. சவனஞ் செய்த சுதைத்துளி யாவையுங்
கவனமாகக் குடித்துக் களித்திட,
உவமையில் வலியோங்கு விருத்திரன்
றுவள வீட்டிடு மிந்திரன் றேய்வனே.

(இ-ள்.) விருத்திரவதஞ்செய்யு மிந்திரன், சோமங்குடிப்ப தற்காகவும், சோமம் பிழியும் ஸவனத்தில் எல்லாத் துளிகளேயுங் குடித்து மதமடைவதற்காகவும் வருகிறான்.—(எ-று.) சவனம், ஸவநம், யாகப்பொது.

9. ஆவு மாவு மணைத்தெ மவாவெலா
மேவுமாறு விளைத்துத் திருப்திசெய்;
பாவு நன்மனப் பத்தியினோ டுனைக்
கூவு நின்சீர் சதமக கூறுவாம்.

(இ-ள்.) பசுக்களையுங் குதிரைகளையுந் தந்து, எமது ஆசை யெல்லாம் நிறைவேறுமாறு செய்வாயாக. சதக்கிருதுவே! உன்னை யாங்கள் எப்போதும் அத்தியயனபரராய்த் துதிப் போம்.—(எ-று.)

வருக்கம் 31.

அஷ்டகம் 1. அத்தியாயம் 1.

## 17. மண்டலம் 1. அநுவாகம் 4. சூக்தம் 6.

### 9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி.

வடமொழிச்சந்தம்: காயத்திரி.

தேவதை: இந்திராவருண ரிருவரும்.

1. வருண னிந்திரர் வான்பெறு சோதியோர்
கருணையோடு மளித்திடப் போற்றுவேன்;
இருவரும் மெமைச்சார்ந்து புரந்துபிற்
பெருகு மின்பத்தை யூட்டிப் பிறங்கவே.

(இ-ள்.) மிக்க சோதியுள்ள இந்திராவருணர்கள் எம்மைக் காக்கவென்று துதிப்பேன்: அவர்களிருவரும் எங்களைக்காத்துப் பின் எங்களுக்குச் சுகந் தருவார்களாக.—(எ-று.) வான் பெறு மன்னர்களென்பதும் பாடம். இந்திரா வருணர்களிணைத் தெய்வங்கள். இதுபோலவே, அக்கினிசோமர், இந்திரவாயுக்கள், இந்திராக்கினிகள், இந்திர பிரஹஸ்பதி, இந்திரசோமர், மித்திராவருணர், இந்திரபூஷர்கள், இந்திர விஷ்ணுக்கள், தியாவாப்பிருதுவிகள், சோமருத்திரர்கள், எனவரும்.

2. போற்று மாந்தர்ப் புரக்கு மிருவரும்
போற்று வோர்தங் குறிப்பிற் புரந்திடச்
சாற்று மென்னைத் துரைத்திடும் விப்பிர
னேற் றழைத்த வுடனெதிர் தோன்றுவீர்.

(இ-ள்.) மனிதர்களது யோகக்ஷேமங்களைத் தாங்குபவர்களே! ஸ்தோத்திரஞ் செய்வோரைக் காக்குமாறு என்னைத்த விப்பிரன் கூவவும் வருவீர்.—(எ-று.)

3. இந்திரா வருணரே னிருவர்காள்!
அந்தமாக வெம்மாசைக் குரியபொன்
றந்தெமை மனப்பூரணத்தே யமைத்
தெந்தம் நல்லரு கேய விரப்பமே.

(இ-ள்.) இந்திரா வருணரென்னு மிருவர்களே! எம் ஆசைக்கேன்ற பொன்னை யளித்து எப்போதும் எம்மருகிலேயே யிருக்கும்படி பிரார்த்திப்போம்.—(எ-று.)

4. (அ) யாமியற்றிடுஞ் சோமம் பலபொருள்
தோமறச் சிறந் தோங்குத றாக்கவே,
வாமம் பல்வகைத் தோன்றுஞ் சுமதியோர்
தோமமும்; உம் அனக்கொடை தோய்க யாம்,

மண்டலம் 1. சூக்தம் 17.

(இ-ள்.) எங்கள் கருமங்களில் உபயோகப்படுஞ் சோம மானது (தயிர், தண்ணீர் முதலிய) பலவகைப் பொருள்களா லானதுபோல, நல்ல புத்திமான்களான ரித்விக்குக்களின் ஸ்தோத்திரமும் பலவிதமாயிருக்கும். அதனால் (இந்திரா வருணர்களே !) எங்களது அவிப்பாகத்தை ஸ்வீகரிக்கும் உமது பிரஸாதத்தினால் நாங்கள் அன்னப்பிரதர்களா யுள்ள புருஷர் களுக்கு மத்தியில் முக்கியர்களா யிருக்கட்டும்.—(எ-று.)

இச்செய்யுள் சாயண ருரைப்படி கண்டது. சுமதியோர் தோமமும் பல்வகை வாமமொடு தோன்றும் என்க.

(ஆ) வரையிலாது வலியளிக்கும் மும
துரைபெறும் வலி தன்னிலும், உம்முடைப்
புரையி றன்மம் பொருந்து குணத்திலுந்,
தரையிற் பங்கு தரித்தன மாகுக.

(இ-ள்.) பிறர்க்குப் பலந்தரும் உமது பலத்திலுந் தர்ம குணத்திலும் யாங்கள் பங்குபெறட்டும்—(எ-று.) இது மேனாட் டாசிரியர் உரைப்படி கண்டது. வாஜம் அன்னமென்பார் சாயணர், மொய்ம்பென்பார் மற்றவர். அதுபோலவே சச்சீ சோமமென்றார் அவர், உரமென்றார் இவர்.

5. ஆயிரக் கணக்காக வளித்திடுந்
தூய வீகையர் நாப்பட் கிருதுவா
யேய விந்திரன் ; எண்ணில் புகழ்பெறல்
மேய நற்றுதியோர்க்கண் வருணனே.

(இ-ள்.) இந்திரன் ஆயிரக் கணக்காகத் தானஞ்செய்வோ ரின் மத்தியில் (உத்தமமான) கர்மமுள்ளவனா யிருக்கட்டும் ; வருணன் ஸ்துதிசெய்வோரது நடுவில் நல்ல கீர்த்தியை யடை யட்டும்.—(எ-று.)

வருக்கம் 32.

6. அன்னவர் பரிபாலனத் தியாங்களு
முன்னதப்பொருள் பெற்றுக் குவிப்பமால் ;
பொன்னு மெங்கட்குப் போதிய வுண்டயிற்
பன்னு சேம நிதிக்கும் பரவவே.

(இ-ள்.) அவ் விந்திரா வருணர்களது காவலில் யாங்கள் வேண்டிய பொருளைப்பெற்றுச் சேர்த்துவைப்போமாக, நாங் கள் அனுபவித்தது போக மிகுதியாகச் சேமநிதிக்கும் பொன் விஸ்தாரமாக உண்டாகட்டும்.—(எ-று.)

7. இந்திரனோடியைந்த வருணனே!
சுந்தரப் பல் விதப்பொருடோய்குவா
னந்தமாக வுமையழைப்பேனெமைச்
சந்ததமுஞ் சயம்பெறச் செய்கவே.

(இ-ள்.) இந்திரா வருணர்களே! (மணிமுத்தாதி பேதத்தோடு கூடிய) பலவிதப் பொருள்களையும் யாங்களடையும் வண்ணம் உம்மை யானழைப்பேன். எப்போதும் யாங்களே (யுத்தத்திற்) சயம்பெறுமாறு செய்க.—(எ-று.)

8. துங்க விந்திரற் றோய்ந்த வருணனே!
யெங்கள் பக்கலினேய்கென வுங்களை
யங்க மாக வழைக்குங் கவிகள்கேட்
டிங்கெமக் கிறையிற் சுக மீயவே.

(இ-ள்.) இந்திரா வருணர்களே! எங்கள் பக்கத்திலேயே யிருங்களென உங்களைச் சேவித்துநிற்குமெங்களுக்கு உடனே ஸுகத்தை யளிப்பீர்களாக.—(எ-று.)

9. பெற்று நீங்கள் பிறக்குறுஞ் சீர்மிகு
நற்றுதி மொழி நானுமக் காற்றினன்;
உற்ற வும்மிடத் திந்த்ர வருணரே
யுற்றடைந் துமை யெய்துக வின்றுமே.

(இ-ள்.) நீங்கள் பெற்றுப் பெருமைப்படுத்துகின்ற சிறப்புமிகுந்த துதிகளை யானுங்களுக்காகச் செய்தேன். இந்திரா வருணர்களே! அவைகள் முழுவதும் உம்மிடத்தில் வியாபித்து நிற்கட்டும்.—(எ-று.)

வருக்கம் 33.

## 18. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 1.
## 9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி. வடமொழிச்சந்தம்; காயத்திரி. தேவதை: 1-3 பிரஹ்மணஸ்பதி; 4. இந்திரன், சோமன், பிரஹ்மணஸ்பதி; 5 இவர்களோடு கூடிய தட்சிணை, 6-9. ஸதஸஸ்பதி. கடைசிக்கு நராசம்ஸனுமாம்.

1. அந்தணர்த மரும்பதி சோமத்தை
நந்தும் வண்ணம் பிழிந்திடு நங்களை
அந்த வௌசிஜன் கட்சிவா னென்னவே
சுந்தரப்புகழ் தோய்ந்தவ ராக்கவே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதி யென்னுந் தேவனே! ஸோமாபிஷவஞ் செய்யும் யாங்கள் உசிஜபுத்திரனை கட்சீவானைப்

போலக் கீர்த்தியடையுமாறு செய்க.—(எ-று.) கட்சீவான் பஜ்ரகோத்திரத்தான்; உசிஜபுத்திரன்; பின்னர் மண். 1. சூக்தம் 116 முதல் 126 வரையிலுமுள்ள மறைகளைக் கண்டவன். இவ்வுசிஜை பெண்பாலென்றும், அங்கராஜன் மனைவியின் தாசியென்றும், அவளுக்கும் (உச்சத்தியனுக்கும் மமதைக்கும் பிள்ளையாகிய) தீர்க்கதமஸனுக்கும் தோன்றல் கட்சீவானென்றும், தெரிகிறது. தீர்க்கச்ரவஸ் என்பவனையும் பெற்றவள் இவளே. அந்த, பண்டறி சுட்டு.

2. எவன் றனந்தரு செல்வவான், நோயினை
யெவன் பரிகரித் தீபவன் புஷ்டியை,
யெவன் விரைவிற் பலனை யியைப்பவன்,
அவன் நமையடைந் தின்னு மருள்கவே.

(இ-ள்.) தனத்தைத் தருஞ் செல்வவானும், நோயைப்பரிகரிப்பவனும், புஷ்டியை வளர்ப்பவனும், சீக்கிரத்திற் பலன்றருபவனுமாகிய பிரஹ்மணஸ்பதி இன்னும் நம்மாட்டுறைந்து அருள் செய்யட்டும்.—(எ-று.) ‘எவனிடத்து விரைவு பிரியைந்ததாம்’ என்பது மூலத்துக்கொத்த 3-ம் அடி; பொருளொன்றே.

3. பற்றலர்தம் பழிமொழிச் சாபமும்,
மற் றுலகின் மரிப்பா ரெதிர்ப்பும், எம்
உற்றடையா தொழிற்றுக; அந்தணர்க்
குற்ற நற்பதி காக்க வுவந்தெமை.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! பகைவரது பழிச்சொற்களும், சாபமும், மரணதர்ம முடையவரது பகையும் எம்மையடையாது செய்க. எம்மைக் காப்பாற்றுவாயாக.—(எ-று.)

4. யாருக் கிந்திர னந்தணர் தம்பதி
சீரிற் சோமன் சிறந்த இம்மூவரு
மேரிற் றம்மரு ளூட்டி யியைக்கிறார்
பாரிற் கேடு படாதவ் வீரற்கே.

(இ-ள்.) இந்திரனும், பிரஹ்மணஸ்பதியும், சோமனும், எவனுக் கருள்செய்கிறார்களோ அவனே வீரியம் வாய்ந்தவன்; அவனுக்கு நாசமேயில்லை.—(எ-று.) சோமன்=சோமாபிமானி தேவதை.

5. அந்தணர் பதி நீயும் வலாரியுந்
தந்த தக்கிணை தானு நற்சோமனு
மந்த மெய்து மம்மானவன் றன்னையே
பந்த மூட்டிடும் பாவநின் றோம்பவே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியும், இந்திரனும், ஸோமனும், தட்சிணையும், மரணதர்மமுள்ள (அநுட்டாதாவாகிய) அம்மனிதனைப் பாவங்களடையாதபடி காக்க.—(எ-று.) தட்சிணை, பிராஹ்மணர்களுக்குத் தரு நன்கொடை; ஈண்டு அதனைப் பெண் தேவதையாக உருவகப்படுத்தினர்.

வருக்கம் 34.

6. அவைத னற்புத நாயகன், இந்திரன்
சுவை பொருந்திய தோழன் றனத்தினை
நவையி லின்பொடு நல்குவோன் மாட்டியான்
தவ நெருங்கினேன் சார்ந்த துதியொடே.

(இ-ள்.) இந்திரனுடைய நற்றோழனை ஸதஸஸ்பதியை (அக்கினியை), செல்வ மளிப்பவனை, யான் அடுத்து நின்றேன்.—(எ-று.) இருவருஞ் சேர்ந்து சோமங் குடிப்பதாற் றோழனென்றார். ஸநிம் என்பதற்கு அறிவினை நல்குவோன் எனப்பொருள் கொள்ளுவார் மேனாட்டாசிரியர். ஸதஸஸ்பதி, ஸபைக்கு நாயகன்.

7. பாவு தூய மதிபரந் தோனுக்கும்
யாவ னின்றி யொழுங்கி னெவ்யாகமு
மோவலின்றி நடைபெறு தன்னவன்
றுவு யோகந் தருகுவன் ஞானத்தே.

(இ-ள்.) கார்ய விவேசன ஞானம் மிகுந்தவனுக்கும் ஒழுங்காகக் காரியஞ்செய்வதற் கருள் செய்யும் அந்த ஸதஸஸ்பதி (அநுஷ்டான) ஞானத்தோடு கூடிய யோகத்தை யளித்து (யாகஞ் செய்விப்பான்).—(எ-று.)

8. அவிசொரியு மவனை வளர்ப்பனுற்
சவிபெறு மக முற்றுறச் சார்த்துவான்;
சுவையிற் றேவரைப் போற்றிடுந் தோத்திரம்
நவை யுறு து நணுகு மவர்முனே.

(இ-ள்.) அவிதரும் யஜமானனை (ஸதஸஸ்பதி) வளர்ப்பான்; நல்ல வண்ணம் யாகம் முற்றுப் பெறுமாறு செய்வான்; தேவரை நோக்கும் ஸ்தோத்திரங்களும் அத்தேவரை யடைந்து நிற்கும்.—(எ-று.)

9. திட மிகுத்தவன் சீர்மிகுத்துப் பரந்
திடமகன் றொளிர்ந்தோ னரசம்ஸனைப்
படிவம் வானெனப் பல்கிய தேசொடும்
அடர் மகம்புரி யாசா னெனக் கண்டேன்.

மண்டலம் 1. சூக்தம் 19.

(இ-ள்.) திடமிருந்தவனும், மிகவும் வியாபித்துள்ளவனுமாகிய நராசம்ஸனை (அக்கினியை) விண்போன்ற தேஜஸோடு கூடிய ஆசாரியனாக விருக்கப்பார்த்தேன்.—(எ-று.) நராசம்ஸன். (மண். 1. சூ. 13. ரிக். 6. பார்க்க.)

வருக்கம் 35.

## 19. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 2.
## 9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி.

வடமொழிச் சந்தம்: காயத்திரி.

தேவதை: அக்கினியும் மருத்துக்களும்.

1. அழகி றாற்று மகத்தை யணைந்து, பா
லொழுகு பான முவந்திட, அக்கினி,
விழைவு பெற்றாய், மருத்துவர் தம்மொடும்
பழகிக் கூட்டி யவரொடும் பாவவே.

(இ-ள்.) அழகாக வாற்றப்பெறும் இம் மகத்தின்கண் சோமங்குடிக்க வருவாயாகவென்று, அக்கினியே, அழைக்கப்பட்டாய். மருத்துவர்களைக் கூட்டிக்கொண்டு வருவாயாக.—(எ-று.)

2. தேவராயினு மக்களே யாயினும்
யாவ ராயினு முன்றன் சவனத்தைக்
கேவலப் படுத் தோங்கு கிற்பா ரலர்;
நீவருக மருதரொடு மகான்.

(இ-ள்.) உனது ஸவனத்தை உல்லங்கனஞ்செய்யுந் தேவரும், மனிதரும், உத்கிருஷ்டர்களாவதில்லை. அதனால் மகானாகிய அக்கினியே, மருத்துக்களோடு நீ வருவாயாக.—(எ-று.)

3. கேடுசூ ழுளங் கிஞ்சித்து மெய்துறுப்
பீடிற் பேரிரஜத்தல மோர்ந்தவர்
நாடு மெல்லா மருத்துவத் தேவரோ
டீடி லங்கி யணைந்துற விங்ஙனே.

(இ-ள்.) கொஞ்சமுந் துரோகசிந்தை யில்லாதவரும், ரஜஸை (மழை பெய்யக்கூடிய அந்தர விடங்களை) நன்கறிந்தவரும், ஒளிபொருந்தியவருமாகிய எல்லா மருத்துவர்களோடும், அக்கினியே, இங்கு வருக.—(எ-று.) எல்லாவென்றது மருத்துவரெழுவரானமைபற்றி. தேவர்=ஒளி பொருந்தியவர். ரஜம், திவோரஜம் பார்த்திபரஜம் என இருவகைப்படும். பூமியையடுத்துள்ள அந்தரவிடத்துக்குப் பார்த்திப ரஜமென்றும்

விண்ணை யடுத்துள்ள அந்தரவிடத்துக்குத் திவோராஜமென்றும் பெயர். ஆங்கிலத்தில் (Atmosphere) என்பது இது.

4. உக்கிரத்த ருவங் துதகத்தினுற்
றக்கவா றருச்சிக்கப் படுபவர்
மிக்க தம்மை மிகுவலியிற் பிற
ரொக்கலாத மருதரொ டேய்க, தீ.

(இ-ள்.) உக்கிரமுள்ளவரும், தண்ணீரினுல் அருச்சிக்கப் படுபவரும், (மழையினுற் சம்பாதிக்கப்படுபவரும்) திரஸ்காரஞ் செய்ய முடியாத வலிமையுடையவருமான மருத்துக்களோடு, அக்கினியே, வருவாயாக.—(எ-று.)

5. ஒண்மையர் தம தோங்குமெய் கோரமாந்
திண்மை வாய்ந்தவர் செம்பொரு டோய்ந்தவ
ரெண்ணலரை யெடுத்து விழுங்குவோர்
நண்ணு மாருதரோ டெரி நண்ணவே.

(இ-ள்.) சுப்பிரமான காந்தியுள்ளவரும், கோரரூபமுடைய வரும், மங்கலப் பொருளுடையவரும், பகைவரையெடுத்து விழுங்குபவருமான மருத்துக்களோடு, அக்கினியே, வருவாயாக.—(எ-று.) சுப்பிரம், வெளுப்பு.

வருக்கம் 36.

6. வட்ட வான்றலே வாய்ந்த பரிதிமீ
திட்ட மாகவே தேவ ரெனவமர்ந்
தட்டகாச மடுக்கு மருத்துவ
ரொட்டி யங்கி யுவப்பின் வருகவே.

(இ-ள்.) சூரியனுக்குமேல் விண்ணுலகத்தே யொளிரும் தேவர்களாகிய மருத்துக்களோடும், அக்கினியே, வருவாயாக.—(எ-று.)

7. திரைகடற் சலமீ தலேசேரவும்
பருவதம் பல திக்குறவும் புரி
மருதரோடு மகத்தினை நாடியே
யெரிதயங்கிடு மக்கினி யிங்குறல்.

(இ-ள்.) சமுத்திரத்தில் அலேயுண்டாகவும் (மேகமாகிய) மலேகள் பலதிசையு மோடவும் புரிகின்ற மருத்துவரோடு, அக்கினியே, வருவாயாக.—(எ-று.) பருவதம் ஈண்டு மேகமாகிய மலே. ‘திரைகடற் சலமீது மழைமலே, திரிதரப் பலதிக்கு மியக்கு மம், மருதரோடு’ என மொழிபெயர்ப்பார் மேனுட்டாசிரியர்.

## மண்டலம் 1. சூக்தம் 20.

8. விரி சுடர்க் கிரணங்க ளகலிடம்
பரவுமாறும், பரிய தம் மொய்ம்பினுற்
றரமுறக் கடல் சார்ந் தலைமேவவும்,
புரியு மாருதரோடு மெரி யுறல்.

(இ-ள்.) அம்பரத்தே சூரிய கிரணங்கள் பரவுமாறும், சமுத்திரத்தின்மீது அலை மூடுமாறும் புரியும் மருத்துக்களோடு, அக்கினியே, வருவாயாக.—(எ-று.)

9. சோம சாரந் துதைந்த மதுவினை
நீமகிழ்ந்து முதற்கட் குடித்திட
வேமமோடு மியைத்தேன் ; மருத்தரைச்
சேம வக்கினி சேர்த்து வருகவே.

(இ-ள்.) சோம மதுவை நீ முதலிற் குடிக்கும் வண்ணஞ் சம்பாதித்தேன் ; மருத்துக்களோடு, அக்கினியே, வருவாயாக.
—(எ-று.)

வருக்கம் 37.

ஆகச்செய்யுள் 194.

### முதல் அத்தியாயம் முற்றும்.



அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

## 2-வது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 38 வருக்கமும், 13 சூக்தங்களும், 189 இருக்குக்களுமுள்ளன.

### 20. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 3.
### 8 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: மேதாதிதி.*

*வடமொழிச் சந்தம்: காயத்திரி.*

*தேவதை: ரிபுக்கள்.*

1. *ஆவலின் மணியீந்து சிறக்குமிம்*
*மாவளத்திசை விப்பிரர் பாடல்கள்*
*தேவ சாதி ரிபுக்களைத் தேடியிங்*
*கோவறவே யுளுற்றின வாகுமே.*

(இ-ள்.) இரத்தினந்தரு முத்தமர்களாகிய ரிபுதேவர்களைக் குறித்து, விப்பிரர்களது ஸ்தோமங்கள் காணப்பெற்றன.—(எ-று.) ரிபுக்கள், அங்கிரா வம்சத்து ஸுதன்வனது பிள்ளைகள் மூவராம்; ரிபு, விப்வான், வாஜன் என்னும் பெயருள்ளோர்; உலகத்தில்மக்களாயிருந்து தபஸினால் தேவத்துவ மடைந்தவர்.

2. *இந்திரற்கென வெண்ணிக் குதிரைகள்*
*மூந்து மாற்றத்தின் மூளுவ விச்சையாற்*
*பொந்த விட்டவர், புண்ணியச் செய்கையால்*
*அந்தினர் மகத்தோங்கு நிலைமைக்கே.*

(இ-ள்.) இந்திரப் பிரீதியாக, வார்த்தை சொன்னவுடன் தேரிற் பூண்டுகொள்ளக்கூடிய குதிரைகளிரண்டையும் இச்சையினாற் சிருஷ்டித்தவர்களாகிய ரிபுக்கள், தங்கள் புண்ணிய கருமங்களால் யாகதேவராகுஞ் சிறப்பை யடைந்தார்கள்.—(எ-று.) பொந்தல்; பொருந்துதல்; அந்துதல், அடைதல், (இவை இரண்டும் திசைச்சொல்).

3. *சத்தியமே புகலச்சினியருக்*
*கொத்த கைத்தே ருறுதியி னெத்திக்குந்*
*தத்துவதை யிழைத்துப், பயங்கறந்*
*தொத்த தேநு வுருவி னமைத்தனர்.*

(இ-ள்.) நாஸத்தியருக்காக, எத்திசையும் செல்லக் கூடியதும், ஏறுவதற் கெளிதாகவுள்ளதுமான தேரைச்செய்தார்கள், பால்கறக்கும் பசுக்களையு முருப்படுத்தினார்கள்.—(எ-று.) ந,

## மண்டலம் 1. சூக்தம் 20.

அஸத்தியா, பொய்சொல்லாதவர். அச்விநி தேவர்கள். கறக்க ஒத்த என்க; காலவழுவமைதி. அச்விநியர், அச்சினியர் என்றுமாயது.

4. உண்மை வாய்ந்த ரிபுக்க ளுழைப்பினு
லுண்மை யாற்று முறுதி மறைகளால்
வண்மை வான்புவி யென்னுங் குரவரைத்
திண்மை மீள விளமை திகழ்த்தினர்.

(இ-ள்.) சத்தியகாமிகளும், சத்திய மந்திரங்களுள்ளவர் களுமாகிய ரிபுக்கள், உழைப்பினால் வியாபித்துத் தங்களது (வானம், பூமி, யென்னும்) பெற்றோரை மீண்டும் இளமை பொருந்தச் செய்தனர்.—(எ-று.) மூலத்தில் 'பிதரௌ' வென்றேயுள்ளது. அத் தாய் தந்தையர் பூமி வானங்களென்பது மேனாட்டாசிரியர் குறிப்புரையிற் கண்டது.

5. மதந் தருமும் மதுவு மருத்துவ
ரிதந்தாக் கெழு மிந்திரன் றன்னொடும்
விதந்தருஞ் சுட ராதித்தியரொடு
நிதந்தருஞ் சவனத்தினி னேர்ந்தவே.

(இ-ள்.) (ரிபுக்களே!) உமது மதத்தைத் தருஞ் சோமங்கள், மருத்துவரோடு கூடிய இந்திரனோடும் ஒளி வீசுகின்ற ஆதித்தியர்களோடும் (ஒவ்வொரு நாளுந் தரும் மூன்றுஞ்சவனத்திற்) கூடிநின்றன.—(எ-று.) ஒவ்வொருநாளும் செய்யும் மூன்றுவது ஸவனத்தில் தரும் அவி, ஆதித்யர், ரிபுக்கள் மூவர், (ரிபு, விப்வான், வாஜன் என்பவர்) பிரஹஸ்பதி, விசுவதேவர்கள், என்னுமிவர்களோடு கூடிய இந்திரனுக்களிக்கப்படும் என்பார் ஆசுவலாயனர்—சாயணருரை, கெழுமு இந்திரனெனப் பிரிக்க.

வருக்கம் 1.

6. துவட்ட தேவன் சுவைக்க விழைத்திட்ட
நவச் சமஸஞ் சுதைகொள வேன்றதை
யுவப்பி னுன்கு வகைபெற மீளவும்
நிவப்பி னீங்கள் வகுத்து நிறுத்தினீர்.

(இ-ள்.) துவட்டாவென்னுந் தேவனால் நூதனமாகச் செய்யப்பட்ட மரப்பாத்திர விசேஷத்தை நீங்கள் மீண்டும் நான்கு விதமாக வகுத்தமைத்தீர்கள்.—(எ-று.) தச்சுவேலையிற் சிறந்தவன் துவட்டா, அவனது சிஷ்யர் ரிபுக்கள்—சாயணர். ரிபுக்கள் செய்த யாகத்துக்கு அக்கினிதேவன் வந்தபோது அவன் அவர்களோடு ஒருவனைச் சேர்ந்ததனால் அவர்கள் அச்சமஸத்தை நான்காக்கினர்களென்பது நீதிமஞ்சரியிற் கண்டது.—மேனாட்டாசிரியர் குறிப்புரை. சமஸம், சிறுமாவை.

7. மூவெழென்னு முறையினிற் சோமத்தை
யாவுதிக்கென வாற்று மவர்க்குநீர்
மேவு மொவ்வொருவர்க்கு மணியினைப்
பாவு மெந்துதி கேட்டுப் பகிர்கவே.

(இ-ள்.) (அவிர்யக்ஞும், பாகயக்ஞும், ஸோமயக்ஞும்) என மூன்று வகையாகச் செய்யப்படும் ஏழுவித கர்மங்களிலும் சோமாபிஷவஞ்செய்யும் அவர்களுக்குத் தனித்தனி யொவ்வொருவருக்கும், எங்கள் ஸ்தோத்திரங்களைக்கேட்டு இரத்தினங்களைத் தருவீர்களாக.—(எ-று.) அக்கினியாதேயம், தர்சபூரணம் முதலாக அவிர்யக்ஞங்கள் ஏழு; ஔபாஸனம், ஹோமம், வைசுவதேயம் முதலாகப் பாகயக்ஞங்கள் ஏழு; அக்கினிஷ்டோமம், வாஜபேயம் முதலாக ஸோமயக்ஞங்கள் ஏழு; ஆக மூன்று விதமுங் கூறியபடி. 1-72-6-ல் இதன் விரிவைப் பார்க்க.

8. தேவகார்யம் வகித் துயிர் தாங்கிப் பிற்
பாவு நன்மை பரந்த செயல்புரிந்
தோவிலாது சிறந்ததனுன் மகத்
தேவரோ டொருபாக மடைந்தனர்.

(இ-ள்.) இந்த ரிபுக்கள் தாங்கள் மனிதராயிருந்தபோது தேவகாரியங்களை வகித்துப் பிராணனைத் தரித்துப், பின்பு சற்காரியங்களால் தேவர்களை வழிபட்டு யாகத்தேவர்களோடொருவராக விருக்கும் பெருமையை யடைந்தனர்.—(எ-று.) இந்த ரிபுக்கள் ஸுதன்வன் புத்திரர்களென்பதும், அவர்கள் தங்கள் பெற்றோர்களுக்கு இளமையைமீட்டுந் தருவித்தார்களென்பதும், காய்ந்த தோலைக்கொண்டு ஒரு பசுவை யுருப்படுத்தினார்களென்பது மாதிய இவைபோன்ற இதிஹாஸங்கள் மேல் மண் 1. சூக்தம் 110-ல் கூறப்படுகின்றன.

வருக்கம் 2.

## 21. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 4.
## 6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : மேதாதிதி.

வடமொழிச் சந்தம் : காயத்திரி.

தேவதை : இந்திராக்கினிகளிருவரும்.

1. இந்திராங்கி யிருவரையு மிவண்
அந்தமாக வழைப்பென்; அவர்துதிச்
சந்தம் பாடத் தழைத்தனம்; சோமத்தை
முந்து மாந்த சுதைக்குடிச் சீரியர்.

## மண்டலம் 1. சூக்தம் 21.

(இ-ள்.) இந்திராக்கினி யிருவரையு மிவ்விடத்து வருமாறு கூவுவேன். அவர்களது ஸ்தோமங்களைப் பாடுவதே எமக்கு விருப்பம். சோமபானத்திற் சிறந்த அவ்விருவரும் சோமத்தைப் பருகட்டும்.—(எ-று.)

2. இந்திராங்கி யிருவரை யேத்துமின் ;
தந்து கூறிய வெக்கியத் தன்னவர்
நந்த வாழ்த்தி நரர்கள் துதியுமின் ;
சந்த காயத்திரி யிசை சாற்றுமின்.

(இ-ள்.) மனிதர்களே! இந்திராக்கினி யிருவர்களையும் புகழுங்கள்; யக்ஞத்தில் நானாவித சஸ்திரங்களால் அழகு படுத்துங்கள்; காயத்திரி மந்திரங்களாற் பாடுங்கள்.—(எ-று.) சஸ்திரமெனினும் உக்தமெனினும் ஒக்கும்.

3. சோமபானிக ளிந்திர வங்கிக
ளேம மித்திர னிம்மக காரகன்
சேம மான புகழிற் சிறக்கவென்
றேம சோமத் துவக்க வழைப்பமே.

(இ-ள்.) சோமபானிகளாகிய இந்திராக்கினிகளே, இவ்வெக்கியமாற்றும் யஜமானனாய நண்பனது கீர்த்தி பெருகுமாறு, சோமம் பருக வரும்படி யழைப்போம்.—(எ-று.) இவ்விடத்து, மித்திரன் என்பதற்கு உலக காவலனாகிய மித்திரனென்னுங் கடவுளெனப் பொருள்கொண்டு முட்டுப்படுவர் மேனாட்டாசிரியர். இது, சாயணருரையினிடத்து அவருக்குள்ள நம்பிக்கைக் குறைவா லேற்பட்டது.

4. உக்கிரத்துப் பகையை யொறுப்பவர்
தக்க விச்சவனந் தரு கள்ளினை
யொக்க வுண்ண வழைப்பம், இந்த்ராக்கினீ
இக்கணத் திவ ணேகி யருள்கவே.

(இ-ள்.) சத்துருவதை முதலியவற்றில் உக்கிரமுள்ளவராகிய இந்திராக்கினிகளைச் சோமமுண்ண வழைக்கிறோம். அவர்கள் (இந்தப் பிராதக்கால) ஸவனத்தில் தரும் சோமச்சுவையின் அருகே அமரட்டும். இந்திராக்கினிகளே! இங்குவாருங்கள்—(எ-று.)

5. அவைக்கு நாயகராய்க் குண மேம்படு
சுவர்க்க நாயக வங்கி யரக்கரை
யவிப்பதோ டுயிர்தின்னு மவர்களைத்
தவிக்க வாட்டுக சந்ததி யின்றியே.

(இ-ள்.) ஸபாபாலகரும், குணஞ்சிறந்த மகான்களுமாகிய இந்திராக்கினிகளே! இராட்சஸரை வலிகெடுப்பதோடு, உயிர்களைத் தின்னும் அவர்களுக்குச் சந்ததியில்லாமலுஞ் செய்க.—(எ-று.)

6. இந்தி ராக்கினி யிந்தவு முண்மைகொண்
டந்தில் கன்ம வடைவை யுணர்த்துமச்
சுந்தரப்பதந் தோய்ந்து நிதானமாய்
நந்து மின்ப நமக்கென் றளிக்கவே.

(இ-ள்.) இந்திராக்கினிகளே! (செய்கையின் பலனைத் தவறாதளிக்கும்) உமது இந்த உண்மையினால், சற்கரும பலனிது வென நினைப்பூட்டுஞ் சுவர்க்கத்திற்போய் ஸாவதானமாக விருந்து, எங்களுக்குச் சுகத்தைத் தருவீர்களாக.—(எ-று.) சுந்தரப்பதம்: சுவர்க்கம்; நமக்கு எமக்கென்பொருளில் வந்தது.

வருக்கம் 3.

## 22. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 5.
## 21 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேதாதிதி. வடமொழிச்சந்தம்; காயத்திரி. தேவதை: 1-4 அசுவினி தேவர்கள்; 5-8 ஸவிதா; 9-10 அக்கினி; 11 தேவிமார்; 12 இந்திராணி வாருணி, ஆக்கிநேயி; 13, 14 தியாவாபிருதுவிகள்; 15-பிருதுவி: 16-21 விஷ்ணு.

1. காலையிற் செய் சவனங் கலந்துறுங்
கோல வச்சினி தேவரைக் கூருணர்
வாலுமா றிங்கெழுப்புக; அன்னவ
ரேலு மிச்சுவை மாந்த விவணுறல்.

(இ-ள்.) பிராதஸ் ஸவன கிருஹத்திற் கூடும் அசுவினிகளை நல்லுணர் வுண்டாகும் வண்ணம் (தூக்கம் நன்றாய்த் தெளியும் வண்ணம்) (ஹோதா அத்வர்யுக்களே!) எழுப்புங்கள். அவர்களிருவரும் இந்த யாகதலத்தில் பிழியுஞ் சோமத்தை யுண்ணவாட்டும்.—(எ-று.) அச்வினி, அச்சினி எனத்தற்பவமாயது.

2. வான் றொடுபவர் சூதரி லுத்தமர்
வான் றிகிரி வகிக்கு முபயராங்
கோன்பெறு மச்சுவினிப் புலவர்க
ளேன்று சார்ந்திட வெண்ணி யழைப்பமே.

(இ-ள்.) விண்ணுலகத்தைத் தொடுபவரும் (விண்ணுலகில் வசிப்பவர்களும்,) தேர் கடாவுவோரி லுத்தமரும், நல்ல

தேரோடு கூடியவருமான உபய அசுவினி தேவரையும் யாங்க ளழைப்போம்.—(எ-று.)

3. தோன்றுசீ ரச்சுவினிப் புலவர்காள்!
ஆன்ற வன்பொடு மெய்யுரை யாடுவீர்!
தேன்றுளிக்குங் கசையினெ டேகியிங்
கேன்ற வன்ன தின் யாகந் தெளிக்கவே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே! பிரிய ஸத்தியவாக்கோடு கூடிய நீர் தேன்றுளிக்கின்ற உமது கசையினால் எக்கியதலத் தில் (ஸோமந்) தெளித்தருளுவீர்களாக.—(எ-று.)

4. சோம யாசியின் றில்லகந் தூரமே
ஆமென் றெண்ணிடிர் அண்மையின் வாய்ந்ததே;
சேமம் வாய்ந்த வுந்தேரி லசுவினி
நாமம் வாய்ந்துள தேவர்க ணண்ணவே.

(இ-ள்.) சோமமளிக்கும் யஜமானனது கிருஹம் தூரத்தி லில்லை, சமீபத்திலேயே யுளது. அசுவினிகளே! உங்கள் தேரி லேறி வருவீர்களாக.—(எ-று.) யாசி யாஜி.

5. பொற்கரத் தொளிர் தேவன் சவிதாவை
யெற்குதவி யிழைக்கென வேண்டினேன்;
நற்கடவுள னுடி னவன்மறை
முற்றரும் பதமுன்னி யுணர்வனே.

(இ-ள்.) பொற்கையோடு கூடிய தேவனான சவிதா வெனக் குத் துணைசெய்யுமாறு அவனை வேண்டினேன். அந்த ஸவிதாத் தேவன் இம்மறையினாற் பிரதிபாதிக்கப்படும் பதத்தை (ஸ்தா னத்தை) யறிவான்.—(எ-று.) கௌஷீதகிப் பிராஹ்மணத்தில் பொற்கை ஸவிதாவுக்கு வந்தவகை சொல்லப்படுகிறது. தேவர் கள் செய்த யாகத்தில் ஸவிதா தானே பிராஹ்மணனாகவிருந்து நடத்தியபோது சில அத்வர்யுக்கள் 'பிராசித்ரம்' (தின்னக் கூடியது என்பது பொருள்) என்னும் பெயரையுடைய புரோடாசத்தை அவன் கையிலிட்டதாகவும், உடனே அவன் அதை வாங்கிக்கொண்டு அக்கையை வெட்டிவிட்டதாகவும், அவ்வத்வர்யுக்கள் பொன்னினால் ஒரு கைசெய்து பொருத்திய தாகவும், அதனால் ஸவிதாவுக்குப் பொற்கையனென்று பெயர் வந்ததாகவும் அந்த இதிஹாசம் கூறும்.

வருக்கம் 4.

6. வதியு நீரினை வற்ற வடிப்பவ
னுதவி வேண்டிச் சவிதாவினை யுற்றுத்
துதி முழக்குவம்; தோயவ னேன்பினி
லதிவிருப்ப மடைந்துளம் யாங்களே.

(இ-ள்.) ஜலத்தை வற்றுவிப்பவனுகிய ஸவிதாவை உதவிக்காகத் துதிப்போம். அவனது விரதங்களை விரும்புவோம்.—(எ-று.) இது ஹோதா, ஸாமகன், ரித்விஜன், சஸ்திரமுரைப்பவன் ஆகிய யாவரும் கூறுவது.

7. மாறிலாது விளக்குவோன், மாந்தர்க்குக்
கூறுசெல்வ விசித்திர நன்கொடை
கூறுசெய் தளிக்குஞ் சவிதாவினைத்
தேற லுண்டிடத் தேடி யழைப்பமே.

(இ-ள்.) மனிதர்களுக்கு ஒளியளிப்பவனும், மணி, முத்து, பொன் முதலிய விசித்திர வர்ணமான பொருள்களைத் தருபவனுமான ஸவிதாவைக் கூவுவோம்.—(எ-று.) தேறலுண்டிடவென்பது வடமொழி மூலத்திலில்லை. சோமயாகத்தில் இது சொல்லப்படுவதானதுபற்றி அச்சொற்றொடர் சேர்க்கப்பட்டது.

8. தோழர்கா ளிவண் டோய்க; சவிதாவும்
வாழி வல்லையிற் போற்றற் குரியவன்;
மாழை நந்தமை நாடி வழங்குவோன்
கேழுறுந் தன மீத்துக் கிளருவான்.

(இ-ள்.) தோழர்களே! இங்கு வாருங்கள். ஸவிதா நம்மால் விரைவில் துதிக்கப்படத் தக்கவன். செல்வமளிக்கு மவன் பிரகாசிக்கிறன்.—(எ-று.)

9. அங்கி யன்புறு தேவ மனைவியர்
தங்களை யிவட் சேர்க்க, துவட்டாவைப்
பொங்கு சோமம் பருக வருகினிற்
றங்குமாறு தயக்குக நன்மையின்.

(இ-ள்.) அக்கினியே! (இந்திராணி முதலிய) அன்புள்ள தேவ பத்தினிகளை இந்த யாகசாலைக்குக் கொண்டுவருக. துவட்டாவென்னுந் தேவனையும் சோமங் குடிப்பதற்காகக் கூட்டிக்கொண்டு வருவாயாக.—(எ-று.)

10. வன்னி யெளவனம் வாய்ந்தவ தேவர்தம்
பன்னியர்களாம் பாரதி ஹோத்திரை
துன்னுகின்ற வரூத்திரி தீடணை
மன்னுவித்திட மாறு வுதவிக்கே.

(இ-ள்.) கட்டிளமைவாய்ந்த வக்கினியே! (அக்கினியின் பத்தினியாகிய) ஹோத்திரையையும், (ஆதித்யன் மனைவியாகிய) பாரதியையும், (சிறந்தவளாகிய) வரூத்திரியையும், (வாக்குத் தேவியாகிய) திஷணையையும், எங்களைக் காப்பதற்

காகக் கூட்டிக்கொண்டு வருவாயாக.—(எ-று.) பாரதி, பரத பத்தினி; பரதன், ஆதித்யன், யாஸ்கர். திஷணை, திடணை முதனீண்டு தீடணையாயிற்று.

வருக்கம் 5.

11. ஆருகின்ற தம் பத்திரந் தன்னமு
மேரிழந்து சின்னப்படா ரெம்வயிற்
பேருதவியுங் காப்பும் பிறங்கிட
வீர பன்னியர் தேவியர் மேவுக.

(இ-ள்.) கொஞ்சமும் வெட்டுப்படமுடியாத அழகிய (பத்திரம்) சிறகுள்ள தேவிமாராகிய வீரபத்தினிகள் எங்களுக்கு இரட்சணையையும் சுகத்தையு மளிக்குமாறு எங்களாற் சேவிக்கப் படட்டும், அதாவது இங்கு வரட்டும்.—(எ-று.) வீரபாலன தேவியர் மேவுக, வென்பதும் பாடம், சாயணர் ந்ருபத்நய: என்பதற்கு நரர்களை (வீரர்களை)ப் பரிபாலிக்குந் தேவிமார் என்று பொருள் கொள்ளுவதால்.

12. இந்திராணியை யக்கினி தேவியை
முந்து வாருணி மூவரையும், ஒரு
தொந்தரையுந் துதையா தழகின்யாம்
நந்த, நாடுவேன் சோமம் பருகவே.

(இ-ள்.) எங்களுக்கு ஒரு கஷ்டமும் நேராதபடி சுகமமையும் வண்ணம், இந்திராணி, அக்கினாயி, வாருணி இம்மூவரையும் அழைப்பேன்.—(எ-று.) இவர் முறையே இந்திரன், அக்கினி, வருணன் இவர்களது மனைவியர்.

13. எட்டும் வான் புவிவான மெனவினை
யொட்டு மன்னவ ரொண்முர ணேய்ந்தவர்
புட்டி யீயும் பொருளெமக் கூட்டியெம்
இட்டி தன்னைப் புரோக்கணஞ் செய்கவே.

(இ-ள்.) பெருமை வாய்ந்த வானதேவதையும் பூமிதேவதையும் எங்கள் யக்ஞத்தைத் தங்களது ஸாரம்பொதிந்த ரஸத்தால் புரோக்ஷிக்கட்டும் (தெளிக்கட்டும்.) பிற்பாடு எமக்குப் புஷ்டியைத் தரத்தக்க வஸ்துக்களை யளிக்கட்டும்.—(எ-று.) புஷ்டி, இஷ்டியென்பன, புட்டி, இட்டி யெனத் தற்பவமாயின.

14. சோமங் காத்திடுங் கந்தருவன் பதத்
தேமமாக விசைகளை விப்பிரர்,
தோமஞ் செய்த பயனெனத், தோயத்தை
யோம நெய்போல் வளத்தி னுறுவரே.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

(இ-ள்.) கந்தருவனது நிச்சயபதமாகிய அந்தரத்தில் விப்பிரர்கள் இசைகளைப்பாடி அதன் பயனாக நெய்போலப் புஷ்டியுள்ள ஜலத்தைப் பெறுவார்கள்.—(எ-று.) சோமங்காத்திடுமென்ற அடை மூலத்திலில்லை. கந்தருவனது பதம் அந்தரிட்சவுலகமாம். கந்தருவநகரம் என்ற சொல் மேகத்தின் பெயராயமைந்துள்ள தன்மை யீண்டு கருதற்பாலது. அது இங்கு விண்ணைக் குறித்து நின்றது. இக்கந்தருவனது தொழில் சோமத்தைக் காப்பாற்றுவதென்பார் மேனாட்டாசிரியர். யட்ச, கந்தர்வ, அப்ஸரகணங்களுக்கிடம் அந்தரிட்சம் என்று தாபநீய சாகையிற் கூறப்படுகிறது.

15. இடமகன்று பிருதுவி யேய்கவே;
இடரிலாது சுகத்தி னியைந்துறத்
தடமகன்ற சரணாலய மெமக்
குடனளித் தருளோங்குக வின்றுமே.

(இ-ள்.) பிருதுவியே! நீ விஸ்தீரண குண ஸம்பன்னனாயமைக. கஷ்டமில்லாது நாங்கள் சுகப்படும்படி ஒரு விஸ்தாரமான சரணாலயத்தை எங்களுக்குத் தருவாயாக.—(எ-று.)

### வருக்கம் 6.

16. விண்டு வேழெனும் வேதப்பண் பாடியே
யண்டலர் செறி பூமி யடக்கிய
மண்டலத்தின் மருவி யத்தேவர்க
ளண்டி நம்மை யழுகி னருள்கவே.

(இ-ள்.) விஷ்ணு ஏழு விதமான வேதவிசைகளைக்கொண்டு பூமியில் நடமாடின அந்த விடத்தி லிருந்துகொண்டு தேவர்கள் நம்மைக் காக்கட்டும்.—(எ-று.) அ. பண்டறிசுட்டு. "தேவர்கள்விஷ்ணுவைத் தலைமையாகக்கொண்டு (காயத்திரி முதலாகிய) ஏழுவித வேதப்பண்களையும் பாடிப் பூமியிலுள்ள பாபிகளின் தொந்தரவை நீக்கினார்கள்; பூமியைச் சயித்தார்கள்." என்றது தைத்திரீயம். இது திரிவிக்கிரமாவதாரத்தைச் சூசிப்பிப்பது என்பார் சாயனர்.

17. இவ்வுலகங்க ளெங்கணும் விட்டுணு
செவ்வை யாகத் தனதடி யோட்டியே
முவ்வடியின் முழுது மளந்தகாற்
கவ்வு தூளியின் யாவும் கலந்ததே.

(இ-ள்.) இவ்வுலகமுழுதும் மூன்றடியாலளந்த விஷ்ணுவின் பாததூளி சேர்ந்து இவ்வுலக மாயிற்று.—(எ-று.)

மண்டலம் 1. சூக்தம் 22.

18. ஏல யாரு மிடர்செயாத் தன்மையான்
பாலனஞ் செயும் விண்டு தன்மூவடி,
ஞால தன்ம நடைபெற வோம்புவான்,
மேலெடுத்து விளங்க நடந்தனன்.

(இ-ள்.) ஒருவராலும் இம்சிக்கமுடியாத வலிமையுள்ளவனும், எல்லா ஜகத்துக்களையும் இரட்சிப்பவனுமாகிய விஷ்ணு பூமியில் நடக்கும் (அக்கினிஹோத்திராதி) தருமங்கள் நடைபெறுமாறு ஜகத்தை மூன்றடியா லளந்தான்.—(எ-று.)

19. விண்டு பாலனந் தம்மை விருப்பொடும்
அண்டி நோக்குமின்; இந்திரனோ டியைந்
தெண்டரு மனுகூல மிழைக்கு நட்
பண்டி நோன்பி னடைவ னவனுமே.

(இ-ள்.) (இருத்துவிக்கு முதலானவர்களே!) விஷ்ணு கருமங்களைப் பரிபாலிப்பதைக் கவனியுங்கள். இந்திரனோடு சேர்ந்த தோழனாய் விரதங்களை நடத்துவிக்கும் யஜமானர்களிடத்தெல்லாம் அவன் வந்தருள்வான்.—(எ-று.)

20. அண்ட வான்றலை யைதி னமைந்திட்ட
மண்டு நல்லொளிக் கண்ணென வாய்ந்திடும்
விண்டுவின் அப் பரம பதத்தினை
யண்டிச் சூரிகள் காண்குவ ரென்றுமே.

(இ-ள்.) ஆகாயத்தே எல்லாப் பக்கத்திலிருந்துந் தடைபடாமற் காணப்பட்டுக் கண்போல விளங்கும் அவ்விஷ்ணுவினது பரமபதத்தை ஸூரிகள் என்றுங் காண்கிறார்கள்.-(எ-று.) சூரிகள், ஸூரிகள், வித்வாம்ஸர்கள்.

21. விண்டுவின் அப் பரமபதத்தைப் பண்
கொண்டு பாடு மறையவர், சாக்கிரத்
தண்டி யென்று மணைந்த பெரியவர்,
மண்டு தம்மிசை கொண்டு வயக்குவார்.

(இ-ள்.) விசேஷமாக ஸ்தோத்திரங்களைப்பாடும் விப்பிரர்கள், (சப்தார்த்தங்களில் பிரமாதம் விளைந்துவிடாதபடி யெப்பொழுதும்) ஜாகரூகராயிருக்கும் பெரியவர்கள், விஷ்ணுவினது அப் பரமபதத்தைத் தமது பண்களால் நன்றாகப் பிரகாசிக்கச் செய்வார்கள்.—(எ-று.)

வருக்கம் 7.

அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

## 23. மண்டலம் 1. அநுவாகம் 5. சூக்தம் 6.

### 24 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : மேதாதிதி. வடமொழிச்சந்தம் : 1-18 காயத்திரி 19 புரவுஷ்ணி (கந்தராநுபூதிச் செய்யுள்.) 20 அநுஷ்டுப், 21, பிரதிஷ்டா (கலி விருத்தம்) 22-24 அநுஷ்டுப் (கலி நிலைத் துறை.)

தேவதை : 1. வாயு ; 2, 3, இந்திரவாயுக்கள் ; 4-6 மித்திரா வருணர்கள் ; 7-9, மருத்துக்கள், 10-12, விச்வதேவர்கள் ; 13-15, பூஷன் ; 16-22, ஆப : (நீர்) ; 23, அக்கினியும் நீரும் ; 24, அக்கினி.

1. பல முறைந்துள சோமமும் ; பற்பல
நல முறைந்திடு மாசி நயத்தின் இத்
தல முறைந்த சுதையினை, வாயுவே !
வல முறைந்திட வந்து பருகவே.

(இ-ள்.) சோமங்கள் (நிறைய விருப்பதால்) பலத்தோடு கூடியிருக்கின்றன ; ஆசிர்வசனத்தோடுகூடிய இச்சுதையினை, (உத்தரவேதிக்குக் கொண்டுவரப்பட்டதை) வாயுவே, வந்து குடிப்பாயாக.—(எ-று.)

2. வானினைத் தொடுந் தேவர்கள் வாயுவோ
டான விந்திர னென்றிருவர் தமைப்
பான சோமம் பருகுதற் கென்றியாம்
ஞான மோங்கு மறையி னழைப்பமே.

(இ-ள்.) வானத்தைத்தொடுந் தேவர்களாகிய இந்திரவாயுக்க ளிருவரையும் இச்சோமத்தைக் குடிக்கக் கூவுவோம்.—(எ-று.)

3. வாயுவிந்திரர் மன்னுமனோவேக
ராயு நன்மக நாயக ராயிர
மேயுங் கண்ணினர் தம்மை மறையவர்
தோயு நற்றுணை யாகெனக் கூவுவார்.

(இ-ள்.) மனோவேகமுள்ளவரும், கர்மத்தை (அல்லது புத்தியை)ப் பரிபாலிப்பவரும், ஆயிரங்கண்ணுடையவருமான இந்திரா வாயுக்களைத் துணைக்காக விப்பிரர்கள் கூவுவார்கள்.—(எ-று.)

4. நேர்ந்த தூவலி நீண்டவ ரென்று சீர்
வாய்ந்த தேவர்கள் மித்ர வருணர்க
ளேய்ந்து சோமத் துளியைப் பருகயா
மோர்ந்து கூவி யுவரை யழைப்பமே.

(இ-ள்.) பரிசுத்தமான வலிமையுடையவரான மித்திரா வருணர்கள் சோமங் குடிக்க வரட்டுமென்று (அநுஷ்டாதாக்க ளாகிய) நாம் அவரைக் கூப்பிடுகிறோம்.—(எ-று.)

5. ஒழுங்கி னல்லொழுங் கோம்புவ ரவ்வொழுங்
கழுங்குறு தொளியார்ந்தத ஞயகர்
தழுங்கு மித்திர வாருணர் தங்களை
யொழுங்கி னேக வுரக்க வழைப்பெனே.

(இ-ள்.) ஒழுங்கினல் (சத்திய வசனத்தினல்) ஒழுங்கை (விரத பலன்களை) வளர்ப்பவர்களும், ஒளியமைந்த அவ்வொ ழுங்குக்கு நாயகருமான மித்திரா வருணர்களை யான் அழைப் பேன்.—(எ-று.)

வருக்கம் 8.

6. வருண னெம்பெருங் காப்பா யமைபுக,
தருண நற்றுணை யாவுந் தயக்கியே
யரண மாக எமக்கு நன்மித்திரன்;
வருண மித்திரர் செல்வம் வயக்கவே.

(இ-ள்.) வருண னெமக்குப் பெரிய காவலாக வமையட் டும்; மித்திரனும் எமக்கு உதவியாகட்டும்; இருவரும் செல் வம் எமக்கு அளிக்கட்டும்.—(எ-று.)

7. மருத்துவந்தனு மிந்திரன் றன்னையே
பொருத்து சோமம் பொருந்திக் குடித்திட
அருத்தியோடு மழைப்ப மவன் மிகத்
திருத்தி யெய்துக சேர்ந்த கணத்தொடே.

(இ-ள்.) மருத்துக்களோடு கூடிய இந்திரனைச் சோமங் குடிக்க அழைப்போம். அவன் (மருத்துக்) கணங்களோடு திருப்தி யடையட்டும்.—(எ-று.)

8. இந்திரற்கு முதன்மை யியைப்பிர்காள்!
சந்த பூடன் கொடைகளைப் பங்கிடும்
அந்தம் வாய்ந்த மருத்துவ தேவர்காள்;
வந் தியாவரு மென்விளி கேட்கவே.

(இ-ள்.) இந்திரனை ஜேஷ்டனாகக் கொண்டவர்களும் பூஷனது தனக்கொடைகளை பங்கிடுபவருமான மருத்துவ தேவர்களே! எல்லாருமாக என் அழைப்பினுக்குச் செவிகொடுங்கள்.—(எ-று.) பூஷன் = கன்று காலிகளை விருத்தி செய்யுந் தேவதை.

9. இந்திரனோ டியைந்து விருத்திரன்
நந்த வாட்டுக நற்கொடைத் தேவர்காள்,
பொந்து மீவலிப் பூரிய துட்டனு
மெந்தமைக் கெடுக்காவணம் யாமுறல்.

(இ-ள்.) நல்ல தானங்களிற் சிறந்த (மருத்துவ) தேவர்களே! இந்திரனோடு கூடி விருத்திரனைக் கொல்லுங்கள். துஷ்டனாகிய பகைவன் எம்மை யடக்க முடியாத வண்ணம் யாங்கள் சிறந்திருக்கட்டும்.—(எ-று.)

10. மேவு சோமக் குடிக்கு மருதராந்
தேவர் யாரையுந் தேடி யழைப்பமால்
யாவருக்குந் தெரிந்த பிருசினி
யோவி னன்மக ருக்கிர மெய்தினர்.

(இ-ள்.) மருத்துக் கணத்திற்சேர்ந்த எல்லாத் தேவர்களையுஞ் சோம பானத்துக்காகக் கூப்பிடுவோம்; அந்தப் பிரசித்திப்பெற்ற பிருச்நி மக்கள் உக்கிரத்தன்மை யடைந்தனர்.-(எ-று.) பிருச்நிமாதர: பிருச்னியைத் தாயாக வுடையவர் மண். 1, சூ. 14, ரி. 3 பார்க்க.

வருக்கம் 9.

11. நரர்களே நீர் சுபமென நாடியே
மருவு யாகத் தலத்தை மருவும்போ
தரமொடுஞ் சயவீர ருரையென,
வரமருத்துவர் வாக்கு முரப்புமே.

(இ-ள்.) மருத்துவர்களே! நீங்கள் சுபகர்மமான தேவயஜனத்துக்கு வரும்போது உமது குரல் வெற்றியாளர்களாகிய வீரரது குரலைப்போல் உரக்கச் சப்திக்கும்.—(எ-று.) நரர்களென்டு மருத்துவர்களையே குறித்து நின்றது. சிறந்த மருத்துவர்களாகிய உமது குர லென்க.

12. நகைதரு மின்னொளி பெறு மாருதர்
மிகவு மந்தர மெங்கணுந் தோன்றுவோர்
தகவுட னெமைக் காக்க, வெமதிடை
வெகு சுகத்தை விளைத்துச் சிறக்கவே.

(இ-ள்.) ஒளி மிகுந்த மின்னலினது பிரகாசத்தையுடைய மருத்துவர்கள், அந்தர வெளியில் எல்லாப் பக்கத்தினு முண்டாவோர், எம்மைக் காக்கட்டும்; எமக்குச் சுகத்தை யளிக்கட்டும்.—(எ-று.)

13. சித்திரமாய்த் திகழ்ந்த தருப்பையி
லொத்தமர் மகந்தாங்கு மொருவனை
மெத்து காந்தி விரைகதிப் பூட வா
னித்தை நின்று மியைக்க கெட்டாவினே.

(இ-ள்.) பிரகாசத்தோடு கூடி நடைவிரைவுள்ள பூஷனே! சித்திரமாக வமைக்கப்பட்ட தருப்பையில் அமரும் யாகதாரண சீலனை (ஸோமனைக்) கெட்ட பசுவைக் கொண்டுவந்து சேர்ப்பது போல வானத்தினின்றுங் கொண்டு வருவாயாக.—(எ-று.) 'தேவர்களைத் தாங்குவோனாகிய ஸோமனைத், தருப்பையிலமரும் பூஷனே, கெட்ட ஆடு மாடுகளைக் கொண்டுவருவது போலக் கொண்டு வருவாயாக' எனப்பொருள் கொள்ளுவர் மேனாட்டாசிரியர். இத்தை முன்னிலையசைச்சொல். கெட்ட ஆவின் எனப் பிரிக்க. இம்மூன்று ரிக்குக்களும் பூஷன் ஆக்ரிணீயைக் குறிக்கும் என்பர் மேனாட்டாசிரியர். இப்பூஷனது தேரிற் றயிர் நிறைந்த தோற்பை கட்டப்பட்டிருப்பதால் பூஷன் ஆக்ரிணீ என்ற பேர் வந்ததென்பார் பிரஹத்தேவதைக்காரர்.

14. மின்னு சோதி விளங்கிய பூடனும்
வன்னம் பற்பல வாய்ந்திடு நாணலின்
மன்னு மன்னன் குகையினிற் கூடமாய்த்
துன்னுவானைத் துகளற வோர்ந்தனன்.

(இ-ள்.) சித்திரமாக வமைக்கப்பட்ட தருப்பையிலுள்ள மன்னனாகிய ஸோமன் குகையினிடத்து வெகு இரகசியமாயிருக்கக்கண்டு, பிரகாசம்பொருந்திய பூஷன் அவனை யடைந்தான்.—(எ-று.) குகையென்றது ஈண்டு இலகுவில் அடைய முடியாத விடத்தைக் குறித்தது. இராஜா ஸோமனும்.

15. இத்துளிகளோ டென்பொருட் டன்னவ
னுைத்தவாறிங் குறுத்துக மீண்டுமீண்
டித்தரையி னெருத்தி னுழு தியவம்
வித்தி யாண்டுதோ றூக்கும் விளைவென.

(இ-ள்.) இந்தச் சோமத்துளிகளோடு எனக்காக அப்பூஷன், எருதுகொண்டு நிலத்தை யுழுது யவம்விளைத்து வருஷந்தோறும் விளைவை யெடுப்பதுபோல், ஆறு பெரும் பருவங்களையும் மீள

மீள அமைக்கட்டும்.—(எ-று.) உழுதியவம் குற்றியலிகா மாயது. யவம் கோதுமை போன்ற ஓர் தானியம்.

16. அத்துவ ருடன் பிறப் பானவர்
நத்து மம்மையர் நாடி யவர்வழி
யொத்தொழுகுவ ரொண் மதுரத்தினை
லொத்த பாலிற் சுவையினை யூட்டியே.

(இ-ள்.) அத்துவரர்களது பந்துக்க(சகோதரிக)ளுந், தாயரு மான (ஜலங்கள்) பாலில் சுவை யூட்டிக்கொண்டு அவ்வத்து வரர்களது பாதைக்கண்ணே செல்லும்.—(எ-று.) தண்ணீரில் லாமல் யாகம் புரிவோர்க் கொருவேலையும் நடவாதாதலின் அத் தண்ணீரைத் தாயென்றும், உடன்பிறப்பென்றும் உபசரித்தார்.

17. என் றருகி னிருக்குந் தணீர், அன்றேல்
என்றினோடு மிணைபெற நிற்பவை
மன்ற யாங்க ளிழைத்திடு மிம்மகந்
துன்றி யுள்ளக் களியினைத் தோய்கவே.

(இ-ள்.) சூரியனுக்குச் சமீபத்திலிருக்கும் இத்தண்ணீர், அல்லது சூரியனோடு கூடக்கருதப்படுந் தண்ணீர் இம்மகத்தைச் சார்ந்துநின்று உவப்பை யெய்தட்டும்.—(எ-று.) 'ஆபஸ் ஸூர் யோ ஸமாஹிதா' என்பது தைத்திரீய அரண்யகம் முதற் பிர பாடகத்திலுள்ளது.

18. கோக்கள் சென்று தண்ணீர்குடி யாபமாம்
ஆக்க தேவிக ளார்ந்திவ ணண்மிடக்
கூக்குரலின் விளிப்பென் ; குடினைகட்
காக்கவற் றிவணுகு மவியதே.

(இ-ள்.) பசுக்கள் சென்று குடிக்கும் தண்ணீராகிய தேவி களைக் கூவுவேன். (ஓட்டத்திற் சிறந்த) ஆற்றுக்கு அவி தாத்தக் கது.—(எ-று.) ஸிந்துபி: என்பதற்கு ஓட்டத்திற் சிறந்த ஆப தேவதைகள் என்பார் சாயணர். அவியாகிய அது ஆக்கவற்று என்க.

(வேறு.)

19. நீர்க்கண் ணமுத நிலைபெற் றொளிரும்,
நீர்க்கட் பலமூலிகை நின்றுலவும்,
நீர்க்கண் ணுறைசீர் நிமிடத்துரை தந்
தேர்க்கண் ணமைக தேவ ரிவரே.

(இ-ள்.) ஜலத்தினுள் அமிர்தமும், ஜலத்திற் பேஷஜமும் உறையும் ; தேவர்களே ! (பிராமணர்களே !) அதன் பெரு மையை யுரைக்க விரைகுவீர்களாக.—(எ-று.) 'பிராமணர்கள் பிரத்தியட்ச தேவர்க'ளென்று தைத்திரீய ஸம்ஹிதை கூறும்.

## மண்டலம் 1. சூக்தம் 23.

(வேறு.)

20. சோம னென்றனுக் குரைத்தனன் ஸ்ரேயத்தி னுப்பண்
வாம பேடசம் யாவுமே வளருமென், றவற்ஸ்ரே
டோம வங்கியு முறையுமென்று ; ஒன்றுமே குறையாத்
தோமி னன்மருந் துறுத்து நீ ருரைத்தது மதுவே.

(இ-ள்.) ஜலத்தின் மத்தியில் எல்லா மருந்துகளும், அக்கினியும் வசிப்பதுண்டென்று சோமன் எனக்குச் சொன்னான். ஸர்வபேஷஜ காரணனை ஆபனு மதனையே கூறினான்.—(எ-று.) நீர், ஆபன், ஜலாபிமானி தேவதை.

### வருக்கம் 11.

(வேறு.)

21. நோ யொழித்திடு மௌடதத்தினை
மேய வென்னுட லுய்ய வேண்டியே
தூய வாபமே தோய்த் தருளுக
காயு மென்றை நீடூழி காணவே.

(இ-ள்.) என்னுடைய சரீரத்துக்குக் கவசம்போன்ற மூலிகைகளை நீரானது நிறைத்தருளட்டும், யான் சூரியனை நீண்ட காலம் பார்க்குமாறு.—(எ-று.)

(வேறு.)

22. நீர்க ளிவ்விடம் பாய்ந்து சேய்கெட்டுக யானும்
பார்தனி லறியாமையாற் செய்த பாவத்தைச்
சீர்கெடப் புரி துரோக கன்மங்களைப், பொய்யை,
யேர்கெடத் தந்த சாபங்க ளாதியவற்றை.

(இ-ள்.) யான் அறியாமற் செய்த பாபத்தையும், (தெரிந்து செய்த) துரோக கர்மங்களையும், பேசிய பொய்களையும், உரைத்த சாப மொழிகளையும் நீரானது இவ்விடம் பாய்ந்து அப்புறம் கெட்டித் தள்ளட்டும்.—(எ-று.)

23. இன்று நீர்களை நேடினேன் ; நேடிப்பி னிவற்றி
னின்று மல்கிடு மிரதத்தை நிவப்புற வடைந்தேம் ;
துன்று நீர்பொருந் தக்கினி சுறுக்கென வருக,
வுன்றன் காந்தியா லென்றனை நிரப்புக வுடனே.

(இ-ள்.) இப்பொழுது (யாக முடிவிற் செய்யும் ஸ்நானத்துக்காக) ஜலத்தை நாடிச்சென்றேன் ; அச்சல ஸாரத்தோடு நாங்கள் கலந்தோம். ஜலத்தோடு பொருந்திய அக்கினியே சீக்கிரம் வருக, உனது காந்தியை (அப்படி ஸ்நானஞ்செய்யும்) என் தேஜஸோடு சேர்ப்பாயாக.—(எ-று.)

24. அங்கி யுன்னுடைத் தேசொடு மெனை யமைத்திடுக;
தங்கு மாயுளுஞ் சந்ததி தம்மையுந் தருக;
அங்கமா யெனைத் தேவர்க ளுள்ளவா றறிக;
பொங்கு மிந்திர னிருடிய ருடன்புலன் கொளவே.

(இ-ள்.) அக்கினியே உன்னுடைய தேஜஸை எனதோடு சேர்ப்பாயாக; எனக்குத் தீர்க்காயுளும் சந்ததியுந் தருவாயாக; தேவர்கள் எனது (யஜமானனுடைய) அநுஷ்டானத்தை யறியட்டும். இந்திரனும் ரிஷி கணங்களோடு அவ்வநுஷ்டானத்தை யறியட்டும்.—(எ-று.)

## 24. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 1.

## 15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன். வடமொழிச் சந்தம்: 1, 2, திருஷ்டுப் (அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்); 3-5, காயத்திரி; 6-15, திருஷ்டுப். தேவதை: 1, யார்; 2, அக்கினி; 3-5, ஸவிதா; 6-15, வருணன்.

(வேறு.)

1. அமரரென் றுரைப்போர் தம்மி லநுகுலம்வாய்ந்த தேவன்
தமரென வுறைவோ னின்று சாற்றுதற் கியாவ னுள்ளான்?
அமைவலி யதிதி மாட்டு மீட்டெமை யமைத் தென்றாயை
யமல தந்தையினைக் காணுமா றெனையார் சேர்ப்பாரே?

(இ-ள்.) மரணதர்ம மில்லாதவர்களில் அநுகூலத்தைத் தரக் கூடிய தேவன் யாரென்று தெரிந்து அவனுடைய சோபன நாமத்தை யான் உச்சரிப்பது? எம்மை மறுபடியும் பூமியிலேயே வைத்து எனது தாய் தந்தையர்களைப் பார்க்கும்படி செய்யக் கூடிய (பிரஜாபதி) யார்?—(எ-று.)

இச்சுநச்சேபனது இதிஹாஸம் ஐதரேயப் பிராஹ்மணத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்படுகிறது. 'பூர்வம் அரிச்சந்திரனென்று ஒரு அரசனிருந்தான். அவன் வருணனை வேண்ட ரோஹிதனென்ற புத்திரன் பிறந்தான். பிள்ளை பிறந்தால் அவனைப் பலியிடுவதாக வேண்டிக்கொண்டபடி ரோஹிதன் பெரியவனான பின்னர்த் தந்தை தன் நேர்த்திக்கடனைப்பற்றித் தெரிவிக்க ரோஹிதன் காட்டுக்கு ஓடிப்போனான். அங்கே அஜீகர்த்தர் என்ற ரிஷி துன்பப்பட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு தனக்குப் பதிலாக அவரது புத்திரர்களில் ஒருவனை வருணபலியாகக் கொடுத்தால் யதேஷ்டமான தனங்கொடுப்பதாகக்கூறி இடைச்

சனுன சுநச்சேபனைப் பலிக்காகக்கொடுப்பித்தான். சுநச்சேபனை யூபஸ்தம்பத்திற் கட்டினார்கள். அவ் யாகப் பிராஹ்மணர்கள் பதினறுவரில் விச்வாமித்திரர் ஒருவராயிருந்தார். அவர், வருணப்பிரீதியாக ஸ்துதி பாடச்சொல்லிச் சுநச்சேபனைத் தூண்டினார். உடனே சுநச்சேபன் 97 இருக்குக்களடங்கிய 6 சூக்தங்களைப் பாடவே வருணன் திருப்தி யடைந்து சுநச்சேபனைக் கட்டவிழ்த்து விடும்படி உத்தரவளித்தான்.' என்பது. அதிதி=பூமி. இச்சொற்கு மேனாட்டுரைகாரர்கள், அகிலாண்டமென்றும், இயற்கை யென்றும், மோட்சமென்றும் அநகத்துவமென்றும் பற்பலவாறு சிறப்பித்து உரை கூறுவர்.

2. அமரரின் முதன்மை வாய்ந்த வக்கினி தேவன் நாம
நமவென நினைப்போம் யாங்க ணலந்தரு சுபத்தை நாடி;
யமைவலி யதிதிமாட்டு மீட்டெமை யவ னமைப்பான்
இமையி லென்றந்தை தாயை யெண்ணி யான்காணுமாறே.

(இ-ள்.) தேவர்களில் முதன்மையான அக்கினியினது சோபன நாமத்தை நாம் சிந்திப்போமாக. அவன் நம்மை மறுபடியும் பூமியின்கணிருத்தி எனது தாய் தந்தையர்களைப் பார்க்குமாறு செய்வான்.—(எ-று.)

(வேறு.)

3. உரத்தி னென்று முதவி யியற்றிடும்
வரத்துயர்ந்த நல் வத்துவுக் கீசனுந்
தரத்துயர் சவிதா வுன்றன் மாட்டியாம்
அருத்தியோடு பங் கீகென யாசிப்போம்.

(இ-ள்.) (அக்கினியினாற் பிரேரேபிக்கப்பட்டுப் பின்வரும் மூன்று இருக்குக்களால் ஸவிதாவைத் துதிக்கிறான்.) எப்பொழுதுங் காப்பவனே, ஸவிதாவென்னுந் தேவனே, சிறந்த பொருள்கட்கு ஈசானனே (நாயகனே), செல்வந் தரும்படி உன்னை (எப்பொழுதும்) யாசிப்போம்.—(எ-று.)

4. நிந்தை யேற்படு முன்னர் நிலைத்திட்ட
வந்தனை புகழ் வாய்ந்திடு பாக்கிய
முந்து வெம்பகை முற்று மில்லாதது
தந்து நின்றதா முன்கரந்தன்னினே.

(இள்.) (ஸவிதாவே!) நிந்தை யேற்படுவதற்கு முன்னரே உன்னிடத்து நிலைத்திட்டதும், அந்நிந்தைக்கு முன்னும் பகைக்கப்படாததும், எல்லாராலும் போற்றப்பட்டுப் புகழ் வாய்ந்ததுமான செல்வம் உன் ஹஸ்தங்களில் கொடுக்கப்பெற்றது.—(எ-று.) தந்து நின்றது தர நின்றதென்னும் பொருளில் வந்தது.

அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

5. (அ) பொன் பொருந்திய வுன்பெருங் காவலின்
மன்னுவோஞ் சிறப்பெய்துற யாங்களுஞ்
சொன்னம் பெற்றவர் தோயு முதன்மையை
நன்னரின் யாந் தொடங்குற நாடியே.

(இ-ள்.) (ஸவிதாவே!) உன்னைச்சேர்ந்த (சுநச்சேபனது நாமத்தோடு கூடிய) யாங்கள், தனம் படைத்தோரில் முதன்மையை யடைய ஆரம்பிக்கும் வண்ணம், தனம் பொருந்திய உனது இரட்சணையிற் சிறப்பாகப் பரந்து நிற்போமாக.—(எ-று.) பகபக்தஸ்ய என்னுஞ் சொற்றொடருக்குப் பகன் என்னும் தேவன் பிரித்துக்கொடுக்கும் என்பார் மேனாட்டாசிரியர். பகன், விதி, ஊழ். அதிர்ஷ்ட மென்பன ஒரு பொருட்கிளவிகளென்பாரவர். அவருரைப்படி, செய்யுள் பின்வருமாறு.

(ஆ) மன்னு தன்னை வணங்கின வர்கட்குப்
பொன்பகிர் பகன் பூரித் தளித்திட்ட
நன்னிதியிற் றலைமையை நண்ணுவம்
உன் னிருந்துணை யுன்னி யடைந்துமே.

வருக்கம் 13.
(வேறு.)

6. வானத்துப் பறந்து செல் அப்பறைவகளுனது மெய்யின்
மானத்தை யேனுங் கோபம் வல்லமை தம்மை யேனும்,
ஈனத்தினீங்கப், பெற்றுச் சிறந்ததே யில்லை; என்றுந்
தானத்தை மாற்று நீர் கா லுங்கதி சருவிடாவே.

(இ-ள்.) ஆகாயத்தில் பறக்கும்போது காணப்படும் (சேனம் முதலிய) பட்சிகள் உனது சரீர பலத்தையாவது, பராக்கிரமத்தையாவது (உனது கோபத்தையொத்த) கோபத்தையாவது அடைந்ததில்லை; நிமிஷந்தோறும் இடம் மாறும் ஜலமும் வாயுவும் உன் (வேகத்தையொத்த) வேகத்தையடைய மாட்டா.—(எ-று.) இது முதல் இச்சூக்தங் கடைசிப் பாட்டு வரையில், ஸவிதாவால் பிரேரேபிக்கப்பட்ட சுநச்சேபன் வருணனைத் துதித்த இருக்குக்களாம். மானம்-பலம். தானம்-ஸ்தானம்.

7. தூய்மையாம் வலியைத் தோய்ந்து
துகளறு வருண மன்னன்
சேய்மை வானுறையும் வேரின்
மருவிய மரத்தாள் நேராய்
வாய்வுற நிறுத்துவான்; அம்
மரத்தொளிக் கற்றைக் கீழ்நோக்
கேய்ந்தொளிகாலும்; அன்ன
எம்முள்நன் கழுந்தித் தோய்க.

## மண்டலம் 1. சூக்தம் 24.

(இ-ள்.) சுத்த பலத்தோடு கூடிய ராஜாவான வருணன், அந்தரிட்சத்தில், மேற்பக்கத்து வேரோடுகூடிய மரத்தினது தாளை நேராக நிறுத்திப் பிடிப்பான். அம்மரத்தினது கிரணங்கள் கீழ்நோக்கிப் பிரகாசிக்கும்; அவை எமக்குள் நன்றாகப் பொருந்தி மறைக.—(எ-று.) இம்மரம் ஸர்வ ஜீவ விருட்சம்போலும் என்பார் மேனாட்டாசிரியர். ஊர்த்துவமூல மதச் சாக மச்வத்தம் ப்ராஹு ரவ்யயம் (அத். 15. ச்லோ. 1) என்னும் கீதா வாசகத்தை இது நினைப்பூட்டுகிறது.—வேர் மேலுங் கிளைகள் கீழுமாகவுள்ள அரசமர மழியாத தன்மைய தென்ப.—என்பது பொருள்.

8. மன்னனும் வருண னென்றாழ் வழங்கவென் றகன்ற பாதை
துன்னுவித் திட்டான் முன்னர்வழியொன் றுந்தோய்ந்திலாது
மன்னிடத் தவன் றன் பாத மருவிடப் பணித்தான்; நெஞ்சி
லின்னல்செ யிடரையெல்லா மெச்சரித் தோட்டினனே.

(இ-ள்.) மன்னனாகிய வருணன் சூரியனுக்கு அகலமான வீதியை ஏற்படுத்தினான். முன்பு கால்வைக்க முடியாதிருந்த விடத்தில் நடந்து செல்லக்கூடிய மார்க்கத்தை யேற்படுத்தினான். மனத்துக்குத் துன்பந்தருஞ் சத்துருக்களை யெச்சரித்து ஓட்டிவிட்டான்.—(எ-று.) அகலமான வீதி உத்தராயண தட்சிணாயன வீதியென்றும், என்றாழ் வழங்கவென்பது சூரியன் உதித்து அத்தமிக்கவென்றும் பொருள்கொள்ளுக. யூபஸ்தம்பத்தில் கட்டப்பட்டுக் கீழே பூமியிற் கால் வைக்க முடியாமலிருந்த இடத்தில் பந்தவிமோசனஞ்செய்து காலை யூன்றி நிற்கும் வண்ணஞ் செய்தானென்று சுநச்சேபன் சொன்னபடி.

9. மன்ன! நூறன்று வாய்ந்த வாயிர மருந்து முன்மாட்
டுன்னியே யுறைவ; உன்ற னுபகார நீண்ட கால
மன்னுவ; நிருதி யெம்மை மருவலா தகற்றாய் தூரம்;
தன்னமாம் பாவ மேனுந் தவிர்த் தெமை விடுவிப்பாயே.

(இ-ள்.) மன்னனே! (வருண) நூறல்ல ஆயிரம் மருந்து வகைகளும் உன்னிடத்துண்டு. உனது அநுக்கிரக புத்தியானது விஸ்தீரணமாக வமைந்துள்ளது. அதனால் நிர்ருதி (பாப தேவதை) எம்மை யணுகாமல் அதனைத் தூரத்தோட்டுவாயாக; சொற்பப் பாபமென்றாலும் அதனை நீக்கி எம்மை விடுவிப்பாயாக.—(எ-று.)

10. இரவினி லுயர்ந்த வானி னிருந் தொளிகாலு மீன்கள்
தாவழ கிழந் தொளிந்து பகலினி லெங்ஙன் சாரும்?
வருணன தாணை தாண்டும் வலியுளா ரெவரே? அல்லில்
விரவிய வொளியிற் றூரா வேந்தனு மொழுகுவானே.

(இ-ள்.) இரவில் ஆகாயமத்தியிற் காணப்படும் நட்சத்திரங்கள் பகலில் ஒளியிழந்து எங்கே செல்லக்கூடும்? வருணராஜனுடைய ஆணை ஒருவராலுங் கடத்தல் முடியாது. இரவில் சந்திரனும் விசேஷப் பிரகாசத்தோடு வருகிறான்.—(எ-று.) அதனால் நீங்கள் மயங்க வேண்டாம், நட்சத்திரங்களும் மீண்டுங் கண்ணுக்குப் புலப்படும் என்று முடிக்க. மீன்கள் ஸப்தரிஷிக் கூட்ட மென்பது வாஜஸநேயி. ஆனால் நிருக்தக்காரர் பொதுவாக எல்லா நட்சத்திரங்களையுங் குறிக்குமென்பார். வருணன் இயற்கையில் நடக்குங் காரியங்களை யொழுங்குபடுத்துந் தேவதை யென்பார் வாலிஸ் (Wallis).

11. மறைகளையுரைத்து நானும் வணங்கியே யிதனைக்கேட்பே
னுறைதனைக்கரங்கொண்டுன்னையஜமானன்வேண்டுகின்றா
னறை யநாதரவு கொள்ளா தறிந்திடாய் வருண! நீண்ட
தறைபுக ழாச! வெங்க ளாயுளைத் தடியல் நீயே.

(இ-ள்.) பிராஹ்மணங்களைக் கூறி வந்தனஞ் செய்துகொண்டே நான் உன்னைக்கேட்பதொன்றுண்டு. கையி லவியையேந்திக்கொண்டு யாககர்த்தா உன்னைப் பிரார்த்திக்கிறான். அநாதரவு செய்யாமல் எங்களது அபேட்சைகளை யறிக. பரந்தகீர்த்தி வாய்ந்த வருணனே! எங்களது ஆயுட்காலத்தைக் குறைத்து விடாதே —(எ-று.) இவ்விருக்கு 'தத்வாயாமி........ ...........ஆயுப்ரமோஷி.' என்ற ஸந்த்யாவந்தன ரிக்காம்.

12. இரவினும்பகலுமிந்தவொருமொழியெனக்குச்சொல்வார்,
தாமுற வதையே யென்ற னிதயமு மெனக்குச் சாற்றும்;
விரவுதூண் டளையின் வேந்தன் யாவனைச்சுநச்சே பன்றா
னூரமொடு துதித்தா னந்த வருணனு மெமை மீட்பிக்க.

(இ-ள்.) இரவும் பகலுமாக இந்த வொரு வார்த்தையையே எனக்குச் சொல்லுவார்கள்; எனது இதயமும் அதனையே யெனக்குச் சொல்லும். சுநச்சேபன் எந்த ராஜாவைத் துதித்தானோ அந்த ராஜாவாகிய வருணன் எம்மை மீட்டுத்தரட்டும்.—(எ-று.) எம்மை என்பதும் சுநச்சேபனையே குறித்த தென்று சாயணர் உரை கூறுவார்.

## மண்டலம் 1. சூக்தம் 24.

13. மும் மரங்களினிற் கட்டுப் பட்டிடர் மூழ்கி நின்று
விம்முறு சுநச்சேபன் றதித்தியன் றன்னை யிவ்வா
றிம்மென விரந்தான்; மாற்றுரெதிர்க்கலாவலியின் ஞானச்
செம்மலாம் வருணன் சேர்ந் தின்னுனைப் பாசத்தி னீக்க.

(இ-ள்.) மூன்று (யூப) மரங்களிலுங் கட்டுண்டு வருந்துஞ் சுநச்சேபன் அதிதி புத்திரனுகிய வருணனை யிவ்விதமாக யாசித்தான். பகைவரால் எதிர்க்க முடியாத ஞானவரசனுகிய வருணன் இவனைப் பாசத்தினின்றும் நீக்கி விடட்டும்.—(எ-று.)

14. வருணனே யுன்னை யாமும் வணங்கி யாகம்புரிந்து
தருண நல்லவியைத் தந்து தாழ்க்கநின்சினத்தையென்போ
மிருணிறை யா மிழைத்த பாவத்தைச் சிதில மாக்கி
யருளுக ஞான மார்ந்த வசுரனே யரசே யின்றே.

(இ-ள்.) வருணனே! உன்னை யாங்கள் வணங்குவதோடு அவிர்ப்பாகத்தோடுகூடிய யக்ஞங்களால் உபசரித்து உனது கோபத்தை மாற்றுகிறேும். ஞானநிறைந்த அஸுரனே, யரசே, எங்கள் செய்கைகளிலுள்ள பாபத்தை மாற்றுவாயாக.—(எ-று. அஸுரன்=அநிஷ்டத்தை நீக்குவதிற் சிறந்தவன் என்பது பதப்பொருள். இப்பொருளில் இது தேவனைக் குறிக்கும். வேதத்திற் பலவிடங்களில் இந்திரனை யஸுரனென்பார். முற்காலத்துத் தேவாஸுரபதங்கள் பரியாயநாமங்களா யிருந்ததுண்டு. பிற்காலத்துத்தான் அவற்றின் பொருள்மாறின. ஜெண்ட் வேதக்காரர்கள் (பார்ஸீக்கள்) இன்னும் தேவனை அஹுர் எனவே யழைப்பார்கள். சிதிலம்=ஜீரணம், தளர்ச்சி.

15. தலை யிடை தாளிம் மூன்றி னெனைத்தளை பாசந் தம்மை
நிலை தளர்ந் தேகு மாறு நிறுவுக, வதிதி பெற்றோய்!
உலைவறு முன்ற னீதி யோதிய நெறியின் வைகி
மலைவுறு பாவ நீங்கி யதிதியை மருவு மாறே.

(இ-ள்.) அதிதி புத்திரனுகிய வருணனே! உனது கேடில்லாத நீதியின் வழியே நடந்து எங்கள் பாபங்களை நீக்கிக்கொண்டு நாங்கள் அதிதியை யடையும் வண்ணம், மேல் கீழ் நடுவென்னும் பக்கங்களில் கட்டப்பட்டிருக்கும் எனது கட்டுக்கள் தளருமாறு புரிவாயாக.—(எ-று.) அதிதியை யடைதலாவது துன்ப நீங்கிச் சுயேச்சையடைந்து சுகப்படல்.

### வருக்கம் 15.

அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

## 25. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 2.

## 21 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன். வடமொழிச்சந்தம்: காயத்திரி. தேவதை : வருணன்.

1. நாளு நாளு நார்களே யாகலின்
ஆளுந் தேவ வருண வு னல்லறீர்
கோ ளுலவுறுங் கொள்கை விதியினை
மீள மீளக் கடந்து நடப்பினும்,

(இ-ள்.) வருணனே! எப்படி உலகத்தில் ஜனங்கள் பிரமா தம் புரிந்து விடுகிறார்களோ அதுபோல நாங்களும் அவர்களைப் போல மனிதர்களாதலால் தினந்தோறும் உனது விரதாநுட்டானங்களில் தவறினபோதிலும்—(எ-று.) (எங்களை மன்னிப்பாயாக) எனக்கூட்டுக. அடுத்தரிக்கோடு இயைத்தலே தகுதி.

2. சீற்றஞ் கொண்டெமைச் சேதித் தழிக்கவும்,
வேற்றுத் தீங்கினை வுற்றவவ் வேளையின்
மாற்றலாத வெகுளி மடுக்கவுங்,
கூற்றி னல்லிரையாகக் கொடுக்கலே.

(இ-ள்.) கோபங்கொண்டு எங்களை வதைக்கவும், அநாதரவுசெய்ய வெண்ணம் வந்தபோது எங்களை உனது கோபத்தீயில் வீழ்த்தவும், விஷயாநுபவங்களுக்கு இரையாகக்கொடுத்துவிடாதே.-(எ-று.) கூற்று=ஈண்டு விஷயாநுபவத்தின்மே னின்றது.

3. மன்னு தாமம் வயங்குங் குதிரையைத்
துன்னு புல்லுணச் சூதன் பிணித்தலின்
நன்னயச் சுக நாங்கள் பெறப்பண்ணுற்
பின்னுவோ முன் மனத்தை வருணனே.

(இ-ள்.) சாரதி புல்லுண்ணுவதற்காகக் கயிறு கட்டிய குதிரையை மேய்ச்சற்றரையிற் கட்டுவதுபோல, எங்களது சுகத்தின் பொருட்டுக் கீதத்தினால், வருணனே, உனது மனத்தைக் கட்டுவோம்.—(எ-று.)

4. வான் வழங்கும் பறவைகள் மன்னுகூ
டேன்று வீழுங் கணக்கென யாவருங்
கூன் மனத்தொடு கூடி யெனைத்துறந்
தான்ற செல்வ மடைய விரைவரே.

(இ-ள்.) பறவைகள் கூட்டினருகிலேயே சுற்றுவதுபோல எல்லாரும், திருகுசிந்தையோடு என்னைவிட்டுவிட்டுப் பொருளை நாடி யலைகிறார்கள்—(எ-று.) இச்செய்யுள் மேனாட்டாசிரியரது மொழி பெயர்ப்புக்கியையச் செய்தது. எனை, சுநச்சேபனைக் குறித்து நின்றது.

5. எஞ்சுகத்துக் கெக்காலம் வலியெனுங்
கஞ்சுகத்தை யணிந்த நரன்றனை
விஞ்சு தூர திருட்டி வருணனை
யெஞ்சுறு தெங்கருமக் கழைப்பமே?

(இ-ள்.) வலிமிகுந்து கீர்த்தி வாய்ந்தவனும், நரனும், தூர திருஷ்டி (வெகு விஷயங்களை நோக்குதல்) உள்ளவனுமான வருணனை யாங்கள் சுகமடையும்பொருட்டு, எப்பொழுது எங்களது கருமங்களை நோக்கி வருமாறு செய்வோம்?—(எ-று.)

வருக்கம். 16.

6. களிப்பினோ டிதைக் கண்டிரு தேவரும்
ஒளிப்பி லெம்மவி யுண்பர் பொதுவினே;
சலிப்புறாது நோன்பாற்று மகன்றனை
நலித்த லென்று மவர்நடை யல்லவே.

(இ-ள்.) யாவராலும் விரும்பப்படத்தக்க மித்திராவருணர்கள் இருவரும் யாங்கள் தரும் அவியைப்பொதுவாக உண்கிறார்கள். கர்மாநுஷ்டானபரனான தாசுஷனுக்கு அவர்கள் பிரமாதம் விளைப்பதில்லை.—(எ-று.) வேநந்தா வென்பதற்கு மேனாட்டாசிரியர் களிப்பினோடு என்று பொருள் கொள்ளுவார். அவரே, திடீரென்று இப்பாட்டில் மித்திராவருண ரிருவரையும்பற்றி ஏன் இந்த ரிக்குக் கூறவேண்டுமென ஆசங்கித்து இது பின்னர் இடைப்புகுத்திய செய்யுளா யிருக்கவேண்டுமென்பார். தாசுஷன், அவியளிப்பவன்; நோன்பாற்றுமகனென்றார் செய்யுளில்.

7. அந்தரத்துப் பறந்துசெல் வீக்களின்
சுந்தரம் பெறு பாதையை யோருவன்,
நந்து மாக்கட லுயக னுதலின்
அந்தி லோடு நாவாயு மறிவனே.

(இ-ள்.) இவ்வருணன், ஆகாசமார்க்கத்திற் செல்லும் பட்சிகளின் பாதையை யறிவான், கடலில் வசிப்பவனுதலின் கப்பல் செல்லும் நெறிகளையு மறிவான்.—(எ-று.) அவன் எங்களைக் கட்டவிழ்த்து விடுகவென முடிக்கவென்பார் சாயணர். வீ, பறவை. வருணன், கடலுக்கும் வானுக்கும் நாயகன்.

8. அவன், விதிக்க ணமைந்து, நடைபெறுந்
தவம்பொருந்து தம் புத்திரர் தம்மொடு
நிவம் பொருந்துறு மாறிரு திங்களை
நவம்பொருந்து பின்றிங்களை யோர்வனே.

(இ-ள்.) விரதாநுட்டானத்திற் சிறந்து, அவ்வருணன், (நாள்களாகிய) புத்திரர்களோடு விளங்கும் பன்னிரண்டு மாதக் கணக்கினையும், அதனோடு புதிதாக வுண்டாகும் அதிகமாஸக் கணக்கினையும் அறிவான்.—(எ-று.) சாந்திரமான மானதுபற்றித் திங்கள் என்றார். இச்சாந்திரமானம் தற்காலம் ஆந்திர தேச நடப்பு; தமிழர்களது மாஸம் ஸெளரமானமாம்.

9. உன்னதத்தி னுயர்ந்து விசாலமாய்
மன்னி நோக்கப் பெரிதாய் வயங்கி, ஏர்
துன்னு காவினைத் தோய்வுறு பாதையை,
உன்னி மேலுறை தேவரை யோருவான்.

(இ-ள்.) விஸ்தீரணமாயோங்கிப் பார்ப்பதற்குப் பெரிதாயுள்ள வாயு (காற்று) செல்லும் பாதையை யறிவான்; அதற்கு மேல் வசிக்குந் தேவர்களையு மறிவான்—(எ-று.) வருணன் தோன்று எழுவாய்.

10. திண்மை நோன்பு சிறந்தவன் சோபன
கன்மம் வாய்ந்த வருணன் கடைத்தலை
யண்மித் தன்பிரசைக்க ணமருவா
னெண்பெறு மரசாட்சி யியையவே.

(இ-ள்.) திடவிரதனும், சோபன கர்மமுள்ளவனுமாகிய வருணன் தனது ஜனங்களிடத்து வந்து அவர்கள் மத்தியில் அவர்களை யாளும்பொருட்டு வீற்றிருப்பான்.—(எ-று.)

வருக்கம் 17.

11. அங்கிருந் தெலா வற்புதமும் உணர்ந்
திங்கு முன்னர் நடைபெற் றெழில்மிகப்
பொங்கு கன்மமும், போதும் புதுவதும்
அங்க மாகவே நோக்கி யணேவனல்.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்து எல்லா வற்புத கன்மங்களேயுமுணர்ந்து, இவ்விடத்து முன்பு நடந்தேறிய காரியங்களேயும் இனி நடக்கவேண்டிய புதுக் காரியங்களேயும் நன்ருகப் பார்ப்பான்.—(எ-று.)

12. என்று மெந்தமக், கெவ்வகை ஞானமுந்
துன்றி நிற்கப் பொலியு மாதித்தியன்
நன்று சாரு நெறிகளே நாட்டுக;
ஒன்று மாயுளு மோங்க வமைக்கவே.

(இ-ள்.) சோபநப்ரக்ஞையோடுகூடிய அவ்வதிதிமகனுகிய வருணன், எப்போது மெங்களுக்கு நன்னெறியை யேற்படுத்தட்டும்; எங்களது ஆயுட்காலத்தை விருத்தி செய்யட்டும்.—(எ-று.) ஆதித்தியன், அதிதிபுத்திரன் என்ற பொருளில் வருணனேக் குறித்து.

13. இரணியத்தி னியன்ற கவசத்தை
யரணெனப் புனேந் தாரும் வருணனுங்
கிரணம் வாய்ந்த வுடையிற் கிளர்ந்தனன்;
அருண காந்தியு மெங்கு மமைந்ததே.

(இ-ள்.) ஸ்வர்ண கவசந்தரித்து வருணன் தன் பெருத்த வுடலேக் கட்டுகிறுன். அதன் கிரணமும் எல்லாப் பக்கமும் வீசுகிறது.—(எ-று.) 'வருணதூதருஞ் சூழ்ந்து மலிந்தனர்' என்பது மேனுட்டாசிரியர் உரைப்படி நான்காமடியாம். அவர் மோட்ச மூலரது புராதான ஸம்ஸ்கிருதபாஷா சரித்திரம் 536-வது பக்கத்தினேத் தம் மொழிபெயர்ப்புக்கு மேற்கோளாகக் காட்டுவர். வருணதூதரென்றது இதர அதிதிமக்கள்போலு மென்பார்.

14. அரிகள் யாரு மடையுருர் தேவனே;
நரர் நடுங்கக் கொடுமை நடத்துவோர்
திருகு சிந்தைத் தொழிலரும் அன்னனே
விரகு செய்து மெலிக்க வணேகுருர்.

(இ-ள்.) வைரிகள் எவரும் (வருணதேவனுக்கஞ்சி) அத்தேவனிடத்து வரமாட்டார்கள்; மனிதர்களேக் கொடுமையாக நடத்துவோரும், பாபபுத்தியுள்ளவருங்கூட அவனேத் தொட மாட்டார்கள்.—(எ-று.)

15. மக்களுக்குக் குறைவின்றி மாண்டசீர்
மிக்க வுண்டியை மேன்மையி னீபவ
னெக்க வெம் முதரத்துக்கு மொல்லெனத்
தக்க பூரணத் தன்மையி னுக்குவான்.

(இ-ள்.) மனிதர்களுக்கு வேண்டிய கீர்த்தி பொருந்திய வன்னத்தைக் குறைவில்லாமல் எப்பொழுதுங் கொடுப்பவன் (வருணன்) அப்படியே எமது வயிற்றுக்கு வேண்டியவற்றையும் பூரணமாக விரைவிற் றருவான்.—(எ-று.)

வருக்கம் 18.

16. ஆக்கள் கொட்டி லணைவது தூக்க, இங்
கூக்கு மென்னறிவு, ஓங்கிய தூரநோக்
காக்கு மன்னவன் றன்னை யணையவென்
றேய்க்கு மீவிருப் போடு மியைவுறும்.

(இ-ள்.) கொட்டிலை நோக்கிப் பசுக்கள் போவதுபோல, (சுநச்சேபனுகிய) என்னுடைய புத்திகள், தூர திருஷ்டியோடு கூடிய அவ்வருணனிடத்துச் செல்கின்றன.—(எ-று.) கவ்யூதி: மேய்ச்சற்றரை யென்பார் மேனுட்டாசிரியர், கொட்டிலென்பார் சாயணர். தீனியுள்ளவிடம் என்பதை அது குறித்து நின்றது.

17. மீண்டு மோர்முறை மேவி யளவளாய்
ஈண்டுவோம், வரலேனெனின், என்மது
ஈண்டு கொண்டுதந் தேய்ந்தது; யாகவான்
றூண்ட விச்சையிற் றேய்ந்ததை யார்குவை.

(இ-ள்.) என்னல் மதுவானது இங்கே ஸம்பாதித்து வைக்கப் பட்டிருப்பதால், இன்னெருமுறை நாம் உரையாடுவோம். ஹோதாவைப்போல நீயும் உனக்கிஷ்டமானதை யுண்கிறுய்.—(எ-று.) யாகவானென்றது ஹோதாவைக் குறித்து நின்றது. தூண்ட உவமைப்பொருளில் வந்தது. யாகவான் பிரேரேபிக்க வென்னலுந் தகும். வரலேனெனின், பொருள் நோக்கி அடி நிறைக்கச் சேர்த்தது.

18. கண்டனெ னின்றியாவர்தங் கண்ணிலும்
விண்டு தோன்று மவனை யவனிமேல்
மண்டு தேரின் மகிழ்ந்து வருகையின்;
கொண்டன னவ னென்றுதி யீதெலாம்.

(இ-ள்.) எல்லாருடைய கண்ணுக்குந்தோன்றுமவனை (வருணனை)ப் பூமியின்மேல் தேரின்மீது உண்மையாகவே கண்டேன். என்னுடைய இத்துதியையெல்லாம் அவன் ஏற்றுக்கொண்டான்.—(எ-று.)

19. ஈண்டு கூவி யழைப்பதை யேன்றுகேள்;
ஆண் டெமை யருள்பாலிக்க வின்றுநீ;
வேண்டு மென்றுன் றுணையை விழைந்துநான்
வேண்டினே னுனை யெண்ணி வருணனே.

(இ-ள்.) வருணனே! நான் கூவியழைப்பதனுக்குச் செவிகொடுப்பாயாக. எங்களையாட்கொண்டு எங்களுக்குச் சுகத்தைத் தருக. என்னைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஆசையோடு உன்னை நோக்கித் துதித்தேன்.-(எ-று.) இது 'இமம்மே வருண ........த்வாமவஸ்யுராசகே' என்ற ஸந்தியா வந்தன இருக்கு.

20. ஞான மார்ந்தவ மாகம் புவியொடும்
ஊனமில்லெச் சகத்து மொளிர்கிறாய்;
ஈன மின்றி யா மின்பமடைய நீ
தானுங் கேட்டெதிர் ஆசியைச் சாற்றவே.

(இ-ள்.) மேதாவியே! (வருணனே) ஆகாசம், பூமி முதலிய எல்லாச் சகங்களிலும் நீ விளங்குகிறாய். நாங்கள் க்ஷேமத்தை யடையும்படி நீயுஞ் செவிகொடுத்து எங்களைக் காப்பதாகப் பிரதியுத்தரந் தருவாயாக.—(எ-று.) ராஜஸி என்பதற்கு விளங்குகிறாயென்னுதபடி அரசு செலுத்துகிறாயென்றும், யாமனி என்பதற்கு க்ஷேமமடையும்பொருட்டு என்னுதபடி, வழியில் போகும்போது என்றும் மேனாட்டாசிரியர் உரை கூறுவர்.

21. முடி வயங்கு முடியை யவிழ்க்கவே,
நடுவொளிருந் தளையை நசித்திட,
அடியி லேன்றிடு கட்டை யகற்றுக,
படியில் யானும் பரிந்துயிர் வாழ்கவே.

(இ-ள்.) உலகத்தில் யான் ஜீவித்திருக்குமாறு, தலை, உடல், கால், இவற்றிலுள்ள கட்டுக்களை யறுத்து விடுவாயாக.—(எ-று.)

வருக்கம் 19.

அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

## 26. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 3.
## 10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன். வடமொழிச்சந்தம்: காயத்திரி. தேவதை: அக்கினி.

1. வலிமை யுண்டி வளர்க்கு மதிபதி,
தலைமை சாரவி யேற்கத் தகுந்தவ,
சுலவு முன்றன் சுவாலை யுடைதரித்
திலகு மிவ்வெ மக நிறை வேற்றவே.

(இ-ள்.) ('அக்கினி தேவர்களுக்கெல்லாம் முகமாதலால் அவனைத் துதிப்பாயாக' வென்று வருணன் சொல்லச் சுநச்சேபன் இவ் விரண்டு சூக்தங்களாலும் அக்கினியைத் துதிக்கிறான்.) எக்கியத்துக்கு யோக்கியமானவனே! வலிமைக்குக் காரணமான அன்னத்தை வளர்க்கும் பதியாகிய அக்கினியே! உன்னைச்சூழ்ந்துள்ள சுவாலையாகிய வஸ்திரத்தைக் கட்டிக்கொள்க (கொழுந்து விட்டெரிக). எங்களுடைய இந்த யக்ஞத்தைச் செய்து முடிப்பாயாக.—(எ-று.) உரையிற்சொன்ன வருணன் கூற்றை ஐதரேயப் பிராஹ்மணம் 7-16ற்காண்க.

2. என்று, மங்கி, யிளமை சிறந்தவ
துன்று மேன்மையைத் தோய்ந்தவ, தேசொடு
மொன்றி யோம முளுற்றி யொளிபெற
நின்ற வாசகப் போற்றுற நிற்கவே.

(இ-ள்.) எப்போதும் இளமை சிறந்தவனே, சிரேஷ்டமானவனே, அக்கினியே, தேஜஸோடுகூடி, ஹோமம் வளர்த்துக் கீர்த்தி வாய்ந்த துதிகள் உன்னைப்புகழ நிற்பாயாக.—(எ-று.)

3. சுற்ற மானவர்க் கீந்திடுஞ் சுற்றமொத்
துற்ற நண்பற் குதவுறு நண்பனேய்ந்
தெற்றைக்குஞ் சுதராகு மெமக்குச்சீர்
துற்ற தந்தை நீ தோய்க்க வபீட்டமே.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய (அக்கினியே!) பந்துக்களுக்கு எப்போது முதவும் பந்துவைப்போலவும், மற்றொரு

நண்பனுக்கு என்றும் மாறாத உதவி செய்யும் நண்பனைப்போல வும், எங்களுக்குப் பிதா ஸ்தானத்திலுள்ள நீ உனக்குப் புத்திர ஸ்தானமாகிய எங்களுக்கு எப்போதும் எங்களுடைய அபீஷ் டங்களை யளிப்பாயாக.—(எ-று.)

4. வருணன் மித்திரன் வாய்க்கு மரியமான்,
தருணந் தன்னிற் றடுக்கும் பகைவரை
மரண மெய்த மடுப்பவர், எங்குசை
யரணமாய், மனுயாகத்தின், வைகவே.

(இ-ள்.) (அக்கினியே !) எம்மகத்துக்கு இம்சை செய்ப வரைக் கொல்லும் ரிசாதஸர்களாகிய வருணன், மித்திரன், அர் யமா, இம்மூவரும் மநுப்பிரஜாபதியின் யாகத்தில் அமர்ந்தது போல எங்களது தருப்பையின்மேல் அமரட்டும்.-(எ-று.)மநுஷ: எனப்பன்மையிலுள்ளது. இது ஒருமைப்பன்மை மயக்கமாகக் கொள்வார் சாயணர். 'அரணமாக, மனிதரின், வைகலே.' மனி தரைப்போல அமரட்டும் என்று மொழிபெயர்ப்பார் மேனாட் டாசிரியர். அர்யமா, ஆதித்யர்களில் ஒருவன்; காலை மாலை ஸந் திகளுக்கு அதிதேவதை. மித்திரா வருணர்களோடு சேர்த்துக் கருதப்படுவன்.

5. பண் டெமக்குமுன் றோன்றிய தூதனே
மண்டு மிம்மகக் கண்ணெம தோழமை
யண்டி யுள்ளக் களியினி லாருக;
கொண்ட விவ்வெம கீதஞ் செவிக்கொள்க.

(இ-ள்.) பண்டைக் காலத்தில், எங்களுக்கு முன் உற்ப வித்தவனே, ஹோமத்தை நடத்துபவனே! (அக்கினியே) நாங் கள் செய்யும் யக்ஞத்தில் எங்களுக் கநுக்கிரகிக்குந் தோழமை கொண்டு சந்தோஷிப்பாயாக. எங்களால் உபயோகிக்கப்படும் இத் துதிப்பாட்டுக்களைக் கேட்பாயாக.—(எ-று.) தூதன், ஹோதா, ஹோமநிஷ்பாதகன், ஹோமத்தை நடத்துபவன் என்றார் உரையில்.

வருக்கம் 20.

6. ஒவ்வு நித்திய மாக வித்தாரமாய்
எவ்வெத் தேவரை யெப்பொழுதேத்தினும்
அவ்வக் கால மெலாம்உன் இடத்தினே
இவ்வயி னவி யாவுதி யேயுமே.

(இ-ள்.) சாசுவதமாகவும் விஸ்தாரமாகவும், (வருணன், இந்திரன் முதலிய) நானாவிதமான தேவர்களை எந்தெந்தக் காலத்திலேத்தினாலும், அப்பொழுதெல்லாம் அவர்களுக் களிக்கப்படும் அவியை உன்னிடத்திலே ஆஹுதி செய்வோம். (அதனால் தேவதாந்தர விஷய யாகங்களிலும் நீயே ஸேவிக்கப்படுகிறாய்.)—(எ-று.)

7. மன்பதைக்குப் பதி, மகத் தூதுவன்,
இன்ப மெய்திச் சிரேட்ட மியைந்தவன்,
நண்பனா யெமக்கிங் குற, யாங்களு
மன்ப ராகுக நல்லெரி யோம்பியே.

(இ-ள்.) பிரஜைகளை வளர்ப்பவனும், எக்கியத்தை நடத்துவோனும், இன்பமடைந்தவனும், வரேண்யனுமான (அக்கினி) எங்களுக்கு அன்பாக விருக்கட்டும். யாங்களும் நல்ல அக்கினிகளை வளர்த்து அவனுக்கு அன்பர்களாக விருக்கட்டும்.-(எ-று.)

8. நற்சுடர்களினோ டொளிர்தேவர்க
ணற்சிறப் பவி நாடித் தரித்தலி
னற்சுடர்களினோ டிவண் நாங்களு
நற்சுட ருனை நாடி யிரப்பமே.

(இ-ள்.) சோபன அக்கினியோடு கூடிய தேவர்கள் சிறப்பு வாய்ந்த அவியைத் தாங்குகிற காரணத்தால், சுடர்கள் விளங்கும் அக்கினியோடு கூடிய யாங்களும் (அக்கினி!) உன்னை யாசிப்போம்.—(எ-று.) தேவர்கள் என்னும் பதத்திற்கு இருத்துவிக்குக்கள் என்று பொருள் கூறியுள்ளார் சாயணர்.

9. அமரத் தன்மை யடைந்து சிறந்தவ,
அமருங் கன்ம வநந்தரம் ஆற்றிடும்
அமரத் தன்மை யடைந்திலாவெந் துதி
சமமதா நம்மிருவருக்கும் முற.

(இ-ள்.) மரண ரஹிதமான (அக்கினியே!) கர்மாநுஷ்டானாநந்தரம், மர்த்தியர்களாகிய யாங்கள் சொல்லும் ஸ்தோத்திரங்கள் நம்மிருவருக்கும் பொது தர்மத்தோடு கூடி யிருக்கட்டும்.—(எ-று.) இவ்வெக்கியம் நன்றா யநுஷ்டிக்கப்படட்டுமென்று யஜமானன் விஷயத்திலும், நன்றாயநுக்கிரகிக்கட்டும் என்று அக்கினி விஷயத்திலும் செல்லட்டும் என்பது தோன்ற இருவருக்கும் சமமதாஉற என்றார்—சாயணர்.

10. மங்குறாத வலியின் மகனெனும்
அங்கி யெல்லா வெரியொடு மிம்மகந்
தங்கி யெந்துதிச் சேவையை யேற்றிவ
ணங்க மாக அனத்தை யளிக்கவே.

(இ-ள்.) பலத்தின் புத்திரனே! அக்கினியே! எல்லா எரிகளோடும் இந்த யக்ஞத்தினிடத்திற்றங்கி எங்களது ஸ்தோத்திரங்களால் ஸேவிக்கப்பட்டு எங்களுக்கு அன்னத்தை யளிப்பாயாக.—(எ-று.)

வருக்கம் 21.

## 27. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 4.

## 13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : சுநச்சேபன். வடமொழிச்சந்தம் : 1-12 காயத்திரி, 13 திருஷ்டுப். தேவதை 1-12 அக்கினி, 13 விசுவதேவர்கள்.

1. மட்டில் பன்மக மாண்டவற்றிற்கெலா
மிட்ட மான விறைவனை யோங்கியே
நெட்டை வாற்பரி நேரு மங்கி யுனை
யொட்டி நற்றுதி கொண்டு வந்திப்பெனே.

(இ-ள்.) யாகங்களுக்கெல்லாம் இறைமை (தலைமை) வகிக்கும் அக்கினியும், நீண்ட வாலோடுகூடிய குதிரையைப் போன்றவனுமாகிய வுன்னை ஸ்துதிகளால் வணங்குவோம்.—(எ-று.) குதிரை தன் வாலால் எப்படித் தன்னை இம்சிக்கும் கொதுகு ஈ முதலியவற்றை யோட்டுகிறதோ அம்மாதிரியாக நீயும் உனது சுவாலையால் எங்களுடைய விரோதிகளைக் கண்டிக்கிறாய் எனத்தொழிலுவமை யாயிற்று.

2. நீண்ட காலடிச் சத்துவச் சூனுவாம்
ஆண்டவ னெஞ்சுகத்தை யளித்திட,
ஈண் டெமக்கெம இச்சைக ளோர்ந்தபின்
வேண்டுமாறு விழைந்து சொரிகவே.

(இ-ள்.) விசாலமான காலடியுள்ளவனும், பலத்தின் புத்திரனும் ஆனவன் எமக்குச் சுகத்தைத்தரட்டும். எம்மால் விரும்பப்பட்டவைகளையும் வருஷிப்பவ னாகட்டும்.—(எ-று.)

அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

3. நடை பரந்தவ தூரத் தருகினி
னிடை பரந்திங் கனிட்டச் செயல்விரிந்
திடையு மர்த்திய ரெங்கள் பகைவரைத்
தடை புரிந்தெமைக் காத்திட வென்றுமே.

(இ-ள்.) வியாபிக்கு நடையோடு கூடியவனே! நீ, தூரத்தினின்றும் அருகினின்றும் வந்து பாப காரியங்களைப் புரியும் எங்களது விரோதிகளாகிய மர்த்தியர் (மனிதர்) எங்களையணுக வொட்டாதபடி தடுத்து எங்களை ஸர்வகாலமும் பாலிப்பாயாக. —(எ-று.) விச்வாயு:, யாருக்கு எல்லாவிடத்துங் கமன முண்டோ அவன், இதனையே நடைபரந்தவனென்றார்.

4. தேவர்க் கங்கி சிறந்த வவியிதை
யாவ லோடு புதிதின் வகுத்தவிப்
பாவு கீர்த்தி பகரு மறையினை,
மேவுமா றவர்க் கன்பின் விளம்புக.

(இ-ள்.) அக்கினியே! (எங்களால் முன்பநுஷ்டிக்கப் பட்டதாயினும்) தேவர்க்கென்று சிறந்தோங்கிய அவிக்கொடையையும், நூதனமாகச் செய்யப்பட்ட துதிரூபமான மந்திரத்தையும் பற்றித் தேவர்களுடைய முன்னிலையில் நன்று யெடுத்துச்சொல்லுவாயாக.—(எ-று.)

5. உத்தமத்து வானோங்கிய வுண்டியின்
மத்திமத் தல மார்ந்த வளத்தினி
னித்தரையி னியன்ற செல்வத்தினி
னெத்தெமக் கெவ்விடத்தும் பங் கீகவே.

(இ-ள்.) விண்ணில் வளரும் உத்கிருஷ்டமான அன்னப் பொருளில் எங்களுக்குப் பங்காளியாக விருப்பாயாக. மத்திமத் தலமாகிய வந்தரத்தில் வளரும் உணவுப் பொருள்களிலும் எமக்குப் பங்களிப்பாயாக. அந்திமத்தலமான பூமியிலுண்டாகுஞ் செல்வத்திலும் எங்களுக்குப் பங்களிப்பாயாக.—(எ-று.)

வருக்கம் 22.

6. சித்திரக் கிரணந் திகழ் காந்தியோய்!
தத்து சிந்து தயங்கிய வூர்மியை
யொத்த நின்கொடை பங்கிட் டுவக்கையின்
நத்தி யெக்கிய னுடிக் கசிவையே.

## மண்டலம் 1. சூக்தம் 27.

(இ-ள்.) சித்திரபானுவாகிய அக்கினியே! சிந்து (ஆறு) வானது அலையாக (வாய்க்கால்களாகப்) பிரிந்து தன்கணிறைந்த நீரைப் பங்கிடுவதுபோல உனது கொடைகளைப் பங்கிடுகையில், யாகஞ் செய்வோனுக்கு அவனது கர்மபலன்களை யளிக்கிருய்.—(எ-று.) ஊர்மி, அலை, யீண்டு கிளைக் கால்வாய்களைக் குறித்து நின்றது. கசிதல்-இளகிச் செல்லுதல் ஈண்டு கர்மபலன்களை யளித்தல்.

7. போரில் யாரை யுவந்து புரக்கிருய்,
தாரின் யாரினைச் சண்டைக்குத் தூண்டுவாய்,
ஏரி னக்கினி யம்மக னென்றைக்குந்
தீருருத அனஞ் சிறந் தோங்குவான்.

(இ-ள்.) அக்கினியே! யுத்தத்தில் என்னுல் காப்பாற்றப் படுபவனும், சண்டைக்குத் தூண்டிவிடப்படுபவனுமாகிய மர்த்தியன் எப்பொழுதும் வற்ருத வுணவுப் பொருள்களோடு விளங்குவான்.—(எ-று.) இஷ: அன்ன மென்பார் சாயணர். வலியென்பார் மேனுட்டாசிரியர். அதனுல், தீருருதவலி சிறந் தோங்குவான் என்பதும் பாடம்.

8. மாற்றலரை யடக்கும் வலியுளோய்
போற்று மன்பனைப் போரினில் வெல்பவன்
சாற்றுதற் கிங் கிலை; நனிகீர்த்திவா
யூற்ற மொய்ம் பிவ ணன்னவற் றோங்குமே.

(இ-ள்.) சத்துருக்களை யடக்கும் வலியுள்ள வக்கினியே! உன்னுடைய பக்தனது வல்லமையைக் கடக்கும் சக்தி எவனுக்குமில்லை. மேலும் அவ் யஜமானனுக்குப் புகழ் நிறைந்த வலிமை விசேஷங்களு முண்டு.—(எ-று.)

9. எல்லவர்த மிடத்து மியைபவன்
செல்லும் போரிற் றிடம்பெற வெங்களை
வெல்லும் போர்ப்பரி மீது கடப்பித்தே
யொல்லும் விப்பிர ரோடு பலன்றால்.

(இ-ள்.) எல்லா மனிதர்களோடுங் கூடியவனுன (அக்கினி) யுத்தத்திற் குதிரைகளி னுதவியைக்கொண்டு (போர்க்களத்தைக்) கடந்து செல்லுமாறு செய்க. (இருத்துவிக்குக்களான) விப்பிரர்களோடு களிக்கும் அக்கினி எங்களுக்கு யாகபலனை யளிக்கட்டும்.—(எ-று.)

10. போற்றுணர்ந்தவ வீடுதொறும் புகுந்
தாற்றும் யாக மநுக்கிரகத்துறப்
போற்றுவாய்; யஜமான னுருத்திரற்
காற்றுங், கண்ணுறத் தக்கநற் றோமமே.

(இ-ள்.) போற்றினு லுணரப்படுபவனே! (அக்கினியே!) வீடுகள்தோறும் நடக்கும் யாகங்களை யனுக்கிரகிக்குமாறு வீடு வீடாய்ப் புகுவாயாக. யஜமானனும் உருத்திரனுகிய வுனக்காக அழகிய ஸ்தோமங்களைப் பாடா நின்றான்.—(எ-று.)

வருக்கம் 23.

11. தன்மை யோங்கு மகான் பரிச்சின்னமே
தன்னமும் பெறுத் தூமக் கொடியினன்
மன்னு சோதி வளர்ந்து பெருத்தவன்
அன்ன மெங்களுக் கேய மகிழ்கவே.

(இ-ள்.) குணஞ்சிறந்த மகானும், அபரிச்சின்னனும், புகைக்கொடியை யுடையவனும் (புகையினலறியப்படுபவனும்,) மிகுந்த காந்தி யுடையவனுமாகிய அவன் (அக்கினி) எங்களுக்கு அன்னம் (அல்லது பலம்) பொருந்துமாறு ஸந்தோஷப் படட்டும்.—(எ-று.)

12. தெய்வ மக்களைப் பாலிக்கு மக்கினி,
தெய்வ ஞாபக மூட்டும் பதாகை, தன்
செய்ய காந்தி பெருத்தவன், செல்வனின்,
துய்ய வெந்துதி தன்செவி தோய்க்கவே.

(இ-ள்.) தேவ சம்பந்தமுள்ளவனும், பிரஜைகளைப் பாலிப்பவனும், தேவஞாபகத்தை மூட்டுங் கொடியும், பிரகாசமிகுந்தவனுமான அக்கினி, செல்வவான் (வந்தியரின் துதியைக் கேட்பது) போல எங்களது உக்தங்களை கேட்கட்டும்.—(எ-று.)

(வேறு.)

13. பெருவலித்தேவர்போற்றி; பிறங்குசிற்றிறைவர்போற்றி,
தருண நல்லிளைஞர் போற்றி; தக்கமூத்தவர்கள் போற்றி;
யுரியபோற்றிழைப்பாஞ்சத்தியுள்ளவவ்வரையும்; தேவர்
அரிய விவ்வெமது போற்றை யன்றி யங்கீகரிக்தல்,

(இ-ள்.) [அக்கினியினாற் பிரேரேபிக்கப்பட்ட சுநச்சேபன் விச்வதேவர்களைத் துதிக்கிறான்.] மகத்தாகிய (குணமும்) வலியுமுள்ள தேவர்களுக்கு நமகஸ்காரம்; (குணக்குறைவுள்ள) சிறு தேவர்களுக்கு நமஸ்காரம்; வயதிற் சிறியவர்களுக்கு நமஸ்காரம்; வயதின் மூத்தவர்களுக்கு நமஸ்காரம்; சக்தியுள்ளவரையில் தேவர்களை ஸ்தோத்திரஞ் செய்து வணங்குவோமாக; தேவர்கள் எங்களது இந்த ஸ்தோத்திரத்தைக் காட்டிலுஞ் சிரேஷ்டமான வேறு ஸ்துதிகளை யெப்பொழுதும் அங்கீகரிக்காமலிருக்கட்டும்.—(எ-று.) தேவ ரீண்டு விச்வதேவர்களாம்.

வருக்கம் 24.

## 28. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 5.
## 9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன். வடமொழிச்சந்தம்: 1-6 அநுஷ்டுப், 7-9 காயத்திரி. தேவதை: 1-4 இந்திரன்; 5, 6 உரலபிமானி தேவதை, 7, 8 உரலுக்கும் உலக்கைக்குமுரிய தேவதை: 9, பிரஜாபதியாகிய அரிச்சந்திரன்; அதிஷவணசர்மதேவதை யென்றுஞ் சொல்லலாம். 1-4 ரிக்குக்களுக்குத் தேவதை இந்திரஉலூகலர்கள் என்பது யாஸ்கர், காத்தாக்கியர் இவர்களின் மதமென்றும், இந்திரன் என்பது பாகுரி மதமென்றும் பிருஹத் தேவதை கூறும்.

(வேறு.)

1. தோய்ந்த பேரடி விசாலமாத் தோய்ந்த கல்லதனை,
யாய்ந்த சோமத்தை நசுக்க வென் றுயர்த்திய விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருக.

(இ-ள்.) இந்திரனே! எந்த யக்ஞத்தில், எல்லாக் கருமங்களிலும் அபிஷவணஞ் செய்யும் பொருட்டுக் கல்லானது விசாலமான அடியோடு உன்னதமாகத் தூக்கிப் பிடிக்கப்பட்டுள்ளதோ அந்தக் கர்மத்தில் உரலினின்றுந் தாமே வழிந்து கீழொழுகுஞ் சோமத்துளிகளைக் குடிப்பாயாக.—(எ-று.) அபிஷவணம் செய்தல், நசுக்கிப்பிழிந்து ஆவுதிசெய்தல்.

2. தோய்ந்த தட்டுகளிரண்டு சாறேந்துதற் கென்று
வாய்ந்த நற்சகனத்தினின் வைத்த வவ்விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில் பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருக.

(இ-ள்.) இந்திரனே! எந்த யக்ஞத்தில் தட்டுகள் சாற்றை யேந்துவதற்காகச் சகனம் (இடுப்புமூட்டு) போல வைக்கப்பட்டுள்ளனவோ அந்தக் கர்மத்தில் உரலினின்றுந்தானே வழிந்து கீழொழுகுஞ் சோமத்துளிகளைக் குடிப்பாயாக.-(எ-று.)

3. ஏய்ந்து சாலைபி னுட்புகல் வெளிவர விவற்றை
யாய்ந் தடிக்கடி நாரியும் பழகு மவ்விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருக.

(இ-ள்.) இந்திரனே! எங்கே யாகபத்தினி உலக்கை கீழும் மேலுமாகச் செல்லும் முறையைக் கவனித்துச் சிக்ஷை கற்றுக்கொள்கிறளோ அங்கே உரலினின்றும் விழுந்து கீழொழுகுஞ் சோமத்துளிகளைக் குடிப்பாயாக.—(எ-று.) மேனுட்டாசிரியர் மதப்படி இது 'ஏய்ந்துலக்கை மேலெழுந்து கீழ் விழுவதை யெண்ணி' யென்றிருத்தல் வேண்டும். அடுத்த பாட்டிற் கயிற்றைக் கட்டியிழுக்கும் முறை வெளிப்படுவதால் அதனை யிழுப்பவள் யாகபத்தினியா யிருக்கவேண்டுமென்று ஊகிக்க விடமுண்டு. சாலை, யாகசாலை.

4. பாய்ந்து செல்லுறும் பரியினைச் சவினத்தாற் பிணிப்ப
தேய்ந்து மத்தினைக் கயிற்றினுற் பிணிக்கு மவ்விடத்தி
னேய்ந்து தாகமோ டிந்திர வெழில்பெறு முரலின்
வாய்ந்து கீழ்விழுஞ் சுதையினை வளமுறப் பருக.

(இ-ள்.) குதிரைக்குக் கடிவாளம் பூட்டுவதுபோல மத்துக்குக் கயிற்றைச் சுற்று மவ்விடத்தி னுரலினின்றும் வழிந்து கீழொழுகுஞ் சோமத்துளிகளைக் குடிப்பாயாக. — (எ-று.) முதல் ஏய்ந்து, உவமைப் பொருளில் வந்தது.

வருக்கம் 25.

5. கலுவமே யுனை யிற்றொறும் பணிக்கென வமைத்து
நிலவ விட்டன ரென்பது நிசமெனி னீயிங்
குலவு துல்லியவுன்றெலிவுவப்பினிற் றருவாய் [றே.
சுலவுவெற்றியோர்முரசொலித்தொனியினைப்போன்

(இ-ள்.) உரலே உன்னை (யாக) வீடுகடோறும் வேலைக்காக அமைத்து வைத்திருப்பது நிசமானல், வெற்றிகொள்ளு

வோரது துந்துபி வாத்தியம் சப்திக்கும் ஓசையைப் போன்ற அவ்வளவு உரத்த குரலோடும் சப்திப்பாயாக.—(எ-று.) கலுவம் ஈண்டு உரல்: உரலபிமானி தேவதையைக் குறிக்கும்.

6. வனத்தி னற்பதிக் கலுவமே வாயுவு முனது
முனத்தின் மந்தமாய் வீசுறும் போதினி னீயும்
வனப்பி னிந்திரன் வளமுறப் பருகுவான் சோமங்
கனத்த பாரத்தி னசுக்கியே பிழிந் தளித்திடவே.

(இ-ள்.) வனப்பதியாகிய (விருட்சத்தினாலான) உரலே! உன்முன்பு வாயு மந்தமாய் வீசும்போது, நீயும் இந்திரன் குடிக்கும் வண்ணம் ஸோமத்தைப் பிழிந்துதருவாயாக.-(எ-று.)

(வேறு.)

7. துன்னு நல்லனந் தோ யுத்தமரென
மன்னு மெக்கிய சாதனங்கா, ளிரை
யுன்னி மெல்லும் பரியிரண் டொத்துநீ
ருன்னதத் துணவோங்க வுலாவுவீர்.

(இ-ள்.) அன்னப் பொருள்களை யெல்லாங் கூட்டி வைக்கும் உத்தமர்களென்னும்படியான யக்ஞ சாதனங்களே! (உரலுலக்கைகளே!) ஆகாரத்தைச் சப்தத்தோடு மெல்லும் (இந்திரனுடைய) குதிரைகளைப்போல, உணவுப் பொருள்கள் மிகவுஞ் சிறந்தோங்கும்படி உலாவுவீர்களாக.—(எ-று.)

8. வனப் பதிகாள்! மருவு மிக் கன்மத்தே
வனப்பொழுகுங் கருவிக டம்மொடு
வனப் படைந் தெமக்காரு மதுச்சுவை
யினிப்பி னீகுவி ரிந்திர னூர்கவே.

(இ-ள்.) வனஸ்பதிகளே (மரத்தாலான உரலுலக்கைகளே!) இக் கருமத்தினிடத்தில் அழகு வாய்ந்த (சோமம் பிழியுங்) கருவிகளோடு அழகெய்தியவர்களாய், இந்திரபானார்த்தம், மாதுரியமான ஸோமரஸத்தை எங்களுக்காகப் பிழிந்து கொடுப்பீர்களாக.—(எ-று.)

9. அபிடவஞ் செய் தணைந்த மிகுதியைத்
தபுவுறாது வள்ளத்தினிற் றூங்குக;
உபரி சோமத்தைத் தூய்மை யுறுத்துக;
விபுல மண்டி யாத்தோலின் விரிக்கவே.

(இ-ள்.) (இருத்துவிக்கு யஜமானனாகிய அரிச்சந்திரனே!) அபிஷவம் செய்து மிச்சமான ஸோமத்தை (மூக்கு) வள்ளத்தி லேந்துக; மிகுந்த ஸோமத்தைப் பரிசுத்தமாகும் வண்ணம் வடிகட்டி யூற்றுக; சக்கையைப் பசுத்தோலின்மேல் விரிக்க.- (எ-று.) அபிஷவஞ் செய்தல் அக்கினியில் ஆவுதியாகப் பெய் தல். இச்செய்யுட்கு அதிதேவதை ஸோமனும் என்று பிருஹத் தேவதையும் தேவதானுக்கிரமணியும் கூறும்.

வருக்கம் 26.

## 29. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 6. 7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன். வடமொழிச்சந்தம்: பங்க்தி (தமி ழில் அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம் ஓரடிமேல் வைப்பு.) தேவதை: இந்திரன். [பங்க்தி - கலித்திலைத்துறை ஓரடி மேல் வைப்பாக இருத்தல் வேண்டும். ஏனெனில் அது அநுஷ் டுப் வர்க்கத்தைச் சேர்ந்தது. 4-வது அஷ்டகத் திலிருந்து இதுவே நடப்பு. எனினும் முதல் மூன்று அஷ்டகங்களி லும் அறுசீர்விருத்த மாகவே அநேக செய்யுட்கள் யாத் தாய் விட்டதால் அவற்றை அப்படியே நிறுவலாயிற்று.]

(வேறு.)

1. சோமமார்பவனுயென்றுஞ் சுவைபெற வுண்மை பேசு
மேம விந்திர, யாஞ், சாற்றுமெண்பெறு திழிந்தேமேனும்,
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவும்
ஓமென, வெகுதனத்தோய், உவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த்தெம்மை யீண்டு சிறப்புறச் செய்க வின்றே.

(இ-ள்.) (விச்வ தேவர்களால் தூண்டப்பட்ட சுநச்சேபன் இந்திரனைத் துதிக்கிறான்.) ஸோமபானியும், உண்மை பேசுபவ னுமாகிய இந்திரனே! யாங்கள் அப்பிரசஸ்தர்களாகப் போனு லும், பசுக்களுங் குதிரைகளும் ஆயிரக்கணக்காகவளித்து எங்களைக் கீர்த்தியுள்ளவர்களாகச் செய்வாயாக.—(எ-று.)

2. காமுறு முணவுக்கெல்லாங் காரண, அருளார் வன்மை
தாமுறு தாடை யேய்ந்த விந்திர, சத்தி வாய்ந்தோய்!
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவு
மோர்மென, வெகுதனத்தோ, யுவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த்தெம்மை யீண்டு சிறப்புறச் செய்க வின்றே.

(இ-ள்.) சக்திமந்தனே! அழகியகதுப்போடு கூடிய வனே! (பலந்தரும்) அன்னப் பொருள்களுக்கதிபதியே! இந்திரனே உனது அருளானது எப்போதுமுள்ளது. யாங்கள் கீர்த்தியற்றவர்களாய்ப் போயினும் எங்களைக் காத்துப் பசுச் செல்வத்தையுங் குதிரைச் செல்வத்தையு மாயிரக்கணக்காகத் தந்து எங்கள் கெடுதலை நீக்கி எங்களைக் கீர்த்தியுள்ளவர்களாகச் செய்வாயாக.—(எ-று.)

3. பேழுறு கால தூத ரொருவரை யொருவர் பேர்த்துத்
தாமுறக்காண்போர்த் தீர்க்கநித்திரை சார்த்த வேந்தே!
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவு
மோமென, வெகுதனத்தோ, யுவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த் தெம்மையீண்டு சிறப்புறச் செய்க வின்றே.

(இ-ள்.) இந்திரனே! ஒருவரையொருவர் நோக்கும் இரட்டையர்களாகச் சேர்ந்த யம தூதர்கள் தீர்க்க நித்திரையில் விழுந்து எங்களைக் கொல்லாதிருக்கும்படி செய்க. ஏனையவை முன்போலவே.—(எ-று.) வேந்தன் இந்திரனென்னும் பொருளிலேயே வரும். மிதுத்ருசா என்பதற்கு மிதுன ரூபமாய் இணைந்து நின்று இவ்விருவராய்ப் பார்ப்பவரென்பது பொருள் என்பார் சாயணர்.

4. காமுறும் வண்மை யில்லாக் கருதலர் துஞ்ச; நன்மை
தாமுற வாற்று முற்றோர் விழித்திட; சூர, வேந்தே!
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவு
மோமென, வெகுதனத்தோ, யுவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த் தெம்மை யீண்டு சிறப்புறச்செய்க வின்றே.

(இ-ள்.) சூரனே! இந்திரனே! எங்களாற் காணப்படும் அதானசீலர்களாகிய பகைவர்கள் நித்திரையையடையட்டும்; தானசீலர்களாகிய பந்துக்கள் விழித்துக்கொள்ளட்டும். (விழித்துக்கொண்டு எங்களையறியட்டும்.) மற்றவை முன்போலவே.—(எ-று.)

5. காமுறு மிந்திரா வெங் காதினி னிந்தை கூறித்
தோமுறு கூச்சற்போடிக் கழுதையைத்தொலைத்துக்கொல்க;
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவு
மோமென, வெகுதனத்தோ, யுவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த் தெம்மை யீண்டு சிறப்புறச்செய்க வின்றே.

(இ-ள்.) இந்திரனே! யாங்கள் கேட்கும் வண்ணம் நிந்தையான மொழிகளைக் கூறிக் கூச்சலிடுகின்ற கழுதைபோன்ற வணுகிய சத்துருவைக் கொல்லுவாயாக; ஏனையவை முன்போலவே.—(எ-று.) கழுதை காதினுற் கேட்கமுடியாத கூச்சலைப் போடுகிறது; அதுபோலச் சத்துருவுங் கேட்கத்தகாத வார்த்தைகளைக் கூறுகிறுன்; அதனுற் கழுதை யென்றுர்.

6. தீமையேய்சண்டக்காலுங்தெரிவரும்வனத்துத்தூரத்து
ஏமறச் சுழன்று வீசி யெதிர்ப்படா தேசுக வேந்தே!
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவு
மோமென, வெகுதனத்தோ, யுவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த்தெம்மை யீண்டு சிறப்புறச்செய்க வின்றே.

(இ-ள்.) இந்திரனே! எங்களுக்குப் பிரதிகூலத்தைச் செய்யும் சுழல்காற்றும் எங்களை விட்டுத் தூரத்திலிருக்குங் காட்டிற் போய் வீசட்டும். மற்றவை முன்போல.—(எ-று.)

7. தீமையே நாடிப் பேசுந் தீயனைக் கொல்க; தீங்கை
ஆமென மறைவி லாற்று மவனையு மழிக்க; வேந்தே!
சேமமா யெமக்குச் சோபை சிறந்த பல்பசுவு மாவு
மோமென, வெகுதனத்தோ, யுவக்க வாயிர மளித்துத்
தீமைதீர்த்தெம்மை யீண்டு சிறப்புறச் செய்க வின்றே.

(இ-ள்.) இந்திரனே! எங்களைப்பற்றி அவதூறு பேசுமவனைக் கொல்லுவாயாக; எங்களுக்குக் கெடுதலை மறைவிற் செய்யும் பகைவனையும் வதைப்பாயாக. ஏனைய முன்போல.-(எ-று.)

வருக்கம் 27.

## 30. மண்டலம் 1. அநுவாகம் 6. சூக்தம் 7.

## 22 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: சுநச்சேபன். வடமொழிச்சந்தம்: காயத்திரி, 11 பாதநிச்ருத் (ஓர் வகைக்கலிவிருத்தம்) 16 த்ருஷ்டுப். தேவதை: 1-16 இந்திரன், 17-19 அசுவினியர், 20-22 உஷா.

## மண்டலம் 1. சூக்தம் 30.

(வேறு.)

1. வள்ள னூறு மகத்தொடு கூடிய
வெள்ளரு மும இந்திரன் றன்னையாங்
கொள்ளு நல்லன்ன வாசையிற் கூபத்தை
யெள்ளச் சோமத் துளியி னிரப்புவாம்.

(இ-ள்.) அன்னத்தை விரும்புகின்ற யாங்கள் (சுநச்சேப ணுதியர்) நூறு கர்மத்தோடு கூடித் தானத்தால் அதிசயமாக வளர்கின்ற இந்திரனை எப்போதுங் கூபத்தை நிறைப்பதுபோலச் சோமத் துளிகளால் நிரப்புவோம்.—(எ-று.) வாஜம், அன்ன மெனுது வலிமை யென்பார் மேனுட்டாசிரியர். இந்திரனது வயிற்றை என இலக்கணையாற் கொள்க.

2. பள்ளத் தாழும் புனலெனச் சோமங்க
ளெள்ளருங் குணத் தேன்ற சதத்தொடு
கொள்ளும் புஷ்டி கொடுப்பவை யாயிரம்
உள்ளிட் டன்னவன் மாட்டு விரைகவே.

(இ-ள்.) பள்ளத்தை நோக்கிச் செல்லும் தண்ணீர்போல, நூற்றுக் கணக்காகவாவது, தகுந்த ரக்ஷக குணத்தோடு கூடி யாயிரக் கணக்காகவாவது, சோமங்கள் அவனிடத்துப் போகட்டும். (அவன் எங்களை யநுக்கிரகிக்கட்டும்.—(எ-று.)

3. பலம் பொருந்தவன், முன்சொலும் பண்பினி
னலம் பொருந்தி யுற்சாகம் பழகுதேன்
சலங் கடலிற் பரவிச் சலிப்பதொத்
திலங்குறத் தன்வயி றிட மீந்தனன்.

(இ-ள்.) மதத்தைத்தரும் வண்ணம் முன் சொன்ன (நூறு, ஆயிரமென்னும்) கணக்குப்படி கூடும் சோமத்துக்குப் பலம் பொருந்தியவனுகிய விந்திரன், சமுத்திரத்திற் சலம் பாவுவதுபோலப் பரவும்படி, தன் வயிற்றை யிடமாகத் தந்தான்.—(எ-று.) தேன் ஈண்டு சோமம்.

4. இந்தச் சோமக்க ளுன்றனக் கேன்றதாம்;
அந்தமாய்க் கருவேற்கும் பு ளுன்னியே
வந்து கூடுங் கபோதத்தை மானநீ
யந்தி லெஞ்சொ லடைந்தரு கெய்துவாய்.

(இ-ள்.) (இந்திரனே!) இந்த ஸோம முனக்காகச் சம்பாதிக்கப்பட்டது. கருத்தரிக்கும் பேட்டை நாடிக் கபோதஞ் செல்வது போல நீ அதனிடத்து நன்கு அணைகிறாய். எங்களது வார்த்தையையுங் கேட்கிறாய்.—(எ-று.)

5. எண்ணில் செல்வ மியைவுறும் வீரனே!
பண்ணிற் றேன்றும் புகழைப் பரித்தவ!
நண்ணி யுன்னைப் புகழ்பவன் மாட்டு, மெய்,
அண்மி, யின்ப மளிக்க நின் செல்வமே.

(இ-ள்.) தங்களுக்கு நாயகனும், பண்களாலுயர்த்தப்படுபவனுமான வீரனே! உன்னை நாடி ஸ்தோத்திரஞ் செய்பவனிடத்து உனது விபூதி (செல்வம் அல்லது இலக்குமி) நெருங்கி யுண்மை யின்பங்களை யளிக்கட்டும்.—(எ-று.) விபூதி, இலக்குமி, செல்வமு மதிகாரமும்.

வருக்கம் 28.

6. சதமுறவே தற்கால மெங்கட் கிவட்
டுதைசெருவி லுயர்ந்து துலங்கியே
யுதவ; நூறு மகத்தினி னோங்கியோய்!
இதமுறப் பிற கன்மத்துங் கூவுவேம்.

(இ-ள்.) சதக்கிருதுவே! தற்காலம் நடக்கு முக்கிரமான போரில் நீ யுயர்ந்த வுதவியை யளித்து நிற்பாயாக. இதர காரியங்களிலும் உன்னையே நன்றாய் விசாரிப்போம் (உதவிக்கழைப்போம்.)—(எ-று.)

7. வேண்டும் போதெலாம், விக்கின மாற்றுமித்
தூண்டு போர்க்க ணுதவத் துகளற
வீண்டு நல்வலி. யிந்திரன் றன்னையே
வேண்டுறுவோஞ் சகாயனை நாடியே.

(இ-ள்.) வேண்டுமென்ற போதெல்லாம், காரியவிகாதத்தைச் செய்கின்ற இவ் யுத்தங்களிற் காப்பாற்றும்படி வலிசெறிந்த விந்திரனைத் துணைக் கழைப்போம்.—(எ-று.) வேண்டுறுவோம் வேண்டுவோம். சகாயனை யென்னுஞ்சொல் இந்திரனையே குறித்தது.

8. என்றெங் கூவிளி யேற்கு மக்காலத்தி
னுன்ற வாயிரம் பாலன மார்ந்திவட்
டோன்று நல்வலி யன்னத் தொகையொடு
மேன்றருகி லவசிய மெய்தவே.

(இ-ள்.) எங்களுடைய அழைப்பினைக் கேட்டகாலத்து அவ்விந்திரன் ஆயிரக்கணக்கான உதவிகளோடும், பலத்தைத் தரும் அன்னத் தொகுதியோடும் அவசியமாக அருகில் வந்து நிற்கட்டும்.—(எ-று.)

9. முந்தைநின் றெங் குடும்ப முழுவது
மந்தில் காக்கு மவ னர னிந்திர
னந்து பன்மக நாடுவோன் றன்னையான்
பொந்தக் கூவுவென் முன் பிதாப் போற்றியோய்.

(இ-ள்.) யாரை என் பிதா முன்பு போற்றினரோ, அந்த விந்திரனாகிய வுன்னை, புராதன காலத்திலிருந்து (ஸ்வர்க்கம் போல விளங்கும்) எங்கள் குடும்பத்தைக் காப்பவனை, பல யஜமானர்களிடத்தும் போகும் புருஷனை, யான் முறைப்படி கூவியழைப்பேன்.—(எ-று.) பொந்த, அடைய, பெறுமாறு, திசைச்சொல். நரன், நேதா, புருஷன், இந்திரனைக் குறித்தது.

10. பலரும் போற்றும் புருகுத, பற்பல
நலமும் வாய்ந்த நிவாச நற்காரண
எனுவ போற்றிசைப்போர்க் கருடந்திடத்
தலை வணங்கிப் பிரார்த்தனை செய்வமே.

(இ-ள்.) எல்லாராலும் போற்றப்படுபவனே! சிநேகிதனே, நிவாஸ காரணனே! தோத்திரஞ் செய்வோர்களுக்கருள் புரியுமாறு உன்னைப் பிரார்த்திப்போம்,—(எ-று.) புருகூத இடைகுறைகிற்று.

வருக்கம் 29.

(ஷை வேறு.)

11. சுதையினை யார்பவ, தோழனு மாவாய்!
வதைகுலிசத்தவ மாண்புறு தோழர்
சுதையினை யார்பவ ரெங்களின் மாடே
துதையுக நீண்ட கதுப்புறு மாவே.

(இ-ள்.) சோமத்தைக் குடிப்பவனே! தோழனே! வச்சிராயுதந் தரித்தவனே! (உனக்குத்) தோழர்கள் போன்றவருஞ், சோமங் குடிப்பவர்களுமாகிய வெங்கண் மாட்டு நீண்ட கதுப்போடு கூடிய பசுக்கூட்டம் (உனது அநுக்கிரகத்தால்) வந்து சேரட்டும்.—(எ-று.) ஈண்டும் மேனாட்டாரெல்லாரும் சிப்ரிணீநாம் என்ற பதப்பொருளின்கண் இடர்ப்படுவார். சிலர் பதத்தையே மற்றவேண்டுமென்பர். சாயணருரைப்படி மொழிபெயர்த்தவர் (Wilson) ஒருவரே. எங்கள் அழகான ஸ்திரீகளுக்குத் தோழனே யெனப் பொருள் கொள்ளுவார் மேனாட்டாசிரியர்.

(வேறு.)

12. சோம மார்பவ, வச்சிரி, தோழனே!
காம வாசையி னுன்னரு ளெவ்வகை
யேம மார விழைகுவ மவ்வகைச்
சேம மாக வணைந்து சிறக்கவே.

(இ-ள்.) சோமத்தைக் குடிக்கும் வச்சிரியாகிய தோழனே! ஆசைப்பட்டு உன் னநுக்கிரகத்தை யெம்மாதிரி விரும்புவோமோ அம்மாதிரியே உனது அநுக்கிரகமும் எங்களை யடையட்டும்.—(எ-ள்.)

13. அன்னங் கூடிய யாங்களு மாக்களைத்
துன்னி யின்பந் துதையுக விந்திரன்
மன்னி யெம்மொடு கூட மகிழ்ந்தளி
யன்னவை வலியார்ந்து பானெய் தரல்.

(இ-ள்.) அன்னப் பொருள்களோடு கூடிய யாம் பசுக்களை யடைந்து சந்தோஷிக்கட்டும். இந்திரன் எங்களோடு மகிழ்ந்திருந்து தரும் பசுக்கள், பால் முதலிய தனத்தோடு கூடியிருந்த வலிபொருந்தியவையாயு மிருக்கட்டும்.—(எ-று.)

14. ஆண்மை வாய்ந்தவ வுன்னன தேவதை
கேண்மை வாய்ந்து னருளினாற் கிட்டியே
பாண்டில் சக்கர வாரெனப், பண்களைத்
தாண்டுவோர்க்குப் பொன் றேய்க்க, உருள்கவே.

(இ-ள்.) தைரியம் வாய்ந்த (இந்திரனே!) உன்னைத்த தேவதா விசேஷங்கள் உன்னநுக்கிரகத்தால் எங்களுடைய ஓது வார்களுக்குப் பொருள் தருமாறு, சக்கரத்தின் ஆரங்களுருளு வதுபோலத் தாமாகவே கொண்டு வரட்டும்.—(எ-று.) வட மொழியில் அக்ஷமென வுள்ளது. அதனால் 3-ம் அடியிற் 'சக்கர வச்சென' வெனக்கொண்டு அச்சில் சக்கரம் போலவெனப் பொருள் கொள்ளலாம். பாண்டிலென்பது வடமொழி மூலத் தினில்லை. உருள்கவென்று தேவதைகளுக்குக் கூட்டியது சக்க ரத்தை யுவமைப்படுத்தியதாலென்க: வருக வென்பது பொ ருள்.

15. சதமக வுனைச் சாற்றுவோர்க் கீகவென்
றிதமுற வுன தேற்றம்பெறுந் தனஞ்
சதமுறத் துதிப்போர்க்குப் பெயர்கிறாய்,
ரதமியங்கு மக்காலை யாரோடலின்.

(இ-ள்.) சதக்கிருதுவே! ஸ்தோத்திரஞ் செய்வோர் விரும் பும் பொன்னை யவர்களுக்குத் தருவதற்காக உன்னுடைய செல்வத்தைத் தொழில் செய்யும்போது வண்டியின் ஆரக்கால் கள் உருளுவதுபோல இடம் பெயர்கிறாய்.—(எ-று.) 'ரதமிய ங்கு மக்காலச் சகைதலின்' என்றுங் கொள்ளலாம்.

வருக்கம் 30.

(வேறு.)

16. கலிபெறச்சப்புமோட்டக்கனைகுரற்றுரகம்பல்கா
லொலியின்மூச்செரியுமாக்களொடுபெருந்தனங்கைக்கொண்டான்
வலிபெறுகன்மவேந்தன் ; மகிழ்வுறப்பொன்றேர்வள்ள
னிலைபெற வதனை யெங்கட் களிக்க வெஞ்சுகத்தை நாடி.

(இ-ள்.) (புல்லைத் தின்றபின்பு) ஓஷ்டத்தாற் சப்தமுண்டா கும்படி வாயைச் சப்புவனவும், கனைக்குங் குரலோடு கூடியன வும், அடிக்கடி பெருமூச்செறிவனவு மான குதிரைகளோடு வேந்தன் (இந்திரன்) (பகைவர்களது) பெரிய செல்வத்தைச் சயித்தான். பெருங் காரியங்களோடு கூடிய தாதாவாகிய அவன் பொன்னினாற் செய்யப்பட்ட தேரை யாங்கள் சுகமடையும் படி தரட்டும்.—(எ-று.) இச்செய்யுளைக் கேட்டு மனங்களித்து இந்திரன் சுநச்சேபனுக்குப் பொன்னாலான தேர் தந்தானெ ன்று பிருஹத்தேவதைக் கூறும்.

(வேறு.)

17. அசுவினிகா டவப்பல மாக்களா
லிசையுறத் தரு மன்னத்தொடே யிவண்
நசையொடும் வர ; அற்புத நாடிச்செய்
திசைகுவீர் பொன் பசுவெம தில்லுற.

(இ-ள்.) [இந்திரனுற் றூண்டப்பட்ட, சுநச்சேபன் அசுவினிகளைத் துதிக்கிருன்.] அசுவினி தேவர்களே! மிகப் பல குதிரைகளாற் சுமந்து வரப்படும் அன்னத்தோடு மெமது கர்மத்தை நோக்கி வருவீர்களாக. அற்புதமான காரியங்களைச் செய்பவர்களே! பொன்னும் பசுக்களு மெமது கிரகத்தில் நிறைந்திருக்கட்டும்.—(எ-று.) தஸ்ரா = அற்புதமான காரியங் களைச் செய்பவர்.

18. இருவருக்கு மொன்றுமெனப் பூட்டியே
மருவு தேரும தச்சினிகாள் மரிப்
பொருவி நிற்கும்; அச்சையம், அருஞ்செயல்
புரிகுவீர், அஃ தந்தரத் தோடுமே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே! இருவருக்கும் பொது வாகப் பூட்டப்பட்ட உமது தேர் ஒருவராலும் நாசஞ் செய்ய முடியாததாம்; அரிய செயலைச் செய்பவர்களே! அதனால் அத் தேர் அந்தரிட்சத்திற் செல்லுகிறது.—(எ-று.) சமுத்திரம் அந்தரிட்சமாம். எந்த பூதமானது உதகத்தோடு கூடி நிற்குமோ அது ஸமுத்திரமாம்—யாஸ்கர். அச்சையமாகிய அது என்க.

19. அழிவிலா மலைமீ துமதாழியிற்
கழலுறு வொரு சக்கரங் கண்ணுறப்
பழக விட்டனிர்; மற்றொரு சக்கர
மழகி னந்தர வீதி யுருளுமே.

(இ-ள்.) (அசுவினிகளே!) நாசப்படுத்த முடியாத பர்வதத் தின் உச்சியில் உமது தேரின் ஒரு உருளை செல்லும்; மற்றொரு உருளை அந்தர மார்க்கத்தில் உருண்டு செல்லும்.—(எ-று.) ஈண்டு பர்வதம் மேகத்தைக் குறிக்குமென அறிக.

20. துதியுவக்கு முஷை, மரிப்பில்லவ,
அதியுவப்பி னுன்போக மனிதருட்
கதியின் யாவன் களிப்பி னுணர்பவன்?
சதுரன் யாரை நீசாருவை சோதியே?

(இ-ள்.) ஸ்துதிப்ரியையும், மரண ரஹிதையுமான உஷா தேவியே, உன்னுடைய போகஸுகத்தை மரண தர்மமுள்ள மனிதன் எவன் அறிபவன்? விபாவரியே! எப்புருஷனை நீ யடைகிறாய்? (உனக்கு உசிதமான போகத்தைத் தருவது எந்தப் புருஷனுக்கும் சாத்தியமில்லை; அதனால் நீ எவனையு மடைவதில்லை என்றபடி.)—(எ-று.) விபாவரி=மிகுந்த சோதி யுள்ளவள். உஷை, வைகறை யபிமானி தேவதை.

21. பன்னிறங்கள் பரந்து சிவப்புற
மன்னு காந்தி மருவு பாய்மாவெனத்
துன்னு முன்னுருத் தூரத் தருகினு
முன்னி யோருத லெங்கட் கரியதே.

(இ-ள்.) (வியாபன சீலையே!) சித்திர வர்ணத்தோடு சிறந்து சிவந்து விளங்கும் உன் சோதியுருவத்தை சமீபத்திலிருந் தேனும் தூரத்திலிருந்தேனும் (மக்களாகிய) நாங்க ளறியமுடி யாது.—(எ-று.)

22. விண்ணின் புத்திரி வேண்டு மனப்பொருள்
கண்ணி யீண்டு களிப்பின் வருகவே;
யொண்ணு நற்றன மெங்கட் குவப்பொடுந்
திண்ண மெய்திடச் சேர்த்திட வென்றுமே.

(இ-ள்.) திவியின் புத்திரியாகிய உஷையே! எங்களுக்கு வேண்டிய அன்னப்பொருளோடு வருவாயாக. எங்கட்கு வேண் டிய தனத்தையும் சேர்ப்பாயாக.—(எ-று.) திவி, விண்,

வருக்கம் 31.

## 31. மண்டலம் 1. அநுவாகம் 7. சூக்தம் 1.

## 18 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஆங்கீரஸன் ஹிரண்யஸ்தூபன்; வடமொழிச் சந்தம்: 8, 16, 18, த்ருஷ்டுப் (தமிழில் அறுசீர்க்கழிநெடிலடி லாசிரிய விருத்தம்.) மற்றவை, ஜகதி (4 காய்ச்சீருள்ள அறு சீர்க்கழி நெடில்.) தேவதை: அக்கினி. ஹிரண்யஸ்தூபத்வ மாகிய பதவியை யடைந்தவன் ஹிரண்யஸ்தூபனென்பார் பிருஹத்தேவதைக்காரர்.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

1. அங்கிரஸன் குடிமுதலா யமைந்தபெரு
   மிருடிநீ ; யங்கி நீயே
மங்கலிலாக் கடவுளாம் ; கடவுளர்க்குச்
   சுபமளிக்க மலிந்த தோழன்,
தங்குமொளி ஞானமளி கவிகளாம்
   படையொளிரு மருதர் தாமும்
இங்குநீ றுவிரத மாற்றினதன்
   பயனுக வெழுந்தா ரின்றே.

(இ-ள்.) அக்கினியே! ஆங்கிரஸ வம்சத்து இருடிகளை நீ யுற்பத்தி செய்பவனும்; நீயே ஒரு தேவதை; மற்றத்தேவர் களுக்குச் சோபனமளிக்கின்ற தோழனுமாவாய்; உனது விரதா நுஷ்டானத்தின் பயனுகப் பிரகாசத்தோடு கூடி ஞானமிகுந்த கவிகளாகிய ஆயுதந் தரித்த மருத்துக்கள் பிறந்தார்கள்.—(எ-று.) மருத்துக்களின் ஆயுதம் மின்னலென்பார் மேனுட் டாசிரியர் (Griffith.)

2. அங்கிராக் குடிமுதலா யுத்தமனுய்க்
   கவியாகி யகில லோகந்
தங்கருளின் விபுவாகு மக்கினியே
   தேவர்களின் றவஞ்சார் கன்மஞ்
சிங்கலறச் செய்வதுடன் பலவிதமா
   வமர்மேதை சேர்ந்த தாய
ரிங்கமரு மிருவருளோய், மனிதாகத்
   துறையுமுறை யெவரோர் வாரே.

(இ-ள்.) அக்கினியே! நீ ஆங்கிரஸர்களுக்கு முதல்வன், உத்தமனுமாம். அகிலலோகாநுக்கிரகார்த்தம் (ஆகவநீயாதி) பலவிதமாக வரும் விபுவும், கவியும் ஞானியும், இரண்டு தாய ரோடு கூடினவனுமாகிய நீ தேவர்களது விரதங்களை யலங்கரிக் கிருய். எல்லா மனிதருடைய வீட்டிலும் நீ வீற்றிருக்குந் தன்மையை யாரால் அறிந்து சொல்ல முடியும்?—(எ-று) இரு தாயர் அரணிக்கட்டைகளிரண்டும். உரை சாயண பாஷ்யத் துக்கு நேரானதாம்.

3. அக்கினிநீ மாதரிச்சு வானனுக்கு
   முதலாவாய் ; அணைநற் கன்ம
மொக்கவுனிப் பணிசெய்யும் யஜமானன்
   கண்ணெதிரி னுறுக ; உன்றன்,

## மண்டலம் 1. சூக்தம் 31.

தக்கதிறங் கண்டுபுவி வானங்க
　　ளதிர்ந்தனவால்; சமைந்த யாக
மிக்கதொழிற் பாரமதிற் சலிப்படையாய்,
　　வசு, பெரியோர் விழைந்தேத் தாயே.

(இ-ள்.) அக்கினியே! (அக்கினி, வாயு, ஆதித்தியனென்றெண்ணப் படுவதால்) நீ மாதரிச்வானுக்கு (வாயுவுக்கு) முதலாவாய். சற்கன்மங்களைத் தேடித் தேவஊழியஞ் செய்யும் யாககர்த்தாவுக்குப் பிரத்தியட்ச மாவாயாக; உனது சாமர்த்தியத்தைப் பார்த்துத் தியாவாப்பிருதிவிகள் கம்பித்தன; வஸுவே! யாகபாரந் தாங்குவதிற் சலிப்படையமாட்டாய்; மகத்தான தேவர்களை நீ போற்றினவனுகிறாய்.—(எ-று.) மாதா, அந்தரிட்சம்; அங்கே சுவாஸிக்கும் பிராணி மாதரிச்வா அதாவது வாயு என்றபடி. மேனாட்டாசிரியர் விதஸ்தே என்பதற்கு பரிச்சரதே யெனப் பொருள்கொள்ளாது விவஸ்வான் எனப் பெயராகக்கொண்டு யமனுடைய தந்தை யென்பார். வசு, நன்மை, நிவாஸகாரணன் என்று ஈண்டு பொருள்படும்.

4. அக்கினிநீ மானவருக் கருளுவா
　　னகல்விண்ணை யார்க்க விட்டாய்;
உக்கிரநற் றவம்புரியும் புரூரவனுக்
　　கருடொழிலை யுடையாய்; உன்றன்
தக்கபுர வர்க்கடைந்து வெளிக்கொணர்ந்த
　　வுடனுனையுந் தகவாய்க் கிழைக்
திக்கினுள்ள வாகவநீயங் கொளுத்திப்
　　பச்சிமத்துச் சேர்ப்பா ரன்றே.

(இ-ள்.) அக்கினியே! நீ மனிதருக் கருள்செய்வதற்காக விண்ணுலகத்தைச் சப்திக்கச் செய்தாய். கர்மச் சிறப்போடு கூடிய புரூரவஸுக்கு அநுக்கிரகஞ் செய்யுங் கர்மத்தோடு கூடியுள்ளாய். உனது பிதாக்களாகிய அரணிகளைக் கடைந்தவுடன் நீ வெளிப்படுகிறாய். உன்னைக்கொண்டு கிழக்குத்திக்கிலமைக்கப்பட்டுள்ள ஆகவநீயாக்கினியை மூட்டிப் பிற்பாடு மேற்குப் பக்கத்திலமைத்துள்ள காருகபத்தியாக்கினியிலுன்னைச் சேர்க்கிறார்கள்.—(எ-று.) விண்ணிடித்தல் மின்னலைத்தரும். மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழையென்பது உலகவசனம். புரூரவன், புதனது புத்திரன். அவனுடைய தபோவநுஷ்டானங்களுக்கு மெச்சி ஊர்வசியாகிய மின்னலை மழைக்கு முன்னறிகுறியாக அக்கினி யளித்தான். இப் புரூரவனே

ஆகவநீயம், காருகபத்தியம் தக்ஷிணாக்கினி என்னும் முத்தீக்க ளையும், முதன் முதல் ஏற்படுத்தி வளர்த்தவன். இதனை யாதார மாகக்கொண்டு பின்னர் புராணக்காரர் ஊர்வசி தேவலோக தாசி யென்றும் புரூரவாவை மயக்கினாளென்றும் மனம் போன படி கதை யெழுதிவிட்டனர். இதனைத் தற்காலம் புதுச்சேரி யிற் பிரசுரமாகும் (Bar, pulpit & Platform) பிரசங்கக் களஞ் சியத்தில் லாலா ஹான்ஸ்ராஜ் செய்த உபந்யாஸங்களில் ஒன் றிற் பார்க்க.

5. அக்கினிநீ விரும்பியவை தருங்காளை ;
ஈட்டுபொரு ளார்ந்து பல்கத்
தக்ககா ரணமாவாய் ; வஷட்டெ னுஞ்சொற்
பொருளுணர்ந்து சார்ந்து நெய்தோய்
மிக்கசுருக் கெடுப்பவன்றன் றுதிசெவிக்கொண்
டருளுவாய், மிகுந்த அன்னம்
ஒக்கவுளாய், அநுகூலப் பிரசைகளைக்
கூட்டியொளி யுயர்த்து வாயே.

(இ-ள்.) அக்கினியே ! நீ இச்சைகளை யளிப்பவன். (யஜமானனது) தனம் முதலியவற்றைக் காத்து விருத்திசெய் பவன். வஷட்காரத்தோடு கூடிய முறையை யுணர்ந்து சுருக் கெடுத்து நெய்யை ஆவுதி செய்யும் யஜமானனது துதிகளைக் கேட்டு அருளுவாய். முக்கிய அன்னமுள்ளவனாகிய நீ யஜமா னனது வீட்டில் அநுகூலமான பிரஜைகளைக் கூட்டி யவர்களைப் பிரகாசிப்பிப்பாய்.-(எ-று.) வஷட் ஓர் பிரயோகச்சொல்; தேவர் களிடத்து இவ்வவியை (அக்கினி) சுமந்து செல்லட்டும் என்பது பொருள். விசுவதேவர்களுக்குப் பிரியமான ஓர் அழைப்புச் சொல் வஷட்காரமென்பார் பிருஹத் தேவதைக்காரர். பிருஹத் தேவதை 8-வது அத்தியாயம் 111-வது சுலோகம் பார்க்க.

வருக்கம் 3-.

6. தூரநோக் குறையங்கி, ஆசாரம்
விடுபட்டான் றேய்ந்தா னேனு
மாருமுன தருந்தொழிலி னெறியுணர்த்திப்
பரிபாலித் தருள்வாய் ; சாலச்
சாருமெனப் பொருள்வேண்டிச் சூரர்பலர்
தொகுபோரிற் சார்ந்த பல்லோர்
கோரவலிப் பகைவர்தமை வலியினையாச்
சிலர்கொண்டு கொல்விப் பாயே.

(இ-ள்.) மேலான ஞானத்தோடு கூடிய வக்கினியே! நல்லொழுக்கமில்லாத மனிதனையும் பழகுவதற்கு யோக்கியனாய் உன்கர்மத்தினிடத்துச் செய்து விடுகிறாய். (அதாவது கர்மாநுஷ்டான முள்ளவனாய்ச் செய்து விடுகிறாய்.) பொருள் சேருமென்ற ஆசையோடு வீரர் பலர் புரியும் யுத்தத்தில் அற்பப் பலவான்கள் சிலரைக்கொண்டு தொகை யதிகமாயுள்ள பலாட்டியரான வீரரையும் முறியடிக்கிறாய். (இது உன் மகிமை.)—(எ-று.)

7. அக்கினிசீ ரனம்வேண்டிப் போற்றுமவற்
கமரர்பத மடைவித் தென்றுந்
துக்கமெலாந் தினந்தோறு நீக்குகிறாய்;
இருவகையாத் தோய்ந்த சன்ம
மொக்க வடைந் திடுபாக்குத் தீவிரவா
சையினோடு முற்ற யாகத்
தக்கபுகழ்ச் சூரிதனக் கெப்பொழுதுஞ்
சுகத்தொடனஞ் சார்த்து வாயே.

(இ-ள்.) அக்கினியே! உணவுப்பொருளை விரும்பி ஸ்தோத்திரஞ் செய்யும் புருடனுக்கு அமரத்துவ பதத்தை (மரணமில்லாத் தன்மையை, அழியாத கீர்த்தியை) யளித்து அவனுடைய துக்கத்தை நாள்தோறும் நீக்குகிறாய். (துவிபத சதுஷ்பத ஜன்மங்களாகிய) மக்களையுங் கன்று காலிகளையும் பெற விரும்பும் யாக ஸூரிக்கு எப்பொழுதுஞ் சுகத்தை யளிப்பதுடன் உண்டியையுங் கூட்டுகிறாய்.—(எ-று.) ஸூரி, யாக கர்த்தா, யாக நடத்துவதற்கு வேண்டிய செலவுகளைக் கொடுத்து யாகத்தை நடைபெறச் செய்வோன். மேனுட்டாசிரியர் இருவகை ஜன்மங்கள் தேவரும் மனிதருமா மென்பார்.

(ஷை வேறு.)

8. தோத்திரம் பெறுவா யங்கி,
தொகுபொரு ளெமக்கு வேண்டி
யீத்தருள் செய்வான், கன்ம
மியற்றுவோர்க் களிக்க சீரின்;
வேற்றுறு நவீன கன்மம்
விளக்கயா முனக்கென் றீண்டு;
சாற்றுறுந் தேவ ரோடு
திவிபுவி யெமைப் புரக்க.

(இ-ள்.) போற்றப்பெறு மக்கினியே! எங்களுக்குப் பொருளளிப்பதற்காக யாககர்த்தாவுக்குப் புகழோடுந் தனத்தைத் தருவாயாக; புதிதாகக் கிடைத்த (நீ யளித்த புத்திரர்களோடு) யாகம் தானம் முதலாகிய கர்மங்களை வளர்ப்போமாக; தியாவாபிருதுவிகள் பிற தேவதைகளோடு எங்களை நன்ருய்க் காப்பாற்றட்டும்.—(எ-று.)

(ஷை வேறு.)

9. குற்றமறு மக்கினியே! தேவர்நடுச்
சாக்கிரத்தே கூடுந் தேவே!
பெற்றவர்த மருகிருந்தெந் தனுப்படைத்தே
யநுக்கிரகம் பெறுவிப் பாயால்;
மற்றுமிவண் டொழில்புரியும் யஜமானன்
றனக்கருளு மதியோ டேலாய்
முற்றுருவ மங்களனே, கிரியையனுக்
கெவ்வசுவு முதல்சேர்ப் பாயே.

(இ-ள்.) தோஷரஹிதனே, தேவர்களுக்கு மத்தியில் ஜாகரூகனு யமருந் தேவனே! உன்னைப் பெற்றவர்களாகிய (தியாவாப் பிருதிவிகளுக்கு) அருகே யிருந்து எங்களுடைய (புத்திரரூபமான) சரீரத்தைச் சிருஷ்டித்து யாங்கள் அநுக்கிரகம் பெறுமாறு செய்விப்பாய்; இங்கே கர்மம் புரியும் யஜமானனுக்கு அநுக்கிரகஞ் செய்யும் புத்தியோடிருப்பாயாக; மங்களரூபியே (கல்யாணனே)! எல்லாத் தனங்களையும் அவனுக்காகச் சேர்த்து வைக்கிருய்.—(எ-று.)

10. வினை யூட்டு மக்கினி நீ யெங்களுக்குப்
பிதாவாக மேவு வாய் நீ;
பினையுமுன தருஞ்சுற்ற மியாங்கள்; எமக்
காயுளையும் பெருக்குவாய் நீ;
வினைதவரு வீருளாய்! விரதமெலாங்
காப்பவனே! மேவி யாரும்
இனைதலரும் வலியுடையாய்! சதநிதி ஆ
யிரமுமுன்சா ரியையு மன்றே.

(இ-ள்.) அக்கினியே! எங்களுக்குக் கருமபலனை யளிப்பதற்குச் சிறந்த அநுக்கிரக மதியுள்ளவன் நீ; எங்களுக்குத் தந்தை நீ; எங்களுக்கு ஆயுளைக் கொடுப்பவன் நீ; யாங்கள்

உனது பந்துக்கள்; ஒருவராலும் இம்சிக்கமுடியாத வலியையுடையவனே! நல்ல வீரர்களோடு கூடியவனே! விரதங்களைக் காப்பவனே! நூற்றுக்கணக்கான திரவியமும் ஆயிரக்கணக்கான பொருளுங்கூட உன்னிடத்து நன்கமைந்துள்ளன.—(எ-று.)

வருக்கம் 33.

11. மக்களாய் வாழ்வாரி னருடனனு
மரசனது மனையிற் றேவ
ரொக்கமுதன் முதலுனையு மக்கினி, சே
னாதிபதியா வுறைய விட்டார்;
மிக்கபுக ழென்குலமூ தாதையினுக்
கோர் மகவாய் மேவி நின்ற
வக்கணமே யிளையினையுந் தருமோப
தேசத்துக் கமர்த்தி னாரே.

(இ-ள்.) அக்கினியே! முன்பு தேவர்கள், மனித ரூபமாயிருந்த நகுஷனென்னும் அரசனுடைய கிருகத்தில் சேனாபதியாய் மனித ரூபத்தோடுறையும் வண்ணம் உன்னை யமைத்தார்கள். எப்பொழுது உன்குலத்து முன்னோனாகிய அங்கிரஸனுக்குப் புத்திரனாகப் பிறந்தாயோ அப்பொழுதே தருமோபதேசஞ் செய்பவளாகிய இளை யென்னும் புத்திரியையு மமைத்தார்கள்.—(எ-று.) 'நகுஷன் மனுகுலத்துத் தோன்றல். இம் மறையைக் கண்டவன் ஹிரண்யஸ்தூபன். அவனது முன்னோன் அங்கிரஸ். இவனே முதன் முதல் அக்கினியை யாக கார்யங்களுக் கேற்படுத்தியவன். இளை, இளா; பிரார்த்தன ரூப தேவி; யாகவிதிகளை முதலிற் போதித்தவள். 'இடாவை மாநவீயக்ஞாநுகாசிந்யாஸீத்' என்று தைத்திரீயங் கூறும்.

12. போற்றுதற்குத் தக்கதொரு தேவனு
மங்கியெமைப் போற்றிச் செல்வ
மீத்தளிக்குஞ் சிறப்பினுறு மெங்களையுஞ்
சுதரினையு மியைந்து காக்க;
வாய்த்தவெம தரும்புதல்வர்ப் புத்திரரை
நிரந்தரமா வளர்த்துக் காப்பாய்
சாற்றுமுன தருநோன்பின்; ஆக்களையு
நீ காத்துத் தயங்கு வாயே.

(இ-ள்.) வந்திக்கத்தகுந்த அக்கினியே! உனது பாலனங்களால் செல்வம் மிகுந்துள்ள எங்களைக் காப்பாற்றுவாயாக; எங்களது புத்திரர் தம்மையுங் காப்பாற்றுவாயாக; புத்திரர்களது புத்திரர்களாகிய பேரர்களும் உனது கர்மங்களில் நிரந்தரமாகக் காப்பாற்றப்படத்தக்கவர்களாம்; ஸாவதானமாக வளரும் பசுக்களையும் நீ வளர்க்கிறாய் (உன் பெருமையை என்ன சொல்வது?)—(எ-று.) மகோந: செல்வவான்களாகிய எங்களது போஷகர்களையும் என்று பொருள் கூறுவார் மேனாட்டாசிரியர் (Griffith).

13. அக்கினிநீ யஜமானன் றனையோம்பி
யருகிருந்தே யரிய காவல்
புக்கமையா வெக்கியத்திற் கெனநான்கு
கண்ணொளியைப் பொருந்திக் கால்வாய்;
யெக்கணமு நலிக்கவுறாப் போஷகனா
முனக்கவியை யீவோன், போற்றே
முக்கியனா யினுமவன்றன் மறைத்துதியை
யுன்மனத்தின் முன்னேற் பாயே.

(இ-ள்.) அக்கினியே! நீ யஜமானனைப் பரிபாலிப்பவன்: ஸமீபத்திலிருந்து கொண்டு, காவலமையாத யக்ஞத்தின் பொருட்டு (நான்கு திக்கிலும் வளரும்) நான்கு கண்போன்ற சுவாலையோடு பிரகாசிப்பாய். இம்சிக்கமுடியாத போஷகனாகிய உன்னிடத்து அவியை யளிப்பவனையும், உன்னை ஸ்தோத்திரஞ் செய்பவனையும் நினைத்து அவனவனுடைய மந்திரத் துதிகளைப் பெற வேண்டுமென்று உன் மனத்தின் விரும்புகிறாய்.—(எ-று.)

14. அக்கினிநீ பலர்புகழு மிருத்துவிஜன்
றனக்குதவ வமல பொன்னைத்
தக்கதொழில் புரிவோனும் பெறுகவென
மிகவிரும்பிச் சம்பா திப்பாய்;
ஒக்கவலி யிலனையுமா தரித்தருளும்
பெருமதிசா ருயர்பி தா நீ;
மிக்கபொரு ளுணர்ச்சிசிறந் தொளிராத
சிறுவனையு மிளிர்த்து வாயே.

(இ-ள்.) அக்கினியே! நீ பலராலும் புகழப்படும் இருத்துவிஜனுடைய உபகாரார்த்தம், பரமோத்தமமான தனத்தை

## மண்டலம் 1. சூக்தம் 31.

அநுஷ்டாதா பெறட்டுமென்று விரும்புகிறாய். வலியில்லாதவனையு மாதரிக்கின்ற பரிபாலகனும். சிறந்த ஞானமுள்ள நீ அற்ப அறிவுள்ள சிறுவனையுந் தயார்செய்து பெருமைப் படுத்துகிறாய்.—(எ-று.)

15. இருக்கோது மறையவர்க்குத் தட்சிணையை
 யுவந்தளிக்கு மியாக வானை
யுருக்கோடுங் கவசமென வக்கினிநீ
 யெவ்விடத்து முவந்து காப்பாய்;
திருக்கோடா வன்னமதா லதிதி யினைப்
 பூசித்துச் செம்மை சாரப்
பெருக்கோடு மன்பினனுந் துறக்கமதி
 லோர்சுட்டாய்ப் பிறங்கு வானே.

(இ-ள்.) அக்கினியே! நீ இருத்துவிக்குக்களுக்குத் தக்ஷிணையளிக்கும் யஜமானனை உருக்குக்கவசம் (யுத்தத்தில் உடலினைக் காப்பது) போல எப்பக்கத்திலுங் காக்கிறாய்; சுகமளிக்கு மன்னத்தால் அதிதி சற்காரஞ்செய்து தனது கிருகத்தில் அன்போம்ஜீவயஜனஞ் செய்யும் யஜமானன், சுவர்க்கத்தில் ஒரு திருஷ்டாந்த புருஷனாக நிற்கிறான். அல்லது (ஸ்வர்க்கமானது அநுஷ்டாதாவுக்குச் சுகமளிப்பது போல நீ இருத்துவிக்குக்கள் முதலானவர்களுக்குச் சுகமளிக்கிறாய்.)—(எ-று).

### வருக்கம் 34.

(ஷை வேறு.)

16. நெறியினினீங்கித் தூரநெறிகடந்தொழுகெம்பாப[தோய்,
முறையினைப்பொறுக்கவங்கி: முறையினர்க்குறுகுணத்
நெறியினைவளர்ப்போய், உள்ளநிறைமதித்தந்தையாவா
யிறையினின்மனிதர்தம்மை யிருடிசெய் தெதிருவாயே.

(இ-ள்.) அக்கினியே! விருதலாபத்தோடு கூடி வெகுதூரம் நெறிகடந்தொழுகும் எங்களுடைய இந்தப் பாபத்தை பொறுத்துக்கொள்ளுவாயாக. ஸோமார்ஹமுள்ள அநுஷ்டாதாக்களுக்கு அதிக குணம் பொருந்தியவனா யிருக்கிறாய். லபிக்கக் கூடிய பிதாவும், விசேஷமான புத்தியுள்ளவனும், கர்மத்தை வகிப்பவனும் நீயே. மர்த்தியர்களை ரிஷிகளாக்கி விரைவில் அவர்களுக்கு முன் பிரத்தியட்சமாவாய்.—(எ-று.)

ஷை (வேறு.)

17. மனுவினது பக்கலினு மங்கிரஸன்
பக்கலினு மாண்ட தன்மை
மனிதர்பலர் முன்னோர்தம் பக்கலினு
மங்கிரனே யயாதி மாட்டுங்
கனிதரவே செல்வதெனத் தூயங்கி
யிவ்யாகங் காணுஞ் சாலைத்
துணைதருக; தேவர்தமைக் கொணர்க; குசை
யமர்த்தி யவி சுவைத்தீ வாயே.

(இ-ள்.) சுத்தமான வக்கினியே! அங்கிரனே (அங்கன சீலனே)! மநுவினிடத்தும், அங்கிரஸ னிடத்தும், யயாதியி னிடத்தும் மற்றும் பல முன்னோரிடத்தும் நீ சென்றதுபோல இந்த யாகசாலையினிடத்தும் வருக; தேவர்களைக் கொண்டு வருக. பரப்பிய தருப்பையி லவர்களை யமர்த்துக; அவருக்கு ருசியான வவியைத்தருக.—(எ-று.) அங்கிரன், அங்கன சீலன், அவியளிக்குமிடங்கள் தோறுஞ் செல்பவன்.

ஷை (வேறு.)

18. ஓங்குக வலியி னங்கி யுயர்ந்தவெஞ் ஞானத் தெம்மாட்
டோங்கிய வலியி னுற்றுமந்திரத்துவந்து; நித்தம்
வீங்குறுவசுவினெம்மைவிழைந்துகூட்டுகவன்னத்தைத்
தாங்குறு வளமும் புத்தி தானு மெங்கட் கமைக்க.

(இ-ள்.) அக்கினியே! எங்களது ஞானத்தினுதவியாற் சக்தியாநுஸாரமாக யாங்கள் துதிக்கு மந்திரங்களைக் கேட்டு வலியிற் பெருகுவாயாக. அநுட்டாதாக்களாகிய வெங்களுக்கு விசேஷமான செல்வத்தைச் சேர்ப்பாயாக; அன்ன மிகுதியையும் அநுஷ்டான விஷயமான துல்லிய புத்தியையும் எங்களுக்கமைப்பாயாக.—(எ-று.) வஸு, செல்வம்.

வருக்கம் 35

## 32. மண்டலம் 1. அநுவாகம் 7. சூக்தம் 2.

## 15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஹிரண்யஸ்துபன். வடமொழிச்சந்தம். த்ருஷ்டுப்: தேவதை: இந்திரன்.

## மண்டலம் 1. சூக்தம் 32.

1. வச்சிரந் தாங்கும் வீர னிந்திரன் வலிமை யெல்லா
மிச்சையி னிறை யுரைப்பல், அகியினை யதப்படுத்திப்
பொச்சமி னீரைத் தோற்றிப் பூமியில் விழுவான் செய்து
நிச்சலு மலைக்க ணெல்லா நிறுவினன் நதி வகுத்தே.

(இ-ள்.) வச்சிராயுதந் தரித்த விந்திரன் முன் செய்த வீர்ய காரியங்களை யெல்லாம் உடனே சொல்லுவேன். (முதன் முதல்) அகியை (மேகத்தை) அதப்படுத்தினன்; (இரண்டாவதாக) அம் மேகத்தின் நீரைக் கீழேவிழும்படி செய்தான்; (மூன்றாவதாக) அந்நீரை மலைகளிலெல்லாம் பல ஆறுகளாக ஓடும்படி வகுத்தான்.—(எ-று.)

2. மலைக்கணே யமைந்து நின்ற வகியினை மலைத்தானுக்குக்
கலக்குறு மொலிகலந்த வச்சிரந் துவட்டா வீந்தா [போற்
றொலித்துப் பல்லானுந் தங்கன் றுறையக முறுவவே
சலித்தநீர், சமுத்திரத்தைச்சார்ந்திடக்கீழ்நோக்குற்றே.

(இ-ள்.) மலையையடுத்து நின்ற அகியை (மேகத்தை) யடித்துக் கொன்றவனாகிய விந்திரனுக்குக், கேட்டவர் மனத்தைக் கலங்கச் செய்யும் மிகுந்தவலிமையோடு கூடிய வச்சிராயுதத்தை விசுவகர்மன் செய்து கொடுத்தான். (பசுக்கள் முக்காரமிட்டுக்கொண்டு தங்கள் கன்றுகளுள்ள விடங்களுக்குப் போவது போல் அந்தவச்சிராயுதத்தைக் கொண்டு அவ்விந்திரன் மேகத்தை வாட்டியபோது) ஜலமெல்லாம் கீழ்முகமாக விழுந்து சமுத்திரத்தை நோக்கிச் செல்லுமாறு சலிக்கலுற்றன.—(எ-று.) நீர்சலித்தவென்க.

3. காளை போன் மதர்த்துச் செல்வான் கண்டனன் சோமந்
வேளைதோ றருத்தினுல் மூவித மா மகத்துந் [தன்னை
தாளுறு மகவான் வச்சிரத்தினை மதித்துத் தாங்கிக்
கீளுறக் கிழித்தா னந்த வகிமுத லகியைத் தானே.

(இ-ள்.) காளைபோல மதத்தோடு நடப்பவனாகிய இந்திரன் சோமத்தைத் தேர்ந்தெடுத்து, (ஜோதி, கௌர, ஆயு) என்னும் பேர்களையுடைய மூன்றுவித யாகங்களிலும் பிழிந்து ஆவுதி செய்த சோமத்தைக் குடித்தான். அம்மகவான் (தனவானாகிய விந்திரன்) சாயகமாகிய வச்சிரத்தைக் கையிலெடுத்து அதனால் மேகங்களுக்கு மத்தியில் முதற்றோன்றிய மேகத்தையடித்து வீழ்த்தினன்.—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 2.

4. அகிகளின் முதற்கட் டோன்று மகியிளைக் கொன்று மாயை
மிகவுள வசுரர் மாயை வென்றபோ தென்றூழ் வானந்
தகவுறு முஷசு மூன்று மொளிபெறச் சார்த்தினாய், பி
ணிகலுதற் கொருவரேனு மில்லைகா ணுனக்கு வேந்தே.

(இ-ள்.) இந்திரனே! மேகங்களில் முதலி லுற்பவித்த மேகத்தைக் கொன்று மிகுந்த மாயையோடு கூடிய வசுரர்களின் மாயையைச் சயித்தபோது சூரியன், வானம், உஷஸ் என்னும் மூன்றுங் காந்தியோடு பிரகாசிக்கச் செய்தாய். அதற்குப்பின் உன்னோடு சண்டை செய்வதற்கு ஒருவருமில்லை.—(எ-று.) அகி யென்பது மேகத்துக்கும் விருத்திரனுக்கும் பெயர்.

5. கொலைவல் பேர் வச்சிரத்தாற் கொன்றன னிருள்போன்
மலை விருத்திரனை வேந்தன் கையிற மலைத்து வீழ்த்தா [மூடி
னிலைபெறு மடிமரங்க ணவியத்தால் வீழ்வ நேரத்
தலைமைதீ ரகியும் பூமி தழுவியே கிடக்கின்றானே.

(இ-ள்.) இந்திரன் தனது வச்சிராயுதத்தினால், இருள் போல மூடிக்கொண்டு சத்துருக்களை வெல்லும் விருத்திரா சுரனைக் கொன்றான். கோடாலியினால் மாமூலங்களைப் பிளந் தெறிவது போல அவ்விருத்திரனது கைகளை வெட்டித் தள்ளி னான். அவ்வடிமரம் துண்டுகளோடு விழுந்து கிடப்பதுபோல விருத்திரனுந் தன்னுடலுங் கைகளுந் தனித்தனி கிடக்கத் தரையில் விழுந்து கிடக்கிறான்.—(எ-று.) அகி, விருத்திரா சுரன். நீர் பொதிந்த கருமேகமே விருத்திரன் என்க.

6. வெல்லுதலரிதென்றெண்ணிவிருத்திரன்மதர்த்துப்பல்லோர்க்
கொல்லும் பேர் வீரன் மேற்கொள்ளரிய விந்திரனைக் கூவி
மல்லுறவழைத்தான்; அன்னான்குழுவினைவாட்டலாதான்;
சொல்லரிப்பகைமெ யாறாய்க் கற்களைத் துகளாக் கிற்றே.

(இ-ள்.) தன்னை யொருவரும் வெல்லமுடியாதென்று மதங் கொண்ட விருத்திரன், பலரையுங் கொல்லுபவனும் பெரிய வீ ரனுஞ் சௌரியம் வாய்ந்தவனும் பகைவரால் சயிக்கமுடியாத வனுமாகிய விந்திரனைப் போர்க்கழைத்தான். அவ்விந்திரனது வீரர்கூட்டத்தை வெல்ல முடியவில்லை; அவ்விந்திர சத்துரு வாகிய விருத்திரனது சரீரம் ஆறாய் விழுந்து பூமியிற்கிடக்கும் கற்களைத் துகள்படுத்திற்று.—(எ-று.)

7. காலின்றிக் கையுமின்றிக் கடுமையாய்ப் பின்னும் யுத்தங்
கோலினான் விருத்திரன்றான்: இந்திரன்குலிசத் தன்னான்
மேலினிற்புடைத்தான், வத்ரி யாண்மையைவிழைதனோர;
ஏலுறு மங்கம் வேறாய்க் கிடந்தனன் புவியின் மீதே.

(இ-ள்.) காலில்லாமலும் கையில்லாமலும் கிடந்த விருத்திரன் இந்திரனோடு பின்னும் யுத்தஞ்செய்ய விரும்பினான். (அதாவது பொறுமையினால் யுத்த முயற்சியை விடவில்லை என்றபடி.) இந்திரன் தனது வச்சிராயுதத்தால் அவனது சரீரத்தின்மேலடித்தான். அவ்விருத்திரன் யுத்தத்தை விரும்பியது வத்ரி ஆண்டன்மையை விரும்பியதை யொத்திருந்தது. அவன், தனது அங்கங்கள் வேறாகப், பூமியைத் தழுவிக்கிடந்தான்.—(எ-று.) வத்ரி : (Vadhrih) சின்னமுஷ்கன், கோஜா, காயடிக்கப் பட்டவன்.

8. அணையினை யுடைக்கு மாற்றி, னவன் புவி விழுந்தகாலை
யணவுவா ருள்ளவோதை யணைக்குநீ ரவன்மேலோடும்;
தணவறு மகிமையோடு விருத்திரன் றகைத்த தண்ணீர்
துணிவொடு பெருகக் கீழே தோய்ந்தகி கிடக்குமாலோ.

(இ-ள்.) தன்னை நெருங்கிப் பார்ப்பவர்களின் மனத்தைக் கவர்கின்ற சலம், பூமியில் விழுந்து (செத்துக்) கிடக்கும் விருத்திரனைத் தாண்டி, அணையையுடைத்துச் செல்லு நதியைப்போலச் செல்லுகிறது. (உயிரோடிருந்தபோது) விருத்திரன் தனது மகிமையினால் அடைத்து வைத்திருந்த நீர் துணிந்து மேலோடக், கீழே அகி (விருத்திரன்) விழுந்து கிடக்கிறான்.—(எ-று.)

9. விருத்திரன் றாயுஞ் சீர் கெட் டவன்புடை விழ வவட்கீ
ழுருத்துத்தன்படை யெறிந்தா னிந்திரன்; கன்றின் பக்க
லருத்தியோ டுறு மான்போல வடியிற் புத்திரனு மீது
வருத்துறு தாயுமாக மடிந்து தானவி கிடந்தாள்.

(இ-ள்.) விருத்திரனைப் பிள்ளையாகப் பெற்றவளும் அவனைக் காப்பாற்றும் வண்ணம் பெருமை தாழ்ந்து அவன்மேலடிவிழாதபடி அவனது சரீரத்தின் மேல் போய் விழுந்தாள். இந்திரனும் தனது படையாகிய வச்சிரத்தை அவளுக்குக் கீழேயிருந்த விருத்திரன் மேலெறிந்தான்; கன்றின் பக்கத்தில் படுத்திருக்கும் பசுவைப்போலக் கீழே புத்திரனும் மேலே தாயுமாக விருத்திர மாதாவாகிய தானவியுஞ் செத்துக் கிடந்தனள்.—(எ-று.) தானு என்னும் வடமொழிப்பதத்தைச் சிறப்புப் பெயராகக்கொள்வார் மேனாட்டாசிரியர். தானவர் வம்சத்துதித்தவள் தானவி.

10. ஒருநிலை யோய்வு மில்லாக் கட்டைமே லோடல் மான
மருவுபே ரின்றி மன்னும் விருத்திரன் சரீரத்தின்மேற்
பெருகியே வெள்ளஞ் செல்லப்பேசுணர்வின்றி வேந்தன்
றுருவு சத்துருவுந் தீர்க்க விருளினிற் றோய்ந்திட்டானே.

(இ-ள்.) (தண்ணீர் மத்தியிலெறியப்பட்டு) நிலையில்லாமலு மோய்வில்லாமலுமிருக்கின்ற கட்டையின் மீதோடுவது போலப் பேராறு விழுந்து மறைந்து கிடக்கிற விருத்திரனது சரீரத்தின்மேல் வெள்ளமான துருண்டோடும். இந்திர சத்துருவாகிய விருத்திரனும் பிரக்ஞையில்லாமல் தீர்க்கதமஸில் (தீர்க்க நித்திரையில்) விழுந்து கிடக்கிறான்.—(எ-று)

வருக்கம் 37.

11. பணியெனு மசுரன் பற்றிப் பிலத்தமை பசுவே போலப்
பிணியுற நின்ற, தாஸ பன்னிக ளகியின் காவ
லணையு நீர்; விருத்ரன் றன்னை யிந்திர னழித்தபோது
திணியுநீர் கட்டி நின்ற பிலத்தினைத் திறந்தான் மாதோ.

(இ-ள்.) பணியென்னுமசுரன் பிடித்துப் பிலத்திலடைத்து வைத்த பசுவைப்போல, தாஸனது (விருத்திரனது) பத்தினிகளும், அகி (விருத்திரனது) யினது காவலிற்றங்கினவையுமான ஜலங்கள் கட்டுப்பட்டிருந்தன. இந்திரன் விருத்திராசுரனை யழித்தபோது நீர் கட்டுப்பட்டிருந்த பிலத் துவாரத்தையும் திறந்துவிட்டான்.—(எ-று) தாஸன் விருத்திரன் எல்லாவற்றையு மழிப்பவன். அவனைப் பதியாகக் கொண்டவர்கள் தாஸபத்னிகள், ஈண்டு மேக நீர். பணியென்னு மசுரன் பசுக்களைப் பிலத்திலடைத்து வைத்த கதையை மண். 1 சூ. 6 செய்யுள் ஐந்தின் உரையிற் காண்க.

12. துணையின்றிப்படையெலாங்கொண், டிந்திரகுலிசத்தின்
பணை யவனடித்தபோதுபரியின்வாலென்ன நின்றாய்; மேற்
இணையிலி சூர, வானுஞ் சோமமு மிறையி னெய்தித்
திணியுறு சத்த கங்கை பெருகுறச் செய்வித்தாயே.

(இ-ள்.) ஏகனாய் ஆயுதங்களையெல்லாங் கைக்கொண்டு விருத்திரன் உனது வச்சிரத்தின் மேலடித்தபோது, இந்திரனே, நீ குதிரையினது வாலைப்போல நின்றாய். (அதாவது, குதிரையின்வால் மசகங்களை லக்ஷ்யஞ் செய்யாமல் அடித்துக் கொல்லுவது போல விருத்திரனை நீ யடித்துக்கொன்றாயென்றபடி.) சௌரியத்தோடு கூடியவனே! பிலத்தில் கட்டுப்பட்ட பசுக்களையுஞ் சோமத்தையும் விரைவில் பெற்றாய். ஸப்த கங்கைகளைப் பிரவாக முறச்செய்தாய்.—(எ-று) அப்பரியின் வாலுவமை மண். 1 சூக். 27 செய். 1—ற் காண்க. ஸப்தகங்கைகளை அஷ்டகம் 8 அத்தியாயம் 3 வருக்கம் 6-ல் 'இமம்மே

கங்கா' என்னும் இருக்கில் காண்க. கங்கை, யமுனை, ஸரஸ்வதி, சுதுத்ரி, பருஷ்ணி, அஸிக்நி, விதஸ்தா என்பன.

13. மின்னலு மிடியும் வீழ்த்து மாலமும் பனியு மின்ன
வின்னறீர் மாயை யாவு மெழிலுரு தொழிந்த யுத்தந்
துன்னி யிந்திரனுந் தோய்ந்த வகியுமே பொருத காலை;
மன்னுறு வெற்றிகொண்டான் றனமுறுமகவான்மாதோ.

(இ-ள்.) இந்திரனும் விருத்திரனுமாகியவிருவரும் யுத்தஞ் செய்தபோது விருத்திரனனுப்பிய மின்னல், இடி, ஆலங்கட்டி மழை, மூடுபனி முதலிய மாயைகளெல்லாம் இந்திரனை யடையவில்லை. தனவானாகிய விந்திரன் நிலைபெற்ற வெற்றியை யடைந்தான்.—(எ-று.) ஆலம்—ஆலங்கட்டி.

14. இந்திர வகியைக் கொன்ற பின்னெவன் பழியை வாங்க
வந்தனன் கண்டாய் நீயு மனத்துறு பயத்தை மேவி
யுந்துற வொழுகு மொன்று தொளைத்த நூற்றுநீரை
யந்தர மோடுஞ் சேன மாமெனத் தாண்டினையே?

(இ-ள்.) இந்திரனே! விருத்திரனைக் கொன்றபின் மனத்திற்றோன்றிய பயத்தோடு எவன் பழி வாங்க வந்தவனைப் பார்த்தாய்? (ஒருவரும் வரவில்லையே என்றபடி.) ஆகாயத்தில் பருந்து பறந்துசொல்லுவது போலத் தொண்ணூற்றொன்பது ஆறுகளின் தண்ணீரையும் ஏன் தாண்டினாய்?—(எ-று.)

15. தாவர மன்றிச் சாதுத் தன்மைசார் சங்கமக்கும்
மேவுறு கொம்பின் மாக்கும் விளங்கிய விறையாம் வேந்த
னேவுறு மாரம் வட்டை யுள்ளுற லேயக் கையிற்
பாவுறுகுலிசன் மாந்தர் பரவச்செங்கோன்மைகொள்வான்.

(இ-ள்.) தாவரங்களுக்கும், சங்கமங்களில் (கொம்பில்லாத) சாதுப் பிராணிகளுக்கும், கொம்புள்ள (எருமை முதலிய) துஷ்ட மிருகங்களுக்கும், அரசனும் வச்சிரபாகுவுமான விந்திரன், வட்டைக்குளடங்கிய ஆரக்கால்போலுள்ள எல்லாமாந்தருக்குங்கூட அரசனானான்.—(எ-று.)

வருக்கம் 38.

ஆகச்செய்யுள் 189.

இரண்டு அத்தியாயங்களுக்கு மாகச் செய்யுள் 383.

## 2-வது அத்தியாயம் முற்றும்.

---

## 3-வது அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 35 வருக்கமும், 14 சூக்தமும், 173 இருக்குக்களு முள்ளன.

## 33. மண்டலம் 1. அநுவாகம் 7. சூக்தம் 3.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஹிரண்யஸ்தூபன். வடமொழிச்சந்தம் : த்ருஷ்டுப். தேவதை. இந்திரன்.

1. பசுப்பெறு மாசையோடு வருக ; யாமடைவோம் வேந்த
 னிசையுறுமிடத்தை; யன்னோனெமது நன்மதியைத் தூக்கி
 யிசையுக: யிடர்ப்படாதா னவ னிருந்தனமாம் ஆவின்
 மிசையுறு பரம ஞான வுணர்வினை வளர்க்கின்றானே.

(இ-ள்.) [தேவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளுகிறார்கள்.] (தேவர்களே!)(பணியென்னு மசுரனா லபகரிக்கப் பட்ட நமது) பசுக்களை யடையு மிச்சையோடு வாருங்கள். (உங்களோடு கூடிய) யாங்கள் இந்திரனிருக்கு மிடத்தை யடைவோமாக. அவ்விந்திரன் ஒருவராலும் இம்சிக்கமுடியாதவனாய் நமது புத்தியை நன்றாய் ஓங்கச்செய்கிறான். பிற்பாடு அவன் செல்வமாகிய பசு விஷயமாய் வேண்டிய சிறந்த ஞானத்தை நமக்கு அதிகமாகத் தருகிறான்.—(எ-று.)

2. போரினிலுதவி வேண்டித் துதிப்பவர் போற்றும்வேந்தன்,[மாட்
 யாரெனும் வெல்லவொண்ணா, னிசைப்பவன்றன, மின்னோன்
 டேருறு முவமை சாற்ற வியைந்த பல்விருக்கினோடு
 சீருறவிரைவேன் கூட்டைத்தேடிச்செல் சேனமொத்தே.

(இ-ள்.) யுத்தத்தில் உதவியை விரும்பித் துதிப்பவர்கள் ஸ்தோத்திரஞ் செய்பவனும், ஒருவராலும் வெல்லமுடியாதவனும், செல்வத்தைத் தருபவனுமாகிய இந்திரனிடத்து, எடுத்துக்காட்டாகக்கூடிய பல மறைகளைப் பாடிக்கொண்டு, கூட்டை நோக்கிச்செல்லும் பருந்துபோல விரைவாகப் போவேன்.—(எ-று.)

3. சேனைகள் யாவுஞ் சூழச் சுவலினிற் றூணி யாத்துத்
 தானளித்திடவே சாமி யெண்ணுமன்னன்மாட்டோங்கு
 மானிரை ; ஓக்கம் வாய்ந்தோ யிந்திர வழகிற் பூரி
 ஆனளித் தெம்மாட் டோரி யாடல் மூலியமும் வேண்டல்.

(இ-ள்.) சேனைகளெல்லாஞ் சூழப் பின்பக்கத்தில் அம்புப் புட்டிலைக் கட்டிக்கொண்டு சுவாமியாகிய இந்திரன் யாருக்குப் பசுத்தானஞ் செய்ய விரும்புகிறானோ அவனிடத்தில் பசுக்கூட்டந்தங்கும். விருத்திரயோங்கினவனே! இந்திர, மிகுந்த பசுத்தனத்தை யெங்களுக்குச் சேர்ப்பாயாக. எம்மாட்டு வியவகாரஞ் செய்யற்க. பசுக்களுக்குப் பணமும் விரும்பற்க.—(எ-று.) ஓரியாடல், திசைச்சொல்; போரஞ்செய்தல் அல்லது வியவகாரம் பேசுதல்.

4. இனத்தவர் சூழ்ந்து நின்றும் ஏகனு யிந்திரா நீ
கனத்தினால் வளமிகுத்த கள்வனைக் கண்டித்தாய்; உன்
றனத்தினை யழிக்க நாலு திக்கினுஞ் சார்ந்த யாக
மினைத்தவர் சனகர் சாவை யெய்தியே மடிந்திட்டாரே.

(இ-ள்.) (சமீபத்தில் எப்போதும் போய்க்கொண்டிருக்கும்) இனத்தவர்கள் (மருத்துக்கள்) உன்னைச் சூழ்ந்து நிற்கவும், இந்திரனே, நீ தனியாகவே உனது கடினமான வச்சிராயுதத்தினால் செல்வ மிகுந்த தஸ்யுவாகிய விருத்திரனை யடித்துக்கொன்றாய். உனது செல்வத்தைக்கெடுக்க நாலாபக்கத்திலும் வந்த யாகசீலமில்லாதவராகிய ஸநகர் (விருத்திரனது கூட்டத்தார்) மரணமடைந்தார்கள்.-(எ-று.) இனத்தவர்=இந்திரனை சூழ்ந்து எப்போதுஞ் செல்லும் மருத்துக்கள். கனம்=வச்சிராயுதம். ஸநகர்கள், விருத்திராசுரனுடைய துணைவர்கள்.

5. நிலைத்துப் போர்நிறுத்தும் வேந்தே நீளரி யூர்திச் சூர!
மலைத்து நல்லொழுக்க மில்லோர் வான்புவி யந்தரத்தி
னிலைத்துறு தோட்டி விட்ட நிமிடத்தி லவர்தாங் கன்ம
வலைப்பருப் பெரியார்தம்பால் முகங்கொடா தோடினாரே.

(இ-ள்.) யுத்தத்தில் ஓடாமல் நின்று போர்செய்யும் இந்திரனே! ஹரியென்னும் பேரை வகித்த குதிரையிரண்டையும் வாகனமாகவுடையவனே! உக்கிரனே! ஸ்வயமாக யாகவொழுக்கமில்லாதவர்கள் வானம் பூமி யந்தர மென்னுமிடங்களில் நிலைத்துறுதபடி யுத்தஞ் செய்து ஓடிவிட்ட அப்பொழுதே ஸத்கர்மிகளாகிய பெரியோர்களிடத்து முகத்தைக் காட்டாதபடி யோடிப்போனார்கள்.—(எ-று.)

வருக்கம் 1.

6. குற்ற மில்லவன்றன் சேனை குறித்தவ ரெழுந்த காலை
யித்தரை நவக்குவர் தாம் பலமறை யெடுத்திசைக்க
அற்றதை யோர்ந் தரியி னகன்றனர் குறுக்கு மார்க்க
முற்ற வாண்மையருக் காற்றாதோடும் வத்திரியரொத்தே.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 3.

(இ-ள்.) (விருத்திராநுசரர்கள்,) குற்றமற்ற விந்திரனது சேனையோடு யுத்தஞ்செய்ய வெண்ணியபோது இப் பூமியிலுள்ள மனிதர்களாகிய ஆங்கிரஸ வம்சத்து நவக்வர்கள் (இந்திரன் ஜயிப்பதற்கு வேண்டிய) பல மந்திரங்களையும் எடுத்துப் பாடி யவனுக்கு உத்ஸாகத்தை மூட்டினார்கள். தாங்கள் வலியற்றுப்போனதை (அவ்விருத்திரனது ஆள்கள்) எண்ணி ஆண்மைக் காளையர்களுக் காற்றாது ஓடும் சண்டர்கள்போல, (லகுவாக ஓடிப்போகக்கூடிய) குறுக்கு மார்க்கத்தி லிறங்கி இந்திரனை விட்டு ஓடிவிட்டார்கள்.—(எ-று.) நவக்குவர்கள் ஒன்பது மாதத்தில் ஸத்ரயாகத்தைச் செய்து அதன்பலனையடைவிப்பவர்கள். இந் நவக்வ, தசக்வ பேதத்தை மண்டலம் 5. சூக்தம் 29- ரிக் (செய்யுள்) 12-ல் பார்க்க. வத்திரியர், சண்டர் மண். 1. சூக் 32. ரிக்(செய்யுள்) 7-ல் பார்க்க. நிஸர்க்க ஷண்டோ வத்ரிச்ச என்று ஸ்மிருதியில் உபயோகப்படுவதையுங் காண்க.

7. அழுதனர் நக்கா ரேனு மந்தரப்புறத் தன்னார் தாம்
பழுதுறப்போரிற் றோற்றுப் பறந்திடவடித்தாய் வேந்தே
தொழுது சோமஞ் சொரிந்து தோத்திர மியம்புவாரைப்
பழுதறக் காத்தாய் விண்ணிற் றசனை நன்கெரித்தே.

(இ-ள்.) இந்திரனே! விருத்திரனது பரிஜனங்கள் அழுதுகொண்டிருப்பினுஞ் சிரித்துக்கொண்டிருப்பினும், அந்தரிட்சலோகத்துக் கப்புறத்தில் யுத்தஞ் செய்தவர்களைத் தோற்றோடும்வண்ணம் அடித்தாய்: விண்ணிடத்தில் தஸ்யு (கள்வன்) வாகிய விருத்திரனைக் கொன்றாய்: பின்பு ஸோமாபிஷவஞ் செய்பவர்களையும் ஸ்தோத்திரஞ் செய்பவர்களையும் காப்பாற்றினாய்.—(எ-று.)

8. பொன்னொடு மணியி னனை நகையினைப் புனைந் தன்னாரு
மன்னுற வெங்கு மூடி மகிதலந்தனின் விரைந்தா
ரென்னினு மரியை வாட்டு மெழிலிலராகி நின்றார்;
துன்னிய தீமையோரைச் சூரனு லவ னுணர்ந்தான்.

(இ-ள்.) பொன்னாலும் ரத்நாபரணங்களாலு மலங்காரஞ் செய்துகொண்டுள்ள அவர்கள் (விருத்திரனது சேவகர்) எல்லாப் பக்கத்திலும் மூடிக்கொண்டு பூமியில் வந்து சேர்ந்தார்கள். என்றாலும் இந்திரனைச் சயிக்கும் ஆற்ற லவர்களுக்கில்லை. அத்தீமையோர் வந்துள்ள சங்கதியை இந்திரன் சூரியனாற் றெரிந்துகொண்டான்.—(எ-று.) ஆதித்யோஹ்யேவோத்யங்புரஸ்தாத்ரக்ஷாம்ஸ்யபஹந்தி. (தைத்திரீய ஸம்ஹிதை 2-6-6.)

## மண்டலம் 1. சூக்தம் 33.

'சூரியன் கிழக்கே யுதித்து ராக்ஷஸர்களைத் துரத்துகிறான்' என்பது பொருள்.

9. இந்திர பூமி வான மிரண்டினும் பொருந்தி யுன்றன்
சுந்தர மகிமை யெங்குந் துலங்கவே புசிக்குங் காலை
மந்திரப்பொருளோராது பாடுவோருணர்ந்தோரின்னர்
மந்திரங்கொண்டுசோரான் மறைவுறக்கொன்றாயன்றே.

(இ-ள்.) இந்திரனே! பூமி, வானம் என்னும் இரண்டினும் பொருந்தி எல்லாப் பக்கத்திலும் உன்மகிமை தோன்றும்படி யாவருங் கொடுக்கும் அவிப்பாகத்தைப் புசிக்கும்போது (யாகத்தைப் பரிபாலிக்கும்போது என்றபடி,) மறைப்பொருளை யுணராது பாடுவோரது மந்திரங்களையும் மறைப்பொருளையுணர்ந்து (இவ்யஜமானன் இம்மறையினாற் காக்கப்படத்தக்கவன்) என்று அபிமானித்துக் கூறுவோரது மந்திரங்களையுங் கேட்டு தஸ்யு (கள்வன்) வாகிய விருத்திரனை நாசமாக்கினாய்.—(எ-று.) அமங் யமாநா நபிமங்ய மாநை: என்பதற்கு வணங்குவாரோடு வணங்காதவரென வேறுவிதமாக உரை கூறுவார் மேனாட்டாசிரியர். அது பொருத்தமின்மை யுணர்க.

10. (அ)விண்ணின்றும் பூமிமீது மேகநீர் பெய்யா தாக[சூழா
வெண்ணின்ற செல்வப் பூமி யெங்கு மாயையினாற்[சம்ப
துண்ணின்றுவாடவேந்த, னுடன்மழைதருவோன்,
மொண்ணின்றதெடுத்திருட்டுமேகநீர்க்கறந்தான் முற்றும்.

(இ-ள்.) விண்ணிடத்திலிருந்து பூமியில் (விருத்திரனால் தடைசெய்து வைக்கப்பட்ட) மேகநீர் பெய்யாததனால் செல்வந் தரும் பூமி (செடி கொடிகளாகிய) மாயையினாலெங்குந் தழைக்காமல் வாடிப்போயிற்று. விருஷ்டி சாமர்த்தியனான விந்திரன் பிரகாசமுள்ள சம்பத்தை (வச்சிராயுதத்தை)க் கையிலெடுத்து இருட்டுமூடியிருந்த மேகத்தின் நீரையெல்லாங் கொஞ்சங்கூட விடாமற் (பசுவைப் பால் கறப்பது போலக்) கறந்துவிட்டான்.—(எ-று.) இவ்விருக்கை மேனாட்டாசிரியர் வேறொருவகை மொழிபெயர்ப்பர். அதுவருமாறு:

(இ) உலகின திறுதிகாறு முலவிய வன்னார் செல்வ
மிலகுற வீகுவானை மாயையாற் றெறுத்தா ரல்லர்;
சலமுறு மசனி கூட்டி யிந்திரக் காளை சார்ந்த
வொளியினா லிருட்டி னின்ற வாக்களைக் கறந்துவைத்தான்.

(இ-ள்.) பூமியினது கடைசி எல்லைவரையிற் பரவின அவர்கள் செல்வந் தருவானைத் தங்கள் மாயங்களால் அடக்க முடியவில்லை. இந்திரனாகிய காளை வச்சிரத்தைத், துணைக்கொண்டு

அதன் ஒளியினால் இருட்டை விட்டுப் பசுக்களை வெளிப்படுத்திக் கறந்தான்.—(எ-று.) அதாவது இடியினால் மேகத்தைப் பிளந்து சலத்தைப் பிரவகிக்கச் செய்கிறான் என்றபடி.

வருக்கம் 2.

11. (அ) அன்னவனளிக்குமன்னப் பயிரின்கண் மழையுமேகத்
துன்னுறு நாவா யோடு நீர் நிலைகளிற் பெருத்தான்;
மன்னிய வலிமிகுத்த வச்சிரந் தன்னால் வேந்தன், [றே.
அன்னவற்றோடுசெல்லுங் கருத்தனைக் கொன்றானன்

(இ-ள்.) அவ்விந்திரன் றரும் (நெல் முதலிய) அன்னப்பயிர்களை நோக்கி மழைநீர் செல்லத் தொடங்கிற்று. கப்பல்கள் நிறைந்து பெருமை வாய்ந்த நீர் நிலைகளில் விருத்திரன் ஜலாபி விருத்திரூபமாகப்) பெருத்து நின்றான். இந்திரனே வலிமையதிகமுள்ள வச்சிராயுதத்தினால், அந்நீரோட்டங்களோடு ஓடியுறையுங் கருத்தமர்ந்த விருத்திரனை அந்நாளிலேயே கொன்று தீர்த்தான்.—(எ-று.) மேனாட்டாசிரியர் இவ்விருக்குக்கும்,

(இ) நீரந் தந்நீர்மையோடு நிலையின்றி யொழுகிற்றாகத்,
தாருறு நதிகள்நாவாய் சார்வன நாப்பணோங்கி
யேருற வளர்ந்தான்; பின்னரிந் திரனவனையோர்மை,
சேருநன்மனத்தின் மிக்கவலிசெறி கனத்தாற் கொன்றான்.

என்று மொழிபெயர்ப்பார். கனம் வச்சிராயுதம். நீரம், நீர்.

12. பிலமுறு மவன் றிடத்த நீரரண் பிளந்தே, வேந்தன்
பலமுறு கோட்டுச் சுட்டுணன்றனைப் பலதுண்டிட்டான்;
நலமுறு மகவா னெவ்வெவ் வேகமும் பலமுஞ் சார்ந்த
வலனுளாய், போர்க்கண்வச்சிரத்தினாற்பகைவதைத்தாய்.

(இ-ள்.) பிலத்துத் தூங்கு மவ்விருத்திர னடைத்துவைத்திருந்த அளவுமிகுந்த நீராகிய கோட்டையை இந்திரன் பிளந்து பலம் பொருந்திய கொம்போடு கூடிய சுஷ்ணனைக் கண்டதுண்டமாக வெட்டினான். நல்லதனத்தோடு கூடியவனே! எல்லாவிதமான வேகத்தோடும் பலத்தோடுங்கூடிய விந்திரனே! யுத்தத்தில் வச்சிராயுதத்தினால் பகைவனைக் கொன்றாய்.—(எ-று.) இலீபிசன், பிலத்திற் படுத்திருப்பவனென்பார் யாஸ்கர். சாயனர் மதப்படி இலீபிசனென்னும் பதமும் சுஷ்ணன் என்னும் பதமும் விருத்திரனைக் குறிக்கும். சுஷ்ணன், மண் 1, சூக்தம் 11, 7-வது செய்யுளுரையைப் பார்க்க. இவனுக்குப் பசு எருமை யிவற்றிற்குப் போலக் கொம்புண்டு.

இக்கொம்பு பலத்தின் அறிகுறியென்பார் மேனாட்டாசிரியர் (Griffith). இவ்வகை (Hebrew) ஹீப்ரு கவிதைகளிலும் வருவதுண்டென்று கூறுவார். இப்பாட்டில் முதலிரண்டடி படர்க்கையாகவும் பின்னிரண்டடி முன்னிலையாகவும் கூறியுள்ளதைக் கவனிக்க. இது வேத வழக்கு. மகவான், விளி.

13. இந்திரன்குலிசமொன்னாருடலிலக்கெய்திச்சென்ற(து);
அந்தி லின்னார் புரத்தைக் கூரிய விடைகொண் டன்னா
னந்தர மாக்கினானல்; வச்சிரத்தா லடித்தே
யுந்தினா னகியை யுள்ளக் கழிமகிழ் வோங்கினானே.

(இ-ள்.) இந்திரனுடைய சாதனமான வச்சிராயுதம் பகைவர்களுடைய உடலைத் தனக்கிலக்காகக் கொண்டு சென்றது; இந்திரனும் அவனது கூர்மையான விருஷபங் (ஈண்டு வச்சிராயுதம்) கொண்டு விருத்திராதிகளின் கோட்டைகளை யழித்தான்; பிறகு விருத்திரனைத் தனது குலிசத்தாற் கொன்று உள்ளத்தினிடத்துப் பெரு மகிழ்ச்சியை யடைந்தான்.—(எ-று.) விடை, விருஷபம், வச்சிராயுதம்.

14. துதிவிழைந் தேத்துங் குற்சற்கிந்திர துணையாய்நின்றாய்;
அதிகுணக் காளையான தசத்தியு போரைக் காத்தாய்;
கதிகொடு செலுமுன் பாய்மாக் காற்றுகள் வானளாவும்;
மதிகொடுசிவைத்திரேயனாண்மையோடெழுந்தானீர்மேல்.

(இ-ள்.) இந்திரனே! ஸ்தோத்திரஞ் செய்யுங் குத்ஸனென்னும் ரிஷிக்கு உதவி செய்தாய்; (பத்துத் திக்கிலும் பிரகாசிக்கும்) தசத்யுவென்னும் இருடியை யுத்தத்திற் காத்தாய்; வேகமாய்ச் செல்லும் உன் குதிரைகளினது காலின் தூளி விண்ணை யெட்டும்; (முன்பு சத்துரு பயத்தினால் நீருக்குள் முழுகிக்கிடந்த (சிவித்திரையின் மகனாகிய) சிவைத்திரேயன் ஆண்மையோடு ஜயம்பெற மீண்டுந் தண்ணீரின் மேல் தோன்றினான்.—(எ-று.) குத்ஸன், அந்நாமம் பொருந்திய கோத்திரத்துக்கு முதல்வன். இந்திரனுக்கு அதிகப் பிரியமானவன், பின்னர் 94, 106, முதலிய சூக்தங்களைக் கண்டவன்.

15. சிவித்திரைமகனைச் சாந்தந்தோய்ந்தகாளையினைச், செல்வங்
குவித்தவ, காத்தாய் நீர்க்குட் குவலயம் பெறுமாறன்னான்;
தவித்தவ னீண்டகாலந் தங்கியேபொருதார், மற்று
மவித்தனை பகையை; துன்னார்க் கவதியை யடைவிப்பாயே.

(இ-ள்.) தனமிகுந்த விந்திரனே! வெகு சாந்தஸ்வரூபம் பொருந்திய குணக்காளையாகிய சிவித்திரேயனைப் பூமியைப் பெறுமாறு தண்ணீருக்குள் நன்றாகக் காத்தாய்; வெகு

காலம் அவ்விடத்தில் எங்களோடு அவர்கள் யுத்தஞ் செய்தார்கள். அச்சத்துருக்களைக் கெடுத்தாய். பகைவர்களாகிய அவருக்கு வேதனையை யுண்டுபண்ணுவாயாக.-(எ-று.) துக்ரியாஸ: என்னும் வடமொழிப்பதத்துக்கு மேனாட்டார் பொருள் மாறாட்டஞ் செய்து இடர்ப்படுவர். எவ்வெச்சாதியாரது பாஷைக்கும் அவ்வச் சாதியாரே பிரமாணமாவாரென்னுஞ் சிறு உண்மையை மறந்து, துக்ரியா, பர்புரமிதி, யுதகநாமஸ:படிதத்வாத், என்னுஞ் சாயணருரையை நம்புவதற்கும் இஷ்டமில்லாமல், தங்களுக்குத் தோன்றியவாறு பொருள் கூறுவார். இவரது பெருமைதானென்னே! (Benfey) பென்வே யென்பவர் துக்ரியாஸ: என்பதற்குத் துக்கிரனது பெண்களுக்கு மத்தியிலென்று பொருள் கூறுவர். ஸெயின்ட் பீட்டர்ஸ்பர்க் லெக்ஸிகனில் (பக்கம் 2 பாட்டு 3 உரையை நோக்குக.) இப்பதத்துக்குத் துக்ரியர்களது குடும்பங்களில் என்று உரையெழுதியுள்ளது. துக்ரன் வீடுகளில் என்பார் மேனாட்டாசிரியர். (Vide Griffith's Hymns of The Rig-Veda.)

வருக்கம் 3.

## 34. மண்டலம் 1. அநுவாகம் 7. சூக்தம் 4.

12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஹிரண்யஸ்தூபன். வடமொழிச்சந்தம்: ஜகதி; 9ம், 12ம், த்ருஷ்டுப். தேவதை: அசுவினிக ளிருவரும்.

1. மேன்மையுள ஞானியரா மச்சுவினித்
   தேவர்காள்! மேவி மூன்று
   பான்மையுறு மெக்கியத்தும் பரிந்துறுக;
   தேரீகை பரந்தோர் நீவிர்;
   சான்றகதிர்ப் பேர்க்கிழமை யினையிரவோ
   டொன்றுபெறச் சாற்றல் போலத்
   தோன்றுமும தருந்தொடர்பு; மேதையரெம்
   மருகிலுமைத் தோய்விப் பாரே.

(இ-ள்.) மேதாவிகளாகிய அச்வினி தேவர்களே! ஸவனத்திரயத்திலும் வருவீர்களாக. உங்களது தேரும், உங்களது தானசீலமும் மிகப் பெரியவையாம்; சூரிய கிரணங்களை யுணர்த்தும் வாஸரம் என்னுஞ் சொல் பனிமிகுந்த விரவினையுந் தன்னோடு கூட்டி யுணர்த்தல் போன்றது உம்மிருவரது பரஸ்பர ஸம்பந்தமும். மேதாவிகளாலழைக்கப்பட்ட நீங்களெமதருகில் அநுக்கிரகஞ் செய்யும் வண்ணம் எங்களுக்கு

ஆதீனப்பட்டவர்களா யிருங்கள்.—(எ-று.) நீவிர், தேர் பரந்தோர், ஈகைபரந்தோர் எனத் தனித்தனியே கூட்டுக.

2. சந்திரன்றன் மனைவியினை நாடியுறு
மதுச்சகடச் சக்க ரங்கள்
மந்திரங்க ளுணர்யாரு மூன்றெனவே
மதித்தோர்வார் ; மற்றத் தேரி
னந்துறுதூண் மூன்றுளகீழ் வீழ்பயமு
நேராதே ; நலக்க நீரும்
அந்தமதா யூர்ந்திரவு மூன்றுபகன்
மூன்றுமுறை யணைகு வீரே.

(இ-ள்.) மதுத்திரவியங்களைச் சுமந்து செல்லும் தேரினது (வச்சிரம்போற் றிடம் வாய்ந்த) சக்கரங்கள் மூன்றும். அம்மூன்று சக்கரங்களுள்ள தேரின்மீது அத்திரவியங்களோடு சந்திரனது மனைவியை நோக்கி அசுவினியர் செல்வதை எல்லாத் (தேவர்களும்) அறிவார்கள். அத்தேர் வேகமாகப் போகும்போது கீழ்விழுந்துவிடுமோ வென்றபயம் ஏற்படாதபடி அத்தேரில் மூன்று கம்பங்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன ; அசுவினிகளே ! அதன்மேல் நீங்களும் மூன்று இரவும் மூன்று பகலும் ஊர்ந்து வருவீர்களாக. (பகலுமிரவுமாகத் தேரிலேறிக்கொண்டு மீண்டும் மீண்டுங் கிரீடியுங்கள் என்றபடி.) — (எ-று.) சந்திரனது மனைவியின் பெயர் ஜ்யோத்ஸ்நா அல்லது கௌமுதி யென்ப.

3. அசுவினிர்நீ ரிருவீருஞ் சமமாக
வொருநாளி லகசு மூன்றின்
வசையையெலா மகற்றிடுக ; இத்தி னத்து
மகவவியை மதுரச் சாற்றோ
டிசையும்வகை யமைத்திடுக ; இரவுபகல்
வலிமைதனை யென்று மூட்டு
முசிதவுண வெந்தமக்கு நனிவிளைவி
னுறுமாறிங் குவந்தீ வீரே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே ! நீங்களிருவரும் சமானமாக வந்து மூன்று நாட்களிலுஞ் செய்த ஸவனத்திரயங்களிலேற்பட்ட குற்றங்களை யெல்லா மொருநாளிற் றீர்த்து விடுவீர்களாக் ; இந்நாளிற் செய்யும் யக்ஞஹவியை மதுரரஸத்தால் தெளியுங்கள் ; இரவிலும், பகலிலும் எங்களுக்குப் பலத்தை விருத்தி செய்யும் அன்னப்பொருள்களை நன்றாகத் தருவீர்களாக.—(எ-று.)

4 மூன்றுமுறை யெம்மகத்தே வருக; நோன்
பாற்றுவர்க்கண் மும்மை செல்க;
மூன்றுமுறை மூன்றுதர மும்மருளுக்
குகந்தவர்க்கு முயக்கல் சிட்சை;
மூன்றுமுறை யெமக்குவப்பை யளிப்பவற்றை
யசுவினிகாள், முன்ன ரீக;
மூன்றுமுறை யட்சரங்க ளென்னவுண
வெங்களுக்கு மொய்ப்பிப் பீரே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே! எமது கிருஹத்துக்கு மூன்றுமுறை வருவீர்களாக; விரதானுட்டானஞ் செய்பவர் களிடத்து மூன்றுதரஞ் செல்லுவீர்களாக; உங்களால் காக்கப் படும் ஜனங்களுக்கு மூன்றுதரம் மூன்றுமுறை (ஒன்பது முறை) சிட்சை செல்லுவீர்களாக; எங்களுக்கு ஸந்தோஷத் தைத் தரக்கூடியவற்றை அளியுங்கள். பர்ஜன்யன் (மேகம்) திருப்தியைத்தரும் உதகத்தை (அட்சரங்களை) யளிப்பது போல, நீங்களும் எங்களுக்கு உணவுப்பொருள்களை நிறையத் தருவீர்களாக.-(எ-று.) அட்சரங்கள், உதகத்தைக் குறித்தது.

5. மூன்றுமுறை யசுவினிகா ளெங்களுக்காத்
தனந்தாங்கி முன்னே தோன்ற;
மூன்றுமுறை வரவமரர் கன்மத்து; எம்
மதிவளர்ப்பீர் மூன்று நேரம்
மூன்றுமுறை வாழ்வளிப்பீர்; மூன்றுமுறைச்
சீருணவை முயன்று சேர்ப்பீர்;
மூன்றுருளை மேலொழுகு முந்தேரிற்
சூரன்மகள் முந்துற் றுளே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே! மூன்றுதர மெங்களுக்கு வேண்டிய செல்வத்தைச் சுமந்துகொண்டு வாருங்கள்; மூன்று முறை தேவர்களமைந்திருக்குங் கர்மத்தை நோக்கி வருவீர் களாக; மூன்று நேரமும் எங்கள்புத்தியை இரட்சிப்பீர்க ளாக; மூன்று தரம் எங்களுக்கு ஸௌபாக்கியத்தைத் தருவீர் களாக; மூன்றுதரம் அன்னப் பொருள்களை எங்களுக்குச் சேகரித்துக் கொடுப்பீர்களாக; மூன்று சக்கரங்களோடு கூடி யுள்ள உமது தேரின்மேல் சூரியனது புத்திரி நன்றாக ஏறிக் கொண்டாள்.—(எ-று.) சூரியன் தனது பெண் ஸூர்யையை ஸோமனுக்குக் கொடுக்க விரும்பினான். ஆனால் எல்லாத் தேவர்களும் அவளை மணக்க விரும்பினார்கள். அதனால் ஒரு

பந்தய ஓட்டம் ஏற்படுத்தப்பட்டது. முதன்முதல் சூரிய னிடத்து யார் செல்லுகிறுரோ அவனே ஸௌர்யையைக் கல்யா ணஞ் செய்து கொள்வதென்ருயிற்று. அசுவினிகள் முதலிற் போகவே சூரியை ஸந்தோஷப்பட்டு அவர்களது தேரின் மேலேறிக்கொண்டாள். மண்டலம் 1. சூக்தம் 116 செய் யுள் எழிற்காண்க. இதன்மேல் பிரஜாபதி தனது மகளைச் சோமனுக்குத் தந்தான் என்ற விஷயம் ஐதரேயப் பிராஹ் மணத்தில் அதிகமாகச் சொல்லப்படுகிறது. அப்பிரஜாபதியின் புத்திரியின் பேரும் சூரியை யென்பார் மேனுட்டாசிரியர். (Vide Griffith's Hymns of The Rig-Veda Second edition Vol I page 154.) துஹிதா—தூர்ஹிதா, தூரே ஹிதா—யாஸ் கர், தூரவிருந்து நன்மை செய்பவள் பெண் என்பது பொருள்.

6. மூன்றுமுறை யசுவினிகாள் வானுறையு
மருந்துகளும், மொய்த்துப் பூமி
யூன்றிவள ரௌடதமும், அம்புவினின்
விளங்கிரோ யொழிக்கும் பூடு
மேன்றெமக்குத் தருக; சுரர் குருபுதல்வன்
சுகமதனை யிசைக்க வென்றன்
றேன்றனுக்கு: சுபப்பதிகாள்! முத்தாது
முறைகடவாச் சுகமீ வீரே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே! எங்களுக்கு வானத்திற் காணும் பேஷஜங்களையும், பூமியில் வளரு மௌஷதங்களையும் அந்தரிட்சத்தில் (தண்ணீரில்) உண்டாகும் மருந்துகளையும் மூன்றுதரந் தருக; தேவ குருவின் புத்திரனுகிய சம்யு வநுப விக்கும் சுகத்தை என்புத்திரனு மடையும்படி செய்க; சுபப் பதிகளே! வாத பித்த சிலேஷ்மங்கள் முறை கடவாதொழுகும் தேகத்தை யளிப்பீர்களாக.—(எ-று.) சம்யு தேவகுருவாகிய வியாழனின் புத்திரனின் பெயர் என்பார் சாயணர்.

7. மூன்றுமுறை யசுவினிகாள், தினந்தொறுமெம்
போற்றுறுவீர், மூன்று தாது
தோன்றும்வகை வேதிகையிற் பிரித்தமைத்த
தருப்பையினிற் றேய்ந்து பள்ளி
யேன்றுறுவீர்; பொய்புகலீ, ராத்துமா
வுடலுறுவா னென்றுஞ் செல்லுஞ்
சான்ற வுயிர்வாயுவெனத், தேருடையீர்,
முவ்வேதி சார்கு வீரே.

(இ-ள்.) அசுவினிகளே! பிரதிதினமும் மூன்றுதரம் வணங்கத்தக்க நீர் எங்களது வேதிகையில் எல்லாப் பக்கத்தி லும் அடைந்து, மூன்று தாதுக்களைச் சூசிப்பிக்கும் வண்ணம் பரப்பப்பட்டுள்ள தருப்பையிற் சயனஞ் செய்வீர்களாக. நாஸத்தியர்களே! ரதஸ்வாமிகளே! பிராணிகளுடைய சரீரத் தில் ஆத்மா வசிப்பதற்குக் காரணமான பிராணவாயு தூரத்தி லிருந்து வருவதுபோல (ஐஷ்டிக, பாசுக ஸௌமிக) வேதிகள் மூன்றினிடத்தும் சேருங்கள்.—(எ-று.)

8. சிந்துக்க ளேழ்தாயர் மூன்றுமுறை
யசுவினிகாள் சேர்ந்து மூன்று
நந்துமுறைச் சுவைதபிழிக; சோமமதை
யேற்பனவு நாடிற் கூபம்
பிந்தவொளிர் முக்கலமாம்; புவிமுதலா
மிடமூன்றுப் பேசுந் தான
வந்தரத்துச் சொல்லுவீ ரிரவுபக
லாக்க இனன் அமைத்திட் டீரே.

(இ-ள்.) 'இமம்மேகங்கா' வென்ற மறையினுற் கூறப் பட்டு ஓட்டத்திற் சிறந்த நதிகளாகிய ஏழு தாய்மாரோடுங் கூடி, மூன்று முறை, யசுவினி தேவர்களே, ஸோமாபிஷவஞ் செய்வீர்களாக; அச்சோமத்தை யேற்கும் பாத்திரங்கள் கூபங்களென்னும்படி பெருத்த மூன்று கலங்களாம்; பிருதிவி, வானம், நீர் என்னும் மூன்றிடத்தின்மேலுஞ் செல்லும் நீங் கள் இரவு பகல் பேதத்தை யுண்டுபண்ணச் சூரியனை யமைத் துக் காப்பீர்கள்.—(எ-று.) இமம்மே கங்காவென்றது மேல் மண். 1, சூ. 32, செய். 12-ல் சொல்லப்பட்டது. இனன், சூரியன்.

ஷை (வேறு.)

9. மூலேமூன் றுடைய தேரின் முவ்வுருளைகளு மெங்கே?
மூலேமூன் றமைத்த பீட மமா மூட்டியவை யெங்கே?
யேலுறப் பொய்சொலா தீரெக்கியஞ் சேர்த்தற் கும்மை
வாலுறத் தேரி லென்று வாலேபம் பூட்டு வீரே?

(இ-ள்) நாஸத்தியர்களே! மூன்று கோணங்களையுடைய உமது தேரின் மூன்று சக்கரங்களுமெங்கே? அம் மூன்று பக் கங்களிலு முட்காருவதற்கென்று அமைத்த மூன்று பீடங்களு மெங்கே? உம்மை யாகதலத்திற்குக் கொண்டுவருந் தேருக்கு எப்போது கழுதைகளைப் பூட்டப் போகிறீர்கள்?—(எ-று.) இவ்விஷயங்கள் எங்களுக்குத் தெரியவில்லை என்றபடி.

ஷை (வேறு.)

10. பொய்யாத நாவுடையீர் போந்தருள்க:
அவியுமக்குப் புகட்டு கின்றோம்,
எய்யாது மதுப்பருகிச் சுவையுணரும்
வாயினு லித்தீம் பாலைத்,
துய்யோரே, குடித்தருள்க; விடியுமுனர்
விசித்திரத்துந் தூய தேரை
நெய்யோடு பூசியெம தெக்கியத்துக்
கனுப்புகிறான் சவிதா நேடி.

(இ-ள்.) நாஸத்தியர்களே! (இக்கருமத்தை நோக்கி) வருவீர்களாக. இங்கே ஹவி எங்களால் உமக்களிக்கப்படுகிறது. மதுவைப்பருகி ருசியறியும் வாயோடு இத் தித்திப்பான மதுவைக் குடியுங்கள்; ஸவிதாவானவன் விடிவதற்கு முன்னரே (மேல் 9-ம் பாட்டிற் சொன்ன) விசித்திரங்களோடு கூடியதும் நெய் பூசப்பட்டதுமான உமதுதேரை எங்களது யக்ஞத்துக்கு வரும்படி பிரேரேபிக்கிறான்.—(எ-று.) எய்யாது, துய்யோரே எதுகை நோக்கிச் சேர்த்தன.

11. பொய்யாடீர்! புகன்மூன்று பன்னொன்று
தேவரொடு பொருந்தித் தேனை
யெய்யாது குடிப்பதற்குப் போந்தருள்வீர்;
அசுவினிரெம் மாயு ணீட்டீர்;
பொய்யாதி யெம்பாவ மொன்றுமிலா
தழிப்பீரால்; பூண்ட காய்ப்பி
னெய்யாரை யோட்டிடுவீர்; எம்மாட்டு
நிரந்தரமா யிவைகு வீரே.

(இ-ள்.) நாஸத்தியர்களே! முப்பத்துமூன்று தேவர்களோடுஞ் சேர்ந்து ஸோமத்தைக் குடிக்க வாருங்கள்; அசுவினிகாள், எம தாயுஷ்காலத்தை விருத்திசெய்வீர்களாக; துவேஷபுத்தியோடு காரியஞ் செய்பவர்களை யோட்டுவீர்களாக; எப்பொழுது மெங்களோடிருப்பீர்களாக.—(எ-று.) மூன்று பன்னொன்று=முப்பத்து மூன்று. 'இதுவே பின்னர் முப்பத்துமூன்றுகோடி தேவர்களுக் காதாரமான வேதவாக்கியம். வசுக்கள் 8, உருத்திரர் 11, ஆதித்தியர் 12, பிரஜாபதி 1, வஷட்காரம் 1, ஆக 33."—வில்ஸன்.

(ஷை வேறு.)

12. மூவ்வுல கூருந் தேரி னசுவினீர் மூரிச் செல்வ
மொவ்வுற வாற்றுவீ ரொண்மொய்ம்புளசுத ராளோடே;
யிவ்வயிற் றுதிகேட்பீர் நீ ரோம்புகென் றேத்துகின்றேன்
வவ்வுறுசெல்வப்போரின் மகிழ்ந்தெமைவளர்ப்பீரன்றே.

(இ-ள்.) அசுவினி தேவர்களே! (தடைபடாமல்) மூன்றுலகங்களிலுஞ் செல்லும் தேரோடு எங்களை நோக்கி வீரத்தன்மையோடு கூடிய புத்திர பிருத்தியாதி ஜனங்களோடு நிறைந்த தனத்தைக் கொண்டுவருவீர்களாக. எங்களுடைய ஸ்துதிகளைக் கேட்பவர்களே! எங்களைக் காக்கவென்று அழைக்கிறேன். மிகுந்த தனத்தைத்தரும் யுத்தத்தில் எங்களை யோங்கச் செய்யுங்கள்.—(எ-று.) பிருத்தியர்=வேலையாட்கள், பாட்டில் ஆளென்றார். cf. 'ஆளெனப்புதிதின் வந்தடைந்திவம்.'

வருக்கம் 5.

## 35. மண்டலம் 1. அநுவாகம் 7. சூக்தம் 5.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஹிரண்யஸ்தூபன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப், 1, 9, ஜகதி. தேவதை; 1 அக்கினி, மித்திராவருணர், 'இராத்திரி, ஸவிதா ஆகிய நால்வரும்; 2-11 ஸவிதா.

1. அக்கினியை யவிநாச வாழ்வளிப்பான்
முதற்கண்ணே யணைந்த ழைப்பல்;
ஒக்கவெமைக் காக்கவென மித்திரற்சார்
வருணனையு முடன ழைப்பல்;
மிக்கவுயி ரொடுங்குகின்ற காலமா
மிரவினையும் விழைந்த ழைப்பல்;
தக்கதுணை யாகவெனச் சவிதாவாந்
தேவனையுஞ் சார்ந்த ழைப்பல்.

(இ-ள்.) விநாசரஹிதமான வாழ்வினை யளிக்குமாறு முதலில் அக்கினியை நோக்கி யழைப்பேன்; எங்களைக் காக்கட்டுமென்று மித்திராவருணர்களையு மழைப்பேன்; பிராணிகளெல்லாந் தத்தமிடத்திற்குத் திரும்பிவந்து ஒடுங்கியிருக்கின்ற இராக்காலத்தினையுங் கூவியழைப்பேன்; ஸவிதாத் தேவனையும் உதவிவேண்டி யழைப்பேன்.—(எ-று.) ஸவிதா, ஸூர்யன். இரவு என்றது இரவபிமானி தேவதையை.

## மண்டலம் 1. சூக்தம் 35.

(வேறு வேறு.)

2. அடிக்கடியிருட்டுவாய்ந்தவாகாயந்தன்னிற்றோன்றிப்
படிக்கணே யமரர் மர்த்யர் பரவு மவ்வவரிடத்தின்
அடக்குற வமைத்துப் பொன்னி னுயதேர் தன்னினேறிப்
படைத்தபார் முற்றும்பார்க்கவணேகிறான் சவிதாத் தேவன்.

(இ-ள்.) சவிதா (சூரியன்) வாகிய தேவன், இருட்டு மூடிக்கொள்ளும் ஆகாசத்தில் அடிக்கடி உதயமாகிப், பூமியில் அமரர்களையும், மனிதர்களையும் அவரவர்களது ஸ்தானங்களில் அடங்கியுறும்படி செய்து, இரணியத்தாற் செய்த தேரின்மேலேறிக்கொண்டு புவனங்களைப் பார்ப்பதற்காக வருகிறான்.—(எ-று.) அடக்குற அடங்குற வலித்தல்விகாரம் பெற்றது. அமரர் மார்த்யரென்பதை மரணமில்லாத பிராணனையும், மாணதர்மத்தோடு கூடிய சரீரத்தையும் எனவும் பொருளுரைப்பார் சாயணர். கிருஷ்ணம், கிருஷ்ணதே நிக்ருஷ்டோவர்ண : (நிகிருஷ்டமானநிறம்-இருட்டு) என்பது யாஸ்கர். இம்மறை கிருஷ்ணேந என்ற ஒரு சொல்லைத்தவிர்த்து மற்றதெல்லாம் ஆ (ஸத்யேந) ரஜஸா..........புவநாநிபச்யந்—என்றதாம். இது திருஷ்டுப் காயத்திரி

3. தேவன் மேலேறிப் பின்கீழ்ச்செல்கிறானிரண்டு வெண்மை
மேவிய பரிகளோடுந் தொழற்குரியோன் விரைந்தே;
ஆவலிற் றொலையினின்று மணைகிறான் சவிதாத் தேவன்
பாவிய வெமது பாபம் யாவையு நசித்துக் கொண்டே.

(இ-ள்.) வணங்குவதற்குரிய (பிரகாசத்தோடு கூடிய) தேவன் (உதித்ததன் பின், மத்தியானம் வரையில்) மேலேறியும் (அதற்குப்பின் அஸ்தமனம் வரையில்) கீழிறங்கியும் செல்லுகிறான். இரண்டு வெள்ளைக் குதிரைகளோடு தேவயஜனதேசத்தை நோக்கி வருகிறான். எங்களுடைய பாபங்களெல்லாவற்றையும் நாசப்படுத்திக்கொண்டு சவிதாவாகிய தேவன் தூரப்பிரதேசத்தினின்றும் (அதாவது விண்ணுலகத்தினின்றும்) வருகிறான்.—(எ-று.) தொலை—தூரதேசம். தேவ : தீப்யமான : பிரகாசத்தோடு கூடியவன் என்பது பதப்பொருள்.

4. மெத்த வல்விரைவிற் சென்று பொன்னொடு விவிதரூப
நத்திய பொன்னுகத்தி னடைபெறு தேரினேறிச்
சித்திர பானுவோடு சிறந்தவன், சவிதா, போற்றிற்
குத்தமனிருட்டுவாய்ந்த வுலகெலா மொளிசெய்தானே.

(இ-ள்.) மிகவும் விரைவாகப் போகக்கூடியதும், ஸ்வர்ண மயமாய் (யானைப்பந்தி, குதிரைப்பந்தி, மனுஷ்யபந்தி, முதலிய) நானாரூபத்தோடு கூடியதும், பொன்னாலான நுகத்தடியோடு கூடியதும் ஆன தேரிலேறி, சித்திரகாந்தி சிறந்தவனும் உத்தம ஸ்தோதவ்யனுமான ஸவிதா இருட்பிரதேசங்களையெல்லாம் பிரகாசமாக்கினான்.—(எ-று.)

5. பொன்னுகம்பொருந்துதேரிற்பூண்டுளவெண்கால்மாக்கள்
மன்னுறு பிராணிகட்கா வொளியினை வயக்கி நின்ற;
துன்னிய சவிதாப் பக்க தேவர்தம் பிரசை யன்றி
யின்னதீர் புவனம்யாவுமென்றுமே யொளிபெற் றெய்தும்.

(இ-ள்.) பொன்னாலான நுகத்தடியோடு கூடிய தேரில் கட்டப்பட்டு அத்தேரை யிழுத்துச் செல்லும் வெண்மையான காலோடுகூடிய (சியாவங்கள் என்னும் நாமம் வகித்த) குதிரைகள் பிராணிகளுக்கு விசேஷவெளிச்சத்தைத் தந்தன; ஸவிதாவின் பக்கத்தில் இதர தேவர்களது பிரஜைகள் மாத்திரமல்லாமல் எல்லா உலகங்களும் எப்போதும் நின்று பிரகாசத்தைப் பெறும்.—(எ-று.) ச்யாவா: சூரியனது குதிரைகளின் பேரென்பது நிகண்டு.—சாயணருரை.

6. ஒளியுள வுலக மூன்றி லிரண் டென்றாழ் பக்க லுள்ள;
வொளியிலாப் பிரேதஞ்சாரு முலகமொன் றியம லோ
ஒளிபெறு மமரம் யாவுமூடுசென் றமைந்த, தேரி [கம்;
னழிவி லச்சாணி போல; அறிந்தவ னறைக வீதே.

(இ-ள்.) காந்திபொருந்திய வுலகங்கள் மூன்றினுள் இரண்டு சவிதாவின் பக்கத்திலுள்ளன (அவை விண்ணும் பூமியுமாம்). மத்தியிலுள்ள அந்தரிட்சலோகம் பிரேதங்கள் (உடலினீங்கியவுயிர்கள்) சாரும் யம (பிதிர்) லோகமாம். பிரகாச முள்ள அமரங்கள் (மரண தர்மமில்லாத சந்திரன் நட்சத்திரம் முதலியவை) தேரின் அச் சாணியைப்போலச் சூரியனுக்கு ஊடே சென்று நிலைபெற்றன. இவ்விஷயத்தை யறிந்தவர்கள் கண்டு சொல்லட்டும் (எவராலுஞ் சொல்லமுடியாதென்றபடி).-(எ-று.) ஆணி, வடசொல். அர்ச்சிராதி மார்க்க வுண்மை கூறியவாறு.

வருக்கம் 6.

7. அணிசிற குள்ளான்யாருங் காணருஞ் கம்பனங்கொள்
திணிகிரணத்துநற்கணசுரானந்தாஞ்சேர்மூன்றை [குற
யணிபெறத்துலக்கினானல்; அவ்வென்றாழிப்போதெங்
றணைகிறான்? அறிந்தார்யாரேயவனொளிபரந்தலோகம்?

(இ-ள்.) அழகிய சிறகோடு கூடியவனும், யாருங் கண்டறியமுடியாத சலனத்தோடு நெருங்கிய கிரணங்களைப் பெற்றவனும், (தான் குறித்த இடத்தை யடையக்கூடிய வொளிபொருந்திய) நல்ல கண்ணோடு கூடியவனும், எல்லாருக்கும் பிராணனைத் தருபவனும் (அஸுரனும்) ஆகிய ஸவிதா அந்தரிட்சத்தோடு சேர்த்து எண்ணப்படுகிற மூன்று உலகங்களையும் விசேஷமாகப் பிரகாசிக்கும்படி செய்தான். அந்த ஸூர்யன் இந்த இராக்காலத்தில் எங்கே ஒழுகுகிறான்? அவனது ஒளிபரந்துள்ள உலகத்தை யறிந்தவர்கள் யார்? (ஒருவருமில்லை).—(எ-று.) ஸுபர்ண: சூரியனுடைய 15 கிரணங்களில் ஒன்றின் பெயரென்பார் சாயணர். அஸுர: ஸர்வேஷாம் ப்ராணத: என்பது சாயணருரையிற் கண்டது. இதன் வேறுபொருளை மண். 1, சூக். 24 செய். 14 உரையிற் காண்க.

8. புவியின தட்ட திக்கும் புவிமூன்றுஞ் சிந்து வேழு
மவியறு மன்னன் காந்தி யழகுறத் துலக்கிற் றைய;
சவிபெறு சவிதாத் தேவன் பொற்கணன் றூசுடற்கு
நவையறு மணிக ளீவா னுடியே யிங்கு தோன்ற.

(இ-ள்.) பூமியின் (இந்திர, அக்கினி, யம, நிர்ருதி, வருண, வாயு குபேர, ஈசான்ய வென்னும்) எட்டுத் திக்குக்களையும், பூமி வானம் அந்தரிட்சம் என்னும் மூன்று உலகங்களையும், கங்கை முதலிய ஏழுநதிகளையும் (அல்லது ஸப்த ஸமுத்திரங்களையும்) அவனது ஒளி நன்றாய்ப் பிரகாசிப்பித்தது. ஸவிதாவாகிய தேவன், பொன்மயமான கண்ணோடு கூடியவன், தாசுஷனுக்கு (யாககர்த்தாவுக்கு) உத்தமமான இரத்தினங்களைத் தருவதற்காக இங்கே வரட்டும்.—(எ-று.)

(ஷை வேறு.)

9. இரணியக்கை வாய்ந்தவனுஞ் சவிதாவும்
பல்வகைநோக் கியைந்து வானந்
தரணியெனு மிரண்டிற்கு மிடைசென்றே
யுயிர்க்குறுநோய் சாரா தென்றும்
அரணெனவே காத்துத்தீர்த் தென்றாழிற்
கலந்திடுவான்; ஆர்ந்தெக் காலுங்
கிரணமுள சோதியினை யிருடிணிந்த
விடமெல்லாங் கிளர்த்து வானே.

(இ-ள்.) பொன்மயமான கையோடு கூடியவனுகிய ஸவிதா பலவிதமான திருஷ்டியோடுகூடி, வானம் பூமி இரண்டிற்கு நடுவிற்சென்று பிராணிகளுக்கு வருநோய்களை யெல்லாந்தீர்த்து ஸூரியனோடு கலந்து விடுவான். எப்பொழுது மொளியோடு கூடிய கிரணங்களால் இருட்டு நிறைந்த எல்லாப்பக்கங்களையும் பிரகாசிக்கச்செய்வான்.—(எ-று.) பொற்கையன், மண் 1. சூக். 22. செய்யுள் 5 உரையை நோக்குக. யஜமானர்களுக்குத் தரவென்று பொன்னைக் கையிலேந்தியவனென்று சாயணர் உரை கூறுவர். ஸவிதாவும் ஸூர்யனும் மூர்த்தி பேதமே யொழிய வேறில்லை. தேவதை ஒன்றே. கலப்பவன் கலக்கப் படுபவனென்னும் பாவத்தைக்காட்டிநின்றன அவை. இது ஜகதி காயத்திரி மந்திரம் என்பர்.

(ஷை வேறு.)

10. பொற்கைவா யசுரன் கீர்த்தி
பொருந்து நாயகன் றனத்தோ
டுற்ற பல்சுகத்தை யீவோ
னுறுக விம்மகத்தை நோக்கி;
துற்ற ராக்கதரைத் தோய்ந்த
யாது தானவரை யோட்டி
மற்று மெவ்விரவும் போற்றின்
மகிழ்ந்துறைகின்றான் றேவன்.

(இ-ள்.) ஹிரணிய ஹஸ்தனும், அசுரனும், கீர்த்தி வாய்ந்த நாயகனும், பலவித ஸுகங்களை யளிப்பவனும், தனவானுமாகிய (ஸவிதா) இந்தக் கர்மம் நடக்குமிடத்துக்கு வரட்டும். மேலும் இத்தேவன் ராட்சஸர்களையும், யாது தானவர்களையும் ஓட்டி எல்லா இரவுகளிலும் ஸ்தோத்திரங்களை யேற்றுக்கொண்டு தங்குகிறான்.—(எ-று.) அஸுரன் பிராணனளிப்பவன், இச் சூக்தம் 7-ம் செய்யுளுரையிற் காண்க. யாது தானவர்கள் ஓர்வகை யரக்கர்கள்.

11. ஆசிலாச் சவிதா, நித்த மழுகுற நீ செல்பாக்குத்
தூசிலா வழிகள் பண்டே தோய்ந்துள வந்தரத்தின்;
ஆசினிங் கணையத் தக்க வவ்வழி வந்து பாலித்
தாசிகள் புகலா யின்று கூடிய வெமக்குத் தேவே.

(இ-ள்.) ஸவிதாவே! உனது வழிகள் முன்பே யேற்பட்டுள்ளன; தூசியில்லாதன; அந்தரிட்சத்தில் நன்கமைக்கப்பட்

டுள்ளன. நன்றாய் நடந்து வரக்கூடிய அவ்வழிகளின் வழியாக வந்து இன்று எங்களைக் காப்பாயாக. தேவனே, இத்தினத்தில் எங்களை யாசீர்வதிப்பாயாக.—(எ-று.)

வருக்கம் 7.

## 36. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 1.

20 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கோரனது புத்திரன் கண்ணுவன்; வடமொழிச் சந்தம்: ஒற்றைப்படை யிருக்குகளுக்கு ப்ராஹதி (3 ஆம் சீரும் ஆறாஞ் சீருங் காய்ச்சீருள்ள அறுசீர்க்கழிநெடில்), இரட்டைப் படை யிருக்குகளுக்கு ஸதோப்ராஹதி (எழுசீர்க்கழிநெடில்). தேவதை: அக்கினி; 13, 14, இருக்குகளுக்கு யூபம் (யாகப் பசுவைக் கட்டுந்தறி).

1. தேவர் விரும்பும் பன்மை செறி
குடிச்சி ரியைந்த வெமக்கருள்வான்
பாவு மகிமை பரந்தவனைப்
பரவிப் பிறகு மெவ்விடத்து
மோவ லின்றித் துதித்தேத்து
முவனக் கினியைச் சூக்தத்தின்
மேவும் வாச கங்களினன்
மேவி யாங்க ளிரப்போமே.

(இ-ள்.) தேவர்களால் விரும்பப்படும் ஒன்றல்லாத பல குடியிற் றோன்றிய வெங்களுக் கருளும்வண்ணம், மகிமை வாய்ந்தவனும், பிறராலும் நன்று மெப்போதும் வழிபட்டேத்தப்படுபவனு மாகிய அக்கினியைச் சூக்தங்களோடு கூடிய வாசகங்களாற் பொருந்தி யாசிப்போம்—(எ-று.)

(வேறு.)

2. ஒழுக்குள மனிதர் வலிமையை வளர்க்கு
முறுதிவா யங்கிதாங் கினரால்;
இழுக்கல யாங்க ளவியினை யுன்பா
லியைத்துனை வணங்கிநிற் கின்றோம்;
பழக்கிய வன்ன தான சீலத்தோம்
பரந்தவித் தினத்தினி லிங்கு
வழக்கிய கருமத் தெங்களை யுவந்த
மனத்தொடுங் காத்தரு ளுகவே.

(இ-ள்.) அநுஷ்டாதாக்களாகிய ஜனங்கள் வலிமையை விருத்தி செய்யு மக்கினியை (வளர்த்து)த் தாங்கினார்கள். அவி களோடு கூடியயாம் (அக்கினியே!) உன்னை வணங்குகின்றோம். அன்னதான சீலமுள்ள நீ யித்தினத்து இக்கர்மஞ்செய்யும் எங் களிடத்தில் நன்மனத்தோடு வந்து எங்களைக் காப்பாயாக.— (எ-று.) வழக்கிய—வழங்கவிட்ட.

(வேறு.)

3. சிறக்குந் தூத னீயாகத்
தேர்ந்தோ முன்னை யக்கினியே
பிறக்கு மறிவின் யாவுமுணர்
பேர்சா லோதா வாகவுமே;
திறந்துப் பெரியோ னாகநிதஞ்
செறியு முனது கற்றையொளி
யிறப்ப வுலவும் பலவிதமாய்,
எழில்வான்றொடு முன் பானுவுமே.

(இ-ள்.) அக்கினியே! உன்னைத் தேவர்களைக்கொண்டு வருந் தூதனாகவும், (ஹோமத்தை நடத்தும்) ஸர்வக்ஞனை ஹோதாவாகவுந் தேர்ந்தெடுத்தோம். மஹானாய் நித்தியமும் நடக்கும் உனது ஒளிக்கற்றைகள் பலதிக்குகளிலும் வீசுகின் றன. உனது கிரணங்கள் விண்ணுலகத்தைத் தொடுகின்றன (அங்குள்ளபிராணிகளைப் பிரகாசிப்பிக்கின்றன.)-(எ-று.) ஓதா- ஹோதா என்பதன் சிதைவு. ஹோம நிஷ்பாதகன் அல்லது ஆஹ்வாதா, தூதன், அழைப்பவன்: 'அக்நிர் தேவா நாம் தூத:' என்பது சுருதி.

(வேறு.)

4. மித்திரன் வருண னரியமா மூவர்
விளம்புறு தேவர்க ளுன்னை
யொத்தநற் பழமை வாய்ந்த தூதுவனா
யொளிர்வித்தார் நலக்க வக்கினியே!
இத்தரை யவியை மர்த்தியர் தமக்கு
ளெவனுனக் களிப்பவ னவனே
மெத்திய தனங்கள் யாவையு முன்னால்
வெல்லு மூதியமெனப் பெறுவான்.

## மண்டலம் 1. சூக்தம் 36.

(இ-ள்.) அக்கினியே! மித்திரன், வருணன், அர்யமா, இந்த மூன்று தேவர்களும் பழமையான தூதனாகிய வுன்னை நன்றாயொளிபெற மூட்டுகிறார்கள். உனக்காக ஹவியை யளிக்கும் மரண தர்மமுள்ள யஜமானன் உனது சகாயத்தினால் எல்லாத் தனங்களையும் வெல்லுவான்.(—எ-று.)

(வேறு.)

5. அங்கி நீயே தேவர்களை யழைப்பாய், களிப்பிற்கே துசனந்
தங்கு மில்லப் பதியாவாய், சாற்றுந் தூதன் றானாவாய்,
அங்க முறவே தேவதைக ளமைத்த நியம மாயவெலாந்
தங்க ணிலையிற் றவறாதே சார்ந் துன்மாட்டுத் திரமுற்ற.

(இ-ள்.) அக்கினியே! நீதேவர்களை யழைப்பவன், சந்தோஷகாரணன், சனங்களுக்குக்கிருஹபதியுமாவாய்; தேவர்களை யழைத்துக்கொண்டு வருந் தூதனும் நீயே. (பூமியின் பொறையும், மேகத்தின் வருஷிப்பும், சூரியனது பிரகாசிப்பும் ஆகிய) தேவர்களேற்படுத்திய நியமங்களெல்லாம் உன்னிடத்திலேயே நிலைத்தன.—(எ-று.) அக்நி கார்யங்கள் நடப்பதினாலேயே மேற்சொன்ன ஒழுங்குகளெல்லாம் நடைபெறுகின்றன என்பது பொருள்.

வருக்கம் 7.

(வேறு.)

6. இளமைமிக் கோங்குஞ் செல்வவா னாகு
மக்கினி யுன்னிடந் தனினே
வளமைசா ரவிகள் யாவுமிங் கென்றும்
வழங்குறப் படுபவா லைய;
துலங்குமித் தினமும் பிற்றையுஞ் சார்ந்து
சுலவிய மங்கல மனத்தி
னலம்பெறச் சுத்த வீரியம் வாய்ந்த
தேவரை நாடிநீ வணங்க.

(இ-ள்.) இளமையிற் சிறந்த அக்கினியே! சௌபாக்கியத்தோடு கூடிய உன்னிடத்திற்றான் எல்லா ஆவுதிகளும் சொரியப்படுகின்றன. இந்நாளிலும் பின்பும் (எக்காலத்திலும்) நிரந்தரமாய் நல்ல வீரியம் வாய்ந்த தேவர்களை வணங்குவாயாக.—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 3.

(வேறு.)

7. சுயமாத் தோய்ந்த சோதியுடன்
றோயு முனையே வணக்கத்து
நியம மாகப் பக்கலுறைந்
துபாசிப் பார்கள் நியதாக்கள் ;
சயமார் மனிதர், நேராரை
வெல்வார், யாகத் தவிசொரியு
நயமார் கிரியை யெழுவருட
னங்கக் கினியை மூட்டுவரே.

(இ-ள்.) (அக்கினியே!) ஸ்வயம் ஜோதியோடு கூடிய உன்னையே வணக்கத்தோடு கூடியவர்கள் நியமமாக உபாஸிப்பார்கள். பகைவரை வெல்லும் வெற்றிபொருந்திய மனுஷ்யர்கள் (யஜமானர்கள்) யாகத்தை 'வஷட்' என்னும் முடிவோடு கூடிய மறைகளைக்கூறி ஹவியைச் சொரிகிற ஏழு ஹோதாக்களோடுஞ் சேர்ந்து அக்கினியை நன்றாய் மூட்டுவார்கள்.—(எ-று.) ஏழுபேரென்பது மூலத்திலில்லை. சாயணருரையிற் கண்டது. 'ஹோதாக்கள் ஏழுவர் கிழக்குப் பக்கத்தில் வஷட்காரஞ் செய்கிறார்கள்' என்பது தைத்திரீயப்ராஹமணம். 2-3-10.

(வேறு.)

8. இதரதேவ தைக ளுன்னுத வியின
லெறிந்து கொன்றனர் விருத்திரனைப்
பதமுள வானம் பூமியந் தரத்தைப்
பரப்புள விடம்பெற வகுத்தார்;
நிதமுமா வுதியை யடைந்து கண்ணுவர்வாய்
நிலவுக, நினைவளி தனத்தோய்,
கதமுறு னிரையைக் கருதிடு போரிற்
கனைத்துறு பரியினைக் கடுத்தே.

(இ-ள்.) உனது உதவியினால் இதர தேவதைகள் விருத்திரனை யடித்துக் கொன்றார்கள். பின்பு வானம், பூமி, அந்தரமென்னுமிடங்களை விஸ்தாரமாக வமைத்தார்கள். நினைத்தவற்றை யளிக்குந் தனவானே! பசுக்களைக் கருதிச் செய்யும் யுத்தத்தில் அப்பசுக்களை யடையுமாறு கனைக்குங் குதிரைகளைப் போல, உன்னை வணங்கும் கண்ணுவர்களின் பக்கத்தில் ஹவியைப் பெறுபவனாய் நித்தியமும் பொருந்துக.—(எ-று.) குதிரைகளைப்போலப் பொருந்துகவெனக் கூட்டுக.

## மண்டலம் 1. சூக்தம் 36.

(வேறு.)

9\. அங்கி மகானீ யமர்ந்திடுக
வமரா ருவக்கு முத்தமனே !
தங்குமொளியிற் றயங்குகவே ;
தருதூ யவிக்குத் தக்கவனே,
யெங்கும் புகழ்பெற் றமைந்தவனீ
யெண்ணுஞ் செம்மை யொளியோடு
மங்க மாகக் காட்சிக்கிங்
கழகார்தூம மார்ந்துறவே.

(இ-ள்.) அக்கினியே ! (தருப்பையி) லமருவாயாக. நீ குணாதிகமுள்ள மகான் ; தேவர்களால் அதிகமாக விரும்பப் பட்டவன் ; காந்தியோ டொளிர்வாயாக. வணங்கத்தக்கவனே ! கீர்த்தி பொருந்தியவனே ! செவ்வொளி பரந்து கண்ணுக்கினிமையாயுள்ள புகையைச் சம்பாதிப்பாயாக.—(எ-று.) அருஷம் என்பதற்கு ஈண்டு கமனசீல மென்பார் சாயணர். அற்றேல், 'எண்ணுமொழுக்க சீலத்தோ டங்கமாக' என்க.

(வேறு.)

10\. அவியினை வகிப்போய் ! மநுவினுக் கநுக்கி
ரகந்தனைப் புரிவதற் காக
நிவம்பெறு பூஜ்யோத் தமனெனத் தேவர்
நியமித்தா ருன்னையு மீண்டே ;
தவம்புரி கணுவ, னதிதிசற் காரத்
தமர்ந்தவன், தனந்தரு பவனு
யுவந்துனை யமைத்தா னிந்திர னோடு
முற்றவே னையருமத் தகையே.

(இ-ள்.) அவிப்பொருள்களைச் சுமப்பவனே ! தேவர்களெல்லாரும், மநுவுக்கு அநுக்கிரகஞ் செய்யுமாறு பூஜ்யோத்தமனென உன்னையே நியமித்தார்கள். அதிதி சற்காரத்திற் சிறந்த கண்ணுவனும் உன்னை யெங்களுக்குத் தனந் தருபவனாக வமைத்தான். இந்திரனும் அவ்வகையே யுன்னை யமைத்தான். மற்றைய யஜமானர்களும் உன்னை யப்படியே யமைத்தார்கள் (அத்தகைய நீ தருப்பையிலமர்ந்து பிரகாசிப்பாயாக வெனமுன் பாட்டோடு கூட்டுக).—(எ-று.) மேத்யாதிதி, வருஷன் உபஸ்துதன் எனச் சிறப்புப் பெயர்களாகக் கொள்வார் மேனாட்டாசிரியர் (Griffith.)

வருக்கம் 9.

(வேறு.)

11. அதிதி யோம்பு மக்கணுவ
னுதித் தியனில் பொழுதங்கி
வதியு மாறு வயக்கினனுல்,
மற்றின் ஞன்றன் கிரணங்க
ளதியெல் லோடு மொளிருமால்;
அதனை யாங்களுரைத் தேத்தித்
துதிக்கு மிருக்கும், அங்கியினைத்
தோயுமியாமும், வளர்ப்போமே.

(இ-ள்.) (இருத்துவிக்குக்களாகிய) அதிதிகளைச் சற்கரிக்கும் கண்ணுவன் ஆதித்தியனுடைய ஸ்தானத்திலிருக்குமாறு அக்கினியை ஏற்படுத்தினன். இவனது கிரணங்கள் அதிக வொளியோடு பிரகாசிக்கும். யாங்கள் துதிக்கும் இருக்குக்களும் அவ்வக்கினியை உயர்த்துகின்றன; யாங்களும் அக்கினியை வளர்க்கிறோம்.—(எ-று.)

(வேறு.)

12. சுயம்பெருஞ் சோதிக் கடவுளா மங்கி,
தோய்ந்தவெந் தனத்தினைப் பூர்த்தி
நயம்பெறச் செய்க; தேவருக் குறுதி
நாட்டிய தோழனீ யன்றோ!
வயம்பெறு கீர்த்தி வாய்ந்த வுண்டியினுக்
கிறைவனு வயங்கிய நீயுஞ்
சயம்பெற வெமக்குச் சுகந்தனை யளிப்பாய்
சாற்றுறுங் குணத்தகை யவனே.

(இ-ள்.) சுயஞ்சோதியோடு கூடிய வக்கினியே! எமது தனத்தைப் பூர்த்தியாக்கி நிரப்புவாயாக. தேவருக்கு உறுதி வாய்ந்த தோழன் நீயல்லவா! கீர்த்தி வாய்ந்த வுணவுப் பொருள்களுக் கீசுவரனுன நீ குணஞ்சிறந்த மஹானுதலின் எங்களுக்குச் சுகத்தினைத் தருவாயாக.—(எ-று.)

(வேறு.)

13. எம்மாட் டுதவி புரியவென
வெழுந்து நன்கே நிலைநிற்பாய்,
பெம்மான் சவிதா நிற்பதெனப்
பிறங்கி யுன்ன தத்தணைவாய்;
யிம் மாதலத்தி னிருத்துவிக
ரோடு மிழுது தன்னேடு
மம்மா வன்னந் தருபவனு.
யணைவான் கூவி யழைப்போமே.

(இ-ள்.) (யூபமே!) விண்ணிற் சூரியன் உன்னதமாக நிற்பதுபோல எம்மாட்டு உதவிபுரிவதற்காக நன்றாக நிமிர்ந்து நிற்பாயாக. இருத்துவிக்குக்களோடும், நெய்யோடும், அன்னதாதாவாக (நினைத்து) உன்னை யழைப்போம். (அதனால் அன்னப்பொருள்களைத் தருவாயாக.)—(எ-று.) யூபமே! என்ற விளி யதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. அதற்கு யூபாத்மக தாரு நிஷ்டாக்நே, யூபம் என்னும் பெயரையுடைய மரத்திலிருக்கும் அக்கினியே, யெனப்பொருள் கூறுவார் சாயணர்.

(வேறு.)

14. நிமிர்ந்துறைந் தறிவா லெமதுபா பத்தை
நிச்சலு மொழித்தருள் புரிக;
நிமிர்ந்தவெப் பொருளும் பக்கணம் புரிந்து
நிலையழி யரக்கரைப் பொடியி
னமர்ந்திடத் தகிப்பாய்; நடக்கவு முயிரோ
டமரவு முரம்பெறு மவியை
யிமிழ்ந்துறத் தேவர்க் களிக்கவு நேராய்
நிறுத்துக வெம்மையிவ் வயினே.

(இ-ள்.) (யூபமே! அல்லது யூபத்திற்றங்கு மக்கினியே!) உன்னதமாய் நின்று எமது அறிவுகொண்டே எங்கள் பாபங்களை யொழித்து நித்தியமும் (எப்பொழுதும்) எங்களைப் பாலிப்பாயாக. எல்லாவற்றையுந் தின்று அழிக்கும் ராட்சஸர்களைப் பொடியாகத் தகிப்பாயாக. நாங்கள் நடந்து செல்லுவதற்கும், ஜீவனஞ் செய்வதற்கும், எங்களது ஹவிஸாகிய செல்வத்தைத் தேவர்களிடத்துக் கொடுப்பதற்கும் எங்களை நேராக நிமிர்ந்து நிற்கச்செய்க.—(எ-று.)'......................நடக்கவு முயிரோடமரவு நிமிர்த்துவாயெம்மை, யிமிழ்ந்துறத் தேவர்க்களிக்கு நற்றனத்தையெய்துவித்தோங்குக நீயே.' என்பதும்பாடம். அற்றேல் நாங்கள் நடந்து செல்லவும், ஜீவனோடிருக்கவும், எங்களை நிமிர்ந்து நிற்கச் செய்வாயாக. யாங்கள் தேவர்களுக்குத் தரும் ஹவிஸாகிய தனத்தை அவர்களிடத்துச் சேர்த்து விளங்குவாயாக'. எனப் பொருள் கொள்ளுக.

(வேறு.)

15. அங்கி யரக்கர் தமிற்காக்க;
வன்ம மடைந்தோ ரிடர்க்காக்க;
தங்கு மிளமை மீக்கூர்ந்து
சாரு நன்மைப் பெருஞ்சோதீ!

எங்கட் கென்றுந் தீங்கிழைக்க
வெண்ணும் பொருணின் றெமைக்காக்க;
மங்கும் பகைவ ரெமைக்கொல்ல
வருவார் நின்றுங் காத்தருளே.

(இ-ள்.) அக்கினியே! கட்டிளமை வாய்ந்தவனே! பெருஞ் சோதியே! எங்களுக்கு இம்சைசெய்யும் ராட்சஸர்களுடைய உபத்திரவத்தினின்றும் எம்மைக் காக்க. தானமுதலியவையில்லாத தூர்த்தர்கள் செய்யும் துன்பத்தினின்றும் காப்பாயாக. அப்படியே யெங்களுக்குத் தீங்கிழைப்பவர்களிடத்திலிருந்தும் (அல்லது புலி முதலிய துஷ்டமிருகங்களிடத்திலிருந்தும்) காப்பாயாக. இல்லாவிடின் எங்களைக் கொல்ல வரும் பகைவரிடத்திலிருந்தும் எங்களைக் காப்பாயாக.—(எ-று.) புலி முதலிய துஷ்டமிருகங்களென்பது சாயணர் உரைக்கூற்று. அதனாலேயே பாட்டில் பொருளெனக் கூறியது.

## வருக்கம் 10.

(வேறு.)

16. சொலித்திடுங் கதிரே பல்லெனப் படைத்த
சோதியே! வாங்கிய தனத்தை
யளித்திடா வயிரி யடங்கவெவ் விடத்து
மடித்திடாய், தடியினு லென்ன;
பழித்தெமைத் துரோகங் கருதிக்கை பிடித்த
படைகளாற் புடைக்குமர்த் தியனுஞ்
சலத்துறு பகைவன் சார்ந்தெமை வாட்டுஞ்
சத்தியைச் சருவிடா தருளே.

(இ-ள்.) சொலிக்கின்ற கிரணங்களையே பல்லாக வுடையவனே! வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுக்காத பகைவரைத், தடியினால் (மட்கலங்களை) அடிப்பதுபோல, அடிப்பாயாக. எமக்குத் துரோகஞ்செய்ய வெண்ணித் தங்கையிலுள்ள ஆயுதங்களாலடிக்கு மரணவானாகிய சத்துரு எம்மை மேற்கொள்ளாதபடி இருக்கட்டும்.—(எ-று.)

(வேறு.)

17. அங்கி கணுவற் களித்தானல் வீர மவனே சோபனமுந்
தங்கு மாறு புரிந்தானாற் சார்ந்த நண்பர்க் காத்தானே;

அங்கி மேதத் தருகர்களா மதிதி தம்மைக் காப்பாற்றி
யிங்குமற்றைத் துதியாளர்செல்வமேய்வா னுதவினனே.

(இ-ள்.) அக்கினி நல்ல வீரியம் பொருந்திய தனத்தையும் ஸௌபாக்கியத்தையும் கண்ணுவ ரிஷிக்குத் தந்தான். (அப்படியே) எங்கள் நண்பர்களையும் காப்பாற்றினன். அக்கினி யாகயோக்கியர்களான அதிதிகளையும் இரட்சித்து மற்றைத் துதியாளர்களும் செல்வமடையும்படி செய்தான்.—(எ-று.) ஈண்டும் மேனட்டு மொழிபெயர்ப்பாளர்கள் மித்திரன், மேத்யாதிதி, உபஸ்துதன் எனச் சிறப்புப் பெயர்களாற் கூறுவார்.

(வேறு.)

18. அங்கியி னுதவி யணைந்தியாந் துருவ
சன்றனை யதுவினைத் தூரந்
தங்குறு தேயத் திருந்துட னழைப்பம்
உக்கிரந் தாங்குதே வனையும்;
அங்கியெங்க ளையிங்கொறுக்குந்தா சரையு
மடக்குவோன், றுருவிதி மற்றும்
பொங்குபே ரிரதன் னெடுநவ வாத்து
வனையுமே பொருத்துக விவணே.

(இ-ள்.) யாங்கள் அக்கினியி னுதவியைக் கொண்டு துருவசனையும், யதுவினையும், உக்கிரதேவனையும் தூர தேசத்திலிருந்து வருமாறழைப்போம். எங்களை யிம்சிக்கும் தஸ்யுக்களை யடக்குவோனாகிய அக்கினி, துர்வீதி, பிரகத்திரதன், நவவாஸ்துவனாகிய இவர்களை இங்கு கொண்டு வரட்டும்.—(எ-று.) துர்வசன், யது, உக்கிரதேவன், துர்வீதி, (பாட்டில் இடைகுறுகி நின்றது.) பிரகத்திரதன், நவவாஸ்துவன் இவர்கள் ராஜரிஷிகள்.

(வேறு.)

19. சோதி யுருவ வக்கினியே
தோய்ந்த விவித யஜமானர்க்
காதி யுனையே மநுவாவா
னமைத்தான்; மகத்துக் கெனவுதித்தாய்,
நீதி லவியைத் தருங்கணுவன்
சிறந்து கொளுவ வொளிர்கின்றாய்;

நீதிமுறையே மாந்தர்களு
நேடிவணங்குந் தகையோய் நீ.

(இ-ள்) சோதி ரூபமுள்ள அக்கினியே! பலவிதமான யாக கர்த்தாக்களுக்காக வேண்டி முதலில் உன்னையே மநுப் பிரஜாபதி யேற்படுத்தினன். நீ மகத்துக்கென வுதித்தவன். பலரும் வணங்கும் பெருமை வாய்ந்த நீ அவியைத்தரும் கண்ணுவ ரிஷி மூட்டப் பிரகாசிக்கிறாய்.—(எ-று.)

(வேறு.)

20. வலியொடு காந்தி நிறைந்துள, வங்கி,
வழங்குறு சுவாலைகள் பார்க்கக்
குலைதரு பயத்திற் கூர்ந்துள, அணுகக்
கூடிய வல்லவாம்; எம்மை
நலிதரு மிடுக்கண் மிகுமுரண் யாது
மாவதர் நலிதர வெரிப்பாய்;
மலைதரு வோராய் வாய்மடுத் தழிக்கு
மாற்றலர் தமைச்சுட நன்கே.

(இ-ள்.) அக்கினியினது சுவாலைகள், ஒளியோடும் பலத்தோடுங் கூடிப் பார்க்கப் பயங்கரமானவையாம்; நெருங்கக் கூடியவையுமல்லவாம். (அக்கினியே!) பலமிகுந்த யாதுமாவதர்களை (யாதுதானவரென்னும் அசுரர்களை) எப்பொழுதும் நாசமாய்ப் போகும்படி நன்று யெரிப்பாயாக. எங்களைக் கொன்று தின்னுஞ் சத்துருக்களையும் சுட்டெரிப்பாயாக.—(எ-று.) யாதுமாவதரெனினும் யாதுதானவரெனினும் ஒக்கும்.

வருக்கம் 11.

## 37. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 2.

### 15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கோரன் புத்திரன் கண்ணுவன். வடமொழிச்சந்தம்: காயத்திரி. தேவதை: மருத்துக்கள்.

(வேறு.)

1. வண்ண மாருதர் தாண்டரும் வன்மையோர்
திண்கை சேர்ந்த தங் தேரின் விளங்குவோர்
எண்ணு முங்கள் கிரீடைக் குழுவினைக்
கண்ணுவர்களே! காயனஞ் செய்ம்மினே.

## மண்டலம் 1. சூக்தம் 37.

(இ-ள்.) கண்ணுவ வம்சத்து மேதாவிகளே! கிரீடையிற் சிறந்தவர்களும், தடுக்க முடியாத வலிமை யுள்ளவர்களும், தங்களது பலமான தேரிற் சோபனமாய் வீற்றிருப்பவர்களுமான உங்கள் மருத்துக்களை (உங்களுடைய துணைக்காக)ப் பாடி மகிழ்வியுங்கள்.—(எ-று.)

2. புள்ளி மானொடும் போரில் வழங்குறு
மெள்ளரும் படை, வாசியொடு மொளி
கொள்ளுறு மணியோடுங் குலவியே
யள்ளு காந்தி யணைந்து பிறந்தவர்.

(இ-ள்.) (தமது வாகனமாகிய) புள்ளி மானோடும், போரில் உபயோகிக்கும் ஆயுதங்களோடும் (சத்துருக்களை நடுங்கச்செய்யும்) (வாசி) தொனி விசேஷத்தோடும், காந்தியோடுகூடிய ஆபரணங்களோடும், சுயம்பிரகாசத்தோடு கூடப் பிறந்தவர்கள். (அவர்களைத் துதியுங்கள்.)—(எ-று.) வாசி, வாணி, சப்த விசேஷம்.

3. கைதரிக்குங் கசையின் றொனியினை
யைதி னிவ்விடந் தன்னி னியைந்தியான்
வெய்தி னேருவென்; மேவிய போரினஃ
தெய்து விக்கும் பலவித வீரமே.

(இ-ள்.) (மருத்துக்களில்) கைகள் தாங்குகின்ற (குதிரையை யடிக்கும்) சவுக்கின் சப்தத்தை இங்கிருந்தே யான் கேட்பேன்; அச் சப்தம், யுத்தத்தில் பலவித வீரத்தன்மைகளையும் எப்பொழுதும் அடையுமாறு செய்யும்.(எ-று.)

4. தேவர் தந்தருள் செய்ய மறையினை,
மேவு மொன்னலர் வெல்லரும் வன்மையர்
பாவு கீர்த்தி பரந்த மருத்துவர்க்
காவலோடு மணைத் திசைபோற்றுமின்.

(இ-ள்.) தேவர்கள் கொடுத்தருளுகின்ற நல்ல மந்திரத்தைப், பகைவரால் வெல்ல முடியாத பலமுள்ளவரும் கீர்த்தி பரந்தவருமாகிய மருத்துக்களிடத்துச் சேர்த்து, அதனைப் பாடுவீர்களாக.—(எ-று.) பிரஹ்ம என்பதற்கு மறை அல்லது மந்திரமென்னுது 'அவிக்கான அன்னம்' என்பார் சாயணர். அற்றேல் 'தேவர் தந்தருள் செய்ய வவியினை' என்க.

5. ஆக்க ணுப்ப ணழிவில் கிரீடையை
யாக்கு தேசினே யேத்துமின் அன்னது
தூக்கின் மாருதர்த் தோய்வ(து) இரதத்தாற்
றேக் குதரத்துச் சேர்ந்து வளர்ந்ததே.

(இ-ள்.) பசுக்களுக்கு மத்தியில் அழிவில்லாததாய்க் கிரீடிக்கும் ஒளியினை (தேஜஸை)த் துதியுங்கள்; அத் தேஜஸ் மாருதர்களைச் சேர்ந்தது. அதுவே (பசுவின் பாலாகிய) ரஸத்தினுல் நிறைந்த வயிற்றிற் பொருந்தி வளர்ந்தது.—(எ-று.) பசுக்களென்பது தாய்மாரான பிருச்னிகள் என்பார் சாயணர். (Gauh Gma) கௌ: க்ம இதி (Bhoo) பூ நாம ஸுபடிதத்வாத் என்பார் அவரே. ப்ருச்னி, பூமி என்பது மண் 1 சூக், 14, ரிக் (செய்யுள்) 3 ற் சொல்லப்பட்டது.

6. தாரும் வானு நடுங்குறத் தாக்கிடும்
வீரர்கா ளவை மேவித் தருநுனி
நேர வாட்டும் பொழுதினி னும்முளே
சா ருறுதிப் பெரியவன் யார் சொலீர்?

(இ-ள்.) பூமியையும், வானத்தையும் மோதி யாட்டுகின்ற வீரர்களே! (மருத்துக்களே!) நீர் எப்பொழுதும் மர நுனியை யசைப்பதுபோலப் பூமியையும், வானத்தையும் நடுங்கச்செய்யும்போது உங்களுக்குள் பிரபலமானவனும் உறுதி வாய்ந்தவனுமான பெரியவன் யாரென்று சொல்லுவீர்களாக. (எல்லாரும் பெரியவர்களே என்றபடி.)—(எ-று.) அந்தம்ந என்பதற்கு வஸ்திரத்தின் நுனியை உதறுவதுபோல என்பார் மேனுட்டாசிரியர்(Griffith).

7. உக்கிரத் தும் வரவுணர் மாந்தர்கள்
தக்க தம்மிலத் தூணைத் திரம்பெற
நிற்கு மாறு நிறுவினர் பர்வத
மொக்க நற்சிக ரங்களு மோடின.

(இ-ள்.) (மருத்துக்களே!) உங்களுடைய உக்கிரமான வரவை யுணர்ந்த மனிதர்கள் தங்களுடைய வீட்டுத் தூண்களை (வீடு விழுந்து விடுமோ வென்னும் பயத்தினுல்) உறுதியாக நாட்டினுர்கள். உங்களது வரவை நினைத்துப் பயந்து, பர்வதங்களும், மலையுச்சிகளும் நடுங்கி யோடின.—(எ-று.)

8. நரை திரை மூப் பியைந்து நலிவுறு
மரைச னற்பகை யஞ்சுதலிற் புவி
விரையு நீவிர் விளையாட் டுறுகையின்
இரைந்து பீதி யியைந்து நடுங்குமே.

(இ-ள்.) (மருத்துக்களே!) நீங்கள் வேகமாகப் பூமிக்கண் வந்து விளையாடும்போது, வயது சென்ற அரசன் பகைவனது வரவை யெண்ணி நடுங்குவது போலப் பூமியானது பயத்தி னால் நடுங்கும்.—(எ-று.)

9. பெரு கெவர்தம் வலியிற் றிவிபுவி
யிருதி றத்தினி னெய்தி நடக்குமம்
மருதர் தோன்றிய வானந் திரமதாம்;
பெருகத் தாய்வயிற் பட்சிகள் பேர்வுறா.

(இ-ள்.) யாருடைய வல்லமையைத் தாங்கி வானும் பூமி யும் இரு வகையாகப் பிரிந்து எப் பாகத்திலும் பாவிக்கிடக் குமோ அந்த மருதர்கள் உற்பவித்த ஜனனஸ்தானமாகிய ஆகாயம் ஸ்திரமானதாகும். அத் தாய்ஸ்தானமாகவுள்ள ஆகா யத்தைப் பட்சிகள் தாண்டிச் செல்ல மாட்டா. (அப்பேர்ப் பட்ட ஆகாயத்தில் நீங்கள் பிறந்தீர்களென்று மருத்துக்களைத் துதித்தபடி.)—(எ-று.) மருதர், மருத்துக்கள், மாருதர், மருத் துவர் என்பன ஒரு பொருட்கிளவிகள். இப்பாட்டில் வய: என்ற சொல்லுக்கு வேறு பொருள் தந்து 'தமது தாயினிடத்தி ருந்து அவர்கள் (பிறருக்குப் பலந் தருவார்கள்) ஆம். அவர்க ளது பல மிரண்டுபங்கு கூட வுள்ளது.' என உரை கூறுவர் மேனாட்டாசிரியர்.

10. அன்னர் வாக்கி னுதித்தவ ராடியே
துன்னு காலையிற் றோயம் பெருக்குவார்;
அன்ன நீரைக் குடிக்க முழங்குமா
முன்னிச் சானுநீ ரோட முயக்குவார்.

(இ-ள்.) மேற்சொன்ன தகைமையாகிய வாக்கினுற்பவித்த மருத்துக்கள் விளையாடிக்கொண்டுவரும்போது தண்ணீரை விரு த்திசெய்வார்கள். அத் தண்ணீரைக் குடிப்பதற்காக, முக்காரம்

போடுகிற பசுக்களையும் முழங்காலளவு தண்ணீரிற் செல்லும் படி தூண்டி விடுவார்கள்.—(எ-று.)

வருக்கம் 13.

11. செல்லும் பாதையிற் சீர்மிகு செல்வினை
மல்லன் மாரி வழங்குவ தில்லதைப்
புல்லு நீளங் குறுக்குப் புடைத்ததைப்
வெல்லரிதை விழைந்து பெய்விப்பரே.

(இ-ள்.) (மருத்துக்கள்) தாங்கள் நடக்கும் வழியிலுள்ளதும், தன்னிடத்திலுள்ள மழையைத் தராததும், நீண்டு அகன்று வீங்கினதும், ஒருவராலும் இம்சிக்க முடியாததுமான மேகத்தைப் பெய்யுமாறு செய்வார்கள்.—(எ-று.)

12. மாருதர்களே நீங்கள் வலியினையந்
தாளுங் காரணத் தார்ந்த சனங்களும்
பாரிற் றந்தொழில் பார்க்க விடுத்தனிர்
பேரு மேகநீர் பெய்திடத் தூண்டினீர்.

(இ-ள்.) மருத்துக்களே! உங்களுக்குப் பலமமைந்துள்ள காரணத்தினால் ஜனங்கள் அல்லது (பிராணிகள்) தங்கள் தங்கள் தொழிலைப் புரியுமாறு தூண்டினீர்கள். இடம் மாறும் மேகமும் மழையைப் பெய்யும்படி ஏவினீர்கள்.—(எ-று.) வடமொழி மூலத்தில் 'கிரீந்' என்றுள்ளது. ரிக் வேதத்தில் கிரி, பர்வதம் என்னும் சொற்கள் மேகத்தைக் குறிக்கும். மேக மலை யென்றும், பர்வத்திற் பயன் (மழை) தருவதென்றும் பொருள்படும்.

13. என்று மாருத ரெந்நெறி செல்கிறா
ரன் றவர்நெறி யன்னவர் மாற்றத்தாற்
றுன்றி நிற்கும்; தொனியினை யாரெனு
மன்றத் தஞ்செவி வாய்மடுத்தார் கண்டீர்?

(இ-ள்.) மருத்துக்கள் போகும் வழியிலெல்லாம் அவர்களது சப்தத்தால் அவ்வழி நிறைந்திருக்கும். அவர்களது சப்தத்தை யாராயினுங் கேட்டிருக்கிறீர்களா?—(எ-று.)

14. விரைவின் மேவுறு வெம்பரி யூர்ந்துநீர்
விரைக கன்மப் புவியினை வேண்டியே ;
தெரியிற் கண்ணுவர் சேர்ந்துமைச் சேவிப்பா
ரரிய வன்ன ரிடைநிறை வெய்துக.

(இ-ள்.) (மருத்துக்களே!) வேகமாகச் செல்லக்கூடிய உங்கள் வாகனங்களின்மே லேறிக்கொண்டு யாக கர்மங்கள் நடக்கும் பூமியினிடத்து விரைந்து தோன்றுவீர்களாக. அங்கே கண்ணுவர்கள் உங்களைச் சேவித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிடத்துத் திருப்தியை யடைவீர்களாக.—(எ-று.)

15. எங்களாற் றரும் யாக பலியெலா
முங்கட் கோகை யுறுத்த வமைந்தவே ;
உங்க ளேவல ராக வுயர்ந்தனம் ;
எங்க ளாயுண் முழுமையு மீகவே.

(இ-ள்.) எங்களாற் கொடுக்கப்படும் யாக பலிகளெல்லாம் (மருத்துக்களே!) உங்கட்கு ஸந்தோஷத்தைத் தருவதற்காகவே யேற்பட்டன. எங்க ளாயுட் காலமெல்லாம் உங்களை ஸேவிப் பதிலேயே செலவிடுகிறோம். அதனால் எங்களுக்கு முழு ஆயு ளையும் தருவீர்களாக.—(எ-று.)

வருக்கம் 14.

## 38. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 3.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கோரனது புத்திரன் கண்ணுவன். வடமொழிச் சந்தம்: காயத்திரி. தேவதை: மருத்துக்கள்.

1. தாதை புத்திரன் தன்னைப் பிடித்தலி
னோது நற்றுதி கேட்பீ ருமதிரண்
டாதரக் காத் தென்ற ணிவீ ரெமைக்
கோது தீரத் துணித்த குசையுளீர்.

(இ-ள்.) ஸ்துதிப்பிரியரும், நறுக்கிய தருப்பையையடைந் தவர்களுமான (மருத்துக்களே!) பிதாவினது கையில் புத்திரனைப்

பிடிப்பதுபோல எங்களை எப்பொழுது உங்களுடைய கைக ளால் தாங்குவீர்கள்?—(எ-று.) வருக்தபர்ஹிஷ:- யாருக்காகத் தருப்பை நறுக்கப்பட்டதோ அவர்கள்.

2. எங்குளீ ரிற்றை யெண்ணு மகமின்றி?
மங்குல் செல்லுவிர் மண்ணினி லேனுமீர்?
துங்க வாக்க டொனியி னியட்டாவி
னங்க நல்லொலி யாரும் புவியன்றி?

(இ-ள்.) எங்கு நிற்கிறீர்கள்? தேவயஜநதேசத்துக்கு ஏன் வரவில்லை? ஆகாயத்திலேயே செல்லுவீர்கள், ஏன் பூமியிற் செல்வதில்லை? பசுக்கள் சத்தமிடுவதுபோல உமக்குப் பூமியல் லாத வேறெவ்விடத்தில் யாக கர்த்தாக்கள் சப்தத்தோடு மறை யோதுகிறார்கள்?—(எ-று.) மேனாட்டாசிரியர் உங்களுக்குப் பால் கொடுக்கும் பசு எங்கே சப்தத்தோடும் விளையாடு மென் பார். காவோந என்ற சொற்றொடரி லுள்ள 'ந' சப்தத்தை உபமாவாசகமாகக் கொள்ளாமல் அவர் அப்படி யுரை எழுதி யுள்ளார். புவியன்றி யாருமாவென வினாவாகக் கொள்க.

3. மருதர்கா ணவ மன்னு தனமெங்கே?
அரதனங்க ளளித்திடு வாழ்வெங்கே?
கருது சௌபாக் கியமெலாங் கண்ணுற
வரிதி ஞயின வார்ந்த வவையெங்கே?

(இ-ள்.) மருத்துக்களே! புதியதாமாகத் தோன்றிய (பிரஜைகளும், பசுக்களும் சேர்ந்தான) தனம் எங்கே? மணி முத்துக்களைத்தரும் உங்களுடைய வாழ்வு (செல்வம்) எங்கே? எல்லா ஸௌபாக்கியங்களும் (யானை, குதிரை முதலிய வாழ்வு களும் எங்கே? (அவற்றோடு எதிர்ப்படுவீர்களாக.)—(எ-று.) ஸும்நா, ப்ரஜா பசு ரூபாநி தநாநி என்பார் ஏன்? ப்ரஜாவை பசவ: ஸும்நம் என்பது தைத்திரீய ஸம்ஹிதை.

4. பிருச்சினியன்னை பெற்ற மருதரே!
அருச்சுதர் நீர் மரணத்த ராகினுங்
கருச்சிதையக் கதித்துமை யேத்துவோ
னருச்சிக் கத்தகுந் தேவனே யாகுவான்.

(இ-ள்.) பிருச்னியாகிய தாய் பெற்ற மருத்துக்களே! அரிய சுதர்களாகிய நீங்கள் மரண தர்மமுள்ள மநுஷ்யர்களாகத் தோன்றினாலும் உம்மை வணங்கித் துதிப்பவன் அர்ச்சிக்கத் தகுந்த தேவ னாவான்.—(எ-று.) பிருச்நி-பன்னிறமுள்ள பூமியென்று மேனாட்டாசிரியரும், தேனு அல்லது பசு வென்று சாயனரு முறை கூறுவர். பிருச்நி மாதர: என்னுஞ் சொற்றொடருக்குபிருச்நியைத் தாயாகவுடையவர் என்பது பொருள். அவர்கள் மருத்துக்களாம்.

5. புல்லை மேய்ந்திடு மாவெனப், போற்றுவோ
ரல்லு மெல்லு மணைந்து துதிப்பினுஞ்
சொல்லும் போற்றி னவா சுருங்காதுறல்;
புல்லுறுதறல் போக் கியமன் னெறி.

(இ-ள்.) ஸ்தோதாவானவன் எவ்வளவு துதித்தாலும் ஆசையடங்காமல் புல்கறிக்கும் மிருகத்தைப்போலப், பின்னும் பின்னும் துதித்துக்கொண்டே யிருக்கட்டும். அவனுக்கு யம பாதையிற் செல்லும் செலவு மில்லாதிருக்கட்டும். (அதாவது அவன் மரணமடையாம லிருக்கட்டும், என்றபடி).—(எ-று.) அல்லு மெல்லு மணைந்து துதிப்பினும் என்பது வடமொழி மூலத்திலில்லை. போக்கியம் அல்நெறி எனப்பிரிக்க.

வருக்கம் 16.

6. வெல்லரும் வலி மீக்கொண் டெமையிவட்
கொள்ளு நிர்ருதி யெம்மைக் கொலைசெயா
தொல்லும் வாய்தொறு மெங்களை யோம்புக;
செல்லுக வது சேர்ந்த தவிப்பொடே.

(இ-ள்.) ஒருவராலும் வெல்லமுடியாது வலியிற் சிறந்து பெருகும் ரட்ச ஜாதி விசேஷமாகிய நிர்ருதி என்னும் (பாப) தேவதை யெம்மைக் கொல்லாதபடி கூடிய விடங்களிலெல்லாம் காப்பீராக! அந் நிர்ருதியும் தனது ஆசைகளோடும் அழியட்டும்.—(எ-று.) எங்களது விருப்பங்கள் நிறைவேறாதபடி கெடுக்கும் அத்தேவதையும் நாசமடையட்டும் என்றும் சாயனர் பொருள் கூறுவார்.

7. நீரில் பாலையே யாயினு நிச்சய
மாரி சற்றும் வளியிலா நேய்ந்ததை
ஆரும் வண்ண மளிப்ப ரென்றும்மொளி
சாரு ருத்திர மக்கள் வலிமையோர்.

(இ-ள்.) ஒளி சிறந்தவர்களும் உருத்திரனது பிள்ளைகளும் (அல்லது உருத்திரனுக்குப் பிரியமானவர்களும்.) வலிமையுள்ளவர்களுமான (மருத்துக்கள்) நீரில்லாத பாலைவனத்திலும் காற்றில்லாமல் (ஜோவென்று) பெய்யும் நல்லமழையைப் பெய்விப்பார்கள்.—(எ-று.)

8. முழங்கு கற்று வெனமூரல் மின்னரூன்
வழங்கு தாய்தன் மகவயிற் சார்தலொத்
திழிந்து கொட்டு மிடிகொள் மழையொடுந்
தழங்குரலோடும் பின்சொல் தகையதே.

(இ-ள்.) மடி சுரந்துள்ள பசு கதறுவதுபோல மேகத்தில் மின்னல் தோன்றினதும், சப்தமுண்டாகிறது. தாய்ப் பசு கன்றைப் பின்றொடருவதுபோல மின்னலும் இடித்தொனியோடு மருத்துக்களைத் தொடர்ந்து ஸேவிக்கிறது. அப்பொழுது அம் மின்னலோடு மருத் ஸம்பந்தமான மழையும் பெய்கிறது.—(எ-று.) தழங்கு-குரல் தழங்குரலென்றாயிற்று.

9. பொங்கு நீரத்திற் பூமியை மூடும்போ
திங்கு நீர்வகித் தேங்குறு மேகங்கள்
தங்கு நல்லொளி சாரும் பகலையும்
மங்கு லாகவே மாற்றி விளைக்குமே.

(இ-ள்.) நீரைச் சுமக்கும் மேகங்கள் பூமியை ஈரத்தால் நிறைவிக்கும்போது பகற்காலத்தையும் இருட்கால மாக்கிவிடுகின்றன.—(எ-று.)

10. மருதர் பேரொலி வாய்ந்திடி கொண்டபின்
அரிதி னுறை வகங்கள் புவியினிற்
பெரிதியங்குவ பெட்பின் மனிதரும்
இரிதருகுவர் கம்பனத் தெய்தியே.

(இ-ள்.) மாருதர்கள் கர்ச்சிக்கத் தொடங்கினவுடன் பூமியிலுள்ள எல்லாக் கிருகங்களும் நடுங்கத் தொடங்குகின்றன. அவ்வீடுகளிலுள்ள மனிதர்கள் எப்பொழுதும் மிகவும் நடுங்குகிறார்கள்.

வருக்கம் 16.

11. மருதரே திடம் வாய்ந்த கரங்கொடிங்
இருகரையு மியைந்த வணைக்குளே
யொருதடையு முறாது வழங்குறுந்
திருநதி யிலக் சேன்றிவட் சேருமே.

(இ-ள்.) மருதர்களே! திடம்பொருந்திய கைகளோடு கூடி இரு பக்கத்திலு முள்ள அணைகளுக்கு மத்தியில் ஒரு தடையு மில்லாம லோடும் நதியை இலட்சியமாகக்கொண்டு சென்றடையுங்கள்.—(எ-று.)

12. தேருருளையின் கட்டுத் திரமதா
ஆருக; உம் பரி ரத மங்ஙனே;
வாரணிந்த விரற் கடிவாளமுஞ்
சீரிற் கோலச் சிறப்புறச் சேர்கவே.

(இ-ள்.) (மருத்துக்களே!) உமது தேருருளைகளின் கட்டுத் திரமாயிருக்கட்டும். உமது தேரும் குதிரைகளும் உறுதியா யிருக்கட்டும். உமது குதிரைகளைக் கட்டி யிழுத்துப் பிடிக்கும் கடிவாளமும் உங்களது விரல்களை அலங்கரித்துக்கொண்டு ஸாவதானமாக அமரட்டும்.—(எ-று.)

13. தேவ ரூபம் விளக்கு மறையினாற்
பாவு மந்திர நற்பதி, யக்கினி,
யோவில் தோற்றத் தொருவனு மித்திரன்,
மேவு மாறு விழைந்திவட் கூவுக.

(இ-ள்.) ரித்விக் கூட்டங்களே! தேவதா ஸ்வரூபத்தைப் பிரகாசிப்பிக்கும் வாக்கியங்களால் மந்திரங்களுக்கு (அல்லது ஹவிக்கான அன்னப் பொருள்களுக்கு)ப் பதியை (மருத்துக் கூட்டத்தை)யும், அக்கினியையும் கண்ணுக்கினிய தோற்றத்தை (காட்சியை) யுடைய மித்திரனையுங்கூட ஸ்தோத்திரம் செய்வதற்காகக் கூவுங்கள்.—(எ-று.) மேனுட்டாசிரியர் இதற்கு வேறுவிதமாகப் பொருள் கூறுவார். 'மித்திரனைப்போல் அழகாவுள்ள மறைப்பதியாகிய அக்கினியைத் துதிப்பதற்காக இந்தப் பாட்டினுல் இங்கே அழைக்க' என்பர்.

14. கவி யியற்றிக் கடிதி னமைக்க; அக்
கவி, மழையெனக் காண விரிபொருள்
சுவை பொருந்திடத் தோய்த்திட; உக்தியஞ்
செவிகொள் காயத்திரி மறை செப்பவே.

(இ-ள்.) ரித்விக் சமூஹமே! உங்களது வாயினல் உடனே ஸ்தோத்திரத்தைக் கவனஞ்செய்யுங்கள். அந்த ஸ்தோத்திரமாகிய சுலோகத்தை, மேகம் மழையைப் பெருக்குவதுபோலப், பொருள் விஸ்தாரமாக வுள்ளதாக வமையுங்கள். சஸ்திர யோக்கியமான காயத்ரிச்சந்தஸோடு கூடிய சூக்தத்தைப் படியுங்கள்.—(எ-று.) உக்தம், சஸ்திரம்; மண். 1, சூக். 6, செய். 8 பார்க்க.

15. பெருகு காந்திப் புகழ்ச்சியிற் பேசுவோர்க்
கருகமான மறையொடு மார்ந்திடு
மருதர் நற்குழு வந்தித் தெழுகவே;
யருகி னிங்கவ ராக்கத் தமர்கவே.

(இ-ள்.) ரித்விக் ஸங்கமே! பிரகாசத்தோடுகூடியவரும், துதிப்பதற்கு யோக்கியமானவரும், அர்ச்சனையோடுகூடியவரும், (அல்லது அர்ச்சிக்கும் மந்திரங்களோடு கூடியவரும்) ஆன மருத்துக் கணத்தை நமஸ்கரித் தெழுங்கள். நமது இக் கர்மத்தில் அவர்கள் ஓங்கி வளரட்டும்.—(எ-று.)

## 39. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 4.

### 10. இருக்குக்களுள்ளது.

ரிஷி: கண்ணுவன். வடமொழிச்சந்தம்: ஒற்றை இருக்குக்களுக்கு ப்ரஹதி, இரட்டை யிருக்குக்களுக்கு ஸதோப்ரஹதி. தேவதை: மருத்துக்கள்.

(வேறு.)

1. சூான் கிரண மெனநீவிர் தூர நின்றும் வலிமையினல்,
ஆருந் தாவ ரங்கடமை யாட்டி வீழ்த்து மாருதரே!
சாருங்காலை யார்மகத்தே சார்வீர்? யாவர் துதிகேட்பீர்?
தாரி னெங்கே செல்குவீர்? சாற்றீர் யாருக் களிசெய்வீர்.

(இ-ள்.) சூரியனது தேஜஸானது தூர தேசத்திலிருந்து வீழ்வதுபோலத், தூரத்திலிருந்தே கருதத்தக்க உமது பலத்தினால் தாவராதிகளை யசைத்தாட்டும் மருத்துக்களே! யாருடைய கிருதுவுக்கு (யாகத்துக்கு) நீங்கள் செல்லுவீர்கள்? யாருடைய ஸ்தோத்திரத்தைக் கேட்பீர்கள்? எந்த தேவயஜன தேசத்துக்குப் போவீர்கள்? யாருக் கநுக்கிரகஞ்செய்வீர்கள்?—(எ-று.) தேவயஜன தேசம், யாகஞ்செய்யுமிடம்.

(வேறு.)

2. நுங்களா யுதமும் பகைவரா வாரை
நூக்குறும் வலியியைந் துறுக;
அங்கமா யவரை யடக்கியே வலிப்பா
னமைந்துற வுறுதியைப் பின்னுந்
துங்கவும் வலிமை மாயையைத் துதைந்து
துகளுறு மனிதர்தம் வலிபோ
லிங்குறு தென்றும் யாவரும் புகழ்வா
னியைந்துசீர் பொருந்திவாய்ப் புறவே.

(இ-ள்.) உங்களாயுதங்கள் பகைவரைத் தள்ளிவிடுவதற்கு வேண்டிய பலத்தை யடைந்திருக்கட்டும்; மேலும் அவரை அடக்கியாளுவதற்கு வேண்டிய உறுதியைப்பெற்று நிற்கட்டும். உமது பலமானது மாபாவிகளாகிய மனிதரது பலம்போலல்லாமல் எப்பொழுதும் யாவரும் புகழும்படியான கீர்த்தியைப் பொருந்திச் சிறந்து நிற்கட்டும்.—(எ-று.)

(வேறு.)

3. திரத்தின் மருவு மரங்களினைத்
திருகி வீசித் தூரவெறிந்
தூரத்திற் றிண்மைக் கல்லினையு
மொன்றிரண்டா வுடைக்குங்கால்
வரத்துத் தாருச் சோலைநடு
மகிழ்ந்து செல்வீர், வீரர்காள்,
வருத்து நாகப் பிளவுகளின்
வழியாப் பக்கல் சார்வீரே.

(இ-ள்.) ஸ்திரமாக நிற்கும் மரங்களைத் திருகி வீசியும், உறுதிவாய்ந்த மலைகளையுடைத்தும் மரச்சோலைகளுக்கிடையிற் செல்லும் வீரர்களே! நீங்கள் பிளக்கும் மலை விடவுகளின் வழியாக அம் மலைச்சாரல்களுக்குச் செல்வீர்கள்.—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 3.

(வேறு.)

4. பகைவரை மேற்கொண் டழிக்குறு மருதீர்!
பாந்தவிப் புவியினும் வானுந்
தகைபெற வுமக்குப் பகைவனே யிலையாற்
சாற்றுருத் திரன்மகா ரானீர்!
வகைபெற நாற்பத் தொன்பதின் மருநீர்
மருவலர் தமையெதிர் தடுக்க
மிகையுறு வலியை யிறையினி லின்று
மேவுவீ ரொற்றுமை சிறந்தே.

(இ-ள்.) ரிசாதஸர்களாகிய மருத்துக்களே! விண்ணுலகத்திலும், பூமியிலும் உங்களுக்குச் சரியான சத்துருக்களில்லை. உருத்திரனது புத்திரர்களாகிய மருத்துக்களே! நாற்பத்தொன்பதின்மராகிய நீவிர் பரஸ்பர ஐகமத்தியத்தோடுகூடிச் சத்துருக்களுடைய பலத்தை உடனே கெடுக்கத்தக்கவண்ணம் உங்களுக்குப் பலம் விஸ்தாரமாக அமைந்துகிடக்கின்றது.—(எ-று.)

(வேறு.)

5. மலைக டம்மைப் பேர்த் தெரிவார்
மருதர் சோலை மரங்களினிற்
றலைமை யெய்து மவை தம்மைத்
தாறு மாறுய்ச் சாடுவரால்;
உலைவில் வலிமை மருதரே,
யுன்மத் தத்தர் திரிவதுபோற்
பலராந் தேவர் குழுவுடனே
பரிந்தெவ் விடத்துஞ் சார்வீரே.

(இ-ள்.) மருத்துக்கள் (மேரு இமயம் ஆதிய) பர்வதங்களைப் பேர்த்தெறிகிறார்கள். சோலைகளுக்கு நாயகங்களாகவிருக்கும் (வடம், அச்வத்தம் முதலிய விருட்சங்களை) ஒன்றோடொன்று விலகிப்போகும்படி சாடுகிறார்கள். வலிமிகுந்த மருத்துக்களே! மதோன்மத்தர்கள் தங்க ளிச்சைப்படி திரிவதுபோலத் தேவர் கூட்டத்தோடுஞ் சேர்ந்து பலவிடங்களிலும் திரிகிறீர்கள்.-(எ-று.) வடம்-ஆல்: அச்வத்தம்-அரசு. படர்க்கை முன்னிலை மாற்றைக் கவனிக்க.

வருக்கம் 18.

## மண்டலம் 7. சூக்தம் 39.

(வேறு.)

6. உங்கணற் றேரிற் புள்ளிவாய் மானை
யுறுதியாய்ப் பூட்டினீ ரிவற்றுண்
மங்குறுச் சிவப்பு மானடு நின்று
மற்றத்தே ரிழுக்குறு மைய ;
சங்குறு கடல்சூழ் புவியுமும் வரவைத்
தகைபெற வுணர்ந்தனள் ; ஆங்கே
தங்குறு புருடர் சாற்றலா நடுக்கிற்
றங்கினர் பிறரொடு தாமே.

(இ-ள்.) (மருத்துக்களே !) உங்களது தேரில் புள்ளியோ டுகூடிய மான்களைக் கட்டினீர்கள். அவற்றில் சிவந்த நிறமுடைய மான் நடுவில் நின்று அத்தேரை யிழுத்துச்செல்லும். பூமியுங் கூட உங்களுடைய வரவை யுணர்ந்தது. அப் பூமியின்கண் ணுள்ள புருடர் தாங்கள் நடுக்கமடைந்ததுமாத்திரமே யன்றி மற்றையர்க்கும் நடுக்கமூட்டிநின்றார்கள்.—(எ-று.) சங்குறு கடல்சூழ் என்னும் அடை எதுகை நோக்கிச் சேர்க்கப்பட்டது. மற்று, அசை.

(வேறு.)

7. எம்புத் திரரைக் காபாக்கிங்
கேகீர் விரைவி னுருத்திரன்றன்
சொம் புத்திரரே என்றும்மைத்
தோய்ந்து துதிப்போ மெவ்விடையும்;
இம்பர் பூர்வ காலத்தெம்
மிடைவந் தருள்செய் ததுபோலக்
கம்பித்தொழுகுங் கண்ணுவனைக்
கடைக்க ணிக்க வருகவே.

(இ-ள்.) உருத்திரனுக்கு உரிமை வாய்ந்த புத்திரர்களே ! 'எங்களுடைய புத்திரரைக் காக்க விரைவாக வருவீர்களாக' வென்று துதிப்போம். பூர்வ காலத்தில்எங்களுக்கு அருள்செய் தது போல நடுங்கிக்கொண்டிருக்கும் கண்ணுவ வம்சத்தினனை யும் காப்பாற்ற வருவீர்களாக.—(எ-று.)

(வேறு.)

8. யருதர்கா ளும்மால் மரித்திடு பிறவெம்
மாந்தரா லேவுறு பகைவ
னரிதினெம்மாட்டுற் றெம்மையுங் கலக்க
வடித்திடி னவனை வல்லபத்தாற்

பிரிதுறு தேக வன்மையா லும்மைப்
பிரிந்துரு தும்வயி னெழுகுந்
திருவம ருதவி தம்மினு லெம்மைச்
சேருரு வகைபிரித் தருள்க.

(இ-ள்.) மருத்துக்களே! உங்களால் ஏவப்பட்டவனாயினும் மற்றும் எம்போன்ற மர்த்தியரா லேவப்பட்டவனாயினும், ஒரு பகைவன் எம்மைக் கலங்குமாறு இம்சித்தால், உமது வல்லபத்தினாலும், தேக பலத்தினாலும், உம்முடைய சிறந்த உதவிகளாலும் அவன் எம்மை யடைய முடியாதபடி பிரித்துவிடுக.—(எ-று.)

(வேறு.)

9. நிறைவிற் பொருந்து யாகத்தை
நேர்தற் குரியோர் நின்மலமா
நிறை ஞானத்தர், கண்ணுவரை
நின்று காத்தார் பூரணமா ;
அறையு மருதீர் ; அரும்பெயலை
யணைந்து முன்னர் மின்னலுமே
தறையி னுறுத னேரவெமைச்
சாரீர் பூன்ற வுதவியொடே.

(இ-ள்.) சம்பூரணமான யாகத்தைப் பெருதற் குரியவரும், நிர்மலமான பரிபூரணஞானத்தையுடையவரும், ஆன மருத்துக்கள் கண்ணுவரைப் பரிபூரணமாகக் காத்தார்கள். மருத்துக்களே! மழை பெய்வதற்குமுன் மின்னல்தோன்றுவதுபோல உம்முடைய பூரண உதவியோடும் எம்மை யடைவீர்களாக.—(எ-று.)

(வேறு.)

10. மங்கலக் கொடையை வழங்குறு மருதீர்
மருவுபூ ரணவலி யமைவீர்
இங்கெவற் றினையு மியக்குவீ ருமது
வல்லப மியம்பிற் பூரணமே ;
பொங்குறுகோபத் திருடியைப் பகைக்கும்
பொருந்தலன் வயின் மற்றோர் பகையை
மங்குறு தோம்பும் பூரண வலியின்,
அம்பென, மருவுவிப் பீரே.

(இ-ள்.) நல்ல தானத்தோடுகூடிய மருத்துக்களே ! உலகை நடுங்குறச்செய்பவர்களே ! பூரணமான வலிமையை யடைவீர்களாக. உமது பலம் நிறைவாகவேயிருக்கும். இருடிகளைக்கோபித்

து வாட்டும் பகைவனை யடக்குவதற்காக வேறொரு சத்துருவை அம்பை யேவி விடுவதுபோல விடுவீர்கள்.—(எ-று.)

வருக்கம் 19.

## 40. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 5.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கௌஷிகண்ணுவன். வடமொழிச்சந்தம்: ஒற்றை யிருக்குக்களுக்கு ப்ரஹதி, இரட்டை இருக்குக்களுக்கு ஸதோப்ரஹதி. தேவதை: பிரஹ்மணஸ்பதி.

(வேறு.)

1. தேவ பூஜை சிறப்போடுஞ்
 செய்யும் யாங்கள் மறைப்பதியே
 யாவ லோடு மியாசிப்போ
 மருளி னுறையுள் விட்டெழுக;
 ஓவில் கொடைகள் மிகத்தருவோர்
 மருத ருவங்தெம் பால்வருக;
 மேவிச் சோமந்தனை வேந்தே
 மேன்மை யொளியி னூர்த்துகவே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! தேவபூஜை செய்யும் யாங்கள் உன்னை யாசிப்போம். உன்னிடத்தை விட்டு எழுந்து வருவாயாக; கொடையிற் சிறந்தவர்களாகிய மருத்துக்கள் எங்களிடத்து வருக. இந்திரனே! நீயும் கூட வந்து சோமத்தைப் பிரகாசிப்பிப்பாயாக. அதாவது விருத்திரனை இம்சிப்பாயாக.—(எ-று.)

(வேறு.)

2. பலத்தினுக் குதித்த வொப்பரு மகனே!
 பதனழி மனிதனு முனையே
 நலத்தபொன் றரும்வெம் போரினி லுதவி
 நாடியே கூவுவான் கண்டாய்;
 வலத்தரு மருதீர், தனம் விழைந் தும்மை
 மதியுற நயக்குமம் மகனுங்
 குலத்தரு வீரங் கொடுக்கு நற்பொருளுங்
 குதிரையு மகிழ்சிறந் தடைக

(இ-ள்.) பலத்தின் புத்திரனே மரணதர்மமுள்ள மனிதனும் உன்னையே பொன்னைக்கொண்டுவரும் போரினில் துணைக்காக வழைப்பான். மருத்துக்களே! செல்வத்தை விரும்பி உம்மை ஸ்தோத்திரம் செய்யும் அப் புருஷன் பொருளையும் குதிரையையும் அடையட்டும்.—(எ-று.)

(வேறு.)

3. வருக வீண்டு மறைப்பதியே ;
வருக வாக்குச் சூந்ருதை
அருகு சாரா தொன்னலனை
யமைக்க தேவர் தூரத்தே
நரர்கட் கிதத்தை யாற்றுநிரை
நாட்டுஞ் செல்வம் யாகத்துக்
கருக மாகுமதை யெம்மாட்
டமைக்க கொண்டு வந்திறையே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதியே! நீ இங்கு வருவாயாக; ஸூந்ருதா தேவியே, நீயும் வருக; (இப் பிரஹ்மணஸ்பதியாகிய தேவர்கள்) எங்களது சத்துருவைக் கிட்டவரவொட்டாதபடி தூரத்தே நிறுத்துக. நரர்களுக்கு ஹிதத்தைசெய்து யாக யோக்கியமான (அவிச்) செல்வக் குவியலை உடனே எமக்கு அவர்கள் கொண்டுவந்து சேர்க்கட்டும்.—(எ-று.) ஸூந்ருதா என்பதற்கு ப்ரியஸத்திய ரூபா வாக்தேவதா என்பார் சாயணர். அன்பும் உண்மையும் உருவமாயுள்ள வாக்குத் தேவதை என்பது பொருள். இவ்விடத்து பங்திராதஸம் என்னும் பதத்திற்கு ஐந்து விதமான யாகப் பொருள்களையும் எனப் பொருள் கொண்டு பொரி, கஞ்சி, தோய்த்த பால், அடை, தயிர் என்னும் ஐந்துமென்பார் மேனாட்டாசிரியர்.

(வேறு.)

4. எவ்யஜமான னெக்கியம் புரிவோர்க்
கியைந்த நற் றனங்களை யளிப்பா
னவ்யஜ மான னழிவி லுண்டியினை
மறைப்பதி யளிக்க விங் கடைவான் ;
ஒவ்வுறு வலிகொள் வீரரை யளிக்கு
மிளையினை யொருவரு மேற்கொண்
டெவ்வமே புரிய வொருப்படா தேதி
லவரினை யொறுப்பவட் டுதிப்பாம்.

(இ-ள்.) எக்கியம் செய்யும் மறையவர்களுக்குத் தனங்களை யதேஷ்டமாகக் கொடுக்கும் யாக கர்த்தா, அழிவில்லாத உணவுப் பொருள்களைப் பிரஹ்மணஸ்பதி கொடுக்கப்பெறுவான். நல்ல வீரர்களைத் தருபவளும், ஒருவராலும் இம்சிக்க முடியாதவளும், பகைவரை வாட்டுபவளு மான இளையை வணங்குவோம்.—(எ-று.) இளை இளா, இடா, மண். 1, சூக். 13,

செய். 9 தையும், மண். 1, சூக். 31 செய்யுள் பதினொன்றையும் பார்க்க. இவ்விளை என்னும் பதத்திற்கு இன்னொரு அர்த்தம் மேனாட்டாசிரியர் கூறுவர். அதாவது அவியுணவென்பதாம். ப்ரயாஜத்துக்கும் (யாகத் தொடக்கத்துக்கும்) அநுயாஜத்துக்கும் (யாக முடிவிற்கும்) இடையில் அளிக்கப்படும் அவிக்கு இளை எனப் பெயரென்பர். அற்றேல், 'ஒவ்வுருவவிகொள்வீரரையளிக்கு மிளையினை யொருவரு மேற்கொண், டெவ்வமே புரியாதெதிர்ப்பவர்க் கெடுக்கு மவியினை யிவர்க்கென வளிப்பாம்.' எனப் படிக்க. இளையினை, அவியினை இளையாகிய அவியை எனப் பொருள்கொள்க. ஆனால் பெரும்பான்மை இளை பிரார்த்தனா ரூப அல்லது கர்மரூப தேவி யென்னும் பொருளிலேயே உபயோகப்படுகிறது. மண். 3 சூக். 7 பார்க்க. மண்டலம் 5 சூக்தம் 42 ல் பூமியென்ற பொருளிலும் வந்துளது. எல்லாவிடத்திலும் இவ்விளை மனுவின் புத்திரி யென்று தைத்திரியங் கூறுவதையே ஒட்டிக்கூறுவர் சாயணர்.

(வேறு.)

5. பிரமணங்கணற்பதியும் பேசும் புகழ்க்குத்தக்கதாம்
வரமார்மறையைஹோதாவாய் வழங்குகின்றான்; அம்மறைக்குட்
டரமார் வேந்தும் வருணனுந் தக்க மித்தி ரன்றானு
மரியமானு மாதியநற் றேவ ருறைந்தா ரழகினே.

(இ-ள்.) பிரஹ்மணஸ்பதி சஸ்திர யோக்கியமான மந்திரத்தை ஹோதாவின் முகத்தில் நின்று சொல்லுகிறான். அம்மந்திரத்தில் இந்திரன், வருணன், மித்திரன், அர்யமா முதலிய தேவர்கள் குடிகொண்டுள்ளார்கள்.—(எ-று.)

வருக்கம் 20.

(வேறு.)

6. நன்மையை யளித்துத் தோடமே யிலையா
மறையினைத் தேவர்க ளயக்கும்
தன்மையா லதனை யாகத்துச் செறிந்த
சற்கவி தாக்கண்மு னவில்வோம்;
வன்மைசார் வீரத் தேவர்கா ளிச்சொன்
மந்திரம் விழைவீரே லுந்தந்
தின்மையே யறியா வழகுசா ராசி
யெலாஞ்செறிந் தடைகவிம் மறையே.

(இ-ள்.) (பிரஹ்மணஸ்பதி முதலிய) தேவர்களே! நன்மைக்குக்காரணமாயும், தோஷரஹிதமாயுமுள்ள மந்திரத்தை

யாங்கள் யக்ஞத்தில் உபயோகிப்போம். வீரத்தன்மை வாய்ந் தவர்களே! (தேவர்களே!) இவ் வுக்தமாகிய மந்திரத்தை நீங் கள் விரும்புவீர்களானுல் அழகு பொருந்திய உம் ஆசிகளெல் லாம் அதனிடத்துப் பரந்து நிற்கட்டும்.—(எ-று.)

(வேறு.)

7. தேவர் விரும்பு மவன்யாரைச்
சேர்வான்? குசையை நனி நறுக்கி
மேவு மருட்டா தாப்பிறதே
வெவனை யடைவான்? அவியளித்துச்
சேவை புரியும் யஜமானன்
சேர்ந்த விருத்து விஜர்களுட
னேவில் விவித தனத்தோடு
மொழுகு மில்லைப் படைப்பானே.

(இ-ள்.) தேவர்கள் விரும்பும் அவன் எம் மனிதரை யடை வான்? தருப்பையை நறுக்கு மருட்டாதா (பிரஹ்மணஸ்பதி யைத்தவிர வேறு) எந்தத் தேவனைப் போய்ச் சாணம்புகு வான்? ஹவியைத் தத்தஞ்செய்து யாகம் புரியும் யாககர்த்தா தன்னோடு கூடியுள்ள இருத்துவிக்குக்களோடு யாகப்பிரதேசத் தில் நின்று (புத்திர பௌத்திரர்களோடு கூடிய) வெகுவித மான தனத்தைத் தன்னிடத்துக் கொண்டுள்ள கிருஹத்தினைப் பெறுவான்.—(எ-று.)

(வேறு.)

8. வலியினைக் கூட்டி வளர்த்தபி னரசர்
துணைகொடு பகைவரை வதைப்பான்;
நவிபயச் செருவே யாயினும் விடுதி
நலம்பெறத் தாங்குவான்; அன்றிக்
குலிச முன்னுன படையுள வவன்றன்
குவிதனப் போர்கொள்வா ரெவரோ?
யினிவுற வுல்லங்கனம் செய்வோ ரிலை; பின்
எளியபோர் பொருநரு மிலையே.

(இ-ள்.) (பிரஹ்மணஸ்பதியாகிய தேவன்) தனது பலத்தை யதிகப்படுத்தி அரசர்களுடைய (வருணன் முதலிய தேவர் களுடைய) உதவியைக்கொண்டு சத்துருக்களை வதைக்கிறான். பயங்கரமான போரிலும் வசிக்கத் தகுந்த வீட்டை யளிக்கி றான் (ஓடுவதில்லை.) அல்லாமலும் வச்சிராயுதம் முதலிய

மண்டலம் 1. சூக்தம் 40.

ஆயுதங்களை யுடைய அவனது வெகுதன காரணமான பெரும் போரிற் பிரவேசிக்கிறவர்கள் வேறொருவரு மில்லை. அவனைக் கேவலமாக வெண்ணி யுல்லங் கனம் செய்வோரு மில்லை. அவனது அற்பப் போரிலும் அவனோடு சண்டை செய்பவர்க ளில்லை.—(எ-று.)

வருக்கம் 21.

## 41. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 6.

9 இருக்குக்களுள்ளது.

ரிஷி: கௌி கண்ணுவன். வடமொழிச்சந்தம்: காயத்ரி. தேவதை, 1-3 வருணன், மித்திரன், அர்யமான்; 4-6 ஆதித்தியன்; 7-9 வருணன், மித்திரன், அர்யமான்.

(வேறு.)

1. உத்தமக்குண மோங்கிய ஞானியர்
மித்திரன் வருணன்றொ டரியமான்
சித்த முன்னிச் சிறப்புறக் காக்குமவ்
வுத்தமன் பகையை யுடன் கொல்வனே.

(இ-ள்.) நல்ல மேதாவிகளாகிய மித்திரன், வருணன், அர்யமா என்னும் மூன்று தேவர்களும் விரும்பிக்காக்கும் அம் மனிதன் பகைவரை உடனே கொல்லுகிறான்.—(எ-று.)

2. தேவ ரெவ்யஜமானற் றெரிந்துத
மோவில் கையி னுதவியதென்ன, சீர்
பாவு செல்வம் பரந்தவன், றெவ்வரின்,
தாவி லன்னவர் காக்கத், தயங்குவான்.

(இ-ள்.) எந்த யஜமானன் (மித்திரன், வருணன், அர்யமா வென்னும்) தேவர்கள் தங்கள் கையினாற் கொடுத்தது போலச் செல்வத்தைப் பெறுகிறானோ, அந்த யஜமானன், அத்தேவர்களே அவனுடையசத்துருக்கள் அவனை இம்சிக்க முடியாதபடி காத்து நிற்க, ஓங்கி வளர்கிறான்.—(எ-று.)

3. இன்ன மன்னவ ரெவ்யஜ மானுக்கா
மன்னு சத்துருக் கோட்டையை வாட்டியே

பின்னு மொன்னலர்ப் போர்த்தெறி கின்றனர்
அன்ன வன்றன் றுரித மழிவுறும்.

(இ-ள்.) இத்தகைய மன்னவர்கள் (வருணனுதியர்) எந்த யஜமானனுக்காகச் சத்துருக்களின் கோட்டையை விசேஷமாக நாசப்படுத்தி அப் பகைவர்களேயும் அழிக்கிறார்களோ அவ் யஜமானனது பாவங்கள் அழிவை யடைகின்றன.—(எ-று.)

4. ஒப்பி லாதித்தியர் மகமேய்நெறி
செப்ப னிட்டுச் சிறந்த தகையது ;
செப்புங் கண்டகர் சேர்ந்துறையாது ; இவண்
தப்பியை யவி சார்தல்இல் உங்கட்கே.

(இ-ள்.) ஆதித்தியர்களே ! கூட்டமாக மகத்தை நோக்கி வரும் உமது பாதை இலகுவாக வரக்கூடியது ; கண்டகர்களோடு கூடினதல்லவாம். உங்களுக்கு இக் கர்மத்தினிடத்தும் நிஷேதிக்கத் தக்க அவிப்பொருள்களில்லை. (அதனால் நீங்கள் இங்கு வரவேண்டும்).—(எ-று.) ஆதித்தியர், அண்மை விளி.

5. வீர மிக்க வாதித்தியர் வேண்டிநீர்
சாரு நேர்மை நெறியினிற் சார்த்தியே
யாரு மன்போ டளிக்குமவ் வெக்கிய
நேரு மும்மது போக நிறைகவே.

(இ-ள்.) வீரர்களாகிய ஆதித்தியர்களே ! நீங்கள் விரும்பி ஒழுங்கான நெறியில் அமைக்கும் அந்த யக்ஞம் உங்களுடைய உபயோகங்களுக்காக ஏற்படட்டும்.—(எ-று.)

6. பாரி னும்மருட் பண்பமை மர்த்திய
னாரும் வெல்லரு நல்வலி யார்ந்துமீக்
கூருஞ் செல்வங் குலவு மணியெலாஞ்
சாரும் ; அன்றி யவன் மகவும் பெறும்.

(இ-ள்.) (ஆதித்தியர்களே !) உங்களாலநுக்கிரகிக்கப்பட்ட மர்த்தியன் (மரண தர்மம் பொருந்திய யஜமானன்) யாவராலும் வெல்ல முடியாத வலிமை நிறைந்து ரத்நங்களோடு கூடிய

## மண்டலம் 1. சூக்தம் 41.

செல்வங்களை யெல்லா மடைவான். அல்லாமலும் புத்திரப் பேற்றையும் அடைவான் (எ-று.) ரத்நம் என்னும் பதத்துக்கு ரமணீயம் என்னும் பொருள்கொண்டு ரமணீயமான எல்லாச் செல்வங்களையும் பெறுவான் என்று சாயணர் பொருள் கூறுவர்.

7. நண்பர்காள் வருணன் மிகநாடிய
பண்புசார் பக்கியங்களை மித்திர
ஞெண்மை யார்ந்த வரியமானும் உவந்
தெண்ணு மம்மறையை யெங்ஙன் சாதிப்பாம்.

(இ-ள்.) தோழர்களே! (இருத்விஜர்களே) வருணன் மிக விரும்பிய பக்ஷ்ய ரூபமான ஸ்தோத்திரங்களையும், மித்திரன் அர்யமா, இவர்கள் உவக்கும் மந்திரங்களையும் நாம் எப்படிப் பாடி முடிப்போம்.—(எ-று.) பக்கியம்-பக்கணம், தின்பண்டம், ஈண்டு தின்பண்டம் போல் ருசியாயுள்ள ஸ்தோத்திரங்களைக் குறித்தது. இப் பொருட்கு வடமொழி மூலத்தில் ப்ஸர: என்றுள்ளது.

8. தேவ யாஜநஞ் செய்பவனுக் கிவண்
ஓவுறு தீங்கூட்டுவோன், தீமையை
மேவு சாப மிடுபவன், எண்ணி யான்
கூவலேன் ; துதிகூறப் பழகுவேன்.

(இ-ள்.) தேவயஜனம் செய்பவனுக்குத் தீங்கிழைப்பவனைக் கெடுக்க வெண்ணியாவது, அல்லது யாக கர்த்தாவைச் சபிப்பவனை நினைத்தாவது யான் உங்களைத் துதிமூலமாய்க் கூவுவதில்லை. ஆனால் எல்லாவிடத்திலும் உங்களைத் துதிக்கும் பழக்கம் உண்டாகும்படியே துதிப்பேன்.—(எ-று.) பகைவர்களைக் கெடுப்பதும், சபிப்பதும் உங்கள் தொழில் என்றபடி.

9. பகடை நான்குங் காத்தினிற் பற்றியோன்
றகவுருட்டித் தரையின் விழுத்துமு
னிகவயி னவன்றன்னை வெருவலின்,
மிக வெருவுக ; வெம்மொழி யிச்சிக்கல்.

(இ-ள்.) நான்கு பகடைக் காய்களையும் கையிலேந்தி உருட்டிக் கீழ் வீழ்த்துவதற்கு முன் அவனைக் கண்டு (ஜயம் வருமோ, அபஜயம் வருமோ வென்று) பயப்படுவதுபோல

தேவ யஜன விரோதியைக் கண்டு) பயப்படுக. அவனது துஷ்ட வார்த்தைகளை விரும்பா தொழிக.—(எ-று.)

வருக்கம் 23.

## 42. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 7.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : கண்ணுவன். வடமொழிச்சந்தம் : காயத்ரி. தேவதை : பூஷன்.

1. பூட யாமிவட் போகு நெறிக்கணே
நேடு மத்தல நேடி வருகவே;
யீடில் முட்டுக ளெத்தனை நீக்குக;
கூட முன்செல்க கொண்மூ பெறுந்தேவே.

(இ-ள்.) பூஷனே! யாங்கள் செல்லும் நெறியில் எவ்விடத்தில் உன்னைத் தேடிக் கூவினும் அவ்விடத்தே வருக. வழியில் எவ்வளவு இடையூறுகள் நேரினும் அவற்றை நீக்குக. மேகம் பெற்றெடுத்த தேவனே! எங்களோடுகூட எங்களுக்கு முன்னற் செல்லுவாயாக.—(எ-று.) பூஷன் ஜகத்போஷகப் பிருதுவியபிமானி தேவன்; மண். 1, சூக். 16, செய். 3ன் உரையையும் நோக்குக. ஈண்டு அவன் ஜல விமோசன மேகத்தின் புத்திரன் என்றும் சொல்லப்பெற்றான்.

2. செல்லும் பாதையிற் சேரத் தடைசெய்து
வெல்ல வொல்லா விருகக் குணத்தனைப்
பல்வி டைஞ்சலும் பாரிப்ப வன்றனை
மல்லி னோட்டுக மார்க்கத்துப் பூடனே.

(இ-ள்.) பூஷனே! போகும் நெறியிற் போகவொட்டாதபடி தடுப்பவனும் வெல்லற்கரியனும் ஓநாயைப்போல வெங்கள் தனத்தை யெல்லாம் பறிப்பவனும், பலவித இடையூறுகளைப் பரப்புபவனுமான சத்துருவை எங்கள் பாதையினின்றும் ஓட்டுவாயாக.—(எ-று.) விருகம்-ஓநாய்.

3. குடில சிந்தையிற் கூர்ந்த வுரத்தின
னடுநெறியினி னுடி மறிப்பவன்
கடுநெறிக்க ணமர்ந்த வக் கள்வனை
நெடிய தூரத்து நெட்டி வெருட்டுக.

(இ-ள்.) குடில சிந்தை நிறைந்தவனும், நடு வழியில் பாட்டைசாரிகளை வழிமறிப்பவனும், திருடனுமான வவனை நெடுந்தூரம் ஓடும்படி செய்க.—(எ-று.)

4. யாவ னாயினு மேய்ந்த திருடனை
மேவு கண்முன னன்றி மறைவினிற்
பாவ காரியைப் பாதத்தி னான்மிதித்
தாவ லோடவன் றேக மழிக்கவே.

(இ-ள்.) (பூஷனே!) யாராயிருப்பினும், திருடனும் பிரத்தியட்சமாகவும் மறைவாகவும் பாபஞ் செய்பவனுமாகிய அவனைப் பாதத்தினால் மிதித்து அவனுடைய தேகத்தை யழிப்பாயாக.—(எ-று.)

5. ஞானியே, கட்கினிமைசால் பூடனே!
மேனெறியெங் குரவரை மேவிக்காத்
தூனமில் லவ் வுதவியை யெங்கணுந்
தானிரந்தனம் தாழ்க்கா தளிக்கவே.

(இ-ள்.) ஞானவானும் காட்சிக் கினிமை பயப்பவனுமான பூஷனே! எங்களுடைய முன்னோராகிய (ஆங்கிரஸன் முதலியோரைக்) காத்தது போன்ற அவ் வுதவியை எல்லாவிடத்தும் தருமாறு வேண்டினம். அதனைத் தந்தருளுவாயாக.— (எ-று.)

வருக்கம் 24

6. சோபனத் தனம் யாவுந் துதைந்தவ,
மாபலப் பொன் அசி வழங் குத்தம,
தாப நீக்கு மறையினைச் சாற்றநே வ;
சோபைசார் தனமீக வெமக்குமே.

(இ-ள்.) ஸர்வ ஸௌபாக்கியங்களும் பொருந்தியவனே! பொன்னாலான வாளாயுதத்தை உபயோகிக்கும் உத்தமனே! நாங்கள் நல்ல மந்திரத்தைக் கூறிப் பிரார்த்தித்தவுடனே எங்களுக்கு நல்ல தனத்தோடுகூடிய பொன்னைத் தருவாயாக.—(எ-று.) அசி-வாளாயுதம்.

7. ஆடு மவ்வழி யார்ந்து மறிக்குமத்
தேடு தீமையர்த் தாண்டி நடத்துக;
பீடு சாரப் பிறக்குக வந்நெறி;
பூடனே யிங்குப் போற்று மதிகொள்க.

(இ-ள்.) பூஷனே! நாங்கள் செல்லும் வழியில் எங்களை வழிமறிக்கும் தீயர்களது கையி லகப்படாமல் எங்களை நடத்துவாயாக. அவ் வழியைப் பெருமைபொருந்தியதாகச் செய்க. எங்களைக் காப்பாற்றும் புத்தியை யடைவாயாக.—(எ-று.)

8. நீடு புன்முத லோடதி நீடிய
தோடு தேயந் துதையப் பணிக்கவே;
கூடு நூதன நோயினைக் கூட்டற்க,
பூடனே யிங்குப் போற்று மதிகொள்க.

(இ-ள்.) பூஷனே! புல் முதலிய பல ஓஷதிகளு நிறைந்த பிரதேசம் எங்களுக்குக் கிடைக்குமாறு செய்க. புதிய ஜ்வரங்கள் எங்களைச் சாராதபடி செய்வாயாக; எங்களைக் காப்பாற்றும் புத்தியினைத் தாங்குவாயாக.—(எ-று.)

9. பீடு சக்திபெற; இலஞ் செல்வத்தா
னீடப் பூரிக்க; நேடும் பொ னீத்திட;
கூடு சீர்நிறைத் தன்னங் குக்கியிட;
பூடனே யிங்குப் போற்று மதிகொள்க.

(இ-ள்.) பூஷனே! எங்களை யநுக்கிரகிக்கும் சக்தி பொருந்துவாயாக. எங்கள் வீட்டைத் தனத்தால் நிரப்புவாயாக. மேலும் யாங்கள் விரும்பும் வஸ்துவை அளிப்பாயாக. எங்களைக் கீர்த்தியுள்ளவர்களாகச்செய்வாயாக. எங்கள் வயிற்றை அன்னத்தால் (அல்லது ஸோமத்தால்) நிரப்புவாயாக. எங்களைக் காப்பாற்றும் மதியினை தாங்குவாயாக.-(எ-று.) குக்கி, குக்ஷி, வயிறு.

10. பூட தேவற்கு நிந்தை பொருத்தலம்;
பீடு சூக்தம் பிறக்கித் துதிப்பமால்;
நீடு நற்பொலி வுற்றவத் தேவனை
யீடில் செல்வ மியைக்க விரப்பமே.

(இ-ள்.) பூஷதேவனை நிந்திக்கோம்; அவனுக்காக நல்ல சூக்தத்தை யுண்டுபண்ணித் துதிப்போம். நல்ல அழகு பொலிந்த அத் தேவனைச் செல்வம் தரும்படி வேண்டுவோம்.—(எ-று.)

வருக்கம் 25.

## 43. மண்டலம் 1. அநுவாகம் 8. சூக்தம் 8.

9 இருக்குக்களுள்ளது.

ரிஷி: கடி கண்ணுவன். வடமொழிச்சந்தம்: காயத்ரி, 9 அநுஷ்டுப். தேவதை: 1-3 மித்திரன், 4-6 மித்திரா வருணர்; 7-9 ஸோமன்.

1. * மருச்செறியா மதியுறும் வள்ளலா
   முருத்திரற் கெச் சுகத்தமத்தோத்திர
   மருத்தியோடு மறைவ மெம் முள்ளத்துத்
   திருத்தி யோடு சிறந்து வளர்வோற்கே?

(இ-ள்.) குற்றமற்ற ஞானோத்தமனும், இச்சைகளை வர்ஷிப்பவனும், எம்முடைய மனத்தில் விருத்தியாக வோங்குபவனுமாகிய உருத்திரனுக்கு எந்த ஸுகதமமான ஸ்தோத்திரத்தைக் கூறுவோம்?—(எ-று.) ஸுகம், ஸுகதரம், ஸுகதமமென்பன ஒன்றினொன் றுயர்ந்தன.

2. * பூமி, நம்பரி, பந்துக்கள், நந்தம் ஆ,
   நாம நாட்டுறு நங்குடிச் சந்ததி,
   ஏம மின்னவ ரெய்த: உருத்திரன்
   சேம பேடசஞ் சேர்த்தெமை யாளவே.

(இ-ள்.) நமது பூமியும், நமது குதிரைகளும், பந்துக்களும், பசுக்களும், நமது புத்திர ஸந்ததிகளும் சுகத்தை யடையும் வண்ணம் உருத்திரன் வேண்டிய மருந்துச் செடிகளை யளித்து எங்களை யாளும்படி (எத் தோத்திரத்தைக் கூறுவோம்?)—(எ-று.) உருத்திரன் பேஷஜங்களுக்கு நாதன் என்று தைத்திரீயங் கூறும். இச் செய்யுளின் வினை முடிபு முதற்செய்யுளதே.

3. * மித்திரனும் வருணனு மேன்மைசால்
   ருத்திரனுமே யன்றி எல்லாவரு
   மொத்த வன்பி னுயர்ந்த வித் தேவர்கள்
   நத்தி யெம்மை யருளொடு நாடவே.

(இ-ள்.) மித்திரா வருணர்களும், உருத்திரனும், விச்வ தேவர்களும் எம்மை யருளோடு பார்க்கும்படி (எத் தோத்திரத்தைக் கூறுவோம்.)—(எ-று.) *இக் குறியிட்டன குளகமாம்.

4. மறைக்கு நாயகன் மாமக நாயகன்
   றறைச் சுகவுருப் பேடச நாயகன்
   குறித்த ருத்திரன் றன்னைக், குருச்சுதன்
   குறிக்கு நற்சுவை கூர, விரப்பமே.

(இ-ள்.) ஸ்தோத்திரத்தைப் பரிபாலிப்பவனும், யாகத்தைப் பரிபாலிப்பவனும், ஸுக ரூபமான பேஷஜங்களுக்கு நாயகனும் ஆன உருத்திரனை, பிரஹஸ்பதி புத்திரனது ஸுகத்தை யொத்த ஸுகத்தை யளிக்கும்படி பிரார்த்திப்போம்.— (எ-று.) பேஷஜம், மருந்துச்செடி.

5. ஆதவன்சுட ரன்ன வொளியுளோன் ;
நீதில் பொன்னெனச் சேர்ந்தவர்க் கின்பளித்,
தோது மேன்மை யுயர்ந்தவன் றேவர்க்கண் :
நீதி னற்றனஞ்சேர்ப்பவன் றானுமே.

(இ-ள்.) (அந்த ருத்திரன்) சூரியனைப்போல வெண்மையான ஒளியோடுகூடியவன் ; பொன்னைப்போல அடைந்தோர்க் கின்பத்தை யளிப்பவன் ; தேவர்களுக்கு மத்தியில் சிரேஷ்டம் பொருந்தியவன் ; செல்வ காரணனு மாவான்.—(எ-று.)

வருக்கம் 26.

6. எம்பரிக்குந் தகர்க்கு மறியிற்கு
மெம்பசுக்கும் புருடர்க்கு மேந்திழை
யம்புவிக்க ணமர்ந்தவர் தங்கட்கும்
பம்பு நன்னடை யின்பத்தைப் பாரிக்க.

(இ-ள்.) எங்களுடைய குதிரைகளுக்கும், ஆட்டுக்கடாக்களுக்கும், பெண்ணாடுகளுக்கும், பசுக்களுக்கும், புருஷர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் இலகுவாகக் கிடைக்கக்கூடிய சுகத்தை (உருத்திரன்) அளிக்கட்டும்.—(எ-று.)

7. சோமனே நரர் நூற்றுவர்க்குத் தொகும்
வாம செல்வம் வயக்குக ; அன்னமுஞ்
சேம மிக்கு வலியிற் செறிந்ததை
யேம மெய்துவா னெங்கட் களிக்கவே.

(இ-ள்.) ஸோமதேவனே ! புருஷர்கள் நூற்றுவர்க்கு வேண்டிய செல்வத்தை எங்களுக்கு நிலையாகத் தருவாயாக. வலிமை சிறந்த அன்னத்தை யாங்கள் இன்ப மடையும்படி எங்களுக்களிப்பாயாக.—(எ-று.)

8. சோம யாகஞ் சுவைக்க வியற்றலர்
தீமைசார் மனச் சத்துருத் தன்மையர்
சோமனே ! யெமைத் துன்புறுத் தாதுற ;
ஏம வன்னம் வலியுள தேய்க்கவே.

மண்டலம் 1. சூக்தம் 44.

(இ-ள்.) ஸோமனே! ஸோம யாகம் புரியாதவரும், சத்துருக்களும் எங்களை வருத்தாதிருக்கட்டும். எங்களுக்குப் பலத்தைத் தரும் அன்னத்தை யளிப்பாயாக.—(எ-று.)

(வேறு.)

9. சோமனே! சிரத்தன்மையை வகிப்பவ, மரண
நாமமும் பெறாய், ரிதோத்தமவிடத்தினி னிலைப்போய்,
சேம பந்தனச் சாலையி னுனது நற்பிரசை
வாம மூட்டுவோ ரெங்கணு மவர் மதித்தறிக.

(இ-ள்.) ஸோமனே! தலைமை வகிப்பவனும், மரணமற்றவனும், ரிதத்தின் உத்தமமான விடத்தை யடைபவனுமான உனது பிரஜைகளை (ஸ்தோத்திரஞ் செய்வோரைப்) பந்தனங்களோடுகூடிய யக்ஞக் கிருஹத்தில் விரும்புவாயாக. எவ்விடத்தையும் அலங்கரிக்கும் அவர்களையே நாடி யறிவாயாக.—(எ-று.)

'இச் செய்யுள் முழுமையும் உணர்தற் கரிதா யுள்ளது. பின்னர் இடைப் புகுத்தியதுபோலும்' என்பார் மோட்சமூலர். ரிதம், யாகம்.

வருக்கம் 27.

## 44. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 1.

## 14 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: மேல் (36-43) சூக்தங்களைக் கண்ட கண்ணுவனது புத்திரன் பிரஸ்கண்ணுவன். வடமொழிச் சந்தம். ஒற்றை இருக்குக்களுக்கு ப்ரஹதி, இரட்டை இருக்குக்களுக்கு ஸதோப்ரஹதி. தேவதை: அக்கினி.

(வேறு.)

1. தேவர்க் கவியைத் தெரிந்தளிக்குஞ்
சிறந்த தாசு டற்காகச்
சாவு படையாப் பிறப்புணர்வோய்,
சட்டென் றெரியே, இலஞ்சிறக்க
மேவு முஷஸிற் பலநிறத்து
மிளிருந் தனத்தைச் சுமந்தீண்டு
மேவு விப்பாய்; வைகலெழுந்
தேவர் தமையு மின்றுதராய்.

(இ-ள்.) மரண ரஹிதனும், ஜாதவேதஸனும் ஆன அக்கினியே! தேவர்களுக்கு ஹவிர்ப்பாகத்தைத் தெரிந்துதரு

தாசுஷனுக்காக (யாகவானுக்காக), உஷஸைப்போலப் பிரகாசிப்பதும், பல நிறத்தோடுகூடியதும், வீடு முதலியவற்றோடு கூடி விளங்குவதும் ஆன தனத்தைச் சுமந்துகொண்டு வருவாயாக. விடியற் காலத்தில் விழித்துக்கொள்ளும் தேவர்களையும் கூட்டிக் கொண்டு வருவாயாக.—(எ-று.) ஜாதவேதஸன் என்னும் பதத்துக்கு யாஸ்கர் பலவகைப் பொருள் கூறுவர். (1) சிருஷ்டிப் பொருள்களை யுணர்ந்தோன், (2) சிருஷ்டியா லுணரப்படுவோன், (3) (ஆகர்ப்ப ஸ்ரீமந்தன்) செல்வத்தோடு பிறந்தவன், (4) ஞானத்தோடு பிறந்தவன் முதலியவையாம். உஷஸின் என்றதிலுள்ள இன்னுருபு உவமைப் பொருளில் வந்தது.

(வேறு.)

2. அவியினை வகிப்பாய், யாகசா ரதியாம்
அக்கினி, தேவர்தந் தூத,
சுவைபெறுங் குணங்கள் பலவுளோய், தருவாய்,
சோதிசா ருஷையொடு மிரண்டு
நிலமுறு தேவ ரசுவினி ரோடு
முடனணைந் தூரம்பெற நிலைத்த
நவமுறு கீர்த்தி வலிமையை யூட்டு
நல்லுண வளப்பற வெமக்கே.

(இ-ள்.) ஹவ்ய வாகனனே! யாகத்துக்குச் சாரதி போன்றவனே! அக்கினியே! தேவர்களது (வார்த்தையைக் கொண்டுவரும்) தூதனே! (ஸேவை முதலான) பல நற் குணங்களுள்ளவனே! உஷஸ் தேவதையோடும் அசுவினி தேவதைகளோடும் பொருந்தி, நல்ல வீரியத்தோடுகூடி (அளப்பரிய) அளவு மிக்க அன்னத்தை (அல்லது மேனாட்டாசிரிய ருரைப்படி கீர்த்தியை)த் தருவாயாக.—(எ-று.) நல்லுணவு அளப்பறத் தருவாயெனக் கூட்டுக.

(வேறு.)

3. தேவ தூத னக்கினியைச்
சேர வெவரும் விழைவோனைப்
பாவு மொளியை விரிப்போனைப்
பண்பார் தூம கேதுவினை
மேவும் யாகக் கிரியைகளில்
மேன்மை வாய்ந்த பெரியவனைச்
சேவை செய்து பிரார்த்திப்போஞ்
செல்வனை இவ் வைகலினே.

(இ-ள்.) தூதனும், எல்லாராலும் விரும்பப்படுபவனும் படர்ந்த சுடரோடு விளங்குபவனும், புகையைக் கொடியாக

வுடையவனும், யாகவான்களால் யாகத்தில் சேவிக்கப்படுபவனும், செல்வ காரணனுமான அக்கினியை இவ் விடியற்காலத்து சேவித்துப் பிரார்த்திப்போம்.—(எ-று.)

4. கட்டிள மையினை யுடையவன், சிரேட்டன்,
கருதிப்பல் லாவுதி யளிக்கு
மிட்டியி னதிதி, யவிசொரிவோனுக்
கேன்றவன் புள்ளவ னவனை,
மட்டிலா வுணர்ச்சிச் சாதவேதஸனை
மருவிய வக்கினி தன்னை,
ஒட்டிய தேவ ரெவரையும் வைக
லுறுத்துவான் றுதித்தனன் போற்றி.

(இ-ள்.) யுவதமனும், சிரேட்டனும், பல ஆவுதியும் அளிக்கப்படும் யாகத்தின் அதிதியும், தாசுஷனிடத்துப் பிரியம் வாய்ந்தவனும், ஜாதவேதஸனும் ஆன அக்கினியை, இதர தேவர்களையெல்லாம் கொண்டுவரும்படி துதித்தேன்.—(எ-று.) யுவதமன், கட்டிளமை வாய்ந்தவன்.

5. அகிலத் துறுவோர் கன்மபலன்
அளித்துக் காப்பாய், மரண மிலாய்,
தகையி னவியைத் தாங்குபவ,
சாலவின் யாகோத்தம வெரியே,
யகிலம் போற்று மமுதகுணத்
தவியைச் சிறப்பி னேருமுனை
மிகவும் துதிப்பே னுன்னருளை
மேவு கிரியை யதில்யானே.

(இ-ள்.) எல்லாவுலகத்திலும் வசிப்பவர்களுடைய கன்மபலனையும் அவரவர்களுக்குத் தந்து அவர்களைப் பரிபாலிப்பவனே! மரண ரஹிதனே! ஹவ்ய வாகனனே! யாகத்துக் கருகமான உத்தமனே! அக்கினியே! எல்லா வுலகத்தையும் இரட்சிக்கும் அமுத குணத்தோடு கூடிய ஹவியை யாவுதி செய்பவனாகிய வுன்னை நான் ஸ்தோத்திரம் செய்வேன்.—(எ-று.)

வருக்கம் 28.

6. இளமைமீக் கூர்ந்த வக்கினி, யெவரு
மேத்திடயே புகழ்தரு குணத்தோய்!
விளைதரு மதுவார் நாவினோய்! நிறைவின்
மிக்கவா வுதியினை யேற்போய்!

பழகுறு துதியோ ரெம்மன மறிக;
பண்பினிற் கண்ணுவன் சுதனுக்
கொழுகுறு நீண்ட வாயுளை யளித்துத்
தேவரை யுடன் வணங் குகவே.

(இ-ள்.) கட்டிளமை வாய்ந்த அக்கினியே! எல்லாராலும் நன்ருய்ப் புகழப்படுவோய்! மது ஜிஹ்வனே! நல்ல ஆகுதியை ஏற்பவனே! உன்னைத் துதிக்கும் எங்கள் அபிப்பிராயத்தை அறிவாயாக. கண்ணுவ புத்திரஞன பிரஸ்கண்ணுவனுக்கு ஜீவஞர்த்தம் நீண்ட ஆயுளைத் தந்து தெய்வ ஸம்பந்தமான ஜனங்களை நமஸ்கரிப்பாயாக.—(எ-று.)

(வேறு.)

7. நீயே யோதா யாவுமுணர்
நெறிசால் புருட னென்னவுனைத்
தீயே நன்ருய் மக்களெலா
மூட்டா நிற்ப ராதலினுற்
ருயோய் ஞானந் துலங்குபவர்
தொக்க தேவர் தம்மையிவண்
வாயா விரைவிற் றருக, பலர்
வாய்ந் தாவுதிசெ யக்கினியே.

(இ-ள்.) அக்கினியே! நீ ஹோதாவென்றும், ஸர்வக்ஞ ஞன புருஷ னென்றும், பிரஜைக ளெல்லாம் உன்னை மூட்டுவார்கள். பலராலும் ஆஹுதி செய்யப்படுபவனே! நல்ல ஞானம் வாய்ந்தவர்களாகிய தேவர்களைச் சீக்கிரமாக இங்கு கொண்டு வருவாயாக.—(எ-று.)

(வேறு.)

8. நன்னய யாக நாட்டுறு மங்கி
நாடியே காலைமா லைகளிற்
றுன்னிய சவிதா உஷஸொடு பகனுந்
தோய்ந்தவச் சுவினிய ரிருவர்
மன்னிய வங்கி யெனுமிவர் தம்மை
மனத்தினிற் கருதியே கணுவ

றுன்னையுஞ் சோமத் துளிகளை யூற்றி
யொளிருவான் மூட்டுவார் தாமே.

(இ-ள்.) சோபன யாகத்தோடுகூடிய (ஆகவநீய) அக்கினியே! காலை மாலை யிரு சந்திகளிலும், ஸவிதா, உஷஸ், பகன், அசுவினிகள், அக்கினி என்னும் தேவதைகளை மனத்தி லெண்ணிக் கண்ணுவர்களாகிய மேதாவிகள் சோமத் துளிகளை யூற்றி உன்னை மூட்டாநிற்பர்.—(எ-று.)

(வேறு.)

9. அங்கி, யாகஞ் செய்வோர்த
மாச, அவர்க்காத் தேவர்மொழி
யிங்கு கொணருந் தூதனே,
யென்றின் முன்னர்த் துயிலுணர்ந்தே
யங்க மாகச் சூரியன்ற
னணிசா ரொளியை நோக்கியிடுந்
துங்க தேவர் தமைத்தருக
துகளில் சோமக் குடிக்கீண்டே.

(இ-ள்.) யாகபதிகளுக் காசனுகிய அக்கினியே! அவ்யாக கர்த்தாக்களுக்காகத் தேவர்களது வார்த்தையைக் கொண்டுவரும் தூதனே! சூரியோதயத்துக்கு முன் வைகறையி லெழுந்து சூரியனை நோக்கி நிற்கும் தேவர்களை ஸோமபானஞ் செய்ய இங்கு கொண்டுவருவாயாக.—(எ-று.) என்று, சூரியன்.

(வேறு.)

10. ஒளிசிறந் துயரு மக்கினி யாரு
மொருங்குனை நோக்கிட வுறுவாய்;
ஒளிசெறி பூர்வ வைகறை யதனி
லுன்னொளி பிறங்கிநின் றனையால்;
அளியினிற் காப்பாய் பிறரெமை வருத்தா
தணைந்தியாம் வாழுமூ ரதனில்;
தெளிவுறும் யாகப் புரோகித னுவாய்;
திகழ்த்துவா யிதத்தை மாந்தருக்கே.

(இ-ள்.) விபாவஸுவே! எல்லாராலும் காணப்படுபவனே! அதீதமான உஷஸ்காலத்தில் உனது பிரகாசம் நன்றாகத் தோன்றும்படி நிற்கிறாய். யாங்கள் வசிக்கும் கிராமத்தில் எங்களைப் பிறர் வருத்தாதபடி காக்கிறாய். யாக புரோஹிதனாகவுமிருக்கிறாய். மனிதர்களுக்கு ஹிதத்தைச் செய்கிறாய்.—(எ-று.) விபாவஸு, ஒளிசிறந்தவன். உஷஸ்காலம், விடியற்காலம்.

வருக்கம் 29.

11. மனுசெய் ததுபோல் யாகத்தே
மதித்தவ் விடமே தாபிப்போம்,
கனிவாம் யாகச் சாதனமுங்
கருதும் ஹோதா விருத்துவிக்கும்
நினைவிற் கெய்தா மதியார்ந்தே
நேரா ராயுள் கெடுப்பவனும்
பினையும் மர்த்யன் றூதனுமாந்
தேவ வுனையே யக்கினியே.

(இ-ள்.) அக்கினியே! தேவனே! யாகஸாதனமும், ஹோதாவும், இருத்துவிக்கும், பிரசேதஸனும், சத்துருக்களின் ஆயுளைக் கெடுப்பவனும், மரண ரஹிதனும், தூதனும் ஆகிய உன்னை ஆதி காலத்தில் மநுவென்பான் யாகத்தில் நிலைநாட்டின அவ்விடத்திலேயே யாங்களும் ஸ்தாபிப்போம்.—(எ-று.)

12. மித்திர ராவார் தொழும்புரோ கிதனே
மேவிய யாகசா லையினின்
மத்தியிற் புகுந்து தேவர்பாற் றூதா
யவர்களை வருவிக்கு மெல்லை
மெத்திய கடலி னெருங்கிப்பே ரிரைச்சல்
மிடைந்திட வுலவுமவ் வலைக
ளொத்திவ ணெலியோ டொளிர்வ, வக்கினியே,
யுன்கதிர்ச் சுடர்களு மின்றே.

(இ-ள்.) மித்திர மஹனே! (நண்பர்கள் தொழும் பெருமை வாய்ந்தவனே!) புரோஹிதனே! அக்கினியே! (வேதியின் கிழக்குப்பக்கத்தில் ஸ்தாபிக்கப்பட்டு) தேவ யஜன மத்தியப் பிரதேசத்திற் போய் நின்று தேவர்களைத் தூதனாக

வழைத்துக் கொண்டு வரும்போது, உனது கதிர்ச்சுடர்கள், சப்தத்தோடு கடலிலலைகள் விளங்குவதுபோல விளங்குகின்றன.(எ-று.) தேவ யஜனப்பிரதேசமாவது யாகசாலையின் நடுவிடமாம்.

(வேறு.)

13. கேள்வி மிக்க செவியுள்ளோய்
கேளா யெங்கள் மொழியினை ;
வேள்வி யாங்கள் சிறுகாலை
விழையு மதற்கு மித்திரனுங்
கேள்வ னரிய மானுடனே
கிட்டியுன்னோ டுறுங்கூட்ட
நீள்வல் தேவர் தமைத்தீயே
நிறுவல் குசையின் மிசைதானே.

(இ-ள்.) சுருதகர்ணனே, அக்கினியே, எங்கள் வார்த்தைகளைக் கேட்பாயாக. அதிகாலையில் யாங்கள் செய்யும் யாகத்தைத்தேடி உன்னோடு எழுந்து வரும் எல்லாத் தேவரையும், மித்திரனையும், அர்யமானையும் தருப்பையின்மே லமர்த்துவாயாக.(எ-று.) சுருதகர்ணன்-நன்றாய்க் கேட்கக்கூடிய காதையுடையவன்.

(வேறு.)

14. கொடையினிற் சிறந்தோர், ஒழுங்கினை வளர்த்துக்
கூர்பவர், எரியினின் றூலு
மிடைபவ ராகு மருதரு மெமது
தோமத்தை விரும்பியே கேட்க ;
நடையினை யோம்பும் வருண னு மிருவர்
நண்பரா மசுவினி களினோ
டுடைதரு மிருளார் விடியலின் கடவு
ளுஷஸொடுஞ் சோமமே குடிக்க.

(இ-ள்.) கொடையிற் சிறந்தவரும், ரிதத்தை வளர்ப்பவரும், அக்கினியின் நாக்கை யிடமாகக்கொண்டவரும் ஆன மருத்துக்கள் எமது ஸ்தோமத்தை விரும்பிக் கேட்பார்களாக. விர

தங்காப்பவனாகிய வருணன் அசுவினிகளோடும், உஷஸோடும் ஸோமத்தைக் குடிப்பானாக.—(எ-று.)

வருக்கம் 30.

## 45. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 2.

10 இருக்குக்கள்கொண்டது.

ரிஷி : ப்ரஸ்கண்ணுவன். வடமொழிச்சந்தம் : அநுஷ்டுப் (கலிநிலைத்துறை.) தேவதை : அக்கினி.

1. அங்கி யிங்கு நீ வசுக்களை வணங்குக, அன்றித்
தங்கு முன்மனுச் சனப்பதி பெற்ற வாதித்தர்
பொங் குருத்திரர் யாரையும் போற்றுக, கிரியை
யெங்குஞ் சேர்தரு சனத்தை நீர் நிறைப்பவரையுமே.

(இ-ள்.) அக்கினியே! நீ வசுக்களை வணங்குவாயாக. முதலில் தோன்றிய மநுப்பிரஜாபதிபெற்ற ஆதித்தியரையும், உருத்திரர்களையும் வணங்குவாயாக. யாகத்தோடு கூடியவரும் நீரைப் புரோக்கணஞ்செய்து நிறைப்பவருமான தேவதாரூப மனிதர்களையும் வணங்குவாயாக.—(எ-று.) முன்தங்கு என மாற்றிக் கூட்டுக.

2. மேன்மை தங்கு ஞானத்தினர், மேவு தாசுடனுக்
கேன்ற தன்செயற் பலன்றரு தேவர்கள், கீதந்
தோன்று பாக்களிற் களிப்பவ, வுரோஹிதப் பரியோய்,
சான்ற மூன்று பன்னொருவரைத் தருதி, அக்கினியே.

(இ-ள்.) கிர்வணனே! (கீதங்களிற் களிப்பவனே!) சிவந்த நிறமான குதிரையோடு கூடியவனே! அக்கினியே! மேலான ஞானத்தோடு கூடியவரும், தாசுஷனுக்குக் கர்மபலனைத் தருபவரும் ஆன தேவர்கள் முப்பத்துமூவரைக் கொண்டு வருவாயாக.—(எ-று.) இம் முப்பத்துமூவர் பெயரினையும் மண். 1 சூக். 34 செய். 11ற் பார்க்க.

3. யாவரும் முணர் சாதவேதா, மிகப் பெரிய
தாவருஞ் செயல் புரிபவ, பிரஸ்க ணுவன்றன்

## மண்டலம் 1. சூக்தம் 45

கூவிளிக்கு நீ செவிதர, கூர்ந்து பண்டங்கி
ராவொ டத்திரி விரூப னப் பிரியமேதனிற் போல்.

(இ-ள்.) சாதவேதஸனும், பெரியகாரியங்களைச் செய்ப வனுமாகிய (அக்கினியே!) நீ பண்டைக்காலத்தில் அங்கிராவி னுடைய துதியையும் அத்திரியின் றுதியையும், விரூபன் றுதி யையும் பிரியமேதனது துதியையும் கேட்டதுபோலப் பிரஸ் கண்ணுவனுடைய துதியையும் (இப்பொழுது) கேட்பாயாக. —(எ-று.) ப்ரஸ்கண்ணுவன் இச் சூக்தத்தைக் கண்டவன். அங்கிரஸ் அத்திரி விரூபன் ப்ரியமேதன் இவர்கள் பேர் போந்த இருடிகள். அ, பண்டறிசுட்டு.

4. கொன் பெறு மவி யளிக்கு மெக்கியங்களிற் கூர்ந்து
பொன்பரந்தவெண் சுடரொடும்பொருந்து மக்கினியை
யன்புசார் மகம் புரிபவர் செயற்கருஞ் செய்கை
யின்பி னேடுமிங் கியற்றுவோ ரிரந்தனர் துணையே.

(இ-ள்.) யாகங்களில் வெண் சுடரோடு விளங்கு மக்கினி யைப் பிரியத்தோடுகூடிய மகத்தைப் புரிபவர்களும், பிரௌட கர்மங்களைச் செய்பவருமான (ரிஷிகள்) துணைக்கழைக்கிறார் கள்.—(எ-று.) செயற்கருஞ் செய்கை-பிரௌட கர்மம்.

5. நெய்சொ ரிந்தழைப் புறுபவ, பலன்றனை நேர்வோய்!
செய்யு மித்துதி தம்மை நீ செவிக்கொளாய் நன்கே;
மெய்யு றுந்துணைக் காவலாய்க் கண்ணுவன் புதல்வர்
ஓய்யென வுனை விவைகளா லழைத்தன ருவந்தே.

(இ-ள்.) நெய்சொரிந் தழைக்கப்படுபவனே! பயனைத் தருபவனே! (அக்கினியே!) இத் துதிகளை நன்றாய்க் கேட்பா யாக. இவற்றைக்கொண்டே கண்ணுவர்கள் உம்மைத் தமக்கு துணை செய்யும்படி கூவுகிறார்கள்.—(எ று.)

### வருக்கம் 31.

6. பன்னிற வுண வோங்கியே சிறந்தவ, பலரு
முன்னு மன்பினோய், மக்களிற் றோன்றியோர், சோதி

மன்னு கேசியா முனையவி சுமப்பவ ைனக
முன்னி மாமகத் தழைப்பரால் முன்னர்த்த மிலத்தே.

(இ-ள்.) பல நிறமான அன்னத்தோடுகூடிய வுத்தமனே! பலராலும் விரும்பப்படுபவனே! பிரஜைகளில் உற்பவித்த யஜமானர்கள் பிரகாசிக்கும் கேசத்தோடு கூடிய உன்னை ஹவியைச் சுமப்பவனாக வெண்ணித் தங்கள் வீட்டில் நடக்கும் யாகத்திற் கூவுவார்கள்.—(எ-று.) சித்திரச்ரவஸ்தம என்பதற்குப் பல்வித கீர்த்தியோடுகூடியவனே என்பார் மேனாட்டாசிரியர். சோச்சிஷ்கேச: சோதியே கேசமாக வுடையவன், கொழுந்துவிட்டெரியும் சுவாலையே மயிராகவுள்ளவன்.

7. கேள்வி சான்ற காதுடையவ, கிளர் பொருள் கூட்டுந்
தாள் சிறந்தவ, தகைபுகழ் தலமெலாம் பரந்த
கோள் செறிந்தவ, அக்கினி, யுன்னைக் கூர்மதியோ
ராள்வர் யாகத்துத் தூதனு பிருத்துவிக் கெனவே.

(இ-ள்.) அக்கினியே! சுருத கர்ணனும், வஸுவித்தமனும், கீர்த்தி பரந்தவனும், யாக ஹோதாவும், இருத்துவிஜனுமான உன்னை யாகத்து ஸ்தாபித்தார்கள்.—(எ-று.) மூலத்தையொட்டி உரையெழுதப்பட்டுள்ளது. மூலத்தில் அக்கினிக்காகச் சொல்லப்பட்ட அடைச் சொற்களெல்லாம் இரண்டாம் வேற்றுமையிலுள்ளன. தமிழ்ப் பாட்டில் அவற்றின் வேற்றுமையை பாட்டுக்கிசைந்தபடி மாற்றியுள்ளது. பொருள் ஒன்றே.

8. அங்கி, சோம நற்சுதையுள விப்பிரர், மாணந்
தங்கு தாசுடன் றனதவி தாங்குவோ ரதனை
யிங்கு நீபெற வெண்ணிப் பேரொளியொடு மியைந்த
சிங்க முன்றனை யிவணுறச் சேர்க்கின்றா ரன்றே.

(இ-ள்.) அக்கினியே! சோமச்சுதையோடுகூடிய விப்பிரர்கள் (மேதாவிகள்), மர்த்தியனுன தாசுஷனது (யாககர்த்தவினது) அவியைத் தாங்குபவர்கள், அவ் வவியை நீ பெற வெண்ணிப் பெரிய ஒளியோடு கூடிய உன்னை யிங்கு வரவழைக்கிறார்கள்.—(எ-று.) சிங்க மென்பது எதுகை நோக்கி வந்தது. அன்றே, அசை.

## மண்டலம் 1. சூக்தம் 45.

9. வலிமை கொண்டு மத்திப்பதா லெழுபவ, தருவோய்
பலனை, வாழ்வி னல்லேதுவே, சோமத்தைப் பருக
நிலவு மின்றதி காலையி னேடிச்சார் தேவ
ருலவு வோர்தமைத் தருப்பையி லமர்த்துக வுவந்தே.

(இ-ள்.) பலங்கொண்டு (அரணியைக்) கடைவதனு லெழுபவனும், பலனைத் தருபவனும், நிவாஸ காரணனுமான (அக்கினியே!) ஸோமத்தைக் குடிப்பதற்காக, இன்று அதி காலையி லெழுந்து இவ்விடத்தைத் தேடிச் சார்ந்துள்ள தேவ சம்பந்தமான (இதர) ஜனங்களை (அதாவது மற்றத் தேவரை) இங்குள்ள தருப்பையி லுட்காரும்படி செய்க.—(எ-று.) அக்கினியும் ஒரு தேவனுனதால் இதர என்று உரையிற் சேர்த்துக் கூறினூர் சாயணர். ஸோமம்-சோமம்: இப் பதம் மண். 1, சூக். 2 முதற் செய்யுளில் முதன் முதலிற் சொல்லப்பட்டிருக்கிறது. சந்திர சம்பந்தமான செடியாகிய ஸோமக் கொடியின் சாற்றிலிருந்து ஸோமம் என்ற ஒருவகைப் பானம் செய்துவந்தார்கள். இக் கொடி இன்னதென்று அறிந்து சொல்வாரில்லை. சிலர் சிந்திக்கொடியே சோமக்கொடி என்பார்கள். மேனுட்டார் (Acid Asclepias or Sarcostama Viminalis) என்னும் செடி என்பார். நிலவுள்ள இரவுகளில் இச் செடியைப் பிடுங்கி இலைகளை யுருவி யெறிந்துவிட்டுச் சோம யாகம் செய்யும் இடத்துக்குக் கொண்டுபோவார்கள். அங்கே அதை நசுக்கி அவற்றின்மேல் தண்ணீர் தெளித்து ஒரு சல்லடையில் வைத்திருந்து ஒரு துரோணத்தில் சாறிறங்கினவுடனே மா முதலியவற்றைச் சேர்த்துப் புளிக்கவைத்துப் பின் தேவதைகளுக்கு ஹவிஸாகத் தந்து தாங்களும் குடிப்பார்கள். இச் சோமலதையைப்பற்றிப் (Quarterly Review No. 354, October 894, B 445), பின் வரும் விஷயமும் கூறப்படுகிறது. "டாக்டர் அட்சிஸன்" என்பவர் (Dr. Atchison) சொல்வதாவது:—ஸோம மென்பது Ephedra pacheclade என்னும் செடியாகவிருக்க வேண்டும். ஏனெனில் அது கிடைக்கும் ஹரிரூட் பள்ளத்தாக்கில் அதற்கு ஹூம், ஹூதர், யஹ்ம என்னும் பேர் உபயோகப்படுகிறது. (Kermaun) கர்மானில் வெகு நாள் குடியிருந்த (Dr. Joseph Bornmuller) பார்ன்முல்லர் என்னுந் தாவரசாஸ்திரியும் ஸோமச் செடி Ephedra distachya என்னும் செடிதான் என்று வற்புறுத்திக் கூறுகிறுர். அவரே இச் செடி ஸைபீரியாமுதல் ஸ்பெயின் தேசம்வரையில் பரவிக்கிடப்பதால் பூர்வ காலத்து ஆரியரின் வாசஸ்தானம் இன்ன

இடந்தானென்று நிச்சயமாகச் சொல்ல முடியாதென்கிறார். (Griffith's Rig Veda Page 2.)

10. ஒருங்கி னக்கினி யாரையுஞ் சமமுற விளித்து
மருங்கிற் றேவதா ஜனத்தினை மருவினீ வணங்க;
வரங்கண்மீத்தருந்தேவர்காணொருநன் முன்னிழைத்தே
யுரங்கொள் சோமமிஃதுமக்கென வுறுவதைக் குடிப்பீர்.

(இ-ள்.) அக்கினியே! தேவதா ஜனங்களை, அவர்களோடு சமமாக அழைக்கப்படும் இதர தேவதைகளோடுகூட வெல்லாரையும் ஒன்றுசேர வமைத்து வணங்குவாயாக. நன்றாய்ப் பலனைத் தரும் தேவர்களே! திரோஹ்நயம் என்னும் பேரோடுகூடி முதல்நாளைக்குமுன் பிழிந்து இங்கே முன்னர் வைக்கப்பட்டிருக்கும் ஸோமத்தைக் குடிப்பீர்களாக.—(எ-று.) திரோஹ்நயம் திரோஹிதோ அஹ்நய்ஸ் திரோஹ்ந்யம்: ஒருநாளை மறைத்து நின்றது என்பது பொருள். யாகஞ்செய்வதற்கு ஒரு நாள் முன்னரே பிழிந்தது. அதனால்தான் நெருநல்முன் இழைத்தது என்றார் செய்யுளில். இப்பதம் முதனாளிற் பிழிந்தது என்னும் பொருள் கொள்ளுகிறது. மறுநாள் கூப்பிடப்படுவதால் அந்தப் பெயர் வந்ததென்று சாயணர் கூறுவர்.

வருக்கம் 32.

## 46. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 3.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: பிரஸ்கண்ணுவன். வடமொழிச்சந்தம்: காயத்ரி. தேவதை: அசுவினிதேவர்கள்.

(வேறு.)

1. இப்பிரியை யுஷை விண் ணிடத்தினின்
ஒப்பில் முன்னொளி கொண்டிரு ளோட்டுவாள்;
இப்புவி யும்பெருமை யுயர்ந்திடத்
தப்பில் தோத்திரஞ் சாற்றுவெ னச்சினீர்.

மண்டலம் 1. சூக்தம் 46.

(இ-ள்.) இந்தப் பிரியையாகிய உஷஸ் (விடியற்கால தேவதை) ஆகாயத்தில் முன்பொழுதில் தன்னொளியோடு பிரகாசிக்கிருள். (அதாவது இருட்டை நீக்கிவிடுகிருள்.) அசுவினி தேவதைகளே! உமது பெருமை யதிகப்படுமாறு உங்களுக்குஸ்தோத்திரங்களைச் செப்புவேன்.—(எ-று.) அச்சினீர், அசுவினீர் என்பதன் தற்பவ விளி.

2. தோற்றஞ் சான்றவர் சிந்து வளித்தவர்
ஏற்றஞ்சார் தன மெண்ணித் தெரிபவர்
போற்று கன்மத்தர் பொன்னிறங் கூட்டுவோர்
ஊற்றத் தேவரை யுன்னித் துதிப்பனே.

(இ-ள்.) காட்சிக் கினியவரும், சமுத்திரத்தைத் தாயாகவுடையவரும், மனத்தினுல் தனமுள்ளவிடங்களைக் கண்டறிபவரும், கர்மத்தோடு கூடியவரும், அழகிய கனகத்தைத் தருபவர்களுமாகிய (அசுவினி) தேவர்களைத் துதிப்பேன்.—(எ-று.) இச்செய்யுளின் மூலத்தில் 'உன்னித் துதிப்பனே' என்ற பயனிலையில்லை. இப்பயனிலை மேற்பாட்டிலிருந்து கொண்டுகூட்டியது. சமுத்திரம் ஈண்டு ஆகாயமாகிய சமுத்திரமென்பார் மேனுட்டாசிரியர். 'ஸமுத்ர அத்வர மித் யந்தரிக்ஷ நாம ஸுபாடாத்' என்பார் சாயணரும்.

3. அங்கப் பல்கலைத் தோத்திரந் தம்மினூர்ந்
துங்க டே ருயர்வானிற் றெரிவுற
மங்கலில் கதி மாக்க ளிழுக்கும்போ
தெங்க ணற்றுதி கொண்டுமை யேத்துவோம்.

(இ-ள்.) நானுவிதமான சாஸ்திரங்களோடுகூடிய ஸ்தோத்திரத்தால் நிறைந்து உங்கள் தேர் உயர்ந்த ஆகாயத்தில் செல்லும்படி உங்களது குதிரைகளா லிழுக்கப்படும்போது, துதிகள் எங்களால் துதிக்கப்படுகின்றன.—(எ-று.)

4. நரர்களுக்குப் பிதாவென நண்ணுவோன்
விரவு கன்மம் விழைவுட னேக்குவோன்
பெருகு நீரினை வற்றுவிப்போ னவி
தருவன் பூரிப்பிற் சார்த்துவன் தேவரை.

(இ-ள்.) (அசுவினி தேவர்களே!) மனிதர்களைப் பிதாவைப் போல் பரிபாலிப்பவனும், கர்மங்களைக் கவனித்துப் பார்ப்பவ

னும், (தனது சூட்டினால்) நீரை வற்றடிப்பவனுமான (சூரியன்) எங்களாற் றரப்படும் ஹவியைத் தேவர்களுக்குத் தந்து அவர்களைச் சந்தோஷிப்பிப்பான்.—(எ-று.) மேனாட்டாசிரியர் அபாம் ஜார: என்பதற்குத் தண்ணீர்க்கு நாயகன் எனப் பொருள் கொண்டு இச் செய்யுள் சூரியனை யன்று அக்கினியைக் குறித்தது என்பார். ஆனால் 'சூரிய உதயகாலத்தில் ஹவி கொடுப்பதை யாரும் பார்ப்பார்கள். அதனால் தேவர்களே அதி காலையில் வாருங்கள்' என்பது பொருளென்பர் சாயணர்.

5. எம்மொழி மனங்கொண்டு மெய் யேத்துவீர்!
உம் மதிக் குயர்காவ லமைப்பதை
வெம்ம தத்தை விளைத்திடு தீவிர
வம்மை கொண்டிடுஞ் சோமத்தை யார்கவே.

(இ-ள்.) நாஸத்தியர்களே! (பொய் புகலாதவர்களே!) எமது ஸ்தோத்திரங்களை மனதில் கொள்பவர்களே! உம்முடைய புத்திக்கு ஆதாரமானதும், மதத்தைத் தருவதுமான சோமத்தைக் குடிப்பீர்களாக.—(எ-று.) அம்மை, அழகு.

வருக்கம் 33.

6. இன்மை யென்னு மிருளினை நீக்கியே
வன்மை சார்சுவை மன்னு மொளிபொருந்
தன்ன நீங்க ளெமக்கென் றளித்தது
தன்னமுங் குறைவில் மனஞ் சார்த்துக.

(இ-ள்.) உங்களால் எங்களுக்கு அளிக்கப்பட்டுத் தரித்திரமாகிய இருட்டினை யோட்டி, வீரியமும் ரஸமும் பொருந்திய சோதியோடு கூடிய உணவானது எங்களுக்குப் பூரண திருப்தியை யளிக்கட்டும்.—(எ-று.)

7. யாமிசைக்குந் துதியெனுங் கப்பலிற்
றுமியைந்து கடலினைத் தாண்டியே
போமி னீண்டு பொருந்து மசுவினீர்!
நாம நற்சகட் டச்சுவம் பூட்டுமே.

(இ-ள்.) அசுவினிகளே! எங்கள் புத்தியாற் கூறுந் துதி என்கிற கப்பலி லேறி நீங்கள் சமுத்திரத்தைத் தாண்டி எம்மி டத்தே வாருங்கள். பூமியில் வரு முங்கள் தேரிற் குதிரை யைப் பூட்டுங்கள்.—(எ-று.) ஆகாயமாகிய கடலைத் தாண்டிப் பூமியிற் பொருந்துங்களென்பது பொருள்.

8. பரந்த வானிற் பரவுமுங் கப்பலுஞ்
சிறந்து நின்றது சிந்துவி னீர்க்கரை;
யுரங்கொள்தேருமே தோங்கிற்றுச் சோமத்தின்
வரங்கொ ணற்றுளி வாழ்த்தொடு மாயிற்றே.

(இ-ள்.) (அசுவினிகளே!) ஆகாயத்தைப்போல விஸ்தீரண மான உங்களுடைய கப்பல் சமுத்திரத்தில் வந்து நின்றது. உம்முடைய தேரும் (பூமியில்) ஓங்கக்காண்கிறோம். சோமத்து ளிகள் ஸ்தோத்திரங்களோடு தயாராயின.—(எ-று.) (Dh) தியா என்பதற்கு உங்கள் விஷயத்தோடு என்று சாயணர் உரை கூறுவர். சிறந்து ஒலி எதுகையாகக்கொள்க.

9. அ 'கண்ணுவர்களே கேட்க' 'பொன் னீவதாய்
விண்ணி னின்று பரவு முஷைக்கதி
ரொண்ணு நீர்செறி யொண்பதத் தெவ்விட
மண்ணுறுவீ ருமே துருவத்தையே.'

(இ-ள்.) கண்ணுவ புத்திரர்களே! (அசுவினிகளிடத்து இதைக் கேளுங்கள்) 'விண்ணுலகத்தி லிருந்து எங்கள் செல்வ ஹேதுவாகிய உஷஸின் சோதியை ஆவிர்ப்பவிக்கின்ற சூரிய கிரணங்களும் மழைத்தாரை ரூபமாக வுள்ள நீர் பொருந்திய அந்தரப் பதத்தில் எப்படிச் செல்கின்றன? அசுவினிகளே அப் பொழுது உங்கள் ரூபத்தை எங்கே நிறுத்த இச்சிக்கிறீர்கள்? (அவ்விடத்தில் வந்து பிரத்தியட்சமாகுங்கள்.')—(எ-று.) இச் செய்யுட்கு மேனாட்டாசிரியர் வேறுவிதமாகப் பொருள் கூறு வர். அது வருமாறு:—

(இ) கண்ணுவனது கான்முளைகாள்! துளி
விண்ணுவந்து விளக்கின; சிந்துவி

**அஷ்டகம் 1. அத்தியாயம் 3.**

ஞெண்ணிய பதத் தோங்கிய தொண்பொருள் ;
எண்ணு நும்முரு வெங்ங னமைப்பிரே ?

(இ-ள்.) கண்ணுவ வம்சத்தினரே ! சோமத்துளிகள் விண்ணுலகத்தில் விளங்குகின்றன. செல்வம் தண்ணீருள்ள அந்த விடத்திலமைந்துள்ளது. உங்கள் உருவத்தை நீங்கள் எங்கே காண்பீர்கள் ?—(எ-று.)

10. என்றி னம்சமாம் வைகலுக் கேலுறத்
துன்று சூரியன் தோற்றமும் பொன்னிற
மொன்றி நின்ற(து) ; ஒளியில் கருமையுந்
துன்றி யங்கிதன் ஞுவொடு தோய்ந்ததே.

(இ-ள்.) சூரியனது அம்சமாகிய உஷஸ்காலத்துக்குத் தகப்பொருந்தும்படி சூரியனது உதயமும் மஞ்சள் நிறத்தோடு கூடி நின்றது. அப்பொழுது அக்கினியும் கரு நிற மடைந்து தன் சுவாலேயோடு பிரகாசித்தது. (அசுவினிகளே ! இதுதான் நீங்கள் வருவதற்கு நல்ல சமயம்.)—(எ-று.)

வருக்கம் 34.

11. ரிதத்தின் மார்க்கமுஞ் செவ்விதி னக்கரை
யிதத்திற் செல்ல வொளியி னியைந்தது ;
கதித்துத் தோன்றிடும் வானொளி கண்முன
ரெதிர்ப்பட் டேன்ற தசுவினி ரேகுவீர்.

(இ-ள்.) ரிதத்தின் (சூரியனின்) மார்க்கமானது அப்பக் கத்தி லுள்ள உதய பர்வதத்தை யடைவதற்கேற்றபடி பிர காசத்தோடுகூடியுள்ளது. வானொளியாகிய சூரிய வெளிச்சமும் காணப்பட்டுவிட்டது. (அசுவினிகளே ! அவ் வழியில் வருவீர் களாக.)—(எ-று.) அசுவினி ரேகுவீ ரென்றது மூலத்தி லில்லே. சாயண ருரையிற் கண்டது. ரிதத்நின் என்னும் சொல்லுக்கு யாகத்தின் என்று பொருள் கூறுவர் மேனுட்டாசிரியர். அவரே வானொளி என்னுது ‘வானெறி’ என்பார். அவர் பின்னும் “ யாகந்தான் விண்ணி லிருந்து பூமிக்குத் தேவரை வரச்செய்யும் நெறியாகும். அந் நெறி யாகாக்கினியினுலாவது, பகல் வெளிச்சத்தினுலாவது கண்ணுக்குத் தெரிகிறது.” என்பர்.

12. மதம் பொருந்து நற் சோமம் மடுத்தபின்
இதம் பொருந்தி யிரட்சணஞ் செய்பவர்

## மண்டலம் 1. சூக்தம் 46.

(இ-ள்.) உற்சாகத்தைத் தரும் சோமத்தைக் குடித்தபின் இதமாக எம்மை இரட்சிப்பவர்களாகிய அசுவினி தேவதைகள் தினமும் எங்களைத் தேடி யநுக்கிரகம் செய்யும் விதத்தை யெல்லாம் ஸ்தோதாவானவன் தனித்தனியாகக் கூறுவான்.—(எ-று.) மடுத்தல், குடித்தல். அச்சினிர் - அசுவினிர், அசுவினிகள்.

13. நன்மை நாயகர் நல்லவி யீபவற்
கின்மைதீர் துணையாக வியைவிர்காள்!
தன்மைசார் துதியோடு சுவைகொள
முன் மநுவின்கட் போல முடுகவே.

(இ-ள்.) சுகத்தை யளிப்பவரும், அவி யளிப்பவனுக்குச் செல்வத்தை யளித்து அங்கே வசிப்பவர்களுமான (அசுவினிகளே!) சோமத்தைக் குடிக்கவும், ஸ்துதியைக் கேட்கவும் முற்காலத்தில் மநுவென்னும் யஜமானனது கிருஹத்துக்கு வந்தது போல, வாருங்கள்.—(எ-று.)

14. சுற்று முற்றச் சுலவு நடையுளீர்!
முற்ற வுங்நெறி மோயு மொளியைப் பின்
பற்றிச் செல்லுக வைகல்; இராவினில்
துற்ற வெக்கியந் தோய விழைவிரே.

(இ-ள்.) சூழ்ந்து செல்லும் கதியோடுகூடியவர்களே! உமது ஒளிபொருந்திய வழியின் சோபையைப் பின்பற்றி உஷஸ் செல்லட்டும். இரவில் நடக்கும் யக்ஞத்திற்கும் வர விரும்புவீர்களாக.—(எ-று.)

15. இணையொழுகு மிருவி ரசுவினீ
ரணையு நன்மது வாருக; நிந்தைகள்
பிணையுறாத வுதவி பிணைத்தெமைத்
துணை பொருந்திச் சுகத்தை யளிக்கவே.

(இ-ள்.) அசுவினிகளே! இருவரும் சோமத்தைப் பருகுங்கள். நிந்தை பொருந்தாத உதவிகளை எம்மிடத்துச் சேர்த்து எமக்கு இருவரும் சுகத்தைக் கொடுங்கள்.—(எ-று.)

வருக்கம் 35.

ஆகச் செய்யுள் 173.

மூன்று அத்தியாயங்களுக்குமாகச் செய்யுள் 556.

### 3-வது அத்தியாயம் முற்றும்.

---

## 4-வது அத்தியாயம்.

இவ் வத்தியாயத்தில் 29 வருக்கமும், 15 சூக்தமும், 152 இருக்குக்களு முள்ளன.

## 47. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 4.

*ரிஷி: பிரஸ்கண்ணுவன். வடமொழிச்சந்தம்: ஒற்றை இருக்குக்களுக்கு ப்ரஹதி, இரட்டை இருக்குக்களுக்கு ஸதோ ப்ரஹதி. தேவதை: அசுவினிதேவர்கள்.*

(வேறு.)

1. *ரிதமே யோம்பிக் காக்கின்ற*
*விரட்டைத் தேவ ரசுவினிகாள்*
*மதுரஞ் சிறந்த துளி பொதிந்த*
*மதுவை நென்னல் முன்னுளே*
*பதமா யிறக்கி வைத்துள்ளார்*
*பண்பிற் பருகி ரிதனேஉம்க்*
*கிதமாய்த் தருவோற் கெவ்வகைய*
*மணியுஞ் சிறந்து வழங்கிரே.*

(இ-ள்.) ரிதத்தை (ஸத்தியத்தை அல்லது யாகத்தை) வளர்க்கின்ற அசுவினி தேவர்களே! அதிசயமான சாதுர்யத்தோடு கூடியதும் நேற்றைக்கு முதனாள் பிழிந்து வைத்ததுமான சோமத்தை நீங்கள் பருகுவீர்களாக. இதனை யுங்களுக்களிக்கும் தாசுஷனுக்கு இரத்தினங்களை யளிப்பீர்களாக.—(எ-று.) தாசுஷன் = யாககர்த்தா, யஜமானன்.

(வேறு.)

2. *மூவ்வித மாகக் கட்டியே யுயர்ந்த*
*மும்மணை யொடு நனி சிறந்தே*
*நிதமு மச்சினிர் கேடி யளித்திடும்*
*விதமெலாந் துதி யார்ந்தோன் விரிப்பனே.*

## மண்டலம் 1. சூக்தம் 47.

முவ்வுல கத்துந் தடையிலா தொழுகு
    மெழின்மிகு பொன்னிறத் தேரிற்
செவ்விதி னணைவீ ரசவினீர்; கணுவர்
    சிறப்புற மகந்தனிற் றுதித்தார்;
ஒவ்வுறு மன்போ டவரது விளியை
    யுவந்துகேட் டருளுவீ ரன்றே.

(இ-ள்.) (அசுவினிகளே!) மூன்று விதமாகக் கட்டப்பட்ட மா ஆசனங்களோடுகூடி (பூமி, வானம், அந்தரம், என்னும்) மூன்று உலகங்களிலும் தடையில்லாமல் செல்லக்கூடிய அழகு பொருந்திய பொன்மயமாகிய தேரிலேறி, நன்றாக விளங்குவீர்களாக. யக்ஞத்தில் கண்ணுவர்கள் உங்களுக்காக மறைகளைக் கூறி யழைக்கிறார்கள். அவ் வழைப்பினை ஆசையோடு கேட்பீர்களாக.—(எ-று.)

(வேறு.)

3. மதுசார் குணத்துச் சோமத்தை
    மருவிப் பருகீர், அசுவினிகாள்!
ரிதமாம் யாகந் தனை வளர்ப்பீர்
    இரத மெமக்கு வேண்டும்பொன்
சதமாப் பொதிந்த ததன்மேனீர்
    சார்ந்து வருவீ ரின்றீண்டே
யிதமா யவியை யளிப்பவன்மாட்
    டேற்றம் பொருந்து தோற்றத்தீர்.

(இ-ள்.) அசுவினிகளே! அழகிய தோற்றத்தோடுகூடியவர்களே! மதுர நிறைந்த இச் சோமத்தைக் குடிப்பீர்களாக ரிதத்தை அல்லது யாகத்தை வளர்ப்பவர்களே! எங்களுக்கு வேண்டிய பொன்னோடுகூடிய தேரின்மேலேறிக்கொண்டு இங்கு அவி யளிக்கும் யஜமானனிடத்து வருவீர்களாக.—(எ-று) ரிதம், உண்மை, ஒழுங்கு, இயற்கைவிதி, யாக மென்னும் பொருள்களில் வரும்.

(வேறு.)

4. முழுவது முணர்வீர், மும்மைசா ரிடத்து
    முறையினின் விரித்ததர்ப் பையினி
னழகுற வமர்ந்தே யினிய தீந் தேனை
    யின்பி னெக்கியத்தினிற் றெளிப்பீர்,

## அஷ்டகம் 1. அத்தியாயம் 4.

பிழியுறுஞ் சோமத் துளிகளையூட்டிப்
பிறங்குறு மொளிமிகுங் கணுவர்
வழிவரு மவர்க, ளசுவினீர், விளித்தார்
வாய்ந்தவும் மிருவரைத் தானே.

(இ-ள்.) எல்லாவற்றையு மறிந்தவர்களே! மூன்றிடத்தில் முறையாக அடுக்கப்பட்ட தருப்பையில் அழகாக வீற்றிருந்து இவ் வெக்கியத்தில் மதுர ரஸத்தைத் தெளிப்பீர்களாக. அசுவினிகளே! ஸோமம் பிழிந்து கொடுத்துக் காந்தி சிறந்த கண்ணுவ வம்சத்தினர் உங்க ளிருவரையும் அழைக்கிறார்கள்.—(எ-று.)

(வேறு.)

5. மேவு மெந்த வுதவிகளை
மேவ வமைத்துக் கண்ணுவனை
யாவ லோடு காத்தீரோ
வந்த வுதவி யசுவினிர்காள்
பாவ விட்டுச் சுபப்பதிகாள்
பண்பி னெம்மைக் காப்பீரால்,
ஓவ லின்றி ரிதங்காப்பீ
ருவந்து சோமம் பருகவே.

(இ-ள்.) சுபப்பதிகளும் ரிதத்தைக் காப்பவர்களுமாகிய அசுவினிகளே! எந்த உதவிகளைக்கொண்டு கண்ணுவனைக் காப்பாற்றினீர்களோ அந்த வுதவியினால் எங்களை இரட்சிப்பீர்களாக. சோமத்தைப் பருகுவீர்களாக.—(எ-று.)

வருக்கம் 1.

(வேறு.)

6. பிசவனன் மகனுஞ் சுதாசனை னரசற்
கார்ந்த பொன் பிறங்கிய தேரி
னிசைவுறும் பொலிவீர் கணக்கிலா வுண்டி
யெடுத் தளித் தருளினீர்; எமக்குப்

மண்டலம் 1. சூக்தம் 47.

பசையுறப் பலரும் படைத்திடக் கருதும்
பணத்தினை யசுவினீ ரின்று
நசையினந் தரத்தி னுப்பணின் றன்றே
நபத்திருந் தளித்திடீர் கொணர்ந்தே.

(இ-ள்.) அழகிய தேரில் விளங்கும் தர்சனீயர்களே! பிஜவனன் புத்திரனாகிய ஸுதாசன் என்னும் ராஜனுக்குக் கணக்கில்லாத அன்னத்தை யளித்தீர்கள். எங்களுக்குப் பலரும் பெற விரும்பும் தனத்தை அந்தரட்சத்திலிருந்தாவது ஸ்வர்க்கத்தின் மேலிருந்தாவது கொண்டு வந்து தருவீர்களாக.—(எ-று.) ஸுதாசன் ஒரு அரசன், அவன் பிதாவின் பெயர் பிஜவனன். அவனது வம்சாவளியைப்பற்றி மண். 7. சூக். 17. செய். 22-25 நோக்குக. தஸ்ரா என்னும் வடமொழிப் பதத்திற்கு தர்சனீயர்கள் அல்லது அழகிய தோற்றத்தை யுடைவர்களென்று சாயணரும் அற்புதச் செய்கையைப் புரிபவர்களென்று மேனாட்டாசிரியரும் உரை கூறுவார்கள்.

(வேறு.)

7. நாசத் தியர்காள் தூரத்தோ
நண்ணு மண்மைக் கண்ணேயோ
ஏசற் றிருப்பீ ரெங்கேனு
மெளிதி னுருளுந் தேரேறி
மாசற் றொளிரு மார்த்தாண்டன்
வன்னிக் கிரண வைகலினிற்
பாசத் தடைந்தெம் பக்கத்தே
பரிந்து வருவீர் பண்போடே.

(இ-ள்.) அஸத்திய ரஹிதர்களே! தூரத்தி லிருந்தாலும் சமீபத்தி லிருந்தாலும் எங்கிருப்பினும் எளிதாக வுணரக்கூடிய உமது தேரி லேறிக்கொண்டு சூரியோதய காலத்தே எம்மிடத்து வருவீர்களாக.—(எ-று.)

(வேறு.)

8. அத்து வரத்திற் சேவைசெ யேழா
மரியவுங் குதிரைக ளும்மை

நத்தியா மூன்று தரமளித் துவக்கு
நலம்பெறு ஸவனத்துந் தருக;
தத்துசீர்க் கிரியை தனமிக வளித்துச்
சமைப்பவன் றனக்கனங் கொடுக்கு
முத்தம நரரே தூயவிக் குசைக்க
ணுறுகநன் கமர்ந்திட வின்றே.

(இ-ள்.) யாக ஸேவை செய்யும் உமது ஏழு குதிரைக ளும் ஸவனத் திரயத்திலும் உம்மை இங்கு கொண்டு வருக. நரர்களே! (நேதாக்களே அல்லது சேனபதிகளே!) நற் காரி யத்தைச் செய்பவனும் நல்ல தானத்தோடுகூடியவனுமான யஜ மானனுக்கு அன்னத்தைக் கூட்டுவிப்பவர்களே! நீங்கள் தருப் பையில் வந்தமர்வீர்களாக.—(எ-று.)

(வேறு.)

9. என்றும் வசுவைத் தாசுடற்கா
வேற்றிக் கொணரும் வாகனமா
மென்றின் கிரண விதானத்தை
யியையு மத்தேர் மீதேறித்
துன்று மதுரச் சோமமதைத்
தோய்ந்து பருகிக் களித்திடவென்
றின்று வருவீர் பொய்யொன்று
மியம்பாப் பெருமை படைத்தீரே.

(இ-ள்.) நாஸத்தியர்களே! சாசுவதமாகச் செல்வத்தைச் சுமந்து கொண்டு வருவதும், சூரிய கிரணங்களைப்போன்ற ஒளியுள்ள மேற்கட்டியோடு கூடியதுமான அத் தேரின்மே லே றிக்கொண்டு மாதுரியமான சோமத்தைக் குடிப்பதற்காக வாருங்கள்.—(எ-று.) மூலத்தில் ஸூர்யத்துவசா (ch) என் றுள்ளது சூரியனால் சூழப்பட்டது அல்லது சூரிய கிரணம் போன்றது என்று சாயணர் பொருள் கூறுவர்.

(வேறு.)

10. அளவிலாப் பொருள்க ளடைந்தவர் தம்மை
யெங்களை யணைந்து காத்தருள்வான்

---

ஓர் திருத்தம்: 197-ம் பக்கத்துள்ள கடை இரண்டடிகளை 195-ம் பக்கத் துள்ள கடையிரண்டடிகளோடு சேர்த்துப் படித்துக்கொள்ளுக.

மண்டலம் 1. சூக்தம் 48.

விளியுற வழைத்தோம் அர்க்கங்களோடும்
வேண்டிய வுக்தங்க ளோடும்;
அளியுறு மன்போ டணைந்துகண் ணுவர்த
மழகிய வகத்தினி னென்றுந்
துளியுறு சோம மசுவினி ரின்பச்
சுவையொடு குடித்துளீர் நிசமே.

(இ-ள்.) அளவில்லாத பொருள்களைப் பெற்றவர்களாகிய அசுவினிகளே, எங்களைக் காக்கும் வண்ணம் ஸ்தோத்திரங்களோடும், உக்தங்களோடும் கூவி யழைத்தோம். சாசுவதமாகக் கண்ணுவர்களுடைய வில்லத்தில் சோமபானம் செய்பவர்கள் நீங்கள். இது உண்மை.—(எ-று.) அர்க்கம், ஸ்தோத்திரம், அர்ச்சனசாதனம். உக்தம், சஸ்திரம், ஹோதா கூறுவது.

வருக்கம் 2.

## 48. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 5.

### 14. இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: பிரஸ்கண்ணுவன். வடமொழிச்சந்தம்: ஒற்றை இருக்குக்களுக்கு ப்ர ஹ தி, இரட்டை இருக்குக்களுக்கு ஸதோ ப்ர ஹ தி. தேவதை: உஷஸ்.

(வேறு.)

1. திவியின் மகளே யுஷற்காலத்
தேவீ யெங்கட் கெனநீயு
மவியில் வாழ்வை யகந்தாங்கி
யாரு மொளியோ டுதித்திடவே;
புவியி லுதிக்க விபாவரியே
பொருந்து மன்னப் பெருங்குவையோ
டவையுந் தருவாய் தேவிநீ
யெண்ணில் பொருளோ டுதிக்கவே.

(இ-ள்.) விண்ணின் புத்திரியே! விடியற்கால தேவதையே! எங்களுக்காக வாழ்வைக் கையிலேந்திப் பிரகாசத்தோடு உதிப்பாயாக. விபாவரியே! பெரிய அன்னக் குவியலோடு உதிப்பாயாக. தானத்தோடுகூடிய தேவீ! (பசு முதலிய) கணக்கில்லாத செல்வத்தோடு உதிப்பாயாக.—(எ-று.) விபாவரி, ஒளிக்கு நாயகி, மிகுந்த சோதியுள்ளவள்.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 4.

(வேறு.)

2. பரியுட னுக்கள் பலபடைத் தவர்கள்,
பணமெலாம் பரிந்தளிப் பவர்கள்,
வரமிகத் தருவார், பூரியைப்பலகால்
வழங்கவென் றடைந்துளார் முனமே ;
தரமிகு முஷையே, சார்ந்தவெந் தமக்குச்
சாற்றுக மெய்ம்மையன் புரையை
யுரமிகு செல்வ வான்கட மிடத்தேய்ந்
துலவுறு தனமெமக் கனுப்ப.

(இ-ள்.) வெகு குதிரைகளோடுகூடியவரும், வெகு பசுக்களோடு கூடியவரும், எல்லாத் தனங்களையும் மாந்தர்க்குக் கூட்டுவிப்பவருமாகிய உஷஸுக்கள் (விடியல்கள் அல்லது விடியலபிமானி தேவதைகள்) முன்பே பிரஜைகளுக்குப் பூரியை யளிப்பதற்காகத் தோன்றினார்கள். உஷஸ் என்னும் தேவதையே! எங்களுக்குப் பிரியமும் ஸத்தியமுமான வார்த்தைகளைச் சொல்லுவாயாக. செல்வவான்களது திரவியம் எங்கள் விஷயத்திற் செலவாகும்படியாகத் தூண்டிவிடுவாயாக.—(எ-று.) இதற்கு முன் தோன்றிய வைகல்கள் எமக்குப் பரியும், பசுவும், பணமும், யதேஷ்டமாகத் தந்தன. இற்றை வைக லதிதேவதையாகிய நீயுமின் றெங்களுக்குத் தன மளிப்பாயாக வென்பது பொருள்.

(வேறு.)

3. உடையு முச்சத் துதித் தொளியை
யோங்கவிட்டாள், சையங்கள்
படியி னுள்ளோர் பொருணுடிப்
பவ்வ மோடு வோரின், இவட்
கடிதி னிவடன் வருகைதனைக்
கண்டன் னுளைக் கருதுற்றே
முடுகி யுருள்வான் மூட்டுபவ
ளின்னு முதிப்பா ளொளியுடனே.

(இ-ள்.) உஷாதேவியும் தன் பிரகாச முயர்ந்து தோன்றும்படி செய்தாள். பூமியி லுள்ளவர்கள் திரவியத்தை நாடித் திரைகடலோடுவது போலத், தேவர்கள் அவளது வரவைக் கண்டு அவளை நோக்கி யுருண்டோடும்படி தூண்டுபவளாகிய அவள் இன்னும் இன்றுகூடக் காந்தியோடு இங்கே உதிப்பாள்.—(எ-று.) உடை, உஷை, உஷா, வென்பதன் தற்பவம். சையம், தேர்.

## மண்டலம் 1. சூக்தம் 48.

(வேறு.)

4. வைகலே! நீயும் வருவதை யுணர்ந்து
 மருவிய தானங்க ளறிஞர்க்
கைதென வளிக்கு முதார சீலத்தோ
 ராகிய நரர் பெயரோடு,
வைகுறு சீரும், யாவரு முணர
 வளம்பெறு கண்ணுவக் குடியிற்
செய்கையி னுயர்ந்தோன் சிறப்புறு துதியைச்
 செப்பியே புகழ்வனு லீண்டே.

(இ-ள்.) உஷஸே! நீ வருஞ் சமயத்தை யறிந்து கண்ணுவக் குடியில் சிறந்த அநுட்டாதாவாகிய கண்ணுவோத்தமன் தானசீலமுள்ள உதார ஸூரிகளாகிய மாந்தர்களின் பெயர்களையும், கீர்த்தியையும் ஸ்தோத்திரங்களால் புகழ்ந்து கூறுவான். —(எ-று.) ஸூரிகள் பொருள் கொடுத்து யாகத்தை நடத்துவிப்போர்.

(வேறு.)

5. இல்லப் பணியை நன்காற்று
 மெழிலா ரில்லா ளென்னவுஷை
எல்லாங் காப்பா ளுயிர்க்கூட்டத்
 தெண்ணிச் சரையை யூட்டுபவள்
சொல்லுங் காலினடை யுயிரைத்
 தொழிற்கட் செல்வான் விழிப்பிப்பாள்
செல்லும் பறவை விண்செலவே
 சேர்ப்பா ளெழுவா ளுடோறுமே.

(இ-ள்.) கிருக கிருத்தியங்களை யொழுங்காக நடத்தும் கிருகணியைப்போல எல்லாவற்றையும் பாலிப்பவளும், சீவர்களுக்கு நாள்தோறும் கிழத்தன்மையை யூட்டுபவளும், காலால் நடந்து செல்லும் ஜீவகோடிகளைத் தத்தம் தொழில் புரியுமாறு எழுப்பிவிடுபவளும் பட்சிகள் வனத்தில் பறந்து செல்லுமாறு செய்பவளுமாகிய உஷை தினந்தோறும் தோன்றுகிறாள்.—(எ-று.) உஷற்காலத்தில் மேற்கூறிய பல தொழிலும் நடைபெறுகின்றன வென்பதுபொருள்.

வருக்கம் 3.

(வேறு.)

6. தத்தம தொழிலை நடத்துவா னரரைச்
சார்த்துவா ளவரவ ரிடத்தே;
உத்தம மாக வளிப்பவர் தம்மாட்
டோட்டுவா ளிரவலர் தமையே;
இத்தரை வேகத் தெழுவதா லறியா
ளென்றுமே தாமதம்; அன்ன
மொத்துறை யுஷையே! யுன்பினர்ப் பறவை
யொழுகுவ கூட்டினை யொழிந்தே.

(இ-ள்.) உஷை மாந்தர்களைத் தங்கள் தங்கள் வேலைகளை நடத்தும்படி வேலைத்தலங்களுக்குப் போகும்படி செய்வாள். யாசகர்களைத் தானோத்தமர்களிடத்து அனுப்புவாள். தாமதமின்றிச் சீக்கிரமாக எழுவாள். வாஜினீதேவியே! (அன்னத்தோடு நிறைந்தவளே) நீ தோற்றிய பின்னர்ப் பறவைகள் கூட்டைவிட்டுப் பறந்துசெல்லும்.—(எ-று.)

(வேறு.)

7. இன்ன வுஷையுந் தூரத்தே
யென்றா ழுதய விடத்தின்மேல்
மன்னுந் தனது தேர்க்கணே
மாவைப்பூட்டிச் சௌபாக்யந்
துன்னுந் தன்னைச் சதத்தேர்கள்
சுமக்க மாந்தர்ச் சுகந்தன்னை
யுன்னிச் சிறப்பி னொளிவீசி
யுவரை நோக்கி வருகின்றாள்.

(இ-ள்.) இப்பேர்ப்பட்ட உஷை சூரியன் உதிக்கும் ஸ்தானத்துக்குமேல் தனது நூறு தேர்களிலும் குதிரையைப் பூட்டி, சௌபாக்கியத்தோடுகூடிய தன்னை யந்நூறு தேர்களும் சுமந்து செல்ல, மக்களது சுகத்தை நாடிச் சிறந்த காந்தியை வீசிக்கொண்டு அம் மக்களை நோக்கி வருகின்றாள்.—(எ-று.)

(வேறு.)

8. அகிலமு நிறைந்த சீவர்கள் யாரு
மவளொளிக் கண் வணங்குவரால்
நிகிலமும் விரும்பும் பயன்றரு மவளே
நீடுல கொளிபெற நிறுப்பாள்;

## மண்டலம் 1. சூக்தம் 48.

வெகு தனம் படைத்தாள் வானினுக்கன்பு
மிகுபக ளுஷையிவட் பகைமை
மிகுமவர் தம்மைத் துடைப்பவர் தமையும்
வீற்றுவீற் றழித்தொளி ருவளே.

(இ-ள்.) எல்லா ஜகத்திலும் நிறைந்த பிராணிக் கூட்டங்கள் உஷஸின் சோதியைக் கண்டதும் நமஸ்கரிப்பார்கள். எண்ணின பலன்களை யளிப்பவளாகிய உஷஸ் உலகத்தைப் பிரகாசிப்பிப்பாள். செல்வம்நிறைந்தவளாகிய திவியின் புத்திரி, துவேஷபுத்தி யுள்ளவர்களையும், எல்லாவற்றையும் வற்றும்படி துடைத் தழிப்பவர்களையும், தனித்தனியாகக் கெடுக்கிறாள்.—(எ-று.) இத்தகைய இஷ்டப்பிராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்திற்கும் ஏதுவான உஷையை யெல்லாரும் நமஸ்கரிக்கிறார்கள் என்றபடி. உஷை, உஷா, உடை, வைகல், விடியல், என்பனவெல்லாம் விடியற்கால அபிமானி தேவதையை யுணர்த்துஞ் சொற்களாம். இவ்வுஷை விண்ணின் புத்திரி எனப்படுவாள். துகிதர்திவ: என்பது வடமொழிப் பதம்.

(வேறு.)

9. வானின் மகளே யுடைத்தேவீ
வையத் தோர்க ளின்படையும்
பானு வோடு பரிந்தெல்லாப்
பாலு மொளியைப் பரப்புவாய்,
மானம் பெருத்த மாண்பொருளை
மதித்தே யெமக்குப் பகலெல்லா
மூனந் தீர வுதவுவதோ
டோட்டி யிருளை யொளிர்பவளே.

(இ-ள்.) விண்ணின் புத்திரியே! உஷைத் தேவியே! அளவிற் பெரிய செல்வத்தைப் பகலெல்லாம் எங்கட் களித்து இருளையும் ஓட்டுகின்றவளே! எல்லாருக்குங் களிப்பைத் தரும் பிரகாசத்தோடு எல்லாப் பக்கத்திலும் பிரகாசிப்பாயாக.—(எ-று.) இருளையோட்டி ஒளிர்பவளாகிய தேவியே பரப்புவாயாக வென முடிக்க. மானம், அளவு.

(வேறு.)

10. குணத்துச்சூ ரியே! கூடுமுன் னுதயங்
கூர்ந்தபோ துன்னுளே யகிலம்
பிணக்கரு முயிரின் சேட்டையு முவைதாம்
பிராணனைத் தாங்குறு மெழினு

மிணக்குறும் ; ஒளியிற் சிறந்த நாயகியே!
யெண்ணுறும் பெரியதேர் மீது
கணக்குற வமர்ந்து, சித்திரத் தனத்தோய்,
கருத்துறக் கேட்க வெம் விளியே.

(இ-ள்.) ஸூநரியே! (எண்ணிய பலன்களை யளிப்பவளே!) நீ உதயமாகுங் காலத்து அகிலத்திலு முள்ள பிராணிகளின் சேட்டைகளும், அவை பிராணனைத் தாங்குந் தன்மையும் உன்னாலேயே உண்டாகின்றன. விபாவரியே! பலவிதமான செல்வத்தோடு கூடியவளே! பெரிய தேர்மீது அமர்ந்து யாங்கள் கூப்பிடுவதைக் கேட்பாயாக.—(எ-று.) ஸூநரி-நினைத்ததை யளிப்பவள். விபாவரி-விசேஷமான பிரகாசத்தோடு கூடியவள்.

வருக்கம் 4.

(வேறு.)

11. நரர்க்கட் டோன்றும் யஜமான
னொடு முணவை யுஷைத்தேவி
தரிக்க ; வன்னி காரியங்கள்
சாதித் திடுவோர் போற்றிழைத்து
வரத்தின் மிக்க செய்கைகளை
மருவிப் புரிந்து தீங்கடையாத்
தரத்து மகத்தை யாற்றுமவர்த்
தருக வீண்டு நன்குறவே.

(இ-ள்.) உஷையே! மனிதனாய்ப் பிறந்த யஜமானன் நாடுகின்ற பிரஸித்திபெற்ற அவிக் குகந்த அழகிய வன்னத்தைக் கைக்கொள்வாயாக. அக்கினி காரியங்களைச் செவ்வனே நடத்துபவரும், பகைவரால் இம்சிக்க முடியாதவரும், உன்னை ஸ்துதிப்பவருமான யக்ஞ நிர்வாஹகர்களை இங்கு நன்றாகக் கூட்டுவாயாக.—(எ-று.) "யஜமானர்களால் கொடுக்கப்பட்ட ஹவியைக் கைக்கொண்டு, மறுபடியும் அவர்களின்பொருட்டு யக்ஞத்தை ஸம்பதிக்கிறார்கள்" என்ற ஒரு வார்த்தை யேற்படுகிறது என்பார் சாயணர்.

(வேறு.)

12. அந்தர வுலகத் திருந்தெலாத் தேவர்
தம்மையு மதுக்குடிக் கழைக்க ;
சுந்தர வுஷையே தோய்ந்தநின் றன்மை
துலங்குறப் பலாறி பாக்குப்

பந்தியா யுலவுங் குதிரையும் பசுவுந்
தவப்பல நிறைந்துள சிறப்பி
னந்துறு பேரும் வீரமும் பொருந்தி
நலந்தரு மனநிறுத் துகவே.

(இ-ள்.) உஷாதேவியே! சோமபானஞ் செய்யும்படி அந்தரிட்ச லோகத்தி லிருந்து நீ எல்லாத் தேவர்களையும் இவ்விடத்துக் கழைப்பாயாக. உனது குணம் எல்லாருக்கும் தெரியும்படி, குதிரைப் பந்தியும் பசுக் கூட்டமும் நிறைந்து நல்ல கீர்த்தியும் வீரியமும் பொருந்தி விளங்கும் அன்னத்தை எங்களிடத்து ஸ்தாபிப்பாயாக.—(எ-று.)

(வேறு.)

13. காந்தி யோடிக் கருதலர்க்குக்
கடுந்துன் பூட்டிக் கல்யாண
மேந்துங் கிரணத் தோடியைந்த
வெங்க டேவி யுஷையெமக்கென்
றேந்து மெல்லாச் சீருமிகுந்
தெளிதே வாய்வ துருவத்திற்
றோய்ந்த வந்த மார்தனமே
சுவையி னெங்கட் களிக்கவே.

(இ-ள்.) பகைவர்களுக்குத் துன்பத்தை யுண்டுபண்ணிக் கல்யாண குணத்தோடு விளங்கும் கிரணத்தோடு கூடிய உஷைத் தேவியே! எமக்குத் தருவதற்காக வைத்திருக்கும் தனங்களில், எல்லாவற்றிலுஞ் சிறந்ததும், இலகுவாகக் கிடைக்கக் கூடியதும் (அல்லது சுகத்தைத் தரக்கூடியதும்), அழகான தோற்றத்தோடு கூடியதுமான தனத்தையே எங்களுக்குத் தருக.—(எ-று.)

14. மகத்துவ மமைந்த உஷையெனுந் தேவீ
மன்னுமுன் காவலைத் துணையை
யகத்தினில் விழைந்து பண்டைய காலத்
தாவுதி யிருடிய ரளித்தா
ருகக்கவெம் புகழ்க்குச் செவிகொடுத் தெங்கட்
கொளிமிகு காந்தியோ டியைந்து
பகுக்கலாத் தனத்தை யருளுமெண் வாய்ந்து
பழகுக தேசினிற் சிறந்தே.

(இ-ள்.) மகத்துவம் பொருந்தியவளே! அல்லது பூஜிக்கத் தகுந்த உஷையே! உனது காவலையும், துணையையும் விரும்பிப் பூர்வ காலத்து ரிஷிகள் உனக்காக ஆவுதி யளித்தனர். இப்போது யாங்கள் செய்யும் ஸ்தோத்திரங்களுக்குச் செவி கொடுத்து, எங்களுக்குக் காந்தியோடு கூடிய தனத்தைக் கொடுக்க வெண்ணிச் சிறந்த பிரகாசத்தோடு கூடி எங்கள் துதியை ஏற்பாயாக.—(எ-று.) நன்றாய்த் துதியுங்கள் என்று எதிர்மொழி கொடுப்பாயாக வென வொரு வாக்கியம் சாயணர் கூட்டுவர்.

(வேறு.)

15. என்றைக் குஷஸே யாகாயத்
திரட்டைக் கதவைத் திறந்தாயோ
வன்றை யெமக்கு விசாலமா
யில்லம் பகைவர் தோயாதை
மன்ற வளிப்பா யன்றியு முன்
மகிமை சிறந்த மாதேவீ
கன்று காலி மிகச்சார்ந்த
கறைதீ ரன்ன மருளுகவே.

(இ-ள்.) உஷஸே! நீ எவ் விடியற் காலத்தில் அந்தரிட்சத்தில் (இருட்டு ரூபமாய்க் கிழக்கு மேற்காய்) வியாபித்துள்ள இரட்டையா யுள்ள கதவைத் திறந்தாயோ அப்பொழுதே விசாலமானதும், பகைவரால் இம்சிக்க முடியாததுமான கிரகத்தை எங்களுக் களிப்பாயாக. அல்லாமலும் ஹே! தேவியே! வெகு பசுக்களோடு கூடிய அன்னப் பொருள்களையும் எங்களுக்குத் தருவாயாக.—(எ-று.) இவ்விருக்குக்கூறும் இயற்கையழகை யூன்றிக் கவனிக்க.

(வேறு.)

16. மகத்துவம் வகித்த உஷையெனுந் தேவீ
மருவுபல் லுருவமும் வயங்கும்
தகைப்பெரும் பொருளைப் பசுவினை மிகவே
தயக்குக; யாரையு படக்கி
யுகக்கு நற்கீர்த்தி யுவப்புட னமைக்க!;
வுணவெலாம் பொதிந்தவ, வெமக்குத்
தொகுத்த நல்லுணவைத் தோய்த்தெமை யளிப்பாய்
சுவைபெறு மாறிவ ணின்றே.

## மண்டலம் 1. சூக்தம் 49.

(இ-ள்.) மகத்துவம் வாய்ந்தவளே! உஷையே! பலரு பத்தோடு கூடி யளவிற் பெருத்த செல்வத்தையும், பசுக்களை யும் எங்களுக்குக் கூட்டுவாயாக. (சத்துருக்கள்) எல்லாரையும் அடக்கியாளும் கீர்த்தியை எங்களுக் களிப்பாயாக. எல்லா வுணவுப் பொருளும் படைத்தவளே! எங்களுக்கு அன்னமும் சிறக்க அளிப்பாயாக.—(எ-று.)

வருக்கம் 5.

## 49. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 6.

### 4 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷ்டி பிரஸ் கண்ணுவன். வடமொழிச்சந்தம்: அநுஷ் டுப். தேவதை: உஷஸ்.

(வேறு.)

1. ஒளிசிறந்த வான்றலத்தினி னுயர்ந்தவவ் விடத்தி
னிழிந்து பந்தனஞ் செய்தநன் மார்க்கத்தின், உஷையே!
பிழி மதுவினை யளிக்கு மம் மகன்றன தகத்தே
களியிற் செந்நிறக் கோவினைச் சுமந்துசெல் லுகவே.

(இ-ள்.) உஷாதேவியே! பிரகாசம் பொருந்திய ஆகாயத் தின்மேல் காவலோடுகூடிய மார்க்கத்தில் செந்நிறமான (மேக ஜாலங்களாகிய) பசுக்கள் உன்னைச் சுமந்துவந்து சோமம் பிழிந்து யாகம் செய்யும் யஜமானனது இல்லத்தில் உன்னை விடட்டும்.—(எ-று.) வடமொழி மூலத்தில் அருணப்ஸவ என் றுள்ளது. ப்ஸாபட்சணை என்பது முன்னரே மண். 1 சூக். 41 செய். 7-ன் உரையிற் கூறப்பட்டது. இங்கு பால் குடிப்பவை யென்று பொருள்படும். கோநர்தீயனுகிய பதஞ்சலி, பிதாக்க ளாகிய குதிரைகளையும் மாதாக்களாகிய பசுக்களையும் பின் பற்றிச் செல்லுகின்றன உஷஸுக்க ளென்பார். நிகண்டிலும் உஷஸுக்கு வாஹநம் செந்நிறப் பசுக்க ளென்று கூறப்படு கிறது.—சாயணர். இக்கோக்கள் மேகஜாலங்களென்பது மேனுட்டாசிரியர் கூற்று.

2. கண்கவர் வனப் புள்ளது கருதுறு சுகத்திற்
கொண்டு செல்வ தத்தேர் மிசைக் கோலத்தி னமர்ந்து,
விண்புரந்திடும் புத்திரி மேன்மைசா லுஷையே,
பண்பினின்று நல் லவிதரு மனிதன்பா லுறவே.

(இ-ள்.) விண்ணின் புத்திரியான உஷையே! கண்ணைக் கவரும்படியான அழகான அவயவங்களோடு கூடியதும், சுகமாகக் கொண்டுபோகக் கூடியதுமான தேரின்மேலேறி, நல்ல கீர்த்தியோடு பொருந்திய அவியைத் தரு மனிதனிடத்து இப்பொழுது நன்றாக வருவாயாக. (வந்து அவனை இரட்சிப்பாயாக.)—(எ-று.)

3. வெண்மைசா னிறத் துஷையுன துதயத்தின் பின்னர்த்
திண்மைசா லிருபதமுள மனிதரு நான்கு
வன்மைசால் பத மிருகமு முலவும்; வன்சிறைப்பு
ளுண்மையாக வானிடமெலாம் வளைந்துசூழ்ந் துலவும்.

(இ-ள்.) வெண்மை நிறத்தோடுகூடிய உஷையே! நீ யுதித்த பின்னர் இரண்டு காற் பிராணிகளும், நாற்கான் மிருகங்களும் (தத்தந் தொழிலை நோக்கிச்) செல்லுகின்றன. பக்கச் சிறகுகளோடுகூடிய பட்சிகளும் வானிடத்தெல்லாஞ் சூழ்ந்துலாவும்.—(எ-று.)

4. இருளினைத் துரத் துங் கிர ணங்களை யியைந்து
பெரு வெளியெலா மொளியினைப் பிறக்குவாய் பெரிதும்;
மருவு மத்தகை யுன்னையே மதிமலி கணுவர்
திருவுற விசை கூட்டியே துதித்தன ருஷையே.

(இ-ள்.) உஷைத்தேவியே! இருளை யோட்டுங் கிரணங்களால் வெளியிடங்களிலெல்லாம் உன் பிரகாசத்தை மிகவும் பரப்புவாய். அப்பேர்ப்பட்ட உன்னை மேதாவிகளாகிய கண்ணுவர்கள் செல்வ விச்சையோடு ஸ்தோத்திரங்களாற் புகழ்ந்து கூறுகிறார்கள்.—(எ-று.)

வருக்கம் 6.

## 50. மண்டலம் 1. அநுவாகம் 9. சூக்தம் 7.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: பிரஸ்கண்ணுவன். வடமொழிச்சந்தம்: 1-9 காயத்திரி, 10-13 அநுஷ்டுப். தேவதை: ஸூர்யன்.

(வேறு.)

1. எவ்வுயிரையு மெண்ணி யறிந்திடுந்
திவ்வியத்தே வினன்றனை, யாவருஞ்

செவ்விதாகச் சிறந்து தரிசிக்கக்
கவ்வவன் கதிர்க்கேது வுயர்த்துமே.

(இ-ள்.) சாதவேஸனுந் தேவனுமாகிய சூரியனை யெல்லாரும் பார்க்கும்படி யவனது கதிர்களாகிய கொடிகள் அவனை உயரத் தூக்கிப் பிடிக்கும்.—(எ-று.) இனன், சூரியன். ஜாதவேதஸன், எவ்வுயிரையும் அறிபவன். கதிர்க்கொடி என்றது சூரியகிரணங்களே.

2. நோக்கின் யாரையு நோக்கிடுஞ் சூரியன்
றேக்கு நல்லொளி சேர, நட்சத்திரம்
ஒக்க மற்ற நிசியொடு, கள்வனைத்,
தேக்க மோடு மிழிந்து மறைவவே.

(இ-ள்.) எல்லாவற்றையும் பார்த்துப் பிரகாசப்படுத்தும் சூரியனது வெளிச்சத்தைக் காணவே (தேவ கிருக ரூபமாயுள்ள) நட்சத்திரங்கள், இரவோடு, திருடனைப்போலொளிந்து மறைகின்றன.—(எ-று.) இவ் வுலகத்து ஸத்கருமங்களைச் செய்பவர்கள் ஸ்வர்க்கத்துக்குப் போகிறார்கள். அவ்விடங்களே நட்சத்திர ரூபமாகக் காணப்படுகின்றன வென்பது தைத்திரீயப் பிராஹ்மணம் 1-5-2.

3. அவன் வரவை யறிவிக்கு நற்கதி
ரிவண் மனிதர்க ளேய்ந்த விடத்தெலாஞ்
தவவொளிசிறந் தோங்குந் தணலினைச்
சிவண வோங்கித் தெரிவுறக் காட்டுமே.

(இ-ள்.) அந்த சூரியனுடைய வரவை முன்னுணர்த்தும் அவனது கிரணங்கள், மனிதர்க ளுள்ள விடங்களிலெல்லாம் வியாபித்து, மிகவு மொளி வீசுகின்ற தணலைப்போல, அவ்விடங்களையெல்லாம் பிரகாசிப்பிக்கும்.—(எ-று.)

4. காத மாயிர மேனுங் கதியிற்செல்
லாதப வுன்னழகெப் பிராணிக்குங்
காதலீவது ; சோதியுண் டாக்குவாய்,
ஓது மண்டமெலா மொளி வீசுவாய்.

(இ-ள்.) (ஆயிரங் காதமானாலும்) வேகமாகச் செல்லும் சூரியனே! உனது அழகு எல்லாப் பிராணிகளுக்கும் பார்க்கு மாசையை யுண்டுபண்ணுவதாம். சோதியை யுண்டாக்குபவனே! எல்லா வண்டங்களிலும் உன்னொளியை வீசுகிறாய்.—

(எ-று.) ஆயிரங் காதமாயினு மென்பது வடமொழி மூலத்தி லில்லை, தூரத்தைக் குறிக்க வந்தது. யோஜாநாநாம்ஸஹஸ் ரேத்வேத்வே சதேத்வேச்ச யோஜநே என்பது கருதப்படுகிற தென்பார் சாயணர். சூரிய தர்சனமானது சண்டாளர்களாகிய பாபிகள் முதலியவரைப் பார்க்கும் பாபமெல்லாம் போக்கும் ஹேதுவாம் என்று சாயணர் கூறுவர்.

5. தேவர்முன்னிலை சென்றுதிக் கின்றனை ;
பாவு மாந்தர்த முன்பு மப்பண்பினே
யாவலோடு முதித்திங் கணைகுவாய்
மேவுவாய் துறக்கம் மெலாங் காணவே.

(இ-ள்.) (சூரியனே !) தேவர் கூட்டங்களுக் கெதிரில் நீ யுதிப்பாய். மனிதர்களுக்கு முன்னும் இடம் பரந்த ஸ்வர்க்க முழுதும் காணும் வண்ணம் உதிப்பாய்.—(எ-று.) திரி லோகத்திலுமுள்ள ஜனங்கள் காணும்படி யுதிப்பாய் என்றபடி. தேவர் கூட்டங்கள் மருத்துக்களா மென்பர் சாயணர். மருதர் கள் தேவர்களது கூட்டமாம் என்பது தைத்திரீய ஸம்ஹிதை 2-2-5.

வருக்கம் 7.

6. தீதை யோட்டிப் பின் றாய்மை புரிபவ,
வாது தீரும் வகை யிவ் வுலகத்தே
யோது சீவரை யோம்பக் கருதியே
யாது கண்கொண் டெதிர்ப்பட நோக்குவாய் ?

(இ-ள்.) வருணனும் (தீதை யோட்டுபவனும்) பாவகனும் (எல்லாவற்றையும் பரிசுத்தஞ் செய்பவனும்) ஆன சூரியனே ! ஒழுங்காக இவ்வுலகத்தி லுள்ள பிராணிகளைக் காப்பாற்றும் பொருட்டு எக் கண்கொண்டு பார்க்கிறாய் ?—(எ-று.) எக் கண் கொண்டு பார்க்கிறாயோ அக் கண்ணொளியைத் துதிப்போமா கவென்று ஒரு வாக்கியம் வருவிக்க என்பார் நிருக்தக்காரரும் அவரை யொட்டிச் சாயணரும். மூலத்தில் வருண, பாவக, என்னும் முன்னிலைக ளுள்ளன. அவற்றிற்கு அநிஷ்டநிவார கனே ! எல்லாவற்றையும் சோதிப்பவனே ! சூரியனே என்று சாயணர் உரை கூறுவர்.

7. வானு மந்தர மார்க்கமும், சூரிய,
தானெழுகித், தயங்கும் கருவுயிர்த்

## மண்டலம் 1. சூக்தம் 50.

தீனு நல்லுயிர் யாவையு நோக்கியே
மானஞ் செய்கிறுய் மாண்பி னிராப்பகல்.

(இ-ள்.) சூரியனே! விண்ணிலும் அந்தாத்திலும் சென்று, ஜன்மிக்கும் பிராணிகளுக்கெல்லா மொளியை யளித்து, அவற்றைப் பார்த்துக்கொண்டு இரவு பகலென்னும் அளவைகளை யேற்படுத்துகிறுய்.—(எ-று.) தான், அசை. மானஞ்செய்தல் அளத்தல். சூரியோதய அத்தமனங்களாலேயே இரவு பகல் பேதங்கள் உண்டாகின்றன என்றபடி.

8. துல்லியக் கதிர்த் தேவ, வெஞ்சூரிய,
அல்லிரிக்கு மணியொளிக் கேசியே,
புல்லுமுன் சையம் பூட்டிய வெம்பரி
மல்லிணேடும் வகித்துனை யீர்க்குமே.

(இ-ள்.) எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கும் கதிரோடு கூடிய தேவனுகிய சூரியனே! இருட்டை யோட்டும் சோதியே கேசமாக வுடைய சூரியனே! உனது தேரிற் பூட்டிய ஏழு குதிரைகளும் உன்னைச் சுமந்து இழுத்துச் செல்லும்.—(எ-று.) சூரியன் என்னும் சொல்லுக்கு எல்லாவற்றையும் ஒளிபெற விளக்குபவன் என்பது பொருள். சூரியனது குதிரைகள் ஏழாம். 'ரதஸ்யைகம் சக்ரம் சரணவிகலாஸ் ஸப்ததுரகாஸ் ஸாரதிரபி' என்பது கருதத்தக்கது.

9. சூரன், றன் பெருந் தேரின் புதல்விய
ராருந் தூய்மை யணைந்த வடவைகள்
கூருந் தேரிற்று மாகவே கூடுறு
மேரி னேழினைப் பூட்டி யுலவுவான்.

(இ-ள்.) (எல்லாவற்றையும் தொழிற்கண் ஊக்குவோனுகிய) சூரியன் தனது பெரிய தேரின் புத்திரிகளும், பரிசுத்ததோடுகூடியவைகளும், தனது தேரிற் றுமே பூட்டிக்கொள்ளும் சிறப்பு வாய்ந்தவைகளுமான பெண் குதிரைக ளேழினையும் தன் தேரிற் பூட்டித்திரிவான்.—(எ-று.) ஸூர: ஸர்வஸ்யப்ரேரக: என்பார் சாயணர்.

(வேறு.)

10. இருடிணிந்த வவ்விடத்தினின் மேலெழுந் துயர்ந்தே
யிருள் கடிந்திடுஞ் சோதியை யெழிலுற நோக்கி
வர முயர்ந்த நற்கடவுளர்க்கட் டரக்கடவுள்
தாஞ் சிறந்த சோதியை யுறுஞ் சூரியற் சார்ந்தாம்.

(இ-ள்.) (அநுஷ்டாதாக்களாகிய நாம்) இருட்டு நிறைந்த விடத்திற்கு மேல் இருளை நீக்கும் சோதியைப் பார்த்தவர்களாய்த், தேவர்களிற் சிறந்த தேவனாகிய உத்தம ஜோதிஸோடு கூடிய சூரியனை யடைந்தாம்.—(எ-று.) இம மறை உத்வயம் தமஸஸ்பரி..........அகன்மஜ்யோ திருத்தமம் என்றது.

இனி வரும் 3 மறைகளும் பாசநாசனத்துக்கும், ரோக நிவாரணத்திற்கும், விஷ நிவாரணத்திற்கும், பக்தி முக்தி பலப்பிரதத்திற்கும் உருச் செபிக்கக்கூடிய மந்திரங்களாம். ஏன்? பிரஸ்கண்ணுவன் தனது தோலிற் றோன்றிய வியாதியை நிவர்த்தித்துக் கொள்ளுவதற்காகவே இம் மூன்று மந்திரங்களாலும் சூரியனைத் துதித்தான். அச் சூரியனும் அவனது நோயை மாற்றினன். அதனால் இம் மூன்று செய்யுட்களாலும் சூரியனை யுபாசிப்பவர்கள் ரோகம் நீங்கிச் சுகப்படுவார்கள்.— என்பது சௌநகர் அநுக்கிரமணிகையி லுள்ளது.

11. இன்று நீயெழுந் தநுகுலச் சோதியை யுடையோய்,
துன்று மந்தர மீதுசென் றெதிர்படத் தோய்ந்து
கன்று நோய், நிறங்கவர்வ, தென்னெஞ்சினுட் புகுந்து
நின்ற வேதனை, சூரிய, நேடியே யழிப்பாய்.

(இ-ள்.) (மித்திரமஹனே!) எல்லாருக்கும் அநுகூலத்தைக் தரும் சோதியை யுடையவனே! சூரியனே! நீ இன்றைக்கு உதயமாய் அந்தரத்தின் மேற் சென்றேறி யாரும் பார்க்கும் வண்ணம் உயர நின்று எனது நிறத்தைக் கவருகின்ற இதய ரோகத்தைத் தேடி யழிப்பாயாக.—(எ-று.) ஸூர்யன் ஸர்வஸ்யப்ரேரகன் என்பது மேல் 9-ம் செய்புளில் கூறப்பட்டுளது. மித்ரமஹன் என்பதற்கு மித்திரர்களால் பூஜிக்கப்படத் தகுந்தவன் என்பது ஓர் பொருள். ஈண்டு ஸர்வேஷாம் அநுகூல தீப்தியுக்த: என்பார் சாயணர். மித்திரர்கள் நிறைந்தவனே யென்பார் மேனாட்டாசிரியர் (Griffith.)

12. என்னுடம்பினி னெழிலினை யழிக்குமஞ் சளினைத்
துன்னுசாரிகைகிளியெனும்பறவைவாய்த்தோய்ப்பம்;
பின்னு மென்னெழில் பேர்க்குமிப் பிங்கல வருண
மன்னு நல்லரி தாலமாந் தருவின்மாற் றுவமே.

(இ-ள்.) என் உடம்பின் அழகைக் கெடுக்கின்ற மஞ்சள் நிறத்தைச் சாரிகை (நாகணவாய்ப்புள்), கிளியென்னும் பட்சிகளிடத்து நிலைக்கச் செய்வோம். இன்னும் அப்பிங்கல நிறத்தை

ஹரிதால விருட்சத்தினிடத்துப் பொருந்தும்படியாகவும் செய்வோம்.—(எ-று.) சாரிகை, நாகணவாய்ப்புள், இந்நோய் காமாலை யென்றும், பண்டைக்காலத்து ரோமர்களும் (Vide Pliny H. N. XXX. II) இவ்வியாதி Starling என்னும் பட்சியைப் பார்ப்பதால் விலகுவதோடு, அவ்வியாதிக்காரன் அப்பட்சியைப் பார்த்தால் அவன் சாவதற்குப் பதிலாக அது சாகுமென்று நம்பியிருந்தார்களென்றும், மேனாட்டாசிரியர் கூறுவர்.

13. அதிதி புத்திர னார்ந்ததன் முழுவலி யோடு
முதயமேறியென் றன்னையிங்கொறுத்திடுநோயா
மதிபகைவனைப் பேரற வழித்தன னினியான்
மதிசெகுக்குமப்பகைவனைமதித்தொன்றும்புரியேன்.

(இ-ள்.) அதிதி புத்திரனாகிய ஆதித்தியன் (சூரியன்) தனது முழு வலிமையுங்கொண்டு உதயமாகி, என்னை இம்சிக்கும் வியாதியாகிய பகைவனைப் பேரற வழித்தான். இனி நான் அவனை யொன்றும் செய்ய வேண்டியதில்லை.—(எ-று.)

## 51. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 1.

15 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி*: அங்கிரஸன் புத்திரன் (இந்திர ஸமானமான) ஸவ்யன்; வடமொழிச்சந்தம்: ஜகதி, 14, 15 த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. பலர்போற்று மத்தகரை யிருக்குவக்கு
மிந்திரனைப் பண்பார் செல்வச்
சலதியை மனிதருக்கென் றருளுதவி
வான்கதிரிற் சால வோங்கு
நலகவின்கொள் விப்பிரனைத் துதித்துநனி
களிப்பூட்ட; நமக்கு வேண்டும்
பலபோக மளிப்பதனிற் சிறந்தோனை
யருச்சித்துப் பாவ நன்கே.

(இ-ள்.) எல்லா யஜமானர்களாலும் அழைக்கப்படும் அவ்வாட்டுக் கடாவும், இருக்குக்களை (ஸ்தோத்திரங்களை)க் கேட்டு ஆநந்திப்பவனும், செல்வமெல்லாம் பொதிந்த சமுத்திரம் போன்றவனும், மனிதருக்கருள் புரிந்து ஆகாசத்தில் சூரிய கிரணங்க ளோங்குவதுபோலச் சிறந்தோங்கும் விப்பிரனும் (மேதாவியும்) ஆன இந்திரனைத் துதித்து அவனுக்குச் சந்தோ

ஷத்தை யுண்டுபண்ணுவீர்களாக. நமக்கு இவ்வுலகத்து வேண்டும் பல் சுகங்களையும் தருவதிற் சிறந்தவனைப் பூஜிப்பீர்களாக.—(எ-று.) தகரென்றது, கண்ணுவ புத்திரனான மேதாதிதியின் யாகத்தில் ஆட்டுக்கடாவுருவாக வந்து இந்திரன் சோமபானஞ் செய்தான் என்பதை முன்னிட்டு. அ, பண்டறிசுட்டு. அப்பொழுது அவ்விருடி நீ மேஷமென்று கூறினர். அதனுல் ஆட்டுக்கடாவென்றது ஈண்டு இந்திரனைக் குறித்தது.—சாயணருரை. மேஷம் என்னும் பதத்திற்கு சத்துருக்களிடத்துப் பொறுமை கொள்வது என்பது பதப்பொருள்.

2. துணையெனநின் றெழுகியவர் திறமையுளோ
 ரிருபுக்க டோய்ந்து மத்தம்
இணையிலொளி யந்தரமுற் றும்பரப்பு
 மிந்திரனை, யெண்ணிக் காக்குங்
குணமுளனைத், தற்சூழ வலியிமையைத்துச்
 சிறந்தவனைக், கூர்ந்தி ரந்தார்;
பணையொலி, யச் சதக்கிருது வெற்றிக்கென்
 றவருட்டப் பரந்த தன்றே.

(இ-ள்.) துணையாக நின்றவரும், திறமை (வலிமை) வாய்ந்தவருமான ரிபுக்கள் (அல்லது சாயணர் மதப்படி மருத்துக்கள்) மதம் பொருந்தி, அந்தரிட்ச முழுவதும் தனது காந்தியைப் பரப்புபவனும், நற்குணமுள்ளவனும், வலிமை மிகுந்தவனுமான விந்திரனை (விருத்திரவதைஞ் செய்யும்படி) வேண்டினார்கள். (அன்பும் ஸத்தியமும் நிறைந்து) அவர்கள் வேண்டிய அவ்வொலியானது, சதக்கிருது பகைவரைக் கொல்வதற்கு வேண்டிய பலத்தை யளித்து வியாபித்தது.—(எ-று.) ரிபுக்கள் என்பதற்கு மருத்துக்கள் என்பது நிருக்தப்படி வந்த பொருளாம். உரு பாந்தி ஒளியோடு கூடியவர் மருத்துக்கள் என்பார் யாஸ்கர். இந்திர தேஜஸே துவாதச (12) ஆதித்தியர்களின் ஒளி விசேஷங்களாம் என்பது சுருதி.

3. அங்கிரசனுக்காகப் பசுக்குகையைத்
 திறந்தனையால்; அத்தி ரிப்பேர்
பொங்கிருடி யசுரர்வா யகப்படா
 தோடவெனப் புரிந்தாய் நூறு
மங்கறைும் வாயில்சளை; விமதனுக்கென்
 றன்னமொடு மருவுஞ் செல்வ
மிங்களித்து வெற்றிபெறப் பிறர்போற்றுங்
 குலிசநட மெடுத்தாய் போரின்.

(இ-ள்.) (இந்திரனே!) அங்கிரஸனுக்காக (பணிமுதலிய வசுரர்களால்) அடைக்கப்பட்ட பசுக்குகையை (நீர் நிறைந்த மேகத்தை என்றபடி) திறந்துவிட்டாய். அத்திரியென்னும் ரிஷி அசுரர்களது பீடையிலகப்பட்டுக் கொள்ளாதபடி நூறு மார்க்கங்களை யேற்படுத்தினாய். விமதனுக்கு அன்னமும் செல்வமுமளித்து, ஜயம் பெறும்படி பிறருந் துதிக்கும் வச்சிர நர்த்தனத்தை யவனது போரிற் செய்வித்தனை. (வச்சிரத்தால் அவனைக் காத்தனை.)—(எ-று.) அதனால் உன் மகிமை வர்ணிக்குந் தரத்ததன்று என்றபடி.) அங்கிரஸன் ஸப்தரிஷிகளில் ஒருவன். விமதன் ஓர் ரிஷி, இவன் புருமித்திரனது மகளைக் கல்யாணஞ் செய்து கொண்டவன். அதற்கு அசுவினிகள் உதவினார்கள் (மண். 1, சூக். 112, செய். 19.)

4. வெள்ளமதை யடைத்துவைத்த முகிலினையுந்
திறந்தனையால் விழைந்து தானு
வுள்ளமிகும் வசுவினையப் பருப்பதத்துக்
கைக்கொண்டாய்; ஓங்கும் முன்பின்,
எள்ளரிய விருத்திரனை, யிந்திரனே,
கொன்றிட்டா யென்ற போது
கொள்ளுமொளிச் சூரியனை யகிவாய்மீட்
டாகாயங் கொளுவினாயே.

(இ-ள்.) இந்திரனே! வெள்ளத்தை நிறைத்து வைத்திருந்த மேகங்களைத் திறந்துவிட்டாய். தானுவென்னு மசுரமாதா பெற்றதால் இம்சையைத் தருகின்ற செல்வத்தைப் பர்வதத்தினிடத்திலிருந்து கைக்கொண்டாய். உன் வலிமையினால் விருத்திரனைக் கொன்றாய். பிறகு அங்கியினாற் சூழப்பட்டிருந்த சூரியனை மீட்டும் விண்ணிடத்தில் ஒளியோடு நிறுவினாய்.—(எ-று). அகி, விருத்திரன், நீர் கொண்ட கருமேகம்.

5. அவிக்கான வன்னமதைத் தம்வாய்க்க
ணளித்தொழுகு மசுரர், மாயை
தவச்சார்ந்தோர் தமையுனது மகாமாயை
வலிகொண்டு தளரச் செய்தாய்;
புவிக்கான வீரவுளச் சேவகனே,
பிப்புருவின் புரத்தைப் பேர்த்தே
அவக்யாதி தாசர்களு மடைந்தழிய
விரிசுசுவா னனைக்காத் தாயே.

(இ-ள்.) (இந்திரனே !) ஹவியன்னத்தைத் தமது வாயிற் போட்டுக்கொள்ளும் மாயை மிகுந்த வசுரரை யுனது பெரிய மாயையால் (ஞானத்தால்) வலி கெடும்படி செய்தாய். யஜமானர் களைக்காக்கும் வீரத்தன்மை பொருந்திய மனத்தோடு கூடிய வனே ! நீ பிப்புருவின் கோட்டையை யழித்து, தாஸர்க ளவ மானத்தை யடையும்படி செய்து ரிஜிச்வானனைக் காப்பாற்றி னாய்.—(எ-று.) பிப்புரு ஓர் அசுரன். மழையைப் பெய்யவிடாத படி தடுக்கும் மேகங்களே அவனது கோட்டைகள் என்பார் மேனாட்டாசிரியர். விருத்திரன், அஹி, சுஷ்ணன், நமுசி, பிப்ரு, சம்பரன், உரணன் இவர்கள் அசுரர்கள். வஹட்சியை யுண்டுபண்ணுவோர், தேவர்களை யிம்சிக்கக் கருதுவோர். இவர் கள் விருத்திரனோடு சேர்த்து எண்ணப்படுபவர். விருத்திர னதியர் என்று மண். 1, சூக். 5, செய். 8 இல் கூறப்பட்டவர் கள் இவர்களே. இரிசிசுவானன் ரிஜிச்வான், ரிஜிச்வானன், ஒரு ரிஷி.

6. சுட்டுணனைக் கொல்லுகையிற் குற்சனையு
 மிரட்சித்தாய், தோய்ந்த வானி
லட்டியிலாப் படைக்கிரையாச் சம்பரனை
 யதிதிக்கு வற்கா மாய்த்தாய்,
மட்டடையா வலிபெருகு மார்ப்புதனைக்
 காலடியின் மதித்துத் தேய்த்தாய்,
ஒட்டலராந் தாசர்களைக் கொல்லுதற்கே
 பண்டிருந்திங் குதித்தாய் மன்னே.

(இ-ள்.) (இந்திரனே !) சுஷ்ணனைக் கொல்லும் செய்கை யினால் குத்ஸரிஷியைக்காத்தனை. அதிதிக்குவனுக்காகச் சம் பராசுரனைக் கொன்றனை. மிக்க வலிமை பொருந்தி யோங்கிய அர்ப்புதனைக் காலால் மிதித்தழித்தனை. எப்பொழுதும் தஸ்யுக் களைக் கொல்லுவதற்காகவே நீ யுதிக்கிறாய்.—(எ-று.) குத்ஸன் மண். 1, சூக். 4, 95, 96, 106 முதலிய சூக்தங்களைக் கண்ட ரிஷி. அதிதிக்குவன், திவோதாஸன் என்னும் வள்ளலின் மற் றொரு பெயர், சுஷ்ணன். சுட்டுணன். சுட்டுணனும், சம்பர னும் அசுரர்கள். மேல் 5-ம் செய்யுளின் உரையைப் பார்க்க. தாசர், தஸ்யுக்கள், கள்வர்கள். இவர்கள் பூர்வ குடிகளாகிய காட்டு மனிதர்கள் என்பார் மேனாட்டாசிரியர்.

7. உன்னுடைய பலமுழுது முனக்குள்ளே
 துதைந்துளதால், உன்ற னுள்ளந்
துன்னுறநற் சோமமதைப் பருகுவதின்
 மகிழ்வுறுமாற், சுகத்தே யுன்கை

## மண்டலம் 1. சூக்தம் 51.

மன்னுறுமுன் வச்சிரமெங் களுக்கெல்லாந்
தெரிந்ததே, மதியார் தங்கள்
கொன்னுறுமாண் மைகளையெலாம் அதுகொண்டு
தண்டித்துக் குறைப்பாய் மன்னே.

(இ-ள்.) (இந்திரனே!) உன் பலமுழுதும் உனக்குள்ளே யே நெருங்கியுள்ளது. உன் மனம் சோமபானஞ் செய்வதில் மகிழ்ச்சி யடையும். உன் கையி லுள்ள வச்சிராயுதத்தைப் பற்றி எங்களுக்கு முன்பே தெரியும். அத னுதவியினுல் சத் துருக்களின் ஆண்மைகளை யெல்லாம் கெடுப்பாயாக.—(எ-று.)

8. ஆரியரை யவர்க்கிடுக்கண் விளைக்கின்ற
தாசர்தமை யறிவாய் நன்கே;
சீரியரல் லாதவரை நணியொறுத்துத்
தருப்பைவிரி சிறப்பி னேன்மாட்
டேருடனே வசப்படுத்த; துடுக்குளரைக்
கண்டித்தே யெழிலார் யாகம்
பாரியலத் தூண்டுக; எக் கியத்துன்சீர்
யாவையுமே பகர்வேன் வேட்டே.

(இ-ள்.) இந்திரனே! அநுட்டாதாக்களாகிய ஆரியரை யும், அவர்களுக்குத் துன்பத்தைத் தரும் தஸ்யுக்களையும் உனக்கு நன்றாகத் தெரியும். கர்ம விரோதிகளுக்கு இம்சையை வருவித்துத் தருப்பையை விரிக்கும் யஜமானனது வசத்தே அவர்களை ஒப்புவிப்பாயாக. துடுக்குள்ள துஷ்டர்களைக் கண் டித்து உலகத்தில் யாக காரியம் நடக்கும்படி தூண்டுவாயாக. ஸ்தோதாவாகிய நான் யக்ஞத்தினிடத்து உன் சீரையெல்லாம் விரும்பிக் கூறுவேன்.—(எ-று.)

9. விரதமதை யநுட்டிப்போர் தமைக்காக்க
விரதமெலாம் விடுத்தோர் தம்மைச்
சாதமுறப் பிடித்துத் துதிப்பவராற்
றுதியிலரைச் சயிப்பிப் பானுல்;
இரதமுற வோங்கிடினு மின்னுநனி
யோங்குபவ னெட்டி வானிற்
றரிதமுறு மிந்திரனைத் துதிவமிரன்
மகக்குவையைத் தோய்ந்து கொண்டான்.

(இ-ள்.) இந்திரன் விரதானுஷ்டான முள்ளவரைக் காக்கு மாறு விரதமில்லாதவர்களைப் பிடிப்பான் (அல்லது வசப்படுத்து வான்.) ஸ்தோதாக்களைக்கொண்டு ஸ்தோத்திரம் செய்யாதவர் களை நாசப்படுத்துவான். ஏற்கெனவே வளர்ந்தோங்கித் தோன்

றினும் பின்னு மதிகமாக வளர்ந்தோங்கி ஸ்வர்க்கத்தை யடை யவிரையு மிந்திரனைத் துதிக்கும் வம்ரன் என்னும் ரிஷி அவ் விந் திரனால் தடை நீக்கப்பட்டவனாய் யாக ஸம்பாரமாகிய குவியலை யெடுத்துக்கொண்டு போனான்.—(எ-று.) வமிரன் வம்ரன் ஒரு ரிஷி, விகநஸின் புத்திரன். இவன் பூமியி லுள்ள புற்றின் ஈரத்தை விசேஷமாகக் குடிப்பவன் என்று சாயணர் கூறுவர். மண். 1 சூக். 112 செய். 15-ல் இவன் விபிபானன் அல்லது மிக வும் குடிப்பவ னென்று சொல்லப்படுகிறது. ஜகா(Gh)ன என் பதற்கு அழித்தா னென்றும் பொருளுண்டு. அதனால் வம் ரன் மகத்துக்கான அன்னக் குவியலை இந்திர னில்லாதபோது அழித்தா னென மொழி பெயர்ப்பார் மேனாட்டாசிரியர்.

10. உசனனெனு மிருடிவலி கொண்டுனக்கா
வாக்கியவவ் வுரனுங் கீர்த்தி
வசனமுறு வலியின்வான் புவியிரண்டும்
பேதித்து வயக்கிற் றைய;
அசனநிறை யவிநேடி மனவேக
வாதனுடை யரிக ளுன்னை,
விசனமற வருண்மனத்தோய், வலியென்று
நிறைந்தொழுகி மேவச் சேர்க்கும்.

(இ-ள்.) இந்திரனே! உசனாகாவ்ய னென்னும் ரிஷி தனது பலத்தினால் உனது பலத்தை யுருப்படுத்தியபோது, அவ் வலிமையும் கீர்த்தி வாய்ந்த தியாவாப் பிருதுவிகளை (வானம் பூமியை) இரண்டாகப் பிரித்து நிறுத்திற்று. யக்ஞத் தில் நிறைந்துள்ள அவியைத் தேடிவரும்படி பரிபூரண வலி மைபொருந்திய உன்னை மனோவேகத்தோடு கூடிய வாதனு டைய (வாயுவினுடைய) குதிரைகள் யாகத்தலத்துக்குச் சுமந் துகொண்டுவரும்.—(எ-று.) உசனன், கவியின் மகன், ஓர் ரிஷி; இந்திரனுக்குப் பிரியமானவன். இந்திரனுக்கு வச்சிராயு தத்தை யுருப்படுத்திக் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறான். மண். 1 சூக். 121 செய். 12 பார்க்க. இவ் வச்சி ராயுதத்தையே துவஷ்டா செய்து கொடுத்தா னென்றும் சொல்லப்படுகிறது. 'யஸ்ய சுஷ்மாத் ரோதஸீ அப்யஸேதாம்' என்பது தைத்தி ரீய ஸம்ஹிதை 1-7-13. எவனது (இந்திரனது) பலத்தினால் பூமி வான மிரண்டும் மாறிமாறித் திரிகின்றனவோ வென்பது பொருள்.

11. காவியனு முயனனது துதியதனின்
மிகக் களித்த காலை வேந்தன்
ருவிமிக வக்கிரித்துச் செல்பரிகள்
பூட்டியதேர் சார்ந்து நிற்பான்;
மாவலியவ் வுக்கிரனு நெறியொழுகு
மேகமதின் மலிமீ யோட்டத்
தாவமதை யவிழ்த்துச்சுட் டுணன்புரத்தை,
துகளுறவே யழித்தான் மன்னே.

(இ-ள்.) கவியின் மகனாகிய உசனன் துதித்தபோது சந்தோஷப்பட்டு இந்திரன் வக்ரகதியோடு கூடிய குதிரைகளைப் பூட்டிய தேரிலேறிக்கொள்வான். மிகுந்த வலியோடு கூடி உக்கிரம் வய்ந்தவவன் வழியில் செல்லும் மேகத்தி லிருந்து பிரவகித்துச் செல்லும் (மழை) நீரை யோடவிட்ட சுஷ்ணனது பெரிய கோட்டைகளைப் பலவிதமாக அழித்தான்.—(எ-று.) சுட்டுணன், சுஷ்ணன் எல்லாவற்றையும் வற்றடிப்பவன். ஆவம், ஆபம், நீர்.

12. துளித்தொழுகும் சோமமதைக் குடிக்கவெனத்
தேரேறித் தோய்வாய் நீயே;
களிப்பினொடியா மபிடவஞ்செய் சோமமதிற்
கழிமகிழ்வு காண்பாய் போலத்
துளிக்குமது சார்யாதன் சார்த்துவதின்
மதமதனைத் தோயு மப்போ
தழிக்கலுருப் புகழ்சருவி விண்ணுலகத்
துயர்வடைவா னணைகின் றாயே.

(இ-ள்.) இவ்விடத்துக் கௌஷீதகியில் ஒரு இதிஹாஸம் சொல்லப்படுகிறது. [சார்யாதன் என்னும் ராஜரிஷியின் யக்ஞத்தில்பிருகுகோத்திரத்தில்பிறந்தசியவன ரென்னும்ரிஷி அசுவினிகளைக் கூட்டிக்கொண்டுவந்து ஸோமபானஞ் செய்வித்தார். இந்திரன் அதைக் கண்டு கோபங்கொண்டான். உடனே சார்யாதன் அவ் விந்திரனை யுத்தேசித்துச் சோமம் பிழிந்துகொடுத்தான். என்பது.] (இந்திரனே!) நீ சோமங் குடிப்பதற்காகவே தேரேறி வருகிறாய். (வேறொன்றையும் உத்தேசித்து நீ பிரவர்த்திப்ப தில்லை யென்றபடி.) எங்களுடைய ஸோமாபிஷவத்தில் (ஸோமம் பிழியும் கர்மத்தில்) திருப்தியடைவதுபோலச் சார்யாதன் செய்யும் ஸோம யாகத்திலும் திருப்தியடையும்போது

யாக கர்த்தாவுக்கு விண்ணுலகத்திலும் நிலையான கீர்த்தியை யுண்டுபண்ணுகிறாய்.—(எ-று.) சார்யாதன் வைவஸ்வதமநுவின் புத்திரனாகிய சர்யாதியினுடைய மகன். சர்யாதியெனினும் சர்யாதனெனினும் ஒன்றே. மண். 1 சூக். 112 செய். 17 யும் பார்க்க.

13. சொற்சந்த மிகுந்தவன் கட் சீவானன்
சோமமதைத் தோய்ப்போ னுக்கென்
றற்சந்தக் கூந்தலணி பேதைவிரு
சயை தன்னை யளித்தாய் வேந்தே;
மற்சந்தக் கருமத்தோய் வ்ருஷணச்வன்
மகள்மேனை மதித்தா னாய்நீ;
சொற்சந்தம் படச்சவனத் தென்றுமிவ்வுன்
செயலெல்லாந் துதிக்கற் பாற்றே.

(இ-ள்.) (இவ்விடத்துப் பின் வருவது சொல்லப்படுகிறது.) (அங்க ராஜன் ஒருநாள் தன் ஸ்திரீகளோடு கங்கையில் ஜலக்கிரீடை செய்தான். அச் சமயத்தில் தீர்க்கதமனென்னும் பேருள்ள ரிஷி தன் மனைவியினாலும் பிள்ளை வேலைக்காரர்களாலும் (துர்பலத்தினால் இவனா லொன்றும் செய்ய முடியாதென்று) துவேஷத்தினால் கங்கையில் தள்ளப்பட்டான். அந்த ரிஷி ஒரு ஓடத்தி னுதவியால் அங்க ராஜன் கிரீடித்துக்கொண்டிருந்த விடத்துக்கு வந்து சேர்ந்தான். அந்த ராஜனும் ஸர்வக்ஞனான அந்த ரிஷியை யெடுத்து, 'பகவனே! எங்களுக்குப் பிள்ளையில்லை. இவள் பட்டமகிஷி. அவளுக்கு ஒரு குழந்தை பிறக்கும்படி செய்க.' என்று வேண்டிக்கொண்டான். அவனும் அப்படியே யாகட்டுமென்றான். அம் மகிஷியும் ராஜாவைப் பார்த்து அப்படியே யென்று சொல்லி, 'இவன் வயது முதிர்ந்த கிழவன், ஜுகுப்ஸிதன் (நிந்தைக்குள்ளானவன்) எனக்கு யோக்கியனல்லன்' என்று எண்ணித் தன் தாசியாகிய உசித் என்பவளை அவனுக் களித்தாள். அவளும் ஸர்வக்ஞனான அவ் விருடியின் மந்திர பலத்தினால் பரிசுத்தமாக்கப்பட்டு ரிஷிபத்தினி யானாள். அவளிடத்தில் பிறந்தவன்றான் கட்சீவானென்னும் ரிஷி. அவனே ராஜபுத்திரனானான். அவன் அனேகவிதமாய் ராஜஸூயம் முதலிய யாகங்களைச் செய்து இந்திரனை ஸந்தோஷப்படுத்தினான். அவ் விந்திரனும் இக் கட்சீவானனுக்கு விருசயை (Vrichaya) என்னுந் தருணியை மனைவியாகத் தந்தான்.] இந்திரனே! அழகிய ஸ்தோத்திரங்களால் உன்னைத் துதிக்கும் கட்சீவானனது ஸோமபான யாகத்தே

திருப்தியடைந்து அவனுக்கு விருசயை யென்னும் பெண்ணைக் கொடுத்தாய். சோபன கர்மத்தோடு கூடியவனே! விருஷணச்வனது புத்திரியாகிய மேனை என்னும் கன்னிகையாக நீயே யானாய். உனது ஸவனங்களி லெல்லாம் உன்னுடைய இந்தச் செய்கைகளைத் துதிக்க வேண்டும்.—(எ-று.) சாட்யாயனியில் இந்திரனை 'நீ விருஷணச்வனுடைய (மகள்) மேனையானாய்' என்று கூறியிருக்கிறது. கட்சீவான் என்ற பதத்துக்கு குதிரை கட்டும் கயிற்றோடுகூடியவன் என்பது பொருள் என்பார் யாஸ்கர். கட்சீவான் என்னும் பேரைப்பற்றி மண். 1 சூக். 18 செய். 1 உரையில் நோக்குக.

(வேறு.)

14. தனமிலான் குணத்து மேலோன் றன்னுறு காப்பாம்வாயி
லினமுறு தூணேபோல விந்திரன் பச்சிரர்க
ளினமெலாந்துதிக்கப்பெற்றே யெண்ணும்பொன் பசுத்தேர்மாவு
மனமிகப்படைத்தவேந்தன்மற்றையோர்க்கவனே ஈவான்.

(இ-ள்.) பஜ்ரகோத்திரத்தவர்களாகிய அங்கிரஸர்களாற் றுதிக்கப்பெற்ற இந்திரன், வாசற்படியின் தூணைப்போலத், தனமில்லாதவனாகிய குணோத்தம யாககர்த்தாவுக்குத் துணையாக நிற்பான். தனத்தைத் தருபவனாகிய வவ் விந்திரனே, குதிரைதேர், பசு முதலிய மற்றதனங்களை யிச்சித்தடைந்து மற்றவர்களுக்கும் யதேஷ்டமாகக் கொடுப்பான்.—(எ-று.) பஜ்ரகோத்திரம் புராதனமான கோத்திரம்; அங்கிரஸ் கோத்திரமும் அதுவும் ஒன்றாகக் கருதப்படும். தூணேபோலத் தன்னுறு காப்பாம் என முடிக்க.

15. இத்துதி சுயமாச்சோதி தோய்ந்தவிந்திர வொன்னாரை
சத்தியமாக வாட்டும் பலத்தினைச் சமத்தினேய்ந்த [ச்
சுத்த வீரப்படைஞர் தொக்கவாண்டகை யுனக்கென்
றுரைத்ததுன் னகத்தியாங்களொண்மதிச்சுதரின் வைக.

(இ-ள்.) சுயஞ்சோதியோடுகூடிய விந்திரனே! பகைவரை நிச்சயமாக விம்சிக்கும் பலத்தை யுத்தகளத்தி லடைந்த சுத்த வீரர்களோடுகூடிய காளையாகிய உன்பொருட்டு இத்துதி கூறப்பட்டது. உன்னா லளிக்கப்பட்ட வீட்டில் யாங்கள் வித்வான்களாகிய புத்திரர்களோடு தங்கி யிருக்கட்டும்.—(எ-று.) மூலத்தில் ஸூரிகளோடு என்றுள்ளது. அதற்கு ஞானவான்களான ரித்விக்குக்களோடு யாங்கள் தங்கியிருக்கட்டும் என்றும் பொருள் கொள்ளலாம்.

வருக்கம் 11.

அஷ்டகம் 1. அத்தியாயம் 4.

## 52. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 2.

15 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி : ஸை ஸவ்யன். வடமொழிச்சந்தம் ; ஜகதி, 13-15 த்ருஷ்டுப். தேவதை : இந்திரன்.*

1. *போற்றுங்க ளத்தகரைத் துறக்கவொளி*
   *யறிபவனைப் பொருளீ வோனை*
   *நூற்றுவர்கள் துதியாள ரகலாது*
   *பின்றொடர்ந்து துதியாற் போற்ற*
   *வேற்றவனை ; வேகமுறு குதிரையென*
   *வெம்மையிவண் வேண்டிக் காப்பா*
   *னேற்றுமெனத் தேராகு மிந்திரற்காச்*
   *சூழ்துதிக ளவனத் தின்றே.*

(இ-ள்.) ஸ்வர்க்க வொளியாகிய சூரியனை யறிபவனும் பொருளைத் தருபவனும் நூறுபேர் ஸ்தோத்திரம் செய்பவர்கள் எப்பொழுதும் போற்றிப் பின்றொடருபவனுமான அம் மேஷத்தை (அத்வர்யூக்களே !) நன்றாக வணங்குவீர்களாக. (நூறு குதிரைகளோடு தோன்றும்) ரதமாகிய அவ்விந்திரன் வேகமாக வருங் குதிரையைப்போல வந்து என்னைக் காக்கும்படி ஹவனத்தில் (யாகத்தில்) அவனைச் சூழுந் துதிகளை யான் செய்வேன்.—(எ-று.) தகர்—மேஷம், ஆட்டுக்கடா. இந்திரனைத் தகரென்றது மண். 1, சூக்தம் 51, செய். 1 உரையிற் பார்க்க. ஈண்டு பின்றொடரும் நூற்றுவரையும் நூறு குதிரைகளாகவும் இந்திரனைத் தேராகவும் உருவகப்படுத்தினர். அவனம், ஹவனம் என்பதின் சிதைவு. யாகமென்பது பொருள். அத்வர்யு ஹோதா உத்காதா இவர்களைப்பற்றி மண். 1, சூக். 7, செய். 1 உரையிற் பார்க்க. இத்துதி ஸாமவேதத்திலும் வருகிறது.

2. *சோமபா னஞ்செய்து மதமேறி*
   *யிந்திரனுந் தோய மாற்றில்*
   *வாமமுற வோடாது தகைத்தவனும்*
   *விருத்திரனை வாட்டி நீரை*
   *யேமமுறக் கீழ்வீழ்த்தி யந்நீர்க்கண்*
   *மலையெனவே யியங்கா தோங்கிச்*
   *சேமமுற வாயிரமாந் துணையளிப்போன்*
   *வலிபெருகிச் சிறந்தா னன்றே.*

(இ-ள்.) ஆயிரக்கணக்கான உதவிகளைப் புரியும் இந்திரன், சோமங் குடித்துச் சந்தோஷமடைந்து, ஆற்றில் நீரோடாத படி தடுத்த விருத்திரனைக் கொன்று, நீரைக் கீழ்நோக்கிவிழும் படி செய்து, அந் நீரின் மத்தியில் மலைபோல் அசையாமல் நின்று பலத்தில் சிறந்தோங்கினான்.—(எ-று.)

3. தடைசெய்வோர் தமைத்தடுப்போ னனந்த
முறைமூலஞ் சார்ந்த மத்தந்
தடையின்றி யோங்குபவன் வான்மடிமேல்
வியாபிக்குந் தன்மை வாய்ந்தோன்
கடையெய்தாத் தனத்தோனு மிந்திரனை
ஞானியரிற் கன்ம வீறு
மிடைபுந்தி கொண்டழைப்பே னனத்தையவன்
பூரணமாய் விளைவிப் பானே.

(இ-ள்.) தடைசெய்து நிற்குஞ் சத்துருக்களைத் தடுப்பவனும், ஆநந்தத்துக்குக் காரணனும், மதம் வளர்ந்தவனும், மேகத்தின் மடியின்மேல் பரந்து செல்பவனும், குறையாத செல்வத்தோனுமாகிய இந்திரனை மேதாவிகளாகிய ரித்விக்குக் களோடு கூடிக் கன்மத்துக்கு யோக்கியமான புத்தியோடு கூவுவேன். (ஏனெனில்) அவன் அன்னத்தை (எங்களுக்குப்) பூரணமாக நிறையச் செய்வான்.—(எ-று.) வான்மடி என்றது மேகத்தில் நிறைந்த நீரை. ஞானியரின், ஞானியரோடு.

4. சமுத்திரத்தை யாக்குநதிக் கூட்டந்தந்
நீர்கொண்டச் சமுத்திரத்தை
யமைத்தலெனக் குசையிடங்கொள் சோமமுமவ்
வாகாயத் தமர்ந்த வேந்தை
யிமைப்பொழுதி னிரப்பும்; அகி வதைப்போன்மாட்
டணியங்க மியைந்தோர் யாருங்
குமைத்தலுறு நடையாளர் பகைவாட்டு
முதவியினர் கூடி நின்றார்.

(இ-ள்.) ஸமுத்திரத்தை நதிக்கூட்டங்கள் தமது நீரைச் சுமந்துகொண்டோடி நிரப்புவதுபோலத், தருப்பையி லொழுகும் சோமத்துளிகள் ஆகாயத்தி லுள்ள இந்திரனைப் பூரிப்பிக்கும். விருத்திர வதஞ் செய்பு மவன் பக்கத்தில் அழகான அவயவத்தோடு கூடியவரும், ஒருவராலும் தடுக்க முடியாத நடையுள்ளவர்களும், பகைவரை வாட்டுபவருமான உதவியாளர்கள் (மருந்துக்கள்) சேர்ந்து நின்றார்கள்.—(எ-று.) வேந்து, இந்திரன். உதவியினர் ஈண்டு மருத்துக்கள், ஊதய: என்பது

வடமொழி. சமுத்திரம் நதிகளுக்கு நாயகனும். 'ஸமுத்தி ராயு வயுநாய, ஸிந்தூநாம் பதயேநம:' என்பார் பிறரும்.

5. மழையுதவா விருத்திரனை மதமணைந்து
போராடி மாய்த்த வேந்தை
விழையுதவி புரிவோர்கள் கீழ் நோக்கின்
வேகவதி விழையச் சேர்ந்தார்
கழுமலுறு சோமத்தாற் கழிதுணிவு
கொண்டுவலன் கழியப் பேதித்
தெழுகுலிச விந்திரனுந் திரிதனெழுந்
ததுபோல வெழுந்த போதே.

(இ-ள்.) வச்சிராயுதத்தைக் கையேந்திய இந்திரன் சோம பானத்தால் துணிவுகொண்டு வல னென்னு மசுரனை வதைத் துத், திரிதன் அநாயாஸமாக வெழுந்தது போல வெழுந்தவப் பொழுது, மழை பெய்யாது தடுத்து நின்ற விருத்திரனை மதத்தை யடைந்து கொன்ற வவ் விந்திரனுக்குப் பக்கத் தில் உதவியாளர்களாகிய (மருத்துக்கள்) கீழ் நோக்கிச் செல் லும் நீரோட்டத்தைப்போல வேகமா யோடி அவனுக்குத் துணையாக நின்றார்கள்.—(எ-று.) உதவியாளர்கள் மருத்துக்க ளென்பது மேல் நாலாம் செய்யுளினுரையிற் சொல்லப்பட் டது. வலன் ஓர் அசுரன்; மண். 1, சூக். 11, செய். 5 நோக் குக; மேகங்களாகிய பசுக்களை ஒரு குகையிலடைத்துவைத்து வறட்சியை யுண்டுபண்ணும் அசுரனிவன். இவனைக் கொன்று இந்திரன் வலாரி யென்னும் பெயர் பெற்றான். திரிதன், த்ரி தன், ஒரு இருடி. நீர் வேட்கையால் ஒரு கூபத்தி லிறங்கித் தண்ணீர் குடிக்கும்போது அசுரர்கள் இவனிறங்கியிருந்த கூபத்தைக் கல்லால் மூடிவிட அவன் அதனை லட்சியம் செய் யாமல் அநாயாசமாக மேலே வந்தானென்பது இதிஹாஸம். மேல் மண். 1, சூக். 105 நோக்குக. விருத்திரன், அகி இரண் டும் ஒரு பொருளன. மண். 1, சூக். 33 நோக்குக. மேக நீரைப் பெய்யாமற் றடுத்துவைப்பவன் விருத்திர னென்னு மசுரன். கழுமலுறல், நிறைதல்.

வருக்கம் 12.

6. மாற்றலனை வென்றவொளி யுனைச்சூழ்ந்த
துன்வலியு மாக மோங்கிற்
றேற்றமழை சுருட்டியவ னந்தரத்தின்
மேலிடத்தே யெய்ந்து சாய்ந்தான்,

## மண்டலம் 1. சூக்தம் 52.

மாற்றரிய வலியுடையோன் விருத்திரன்றன்
வன்கதுப்பில் வச்சிரத்தை
யேற்றெறிந்திங் கிடிமுழங்கி, இந்திரனே,
யவன்வலிநீ யிறுத்த வன்றே.

(இ-ள்.) இந்திரனே தடுக்க முடியாத வலிமையுள்ள விருத்திராசுரனது கன்னத்தின்மேல் வச்சிராயுதத்தை யெறிந்து பேரொலியோடு நீ யவ் விருத்திரனது வலிமையைக் கெடுத்த போது பகைவனை ஜயித்த அந்தப் பிரகாசமானது உன்னைச் சூழ்ந்து நின்றது; உனது பலமும் வானிற் பரந்துநின்றது. மழை நிறைந்த மேகத்தைப் பெய்யாது தடுத்துநின்ற அவ் விருத்திரனும் அந்தரிட்ச உலகத்தின்மேல் சாய்ந்து விழுந்தான்.—(எ-று.) சாய்ந்தானென்பதைச் சாய்ந்தோனென மாற்றிச் சாய்ந்தவனும், வலியுடையோனுமான விருத்திரனது கதுப்பிலடித்து அவன் வலியை நீ முடித்தபோது ஒளி யுன்னைச் சூழ்ந்தது, உன் வலி மாக மோங்கிற்று எனக் கொளலும் ஒன்று.

7. இந்திரனே யுன்மகிமை யோங்குவிக்கும்
பிராமணங்கள் இழியு நீர்க்கால்
சுந்தரமாக் குளநிரப்புங் கணக்கெனவே
யுன்னிடத்துத் தோயும்; இன்னும்
அந்தரத்தோர் தங்கொல்லன் றுவட்டாவு
அதிகவலி யார்ந்த சம்ப
நந்துமுன தொண்வலிமைக் கேற்றபடி
கூராக்கி நாட்டி னானே.

(இ-ள்.) இந்திரனே! உனது பெருமையை யுயர்த்தும் பிராஹ்மணங்கள் (ஸ்தோத்திர சஸ்திர ரூபமாயுள்ள மந்திரங்கள்), நீர்க்கால்வாய்கள் குளத்தை நிரப்புவதுபோல, உன்னை யடைந்து உன் பெருமையை நிறைக்கும். தேவர்களது கொல்லனாகிய துவட்டாவும் உனது வலிமைக்குத் தக்கபடி வச்சிராயுதத்தைக் கூராக்கிக் கொடுத்தான்.—(எ-று.) துவட்டா, தேவக் கொல்லன். மண். 1 சூக். 13 செய். 10 நோக்குக. சம்பம், குலிசம், வச்சிராயுதம். அந்தரத்தோர்=தேவர்கள்.

8. படைத்தொளிருங் கிருதுவெழி லிந்திரனே
யரிகளுடன் பண்பார் நீரம்
அடைத்தொழுகும் விருத்திரனை யதஞ்செய்து
மனிதருக்கென் றவையோடச்செய்

தெடுத்தனையாற் கரங்களினி லயக்குலிசம்;
அதுவன்றி யாரும் பார்க்க
விடுத்தனையாற் சூரியனை வானிடத்தே
யொளியோடு மிளிர்வா னின்றே.

(இ-ள்.) சம்பாதித்த கிருதுவோடு (ஞானத்தோடு அல்லது கர்மத்தோடு) கூடிய விந்திரனே! உன்னுடைய குதிரைகளோடு ஜலங்களை யடைத்துவைத்த விருத்திரனை யதஞ்செய்து மனிதருக் குபயோகமாகும்படி அச்சலங்களை யோடவிட்டு இரும்பினாலான வச்சிராயுதத்தைக் கையி லெடுத்தாய். அதுவன்றி வானிடத்தில் எல்லாருங் காணும்படி சூரியனைப் பிரகாசத்தோடு நிறுத்தினாய்.—(எ-று.) கிருது, கர்மம், ஞானம். அரி, குதிரை. நீரம் வடமொழி, நீரென்பதுபொருள்.

9. பெருமையுளோர் சுயஞ்சோதிப் பலமமைந்த
வுக்தமதைப் பிறங்கு விண்வா
யருமைபெற வேறுவதைப் பயமீர்க்க
வெடுத்தனரா லார்ந்த மாந்தர்க்
குரிமைபெற நலமீயும் போரதனி
லிந்திரனோ டுற்று மிக்குத்
தருமுதவி மருதர் நரர்த் துதிபெறுவோர்
மதத்தொடுவான் சார்ந்த போதே.

(இ-ள்.) மனிதர்களுக்கு நன்மையைத் தரும் ஸங்கிராமத்தில் (யுத்தத்தில்) இந்திரனுக்குத் துணையாகவென்று, உதவியளிப்பவரும் மனிதராற் போற்றப்படுபவருமான மருத்துக்கள் மதத்தை யடைந்தவர்களாய் விண்ணிடத்திற் கூடி நின்றபொழுது, பெருமை வாய்ந்த ஸ்தோதாக்களாகிய யஜமானர்கள் விருத்திரனிடத்துண்டான பயமானது தங்களை வலித்திழுக்க, (ஸந்தோஷத்தைத்தரும்) ஜோதியோடுகூடியதும், (சத்துருக்களைக்கொல்லும்) பலத்தைப்பெற்றதும், விண்ணை நோக்கிச் செல்வதுமான உக்தத்தை யவனுக்காகச் செய்தார்கள்.—(எ-று.) 'அவ்வுக்தத்தின் றுதியைக் கேட்டு இந்திரன் விருத்திரனைக் கொல்ல வெழட்டும்' எனக் கூட்டுக வென்பார் சாயணர்.

10. பலமாரும் வானுலகு மவன்முழக்கத்
தலமந்து பயந்தோ டிற்றால்;
நலமாருஞ் சோமமதை நனிகுடித்த
மத்தமதி னுடி, அப்போ(து),

## மண்டலம் 1. சூக்தம் 52.

உலமாருந் தோள்வேந்தே, உன்குலிசம்
புவிவானி னுடற்றுந் துன்பப்
புலனுறும் விருத்திரனைச் சிரம்பிளக்க
மிகுவலியாற் புடைத்த தன்றே.

(இ-ள்.) வலிமை பொருந்திய வேந்தனே (இந்திரனே)! அவ் விருத்திரனது முழக்கத்தைக் கேட்டுப் பலம் பொருந்திய வானுலகமும் பயந்து வேறாக நின்றது. நலம் பொருந்திய ஸோமத்தைக் குடித்து நீ மதங்கொண்டிருந்தபோது வச்சிராயுதம் பூமி வான மென்னு மிரண்டிடத்திலும் துன்பத்தை மூட்டுகின்ற விருத்திரனைத் தலை பிளக்கும்படி முழு வலியோடும் அடித்தது.—(எ-று.)

வருக்கம் 13.

11. இந்திரனே இப்புவிதா னிற்றைவிடப்
பதின்மடங்கு குணித மேய்ந்து
நந்துறப்பன் னுடோறு மனிதரெலாந்
தவப்பெருகி நடப்பாரேனு
மெந்தவகை யினுமகவா னுன்வெற்றிப்
பிரசித்த மெய்தி யோங்கும்;
அந்தரமே யெனப்பரந்துன் மொய்ம்புமருஞ்
செயலோங்கி யணைந்த தன்றே.

(இ-ள்.) இந்திரனே! மகவானே! இந்தப் பூமி இப்பொழுதிருப்பதைவிடப் பத்துமடங்கு விசாலமாக நாளுக்கு நாள் அங்கே மனிதரது தொகை விருத்தியாயினும் உனது பலமானது எவ்வாற்றானும் பெயர்பெற்றோங்கும். உனது பலத்தினுலான (விருத்திரவதமாகிய) கருமங்கள் ஆகாயமென்னும்படி விஸ்தாரமாக வோங்கிப் பரந்தன.—(எ-று.)

12. செருக்கார்ந்த மனத்தோயி வ்யோமவுல
கத்தின்மேற் சேர்ந்து மெத்தப்
பெருக்கார்ந்த வலியுளநீ யெமைக்காப்பான்
பூவுலகம் பெருக விட்டாய்;
உருக்கார்ந்த வுன்வலியி னளவாக
வப்பூமி யுறுத்திப் பின்னர்
நெருக்கார்ந்த நீரோட்ட வந்தரம்வா
னிவையேற்று நிமிர்ந்தா யன்றே.

(இ-ள்.) (பகைவரை யடக்கும்) கர்வம் வாய்ந்த மனத்தோடுகூடிய விந்திரனே யாங்கள் காணும் இந்த அந்தரிட்சவுலகத்தின்மேற் பொருந்தி மிக வலிமையுள்ள நீ எங்களைக் காக்கும் வண்ணம் பூவுலகத்தைச் சிருஷ்டித்தாய். மேலும் உனது வலிமைக்கு ஒரு அளவாக விருக்கும்படி அப் பூமியைக் கடினமாகச்செய்து பின் நீர் நிறைந்த அந்தரத்தையும், விண்ணையும் கைக்கொண்டு மேலேறினாய்.—(எ-று.) உருக்கார்ந்த என்னுஞ் சொல் எதுகை நோக்கி வந்தது.

(வேறு.)

13. புவிக்கெதிர் நீ; உயர்ந்து புகழுற வீரர் சார்ந்த
புவிக்கெஜமான னீயே; புகலுமுன் மகிமைதன்னா
லவிக்கரு மந்தரத்தை யார்த்தினாய்; உண்மையாகக்
குவிக்கினுன் னெதிரா யாருங் கூறுதற்கில்லைமாதோ.

(இ-ள்.) (இந்திரனே!) பூமிக் கெதிராளவாக நீ நிற்கிறாய். கீர்த்தி வாய்ந்த வலிமையோடுகூடிய வீரர்கள் நெருங்கியுள்ள புவலோகத்துக்குத் தலைவனும் நீயே. உன் மகிமையினால் (பூமிக்கும் வானத்துக்கும் மத்தியி லுள்ள) அந்தரம் முழுவதையும் நிறைத்தனை. உனக்குச் சமானமாகக் கூறத் தகுந்தவர் வேறு யாருமில்லை; இது சத்தியம்.—(எ-று.) புவலோகம்: ஈண்டு ஸ்வர்க்கலோகம்.

(வேறு.)

14. அவன் விரிவைப் புவிவான மடைந்ததில்லை;
யவன்றேசி னுரு மெல்லைத்
திவமுறுநற் சலப்பெருக்குந் தோய்ந்ததில்லை;
சோமமதைச் சிறக்க வார்ந்து
நவவலியின் மதர்த்துமழை தடுப்பவனை
நலிக்குங்கா னுடி யன்னான்
தவவலியை யார்படைத்தார்? பிறரலர்; நீ
யேயகிலந் தகைசெய் தாயே.

(இ-ள்.) அவனது (இந்திரனது) வியாபனத்தைப் பூமி வானங்கள் அடைந்ததில்லை. அந்தரிட்ச வுலகத்து ஓடும் ஸிந்துக்கள் (மேக நீர்கள்) அவனுடைய தேஜஸ் இருக்குமிடத்தை யடைந்ததில்லை. ஸோமத்தைக் குடித்துப் புதிய பலத்தை யடைந்து மதங்கொண்டு மேகத்தைத் தடுக்கும்

விருத்திரனை யவன் கொல்லும்போது, அவனுடைய பலத்தை யொத்த பலத்தை யார் பெற்றூர்கள்? (ஒருவரும் பெறவில்லை யென்றபடி) நீயே எல்லா வுலகத்திலு முள்ள பிராணிக் கூட்டங்களையும் ஒழுங்கு படுத்திவைத்தாய், வேறொருவருமில்லை— (எ-று.) படர்க்கை முன்னிலை மாற்றைக் கவனிக்க.

(வேறு.)

15. இப்போரின்மருதருன்னையேத்திறனெண்ணியுன்பால்
நப்பேரிற் றேவரெல்லா நாடியே மகிழ்ந்தார், நீயுந்
துப்பேறுங் கொலைகூர் சம்ப மிந்திரா சுற்றி யோச்சி
யப்பேறு தடக்கு மந்த வகிமுகத் தடித்த காலை.

(இ-ள்.) இந்திரனே! வலிபொருந்திக் கொலை செய்வதிற் சிறந்த வச்சிராயுதத்தைச் சுழற்றி நீரை யொழுக விடாதபடி தடுத்த அகியாகிய விருத்திராசுரனது முகத்தில் நீ யடித்தபோது இந்தப் போரில் மருத்துக்கள் உன்னை (ப்ரஹர பகவோ ஜஹி வீரயஸ்வ) என்பதாகிய வசனங்களாற் றுதித்தார்கள். விசுவ தேவர்க ளெல்லோரும் உன்னிடத்து மகிழ்ச்சியடைந்தார்கள்.—(எ-று.) அகி, விருத்திராசுரன். அகியினது முகத்தென்க. சம்பம், வச்சிராயுதம். ந, உயர்வுப் பொருளில் வந்தது. வறுது, முன்னேடாது என்றபடி.

வருக்கம் 14.

## 53. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 3.

### 11 இருக்குக்களுள்ளது.

ரிஷி. அங்கிரஸ புத்திரன் ஸவ்யன். வடமொழிச் சந்தம்: ஜகதி, 10, 11 த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. மகிமையொடு பொருந்தியவற் கெங்காளு
முயர்துதிகள் மதித்தி வோமால்;
தருகிரியை மிகப்புரியும் யஜமானன்
சதனமதிற் சார்ந்து பண்க
ளுகவொடுமிந் திரற்றுதிக்கும், தூங்குவார்
நற்பொருளின், உவனுங் கைத்தை
மிகவிரைவி னடைகுவதால்; தனந்தருவோர்
தகவில்துதி விழையா ரன்றே.

(இ-ள்.) தூங்குவோருடைய பொருள்களைத் (திருடன் இலகுவிற் கைக்கொள்ளுவது) போல (அவன்) இந்திரன் (அசுரரது) பொருளைக் கைக்கொள்ளுவதால், யாக கார்யம் செய்யும் யஜமானனது யாக வீட்டில் சொல்லும் பண்களெல்லா மவ்விந்திரனை ஸ்தோத்திரம் செய்யும். தான கர்த்தாக்கள் தகவில்லாத (பெருமையற்ற) ஸ்துதிகளை விரும்ப மாட்டார்கள். அதனால் மகிமையோடு கூடிய இந்திரனுக்கு எப்பொழுதும் நல்ல ஸ்தோத்திரங்களையே எண்ணிப் போற்றுவோம்.—(எ-று.) விவஸ்வத:பரிசரத:என்பார்சாயணர், யாகஞ்செய்வோனென்பதுபொருள். தூங்குகிறவர்களிடத்து ஒருநாளும் அவன் பொருளைக் கண்டதில்லை என்று மேனாட்டாசிரியர் உரை கூறியுள்ளார். தூங்குவோராகிய யாக மில்லாத சோம்பேறிகளிடத்து இந்திரன் ஒரு பயனையும் பெறுவதில்லையென்று அதற்குப் பொருள் விரிப்பார்.

2\. பரிதருவாய், இந்திரனே, பசுத்தருவாய்,
யவந்தருவாய்; பரிந்து செல்வ
மிரிதருகா தெடுத்திடுவோ னெவற்றினையுங்
காப்பவன், பண் டிருந்து மாந்தர்க்
குரிமையொடு முதவுபவன், விழைவுதரா
தொழியாதாய், உவந்தெம் நண்பர்க்
கரியதுணை யாவாயா லுனக்கெனவித்
துதிவசன மார்ந்தி சைப்பாம்.

(இ-ள்.) இந்திரனே! நீ குதிரை யளிப்பாய்; பசுவுந் தருவாய், யவமாதி தானியமுங் கொடுப்பாய். செல்வத்தைச் சேகரித்து வைக்கும் ஸ்வாமியாம். எல்லாரையும் பாலிப்பவன் நீ. மக்களுக்குத் தானந் தருவோன் நீ. இச்சித்தவற்றைத் தராதுவிடாய். எம் ஸகாக்களாகிய ரித்விக்குகளுக்கு நல்ல தோழனும். அத்தகைய (இந்திரனாகிய) உனக்கு இத் துதி வசனங்களைக் கூறுவோம்.—(எ-று.) தம் என்று மூலத்தி லுள்ளது இத்தகைய இந்திரனாகிய அவனுக்கு என்றும் பொருள் கூறலாம்.

3\. மதிமிகுத்தோய், இந்திரனே, முரண்டோன்றுஞ்
செயல்புரிவோய், மகத்தாஞ் சோதீ,
யதிதூரஞ் சூழ்ந்துசெறி யித்தனமு
முன்னதென வறிய நின்ற;
எதிர்வாரை வாட்டுபவ, அவற்றிலிருந்
தெடுத்தெமக்கென் றீவாய் நன்கே;

துதிகூறி புனைநினைப்போ னிச்சையினைக்
குறையாது தோய்ப்பா யின்றே.

(இ-ள்.) நல்ல குணத்தோடு கூடியவனே! (விருத்திர வதம் முதலாகிய) பலத்தைத் தோற்றுவிக்கும் செய்கைகள் பலவற்றைச் செய்பவனே! உத்தமமான சோதியே! எதிர்த்த வர்களை யடக்குபவனே! இந்திரனே! வெகுதூரத்தில் பரந்துகிடக்கும் இச் செல்வங்கள் உன்னதென்று பலரு மறியும்படி கிடக்கின்றன. இவற்றிலிருந்து எமக்குத் தானஞ்செய்வாயாக. ஸ்தோத்திரஞ் செய்து உன்னைக் கருதுவோனது ஆசைகளை யொன்றுங் குறையாமல் அளிப்பாயாக.—(எ-று.)

4. எரிவளர்க்கு மிப்பொருளில் யாமளிக்குஞ்
சோமமதி லின்பங் கொண்டே
பரிவளர்க்குந் தனத்தோடு பசுக்கூட்டம்
பலவளித்துப் பரிந்தெ மின்மை
யிரிதரச்செய் தொண்மனங்கொள்; இந்துவிழை
யிந்திர னிடுக்க ணாற்றும்
பரிசனத்துத் தசியுவினை யடக்கி யவன்
பகைநீங்கி யனம்பெற் றோமே.

(இ-ள்.) இந்திரனே! எங்களா லளிக்கப்படும் இந்தச் சரு புரோடாச மாகிய பொருள்களிலும், யாங்கள் தரு மிச் சோமத்திலும் சந்தோஷத்தை யடைந்து பசுக்களும் குதிரைகளும் நிறைந்த தனத்தை எங்களுக் களித்து எங்கள் தரித்திரத்தை நிவர்த்தித்து நன்மனத்தோடு கூடியிருப்பாயாக. சோமத்துளிகளை இச்சிக்கும் இந்திரனது துணையினால் (துன்பஞ் செய்யும் கூட்டத்தாரோடுகூடிய) தஸ்யுவை யடக்கி அவனது பகை நீங்கி யன்னப் பொருள்களை யடைகிறோம்.—(எ-று.) இடுக்கணாற்றும் பரிசனத்து, என்னும் அடை வடமொழிமூலத்தி லில்லை. பெறுகிறோம் பெற்றோம் எனத் துணிவுப் பொருளில் வந்த காலவழுவமைதி. சரு, புரோடசம், ஓமத்திரவியங்கள்.

5. இந்திரனே யன்னமொடு தனத்தினையு
நனியேற்றத் தியாங்க ளெய்த;
சந்திரனே யெனப்பலருங் களிக்கின்ற
வலிவானந் தயங்கித் தோய்ந்த
துந்தவொளி மதியினுறல்; பகையடக்கும்
வீரவலி யுயர்ந்த தாக்கண்

## அஷ்டகம் 1. அத்தியாயம் 4.

முந்துறநின் றதுகுதிரை யொடுசெறிந்த
தெமைச்சேர்க முன்பின் மாதோ.

(இ-ள்.) இந்திரனே நல்ல உணவையும் சிறந்த தனத்தை யும் நாங்கள் நன்றாக அடையட்டும். சந்திரனைப்போல ஆஹ்லா தத்தை தருகின்றதும் வானத்தை யெட்டி நிற்பதுமான வலி மையை உன்னுடைய காந்தியோடுகூடிய புத்தியினால் நாங்களடையட்டும். சத்துருக்களை யடக்கியாளுவதும், பசுக்களும் குதிரைகளும் நிறைந்ததுமான பலம் எம்மை வந்துசேரட்டும். —(எ-று.)

6. வலியூட்டு மருதருனை மதர்ப்பித்தார்,
உவப்பீந்த வலிசா லுன்ற
னிலையேற்ற வவிப்பொருள்கள், சோமங்க
ளுனக்குவப்பை நேடித் தந்த,
பொலிவூட்டுந் துதியாளன் குசைவிரிப்போன்
றனக்காகப் புகலும் பத்துத்
தலைகூட்டு மாயிரமாம் விருத்திரரைச்
சற்பதியே தடிந்த வன்றே.

(இ-ள்.) சற்பதியே! (சாதுக்களைப் பாதுகாக்கு மிந்திரனே!) உன்னை ஸ்தோத்திரஞ்செய்து தருப்பைகளைப் பரப்புவோனாகிய யாக கர்த்தாவுக்காகப் பதினாயிரம் விருத்திரர்களையும் நீ கொன்றபோது, பலத்தை விருத்திபண்ணும் மருத்துக்கள் உன்னை மதமடையச்செய்தனர்; வலிமையிற்சிறந்த உனக்காகத் தரப்படும் அவிப்பொருள்களும் உனக்குக் களிப்பைத் தந்தன; ஸோமத்துளிகளும் உனக்குச் சந்தோஷத்தை யூட்டின.—(எ-று.) விருத்திரரென்றது ஈண்டு உபத்திரவகாரகர்களாகிய சத்துருக் கூட்டங்களை. பொருள்கள் ஈந்த எனக.

7. தீரமொடு மிந்திரனே யொருபோர்நின்
றொருபோர்க்கட் செல்வாய்; மொய்ம்பி
னுருமதிற் கோட்டைகளை யொன்றொன்றா
யழித்திடுவாய்; அணையார் தத்தங்
கூருமெழி லோய்ந்துதலை வணங்கச்செய்
தோழனொடு கூடித் தூரத்
தேருடனே பலமாயை புரிநமுசி
முழுநாச மெய்வித் தாயே.

(இ-ள்.) இந்திரனே! தைரியத்தோடு நீ ஒரு போரைச் சயித்து மற்றொரு போர்க்குச் செல்லுகிறாய். பலத்தினால் சத்

துருக்களது கோட்டைகளை ஒவ்வொன்றாக அழிக்கிறாய். சத்துருக்கள் தங்கள் பொலிவிழந்து தலைவணங்கும்படி செய்கிற உனது தோழனாகிய வச்சிராயுதத்தோடுகூடத் தூரத்திலிருந்து பலவித மாயங்களையுஞ் செய்கிற மாயாவியாகிய நமுசியை நாசமடையும்படி செய்தாய்.—(எ-று.) அதனால் ஸ்துதிக்கு நீ யோக்கியன் என்றபடி. தோழன் ஈண்டு வச்சிராயுதத்தைக் குறித்து நின்றது. நமுசி (ch) மழை பெய்யாது தடுக்கும் ஓரசுரன்.

8. அதிதிக்கு வன்சிறந்து மேற்சென்ற
காலத்தே யவனுக் காகத்
துதிதிக்கெல் லாந்தோன்றக் காஞ்சனொடு
பண்ணயனுஞ் சோரக் கொன்றாய்;
கதிதிக்கெங் குஞ்சூழ்ந்திங் கிரிஜிச்சு
வான்முற்றுங் காவ லிஞ்சிப்
பதிதிக்கென் றிகழாமல் வங்கிருதன்
சதநகரம் பாழ்செய் தாயே.

(இ-ள்.) இந்திரனே அதிதிக்வன் என்னும் அசுரன் பெருமையோடு யுத்தத்திற்குப் போனபோது அவனுக்காக உன் புகழ் எல்லாப்பக்கத்திலும் விளங்கும்படி, காஞ்சன், பர்ணயன் என்னும் அசுரர்களைக் கொன்றாய். ரிஜிச்வான் என்னும் அரசன் எல்லாப்பக்கத்திலுஞ் சூழ்ந்து முற்றுகைபோட்டபோது வங்கிருதன் என்னும் அசுரனுடைய நூறு கோட்டைகளையும் கேவலமென்றெண்ணாமல் அழித்தாய்.—(எ-று) அதிதிக்வன் மேல் மண். 1, சூக். 51, செய் 6-ல் பார்க்க. ரிஜிச்வான் மண். 1 சூக். 31 செய். 5 நோக்குக. காஞ்சன், பர்ணயன், வங்கிருதன் இவர்கள் அசுரர்கள். பர்ணயன் பண்ணயன் என்றாயிற்று. சதநகரம், நூறு கோட்டைகள்.

9. பிறர்நெருங்காச் சக்கரந்தோய் தேர்மீது
பேர்சானி பிறங்கி யாறு
திறம்பெருகு மாயிரத்துத் தொண் ணூற்றொன்
பதின்மர்புடை செறிந்து சூழ
மறம்பெருகு மிருபதின்மர் நரபதிக
டம்மையெதிர் மடங்க வென்றாய்
அறம்பெருகு சுச்சரவன் றுணையின்றி
யமர்க்களத்தே நின்ற வன்றே.

(இ-ள்.) (இந்திரனே!) பிரக்கியாதி பெற்றநீ (சத்துருக்களாகிய) பிறர் கிட்ட நெருங்க முடியாத சக்கரத்தோடுகூடிய தேரிலேறித் தர்மம் சிறந்த ஸுச்ரவஸன் ஒரு துணையுமில்லாமல் உன்னைத் துதித்தபோது அவனைக் காப்பதற்காக, அறுபதினுயிரத்துத் தொண்ணூற்றென்பது வீரர்கள் புடை சூழ யுத்தத்துக்கு வந்த இருபது நரபதிகளோடு சண்டை செய்து, அவர்களைக் கொன்றாய்.—(எ-று) ஸுச்ரவஸ், சுச்சரவன், ஓர் அரசன்.

(வேறு.)

10. துணையினை யளித்துச்சுச்ச ரவசனைக் காத்தா யுன்ற
னிணையிலாவளியிற் றூர்வயாணனை யெடுத்தாய் வேந்தே
திணைபெறும் வலி யிளமை சேரு மவ்வரசனுக்கு
ளிணையுற வாயு குற்ச னதிதிக்வ னிவ ரேய்த்தாயே.

(இ-ள்.) வேந்தனே! (இந்திரனே!) உனது உதவிகளினால் ஸுச்ரவஸைக் காப்பாற்றினாய். ஒப்பற்ற உனது பலங்களால் தூர்வயாணனைக் காத்தாய். வலிமையும் இளமையும் சிறந்த அவ்வரசனது (ஸுச்சிரவனது) வசத்தில் ஆயு, குத்ஸன், அதிதிக்வன் இம் மூவரு மடங்கும்படி செய்தாய்.-(எ-று.) ஆயு, புரூரவ வம்சத்து ராஜன். மண். 1, சூக். 94, செய். 2 நோக்குக. குத்ஸன், அதிதிக்வன் இவர்கள் முன்பே சொல்லப்பட்டார்கள். ஸுச்ரவஸ், சுச்ரவன், சுச்ரவஸன் எல்லாம் ஒருவனையே சுட்டும். அவன் ஒரு அரசன். தூர்வயாணனும் ஓரரசனே. தூர்வயாணன் வேகமாகச் செல்வோனென்பது பொருள். அதிதிக்வனும் திவோதாஸனு மொருவனே. ஸுச்ரவஸனும் தூர்வயாணனும் ஒருவனேயோ வென்று ஸந்தேகப்படுவார் மேனாட்டாசிரியர். ஆயு, குத்ஸன், அதிதிக்வன் இந்திரனுக் குகந்த ராஜரிஷிகளாயினும் ஸுச்ரவஸன், தூர்வயாணன் இவர்களைக் கருதும்போது இந்திரன் இவர்களிடத்தே அதிக விசுவாசமுள்ளவ னென்று தெரிகிறது. இவ்விந்திரனுடைய பிரியத்தை மண். 2, சூக். 4, செய். 7 லும் பார்க்கலாம்.

11. யாகமு முடிந்த பின்னர் வேந்தெமைத் தேவர் காக்க
வோகையோ டியராக்கத்தோ டுனதுநற் றோழராவேம்
வாகை வீரம்பொருந்து மகார் நனியாயுள் வாய்ந்தோ
ரேகமாச் சமத்தி னெங்கட் கேய்ந்தனர்வாழ்த்துவோமே.

(இ-ள்.) இந்திரனே! யாகம் முடிந்த பிற்பாடு இனி யெம்மைத் தேவர்கள் காப்பாற்றிநிற்கநாங்கள் சிவதமர்களாயும் தோ

மூர்களாயு மாவோம். வீரர்களாகிய புத்திரர்கள் மிகுந்த ஆயுட் காலத்தோடு கூடியவர்களாய் எங்களிடத்துச் சுகமாய்ப் பொரு ந்தியிருக்க, யாங்க ளுன்னை வாழ்த்துவோம்.—(எ-று.) சிவதமர் களாய் உத்தம கல்யாணர்களாய் என்பது பொருள். இதனையே செய்யுளில் ஓகையோடுயராக்கத்தோடு என்ருர். ஏய்ந்தனராய் வாழ்த்துவோ மென்க. வேந்து, அண்மைவிளி.

வருக்கம் 16.

## 54. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 4.

11 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி:* ஸைவ்யன். வடமொழிச்சந்தம்: ஜகதி. 6, 8, 9, 11 த்ருஷ்டுப். தேவதை : இந்திரன்.

1. மகவானே பாவமதின் முழுக்கிவிடும்
 போரினில்யா மருவா தாற்ருய் ;
 தகவாரு முனதுவலி முழுதுமெவ
 ரறிந்திங்ஙன் சாற்ற வல்லார்?
 மிகவாரு முழக்கத்தி னதியொழுகு
 நீரினைநீ விம்ம விட்டாய் ;
 இகமாருந் தரைநடுக்கிற் றடுமாறி
 யோட்டந்திங் கியங்க லென்னே !

(இ-ள்.) தனத்தோடு கூடிய விந்திரனே ! எங்களைப் பா பச் செய்கைகளுக் குள்ளாக்கும் யுத்தத்தில் யாங்கள் சேராத படி காப்பாயாக. (ஏனெனில்) உனது பல முழுவதும் ஒருவ ராலும் சொல்ல முடியாது. அந்தரிட்சத்தில் மிகுந்த சப்தத் தோடு செல்லும் நீரைப் பேரிரைச்சல் போடுவித்தாய், பயத் தினுல் இப்பூமி யேன் நடுங்கியோடுகிறது ?—(எ-று.) மகவான், தனவான். ஏனெனில் என்னும் சொல் வருவிக்கப்பட்டது. நீ எந்தப்போரில் எவரோடு சேருவா யென்பது நிச்சய மில்லாத தனுல் சில சமயங்களில் நீ எதிரிகள் பக்கத்தில் நின்றுவிட் டால் உன்னுடேயே சண்டை செய்ய நேரும். அதனுல் பாபம் ஏற்படும். ஆகையினுல் அப் போரில் எம்மை மூட்டி விடாதே யென்று கூறப்பட்ட தென்பார் மேனுட்டாசிரியர். பூமி யென்ற தினுல் வானம் அந்தரங்களையும் இனத்தாற் கொள்ளுக வென் பார் சாயணர். மூவுலகும் நடுங்குவானேன் என்ற வினுவுக்கு

உன் வலியைக் கண்டு மூவுலகும் நடுங்குகின்றன என்ற விடை கொள்ளத்தக்கது என்பார் அவர்.

2. அர்ச்சிக்க வுரம்பொருந்துஞ் சக்கிரியைப்
பூசிக்க வார்ந்தே யுண்மை
யிச்சிக்குந் துதிகேட்கு மிந்திரனைத்
துதிக்க புவி வானி ரண்டு
நச்சித்த மின்மையினைத் தீர்க்கவென
விரக்கின்ற நாதன் றன்னைக்
கர்ச்சித்துக் கீழிழியும் வகைநீரைப்
பெய்விக்குங் காளை தன்னை.

(இ-ள்.) (அத்வர்யுக்களே!) வலிபொருந்திய சக்கிரியை அர்ச்சிப்பீர்களாக. இது தகுதியான துதியென்று எண்ணி அதனை விரும்பிக் கேட்கும் இந்திரனைப் பூசிப்பீர்களாக. பூமி வானமென்னு மிரண்டுக்கும் (நாயகனை) மழைபெய்விப்பவனைத் துதிப்பீர்களாக.—(எ-று.) 'இச்சித்த வளித் தொழுகும் வலி மிகுந்த காளையா மிறைவன்தன்னை' என்பது நான்காம் அடியின் பாடபேதம். வலியிற் சிறந்த மாந்தர் நினைத்தவற்றை யளிக்கும் பெருமை வாய்ந்த விருஷபத்தை என்பது பொருள்.

3. பகைவர்களை யடக்குந்தன் வலியினிடத்
தெவன்மனத்தே யுறுதி பாரித்
தகவுவனவ் வொளிசாரும் பெருந்தேவை
நன்மொழியா லருச்சித் தேத்த;
மிகுகீர்த்தி யசுரனவ னென்னுரை
வாட்டுபவன் மேன்மை சான்றோன்
புகலரிக ளிரண்டேத்து மிடபமொடு
தேரெனவே புகல்வா ரன்றே.

(இ-ள்.) (ஸ்தோதாக்களே!) பகைவரை யடக்கும் தனது வலியை யெண்ணி யெவன் செல்வானோ அவ் வொளிபரந்த பெருந்தேவனாகிய இந்திரனை நல்ல வார்த்தை கூறி யருச்சிப்பீர்களாக. அவன் மிகுந்த கீர்த்தியுள்ள அஸுரனும், பகைவரை யடக்குபவனும், மேன்மை பொருந்தியவனும், இரண்டு குதிரைகளால் பூஜிக்கப்படுபவனும், (இழுக்கப்படுபவனும் என்றபடி.) அவனையே விருஷபமென்றும் ரதமென்றுங் கூறுவார்கள்.—(எ-று.) ஸ்தோதாக்கள், ஸ்தோத்திரம் செய்வோர். அசுரன் ஈண்டு இந்திரனைக் குறித்தது, பகைவரை யடக்குவோன் அல்லது பலத்தோடுகூடியவன் அல்லது (ஆஸவ ப்ராண

தாந்ராதி ததாதி இதி அஸுர:) பிராணங்களைத் தருபவன், அல்லது ப்ராணுவாஆப என்று தைத்திரீயம் கூறுவதால் ஜலத்தைத் தருபவன், என்பது பொருள். அஸுரன் அநிஷ்டத்தைநீக்குபவன், தேவன் என்னும் பொருள் மண். 1 சூக். 24 செய். 14ல் சொல்லப்பட்டது. விருஷபம், இச்சித்த பொருளை வர்ஷிப்பவன். ரத: ரம்ஹணசில: வேகமாய்ச் செல்லுபவன். இந்திரனைத் தேரெனவும், காளையெனவும் உபசாரப்படுத்திக் கூறினர்.

4\. பெருந்திவியி னுச்சமதிற் பிறங்கிடங்க
ளசைந்ததிரப் பிறங்கி ஞய்நீ,
யருந்திடத்தி னெருவனுய்ச் சம்பரனை
யுடல்பிளக்க வடிக்திட் டாயே,
பொருந்துபல மாயாவிக் கூட்டமதைச்
சுதை குடித்துப் பொங்கு மூக்கத்
திருந்திறலிற் கூரசனி கையேந்தி
மனத்துணிவோ டெதிர்ந்த போதே.

(இ-ள்.) (இந்திரனே!) பல மாயாவிக் கூட்டங்களாகிய அசுரர்களைச், சோமபானஞ்செய் தெழுந்த ஊக்கத்தினுல் வலிமைபொருந்திய கூர்மையான அசனியை (வச்சிராயுதத்தைக்) கையிலேந்தி மனத் துணிவோடு எதிர்த்து வீசியபோது வானுச்சியி லுள்ள விடங்களைக் கம்பிக்கச்செய்தாய்; மேலும் நீயொருவனுக நின்று சம்பராசுரனைப் பிளந்தாய்.—(எ-று.) கூரசனி கூரிய இடி அல்லது வச்சிராயுதம்.

5\. (அ) மேகத்தை நனிமுழங்க விட்டனையால்,
வாயுவினுன் மெதுவை யெய்தத்
தாகத்திற் பழுஞ்சமைத்தாய், வற்றுவிக்கும்
ஆதவன்மேற் றண்ணீர் வைத்தாய்.
ஏகத்தி னெதிர்நின்று பகைவதைக்கு
முள்ளமதை யெய்து முன்போற்
பாகத்திற் சமைப்பவர்க ளின்றேனு
முனக்குமேற் பகர்தற் கியாரே?

(இ-ள்.) (இந்திரனே!) நீ மேகத்தைக் கர்ச்சிக்கச்செய்தாய். வாயுவினுல் (புளி முதலாகிய) பழங்கள் மெதுத்தன்மையை யடைந்து பழுக்கச்செய்தாய். வஸ்துக்களைச் சோஷிப்பிக்கும் சூரியனுக்கு மேலான விடத்தில் தண்ணீரை யமைத்தாய். பகைவரை வாட்டுகின்ற உள்ளத்தோடுகூடிய உன்னைப்போலக் காலபலனைத் (வெயில் காலத்தில் வறட்சியையும் மழைக்காலத்

தில் மழையையும்) தருபவர்கள் இன்றைக்காவது உன்னின் மேம்பட்டவர்கள் சொல்லுவதற் கெவராவது துள்ளார்களோ? (இல்லை என்றபடி.)—(எ-று.) வாயுவினால் சூரிய கிரணங்களையும், மழையினால் நீரையும் மறுபடியும் நிலைநிறுத்துகிறார்கள். அப்படி நிறுத்துவது இந்திரனுடைய வேலையாக உபசரிக்கப்பட்டது. வநம் என்பதற்குச் சாயணார் நீர் என்று உரை கூறுவர் ஆனால்மேனாட்டாசிரியர் வநம், காடு என்பார். அவருரைப்படி செய்யுள் வருமாறு.—

(இ) வனமாரும் பெருமுழக்கத் திந்திரனே
சுட்டுணனு மறைத்து வைத்த
தனமாரும் பொருட்குவையை வாயுவினி
னெற்றியின்மேற் றள்ளுங் காலை
மனமார முற்காலத் திழைசெயலை
யின்னமுமே மறித்துஞ் செய்யா
துனையாரே தடுப்பவர்க ளுறுதியொடு
பகைவதைக்கு முள்ளம் வாய்ந்தோய்.

(இ-ள்.) உறுதியும் பகைவதைக்கு மனமும் பெற்ற விந்திரனே! காடுகளை நிறைக்கும் பேரொலியோடு விழும்படி சுட்டுணன் அடைத்து வைத்திருந்தவற்றைக் காற்றினது தலையில் தள்ளும்போது, நீ முற்காலத்துச் செய்த அத்தொழிலை இன்று திரும்பவும் செய்யாதவண்ணம் உன்னைத் தடுக்கப் பலம் வாய்ந்தவர் யாவருளர்?—(எ-று.) இந்திரனே என்பது அதிகாரத்தாற் சேர்த்தது.

## வருக்கம் 17.

(வேறு.)

6. நரியனைத் துருவ சன்னை நாடியே யதுவை வையற்
குரியபுத்திரன் றுர்வீதி யோடுநால் வரையுங் காத்தாய்;
பரியொடு தேர் கெடாது பாலித்தாய்; சதமகத்தோய்!
அரியநற்புரங்க டொண்ணூற்றொன்பதை யழித்தாயன்றே.

(இ-ள்.) சதக்கிருதுவே! நர்யன், துர்வசன், யது, வையனுடைய புத்திரன் துர்வீதி என்னும் நான்கு ராஜாக்களைக் காத்ததோடு அவர்களது தேர் குதிரைகள் கெடாதபடி பாதுகாத்தாய். சம்பரனது 99 கோட்டைகளையும் அழித்தாய்.—(எ-று.) துர்வசன், யது, துர்வீதி இவர்கள் யாககர்த்தாக்களுக்கு உதவிசெய்யும் ராஜரிஷிகள் என்பது, மண். 1, சூக். 36, செய். 18ல்

கூறப்பட்டது. நர்யனும் ஒரு ராஜரிஷியே. இத் தொண்ணூற்றொன்பது கோட்டைகளும் சம்பரானதென்பார் சாயணர்.

7. அவனேநற் சனங்களுக்கு வேந்தனொடு
 சற்பதியு மாவான் ஆன்மா
வவனேயிங் கோம்புபவன், அவிபொருந்திச்
 சாசனத்தை யரிதிற் காப்போன்,
அவனேநற் றுதிகூறு மவனுக்கு
 வேண்டுமுணா வளிப்போன், மேக
மவனேற்றத் துக்கெனவே வானிழியு
 நீர்சொரியும் அறிக மாதோ.

(இ-ள்.) அவனே (இந்திரனே!) ஜனக்கூட்டத்துக்கு நாயகன்; ஸத்துக்களுக்கு (ஸாதுஜனங்களுக்கு)ப் பதி; அவனே ஆத்மசக்தியை வளர்ப்பவன்; அவனே யவிப்பொருளோடு கூடி யாகவிதிகளைக் காப்பாற்றுபவன்; அவனே உக்தம் அல்லது சஸ்திரங் கூறும் ஹோதாவுக்கு வேண்டிய உணவுப்பொருள்களைக் (கர்ம பலனைக)த் தருபவன்; அவனுக்காகவே மேகமானது ஆகாயத்திலிருந்து கீழ் விழும் மழை நீரைச் சொரிகிறது.—(எ-று.) உக்தம் அல்லது சஸ்திரம் ஹோதா கூறுவது; ஸ்தோமம் அல்லது ஸ்தோத்திரம் ஸாமகன் பாடுவது. மண். 1, சூக். 47, செய். 10 பார்க்க. உபரம், உபலம், மேகமென்பது நிருக்தம்.

(வேறு.)

8. இணையிலை யவனூரத்துக் கிணையிலையவன் ஞானத்துக்
கணவுறு சோமபான மாற்றுவோர் கருமத்தோங்க,
தணவறு வேந்தேயுன் றன் றகைமிகு பலத்தைத் தூலத்
திணையறுமாண்மைதன்னையேற்றஞ்செயவிழீவோரே.

(இ-ள்.) அவனது (இந்திரனது) பலத்துக்கு வேறெவருடைய பலமு மொவ்வா. அவனுடைய ஞானத்துக்கு மற்றொருவனுடைய ஞானம் சிறிது மொவ்வாது. (இந்திரனே!) உன்னுடைய மகத்தாகிய பலத்தையும் ஸ்தூலம்போல் விருத்தியாய் நிலைத்த பும்ஸத்துவத்தையும் (ஆண்மையையும்) விருத்தி செய்யும் அவிதருவோராகிய சோமயாஜிகள் கர்மாபிவிருத்தியை யடையட்டும்.—(எ-று.) சோமயாஜிகள் சோமபான யாகஞ் செய்யும் யாககர்த்தாக்கள். ஈவோ ராகிய ஆற்றுவோர் கருமத்தோங்க எனக் கூட்டுக.

9. உனக்கென்றேயுண்ணுதற்காவுயர்கல்லிற்பிழிந்தசோம
மினிக்கவே மிகுதியாக வள்ளத்தினியைந்த; வேந்தன்
மனக்கினி வீயும் பான மண்டுக வாசை தீர்க்க;
பினர்ப்பொருளளிக்கவிச்சைகொள்ளுகபெரிதெமக்கே.

(இ-ள்.) (இந்திரனே!) நீ யுண்பதற்காகவே கல்லிற் பிழிந்த சோமங்கள் மிகுதியாகப் பாத்திரங்களில் நிறைந்துள்ளன. இந்திரனது மனத்துக்குச் சுகத்தைத் தரும் பானத்தை நீ குடிப்பாயாக. குடித்து ஆசை தீருவாயாக. பின்பு எங்களுக்குச் செல்வந்தரு மிச்சையை யடைவாயாக.—(எ-று.) வேந்தன் மனக்கு இனிவு ஈயும் பானம் என்றது இந்திர பானமாகிய சோமத்தை. வேந்தன் ஆறன்றொகை.

(வேறு.)

10. மழைநீரைத் தடுத்தவிரு ணின்றதுவால்;
விருத்திரன்றன் வயிற்றி னுப்பண்
மழைமேக மொளிந்தடைந்த(து); அவனடைத்த
வாறுகளா மழைக்காற் றண்ணீர்
விழைவோடுந் தரையினுள சரிவெல்லாம்
வெள்ளப்பின் வெள்ள மாகக்
குழைவோடு மோடும்வகை யிந்திரனுங்
குறித்தடித்துக் குயிற்றி னானே.

(இ-ள்.) மழை நீரைத் தடுத்து வைத்திருந்த இருட்டும் இருந்தது. விருத்திரனுடைய வயிற்றில் மேகமானது ஒளிந்திருந்தது. அவ்விருத்திரன் அடைத்துவைத்த நதிகளாகிய மழைத் தண்ணீர் பூமியின் சரிவுகளிலெல்லாம் ஒன்றன்பின்னொன்றாய் வெள்ளமாக எல்லாப் பக்கமும் ஓடும்படி இந்திரன் அதனையடித் தோட்டினான்.—(எ-று.) நதிகள், நீரை யிலக்கணையாற் குறித்தது.

(வேறு.)

11. இந்திர வதனு லெங்கட் கிருமைநோய் தீர்க்குங்கீர்த்தி
யந்திலெம் மொன்னார் தம்மை யடக்கும் பேராமீக;
நந்து நஞ்செல்வர் தம்மை ஞானியர் தமையு மோம்பாய்;
எந்தமக்களிப்பாய் பொன்னுமெழில்மகாருணவுமின்றே.

(இ-ள்.) இந்திரனே! நீ எங்களுடைய நோயை நீக்குங் கீர்த்தியையும் எங்களது பகைவரை யடக்கும் மகத்தாகிய வலி

மையையுந் தருவாயாக. உமது செல்வான்களையும் ஸூரிகளையும் (வேதவித்துக்களையும்) பாதுகாப்பாயாக. எங்களுக்குப்பொன்னும், அழகிய மக்களும், உணவுப்பொருள்களுமளிப்பாயாக.—(எ-று) எங்களைச் செல்வர்களாக்கிக் காப்பாயாக. ஞானிகளாகியஸூரிகளையும் ரட்சிப்பாயாக எனவும் பொருள் கொள்ளுவார். அற்றேல் 'நங்தெமைச் செல்வராக்கிக் காத்திடாய் ஞானியோம்பாய்' என்று மூன்றும் அடியைப் படிக்க. மகார், உம்மைத் தொகை.

வருக்கம் 17.

## 55. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 5.

8 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஸெடி ஸவ்யன். வடமொழிச் சந்தம்: ஜகதி. தேவதை: இந்திரன்.

1. அவன்பெருஞ்சீ ராகாயந் தன்னினும்பே
   ரிடமகன்ற(து), அவன்மேன் மைக்க
   ணவனியெனு மிந்திரனைப் புடையொவ்வா(து),
   அரும்பலத்தோ னச்ச மூட்டு
   மவன், துதிப்போர்க் காப்பகையைத் தவிப்பிப்போன்;
   காளைதன தரிய கொம்பைக்
   கவனமுறத் தீட்டுதலின் வச்சிரத்தைக்
   கூர்பெறவே கருக்கிற் பானே.

(இ-ள்.) அவனுடைய (இந்திரனுடைய) பிரபாவமானது ஆகாயத்தைக் காட்டிலும் விஸ்தீரணமாக நின்றது. அவனது மகத்துவத்தில் பூமியும் அவனை (இந்திரனை) ஒருவாறு ஒத்து நிற்காது. அரிய பலத்தோடு கூடிய அவன் பீமன் (பகைவர்க்குப் பயங்கரத்தைத் தருபவன்.) ஸ்தோதாக்களாகிய மனிதர்களுக்காக அவர்களது பகைவர்கள் பரிதவிக்கும்படி செய்பவனும். காளைமாடு சண்டைக்காகக் கொம்பைத் தீட்டுவதுபோல அவன் வச்சிராயுதத்தைக் கூராகும்படி சாணையிற் றீட்டுவான்.—(எ-று.) கருக்கிற்பான், தீட்டுவான்.

2. அந்தரத்திற் றடமகன்று பரந்துள்ள
   நதிகளினை யர்ண வம்போற்
   சுந்தரமா யேற்றவற்றைப் பெய்விப்பான்;
   அதுவன்றிச் சோம பானத்

துந்துமனக் காளையைப்போல் நடந்திடுவான்;
இந்திரனு முறழும் போரின்
முந்துறுநல் வலிமிகுத்த வீரனெனுஞ்
சநாதனமா மொழிவேட் டானே.

(இ-ள்.) இந்திரன் அந்தரிட்சத்தில் விஸ்தாரமாகப் பரந்துள்ள மழைநீரைச் சமுத்திர மேற்பதுபோல முன்பு தானேற்றுப் பின் பெய்விப்பான்; அஃதல்லாமல் சோமபானஞ் செய்யப் போகும்போது உற்சாகத்தோடுகூடிய விருஷபம் போல நடந்து போவான். யுத்தத்தில் இந்திரன் ஸநாதநமான வலிமை பொருந்திய வீரனென்னும் ஸ்தோத்திர மொழியைக் கேட்க விச்சிக்கிறான்.—(எ-று.) நதி, நீரென்பதை யாகுபெயராற் காட்டிற்று என்பதை மண். 1 சூக் 54. செய் 10ற் கூறினர்.

3. புசிக்கவென வன்றுநீ யிந்திரவப்
பருப்பதத்தைப் பொழியு மாறு
நசுக்குவையால்; அளவிறந்த செல்வமதைத்
தரிப்பவரை நாடி யாள்வாய்
இசைக்குரிய காரியங்க ளாற்றுவதிற்
றேவர்களி னென்று முன்வந்
தசைக்கரிய வுக்கிரனாய் விளங்கியெலாத்
தொழிற்குமுன ரணவா னன்றே.

(இ-ள்.) இந்திரனே! அம்மேகத்தைப் புசிப்பதற்காக அல்ல, மழை பொழிவதற்கென்றே நசுக்குகிறாய். அளவில்லாத செல்வத்தைத் தாங்கிய (குபேரன் முதலியவர்களையும்) நாடி யாளுகிறாய். அவ் விந்திரன் கீர்த்திதருங் காரியங்களைப் புரிவதில் தேவர்களுக்கு முந்தின உக்கிரனாய் எல்லாத் தொழிற் கண்ணும் முன்னிற்கிறான்.—(எ-று.) பர்வதம், மேக மென்பார் சாயணர்; மலை யென்பார் மேனாட்டாசிரியர். முன்னிரண்டடி முன்னிலையாகவும் பின்னிரண்டடி படர்க்கையாகவும் கூறினார். இது வேதத்தில் ஸஹஜம்.

4. இனத்துமனி தருக்கெதிரி லிந்திரமொய்ம்
பவன்காட்டு மெல்லைச் சார்ந்த
வனத்திலவ னேவணங்கு மவர்தங்கள்
வசனத்தால் வாழ்த்தப் பெற்றோன்
மனத்தினிய தேனவை மகவானுஞ்
சேமமுனி மருவிக் குங்கா
லுனற்கினிய விடபமா யாகத்தோ
ருவப்பவனை யுறுகின் றானே.

(இ-ள்.) கீர்த்தி மிகுந்தவனே! ஸுஸ்யராஹிதமான பொருளை இரண்டு கைகளாலும் தானத்தினிமித்தம் ஏந்துகிறாய். உன் சரீரம் பகைவரால் அழிக்க முடியாத வலிமையை யடைந்துள்ளது. தண்ணீ ரிறைப்பவர்கள் கிணறுகளைச் சூழ்ந்து நிற்பதுபோல, இந்திரனே, உனது சரீரத்தின் அங்கங்களெல்லாம் விருத்திரவதம்போன்ற பெரிய காரியங்களால் நிறைந்திருக்கும்.—(எ-று.)

வருக்கம் 20.

## 56. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 6.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஸ்டி ஸவ்யன். வடமொழிச்சந்தம்: ஜகதி. தேவதை இந்திரன்.

1. வடவையொடு கிரீடிக்க வெழுங்குதிரை
   யெனவிவனு மகத்தோன் வைத்த
   விடமதிற்பே ருண்கலத்தே யுளசோமங்
   குடிக்கமன மெழவே தூண்டி
   யுடன்மயமா யரிபூட்டி யியையிரத
   மொளிவாய்ந்த துடனி ருத்தித்
   திடமுறவே பெருஞ்செயல்க ளாற்றும்வலி
   பெறச்சோமஞ் சிறந்துண் பானே.

(இ-ள்.) பெண் குதிரையோடு கிரீடிக்க வெழும் ஆண் குதிரையைப்போல, இவ்விந்திரன் யஜமானன் சேகரித்து வைத்துள்ள பெரிய உண் கலங்களி லுள்ள சோமத்தைக் குடிப்பதற்குத் தன் மன மெழுகையால் தன்னைத் தூண்டிப், பொன் மயமாய் இரண்டு குதிரைகள் பூட்டப்பெற்றுப் பிரகாசத்தோடு கூடிய தனது தேரை நிறுத்திப், பெரிய காரியங்களைச் செய்யும் வன்மையை யடையச் சோமத்தைக் குடிப்பான்.—(எ-று.) உடல், பொன், தங்கமென்னும் பொருட்டு.

2. பொருள்கூட்டு மனமெழுந்த வாணிபர்கள்
   பரவையின்மேற் போவார் நேரப்
   பொருளேந்துந் துதியாள ரவற்சூழ்ந்து
   வணக்கமொடு போற்றா நிற்பர்;
   சுருளோதித் தோகையர்கள் மலையேறிப்
   பூத்தொகுக்கத் தோய்வ தென்னப்

பொருடோயுந் துதிபுரிவீர் யாகபதி
யுரம்விரைந்து புகழு வீரே.

(இ-ள்.) பொருள் சம்பாதிக்க விரும்பிய வியாபாரிகள் சமுத்திரத்தின் மேலும் போவதுபோல நல்ல ஸ்துதிகளைக் கூறுவோர் (தாங்கள் பொருள் பெறும் நிமித்தம்) அவனை (இந்திரனை)ச் சூழ்ந்து வணக்கத்துடன் ஸ்தோத்திரம் செய்வார்கள். காமினிகளாகிய ஸ்திரீகள் (தங்களுக்கிஷ்டமான) பூக்களைச் சேகரிப்பதற்காக மலைகளின்மே லேறுவதுபோல, ஸ்தோதாக்களே, யாகபதியாகிய இந்திரனது வலிமையை ஸ்துதியுங்கள்.—(எ-று.)

3. அயகவச மணிந்தவவன் முரணினரை
மிகநலிப்போ னூர்ந்த மாயை
மயவசுரன் சுட்டுணனைத் தாமணியாற்
சிறையகத்தே மதத்தாற் கட்டுஞ்
சயமுடைய னமகான் றுகள்கதுவா
தெதிரிகளைச் சாட நாகத்
துயர்சிகர மொளிர்வதென வவனாண்மை
போரிடத்தே யொளிரு மன்றே.

(இ-ள்.) இருப்புக் கவசத்தை யணிந்தவனும், சத்துருக்களை வாட்டுபவனும், மாயை மிகுந்த வசுரனாகிய சுஷ்ணனைக் கயிற்றாற் காராக்கிரஹத்திற் கட்டும் ஜயசீலனும், மஹானும் (ஆன இந்திரன்) தனக்குத் தோஷம் நேராதபடி பகைவர்களைச் சாடும்போது, அவனது ஆண்மை மலைச் சிகரம் விளங்குவது போல யுத்தத்தில் உன்னதமாகப் பிரகாசிக்கும்.—(எ-று.)

4. வைகறைக்கா லந்தன்னிற் சூரியனு
முடன்செலல்போல் வண்மை யென்னு
மெய்குலவு தேவியின துரமுமுனல்
வளர்ந்துற்று வேந்தன் பக்கல்
வைகிடுமக் காலமடங் காவலியோ
டிருள்சீத்து வளரன் னனு
மொய்குரலிற் பெருந்தூளி யெழுப்புவான்
பகைவதைத்த மொய்ம்பி னேடே.

(இ-ள்.) விடியற்காலத்துக்குப்பின் சூரியன் றோற்றுவது போலப் பலமென்னுந் தேவி உன்னால் வளர்ச்சியடைந்து இந்திரனது பக்கத்தில் நிற்கும்போது அடங்காத வலிமையோடு இருளைக் கெடுத்துப் பெருமையில் வளருகின்ற அவ் விந்திரன்

சத்துருஸம்ஹாரஞ் செய்த உற்சாகத்தினுல் எழுந்த சப்தத்தோடு பெருந்தூளியைக்கிளப்புவான்.—(எ-று.) உன்னுல் என்பதற்கு ஸோமத்தால் என்று பொருள் கூறுவர் மேனுட்டாசிரியர். உனது (ஸ்தோதாவினது) ஸ்தோத்திரத்தால் என்பார் சாயணர். இருள்சீத்து, அந்தகார ரூபமா யுள்ள விருத்திரன் முதலானவர்களைக் கொன்று என்பது பொருள்.

5. விருத்திரனுன் மறைக்கப்பட் டாருயிருக்
 காதரவா மெலிவி னீரை
யிருத்திநீ யசைவிலா தந்தரத்துப்
 பலதிக்கு மியைத்துப் பின்னர்
உரத்தின்மிகு மிந்திரனே தனமெளிதிற்
 றரும்போரி னுவந்து சோமம்
வருத்தியநன் மதவலியா லவற்கொன்ற
 போதுவெள்ள மழைதந் தாயே.

(இ-ள்.) வலி மிகுந்த இந்திரனே! விருத்திரனுல் மறைத்துவைக்கப்பட்ட பிராணிக் கூட்டங்களுக்கு ஆதாரமான தண்ணீரை யசையாதபடி அந்தரத்தில் பல திக்குகளில் நிறுத்திப் பின்பு செல்வ மெளிதாகக் கிடைக்கக்கூடிய யுத்தத்தில் சோமங் கொடுத்த மதவலியினுல் இவ் விருத்திரனைக் கொன்ற போது மழை நீர் வெள்ளமாகக் கீழிழியும்படி செய்தாய்.—(எ-று.)

6. இந்திரவுன் மகத்துவத்தால் வானிருந்து
 பூதலத்தே யெச்ச கத்துஞ்
சுந்தரமா யுயிரோம்பு மழை நீரை
 நிலைப்பிப்பாய்; சோம மார்ந்தி
நந்துமதக் களியெய்தி முகினீரை
 வீழ்த்துங்கா ஞடிக் கல்லான்
முந்துறும்பல் காவலினை விருத்திரற்கு
 வாய்த்தவற்றை மொய்ம்பிற் றீர்த்தாய்.

(இ-ள்.) இந்திரனே! உன் மகத்துவத்தினுல் விண்ணிடத்தி லிருந்து பூமிப்பிரதேசத்தில் எல்லாச் சகத்து முள்ள உயிர்களுக் காதாரமான மழைத் தண்ணீரை நிலைக்கச் செய்வாய். சோமத்தைக் குடித்து மதத்தினுல் ஸந்தோஷத்தையடைந்து மேகநீரை வீழ்த்தும்போது விருத்திரனுடைய கல்லாலான காவல்களை உன்னுடைய பலத்தினுல் அழித்தாய். —(எ-று.)

வருக்கம் 21.

### அஷ்டகம் 1. அத்தியாயம் 4.

## 57. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 7.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷடி ஸவ்யன். வடமொழிச்சந்தம்: ஜகதி. தேவதை இந்திரன்.

1. பெருங்குணத்துப் பெருஞ்செல்வப் பெருந்தானஞ்
சிறந்தோற்குப் பிறங்கு முண்மை
யருந்திறலோற் கென்றுதியை யாக்குவன்மெய்
பெருத்தோற்கிங் கணையு மொய்ம்பிற்
பெருந்திறலும் பள்ளமிழி புனலெனவே
தடுக்கரிதாப் பெருக வெங்கும்
பொருந்துயிர்க்கட் பரவுநிழல் பலமளிப்பான்
றிறந்துவிடும் புகழி னோற்கே.

(இ-ள்.) சிறந்த குணத்தோடு கூடியவனும் பெரிய செல்வத்தோடுகூடியவனும், தானத்திற் சிறந்தவனும், உடலினது ஆகிருதி பெரிதாகவுள்ளவனும், பள்ளத்திற் பாயும் நீரைப் போலத் தடுக்கமுடியாத ஆற்றல் சிறந்துநிற்கப், பலஜீவர்களிடத்தும் வியாபித்துநிற்கும் செல்வத்தைத் திறந்துவிட்டுத் தானஞ் செய்பவனுமாகிய இந்திரனைக் குறித்து எனது மனனீயமான ஸ்தோத்திரத்தைச் செய்வேன்.—(எ-று.) நிழல், செல்வம் அல்லது தனம்.

2. வெள்ளஞ்சூ ழிவ்வுலகு முழுதும்பி
னுனைத்தொடர்ந்த வேள்வி வேண்டிப்
பள்ளமுறும் புனலெனவே யவிதருவோன்
சவனங்கள் பரந்து சூழு
மெள்ளருஞ்சீ ரிந்திரன்கட் பொன்மயமா
வோங்கியெவ ரேனுந் தன்னை
யெள்ளினருக் கிடுக்கணளி வச்சிரந்தூங்
காதசலத் திறுத்த போதே.

(இ-ள்.) மிகுந்த கீர்த்திவாய்ந்த இந்திரனிடத்துப் பொன் மயமாய்ச் சத்துருவதஞ்செய்வதிற் சிறந்த வச்சிராயுதமானது மேகமாகிய மலையி னுச்சியில் (அல்லது விருத்திரன்மேல்) ஜாக்கிரதையா யடித்த (மேகத்தைப் பிளந்த) பின்னர் இவ்வுலக முழுவதும் உன் சம்பந்தமான யாகத்தின் பொருட்டு உன்னைப் பின்றொடர்ந்தன; ஹவிஷ்மந்தனது யக்ஞப்பொருள்கள் பள்ளத்தி லோடும் நீரெனப் பரந்து உன்னைச் சூழும்.—(எ-று.) ஹவிஷ்மந்தன், அவிப்பொருளைப் படைத்தவன். முன்னிலைகளும் இந்திரனையே குறித்தன.

3. பீமனுக்குத் தமப்போற்றிற் குரியவனுக்
கிம்மகத்துப் பேசு மின்று
சேமமுற வவியுணவைச் சேர்த்திடுவாய்,
உஷஸேநீ சீர்த்தி வாய்ந்த
தாமனைஐந் திரமொய்ம்பார் சோதியைத்தோத்
திரம்புரிவோர் சாலத் தேரும்
வாமனையிங் கவிபெறுவான் குதிரையெனக்
கதித்தேக வயக்கி னாரே.

(இ-ள்.) உஷாதேவியே! பயங்கரமானவனும், உத்தம ஸ்தோத்திரத்திற்குப் பாத்திரனுமான விந்திரன் பொருட்டு இந்த யாகத்தில் இப்பொழுது ஹவிர்லக்ஷண வன்னத்தை நீ சேர்ப்பாயாக. கீர்த்தி மிகுந் தாமனும் (எல்லாவற்றையுந் தாங்குபவனும்) ஐந்திர வலிபொருந்திய சோதியும், ஸ்தோதாக்களால் நன்ருக அறியப்பட்டவனுமான அவனை, குதிரைதான் கருதிய இடத்தை நாடி விரைவாகச் செல்வதுபோல, குறித்த வலியுண்டியை நாடிச் செல்லும்படி, கதியுள்ளவனைச் செய்தார்கள்.—(எ-று.) பீமன், பயங்கரமானவன். தாமன்: எப்பொருளையும் தாங்குபவன், வாமன்: எதுகைப்பற்றிச் சேர்ந்தது.

4. பலர்போற்று மிந்திரனே விபுலதன
நாயகனே பண்பு வாய்ந்த
நலம்போற்று முன்றனையை நேடுமியா
முன்னவரே நாடி னேவோம்;
பொலன்போற்றுந் துதிவிழைவோ யுன்னையலா
ரெம்பாவைப் பொருந்தா ரன்றே;
நிலம்போற்றும் பொருள்களினை விரும்பலினெந்
துதிவசன நேர்ந்தேற் பாயே.

(இ-ள்.) பலராலுந் துதிக்கப்படுபவனே! இந்திரனே! மிகுந்த செல்வமுள்ளவனே! உன்னை யாச்ரயித்து நடக்கும் யாங்கள் உன்னைச் சேர்ந்தவரே யாவோம். அழகிய துதியை விரும்புபவனே! உன்னை யல்லாத பிறர் எமது பாக்களைப் பொருந்தி நிற்கமாட்டார்கள். பூமியானது தன்னிடத்து ஓங்கும் வஸ்துக்களை விரும்புவதுபோல எங்களுடைய ஸ்துதி வசனங்களை நீ விரும்பிக் கைக்கொள்வாயாக.—(எ-று.) நிலம் விரும்பலின் எனச் சேர்க்க. இன், உவமை யுருபு. இது ஓர் ஸாமம்.

5. இந்திரவுன் வீரியமு மிகப்பெரிதா
முன்னவரே யாங்க ளிந்த

நந்துறும்பஃறு தியாற்று வோனெண்ண
மகவானே நாடிப் பூர்த்தி
பொங்தும்வகை யாற்றுகவுன் வீரியத்தைப்
பின்பற்றிப் புகல்பேர் வானும்
வந்துதன தூரம்பெருக்கிற்(று), இப்புவியு
முன்வலிக்கீழ் வணங்கிற் றன்றே.

(இ-ள்.) இந்திரனே! உனது சாமர்த்தியம் மிகப் பெரியது. நாங்கள் உன்னைச் சேர்ந்தவர்கள். மகவானே! இந்த ஸ்தோதாவினது எண்ணத்தை நாடிப் பூர்த்தி செய்வாயாக. பெரிய விண்ணும் உனது திறமையி னளவாகவே தனது பலத்தை விருத்திசெய்துகொண்டது. இந்தப் பூமியும் உனது பலத்துக்கு ளடங்கிநின்றது.—(எ-று.) வீரியம், சாமர்த்தியம், திறமை. பூர்த்திபொங்துதல்: நிறைவுபெறல். பொங்துதல், திசைச்சொல்.

6. வச்சிரத்தைக் கைப்பிடித்த விந்திரனே
யிடம்பரந்து வளரம் மேக
வுச்சிதப்பேர் மலையினைநீ நொறுங்கும்வகை
யுன்குலிசத் துடைத்தா யங்கே
வைச்சதனை சூழ்ந்துளநீர் கீழ்நோக்கி
யோடும்வகை வயக்கி யெங்கும்
பொச்சமிலா தோங்கும்வலி நீதனியே
தாங்கினையாற் பொய்மை யன்றே.

(இ-ள்.) வச்சிரியே! இந்திரனே! விஸ்தீரணமான பெரிய அந்த மேகமாகிய மலையை (அல்லது விருத்திராசுரனை) நொறுங்கிப்போகும்படி உனது வச்சிராயுதத்தினு லுடைத்தாய். அங்கே கட்டுப்பட்டுநின்ற நீர் கீழ்நோக்கி யோடவிட்டாய். ஓடவிட்டு எவ்விடத்தும் குறையாமல் பெருத்து நிற்கின்ற வலிமையை நீயே தனியாகப்படைத்தாய். (வேறொருவரும் படைக்கவில்லை யென்றபடி.) இது சத்தியமாம்.—(எ-று.)

வருக்கம் 22.

## 58. மண்டலம் 1. அநுவாகம் 10. சூக்தம் 8.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கோதமபுத்திரன் நோதஸன். வடமொழிச்சந்தம்: 1-5 ஜகதி, 6-9 த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.

## மண்டலம் 1. சூக்தம் 58.

1. பலத்தினுற் பிறப்படைந்த வமரனவ
 னுதித்ததுமே பாடீ வானல்;
நலத்தவோ தாவாவான் மகத்தவன்றன்
 றூதுவனுய் நடக்குங்காலே
வலத்தருஞ்சீர் மார்க்கத்தா லந்தரிட்ச
 வுலகமதை மதிக்கத் தோற்றித்
தலத்துறுமா மகமதனி லவிசுமந்து
 தெவ்வர்பணி சாதிப் பானே.

(இ-ள்.) பலத்தினுல் (அரணியைக் கடைவதால்) தோன்றும் மரணமற்றவன் அவன். அவன் பிறந்தவுடனேயே தொடுவதற்கு முடியாதவனுயிருப்பதால் துன்பத்தைத் தருவான். ஹோமநிஷ்பாதகனுகிய அவன் யாக கர்த்தாவினது தூதனைத் தேவர்களைக் கொண்டுவரச் செல்லும்போது அதற்கு முன் அமங்கலமாயிருந்த அந்தரிட்ச வுலகத்தைத் தான் செல்லும் மார்க்கத்தால் பலருக்கும் தெரியும்படி ஒழுங்குபடத்தோற்றி யாகத்தினிடத்தி லுள்ள அவியைச் சுமந்து தேவர்களுக்கு பணிவிடைசெய்வான்.—(எ-று.)

2. சரையடையான் சுவாலையாற் றன்வேண்டுஞ்
 சிறுதுரும்பைச் சாப்பிட் டுப்பி
னருகுறையும் பெருங்காட்டந் தனைப்பற்றி
 விரைவினெரி நிலைக்க வேறும்;
மருவுபொருட் சுட்டழிக்க வெழுஞ்சுடர்கள்
 குதிரையென மருவுங் காந்தி;
உரைதருமா காயத்தி னெழிலியெனப்
 பெருமுழக்க மோங்கிற் றன்றே.

(இ-ள்.) கிழத்தன்மையை யடையாதவனுகிய அக்கினி தனது சுவாலைகளினுல் தனக்கு வேண்டிய சிறு துரும்புகளைத் தின்று பிறகு பக்கத்தி லுள்ள பெரிய காஷ்டங்களிற் பிடித்துக்கொண்டு நிலைத்திருக்கும் வண்ண மேறுவான். தம்மை யடையும்பொருள்களைத் தஹிக்கக் கருதும் சுவாலைகள் குதிரையைப்போலப் பளபளப்பாய்த் தெரியும். அப்பொழுது ஆகாயத்திலுள்ள மேகம் முழங்குவதுபோலப் பெரிய சப்தமானது எழுந்தது.—(எ-று.)

3. உருத்திரர்க்கும் வசுக்களுக்கும் புரோகிதனைத்
 தூதுவனு யுறைந்து மிக்க
வருத்தியுட னவிதாங்கித் தனம்பரிக்கு
 மமரனுல காயுட் காலம்

பெருத்துறையு மனிதரிடத் திரதமென
விரைந்தோடிப் பேர்சால் செல்வக்
கருத்துறுமன் னூர்க்கேற்ற வகைத்தேவன்
சிறந்தீவான் கனகந் தானே.

(இ-ள்.) உருத்திரர்களுக்கும், வசுக்களுக்கும் புரோஹித னாயும், ஹோதாவாகவும் தங்கி அவர்களுக்காக அன்போடு அவிப்பொருள்களைச் சுமந்து பகைவரது தனத்தைப் பறிக்கின்ற அமரனாகிய தேவன் (ஒளிபொருந்தியவன் அதாவது அக்கினி) ஆயுள்பெருத்த மனிதரிடத்து ரதமென்று சொல்லும்படி வேகமாய்ப் போய்ச் செல்வத்தை எண்ணி ஸ்தோத்திரஞ் செய்யு மவர்களுக்குத் தக்கபடி சிரேஷ்டமான தனத்தை யளிப்பான்.—(எ-று.)

4. வாயுவினாற் றூண்டப்பட் டக்கினியும்
பேரொலியின் வளர்ந்து தன்னு
வேயுமொளிச் சுவாலையினு லெளிதாகப்
பெருமரங்க ளேறு நிற்கும்;
பாயுமிட பம்மெனநீ மூப்படையா
யாவலொடும் பாத பங்கள்
தீயவொளி யலைபாய்ந்தோய் வனந்தாவு
நெறிகறுப்பாய்ச் சேரு மன்றே.

(இ-ள்.) அக்கினியானது வாயுவினாற் பிரேரேபிக்கப்பட்டு மிகுந்த தொனியோடு வளர்ந்து தனது நாக்கிற் றோய்ந்த சோதியால் இலகுவாகப் பெரிய மரங்களில் ஏறிப் பற்றிக் கொள்ளும்; மூப்பை யடையாதவனே! ஒளிபொருந்திய சுவாலையாகிய அலையோடு கூடியவனே! பாய்ந்துசெல்லும் விருஷபத்தைப்போல (காளைமாட்டைப்போல) ஆவலோடும் மரங்கள் தீய்ந்துபோகும்படி காட்டிற் றாவும்போது நீ போன வழி கறுத்துப் போகிறது.—(எ-று.)

5. சுடர்ப்பல்லன் வாயுவினாற் சோதிக்கப்
பட்டொளிர்வோன் றேயாக் கூட்டத்
தடர்த்தொழுகுங் காளையென வனமதனிற்
சுடர்க்கூட்ட மார வென்றுந்
துடைக்கரிய ரஜத்தினிற்றன் றேசுவலி
யோடுமெதிர் தோன்றிச் செல்காற்
படைத்தபெரு மச்சத்தாற் றுவரமுஞ்
சங்கமமும் பனிக்கு மன்றே.

(இ-ள்.) சுவாலையே பல்லாகவுடையவனும் வாயுவினாற் பிரேரேபிக்கப்பட்டு வளர்பவனுமான அக்கினி, நிறைந்துள்ள பசுக்கூட்டத்தை யடக்கித்திரியும் காளையைப்போலக் காட்டினிற் றனது சுவாலைக்கூட்டமானது நிறைய என்றும் அழியாத அட்சயமான ரஜத்தினிடத்தே தன் தேஜோபலந் தெரியும்படி செல்லும்போது ஸ்தாவர சங்கமங்கள் பயத்தினால் நடுங்குகின்றன.—(எ-று.) ரஜம், ஆகாயமென்பார் மேனாட்டாசிரியர். மரங்களினின்று ஒழுகும் கசிவுநீர் என்பார் சாயணர். தபுர் ஜம்ப : சுடர்ப்பல்லன்.

வருக்கம் 23.

(வேறு.)

6\. மக்களாலெளிதிற் போற்ற மருவுவோ யதிதி யோதா
பக்கமார் நண்பனென்னச் சுகத்தினைப் பகுப்போ யங்கி
யிக்கட லுலகின் மாந்த ரிடத்தழகமைந்த பொன்னின்
மிக்குறவுனையமைத்தார்மேன்மைசால்பிருகுவென்போர்.

(இ-ள்.) மாந்தர்களால் எளிதிற் றுதித்தழைக்கக் கூடியவனே! யாகத்தலத்துக்கு வரும் அதிதியே! ஹோதாவே! பட்சத்தோடு கூடிய சிநேகிதனைப்போலச் சுகத்தை ஈபவனே! அக்கினியே! பிருகுக்கள் உன்னை மாந்தர்களுக்கு மத்தியில் அழகுவாய்ந்த பொன்னை யமைப்பதுபோல ஸம்ஸ்கார பூர்வமாய் அமைத்தார்கள்.—(எ-று.) பக்கம், பட்சம். ஓதா, ஹோதா வென்பதன் சிதைவு.

7\.(அ) அங்கியையெழுநாவோனையருமைவாய்மகஞ்செய்வோனைத்
தங்குறு மகத்தில் யாருஞ் சார்ந்து முத்தமனைக் கீர்த்தி
பொங்கிய தூத னாகிப் புகல்வசு கூட்டு வோனை
யிங்குறு மவியின் வேட்டற் கீகெனத் தனமிரப்பல்.

(இ-ள்.) அக்கினியும், ஏழு நாக்கோடு கூடியவனும், யாகம் செய்யும் ரித்விக்கும், எல்லாரும் யாகத்தில் பூஜிக்கும் உத்தமனும், ஹோதாவும் செல்வத்தை (வசுவை) க் கூட்டுபவனுமான அக்கினியை, இங்குள்ள அவியுணவோடு வணங்கித் தனமளிக்கும்படி வேண்டுவேன்.—(எ-று.) இச் செய்யுள் மேனாட்டாசிரிய ருரைப்படி பாடியது. ஆனால், மூலத்தில் ஸப்த ஜுஹ்வா வென்றுள்ளது. சாயணர், 'ஏழு ஹோதாக்கள், ரித்விக்குக்கள் யாகத்தில் வணங்கு முத்தமனும், தேவர்களைக்கூட்டி வருபவனும் ஆன அக்கினியை வணங்குகிறார்கள். எப்பொழுதும்

செல்வத்தைக் கூட்டுபவனுகிய அவ் வக்கினியை ஹவிர்லக்ஷண அன்னத்தோடு வணங்கிக் கர்ம பலனுன ரத்நத்தை யாசிப் பேன்.' என்று உரை கூறுவர். அதற்குச் செய்யுள் வருமாறு:--

(இ) கேழுறுத்தமனு மங்கி தேவரைச் சேர்ப்போன் றன்னே
யேழுபேர் மகத்தோர்யாகமிழைப்பவர்வணங்காநிற்பர்
மாழையை யென்றுங் கூட்டு மவனே யுண்டியின் மதித்துத்
தாழுவே னரதநங்க டருகென யாசிப்பேனே.

8. முன்பினிற் பிறந்த சூனு மொய்த்த பன்னட்பின்மிக்கோய்!
அன்பர் நிற்றுதிப்போர்க் கிற்றை யழிவிலாச்சுகமளிப்பாய்;
உண்பன பெற்றோ யங்கி யுபாயத் திடமார் காப்பால்,
அன்பொடு முனேத்துதிப்போன் பாபங்க ளகற்றிக்காக்க.

(இ-ள்.) வலியினுல் (முறுகக் கடைவதனுல்) உண்டான புத்திரனே! மித்திரர்களில் சிறந்தவனே! (அல்லது அநுகூல சோதியோடு கூடியவனே!) உன்னைத் துதிக்கு மன்பர்களுக்கு இப்பொழுது அழியாத சுகத்தைக் கொடுப்பாயாக. உண்ணும் பதார்த்தங்களிற் றேன்றியவனே! அக்கினியே! இரும்பு போல் உறுதியாகவுள்ள காவலினுல் உன்னைத் துதிக்கும் யஜ மானனது பாபங்களை நீக்கி யவனை இரட்சிப்பாயாக.—(எ-று.) நாம் உண்ணும் உணவிலிருந்து ஜடராக்கினி வளர்வதால், 'உண் பன பெற்றேய்!' என்றார்.

9. ஒளிமிகு மங்கி யுன்னை யோம்புவோற் கில்ல மாக;
ஒளிமிகு தனத்தோ யாகமுஞற்றுவோர்க்களிக்கவின்பம்;
ஒளிமிகு துதியாளர்தம் பாவத்தை யொறுத்துக் காக்க;
ஒளிமிகு செயற்செல்வத்தோ னுறுகவல்விரை விவ்வைகல்.

(இ-ள்.) காந்தி பொருந்திய அக்கினியே! உன்னைத் துதிப்பவர்க்கு நீ (கஷ்டத்தை நீக்கும்) வீடாக விருப்பாயாக. ஒளிபொருந்திய தனத்தோடு கூடியவனே! (பகவானே!) யாகஞ் செய்வோர்க்குச் சுகத்தை யளிப்பாயாக. நல்ல ஸ்துதி களைச் செய்பவர்களைப் பாபத்தினின்றும் நீக்கிக் காப்பாயாக. கீர்த்தி பொருந்திய செயலினுற் பெறுஞ் செல்வத்தோடு கூடிய அக்கினி இவ் விடியற் காலத்தில் விரைவாக விளங்க வரட்டும். —(எ-று.) நான்காமடி முன்னிலைப் படர்க்கை மாற்று. மக வான், தனவான்.

வருக்கம் 21.

## 59. மண்டலம் 1. அநுவாகம் 11. சூக்தம் 2.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கோதமபுத்திரன் நோதஸன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: (வைசுவாநர) அக்கினி.

1. அங்கியே யிதரத் தீக்க ளுன்கிளே; அமரர் யாரு
மங்கலி லுன்வாய்ச் சாலமகிழ்வர்; மக்கட்கணுர்ந்தோய்!
தங்குறு தூணே போலத் தாங்குவாய் தரணி யோரை,
யங்கமா யவர்க்கு மத்தி யமைவுறு நாபி யாவாய்.

(இ-ள்.) அக்கினியே! மற்ற நெருப்புக்கள் உனது கிளைகளாம். மரண தர்ம மில்லாத தேவர்கள் உன்னிடத்து மிகவும் மகிழுவார்கள். மனிதர்களிடத்து (ஜடராக்கினி ரூபமாக) நிறைந்திருப்பவனே! (வீட்டைத்தாங்கும்) தூணைப்போலப் பூமியிலுள்ளவர்களைத் தாங்குவாய். அவர்களுக்கு மத்தியில் நாபியைப் (கொப்பூழ்) போல நிற்கிறாய்.—(எ-று.) வைச்வாநர, மக்கட்கணுர்ந்தோய், மனிதர்களிடத்து ஜடராக்கினி ரூபமாய் நிறைந்தவனே என்பது பொருள்.

2. வானத்தின் சிரமாம், வையம் வயங்கிய கொப்பூழாவான்,
வானத்தும் வையத்திற்கு மதிபதி யாகு னங்கி;
ஞானத்தின் மலிந்த வார்யர்க் கொளிநலந் தருந் தேவாகத்
தானத்திற் படைத்தார் வைச்சுவாநர, தேவ ருன்னை.

(இ-ள்.) அக்கினி விண்ணின் சிரஸாம் (முக்கியமானவனும்). பூமியில் விளங்கும் ரக்ஷகனும் (கொப்பூழாம்). வானம் பூமி யிரண்டிற்கும் அதிபதியுமானுன். வைச்வாநரனே! எல்லாத் தேவர்களும், ஞானவான்களாகிய ஆரியர்களுக்கு, ஒளிபொருந்திய தானசீலனுகிய தேவனுக உன்னைப் பிறப்பித்தார்கள்.—(எ-று.) இடம் மாற்றைக் கவனிக்க. வைச்வாநரன், மனிதர்களிடத்து ஜடராக்கினி ரூபமாக நிறைந்தவன்.

3. அசைவிலாக் கிரண மென்றூழ்க் கமைந்தெனவங்கிக்கண்ணே
யிசையொடுநரர்மெய்புற்றதீயினிற்செல்வமேய்ந்த(து),
உசிதமார் மலைக்க ணீர்க்க ணோடதிக்கண் மக்கட்க
ணிசைவுறு தனத்துக்கெல்லா மிறைவ னீயேயா மன்றே.

(இ-ள்.) சூரியனிடத்துச் சலனமில்லாத கிரணங்களமைந்ததுபோல அக்கினியாகிய வைச்வாநரனிடத்தில் செல்வம் அமைந்துநின்றது. பர்வதங்களிலும், ஜலங்களிலும், ஓஷதிகளி

லும் மனுஷர்களிடத்திலுமிருக்கும் செல்வத்துக்கெல்லாம் நீயே ராஜாவாம்.—(எ-று.) நரர்மெய் யுற்றதீ, வைச்வாநரன். ஏழனுருபுக ளும்மைத்தொகைக்கண்வந்தன.

4. வான்புவி பரந்தாற் போல மகன்புகழ் வளர்ந்த தம்ம;
தான்பெறு வலிசா ரோதா, தகைமைசார் மனிதனோர்வான்,
கோன்பெறுவீரன் மெய்யேகொள்ளுறு வலிமை சார்ந்தோன்
மேன்மைசா னடையோன் வைச்சுவாநரற் கேய்ந்தமீப்பா.

(இ-ள்.) ஆகாயமும், பூமியும் பரந்துநின்றதுபோல அவர்களது புத்திரனாகிய அக்கினியின் புகழும் பரந்துநின்றது. வலிபொருந்திய ஹோதாவும், ஸ்தோத்திரம்பெறும்பிரபுவையொத்தவனும், யாவரையும் நடத்தும் வீரனும், உண்மையான வலிமையோடுகூடியவனும், நடையிற் சிறந்தவனுமான வைச்வாநரனுக்குப் பலவித ஸ்தோத்திரப்பாட்டுகளமைந்தன.—(எ-று.) ஓதா, ஹோதா. அக்கினி, வானம் பூமிகளுக்குப் புத்திரன்.

5. வயிச்சுவாநரனே ஜாதவேதஸ பெரியவானுன்
சயிக்கொணு மகிமை தன்னைச் சார்ந்ததே யில்லை, நீயு
மயிர்க்கொணு வரசனுவா யணிமன வம்மாந்தர்க்கே;
செயிர்த்திடுபோரிற்றேவர்க்காகவே சேர்த்தாய்பொன்னை.

(இ-ள்.) வைசவாநரனே! ஜாதவேதஸனே! (ஸர்வக்ஞனாகிய அக்கினியே என்றபடி.) பெரிய வானமும் உனது மகிமையடைந்ததில்லை. நீயும் நன்மனமுள்ள மனிதக் கூட்டத்துக்கு அரசனும். யுத்தத்தில் தேவர்களுக்காகவே (அசுரர்களிடத்திலிருந்து பிடுங்கின) தனத்தைச் சேர்க்கிறாய்.—(எ-று.) வான் உம்மைத்தொகை.

6. விருத்திரற்செற்றானென்று விழைந்துபூரவர் சேவிக்கும்
அருத்துநீர்மழையளிக்கு மாண்மையோன் மகிமையின்றே
பொருத்துவென், தாசற்கொன்றான், புகனார்மெய்புகுந்தீ
வருத்தினான் சம்பரன்னை, மழைமுகிலொழுக்கினானே.

(இ-ள்.) விருத்திரனைக் கொன்றானென்று பூரவர்கள் (பூருவின் மக்கள் ஜனங்கள் என்றபடி) வணங்குகின்ற விருஷ்டிக்குக் காரணமான காளையினது மகிமைகளைச் சொல்லுவேன். இந்த வைச்வாநரன் காரியவிக்கினம் செய்யும் தஸ்யுவைக் கொன்றான், சம்பரனை வாட்டி (அவன் அடைத்துவைத்திருந்த) மழைநீரை யோடவிட்டான்.—(எ-று.) பூரவர்கள், ஜனங்கள். பூரு, மக்களுக்கு ஒரு மூதாதையாக எண்ணப்படுபவன். வைச்

வாநரன், ஈண்டு மேக மத்திய நெருப்பாகிய மின்னலைக் குறிக்கும். அதனுற்றான் இந்திரனுக்குக் கூறிய பெருமையையெல்லாம் அக்நிக்குக் கூறியது. இத்துதி அக்நியும் இந்திரனும் ஒரு கடவுள தம்சமென்பதைக் காட்டுகின்றதென்றும் கொள்ளலாம். அருந்தும் அருத்தும் என வலித்தல் விகாரம்பெற்றது.

7. வயிச்சுவா நரன் விசுவ மனிதர்க்கண் மகிமை வாய்ந்தோன்
குயிற்றிடு மகப் பாத்துவாசன் கும்பிடுவோன், ஆங்கே
பயிற்றிடுமொளியோன், அங்கிபழுகுமன் புண்மையோற்கா
வயக்கினுன் புருநீதன் சாதவனேய னூறுபோற்றே.

(இ-ள்.) வைசுவாநரனும், எல்லா மனிதரிடத்தும் மகிமையோடு தங்கியிருப்பவனும், யாகத்தினிடத்து பாத்துவாசன் வணங்குவோனும், நல்ல ஒளியோடு கூடியவனும், பிரிய ஸத்தியவாக்கோடு கூடியவனுமான அக்கினிக்காகச் சதவனியின் புத்திரனுன புருநீதன் நூறு (ஈண்டுபல) ஸ்துதிகளைச்செய்தான்.—(எ-று.) நூறு யாகம்புரிபவன் என்பது சதவனி என்பதன் பதப்பொருளாம். சாதவனேயன் தத்திதம். புருநீதன் அவன் மகன், ஓர் அரசன் (சாயணர்).

வருக்கம் 25.

## 60. மண்டலம் 1. அநுவாகம் 11. சூக்தம் 3.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஙெடி நோதஸன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.

1. வன்னியைக் கீர்த்தி யோனை, வளர்மக கேது தன்னை,
யுன்னியே காப்பான் றூதன் தேவரோ டுறுவான் றன்னை,
மன்னிய மாதரிச்வான் வழங்கினுன் சீர்சால் செல்வ
மென்ன; அத்துவிசன் றன்னைப் பிருகுவு நட்பேற்றானே.

(இ-ள்.) அவியைச் சுமப்பவனும் (வன்னியும்) கீர்த்தி வாய்ந்தவனும், யாக கேதுவும், நன்றாகக் காப்பவனும், தூதனும், அவி யளிக்கும்போது தேவரோ டொருவனாய் வருபவனும் ஆன அக்கினியைப் பிரசஸ்தமான செல்வத்தைப்போல மாதரிச்வான் கொண்டுவந்து கொடுத்தான். அந்தத் துவிஜனை (இரு பிறப்பாளனுன அக்கினியை)ப் பிருகுவும் நட்பாளனுகப் பெற்றான் (புத்திரனுகப் பெற்றா னென்பதும் ஒன்று).—

(எ-று.) வஹ்நி, வன்னி, சுமந்து செல்பவன், ஈண்டு அவியைச் சுமப்போன். மககேது, யக்ஞத்தைப் பிரகாசிப்பவன். துவிஜன், தியாவாபிருதிவி (வானம் பூமி) களுக்குப் பிறந்தவன், அல்லது இரண்டு அரணிக் கட்டைகளிற் றோன்றியவன். நட்பு என் பதற்கு வடமொழியில் ராதி: என்றுள்ளது. அதற்கு மித்தி ரன் என்று தைத்திரீயத்திற் பொருளுள்ளது. சிலர் புத்திர ரென்றும் சொல்லுவார்கள். மாதரிச்வான் வாயு வென்பார் சாயணர். அரணியைக் கடைவதற்குமுன் மறைந்திருந்த அக் கினியை, விவஸ்வனது தூதனுக நின்று ஆகாயத்திலிருந்து கொண்டுவந்தவன் என்பார் மேனுட்டாசிரியர். இவர் மதப்படி ரிக்வேதத்தில் மாதரிச்வான் என்னும் பதத்திற்கு வாயுவெனப் பொருள்கொள்வது பொருந்தாது.

2. அரிய நல்லவியோ டாரு ஞான மர்த்தியர்க டேவ
ரிருவரு மவன்றனுணைக் கிணங்கியே சேவைசெய்வார்;
கிருகநற்பதி வேதாவாம் பூச்சியன்றனை யோதாவாய்
மருவுவிப்பார் மகத்தோர் மத்தி யெல்லுதிக்கு முன்னே.

(இ-ள்.) அவியைக் கையி லேந்தியவர்களாய் மேதாவிகளா கிய மர்த்தியரும் (மனிதரும்) தேவருமாகிய விருவரு மவனு டையை ஆக்ஞைக் கிணங்கிச் சேவிப்பார்கள். கிருஹபதியும் கர்மபலனைத் தரும் வேதாவும் பூஜ்யனும் (பூஜிக்கத்தகுந்தவ னும்) ஆன அவனை ஹோதாவாகச் சூரியோதயத்துக்கு முன் (உஷஸ் காலத்தில்) யஜமானர்களுக்கு மத்தியில் (அத்வர்யுக்கள்) ஸ்தாபிக்கிறுர்கள்.—(எ-று.) அத்வர்யுக்கள். யாகப் பிராஹ்மண ரில் ஒரு வகுப்பினர். ஹோதா, ஒதா, தேவர்களை யழைப்ப வன், தூதன். வே (dh) தா, விதாதா, அபிமத பலஸ்ய கர்த்தா, இஷ்டமான பலனைத் தரும் கர்த்தா வென்றபடி, இதனையே ஊழ் என்பர் குறளாசிரியர்.

3. புதியது நல்ல கீர்த்தி பொருந்திய தெங்கள்போற் றிங்
கிதயமார்ந் தெழுந்த தாயுள்படைத்தவர் மனுவின்மக்கள்
பொதியவி யுண்டியோடுபோற்றுவோர்போர்நேர்ந்தாலும்
வதிவிக்கு மதுவின்றுலு வாய்ந்தவன் றன்னைச் சேர்க.

(இ-ள்.) நவதரமானதும் ஸத் கீர்த்தியோடு கூடியதும் இதயத்திலிருந்து வந்ததுமான எங்கள் ஸ்துதி, ஆயுள் படைத் தவரும், மனுமக்களுமான மாந்தர்கள், அவியன்னத்தோடு போற்றுவோர், யுத்தம் நடந்தாலும் உற்பத்திசெய்து வணங்கு கின்ற களிப்புத்தரும் நாக்கோடு கூடிய அக்கினியை யடையட்

டும்.—(எ-று.) ரித்விஜ: ரிதௌ காலே யஷ்டார: காலத்தில் அக்கினி வளர்த்து வணங்குபவர் இருத்துவிக்குக்களாம். துதி அக்கினியை யடையட்டு மென்க.

4. மனிதர்கள் விரும்பும் பாவகன் வசு வரேணியன் பொன்
இனிதளி மகத்தினேதா வெனத்தெரிந்தோன் மாந்தர்க்கா
மனமுறு தமன னில்லின் மகப் பதி யங்கி செல்வ
வினமுயர் தனத்தி னுதை னுக வென்றுஞ் சிறக்க.

(இ-ள்.) மனிதர்கள் விரும்புகின்ற சோதகனும், வசுவும், வரேண்யனும், செல்வந் தருபவனும், யாக ஹோதாவாகத் தெரிந்தெடுக்கப்பட்டவனுமான அக்கினி, மனிதருக்காக ராட்சஸர்களை யடக்குபவனும், கிருகபதியும் செல்வங்களிற் சிறந்த தனத்துக்கு நாயகனுமாகச் சிறந்து நிற்கட்டும்.—(எ-று.) பாவகன், பொருளைச் சோதிப்பவன். வசு, செல்வன். வரேண்யன், சிறந்தவன்.

5. வேதியி லுன்னைத் தூய்மை விழைந்துமா வெனக்கிளர்த்துங்
கோதமக் குடி யுதித்த குமரர் யாந் தனப்பதியா
மேதமி லவிதாங் குன்னை மதியினு லேத்துவோமாற்
போதுகவிரைவின் வைகல் புந்தியாற்பொருள்பெற்றேனே.

(இ-ள்.) (போய்ச் சேரவேண்டிய விடத்துக்கு விரைவாகச்செல்லுங்) குதிரையைத் துடைத்து வைப்பதுபோல வேதியிலுன்னைக் கிளறிப் பிரகாசிக்கச் செய்யும் கோதம வம்சத்துதித்த யாம் (நோதஸன் என்றபடி) தனத்துக்கு நாயகனும் நல்ல ஹவிஸைத் தாங்குபவனுமான உன்னைப் புத்திபூர்வமான ஸ்துதிகளாற் போற்றுவோம். தியாவஸு (புத்தியினுற் பொருள் படைப்பவன்) ஆகிய அக்கினி வேகமாக அதிகாலையில் வரட்டும்.—(எ-று.) யாம், மரியாதைப் பன்மை.

வருக்கம் 26.

## 61. மண்டலம் 1. அநுவாகம் 11. சூக்தம் 4.

16 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை நோதஸன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. வலிமிகுத் துயர்த்தோன் வேகமருவியோ னெதிர்க்கலாதான்
சொலுமிருக் கதனுக்கேற்ற தூய்குணப் பெரியன் பின்னர்ச்

செலுமியல் பில்லாவேந்தற் குயர்துதியனம்போற்செய்வேன்
பொலனுற முன்னோ ரீந்த பிரமங்க ளோடு மாதோ.

(இ-ள்.) பலமுள்ளவனும், விரை வுள்ளவனும், பகைவ ராலெதிர்க்க முடியாதவனும், சொல்லும் இருக்குக்குச் சமான யான குணத்திற் பெரியவனும், பின்செல்லு மியல்பில்லாதவ னுமான விந்திரன் பொருட்டு, அழகாக முன்னோர் தந்த பிரஹ்ம மங்க (அவிக்குரிய அன்னங்கள்) ளோடுகூடிய உயர்ந்த துதியை (ருசியான) அன்னத்தைப் போலச் செய்து போற்றுவேன்.—(எ-று.) இருக்கு, ஸ்தோத்திரப் பாடல், பிரஹ்மம், ஹவிர்லட் சண அன்ன மென்பார் சாயணர்.

2. புவியினிற் பகைவதைப்போ னிந்திரன் றன்னைச்சூழ்ந்தே
யவியென வோங்கும் பாவை யளிப்பனு லதனை மெத்தச்
சவிபெறு குரலினோடு சாற்றுவேன்; தொல்பதிக்குக்
கவிகளை மனத்தாலந்தக் கரணத்தா லறிவாற் சொற்றூர்.

(இ-ள்.) பூமியில் சத்துருக்களை யிம்சிக்கு மிந்திரனைச் சூழ்ந்து அன்னம்போல வோங்குகின்ற பாட்டுகளை யான் அவ னுக் களிப்பேன். அந்த ஸ்தோத்திரத்தை உரத்துக் கூறு வேன். பழைமையான பதியாகிய இந்திரனுக்கு இதயத்தா லும் அந்தக் கரணத்தாலும் அறிவாலும் கவிகளை யிழைத்துப் (பிற ஸ்தோதாக்களுக்கும்) சொன்னார்கள்.—(எ-று.)

3. சட்டென நின்று செல்வங் கூட்டுஞ்சீர்ச் சூரிதன்னை
யொட்டியே வளர்க்கும் வன்மை யுள்ளவை மதியாலான
மட்டறு தெளிசொல்லோங்குந் துதிகளை யுரக்கவென்ற
னிட்டமா ரவன் பொருட்டே வாயினு லேத்துவேனே.

(இ-ள்.) உபமானமாக நிற்பவனும், நல்ல தன மளிப்பவ னும், பிரசித்தி பெற்றவனுமான ஸூரியை (இந்திரனையடைந்து விருத்திசெய்பவையும், திறமை வாய்ந்தவையும், புத்தியினு லான வையும், ஸ்வச்சமான வசனங்களா லானவையுமான துதிகளை (எனக்குப் பிரியமான) அவ் விந்திரன்பொருட்டே வாயினுல் உரக்கக் கூறுவேன்.—(எ-று.) என்றன் இட்டமார் என்னும் அடை வடமொழியி லில்லை. ஸூரி, வித்வான், ஈண்டு இந்திரனைக் குறித்து நின்றது.

4. ஊர்பவ னன்னம் வேண்டியுற, அவன் வேண்டுகோளுக்
கேர்பெறச்சமைப்போன்செய்ததேரெனவெடுப்பரூமஞ்
சீர்பெறு மிருக்குஞ் செய்ய துதிபொறுத்திடு மேதைக்குக்
கூர்சிறப் பவியு மீண்டு கூட்டுவ லிந்திரற்கே.

## மண்டலம் 1. சூக்தம் 61.

(இ-ள்.) ரதத்திலேறிச்செல்பவன் அன்னம்பெறும்படி, அவனது வேண்டுகோளுக் கிணங்கித் தச்சன் செய்துகொடுத்த தேரைப்போல ஸ்தோத்திரங்களால் சுமக்கப்பெறும் மேதாவிக்கு (இந்திரனுக்கு) க் கீர்த்தி வாய்ந்த ரிக்குக்களும் நல்ல சஸ்திரங்களும் எடுத்துக் கூறுவேன். இந்திரனுக்கு உத்கிருஷ்டமான அவியும் சேர்ப்பேன்.—(எ-று.)

5. அன்னத்தையடைவான்மாவையணியிற் றேர்ப்பூட்டியன்ன
வன்ன விந்திரற் கோரர்க்க நாவினுற் றகைப்படுப்பல்;
மன்னுசீர் பரந்தோன்வண்மை மருவிய நிலயம், நேரார்
துன்னிய புரம்பொடிப்போன் றுகளறு வீரன்போற்றி.

(இ-ள்.) அன்னப்பொருள்களிடத்து இச்சையுள்ளவன் குதிரையைத் தேரிற் பூட்டியதுபோல, அத்தகைய விந்திரனுக்கு ஒரு அர்க்கத்தை (சஸ்திர ரூபமான மந்திரத்தை) யுருப்படுத்துவேன். கீர்த்திபரந்தவனும் ஈகைக்கோர் இருப்பிடமும், சத்துருக்களுடைய கோட்டைகளை யழிப்பவனும், குற்றமற்ற வீரனுமான இந்திரனுக்கு நமஸ்காரம்.—(எ-று.) அர்க்கம், சஸ்திர ரூபமான மந்திரம்.

### வருக்கம் 27.

6. வலிமிகு மீசானன்றன் வலியொடு விருத்திரன்றன்
பொலிவுறு மருமத்தானம் புடைத்தவப்பகையொறுக்கு
மலிவுறு செயன் மிகுந்த வச்சிரந்தன்னைக் கூராய்க்
குலவுறச் செய்தான் றேவக் கொல்லனு மவனுக்கன்றே.

(இ-ள்.) வலிமிகுந்த ஐசுவரியகாரணனை (இந்திரன்) தனது பலத்தினால் விருத்திரனுடைய மருமத்தி லடித்த கருவியும், பகைவரைத் தண்டிக்கும் பல சிறந்த கர்மங்களோடுகூடியதுமான அந்த வச்சிராயுதத்தைத் தேவக்கொல்லனாகிய துவட்டா அவ் விந்திரனுக்காகக் கூராக்கிக் கொடுத்தான்.—(எ-று.) துவட்டா, தேவக்கொல்லன்.

7. தாய்மகச் சவனந் தம்மின் மகிமைசார் விண்டு சோம
மேய்ந்தநல் லனத்தையுண்டானேதிலர் சமைத்தவற்றை
வாய்ந்துறவவ்விறன்மற்றொருவனும் பகைவதைப்போ
னேய்ந்தவச்சிரத்தோன் மேகவராகம்பேர்த்தெறிந்தா
[னன்றே.

(இ-ள்.) ஸர்வ ஜகத்தையும் நிருமிக்கும் தாய் செய்யும் இந்த யாக அவயவமாகிய மூன்று ஸவனங்களிலும் மகிமைபொருந்திய விஷ்ணு ஸோமத்தையும் அழகிய அன்னத்தையும் உண்டான். உண்டதும் பகைவர்களாகிய அசுரர்கள் பரிபக்குவப்படுத்தி வைத்திருந்த தனங்களை அபகரித்தான்; பகை வதைப்பவனும் வச்சிராயுதத்தை யோச்சுபவனுமான இந்திரன் மேகமாகிய வராகத்தைப் பேர்த்தெறிந்தான்.—(எ-று.) தாய், அதிதி. மூன்று ஸவனங்கள், காலை, மாலை, நடுப்பகல் மூன்று காலங்களிலும் செய்யப்படுவன. மேகமாகிய வராகம் ஈண்டு விருத்திரனைக் குறித்தது. மேனாட்டாசிரியர் வேறுமாதிரி உரை கூறுவர். மலையினூடேயடித்துக் காட்டுப்பன்றியைப் பிளந்தான் என்பார். மற்று, அசை.

8. அகியினைக் கொன்றகாலை யவனுக் கவ்விந்திரற்கு
மிகுநடையோரே யேனு நின்றவர் தேவமாதர் [ந்தான்;
வெகுதுதியிழைத்தார் அன்னான் றேசினாற்புவிவான்சூழ்
மகிமையி லுனைப் பரந்த வான்புவி சேர்ந்தொவ்வாவே.

(இ-ள்.) இந்திரன் அகியைக் கொன்றபோது, தேவ பத்தினிகள் கமனஸ்வாப முள்ளவர்களாயினும் நின்று (அர்க்கங்களை) ஸ்தோத்திரங்களை அவ் விந்திரனுக்காகச் செய்தார்கள். இவன் தனது தேஜஸினால் தியாவாப்பிருதுவிகளை (புவி வானங்களை) க் கடந்து வியாபித்தான். (இந்திரனே!) உனது மகிமை கூறுமிடத்து விசாலமான வானம் பூமிகள் சேர்ந்து உனக்குச் சமானமாகா.—(எ-று.) அகி, பாம்பு, விருத்திரன். தேவமாதர் தேவபத்தினிகள், காயத்திரி முதலியோரென்பார் சாயணர். இடமாற்றைக் கவனிக்க.

9. அவனது மகிமை மெய்யே யந்தரம் புவி வானத்திற்
சவிமிகுத்தது போர்வீரன்றன்னொளிமிகுந்தோன் வேந்த
னெவர்தொழிலேனுஞ்செய்வோனாயுதமெல்லாங்கொண்டோன்
குவிமுகில்மோதவிட்டான்கொள்ளலர்த்தெறுப்போன்போரில்.

(இ-ள்.) உண்மையாகவே அவனது மகிமை, வானம், அந்தரம், பூமி யென்னும் மூன்று லோகங்களிலும் ஒளியோடு பரந்தது. யுத்த வீரனும், ஸ்வயமான காந்தியோடு விளங்குபவனும், எல்லாக் காரியங்களையும் செய்பவனும், எல்லா ஆயுதங்களையும் தரித்தவனும், யுத்தத்தில் பகைவரைக் கொல்லுபவனுமான விந்திரன் மேகங்களை (ஒன்றோடொன்று) மோதவிட்டு மழையைப் பெய்விக்கிறான்.—(எ-று.)

10. தன்ன தாற்றலினு லிந்திரன் குலிசத்தைத் தாங்கி
மன்னுநீர்வற்றவாற்றும்விருத்திரற் பொடித்தடைத்துத்
துன்னுமாவென்னுநீரையுலகளிப்பதனைத்தோய்த்தான்;
கொன்னுறுமகத்தோன் கொள்ளுமனத்தினிற் பலனீந்தானே.

(இ-ள்.) தன்னுடைய வல்லமையினு லிந்திரன் வச்சிராயுதத்தைக் கையி லேந்தி, ஜலம் சுஷ்கமாகப் போகும்படி செய்யும் விருத்திரனைச் சின்னபின்னப்படுத்தி, அடைத்து வைத்திருந்த பசுவென்று சொல்லத்தகும் நீரை, உலகத்தை ரட்சிக்கும் தொழிலுள்ளதைப் பெய்வித்தான். அவியளிக்கும் யஜமானனிடத்து ஸமானபுத்தியோடு பொருந்தியவனுக்குக் கர்ம பலனைத் தந்தான்.—(எ-று.) மகத்தோன், யாககர்த்தா, யஜமானன்.

11. அவனொளி வலனிற் சத்த வாறுக டம்மிடத்தே
யவனது குலிச மார்ந்து நியமிக்க வமைந்து நின்ற;
நவநிதி செய்து தாசுடற்கதை நல்கி நாடா
ரவமுறவழிப்போன்றார் வீதிக்குநீர்த்துறை செய் [தானே.

(இ-ள்.) அவனது காந்தி சிறந்த பலத்தினுல், அவனது வச்சிராயுதமானது நியமிக்க வழு கங்கைகளும் தங்கள் தங்களிடத்திற் பொருந்தி நின்றன. தன்னைத்தானே (விருத்திர வதம் முதலிய செய்கைகளால்) ஈசான (பெருஞ்செல்வம் படைத்தவ) னுகச் செய்துகொண்டு அச்செல்வத்தைத் தாசுஷுனுக்கு (யாககர்த்தாவுக்கு)க் கொடுத்துப் பகைவர்களை வதைக்குமவ்விந்திரன் துர்வீதிக்கு (அவன் தண்ணீரில் முழுகிப்போகும் தருணத்தில்) கால்நிலைக்கும் துறையை ஏற்படுத்தினுன்.—(எ-று.) ஸப்த கங்கைகளை மண். 1, சூக். 32, செய். 12-ற் பார்க்க. துர்வீதி, இவன் வய்யனது மகன். ஒருகாலத்தில் தண்ணீரில் மூழ்கிச் சாக நின்றபோது இந்திரன் அவனுடைய கால் நிலைக்கும்படியான நீரி லவனைச் சேர்த்தான். மண். 2, சூக். 13, செய். 12 நோக்குக. இவனது பெயரை மண். 1, சூக். 36, செய். 18-லும், மண். 1, சூக். 54, செய். 6-லும் பார்க்க.

12. எல்லையில் வலியை யீயு மீச்சுர வோர் கணத்தே
மல்லுறக் குலிசந் தன்னை விருத்திரன் மடிய வோச்சாய்;
செல்லினின்றிழியவெள்ளஞ்சாய்ந்துசேர்வச்சிரத்தாற்
கொல்லுமாக்கிழிப்பார்போலக்கணுக்களைக்கிழித்திடாயே.

(இ-ள்.) எல்லையற்ற வலிமையைத் தரும் ஈசானனே! சீக்கிரத்தில் விருத்திரன் சாகும்படி வச்சிராயுதத்தை வீசுவா

யாக. சாய்ந்து விழுகின்ற வச்சிராயுதத்தினால் மேகத்தினின்று மழை வெள்ளமானது பூமியை நோக்கிக் கிழிழியுமாறு உலகத்தவர் தாங்கொன்ற மாட்டைத் தோலுரிப்பதற்குக் கணுக்களைக் கிழிப்பதுபோல, விருத்திரனது (மேகத்தினது) கணுக்களைக் கிழித்தெறிவாயாக.—(எ-று.)

13. போரினில் விரைந்து சென்று பூருவ காலந் தன்னி
னேரினிற் செய்த வெல்லா மியம்புக நவ வுக்தத்தாற்
போரினிற்படைகளோச்சிப்பொருந்தலர்தம்மைவாட்டக்
கூரிய கோபத்தோடு மவர்களைக் குமைக்கும்போதே.

(இ-ள்.) யுத்தத்தில் வச்சிராயுதம் முதலிய ஆயுதங்களை யெறிந்து பகைவர்களைக் கொல்லத்தக்க கோபத்தோடு அவர்களை இம்சிக்கும்போது, அவன் பழையகாலத்து யுத்தத்தில் விரைவாகச்சென்று செய்த அரிய செயல்களையெல்லாம் சேர்த்து நவீனமாக உக்த மொன்று செய்து (ஸ்தோதாக்களே!) சொல்லுவீர்களாக.—(எ-று.) உக்தம், சஸ்திரம், ரிக் ஸ்தோத்திரம்.

14. அவனிடத்துற்றவச்சத்தவனிவானடுங்கும்; மற்றப்
புவனியிற்சிறைபோமென்றுபொருப்பசையாவாம்;அன்
னிவணுறு துக்க நீக்கு முதவியைப் பல சூக்தத்தாற்
கவனமாய்ப்போற்றிப்பின்பேவீரநோதஸன்பெற்றனன்.

(இ-ள்.) அவனிடத்து (இந்திரனிடத்து) உண்டான பயத்தினால் பூமியும், வானமும் கம்பிக்கும். மலைகளும் (தங்கள் சிறகுகள் போய்விடுமென்ற) பயத்தினால் அசையமாட்டா. அவ்விந்திரன் உலகத்தாருடைய துக்கங்களை நீக்கும் உதவியைப் பல சூக்தங்களால் கவனமாகத் துதித்த பிற்பாடுதான் நோதஸன் வீரியத்தை யடைந்தான்.—(எ-று.) நோதஸன், இச் சூக்தத்தைக் கண்ட ரிஷி. மேனாட்டாசிரியர் இரண்டாமடியை "புவனியினுறுதி பூண்டபொருப்புமே விதிர்விதிக்கும்." என்று மொழி பெயர்ப்பார்.

15. ஏகனாய்ப் பகைவதைப்போனியைந்த பல்தனத் தீசான
னேகை யினேற்கு மச்சீ ருறுதுதி வைக்கப் பெற்ற;
சோகமில் சுவச்சுவன் சேய் சூரியனோடு போராடி
வாகையினவனுஞ்சோமம்வழங்குமேதசனைக்காத்தான்.

(இ-ள்.) ஒருவனாகவே நின்று சத்துருக்களை வதைப்பவனும், பலவித தனத்துக்கும் நாயகனுமாகிய விந்திரன் விரும்பு

கின்ற அந்தச் சிறந்த ஸ்தோத்திரங்கள் அவனுக்காகச் செய்யப் பட்டன. ஸோமத்தைப் பிழிந்துதரும் ஏதசனோடு யுத்தஞ்செய்த, ஸ்வச்வன் மகன் சூரியனோடு யுத்தஞ்செய்து, அந்த ஏதசனை இந்திரன் காப்பாற்றினான்.—(எ-று.) ஈண்டு ஒரு இதிஹாஸமுண்டு. "ஸ்வச்வன் என்னு மரசன் பிள்ளைப்பேற்றிற்காக ஸூர்யனை உபாஸித்தான். சூரியனே அவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தான். ஒருகாலத்து அந்த சூரியனுக்கும் ஏதச னென்னும் ரிஷிக்கும் சண்டை நேர்ந்தது. அப்பொழுது ஏதசனுடைய சோமத்தை ஏற்று இந்திரன் சூரியனைத் தோற்கடித்தான்." என்பது. மண். 2 சூக். 12 செய். 5 நோக்குக.

16\. கோதமக் குடியோ ருன்னைச் சூழுறு பிராமணங்க
ளோதியே துதித்தார்; ஓங்குமரியினை யுவப்பிற்பூட்டு
மேதமில் வேந்தே யின்னார்க்கீக பல்லுருவச் செல்வம்;
போதுகவிரைவின் வைகல்புந்தியாற்பொருள்பெற்றானே.

(இ-ள்.) கோதம வம்சத்தில் வந்தவர்கள் உன்னை நன்றாய்ச் சூழும் மறைகளைக் கூறித் துதித்தார்கள். இரண்டு குதிரைகளையும் தேரிற் பூட்டும் குற்றமற்ற இந்திரனே! இக் கோதம வம்சத்தாருக்குப் பல உருவத்தோடுகூடிய செல்வத்தை யளிப்பாயாக. பிராதக்காலத்தில் (விடியற்காலத்தில்) தியாவஸுவாகிய இந்திரன் விரைவாக வரட்டும்.—(எ-று.) தியாவஸு, கர்மத்தால் அல்லது புத்தியினால் பொருள் சேர்ப்பவன், இந்திரன். 58, 60, 61, 62, 63, இவ் வைந்து சூக்தங்களின் கடைசிச் செய்யுள்களின் கடையடியொன்றே.

வருக்கம் 29.

ஆகச் செய்யுள் 153

நான்கு அத்தியாயங்களுக்குமாகச் செய்யுள் 708.

## 4-வது அத்தியாயம் முற்றும்.

---

## 5-வது அத்தியாயம்.

இவ் வத்தியாயத்தில் 31 வருக்கமும், 19 சூக்தமும், 185 இருக்குக்களு முள்ளன.

## 62. மண்டலம் 1. அநுவாகம் 11. சூக்தம் 5.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கோதம புத்திரன் நோதஸன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. *அங்கிரன் போன்ற யாமு மணிமிகு வலியோன் கீதந்*
   *தங்கிய வனப்பினர்க்குத் தருசுகத் தோம கோஷ*
   *மங்கமா வுன்னுவோம் ; பல் லிருடிய ரருச்சித் தேத்தும்*
   *பொங்குசீர் வீரற் கர்க்கம் பொருத்தியே பூசிப்போமே.*

(இ-ள்.) நல்ல வலிமையுள்ளவனும், கீதங்களா லலங்கரிக்கப்படுபவனுமான இந்திரனுக்காக, அங்கிரஸனைப்போல யாங்களும் சுகத்தைத் தரும் ஸ்தோத்திர கோஷத்தை விசேஷமாகச் செய்ய நினைப்போம் (செய்வோம் என்றபடி). பல ரிஷிகள் அர்ச்சனை செய்து துதிக்கின்ற கீர்த்தி மிகுந்த வீரனுக்கு (இந்திரனுக்கு) அர்க்கத்தை (அர்ச்சனு ஸாதன மந்திரத்தை)ச் சார்த்திப் பூஜை செய்வோம்.—(எ-று.)

2. *பண்டையாங்கிரஸர் முன்னோர் பாதையை யறிந்தர்ச்சித்துக்*
   *கண்டு பல்லாவைப் பெற்றுக் களிபெற வேது வான*
   *மிண்டுசீர் மகிமைபூண்ட வெவ்வலி யவனுக் கென்று*
   *பண்டருந் துதியிற் சாமம் பணிந்தொலியோடு சொன்மின்.*

(இ-ள்.) (இருத்துவிஜர்களே !) முற்காலத்து அங்கிரஸர்களது முன்னோர்கள் வழிதெரிந்து அர்ச்சித்துப் (பணியென்னுமசுரனால் மூடி வைக்கப்பட்டிருந்த) பல பசுக்களையும் அடைந்து ஸந்தோஷத்தைப்பெற வேதுவான சீர் நெருங்கிய மகிமையோடுகூடிய மிக்க வலிமையுள்ள இந்திரன் பொருட்டுப் பண்ணாகப் பாடப்படும் ஸாம ஸ்தோத்திரத்தை சத்தத்தோடு கோஷிப்பீர்களாக.—(எ-று.) இருத்துவிஜர், காலமறிந்து தேவகார்யம்செய்து வணங்குவோர்.

3. *இந்திரன் விழைய வாங்கி ரஸனுமே யிட்டங்கொள்ள*
   *அந்திறன் குழவிக்காக வன்னத்தைச் சரமை பெற்றாள்;*
   *மந்திரப்பதிநாகத்தை மலைத்தனன் பசுவைக்கண்டான்;*
   *சுந்தர வீர ராக்க டோன்ற வெற்றியி னார்த்தாரே.*

(இ-ள்.) [இவ்விடத்துப் பின்வரு மிதிஹாஸம் அறியத்தக்கது: சரமா (மை) இந்திரனது நாய், யமனுடைய காவல் நாய்களிரண்டிற்குந் தாய். இந்திரன் ஒரு காலத்தில் பணியென்னு மசுரர்கள் திருடிய பசுக்களை (மேகங்களை)க் கண்டு பிடிக்கச் சொன்னபோது, சரமை (சூரியனது ஒளியை மீட்டுத்தரும் விடியல்) அப்பசுக்களின் பாலைத் தன் குட்டிகளுக்குத் தருவதாயிருந்தாற் கண்டு பிடிப்பதாகச் சொல்ல, இந்திரன் அவ்வரத்தை யீந்தான். உடனே மோப்பம் பிடித்து அப்பசுக்களைச் சரமை கண்டுபிடித்தது. இந்திரன் அப்பணிகளை (அசுரர்களை)க் கொன்று பசுக்களை மீட்டான்.—சட்யாயனத்திலுள்ளது.] இந்திரன் விரும்பியதனாலும் அங்கிரஸன் இஷ்டப்பட்டதனாலும் சரமை தன் குழந்தைகளுக்கு வேண்டிய உணவை (பாலை) யடைந்தாள். மந்திரத் தலைவனான விந்திரன் மலையைப் பிளந்து பசுக்களைத் திறந்து விட்டான். அழகிய வீரர்களாகிய தேவர்கள் அப்பசுக்களைக் காணவே ஜயகோஷஞ் செய்தார்கள்.—(எ-று.) குழவி, திணைவழுவமைதி; பெற்றாள் என்பதற்கேற்பக் குழவியெனக் கூறினார்; குட்டியென்பது பொருள். நாய்க்குட்டிகளுக்கல்ல அங்கிரஸன் குழந்தைகளுக்குக் கொள்ள வேண்டுமென்பார் (Ludwig) லுட்விக்கென்பவர். அந்தில், அசை.

4. பண்ணொடு மியைந்த பாடல்பகரும் விப்பிரர் முழங்க
வெண்ணுறு மெழுவ ரங்கிரஸர்நவக்குவர்கள் போற்றத்
தண்ணுறு மலை சேதித்தாய்; சக்கிர, இடித்து, வேந்தே!
எண்ணினும் விரை தசக்வ ரேத்த நீ வலற் பிளந்தாய்.

(இ-ள்.) பண்ணோடு கூடிய பாடல்களைச் சொல்லும் விப்பிரர்கள் (மேதாவிகள்) உதாத்த அநுதாத்த ஸ்வரங்களோடு பாடவும், அங்கிரஸ வம்சத்தைச் சேர்ந்த ஏழு நவக்குவர்கள் போற்றி செய்யவுங் கேட்டு நீரைவைத்திருந்த (மேக) மலையைப் பிளந்தாய். சக்ர (சக்தியுள்ளவனே)! இந்திரனே! மனத்திலும் வேகமாகச் செல்லும் தசக்வர்கள் துதிக்க நீ இடித்து (வச்சிரத்தா லடித்து) (நீரை யடைத்து வைத்திருந்த) வலனென்னு மசுரனைப் பிளந்தனை.—(எ-று.) ஸத்ர யாகத்தை ஒன்பது மாதங்களிற்செய்து பலனடைவிப்பவர் நவக்குவரென்றும், அதனையே பத்து மாதங்களிற்செய்து பலனடைவிப்பவர் தசக்(கு)வரென்றும் சொல்லப்படுவர். மண். 1, சூக். 33, செய். 6 பார்க்க. அங்கிரஸர் எழுவர் மேதாதிதி

முதலியோர். மந்திர மத்திம ஸ்வரங்களோடு மென்றும் சொல்லலாம். வேகமாகப் பசுக்களைக் கண்டுபிடிக்கச் செல்லும் தசக்(கு) வ ரென்பார் மேனுட்டாசிரியர். வலன் பசுக்களை (மேகத்தை) யடைத்துவைக்கு மோரசுரன்.

5. வைகலர்த் தெறுப்போ யங்கிரசர்களின் போற் றுவந்து
வைகலாதவன் கரத்தான் மலியிருள் வதைத்தாய், வேந்தே;
செய்கையிற் பூமிச்சானு பரப்பினுய்; திவோராஜந்தான்
வைகுறுமூலந் தன்னை வயக்கினுய் திடமாத் தானே.

(இ-ள்.) சத்துருக்களை அதஞ்செய்பவனே! இந்திரனே! அங்கிரஸர்களின் ஸ்தோத்திரத்தைக் கேட்டு மகிழ்ந்து விடியற் காலத்தில் சூரிய கிரணங்களைக்கொண்டு இருட்டைக் கெடுத்தனை. உனது செய்கையின் பலத்தினுல் பூமியிலுள்ள (உன்னதப் பிரதேசங்களை) விஸ்தாரமாகச் செய்தாய். அந்தரிட்ச லோகத்தின் அடிப்பாகமாகிய (பூமியை) உறுதியா யிருக்கச் செய்தாய்.—(எ-று.) வேந்து, இந்திரன். சானு, ஸாநு, மலைப் பிரதேசம். திவோராஜம், திவம் அந்தரிட்சம் (Mid air) ரஜம், உலகம்; அந்தரிட்சவுலகம்.

6. வளர்ந்தவான் பூமி கூடு மவ்விட மதுர நீரோ
டளாங்தொழுகாறு நான்கை வெள்ளமார்ந்திடச் செய்தானுற்
றிளைந்த போராற்றற் செய்கை செய்தவப் புதுமை யோனுல்
விளைந்தவிவ்வதிசயந்தான் மிகவும் பாராட்டற் பாற்றே.

(இ-ள்.) வானம் வளர்ந்து பூமியைச் சேரு மவ்விடத்தில் மதுரமான நீரோடு கூடிய ஆறுகள் நான்கை வெள்ளம்பெருகியோடும்படி செய்தான். அதிசயமான காரியங்களைச் செய்யும் அவனுற் செய்யப்பட்ட இந்த அழகிய வலிமைசிறந்த காரியமானது பாராட்டத்தக்கது. (பூஜிக்கத் தகுந்தது).—(எ-று.) நான்கு நதிகள் கங்கை முதலிய முக்கிய நதிகள் என்பார் சாயணர்.

வருக்கம் 1.

7. துதிப்பவர் மறைக்கெளியோன் போரினர்க் கரிய னித்தங்
கதிப்புறப் பிறப்போ னுெத்துக்கண்ட வோரிட மிரண்டாய்
மதிப்புறச் செய்தான்; கோலச்செய்கையன், உரோதசீயை,
யதிப்பர மாகாயத்துப் பகனென, வளர்த்தா னன்றே.

(இ-ள்.) ஸ்தோத்திரஞ் செய்பவர்களுடைய மந்திரங்களுக்கு எளிதில் அகப்படுபவனும், யுத்தஞ்செய்து ஜயிக்க விரும்புவோர்க்கு வெல்லுவதற்கு அருமையானவனும், நித்தியமும்

## மண்டலம் 1. சூக்தம் 62.

ஊக்கத்தோடு தோன்றுபவனுமான (இந்திரன்) சமானமாய்ச் சேர்ந்திருந்த ஓரிடத்தை இரண்டாகச் செய்தான். மனோஹரமாய் உயர்ந்த ஆகாசத்தில் ஒழுகும் சூரியனைப்போலச் சோபன கர்மத்தோடு கூடியவன் (இந்திரன்) ரோதஸீக்களை (வானம் பூமியென்னும் இரண்டு ஸ்திரீகளையும்) வளரும்படி செய்தான்.—(எ-று.) ஸநஜா: நித்தியமும் உற்சாகத்தோடு பிறப்பவன் அல்லது காணப்படுபவன் என்பதுபொருள். உரோதஸீக்கள், தியாவாபிருதுவிகள், வானம் பூமிகள். வடமொழியில் வார்த்தைகளுக்குப் பாலுண்டு. சில பதங்கள் அஃறிணைப் பெயர்களாக விருந்தாலும், அவை ஆண்பால், பெண்பால் வசனங்களாகவிருக்கும். தமிழ்ப்பதங்களைப்போல வடமொழிப் பதங்கள் பொருள் பற்றிப் பால் கொள்ளுபவையல்ல. ஈண்டு ரோதஸீ ஸ்திரீ வசனமாம். அதனாற்றான் இரண்டு ஸ்திரீகளையும் என்று பொருள் கூறினார். பகன், சூரியன்.

8. ஒவ்வொரு நாளுந் தோன்று முவதிகள் வேற்று ரூப<br>மொவ்வுறு வோர்கள்தத்த முளப்படி மாறி மாறிக்<br>கவ்வையி னீண்டகாலங் ககமொடு புவியிற் செல்வார்<br>வவ்விய விருளிராவு மலியொளி வைகலும்மே.

(இ-ள்.) நாள்தோறு முதிக்கும் யுவதிகளும், ஒருவருக்கொருவர் மாறுபட்ட வுருவத்தோடு கூடியவருமான, இருட்டோடு கூடிய இரவும், ஒளியோடு கூடிய பகலும், குற்றமற்ற நெடுங்காலந்தொட்டு ஆகாயத்திலும் பூமியிலுமாக மாறி மாறிச் செல்வார்கள்.—(எ-று.) யுவதி, உவதி யென்றாயிற்று; யுவதி, தருணி, வயதுவந்த ஸ்திரீ. இரவையும், உஷஸையும் (விடியற் காலத்தையும்) ஸ்திரீகளாக உவமித்தார். அவை ஒன்றுபோக ஒன்று வந்துகொண்டேயிருக்கு மென்றபடி.

9. நற்றொழில் புரிவோ ரூர்ந்த நல்வலி மகன் மகத்தோ<br>டுற்றொளி ரொருவன் யாகத்தோர் பழநட்பைக்காத்தான்;<br>மற்று நீ கறுப்புச் சேப்பு மருவியே சமையா வாக்கள்<br>பெற்றநன்மடியில் வெண்மை பிறங்கும் பக்குவப் பாலிட்டாய்.

(இ-ள்.) நல்ல தொழிலைச் செய்பவனும், பலத்தின் புத்திரனும் (மிக்க பலவானும்) மகத்தோடு கூடி விளங்குபவனுமான (இந்திரன்) யாகஞ்செய்பவர்களோடு பழமையாக வேற்பட்ட சிநேகிதத்தைச் சோரவிடாதபடி காப்பாற்றுகிறான். (இந்திரனே!) நீ கறுப்பும் சிவப்புமாய்ப் பக்குவமில்லாத பசுக்களின் மடியில் வெண்மையாய்ப் பக்குவப்பட்ட பாலை அமைக்

கிறுய்.—(எ-று.) பசுக்களின் நிறமும் பாலின் நிறமும் வேறு பட்டு நிற்பதும், பச்சையாய்ப் பக்குவமில்லாத பசுவில் கறந்த வுடன் உண்ணுதற்குப் பக்குவமான பாலைக்காண்பதும் மூறுணும். கறுப்புக் கோழி வெள்ளை முட்டை யிடுவது என்னும் வசனம் போன்றது இக்கூற்று. காத்தான், இட்டாய் என்பன நிகழ்காலப் பொருளன.

10. சநாதன காலந் தொட்டுச் சமவிடத் தசைத லின்றி
விறுவுதலின்றி யெண்ணில் விரதங்கள் மொய்ம்பிற் காக்கும்;
வினைதமாருடன் பிறப்பாம் விரல்கள் பன்னியர் தாய்மார்போல்
மனைபலமிகுந்தோன் மாட்டு மருவிச் சேவிக்குமாதோ.

(இ-ள்.) விரல்கள் நெடுங்காலத்திலிருந்து சமானமான இடத்தில் அசைவில்லாமலிருந்து, கேட்பதற்கு முன் ஆலஸ்யமில்லாமல் (ஆயிரக்கணக்கான) கணக்கில்லாத விரதங்களைத் தங்கள் பலத்தினுற் காக்கின்றன. சகோதர பாவமுள்ள அவ்விரல்கள், பத்தினிகளைப்போலவும் தாய்மார்களைப்போலவும் மனைபல மிகுந்தவனிடத்துப் பொருந்திச் சேவை செய்யும்.-(எ-று.) விறுவுதலின்றி யென்பது ஏவாமல் என்னும் பொருளில் வந்தது. அஹ்ரீதயானம் என்னும் வடமொழிப் பதத்துக்கு லஜ்ஜாரஹிதம் அல்லது ப்ரசஸ்தகமனம் எனப் பொருள் கூறுவார் சாயணர். மனைபல மிகுந்தோன் என்பது மேனுட்டாசிரிய ருரைப்படி மொழிபெயர்த்தது. எண்ணில் என்றிராமல் ஆயிரக் கணக்கானவென்று வடமொழி மூலத்திலுள்ளது. விரல்கள் விரதங்கடோறுங் கூப்பத் தவறுவதில்லை யென்றபடி. சமானமானவிடத்தில் அசையாமல் என்றது ஒரு கையிலிருந்து வெளித்தோன்றுவதால் என்பார் சாயணர்.

வருக்கம் 2.

11. பொலிவினைய்வணக்கத்தோடும்பொருந்துபுத்தருக்கத்தோடும்,
பொலிதனம்வேண்டியென்றும்புரியுநித்தியமும்வேண்டி
மலியு மேதைய ருன்மாட்டு வந்தனர்; வலிமிகுந்தோய்!
தலைவர் காதலிய ரென்னச் சாரு மம்மறை யுன்மாட்டே.

(இ-ள்.) அழகு வாய்ந்தவனே! (இந்திரனே) நமஸ்காரத்தோடும், புதிய அர்க்கங்களோடும் (சஸ்திரரூபமான மந்திரங்களோடும்) மிகுந்த செல்வத்தையும், சநாதன காலமாக எப்போதும் செய்யும் நித்திய கர்மங்களையும் விரும்பி மேதாவிகள் உன்னிடத்து (மிகப் பிரயாசையோடும்) வந்தார்கள். பல

வானே! அவர்கள் சொல்லும் ஸ்துதிகள், காதலிகளான மனைவியர் தங்கள் காதலர்களிடத்துச் சேர்ந்து நிற்பதுபோல, உன்னையடைந்து நிற்கும்.—(எ-று.) அருக்கம், அர்க்கம், சஸ்திர ரூபமான மந்திரம்.

12. பண்டுதொட்டுன்கரத்துப்பணம்,பொலிவுள்ளோய், நாச
மண்டியதில்லை, யீத்துக் குறைவணைந்ததுமே யில்லை;
கொண்டனை தீரம் காந்தி குலவு நற்கிருது, வேந்தே,
மண்டிய கருமத்தோய் பொன் வழங்கலுன் கருமத்
[தாலே.

(இ-ள்.) அழகு வாய்ந்தவனே! பழைய காலத்திலிருந்து உன் கரங்களிலுள்ள செல்வங்கள் நாச மடைந்தது மில்லை; தானஞ் செய்து குறைந்துபோனது மில்லை. வேந்தனே (இந்திரனே!) நீ தீரவான், காந்திமான், கிருதுமானுமாம். மிகுந்த கர்மத்தோடு கூடியவனே! உனது கருமங்களினால் எங்களுக்குப் பொன்னை வழங்குவாயாக.—(எ-று.) 'கிருது லோகரக்ஷண காரணமாகிய கர்மம்' என்பார் சாயணர். வேந்தன், இந்திரன். சச்சிவ: என்பதற்குப் பலவானென்று பொருள் கொண்டு, பலத்துக்கு நாயகனே உனது பலத்தால் எங்களைப் பலப்படுத்துவாயாக.' என்று பொருள் கூறுவார் மேனாட்டாசிரியர்.

13. கன்றலி னேதாத், தேரிற் கபிலமாப் பூட்டா நிற்போய்!
என்றுமுள்ளவ, உரத்தோய், இந்திர, உனக்கு நோதன்
துன்று கோதம னிழைத்தா னவம்பெறவிச் சூக்தத்தை;
துன்றுகவிரைவின்வைகல் மதியினாற் றனம்பெற்றோனே.

(இ-ள்.) உரம் (பலம்) பொருந்தியவனே! இந்திரனே! நன்றாக (மாந்தரை) நடத்துவோனும், தேரில் கபில நிறமுள்ள குதிரைக ளிரண்டையும் பூட்டுபவனும், நித்தியமாக வுள்ளவனும், ஆன வுனக்காகக் கோதம புத்திரனாகிய நோதஸன் புதிதாக விந்தச் சூக்தரூபமான ஸ்தோத்திரத்தைச் செய்தான். புத்தியினால் தனத்தைச் சம்பாதித்தவனை இந்திரன் பிராதக் (விடியற்) காலத்தில் வேகமாக வந்துசேரட்டும்.—(எ-று.) படர்க்கை முன்னிலை மாற்று. வடமொழி மூலத்துக்குத் தக்கபடி உரையை மாற்றி எழுதினர்; எல்லா விளிகளையும் அப்படியே முன்னிலைப் படுத்தினும் படுத்தலாம். நோதஸனெனினும் நோதனெனினு மொக்கும்.

வருக்கம் 3.

**அஷ்டகம் 1. அத்தியாயம் 5.**

## 63. மண்டலம் 1. அநுவாகம் 11. சூக்தம் 6.

9 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: ஷை நோதஸன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப் தேவதை: இந்திரன்.*

1. *மகத்துவன்நீ, யசுரர் வலிமை கண் டிந்திரா வா
னிகத்துயர் புவி யச்சத்தை யெடுத்தபோ துன்பயத்தால்,
வகுத்த வெவ்வுயிரும், வன்மைவாய் பருப்பதமுமென்றூழ்
மிகுத்திடு கற்றை யென்ன நபத்தினிற் சலித்த போதே.*

(இ-ள்.) இந்திரனே! அசுரருடைய பலத்தைக் கண்டு வானமும் பூமியும் பெற்ற நடுக்கத்தைத் தீர்த்தபோ துன்னிடத்திலுண்டான பயத்தினால் எல்லாச் சீவர்களும், வலிமை மிகுந்த மலையுங்கூட, சூரிய கிரணங்கள் ஆகாயத்திற் சலிப்பது போலச், சலித்த (நடுங்கின) போது, நீ குணத்திற் பெரியவனாயிருக்கிறாய்.—(எ-று.) மேனாட்டாசிரியர், 'நீ மகான். பயத்தினால் அப்பொழுது உன்னைக் கண்டு பயந்து உறுதியான மலைகளும் பெரிய பிராணிகளும் தூளியைப்போலச் சலித்தன.' என மொழிப் பெயர்ப்பார். அது சாயண ருரைக்கு மாறுவதன்றி வியப் பின்மையுங் கொண்டதா மென்க. சலித்த போது நீ மகத்தவன் ஆமெனச் சேர்க்க.

2. *தபுவில்சீர்க் கிருது வொன்னார்த் தடிந் தவர்பல்புரங்கள்
விபலமா வடிக்க வாய்ந்த மிகுவலி வச்சிரத்தைக்,
கபிலமாத் திரிபவற்றைக் கட்டிய காலை, வேந்தே,
யபிமுகத் துதியோனீத்தா னத்தத்துப், பலரழைப்போய்!*

(இ-ள்.) கெடாது நிலைத்த கீர்த்தி பொருந்திய கிருது (கர்மம் அல்லது ஞானம்) வோடு கூடியவனே! புருஹூதனே! (பலராலும் அழைக்கப் படுபவனே) இந்திரனே! சத்துருக்களைக் கொன்று அவர்களுடைய பல கோட்டைகளையும் அழிப்பதற்கு காரணமான வச்சிராயுதத்தை, நீ கண்டபடி திரிந்து கொண்டிருந்த குதிரைகளைத் தேரிற் கட்டியபோது உன்னைத் துதித்த ஸ்தோதா உன் கரங்களிலளித்தனன்.-(எ-று.) ஸ்தோதா ஸ்தோத்திரஞ் செய்யப் பிரயத்தனஞ் செய்வதற்குள் உன் கையில் வச்சிராயுதத்தைக் காண்கிறான் என்பது கருத்து.—சாயணர். அத்தம், ஹஸ்தம், கரம், கை.

3. இந்திர சிறந்தோனீயே, யிவர்களைத் திக்கரிப்பாய்;
நந்திய ரிபுக்களுக்கு நாயக, நரர் நலத்தோய்,
புந்துறு பகைவதைப்போய், உயர்மதியிளைஞன் குற்சற்
கந்திலுற்றெறுக்கும் வீர வமரிற் சுட்டுணனைக்கொன்றாய்.

(இ-ள்.) இந்திரனே நீ உத்கிருஷ்டமானவன். பகைவர்களாகிய இவர்களைத் திக்காரஞ் செய்வாய். நீ ரிபுக்களுக்கு அதிபதி; நரர்களுக்கு நலஞ்செய்பவன்.; சத்துருக்களைக் கொல்லுபவன். சிறந்த புத்தியுள்ள வாலிபனாகிய குத்ஸனுக்காகச் சத்துருக்களை வதைக்கும் வீரர் பொருந்திய யுத்தத்தில், எல்லாவற்றையும் வற்றடிப்பவனாகிய சுஷ்ணன் என்னும் அசுரனைக் கொன்றனை.—(எ-று.) ரிபுக்கள் மண். 1, சூக். 21, செய். 8-ல் பார்க்க. சுட்டுணன், சுஷ்ணன். மண். 1, சூக். 50, செய். 6-ல் பார்க்க. குத்ஸன், மண். 1, சூக். 51, செய். 6-ல் பார்க்க.

4. தோழனு யவற்கு நீயே தூண்டினுய் தனத்தை யாண்மைப்
பாழிவெஞ்செயல் மனத்தோய்! பழகு நற்குலிசச் சூர!
தாழலா வீரர் போரில் விருத்திரற் றடிந் தெளிதிற்
கீழெனப் பரந்த தாசர் கேடுற வடித்த போதே.

(இ-ள்.) காளைபோன்ற செய்கையையும் மனத்தையுமுடையவனே! வச்சிராயுதத்தோடு கூடியவனே! சூரனே! பின் வாங்காத வீரர்கள் நிறைந்த யுத்தத்தில் விருத்திரனைக் கொன்று கீழ்மக்களாகிய தஸ்யுக்களைக் கேடெய்தியோடும்படியடித்தபோது, நீயே அவனுக்கு (குத்ஸனுக்கு)த் தனத்தை யளித்தாய்.—(எ-று.) அவனுக்கு, அவற்கு, அக் குத்ஸரிஷிக்கு என்பது பொருள். வ்ருஷமந: காளைபோன்ற மநமுள்ளவன். வ்ருஷகர்மன் காளைபோன்ற செய்கையை யுடையவன். இரண்டையும் சேர்த்துப் பாழிவெஞ்செயன் மனத்தோய் என்றார் பாட்டில். காமாபிவர்ஷக மநஸ்க என்றும் விருஷ்டியுதக ஸேச (ch) நரூப கர்மோபேத என்றும் சாயணர் பொருள் கூறுவர். இச்சித்தவற்றை யளிப்பவனே! மழை நீரைப்பெய்விக்குங் கர்மத்தோடு கூடியவனே என்பது அவற்றின் பொருள்.

5. இந்திர, திடமியைந்தோ னென்னினு மவன்றன்கேட்டை
முந்துறவிரும்பாய்; போற்றின் முரணினர் விரும்பா
கந்துக மோடும் வீதி காணுக விரிவா, யங்கே [வெங்கள்
சிந்துக, வச்சிரத்தோய், பகையினைத் தண்டம்போன்றே.

(இ-ள்.) இந்திரனே! (பகைவன்) திடம் பொருந்தியவனையும் அவனது கேட்டை நீ விரும்பமாட்டாய், சத்துருக்

களால் விரும்பப்படாத ஸ்தோதாக்களாகிய எங்களுடைய குதிரைகள் ஓடுகின்ற வீதி விஸ்தாரமாயிருக்கும்படி செய்வாயாக. மேலும், வச்சிரியே! அவ்வீதியில் எதிர்ப்படும் சத்துருக்களைத் தடியா லடிப்பதுபோல வச்சிராயுதத்தா லடித்துக் கொல்லுவாயாக.—(எ-று)

வருக்கம் 4.

6. பொருநர் நற்றனத்தை வேண்டிப் பொருதிடு மாயோதத்தி
னரர்களு முதவிக்காக நாடியே யுனையழைப்பார்;
உரம்பெறு மிந்திரா இச் சமருறு முனதொத்தாசை
திரம்பெறு செயலோர்ச் சேர்வதெம்மையேசேர்க நன்கே.

(இ-ள்.) யுத்தஞ் செய்பவர் தனத்தை விரும்பி யுத்தஞ்செய்யும் சண்டையில், போர் வீரர்களாகிய புருஷர்கள் தமக்கு உதவி செய்ய வேண்டி யுன்னையே துணைக்கழைப்பார்கள். வலிமை பொருந்திய விந்திரனே! யுத்தத்தில் வீரர்களைச் சேருமுனது உதவி இந்த யுத்தத்தில் எம்மையே பொருந்தட்டும்.—(எ-று.) அர்ணஸாதௌ என்பதற்கு உதகத்தையடைய விரும்புவோரென்பதும் ஒன்று. உதக (தண்ணீர்) லாபத்தையடைய விருத்திரவதஞ் செய்யும் யுத்தத்தில் ஸ்தோதாக்களாகிய புருஷர்கள் உன்னையே உற்சாகப் படுத்துகிறார்களென்பது மற்றொரு பொருள். ஆயோதம், ஆயோதனம், யுத்தம், சண்டை.

7. வச்சிரம் படைத்த மன்ன, இந்திர, புருகுற் சற்கா [ன்
நச்சலர் போரினேழு நகரத்தைப் பொடித்தாய்; அம்ஹ
வைச்சுள கிழியை நாணல் மதிப்ப நீயறுத்தாய் பின்பு;
நச்சியஃதவிப்பூரித்தோன் சுதாசற்கே நாடிக்கொண்டாய்.

(இ-ள்.) வச்சிராயுதத்தைப் படைத்தவனே! ராஜனே! இந்திரனே! புருகுத்ஸனென்ற ரிஷிக்காகச் சத்துருக்களோடு செய்த யுத்தத்தில் அவர்களுடைய ஏழு நகரங்களையும் அழித்தனை. அவிப்பொருளால் உன்னை நிரப்புவோனாகிய ஸுதாஸனுக்காக, அம்ஹன் என்னும் அசுரன் வைத்திருந்த பணமுடிச்சை நாணலை யறுப்பதுபோல அறுத்து அதனைக் கைக்கொண்டாய்.—(எ-று.) புருகுத்ஸன், இவன் இந்திரனுக்கும் அசுவினிகளுக்கும் பிரியமான ரிஷி. மண். 1, சூக். 12, செய். 7-பார்க்க, சுதாசன், ஸுதாஸன், பிஜிவனன் மகன். பிஜிவனனும் திவோதாஸனும், அதிதிக்வனும் ஒருவனே. இவனது சரித்தத்தை மண். 7,

சூக். 8, செய். 5, 25-ல் பார்க்க. இவன் பருஷ்ணி (தற்காலம் ராவீ யென்று சொல்லப்படும் சிந்துவின் உபநதியாம்.) யென்னு மாற்றைத்தாண்டிச் சிம்யு வென்னும் காட்டுமனிதர்களைத் துரத் தினதாகச் சொல்லப்படுவான். இவன் பெயரை மண். 1, சூக். 47, செய். 6-லும் பார்க்க. பூரவே யென்பதற்கு பூருவுக்கு என்று பொருளுரைப்பார் மேனாட்டாசிரியர். ஆனால் இக்கிரந்த கர்த்தா சாயணருரையையொட்டி அவிபூரித்தோன் என்று மொழி பெயர்த்துள்ளார்.

8. ஆவலிற் சூர வெங்க ளாத்தும வலியளிக்குந்
தூவிய லெதனை யெங்குஞ் சூழுநீ ரென நிறைப்பாய்,
தேவ விந்திர வெந்தம்மைச் சூழ்புவி சித்திரத்தின்
மேவிய வவ்வன்னத்தான் மழையென நிரப்புவாயே.

(இ-ள்.) சூரனே! தேவனே! இந்திரனே! எங்களுக்கு ஆத்ம வல்லபத்தைத்தரும் எந்த வுணவை, எல்லாவிடத்தும் ஓடும் நீரை நிறைத்துவைப்பதுபோல, நிறைத்து வைப்பாயோ அந்தச் சித்திர (நானாவிதமான) அன்னப்பொருள்கள் எம்மைச் சூழ்ந்துள்ள பூமியில் மழை நீரைப்போல நிறையும்படி செய் வாயாக.—(எ-று.) ஊர்ஜம்ந என்பதற்கு வலிமையைப்போல என மேனாட்டாசிரியர் பொருள் கொண்டு, 'எதன் உதவியால் வலிமையே எம்மாட்டு வந்து சேரும்படி செய்வாயோ, நீரைப் போல ஏராளமாயுள்ள அந்த அன்னத்தால் எங்களைப் போஷிப் பாயாக.' என்று உரை கூறுவர்.

9. ஓதினார் குதிரையோடு கூடிய வுனக்கு னன்பர்
கோதமர் மறைகளுக்தங் குவிப்பொடு மவியினோடும்;
தீதில்பல் வடிவ வன்னஞ் சேர்த்துக வெமக்கு வேந்தே!
போதுகவிரைவின்வைகல்புந்தியாற்பொருள்பெற்றோனே.

(இ-ள்.) இரண்டு குதிரைகளோடு கூடிய வுனக்கு உன்னன் பர்களாகிய கோதம வம்சத்தவர்கள் வணக்கத்தோடும் அவிப் பொருளோடும், பிரமங்களையும் உக்தங்களையும் செய்து கூறினார் கள். பல உருவத்தோடு கூடிய அன்னத்தை, இந்திரனே! எங் களுக்குக் கொண்டுவருவாயாக. தியாவஸுவாகிய இந்திரன் வேகமாய் இவ்விடியற் காலத்தி லிங்கு வரட்டும்.—(எ-று.) தியாவஸு, புத்தியினாற் பொருளைப் பெற்றவன்.

வருக்கம் 5.

அஷ்டகம் 1. அத்தியாயம் 5.

## 64. மண்டலம் 1. அநுவாகம் 11. சூக்தம் 7.

15 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை நோதஸன். வடமொழிச் சந்தம்: ஜகதி, 15, த்ருஷ்டுப். தேவதை: மருத்துக்கள்.

(வேறு.)

1. வேண்டுபொருள் வருடிப்போர், நன்மகத்தோர்,
பூப்பழஞ்செய் மேலோர், கூட்ட
மீண்டுமருத் துவர்க்காக, நோதசனே
சூழுறுப ணீண்டு தாங்க;
தூண்டுகரங் கூப்பியதீ ரன்யானு
மென்மனத்தே தொகையாத் தோன்றி
மாண்டருபா நூன்முறையா கத்தகுதி
யுறமழையின் வகுத்தேன் மன்னே.

(இ-ள்.) நோதஸனே! இச்சைப்பட்ட பொருள்களை வருஷிப்பவர்களும், நல்ல யக்ஞ கர்மத்தோடு கூடியவர்களும், பூக்களையும் பழங்களையும் செய்யும் பெரியவர்களும், கூட்டமாகப் பொருந்துவோர்களுமான மருத்துக்களுக்காக நன்றாய்ச் சூழ்ந்து கொள்ளும் பண்ணை (ஸ்தோத்திரத்தை)ச் சொல்லித் துதிப்பாயாக. கைகுவித்து வணங்கும் தீரனாகிய யான் எனது மனத்தில் கூட்டமாக உதித்து வெளிவரும் சிறந்த கீதங்களை, யாகத்தில் சாஸ்திர விதியோடு பொருந்தும்படி மழை நீரைப்போலச் செய்தேன்.—(எ-று.) முன்னிரண்டடியில் நோதஸன் தன்னையே படர்க்கைப் படுத்திக்கொண்டது. மழையானது எப்படி ஓரே சமயத்திற் கூட்டமாக விழுந்து பல பிரதேசங்களிலும் வெகு ஜலத்தைக் கொட்டுகிறதோ அப்படியே நானும் கீதங்களை ஓரே சமயத்திற் கொட்டுவேன் என்பது பொருள். மருத்துக்கள் மண். 1, சூக். 14, செய். 3 பார்க்க.

2. கட்கினிய காளையர்க ளுருத்திரன்றன்
மக்கள்பகை கடிவோர் பாப
முட்குறவே யொழிப்பவர்க டூய்மைபுரி
வோர்பகலி னொளிவாய்ந் துள்ளோர்
வட்குவர்முற் பரமேசன் பூதகண
மெனக்கோர வடிவத் தோர்கள்
மட்கினிய மழைதெளிப்போர் மாருதர்கள்
மாகமதிற் றோன்றி னாரே.

(இ-ள்.) கண்ணுக்கினிய காளைப்பருவம் வாய்ந்தவரும், உருத்திர புத்திரரும், சத்துருக்களை வதைப்பவரும், பாபரஹித ரும், (எப்பொருளையும் பரிசோதித்துச்) சுத்தப் படுத்துபவர் களும், பகலைப்போற் (சூரியனைப்போல) பிரகாசம் பொருந்திய வர்களும், பகைவருக் கெதிரில் பரமேசுவரனது பூதகணங் களைப் போலக் கோரமான (பயங்கரமான) உருவத்தோடு எதிர்ப்படுபவர்களும், மண்ணுக்கினிய மழையைப் பெய்விப்ப வர்களுமான மருத்துக்கள் ஆகாயத்தி லுற்பவித்தார்கள்.— (எ-று.) பகல், சூரியன், ஸத்வாநோ ந என வடமொழி மூலத்தி லுள்ளது. அச்சொற்றொடருக்குப் பரமேசனது பூதகணங் களைப்போல வெனச் சாயணர் உரை கூறுவர். மண்ணுக்கினிய வென்றது மட்கினிய வென்றாயிற்று. வட்கல், கெடுதல், வட்குவர் கெடுவோர் பகைவரென்றபடி. பாப முட்குறவே யொழிப்பவர் கள், பாபத்தை நடுங்கும்படி யழித்து விடுபவர்கள் என்பது பதப்பொருள். பாப மற்றவர்கள் அல்லது பாப ரஹிதர்கள் என்று உரையிற் கூறப்பட்டது. மருத்துக்கள் ருத்திர புத்திர ரென்பதை மண். 1, சூக் 39, செய். 4-ல் பார்க்க. வடமொழியி லுள்ள மர்யா: என்பதற்கு மநுஷ்யர் என்பது பொருள். ஈண்டு மருத்துக்களுக்கு மரண தர்மம் சொல்லுவது அஸம்பாவமான தாற் புத்திரரென்று பொருள் கொள்ளுக வென்பார் சாயணர். சத்துருக்களை வதைப்பவ ரென்பதற்கு வடமொழியில் அஸுரா: என்றுள்ளது. மண். 1, சூக். 54, செய். 3 பார்க்க.

3. தருணவய துள்ளவர்க, ளுருத்திரன் புத்
திரர், சரையே சாரார், ஈக்ந
தருணவவி புசியாரைக் கொல்லுபவர்,
எதிரினடை தழுவி யோர்கள்,
பருவதநல் வலியுள்ளோர், வத்தினர்த
மெண்ணமதைப் பலிக்கச் செய்வோர்;
பிருதுவிவா றுறுதியுறும் பொருளேனும்
பெருமொய்ம்பா லசையப் பேர்ப்பார்.

(இ-ள்.) தருணமான வயதோடு கூடியவர்களும், ருத்திர னுடைய புத்திரர்களும், கிழத்தனமே யடையாதவர்களும், அவியுண்ணாதவர்களைக் கொல்லுபவரும், தமது நடைக் கெதி ரில்லாத நடையை யுடையவர்களும், பர்வதம்போலப் பலமு முறுதியுமுள் ளவர்களுமான மருத்துக்கள் ஸ்தோத்திரஞ்செய் வோர்களுடைய எண்ணங்கள் பலிக்கும்படி செய்தார்கள். பூமி யிலுள்ள உறுதி வாய்ந்த பொருளாயினும் அவற்றைத் தமது அரிய பலத்தினால் அசைத்து நடுங்கச் செய்வார்கள்.—(எ-று.)

4. உடலதனைப் பலவகையா வாபரணத்
தலங்கார முறுத்தி, மார்பில்
விடலருநல் லொளிகாலு மாரமதை
யணிபெறவே மிளிர்த்தித், தோளிற்
கெடலருமா யுதம்வெயில்வீ சிக்கிடக்க,
வந்தரத்தே கிளர்ந்த மொய்ம்பி
னுடனுதித்தார் மாருதரா நரர்களுமே
கணமாக வொருங்கிற் றுனே.

(இ-ள்.) தமது சரீரங்களைப் பலவிதமான ஆபரணத்தா லழகுபடுத்தித், தமது மார்பில் ஒளி வீசும் ஆரத்தைப் புனைந்து, தோளி லாயுதங்கள் பள பள வென்று மின்ன, மாருதர்களாகிய நேதாக்கள் (சேனுதிபதிகள்) கூட்டமாகச் சேர்ந்து அந்தரிட்சத்தில் தங்கள் பலத்தினேடும் உடனே தோன்றினுர்கள்.—(எ-று.) நரர்கள் நேதாக்க ளென்பார் சாயணர்.

5. ஈசான ராக்குபவர் மேகாதி
யதிர்ப்பவர்க ளேலார் தம்மைக்
கூசாதே யழிப்பவர்கள் வாயுவையு
மின்னலையுங் கூர்ப லத்தா
லேசாதே யமைக்கின்றுர்; சூழ்ந்தசைப்போ
ராகாயத் தியைந்த மேகத்
தேசாரு மடிகறந்து பூமியினிற்
பயநிறையத் தெளிக்கின் றுரே.

(இ-ள்.) ஸ்தோதாக்களை ஐசுவரியவான்களாய்ச் செய்பவர் களும், மேகம் முதலியவற்றைக் கம்பிக்கச் செய்பவர்களும், சத்துருக்களைக் கூசாம லழிப்பவர்களும், ஆன மருத்துக்கள் வாயுக்களையும் மின்னலையும் தமது பலத்தால் உண்டுபண்ணு கிறுர்கள். வளைந்து சூழ்ந்து ஒரு வஸ்துவை யசைப்பவர்கள் ஆகாயத்திற் காணப்படும் மேகங்களின் மடியைக் கறந்து அந்த நீரினுல் பூமியை நிறைக்கின்றுர்கள்.—(எ-று.) மேகத்தைக் கறவையாக உவமித்து அதினின்று வரும் நீரைப் பய மென்றுர். பயம், பாலுக்கும் நீருக்கும் பொதுவான சொல். பயம், ஸாரபுஷ்டியுள்ள நீரென்ப.

வருக்கம் 6.

## மண்டலம் 1. சூக்தம் 64.

6. இருத்துவிசர் யாகமதி னெய்சொரிவ
தென்னநல வீகை யாளர்
மருத்துவர்கள் பாலெனவே வளம்பொதியு
நீர்தெளிப்பார் : மாவைப் போர்க்கு
வருத்தியடக் குதல்கடுப்ப வல்விரையு
மேகமதை வசப்ப டுத்தி
யுருத்திடித்தட் சயமாக வோங்குமுகின்
மடிகறந்தே யொழுக்கு வாரே.

(இ-ள்.) ரித்விக்குக்கள் யாகத்தில் நெய்யை யூற்றுவது போல, நல்ல தானத்தோடு கூடிய மருத்துக்கள் பால் போல ஸாரம் பொருந்திய நீரைத் தெளிப்பார்கள். யுத்தத்திற்காகக் குதிரையை வருத்தப்படுத்தி யடக்குவது போல அம் மருத்துக்கள் வேகமாகச் செல்லும் மேகத்தைத் தம்வசப்படுத்தி, இடித்துக், குறைவின்றி யோங்கு மேகத்தின் மடியைக் கறந்து நீரை யொழுக விடுவார்கள்.—(எ-று.) ரித்விக்குக்கள், இருத்துவிசர், ரித்விஜர், எல்லா மொன்றே. காலத்தில் யாக கார்யங்களைச் செய்பவரென்பது முன்பே சொல்லப்பட்டது.

7. மிகுவலியோர் ஞானியர்கள் சித்திரஞ்சால்
காந்தியுளோர் மேன்மை தங்கு
நகமுறழு மொய்ம்புள்ளோர் விரைகதியோ
ரென்போர் நீர், நால்வாய் மானத்
துகளறுகா னத்திடத்துச் சிவப்பேறும்
வடவையினைத் தோய்க்குங் காலைத்
யிகலுவரைத் தெறுவலியை மேற்கொண்டு
மரக்கூட்ட மெரித்துண் பீரே.

(இ-ள்.) மிகுந்த வலியோடு கூடியவரும், ஞானவான் களும், சித்திர காந்தியோடு கூடியவரும் மலைபோல வலிமை பொருந்தியவரும், வேகமான நடையோடு கூடியவரும் என்று சொல்லப்படும் (மருத்துக்களாகிய) நீங்கள், யானையைப் போலக், குற்றமற்ற காட்டில் சிவப்பு நிறமுள்ள காட்டுத் தீயை யோட்டும்போது, பகைவரை வதைக்கும் வலிமையை மேற்கொண்டு அக்காட்டிலுள்ள மரக் கூட்டங்களை எரித்து விடுவீர்கள்.—(எ-று.) நகம், மலை. நால்வாய், யானை. யானையும் காட்டை யழிக்கும், வடவையும் காட்டை யழிக்கும் அதனால் யானை உவமையாயிற்று. வடவை, காட்டுத்தீ.

8. பேரறிஞர் சிங்கமுழக் கவர், செறுகோ
பத்தர், பொறி பிறங்கு மான்போ
லாரணிசா ரவயவத்தர், யாவுமுணர்ந்
தவர், பகையை யடக்கு வோர்கள்
கூருமுயர் துதியோரை மகிழ்விப்போர்,
மானூர்தி கூடி யுள்ளோர்,
சாரலரை யாயுதத்தா னல்வலியா
லொறுத்தொருங்கு சார்வா ரீண்டே.

(இ-ள்.) நல்ல ஞானத்தோடு கூடியவரும், சிங்கம்போல் கர்ச்சிப்பவரும், கோபம் வந்தபோது கொன்றழிப்பவரும், புள்ளியோடு கூடிய மானைப்போல அலங்கரிக்கப்பட்ட அவயவத்தோடு கூடியவரும், ஸர்வக்ஞரும், சத்துருக்களை யடக்குவோரும், ஸ்தோத்திரஞ் செய்வோரை ஸந்தோஷிப்பிப்பவரும், மானை வாகனமாக வுடையவருமான மருத்துக்கள் பகைவரை ஆயுதத்தினாலும், ஆத்ம பலத்தினாலும் தண்டித்துக் கூட்டமாக எல்லாருமொன்றாய் இங்கு வருவார்கள்.—(எ-று.)

9. குணநிறைந்தீர் நரர்தொழுவீர் செறுகோபச்
சூரமுளீர் குவல யம்வான்
நணுகுரத்தா னதிர்ப்பிப்பீர் சார திக்காம்
பீடநிலை நணுகுந் தேரி
னணுகியமர்ந் தொளிமிகுத்த மின்னலென
நிர்மலஞ்சா ரழகிற் கோலத்
தணிகதுவ, மாருதர்காள் வீற்றிருக்கும்
போதுமையெல் லாருங் காண்பார்.

(இ-ள்.) சற்குண நிறைந்தவர்களே! யாக கர்த்தாக்களாகிய நரர்களால் வணங்கப்படுபவர்களே! கோபம் வந்தாற் கொன்றழிப்பவர்களே! சூரர்களே! உங்களது வரவினால் பூமி வானங்களைச் சப்திக்க செய்பவர்களே! மருத்துக்களே! சாரதிக்கு உட்காருவதற்காகப் பீடம் வாய்ந்த தேரில் நீர் அழகாக வீற்றிருக்கும்போது, பிரகாசம் மிகுந்த மின்னலைப் போலவும் நிர்மலமான ரூபத்தைப்போலவும் உம்மை யெல்லாரும் காண்பார்கள்.—(எ-று.)

10. யாவுமுணர்ந் தவர், தனத்துச் சமசதனம்
படைத்தவர்க ளேய்ந்த வன்மை

மண்டலம் 1. சூக்தம் 64.

மேவியவர், பலவகையா முழங்குபவர்,
பகையழிப்போர், வெருளு மாறு
யாவையெனும் வறள்விப்போர், இந்திரனு
யுதமாவா ரேர்சால் வீரர்
தூவலியே யம்புமுத லாயுதங்கள்
கரந்தரித்தார் சோம மார்ந்தே.

(இ-ள்.) எல்லாமறிந்தவரும், தனத்திற் சமானமானவரும், பலம் பொருந்தியவரும், பலவித சப்தத்தைச் செய்பவரும், பகைவரை வாட்டுபவரும், எல்லாவற்றையும் வற்றடிப்பவரும், இந்திரனுடைய ஆயுதமாகவுள்ளவர்களுமான அழகு பொருந்திய வீரர்கள், பரிசுத்தமாகிய பலமிகுந்த அம்பு முதலிய ஆயுதங்களைச் (சோமத்தைக் குடித்துக்) கையிலெடுத்தார்கள்.—(எ-று.) விருஷ கா (Kh) தய: என்னும் சொற்றொடருக்கு இந்திரனது ஆயுதமாவாரென்றும் சோமத்தைக் குடிப்பவரென்றும் இரண்டு பொருளுள்ளதால் இரண்டையுந் தோற்றவே சோமமார்ந்தே என்றும் கடையடியிற் கூட்டினர். விரப்சிந: என்பதற்குப் பலவிதமாகச் சப்தஞ் செய்பவர்களென்றும், பலவித சப்தஞ் செய்யும் ஸ்தோதாக்களோடு கூடியவர்களென்றும் இருவகைப் பொருளுண்டு. அதனால் ‘பலவகையா முழங்குபவர்’ என்பதற்குப் பதிலாகத் ‘துதியாளராற் சூழ்ந்தோர்’ என்றும் மாற்றிக் கூட்டலாம். யாவையெனும், எவையெனினும், எல்லாவற்றையும் என்றபடி.

வருக்கம் 7.

11. மகமுடையோர், யாகதலந் தோறடைவோர்,
பகைநேடி வதைப்போர், திண்ணெ
னகமுடைய மலையேனு மசைப்பவர்கள்,
துட்டர்தமை யடக்கு வோர்கள்,
நகுமொளியா யுதமுடையோர், நடைவழியிற்
றுருமமழி நாக மென்ன,
வுகுபயஞ்சார் மேகமலை களின்மேற்பொற்
றேருருளை யுருட்டு வாரே.

(இ-ள்.) யாகத்தோடு கூடியவரும், யக்ஞப்பிரதேசங்கடோறுஞ் செல்லுபவரும், சத்துருக்களிடத்துத் தாமே (தேடிப்) போய் அவர்களை வதைப்பவர்களும், திண்மை பொருந்திய மலைக

ளையு மசைப்பவர்களும், துஷ்டர்களை யடக்குபவரும், பிரகாசிக்கின்ற காந்தியோடு கூடிய ஆயுதத்தைத் தரித்தவர்களுமான (மருத்துக்கள்), நடக்கும் பாதையிலுள்ள மரங்களை யழித்துக் கொண்டுபோகும் யானையைப்போல, நீர் நிறைந்த மேகங்களின் மேல் (அம்மேக நீர் பொழியும் வண்ணம்) பொன்மயமான தேருருளை யுருட்டுவார்கள்.—(எ-று.)

12. பகைவலியை யழிப்பவர்கள், பாவகர்கள்,
மழைதருவோர், பார்வை கூர்ந்தோர்,
தகவுமகா ருருத்திரனுக், கவரைவிளிப்
போற்றுகளாற் சார்க வென்பாம்;
மிருதனங்கள் கருதுறுவீர்! மட்புழுதி
தூண்டுபவர், வேட்கை யீவோர்,
தருவசனத் தேத்துறுவார், மருதராது
கணமதனைச் சார்கு வீரே.

(இ-ள்.) பகைவரது பலத்தைக் கெடுப்பவரும், வஸ்துக்களைப் பரிசோதித்துப் பார்க்கும் பாவகர்களும், மழையைத் தருபவர்களும், தீட்சண்யமான பார்வையை யுடையவர்களும், மகாதேவ (ருத்திர)னுடைய புத்திரர்களும் ஆன மருத்துக் கூட்டத்தாரை அழைப்பதற்குக் கருவியாயுள்ள ஸ்தோத்திரங்களால் எம்மைச் சாரும்படி யழைப்போம். பெரிய ஐசுவரியத்தை விரும்பும் ரித்விக்குக்களே! மண் புழுதியைக் கிளப்பி விடுபவர்களும், இச்சையை யளிப்பவர்களும், மூன்றாவது ஸவனத்தில் ஸ்தோத்திரஞ் செய்யப்படுபவருமான மருத்துக் கணத்தை (மருத்துக் கூட்டத்தை) யடைவீர்களாக.—(எ-று.) உருத்திரன், மகாதேவன். விருஷணம் என்றார் வேட்கையை யளிப்பவர்களானதால். தருசவனம் என்றது மூன்றும் ஸவனமாம். ஏன்? மூன்றாவது ஸவனத்தில் தான் மருத்துக்களைத் துதிப்பது.

13. மாருதர்கா ளும்முதவி கொண்டெவனைக்
காப்பீரம் மனிதன் றானுஞ்
சீரியதன் வலிமையினாற் பிறமனிதர்க்
கடந்திறையிற் சிரேட்ட னவான்;
கோரமொடு மனக்குவையு மேவலரு
மிகுதனமுங் கூடிச் சீல
மாருகின்ற நற்கரும மடைந்துபசு
மகப்பேறு மடைவா னன்றே.

## மண்டலம் 1. சூக்தம் 64.

(இ-ள்.) மாருதர்களே! (மருத்துக்களே!) உங்கள் உதவியினால் எவனை ரக்ஷிப்பீர்களோ அவன் தனது வல்லபத்தாற் பிறமனிதரைத் தாண்டி விரைவாகச் சிரேஷ்டத்தை யடைவான். அவன் பின்னும் குதிரையும், அன்னக்(உணவு)குவியலும், வேலையாட்களும், அளவற்ற திரவியமும் அடைந்து, சீலம் பொருந்திய ஸத்கருமத்தோடு கூடிப் பசுக்களையும் பிள்ளைப் பேற்றையும் பெறுவான்.—(எ-று.) கோரம், குதிரை.

14. மாருதர்காள்! மகம்புரிவோற் கெனச்சுதர்கள்,
  பவுத்திரரும், மாண்ட கன்ம
மோருபவர், யுத்தமதிற் றோல்வியுறார்,
  ஒளிமிகுத்தோர், ஒன்னார் தம்மை
நீரறவே வாட்டுபவர், வலியுடையோர்,
  தனங்கொள்வோர், நிறைந்த ஞானங்
கூறுபவர், புகழ்க்கொருவர், நெடுநோக்கர்,
  சதவிமவர்க் கூட்டு வீரே.

(இ-ள்.) மருத்துக்களே! யாககர்த்தாவுக்காக, அடிக்கடி செய்ய வேண்டிய கர்மங்களை யறிந்தவர்களும், யுத்தத்தில் தோல்வி யடையாதவர்களும், ஒளி அதிகமாகவுள்ளவர்களும், பகைவரைத் தன்மைகெடும்படி செய்பவரும், பலமுள்ளவர்களும், தனத்தை விரும்புகிறவர்களும், பரிபூரண ஞானத்தோடு கூடியவர்களும், கீர்த்திக்குச் சுட்டாக நிற்பவர்களும், (ஆழ்ந்த யோசனை) தூர திருஷ்டியுள்ளவர்களும், (நூறு) (இமம்) பனிக்காலங்களைக் கண்டவருமான புத்திரர்களையும், பௌத்திரர்களையும் தருவீர்களாக.—(எ-று.) நீரற, தன்மைகெட; இமவர், ஹேமந்தரிதுவைக் கண்டவர்; நூறு வயதுள்ளவர் என்றபடி.

(வேறு.)

15. கன்றிய பகைவர் தம்மைக் கடியுறும் வீரர்மிக்குப்
பொன்றலி றனமெமக்குப் பொருத்துக, மருதீர், நூறே
யன்றிவணுயிரத்தி னூர்ந்தொளிர்ந்தோங்கு மஃதை;
துன்றுக விரைவின் வைகல் மதியினாற்றனம்பெற்றாரே.

(இ-ள்.) மருத்துக்களே! கோபித்த பகைவரைச் சயிக்கும் வீரராகிய புத்திரர்கள் மிகுதியாகக் கூடும் கெடுதலில்லாத செல்வத்தை, நூறல்ல ஆயிரக்கணக்காக விளங்குவதை எங்களுக்குச் சேர்ப்பீர்களாக. புத்தியினாற் பணத்தைக் கூட்டுபவர்

களாகிய மருத்துக்கள் விடியற் காலத்தில் வேகமாய் இங்கு வந்து சேருக.—(எ-று.) இக்கடைசியடி நோதஸனுடைய பல்லவி யென்றே சொல்லலாம். முன் இந்திரனுக்குச் சொன்னதை இப்போது மருத்துக்களுக்கும் ஏற்றிக் கூறினன்.

வருக்கம் 8.

## 65. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 1.

10 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி : சக்தியின் புத்திரன் பாராசரன் ; வடமொழிச்சந்தம் : துவிபதாவிராஜ் (கொச்சகக்கலிப்பா) ; தேவதை : அக்கினி.*

இம்மந்திரங்களைப் பிரயோகிப்போர் இவ்விரண்டாய்ச் சேர்த்து ஓதுவர். ஒற்றையாயிருப்பதை இரண்டுதரம் ஓதுதல் மரபு. வஸிஷ்டனது புத்திரன் சக்தி ; சக்தியின் புத்திரன் பராசுரன். இப் பராசுரனே வியாஸரது பிதா, சுகப்பிரஹ்மத்துக்குப் பாட்டனுமாம். இவ்விரண்டாய், இரண்டு இரண்டாய்.

1 & 2. *பசுவோடு குகையொளிக்கும் பட்டியினைப் பற்றுதவி*
*னிசைவோடு முளத்தீரர், எந்தவியோ டேத்துரியோய்,*
*நசையோடு மவ்வவியை நற்றேவர்க் களிப்பவ, உன்*
*பிசையோடி யுன்பக்கல் மேவின ரெம்மகத்தேவும். (1.)*

(இ-ள்.) கையிற்றூங்கிய அவியுண்டியோடு போற்றுதற் குரியவனே! அந்த அவியுணவைத் தேவர்களுக் களிப்பவனே! (அக்கினியே!) பசுவைத் திருடிக்கொண்டு அப்பசுவோடு குகைக்குள் ஒளிந்துகொள்ளும் திருடனைத் துரத்திப் பிடிப்பதுபோல், ஒத்த மனத்தோடு கூடிய தீரர்களு(மேதாவிகளு)ம், யாகத்தில் வணங்குதற்குரியவருமான வெல்லாத் தேவர்களும் உன்னைத் துரத்திக்கொண்டு வந்து உன் பக்கத்தில் உட்கார்ந்தார்கள்.—(எ-று.) பட்டி, கள்வன். தீரர் மேதாவிகளென்பார் சாயணர். வடமொழி மூலத்தில் யஜத்ராங் என்றுள்ளது ; அதற்கு யாகத்தில் வணங்குதற்குரிய தேவர் என்பது பொருள். அதையே மகத்தேவரென்றூர் பாட்டில். குகை யென்றது ஈண்டு அக்கினியோடியொளிந்த நீரையாம். இசைவு ஓடும் உளம் எனப் பிரிக்க.

3 & 4. *தேவர்களு நல்லொழுங்கைச் சேர்ப்பவன்றன் விரதமதை*
*யாவலொடு தேர்ந்தணைந்தார் ; அப்பா விப்புவனியுமே*

## மண்டலம் 1. சூக்தம் 65.

தேவருல கெனலாயிற்(று) ; இருந்துதியிற் சிறந்துமக
மேவுசலந் தோன்றியதீ யினையங்கீர் வளர்த்ததுவே. (2)

(இ-ள்.) ரிதத்தை (ஒழுங்கை அல்லது யாக விதிகளை)க் கூட்டுபவனாகிய (அக்கினியினது) விரதத்தைத் தேவர்கள் தெரிந்து அவ்வக்கினியினிடத்துப் பொருந்தினார்கள். அப்புறம் இப்பூமி தேவருலகு என்று சொல்லும்படியாயிற்று. ஸ்தோத்திரத்தினாற் சிறப்படைந்து யக்ஞத்திற்குக் காரண பூதமாய் யாகப்பொருள்களை வளர்த்து யாகத்தினிடத்துப் பொருந்தியுள்ள தண்ணீரின் கர்ப்பத்திலுண்டான அக்கினியை யந்த நீரானது வளர்த்தது.—(எ-று.) தண்ணீருக்குள் நெருப்புள்ள சங்கதி மச்சங்கள் எடுத்துத் தேவர்களுக்குச் சொல்ல அவர்கள் அச்சங்கதியைத் தெரிந்து கொண்டார்களென்பது தைத்திரீய ஸம்ஹிதை 2-2-6.

5 & 6. ஆக்கமென வணியோடு மகல்புவிபோல் விரிவாயுந்
தேக்கரியிற் புசிப்பீந்துந் தெண்ணீரிற் சுகமளித்துந்
தாக்குசமர்ப் பரிவிரைவிற் சாருவதென்றே கீழ்நோக்
கூக்கிய நீரோட்ட மெனச்சாருமுனை யார்தடுப்பார் ? (3)

(இ-ள்.) ஆக்கத்(பெருக்கம் அல்லது புஷ்டி)தைப்போல ரமணீயமாயும், விசாலமான பூமியைப்போல் விஸ்தீரணமாயும், பொருள் நிறைந்த மலையைப்போலக் (கருப்புக் காலத்திலும் கந்த மூல பலாதிகளான) உணவை யளித்தும், தெளிந்த நீரைப்போலச் சுகத்தை யளித்தும், யுத்தத்தில் உயர்ந்த ஜாதிக்குதிரை சத்துருக்களைக் கொல்லுவதற்கு விரைவாகப் போவதுபோலக் கீழ்நோக்கிச் செல்லும் நீரோட்டத்தைத் தடுக்க முடியாதது போலச், சுட்டெரிக்கத் தொடங்கிய உன்னையும் ஒருவரும் தடுக்க முடியாது.—(எ-று.) ஆக்கம், புஷ்டி. அரி, மலை. சமர்ப்பரி, யுத்தக் குதிரை.

7 & 8. உடன் பிறந்தாட்குடன்பிறந்தா னெப்பநீர்க் குறவாந்தீ
யிடம்புரக்கு மரசுதன திறிஞர்தனம் பறிப்பதெனத்
தடவனத்தைத் தகித்துண்ணும் ; காலுரப்பப் பலவிதமாய்
கடமார்ந்தே யெரியூட்டிக் கண்டமயிர்கழித்திடுமே.

(இ-ள்.) சகோதரிக்குச் சகோதரனது உறவுபோன்று தண்ணீர்க்குப் பந்துவாகிய தீயானது, ஒரு தேசத்தரசன் அவனுடைய பகைவர்களது தனத்தைப் பறிப்பதுபோல, விசால

மான ஆரண்யத்தைச் சுட்டுச் சாப்பிட்டுவிடும். காற்றுத் தூண்டப் பலவிதமாகக் காட்டில் பிடித்துக்கொண்டு நெருப்புக்கு வேண்டிய ஆகாரத்தை யூட்டிப் பூமியின்மேல் தோன்றும் புல், பூடு, செடி முதலிய மயிர்களை யழித்துவிடும்.—(எ-று.) "ஆகாசாத்வாயு: வாயோரக்நி: அக்நேர் ஆப்: ஆப: பிருதுவி" என்பது தைத்திரீய ஆரண்யகம் 8-வது அத்தியாயத்திலுள்ளது. அதனால் அக்கினி தண்ணீர்க்குப் பந்துவாம். இறிஞர், பகைவர். பூமியில் வளரும் புல், செடி முதலிய குறும்பூண்டுகளைப் பூமியினது மயிராக உருவகப்படுத்தினார். மயிர் வினைஞன் மயிரைக் கழிப்பதுபோல அக்கினி தீத்தழித்து விடுமென்க.

9 & 10. துன்னுமொளியா னரரைத் துலக்கியதி காலையெழுந்
துன்னுபயிர்சோமனெனவுடன்படைத்தேரிதந்தோன்றி
மன்னுசிசுச் சூலாவினுருவோங்கி நீண்டொளிர்தீ
யன்னமென நீருறைந்து நெட்டுயிர்ப்பு விட்டிடுமே.

(இ-ள்.) ரிதத்தில் (ரிதம் ஈண்டு தண்ணீர்) உற்பவித்துச் சிசுவை வயிற்றில் வைத்துள்ள பசுவைப்போல உருவத்தில் பருத்து விருத்தியாகின்ற அக்கினி, தன்னிடத்துப் பொருந்திய வெளிச்சத்தால் ஜனங்களுக்கு ஒளியை யூட்டி, அதிகாலையில் (யாக கார்யங்களுக்காக எழுந்து, தரையில் வளரும் ஓஷதிகளைச் (செடிகளை) சோமனைப் போலச் சிருஷ்டித்து வளர்த்துத் (தான் உற்பவித்த தண்ணீரின்மேல்) அன்னப்பட்சி போலத் தங்கிப் பெருமூச்சுவிடும்.—(எ-று.) சோமன், ஸோமாபிமானி தேவதை: சோமம் ஓஷதிகளுக்கு (செடிகளுக்கு) ராஜாவென்பது தைத்திரீயப் பிராஹ்மணம் 3-9-19. இராக்காலத்தில் இருட்டில் அக்கினியின் வெளிச்சமே உபயோகப்படுவதால் நரரைத்துலக்கி யென்றார். ரிதம், ஒழுங்கு என்பது பொருள்; ஆனால் தண்ணீர் என்று ஈண்டு பொருள் கொள்ளுவர் சாயணர். அக்கினி ஸோமனைப் போலவே பயிர்களைச் சிருஷ்டித்து வளர்க்கிறான். அக்கினியே அன்னப் பொருள்களை யுண்பவனும், அவ்வன்னப் பொருள்களை வளர்க்கும் பதியுமாமென்று சுருதி கூறும்.

வருக்கம் 9.

## 66. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 2.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷடி பாராசரன். வடமொழிச்சந்தம்: துவிபதாவிராஜ். தேவதை: அக்கினி.

1 & 2. செல்வமெனப் பலவுருவிற் செங்கதிரோ னன்னோக்கிற்,
புல்லாயு ளுயிர்க்காலிற், பொன்றாச்சீர்ப் புத்திரனின்,
மல்லினுறம் பரிமாவின் மடிதரும்பாற் பசுவென்னத்
துல்லியநல்லொளியோடுந் தோய்ந்துவனத் தெரிகதுவும்.

(இ-ள்.) சித்திரவுருவோடு கூடிய செல்வத்தைப் போலவும், நல்ல பார்வையோடு கூடிய சூரியனைப்போலவும், ஆயுளை விருத்தி செய்யும்பிராண வாயுவைப்போலவும், நித்தியமாயுள்ள சுவர்க்கத்தைத் தரும (ஔரஸ) புத்திரனைப் போலவும், சவாரி செய்பவனைச் சுமந்து செல்லும் நடையிற் சிறந்த குதிரையைப் போலவும், பால் கொடுத்துச் சந்தோஷப்படுத்தும் பசுவைப் போலவும் காணப்படும் விசேஷமான பிரகாசத்தோடு கூடிய அக்கினி, காட்டை யெரிப்பதற்காக அதனைச் சூழ்ந்துகொள்ளும்.—(எ-று.) இன் உவமைப்பொருளில் வந்தன. ஒவ்வொரு உவமையையும் சாதாரண தர்மத்தோடு கூறினர். அக்குண விசேஷணங்களெல்லாம் அக்கினிக்கும் பொருந்தும்.

3 & 4. இல்லமென வழகுடையோன்,
எழில்சேம மளிப்பான்; பின்
நல்லயவப் பக்குவத்தோன்,
நண்ணலரைத் தெறுபவனும்,
சொல்விருடி யெனத்துதிப்போன்,
ஸ்ரேயமகரிற் சிறந்தவனால்;
செல்பரியிற் களிமிகுத்தோன்
செறியனத்தைச் சேர்த்திடவே. (2)

(இ-ள்.) கிருஹத்தைப்போல ரமணீயமான அக்கினி, க்ஷேமத்தைத் தருவான். பின் பழுத்த யவதானியத்தைப் போலப் பக்குவமானவனும், சத்துரு ஜனங்களை யடக்குபவனும், மந்திரங்களைக் கண்ட ரிஷியைப்போலத் தேவர்களைத் துதிப்பவனுமான அவன் யஜமானர்களாகிய மனிதரிற் சிறந்தவன். குதிரையைப்போலச் சந்தோஷ மிகுந்த வவ்வக்கினி எங்களுக்கு ஆகாரத்தைச் சேர்க்கட்டும்.—(எ-று.)

## அஷ்டகம் 1. அத்தியாயம் 5.

5 & 6. ஆறாத சோதி யுளோன் கன்மனென வழிவில்லான்
கூறாதே யில்லழகு கூட்டுமனை யாளொத்தோன்
மாறாத பல்சுடரி னெல்வெளுத்து மாந்தர்வயிற்,
றேறூர்தஞ் சமர்ச்சொலிப்பான், தேரெனப் பொற்
[சுடர்பரந்தே. (3)

(இ-ள்.) நெருங்க முடியாதபடி அடங்காத சோதியுள்ள வனும், கர்மங்களைச் செய்பவனைப்போல நித்தியமாக (ஜாகரூக ரூக) வுள்ளவனும், வீட்டை யழகுபடுத்தும் மனையாளைப்போல யக்ஞக் கிருஹத்தை யழகு படுத்துபவனும், கெடாத பலவித மான சுடர்களின் பிரகாசமானது வெளுத்துத் தோன்ற மனி தர்க ளிடத்துப் பொற்காந்தி பரந்த தேரைப்போலக் காந்தி வீசுபவனுமான அக்கினி, சத்துருக்களோடு செய்யும் யுத்தத் தில் காந்தியோடு ஜ்வாலை வீசுவான்.—(எ-று.) எல், சூரிய னொளி, வெளிச்சம்.

7 & 8. நாயகன் றூண்டும் படையி, னச்சலர்க்குப் பயமூட்டுஞ்
சாயகங் கூர்வாய்ந்ததெனத் தவவலியன்; வரமளிப்பா
னேயமிகு பிறவிகட்கு நெடுந்தோற்றத் துறுபவர்க்கும்;
நாயகனும் வதுவையர்க்கு; நற்சாரன் கன்னியர்க்கே.(4)

(இ-ள்.) சேனை நாயகன் தூண்டும் சேனையைப் போல வும், பகைவர்களுக்குப் பயத்தைத் தரும் கூர்மை பொருந்திய அம்பைப் போலவும், (அக்கினி) மிகுந்த வலிமை பெருந்திய வன். ஜன்மித்த பிராணிக் கூட்டங்களுக்கும், இனி ஜன்மிக் கப் போகும் உயிர்களுக்கும் வரத்தை (இச்சித்த பொருள் களை)க் கொடுப்பான். கல்யாணமான மாதர்களுக்குப் புருஷ னும்; கல்யாணமாகாத பெண்களுக்கு ஜாரனுவான்.—(எ-று.) கல்யாணமான மாதர்களுக்கு அக்கினி நாயகனென்பதை மண். 10, சூக். 75, செய். 40, 41ல் பார்க்க. "கன்னிகையை முதலில் ஸோமன் அடைந்தான். பிறகு கந்தர்வன் அவளுக்கு நாயக னானன். அக்கினி உனக்கு (கன்னிகைக்கு) மூன்றாவது புருஷன். இப்பொழுது ஸ்திரீயினது கர்ப்பத்தில் தோன்றியவன் உனது நான்காம் புருஷனும். (40) சோமன் கந்தர்வனுக்குக் கொடுத் தான். கந்தர்வன் அக்கினிக்குக் கொடுத்தான். அவ்வக்கினி எனக்குச் செல்வத்தையும் புத்திரர்களையும், இந்த என் வது வையும் (மனைவியையும்) கொடுத்தான்" (41) என்பது. மேல் கந்தர்வனென்றது விசுவாவஸுவை. ஜாரன், காந்தன், விவாக

காலத்தில் அக்கினியினிடத்து லாஜம் (தானியம்) முதலிய ஹோமத்திரவியங்களோடு கூடவிருந்து அவளுடைய கன்னிகைத் தன்மையை நிவர்த்திப்பவன் (கழிப்பவன்) ஜாரனும்.

9 & 10. தோற்றமெலா நின்னாலாம்; தூய வவிப்பொருளோடும்
போற்றி யொளிச்சுடர்ச்சேர்வாம் வீடுபுகுவானெனவே;
ஆற்றொழுக்கு நீர் கீழார்ந்தொழுகலெனச், சுடர்க்கொழுந்தை
யூற்றமுறத்தூண்டுவன்றீ; உயர் நபத்தே கதிர்செலுமே. (5)

(இ-ள்.) சராசரங்களாகிய (ஸ்தாவர ஜங்கமங்களாகிய) பிறப்புக்கள் எல்லாம் உன்னாலேயே உண்டாகும். பரிசுத்தமாகிய (புரோடாசம்) அவிப்பொருளோடு, ஸ்தோத்திரஞ் செய்து, காந்தி பொருந்திய அக்கினியை, வீட்டை நோக்கிச் செல்லும் பசுக்களைப்போல (ஆவலோடு) பொருந்துவோம்; இந்த அக்கினி ஆற்றிலோடுந் தண்ணீர் தாழ்ந்த பிரதேசங்களை நோக்கி யோடுவதுபோலச், சுடர்க்கொழுந்துகள் சுற்றி வளைந்துகொண்டு எரிக்கும்படி அவற்றைத் தூண்டிவிடுவான். அவனுடைய கிரணங்கள் உயர்ந்த ஆகாசத்தை நோக்கிச் செல்லும்.—(எ-று.) நபம், ஆகாயம். ஆன், பசு.

வருக்கம் 10.

## 67. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 3.

### 10 இருக்குக்கள் கொண்டது.

### அத்யயனம் செய்பவர்களுக்கு ஐந்தே.

ரிஷி: ஷெடி பராசரன். வடமொழிச்சந்தம்: துவிபதாவிராஜ். தேவதை: அக்கினி.

1 & 2. வனத்திடத்துச் சயிப்பவனாய் மனிதருக்குத் தோழனாய்
மனத்திடஞ்சால் செய்கையினை மன்னனைப் போற்றோர்பவனா
யினச்சுகத்தைத் தருபவனா யெழில்கருமச் சுபனாக
வினைத்தலத்தே யவிசுமக்கும் வெம்மனங்கொளோதாவே. (1)

(இ-ள்.) காட்டினிடத்துச் சயங்கொள்பவனும், மரணதர்மத்தோடு கூடிய மனிதர்களிடத்திற் றோழனும், அரசன் திடகாத்திரமும் செய்கைத்திறமும் உள்ள வீரனைத் தேடுவதுபோலச், சீக்கிரத்திற் கர்மாநுஷ்டானங்களைச் செய்யும் அநுஷ்டாதாவைத் தேடுபவனும், க்ஷேமத்தைச் செய்யும் ரக்ஷகனைப் போன்றவனும், யக்ஞதலத்தில் தேவர்களுக்காக அவிப்பொருள்

களைச் சுமந்து செல்லும் நன்மனத்தோடு கூடிய ஹோதாவுமான (அக்கினி,) சோபன கர்மங்களோடு கூடியவனு யிருக்கட்டும்.—(எ-று.) ஓதா, ஹோதா. வெம்மை ஈண்டு விருப்பம் என்னும் பொருட்டு.

3 & 4. எப்பொருளுங்கரத்தகத்தேயேந்தியொருகுகையொளித்துச்
செப்பருமோர் நடுக்கத்திற் றேவர்களை நிறுவினனு
லொப்பின்மறையுள்ளத்தே யுருப்படுத்தித் துதித்தபோ
திப்புவியிற் புத்தியுள நாரிவனைத் தெரிந்தாரே. (2)

(இ-ள்.) (அக்கினி) எல்லா அவிப்பொருள்களையும் தனது கைகளிலேந்திக்கொண்டு ஒரு குகையினிடத்தொளித்துச் செல்லமுடியாத நடுக்கத்தில் தேவர்களை யிருத்தினான். ஒப்பில்லா மந்திரத்தை, மனதினுல் உருப்படுத்தியதை, ஸ்தோத்திர பூர்வமாகச் சொன்னபோது இப்பூமியிலுள்ள புத்திமான்களாகிய மனிதர்கள் இவ்வக்கினியைத் தெரிந்துகொண்டார்கள்.-(எ-று.)

5 & 6. பிறப்பில்லான் போற்புவியைப்
பிறக்குறுவான்; உண்மைசெறி
மறைப்புகழா லந்தரத்தை
வானிடத்தே நிறுவினனுந்
தறைப்பசுக்கள் விரும்பிடத்தைத்
தண்ணளியின், உயிர்க்குயிரே!
கறைப்படுத்தா தோம்ப; என்றுங்
கடிதினுறல் குகைக் குகைக்கே. (3)

(இ-ள்.) பிறப்பில்லாதவனுகிய சூரியனைப்போல் பூமியைத் தனது பிரகாசத்தினுல் தாங்குவான். ஸத்திய மந்திரங்களின் புகழ்ச்சியால் அந்தரிட்சத்தையும் அதற்கு மேலுள்ள வானிடத்தையும் தூக்கி நிறுத்தினுன். உயிர்க்குயிரானவனே! (அக்கினியே) பசுக்கள் மேய விரும்பும் மேய்ச்சற்றரைகளாகிய விடங்களைக் கறுப்பாகத் தீய்த்துவிடாதபடி அவற்றைப் பாதுகாப்பாயாக. குகைகடோறும், நீ போய்த் தங்குவாயாக.—(எ-று.) பிறப்பில்லானென்றது, சூரியனை. மந்திரத்தால் வானத்தையும் அந்தரத்தையும் அக்கினியுயர நிறுத்தினுனென்று தைத்திரீயங் கூறும். குகைக்குக் குகைக்கென்றது குகைக்குகைக்கு என்ருயிற்று. பசுக்கள் ஸஞ்சாரம் செய்ய யோக்கியமான இடங்கள் என்பது குகையென்பதன் பதப்பொருள்.

7 & 8. குகைவாசியா மிவனைக் கூர்ந்துணரு மவனுக்கும்,
மிருதத்தைப்போற்றெரியைவேண்டியுபாசிப்பார்க்கும்,
தருதத்துக்கொன் றவனைத்தகைந்துகடைந்தெடுப்பார்க்கும்
வெகுதனங்களிவர்க்கெல்லாம்வேண்டுமெனக்கூறுவனே. (4)

(இ-ள்.) குகையில் வசிப்பவனுகிய இவ்வக்கினியைத் தெரிந்துகொள்ளும் புருஷனுக்கும், ரிதத்தை (யாகத்தை, ஸத்யத்தை, ஒழுங்கை) வளர்க்கும் அக்கினியை விரும்பி உபாஸிப்பவனுக்கும், ரிதத்துக்காக (யாகத்துக்காக) அரணிகளைத் தகைந்து கடைந்து அவ்வக்கினியை யெடுப்பவர்களுக்கும் ஆகிய இவர்களுக்கெல்லாம் வெகு செல்வங்களைக் கொடுப்பான்.—(எ-று.) குகை, நீரென்றும் பொருள் கொள்ளலாம். மண். 1, சூக். 65, செய். 1-ல் பார்க்க. இவர்களுக்கெல்லாம் வேண்டுமென்று எடுத்துச் சொல்லுவான் என்பது பதப்பொருள். ஆனல் ரிதத்தை (உண்மையை)ப் போற்றுபவனுதலின் அவன் சொன்னது நிறைவேறும். அதனுல் செல்வங்களைக் கொடுப்பானென்ருர் உரையில். ரிதம், உண்மை அல்லது சத்தியம், யாகம், ஒழுங்கு என்னும் பொருளது.

9 & 10. வீரியஞ்சாரோடதிக்கண் மேன்மையுற வோங்குவதோ
டேரொழுகுபிரஜையொடு தாயிடத்து மிருந்துறைவான்;
பேரறிவோ னுயிர்க்குயிரோனீர்நிலைக்கட் பிறங்குவனல்;
தீரர்மிகப் பூசித்துச் செயல்புரிவா ரிலம்போன்றே. (5)

(இ-ள்.) பலம் பொருந்திய மருந்துச் செடிகளில் மேலாக விளங்குவதோடு, அழகாகிய (பூப்பழம் முதலிய) பிரஜைகளிடத்திலும், (அப்பூப்பழங்களைப்பெறும்) தாய்ச்செடியினிடத்திலும் நன்ருக வோங்கி நிற்பான். ஞானவானும், எல்லா வுயிர்களுக்கும் உயிரானவனுமான அக்கினி, தண்ணீருக்கு மத்தியில் விளங்குவான். மேதாவிகள், கிருகப்பிரவேசஞ் செய்வதற்கு முன் கிருகத்தைப் பூசித்துப் பின் கிருகத்துக்குள் புகுந்து காரியங்களைப் புரிவதுபோல, அக்கினியை முதலிற் பூசித்துப் பிறகு அதனிடத்துக் கர்மங்களைச் செய்வார்கள்.—(எ-று.) பிரஜையென்பது பெறப்பட்ட வஸ்துக்கள், அது குழந்தைகளை யுணர்த்தும். தாய் என்றது அஃறிணை உயர்திணைப் பொருள்களைப் பெறும் தாய்ச்செடிகளும், தாய்ப் பிராணிகளும், தாய்மார்களும் ஆம். நீர் நிலை யென்றது தண்ணீர் மத்தியைக் குறித்து நின்றது.

வருக்கம் 11.

அஷ்டகம் 1. அத்தியாயம் 5.

## 68. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 4.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஷெடி பராசரன். வடமொழிச்சந்தம் : துவிபதா விராஜ். தேவதை : அக்கினி.

1 & 2. மேவுமவி தாங்கி யவற்றிற்கலந்து விலங்கிஞெடு
தாவரத்தை யிரவதனைத் தன்ஞெளியாற் சூழ்ந்து, திவத்
தாவலொடு மேறுவனு, லன்னவற்றின் மகத்துவத்தைத்
தேவரெலார்க்குந் தேவன் றேர்ந்தணைந்தவப்பொழுதே.

(இ-ள்.) யாகப்பொருள்களைச் சுமந்து அவற்ருேடு கலந்து, தாவர ஜங்கமப் பொருள்களையும், இராக்காலத்தையும் தன் ஞெளியினுற் சூழ்ந்து, ஆகாயத்தி லுயரவேறி நிற்பான், இந்திராதி தேவர்களுக்குள் ஒப்பற்ற தேவனுகிய அக்கினி அத்தாவரசங்கமப் பொருள்களின் மகத்துவத்தை யுணர்ந்து அவற்றைச் சூழ்ந்து வியாபித்த அந்தக் காலத்தில்—(எ-று.) அந்தக் காலத்தில் ஏறி நிற்பான் எனக் கூட்டுக.

3 & 4. தேவ ! உயிரோடு வறட்டரணியினிற் சேந்துதித்து
மேவியபின் யாவர்களு மேவுவ ருன்காரியத்தே ;
தாவிலுன் றெய்வீகத் தற்கிழமைப் பெயரெல்லா
மோவறப் பூண்பா ரமரமுறையு முனைத்துதிப்பவரே.

(இ-ள்.) தேவனே ! (அக்கினியே !) காய்ந்த அரணிக் கட்டைகளில் சிவப்பான நிறத்தோடும் ஒளியோடும் நீ தோன்றிய பின்னர் எல்லா யஜமானர்களும் உன் காரியத்தைச் செய்வார்கள். மரண தர்மமில்லாத உன்னைத் துதிப்பவர்கள் கெடுதலில்லாத உனது தெய்வத்தன்மை பொருந்திய பெயரை யெல்லாம் அடைவார்கள்.—(எ-று.) உயிரோடு என்றதற்கு ஜ்வலனத்தோடு, ஒளியோடு என்பது பொருள். அமரம், மரணமின்மை.

5 & 6. ரிதத் துறவோன்றுதியிழைப்பார் ; ரிதமுமவன் ஞெழில்புரியும் ;
மதிக்கி னெலாவுயிரு மவன் ; மகம்புரிவா ரவற்கியாரும் ;
இதத்தவியைத் தருபவர்க்கு மெண்ணியுனக் களிப்போமென்
றுதித்திடு மன்பினருக்கு முவர்செயலோர்ந் துதவுகபொன்.

(இ-ள்.) ரித்விஜர்கள் தேவயஜன தேசத்தில் வரும் அவ்வக்கினியின் ஸ்தோத்திரங்களைச் செய்வார்கள். ஸோமபானஞ்

செய்யும் அவ்யாகமும் அவ்வக்கினியினது கார்யங்களைச் செய்யும். அவனே எல்லா வுயிர்களுக்கும் (உணவுபோல) ஆதாரமாவான். அவன் பொருட்டே யாகங்களை (தர்சபூரணமாதிய கர்மங்களை) எல்லாருஞ் செய்கிறார்கள். அக்கினியே! உனக்குச் சருபுரோடாச முதலிய அவிப்பொருள்களைத் தருபவனுக்கும், தருவேமென்றெண்ணி ஸ்தோத்திரஞ் செய்யும் பிரியவான்களுக்கும் அவர்களுடைய செய்கைகளை யறிந்து செல்வத்தைத் தருவாயாக.—(எ-று.) ரிதம், யாகம்; ரிதத்துறுவான் யாகத்துக்கு வரும் அக்கினி. மகம் என்பது தர்ச பூரண மாஸம் முதலாகிய கர்மங்களைக் குறிக்குமென்பார் சாயணர். முன்னிரண்டடி படர்க்கையாகவும் பின்னிரண்டடி முன்னிலையாகவும் வந்தது. முதலடிக்கு மேனாட்டாசிரியர் (Griffith) "விதியினது நினைப்புப் பலமானது. அவ்விதியின் கட்டளைகளு மப்படியே" என மொழி பெயர்ப்பார்.

7 & 8. மனுவினது வங்கிசத்தோர்க் கோதாவாய் மன்னுற்று
மனிதர்பெறும் பல்வகைய வளந்தனக்குப் பதியாவாய்;
தனதுபெருங் குடிவளரத் தனயர்விழைந் தனதருளா
லினவலிகொண் மக்களைப்பெற் றிருப்பர்நெடுநா ளிவணே.

(இ-ள்.) (அக்கினியே!) மனுவினது வம்சத்தவர்களாகிய மானவர்களுக்கு ஹோதாவாய் (தேவரை யழைத்துக்கொண்டு வருபவனாய்)ப் பொருந்தி, மனிதர்கள் பெறும் பசு முதலிய பல வகையான செல்வங்களுக்கும் நீயே ஸ்வாமியாவாய். ரித்விஜர்கள் தமது பழைய வம்சமானது வளருவதற்கெண்ணி யுன்னருளினாற் பலம் பொருந்திய மக்களைப் பெற்று நெடுநாள் ஜீவித்திருப்பார்கள்.—(எ-று.) தனது, தமது ஒருமைப்பன்மை மயக்கம்.

9 & 10. தந்தையின் சொற்கேட்டொழுகுந் தனயரெனவிரைவாகச்
செந்தீயோனாணைகளிற் செவிகொடுப்பார் பணிசெய்வோர்;
நந்துமுணவோனு மவர்நற்கடையிற் றனங்கூட்டும்;
மந்திரநண்பன் வானை மீன்களொடு வயக்கினனே.

(இ-ள்.) பிதாவின் வார்த்தையைக் கேட்டு அதன்படி நடக்கும் புத்திரர்களைப்போல, அக்கினிகார்யஞ் செய்பவர் அச்சிவந்த தீயோடு கூடிய வக்கினியினது உத்தரவுகளைக் கேட்டு, அவற்றின்படி விரைவாகச் செய்வார்கள். மிக்க உணவுப் பொருள்களோடு கூடிய அவனும் அவர்களது வாசற்படியில் யதேஷ்டமான செல்வத்தைக் கொண்டுவந்து கொட்டுவான்.

யக்ஞக்கிரகத்துக்குச் சிநேகிதனை அக்கினி வானத்தை நட்சத்திரங்களோடு உருப்படுத்தினன்.—(எ-று.) மந்திரம், யக்ஞம் நடத்தும் வீடு, பூஜாக்கிருகம். யாககர்த்தாவின் வீட்டில் கிருகபதியாயுள்ள அக்கினியே லோகாதாரமான தெய்வமாக வானத்தைச் சிருஷ்டித்து அதில் நட்சத்திரங்களை யமைத்தானென விளக்குவார் மேனுட்டாசிரியர். புத்ரன் புத் என்னும் நரகத்தைச் சேதிப்பவன்.

வருக்கம் 12.

## 69. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 5.

10 இருக்குக்கள் கொண்டது.

ஓதுவோர்க்கு ஐந்து.

*ரிஷி: ஷேடி பராசரன். வடமொழிச்சந்தம்: துவிபதா விராஜ். தேவதை: அக்கினி.*

1 & 2. *வெண்மையனும் வைகலது காதலன்போல் வெளுப்பூட்டி*
*யொண்மையுள விண்மணிபோ லொளிநிறைப்பான் புவிவானில்;*
*திண்மையினிற் றோன்றியதுஞ் செறிந்தவற்றைச் சூழ்கின்றாய்;*
*ஒண்மையுள தேவர்சுதனுய்த் தந்தை யாவாயே.* (1)

(இ-ள்.) வெண்மையான நிறத்தோடு கூடியவனாய், (அக்கினி) உஷஸின் நாயகனைப்போல எல்லாவற்றிற்கும் பிரகாசத்தைத் தந்து, பூமி, வானங்களில் சூரியனைப்போலக் காந்தியை நிறைப்பான். (அக்கினியே!) பிறந்தவுடன் உலகத்திலுள்ள வஸ்துக்களைச் சூழ்ந்து அவற்றில் வியாபிக்கிறாய். நீ ஒளி பொருந்திய தேவர்களுக்கு (ரித்விக்குக்களுக்கு)ப் புத்திரனை யமர்ந்து அவர்களது பிதாவாகிறாய் (அல்லது அவர்களைப் பரிபாலிக்கிறாய்).—(எ-று.) வைகலது காதலன், விடியற்கால தேவதையாகிய உஷஸுக்கு நாயகன், சூரியன் என்றபடி. விண்மணியென்றதும் சூரியனையே. முதலிரண்டடி படர்க்கையாகவும், பின்னிரண்டடி முன்னிலையாகவும் கூறினர். "ஒண்மையுள தேவர் பிதா, புத்திரனு யோங்குவையே." என்றும் கடைசியடியை ஓதலாம். 'பிரகாசம் பொருந்திய தேவர்களுக்குப் பிதா நீ. என்றாலும் அவர்களது புத்திரனைப்போல அவர்களுக்கு அவியுணவைச் சுமந்து அவர்களைச் சேவிப்பாய்.' என்பது பொருள். தேவர் என்பதற்கு ரித்விக்குக்கள் அல்லது

பொழுதறிந்து மறைபுகன்று யாகஞ்செய்யும் பிராஹ்மண ரென்று சாயணர் உரை கூறுவர். என்? பிராஹ்மணர்கள் பிரத்தியட்ச தேவர்களென்று தைத்திரீயம் கூறுவதால், மண். 1, சூக், 26. செய். 19 பார்க்க.

3 & 4. ஆதனது மடிசார மறிந்து கொளல்போ லங்கி
மேதையனு மிடம்பமிலான் வெவ்வுணவைச் சுவைப்படுப்பான்;
வாதையறுஞ் சுகமீவோன் மாந்தர் நடு வாழ்வதென
வோதுறவே யாகநடு வொளிர்ந்தகத்தே யுறைவானே.

(இ-ள்.) பசுவினது மடியானது பசுவுண்ணும் உணவுக ளில் பாலுக்கு வேண்டிய சாரத்தையறிந்து எடுத்துக்கொண்டு பாலாகச் செய்வதுபோல, மேதாவியும், டம்பமில்லாதவனு மான அக்கினி தன்னிடத்திலுறும் உணவுப்பொருள்களைப் பக்குவப்படுத்திச் சுவையுள்ளவையாகச் செய்வான். துன்ப மில்லாத சுகத்தைத்தரும் புருஷன் ஜனங்களுக்கு மத்தியில் குடியிருப்பதுபோல, யாகத்துக்கு மத்தியில் அழைக்கப்பட்டு அக்கினி யக்ஞக்கிருகத்தில் தங்கியிருப்பான்.—(எ-று.) ஆதனது, ஆவினது என்னும் பொருளில் வந்தது. ஸுகாரியான புருஷன் ஜனங்களுக்கு மத்தியிலிருப்பின் நற்பயனைத் தருவான். அதுபோலவே அக்கினியும் யாகவீட்டிற் பயன்படும் என்ற படி. ஓதுறல் ஈண்டு அழைக்கப்படுதல்.

5 & 6. இற்பிறந்த மகனைப்போ லின்பளித்துப் பரியின்மகிழ்
தெற்றியடித் திருப்பானு வெதிர்த்திடு மொன்னார்கடமை;
யெற்றை நரரோடமியா னியைந்த சமவுறையுளர்க் கூ
வுற்றழைப்பே னற்றை யெலாத்தேவுருவு மெரிகொள்வான் (3)

(இ-ள்.) புத்திரனைப்போல வீட்டிற் பிறந்து (அக்கினி இன்பத்தைத் தந்து, குதிரையைப்போலச், சந்தோஷத்தோடு கூடியவனுய்ப் பகைத்தெதிர்த்த ஜனங்களை நன்றாகவடித்துக் கொல்லுவான். எப்போது ரித்விஜர்களாகிய புருஷர்களோடு யான் சமசதனமுள்ள தேவர்களைக் கூவி யழைப்பேனே அப் பொழுது அக்கினி யவ்வெல்லாத் தேவருடைய உருவத்தையும் தானே யடைவான்.—(எ-று.) சமவுறையுளர், ஸநீள: சமசதன முள்ளவர். சமானமான வீட்டோடு கூடியவர். சமானமான பெருமையுள்ள வீடுகளிற் குடியிருக்கும் தேவர்.

7 & 8. ஈண்டுதொழி லாற்றுமகர்க் கீத்ததவ வொல்லெனநீ
யீண்டும்போ துன்றேன்பை யெதிர்த்தழிப்பா ரில்லையால்

மாண்டகுணத் துணைவரொடு மருவலர்கள் வெருண்டோடத்
தூண்டியுன தக்கருமங் துகட்படுப்போர்க் கொலுங்காலே. (4)

(இ-ள்.) இவ்விடத்துக் கர்மங்களைச் செய்யும் யஜமானர்களுக்குக் கர்மபலனைத்தர நீ வேகமாகச் செல்லும்போதும், பெருமை பொருந்திய உனது தோழர்களாகிய மருத்துக்கள் எழுவரோடு சத்துருக்கள் பயந்தோடும்படி தூண்டி உனது (யாக கர்த்தாக்களுக்குச் சுகமளிப்பதாகிய) அக்கர்மத்தைக் கெடுக்கும் ராட்சஸர்களைக் கொல்லும்போதும், உனது விரதங்களை இம்சிப்பவர்களொருவருமில்லை.—(எ-று.)

9 & 10. வைகறையின் காதலன்போல் வளரொளியனிற்றருவோன்
மைகுலவா வுருவத்தா னெம்மையறிந் தருளுகவால்;
மெய்குலவு மவிசுமந்து மேவுமக வாயில்வழி
யைகுலவு நபங்காண வணைவவவன் கதிர்யாவும். (5)

(இ-ள்.) உஷஸின் காதலனாகிய சூரியனைப்போல விசேஷமான பிரகாசத்தோடு கூடியவனும் கிருகத்தை யுண்டுபண்ணுபவனும், குற்றமற்ற ரூபத்தோடு கூடியவனுமான அக்கினியெங்களை (எங்கள் ஸ்தோத்திரங்களை) யுணர்ந்து எங்களுக்குப் பலனைத் தரட்டும். அவனுடைய கதிர்க்கற்றைகளெல்லாந் தமது மெய்யிற் படும் அவிப்பொருளைச் சுமந்துகொண்டு யக்ஞக்கிரகத்தின் வாசற்படி வழியாக அழகு பொருந்திய ஆகாசத்திற் காணப்படும்படி செல்லும்.—(எ-று.) மைகுலவா வுருவத்தோன் என்றது மற்றைத்தேவரைப்போல யக்ஞகர்த்தாக்களுடைய கண்களுக்குப் படாது எப்போதும் நிற்காத காரணத்தால்; அதாவது அக்கினியின் ரூபம் எப்பொழுதும் பிரத்தியட்சமாகத் தெரியும் என்றபடி. வைகறை, உஷஸ். சூரியன் உஷஸுக்கு ஜாரனும்; ஜாரன், காதலன். மண். 1, சூக். 66, செய். 4 பார்க்க. ஐ, அழகு.

வருக்கம் 13.

## 70. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 6.

### 11 இருக்குக்கள் கொண்டது.

ஓதுவார்க்கு 6. 11-வது இருக்கை இரண்டுமுறை யோதுதல் மாபு.

ரிஷி: ஷெடி பராசரன். வடமொழிச்சந்தம்: துவிபதா விராஜ். தேவதை: அக்கினி.

## மண்டலம் 1. சூக்தம் 70.

1 & 2. அனக்கூட்ட மெய்துகயாம்; அக்கினியுங் கருமமெலா
மினச்சோதியோடு மதியினையவோனுய்ப் பாவுறுவான்;
கனத்தேவர் விரதமெலாங் கண்டறியுமவனே; இம்
மனுப்பூதர்க்கண்ணுதித்த மற்றவற்று நிறைகுவனே.

(இ-ள்.) யாங்கள் மிகுதியான அன்னக்குவியலை யடைவோமாக. அக்கினி எல்லாக் கருமங்களிலும் அழகான சோதியோடு புத்திமந்தனுய்ப் பாரந்து நிற்பான். அவனே எல்லா தேவ விரதங்களையு மறிவதுமன்றி மனுஷ்யர்களது மத்தியிலுண்டான விரதங்களையும் கண்டறிந்து அவற்றில் நிறைந்து நிற்பான்.—(எ-று.) மனுப்பூதர், மனிதர்கள்.

3 & 4. நீருறைவோன் வனமுறைவோ னெடுந்தாவரத் துறைவோன்,
தாருறையுஞ் சங்கமத்துஞ் சடாங்கி யெனவுறைவோன்;
மேருநனந்தலை யேனு மகவில்லத் தவி யவற்கே;
சாரமான், குடியோம்புந் தலைவனெனத் தொழிற் செய்வான். (2)

(இ-ள்.) தண்ணீருக்குள் வசிப்பவனும், காட்டின் மத்தியில் வசிப்பவனும், தாவரங்களுக்கு மத்தியில் வசிப்பவனும், சங்கமத்தைச் சேர்ந்த பிராணிகளின் அகட்டில் ஜடராக்கினியாகத் தங்குபவனுமாகிய அக்கினிக்காக, மலைக்கு மத்தியிலிருப்பினும் யக்ஞக்கிரகத்தில் அவியை யளிப்பார்கள். மரணமில்லாதவனுகிய அவ்வக்கினி, ஜனங்களை ரட்சிக்கும் ராஜாவைப் போல இரட்சண கர்மங்களோடு கூடியிருப்பான்.—(எ-று.) மேரு, மலை; தார், பூமி; சடாங்கி வயிற்றிலுள்ள நெருப்பு, தேகச்சூடு.

5 & 6. இரவொளிர்வோ னக்கினியு மேத்து நல சூக்தமுரை
யிரவலற்குப்பொருளளிப்பான்; எய்தியபேரறிவுடையோய்!
வரமுயருந் தேவர்பிறப்போடு மரிப்போர் பவத்தின்
றரமுணர்வாய்; நீநிதமுந் தரைசார்யாவையுங் காக்க.

(இ-ள்.) இரவில் பிரகாசிப்பவனுகிய அக்கினி நல்ல சூக்தத்தைக் கூறும் யாசகனுகிய யஜமானனுக்குப் பொருளைத் தருவான். பேரறிவுடையவனே! சிறந்த (இந்திராதி) தேவர்களின் பிறப்பையும், மரண தர்மமுள்ள மனிதரின் பிறப்பையும் நீ யறிவாய். நித்தியமும் பூமியிலுள்ள பொருள்களை யெல்லாம் காப்பாயாக.—(எ-று.) படர்க்கை முன்னிலையாக மாறிற்று.

7 & 8. பல்லிரவும் வைகலுமென் றுறமுருவிற் பாதபத்தோ
டில்லொழுகுஞ் சங்கமமு மேய்ந்து ரிதஞ்சூழ்பவனே

யெல்லமருந் தூதுவனு யாகமுறு மவற்றொழுதார்
பல்வகைய கன்மமெலாம் பட்டாங்கி னளிப்பதற்கே.

(இ-ள்.) ஒன்றல்லாத பல இரவுகளும், விடியற் காலங்களு மென்ற வேறுபட்ட ரூபத்தோடு தாவர சங்கமங்களிற் பொருந்தி, ரிதத்தை (சத்தியத்தை அல்லது தண்ணீரை அல்லது யாகத்தைச் சூழ்ந்து நிற்பவனும், பிரகாசம் பொருந்திய ஹோதாவாக யாகத்தில் வந்தடைபவனுமாகிய அக்கினியை வளர்த்துத் துதித்தார்கள், அவன் எல்லாக் கர்மங்களிலும் சத்திய பலன்களைத் தந்து காப்பதற்காக.—(எ-று.) காப்பதற்காகத் துதித்தார்கள் எனக் கூட்டுக.

9 & 10. துதிபெறு மெம்பசுக்களுக்குத் தோய்ப்பாயால் மாட்சிமையை;
மதிபெறு பேரொளிச் செல்வ மெமக்காக்க மாந்தரெலாம்;
பதிபலவிற் பலபேரும் பலவிதமா யுனைத்தொழுது
சுதர் வயதுசென்றபிதாச் சொத்துறலிற் றனம்பெறுவார். (5)

(இ-ள்.) பலராலும் துதிக்கப்படும் அழகாகிய எமது பசுக்களுக்குக் கீர்த்தியை உண்டுபண்ணுவாய். (அதாவது எமது பசுக்கள் மிக்க விலைமதிப்புள்ளவையாகச் செய்வாய் என்றபடி.) ஜனங்களெல்லாம் மிக்க வொளிபொருந்திய பெரிய செல்வத்தை எங்களுக்குக் கொண்டுவந்து தரட்டும். பல வீடுகளிலும் பல யஜமானர்கள் பலவிதமாக உனைத்தொழுது, வயது சென்ற தந்தையினது செல்வத்தைப் புத்திரர்கள் பெறுவதுபோலத் தனத்தை யடைகின்றார்கள்.—(எ-று.)

11. சாதனஞ்செய்பவனிகரச்சட்டெனவே பலனடைவான்;
மாதனுவைக் கையேந்து மகன்பொருவுஞ் சூரனவன்;
வேதனைசெய்மிடுக்கனெனமிகுபயத்தைவிளைப்பவனா
யோதனத்தே யொளியோங்கி யூகமொடு முதவுகவே.

(இ-ள்.) ஒரு விஷயத்தை ஸாதகஞ் செய்பவன் அவ்விஷயத்தின் பலனை யடைவதுபோல அக்கினியும் எல்லாப் பலன்களையும் விரைவில் அடைவான். பெரிய வில்லைக் கையிலேந்திய வீரனைப்போல விளங்குஞ் சூரனுவான் அவன். இம்சை செய்யும் மிடுக்குள்ளவன் பலருக்கும் பயத்தை யூட்டுவதுபோல அக்கினியும் பார்ப்போருக்குப் பயத்தை யுண்டு பண்ணுவான். (ஆயோதனத்தில்) யுத்தத்திற் பிரகாசம் மிகுந்து அவன் எங்களுக்குச் சகாயம் செய்யட்டும்.—(எ-று.) ஆயோதனம், யுத்தபூமி. வடமொழித் துவிபதாவிராஜ் இரண்டு இருக்குக்களுக்கு ஒரு செய்

யுளே யாயினும் இப்பதினோராமிருக்குக்கு மாத்திரம் தனியே ஒரு கொச்சக் கலிப்பா சொல்லப்பெற்றது. ஏன்? ஓதுதற்கழகாயிருக்குமாறு என்க.

வருக்கம் 14.

## 71. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 7.

10 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: ஷை பாராசரன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.*

(வேறு.)

1. ஓரிடத் துதித்த நேச வுடன்வயி றநேக வன்ன
   நேருறு மன்பைத், தாய்மார் நித்தியம் பதியைப் போற்று
   மேரினிற், கூப்பிச் சேவை யியற்றுங், காரிருள்வெளுத்துச்
   சேருறுஞ் செங்நிறத்து வைகலைப் பசுக்கள் போன்றே.

(இ-ள்.) ஓரிடத்தில் உற்பத்தியான நேசமுள்ள சகோதரிகளாகிய விரல்கள், சித்திர காந்தியோடு கூடிய அன்புக்குரிய வக்கினியைத், தாய்மார் தமது உத்தம நாயகர்களிடத்து நித்தியம் பக்திசெய்யும் முறையாக, இருட்டு வெளுத்துச் சிவப்பு நிறத்தோடு கூடிய விடியற்காலத்தைச் (சூரியனது) கிரணங்களாகிய பசுக்கள் சூழ்ந்து சேவிப்பதுபோலக் கைகுவித்து வணங்கும்.—(எ-று.) விரல்கள் கிரணங்களைப் போலக் கூப்பித், தாய்மார் கணவரைச் சேவிப்பதுபோல, அக்கினியைச் சேவித்து நிற்குமென்க. உடன்வயிறு, சகோதரம். அன்பு ஈண்டு அன்புக்குரிய அக்கினியைக் குறித்தது. பசுக்களென்றது சூரிய கிரணங்களை, செவ்வானங்களை யென்பார் மேனாட்டாசிரியர் (Griffith); செவ்வானம், செக்கர்மேகம்.

2. எம்முன்னோ ரங்கிராக்க, ளேத்துரை யொலியால் வன்மை
   செம்மிய திடாங்க நாகஞ் சேதித்துச் சிறந்து நின்றார்.
   அம்மைசார் பாதை பேர்வா னமையவென் றெமக்காச் செய்தார்;
   இம்மை, நாள், ஒளிக்கொடியை, யியைகதிர்ப் பசுவைக் கண்டார்.

(இ-ள்.) எமது பூர்வீகர்களாகிய அங்கிரஸர்கள், தமது ஸ்தோத்திர சப்தத்தினாலேயே வலிமை பொருந்திய திடாங்க

முள்ள மேகத்தை யடைத்து வைத்த அசுரனாகிய பணியென்னும் மலைபோன்று பெருத்த வுடலுள்ளவனைப் பிளந்து மேன்மை பெற்றனர். விண்ணிடத்தில் (இடைஞ்சலில்லாத) அழகிய பாதையொன்றை யெமக்காக உண்டுபண்ணினார்கள். இவ்வுலகத்து அஹஸ்ஸையும் (பகலையும்) அப்பகலை யுணர்த்தும் ஒளி பொருந்திய கேதுவாகிய சூரியனையும், சூரிய கிரணங்கள் செறிந்த பசுக்களையும் (செவ்வானங்களையும்) அறிந்து பெற்றார்கள்.—(எ-று.) ஒளிக்கொடி யென்றது பகலை யுணரும்படி செய்யும் சூரியனும். பசுக்கள் செவ்வானங்க ளென்று மேற்பாட்டிற் சொன்னார். நாகம் என்றது மேகமலை யென்பார் மேனாட்டாசிரியர், பணியென்னு மசுரனென்பார் சாயணர். நாள், பகல் இரண்டன்றொகை.

3. ஒழுங்கினை நிறுவிக்கன்ம மோங்கிடச் செய்தார்; செல்வர்,
வழங்குறு தனத்தா லங்கி காரியம் வகிப்போர், கன்மந்
தழங்குறப்புரிவோர், யாதுஞ்சார் திருட்டிணையே யில்லார்,
வழங்கவி தேவ சாதி வாழ்விப்போர் வருவா ரன்றே.

(இ-ள்.) ஆங்கிரஸர்களாகிய மஹரிஷிகள், காருகபத்திய மாதிய ஒழுங்குகளை ஏற்படுத்தி அக்கினி ஹோத்திராதி கர்மங்களாகிய தனங்களைச் செய்தார்கள். தனஸ்வாமிகளாகிய செல்வவான்கள் தரும் செல்வத்தைக் கொண்டு அக்கினியாதான சாரியங்களைத் தாங்குபவர்களும், யக்ஞ கர்மங்களைச் சிறக்கச் செய்பவர்களும், ஒரு விஷயத்திலும் திருஷ்ணை (ஆசை) யில்லாதவர்களும், அவிப் பொருள்களால் தேவர்களை வாழும்படி செய்பவர்களுமான அங்கிரஸர்கள் அக்கினியை யெதிர்முகமாகக் கொண்டுவருவார்கள்.—(எ-று.) திருட்டிணை, திருஷ்ணை, ஆசை. அங்கிரஸர் தோன்றா எழுவாய்.

4. கடைத்தபின் வியானனென்னக் கனலெழுந் [தொளிவெளுத்துக்
கடைக்கடை யில்லந் தோறுங் காந்தியினமர்ந்து, தோழ
னடைப் பெருமன்னன் வேற்றான் றன்வயி னடப்பான் [மானப்,
படைத்தனன் றாது தேவர் பக்க லப்பிருகு போன்றே.

(இ-ள்.) கடைந்தெடுத்தபின் அக்கினி வியானனென்னும் வாயுவைப்போல வெழுந்து வெளுப்படைந்து வீடுகடோறும் பிரகாசத்தோடும் வீற்றிருந்து, அப் பிருகு ரிஷியைப்போல

யாககர்த்தாவின் றூதனாக, வேறு பெரியநாட்டு அரசனிடத்துத் தூதுபோகும் ஒரு தோழனைப்போலத் தேவர்களிடத்துச் சொல்லுவான்.—(எ-று.) அக்கினியை தேவஹோதாவாகச் சொல்லுவது சாஸ்திர மரியாதைக்காகவே யல்லாது யஜமானனது அதிகாரத்துக் கஞ்சியன்று. அதற்காகவே தோழனையுவமை கூறியது. அத்தோழன் ஒரு ராஜாவுக்காகத் தூதுபோவது மரியாதை நிமித்தமே. கடைந்தபின் என்றது கடைத்தபின் என வலித்தல் விகாரம் பெற்றது. பிருகு ஒரு மஹரிஷி, இவன் முதன் முதல் மாதரிச்வானாகிய வாயு கொண்டுவர அக்கினியைப் பெற்றவன். மண். 1, சூக். 31, செய். 3 ஐயும், மண். 1, சூக். 60 செய். 1 ஐயும் பார்க்க.

5. பெரும்பிதாவாந் தேவர்க்குப் பெருகு மிச்சார மீயு
மரும்பொழுதூறுசெய்யு மரக்கரோர்ந்தம்பெய்தே வெந்
தெரிந்திட வோட்டுந்தேவன், புத்திரியுஷைக்குச் சோதி
பொருந்துதன்கிரணத்தோடெல்கதிரையுங்கூட்டாகிற்பான்.

(இ-ள்.) மகத்துவம் வாய்ந்த பிதாக்களாகிய தேவர்களுக்கு நிறைந்த சார பூதமாகிய இவ் வவிப்பொருள்களை யூட்டும்போது அக்கர்மத்தை தடுத்து இடைஞ்சல் செய்யும் ராட்சஸர்களை யுணர்ந்து அவர்களை முதுகு காட்டி யோடும்படி யடிக்கும் (அக்கினியாகிய) தேவன் தன் புத்திரியாகிய உஷஸுக்கு (விடியற்காலாபிமான தேவதைக்கு அல்லது விடியற்காலத்துக்கு)த் தனது ஒளி பொருந்திய கிரணங்களோடு சூரியனுடைய கதிர்களை யொன்று சேர்த்து அவளது காந்தியை ஸ்தாபிக்கிறான்.—(எ-று.) பிதா ஒருமைப்பன்மை மயக்கம். எல், சூரியன். தேவன் ஈண்டு அக்கினி தேவன். மேனாட்டாசிரியர் இந்த ரிக்குக்குப் பொருள் விளங்கவில்லை யென்பார். வெந், முதுகு.

வருக்கம் 15.

6. தன்னகத்துனக்கென்றென்றுந் தாங்கிய தணலுளோர்க்கும்
உன்னரு மகம் வணக்கத் தமைத்தவி யுதவு வோர்க்கும்
பன்னரு மீரிடத்தும் பரவியோ யனம் வளர்ப்பாய்;
உன்னி நீ பொருதத் தூண்டும் போரினனுறுவான்பொன்னே.

(இ-ள்.) தனது வீட்டில் உனக்கென்று எல்லாக் காலத்திலும் ஸமித்துக்களைக்கொண்டு கூட்டி வைத்துக்கொண்டிருக்கும் யாகாக்கினி யுள்ளோனுக்கும், யக்ஞத்தினிடத்து வணக்கத்தோடும் அவிப்பொருளை வைத்து உனக்கு உதவுவோனுக்கும்

(உத்தம மத்திமஸ்தானங்களான) மேற்சொன்ன இரண்டிடத்திலும் வியாபிப்பவனாகிய அக்கினியே, நீ அன்னப் பொருள்களை விருத்தி செய்வாய். உன்னால் தூண்டப்பட்டு யுத்தத்திற்குச் செல்லும் தேவரோடு கூடிய வீரன் செல்வத்தையடைவான்.—(எ-று.)

7. போசன மெலா மெரிக்கட் பொருந்துறுமேழு பேரியா
றுசினிற் சமுத்திரத்தை யணைவது போல; எங்கள்
போசன மொக்க லோர்ந்து பொருந்திய வல்ல; நீயே
மாசைசார் தேவரோடு மதித் தெமக்காகக் காண்க.

(இ-ள்.) ஏழு பெரிய நதிகளும் சமுத்திரத்தைப் பொருந்துவதுபோலச் சரு புரோடாசம் முதலான போசனபதார்த்தங்களெல்லாம் அக்கினியினிடத்துப் பொருந்தும். எங்களுடைய உணவுப்பொருள்கள் எங்களுக்குச் சுற்றத்தார்கள் தந்தவையல்லவாம். (நீயே தந்தது என்றபடி.) அதனால் தனபதிகளாகிய தேவர்களோடு நீயே எண்ணி எங்களுக்குப் பொன்னையறிந்துகொடுப்பாயாக.—(எ-று.) ஒக்கல், சுற்றம்; வடமொழி மூலத்தில் ஜாமய : என்றுள்ளது; அதற்கு ஒரே பாத்திரத்தில் சாப்பிடுபவர்கள் என்பது பொருள்; சகோதரர்களாம். ஏழு நதிகளையும் மண். 1, சூக். 32, செய். 12ல் பார்க்க.

8. நரர்பதி யகட்டிற் றாயவன்னத்தைச் சமைத்து மெய்யிற்
பரவுறுஞ் சுடர்கொள் சோதியாக்கிய விந்து சூலுற்
றாரமுற, அங்கி, மொய்ம்பன் கோதிலான் கருமமுற்றோன்
தருணனு மகனு யந்தத் தநயனை யூக்குவானே.

(இ-ள்.) யாகஞ்செய்யும் ரித்விஜர்களாகிய மனிதர்களுக்குப்பதியாகிய யஜமானனது வயிற்றிற்பொருந்திய சுத்தமான உணவைப் பக்குவப்படுத்தியவனது சரீரத்திற் பரவுகின்றசுடர் பொருந்திய சோதியானது உருவப்படுத்திய அன்னரஸ ரூபமான வீரியம் கருப்பஸ்தானத்திற் பொருந்தி வலுவடைந்தபோது, அக்கினியே வலிமை பொருந்தியவனும், குற்றமற்றவனும், கர்மத்தோடு கூடியவனும், கட்டிளமை வாய்ந்தவனும் (கிழத்தன்மையில்லாதவனு மென்றபடி) ஆன புத்திரனை உற்பவிப்பான். உற்பவித்த அந்தப் புத்திரனையும் யாகாதி கர்மங்களைச் செய்யத் தூண்டுவான்.—(எ-று.) இச் செய்யுளுக்கு வேறொரு பொருளும் உண்டு. மேனாட்டாசிரியர் உரை இதற்கு முற்றும் வேறுபட்டதாம். அது பின் வருமாறு: "அபிவிருத்திக்காகப் பிரகாசமானது நரர் பதியை நிரப்பியபோது நேரே

விண்ணிலிருந்து தெளிவான விருஷ்டியுண்டாகிறது. அக்கினி யானவன் குற்றமற்று நன்றாய்ப் போஷிக்கிற இளமைவாய்ந்த கூட்டத்தை வெளிக்காட்டி யுற்சாகத்தால் நிரப்பிவிட்டான்." என்பது. நார்பதி இந்திரனு யிருக்கலாமென்றும், அவ்விளைஞர் கூட்டம் மருத்துக்களாக விருக்கலாமென்றும் அம்மேனுட்டா சிரியர் ஊகிப்பார். விந்து, ரேதஸ். சூல், கருப்பம். ரித்விஜர்கள் தரும் பரிசுத்தமாகிய அவியுணவை யாககர்த்தா உண்டதும் ஜடராக்கினி அதனைப் புத்திரர்களைத் தாத்தக்க அன்ன ரூப மான ரேதஸாக மாற்றிப் புத்திரோற்பத்தி யுண்டுபண்ணு கிறது என்பது பிண்டப்பொருள்.

9. ஏகனுய்ச் சூரன் மார்க்க மெய்தி வல்விரைவிற் சித்த
வேகமார்ந் தேகிச்செல்வம் வேண்டியவற்றைச் சேர்ப்பான்;
ஓகைநற்கரத்து வேந்தர் மித்திரா வருணரோங்கும்
போகமாமமுதமெங்கள் பசுக்களிற்பொருந்திச்சேர்வார்.

(இ-ள்.) சூரியன் தனியாகவே ஒளிபொருந்திய மார்க்கங் களிற் பொருந்தி மனோ வேகத்தைப்போல வேகமாகச் சென்று பலவிடங்களிலும் உள்ள செல்வங்களில் வேண்டியவற்றை எடுத் துக் கொண்டுவந்து சேர்ப்பான். நல்ல காங்களோடு கூடிய ரா ஜாக்களாகிய மித்திராவருணர்கள் எல்லாருக்கும் பிரீதிகரமான அமிர்தத்தை (பாலை) எங்கள் பசுக்களிடத்திற் பொருத்தித் திரி வார்கள்.—(எ-று.) 'அக்கினியே' நீயே சூரியனுயும், மித்திரா வருணர்களாயும் தோற்றுகிறுய்.' என்பது கருதத்தக்கது என் பார் சாயணர்.

10. எம்பிதிர் நட்பை யென்றுஞ் சேதிக்கல்; யாவுமோர்ந்து
பம்பிய கவிநீ; அங்கி, பயோதர நபத்தைப்போல
வெம்பியசரை யெம்மெய்யைமேவி யெம்முணர் வழிக்கும்;
அம்புவிய தற்குமுன்ன ரமுதத்தை யளிப்பாய் மன்னே.

(இ-ள்.) அக்கினியே! வஸிஷ்டர் முதலிய பிதிர்க்களது சிநே கத்தை யெப்போதும் நீக்கிவிடாதே. நீ எல்லாமுணர்ந்து தூரதிருஷ்டி வாய்ந்த கவியாவாய். நீர் தாங்கிய மேகம் சூரியனை மறைப்பதுபோலக் கிழத்தன்மையானது எங்களது சரீரத்தைப் பொருந்தி யெங்களுடைய புத்தியைக் கெடுக்கும். அதற்குமுன் பாகவே யெங்களுக்கு அமிர்தத்தை யளிப்பாயாக.—(எ-று.) அமுதம், அமிர்தம், மரணமின்மையை யளிப்பது.

வருக்கம் 16.

அஷ்டகம் 1. அத்தியாயம் 5.

## 72. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 8.

10 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: ஷெடி பராசரன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.*

1. *இத்தரை மனிதர்க்கேற்ற வெகுதனங் கரத்தெடுத்தே*
   *நித்தியற் களிக்கு ஞான காவிய மறையைத்தானேற்*
   *றெுத்த நல்லமுத மெல்லா மோதுவார்க் களிப்பானங்கி*
   *மெத்து நற்றனத்தின் மேவுந் தனபதியாகு னன்றே.*

(இ-ள்.) அக்கினி இவ்வுலகத்திலுள்ள நரர்களுக்கு ஹிதஞ் செய்கின்ற மிகுந்த தனத்தைக் கையிலெடுத்துக் கொண்டு, நித்திய வஸ்துவாகிய சிருஷ்டி கர்த்தாவுக்காகச் செய்த ஞான காவியஸ்தோத்திர ரூபமான மந்திரங்களைத் தானேற்றுக்கொண்டு, அந்த ஸ்தோதாக்களுக்கு நல்ல அமிர்தத்தை (பொன்னை)த் தருவான். உலகத்திலுள்ள செல்வங்களில் உத்கிருஷ்டமான செல்வங்களுக்கு அவன் பதியானுன்.—(எ-று.) அமுதம், அமிர்தம் ஈண்டு பொன்னென்பார் சாயணர்.

2. *நம்மகனம்மைச் சூழ்ந்து நலமுறக் கலந்தோன் றன்னை*
   *யம்மையின் விரும்பு ஞான வமரர் யாவருமே யோரார்;*
   *தம்மவிபெறாது சேர்ந்து தாங்கிய வணக்கத்தோடும்*
   *பொம்மலினங்கியோங்கும் பொருவில்சார் நடையினுற்றூர்.*

(இ-ள்.) நமக்குப் பின்னர்த் தோன்றுவதால் (அல்லது நாம் அரணி கடைந்து எடுப்பதால்) நமது மகனென்னத் தக்கவனும், நம்மைச் சுற்றிலுமுள்ள (அச்வத்தம், மூங்கில் முதலியவற்றிற் கலந்து நிற்பவனுமான) அக்கினியை இச்சித்த ஞானவான்களாகிய தேவர் யாருமே அவனைக் காணவில்லை. அக்கினியில்லாததனுல் தங்களுக்கு அவியுணவு கிடைக்காமல் வருந்தி மிகுந்த வணக்கத்தோடு அக்கினியை மூட்டி அக்கினி காரியங்களைச் செய்யும் உத்தமமான யாகப்பிரதேசங்களை நோக்கிக் காலால் அத்தேவர்கள் நடந்து வந்தார்கள்.—(எ-று.) மகன் என்பதற்குப் புத்திரனைப்போல் பிரீதிகாமானவன் என்பதும் ஒன்று. அமூரா: பிழைத்தலில்லாதவர்கள் என்பது பொருள். ஞானவான்கள் என்றூர் உரையில், அச்சொல் மருத்துக்களைக் குறிக்குமென்பார் சாயணர்.

3. சுசியுள்ளோர் மூன்றுகூதிர் தூயுனக்கிழுதையூற்றி
யிசையுறு முன்போற் பேர்பெற்றெக்கியத் தேவராகி
யுசிதமி லுடலைப் போகட் டோரெழு தட்டுப்பெற்றே
பசியுறு வமர ராகிப் பரகதி யடைந்தார், அங்கி.

(இ-ள்.) அக்கினியே! சுத்தமுள்ளவர்களாகிய (மருத்துக்கள்) மூன்று பனிக்காலங்கள் (வருஷங்கள் என்றபடி) பரிசுத்தமான உனக்கு ஆஜ்யத்தை (நெய்யை) யூற்றி உன்போலத் தேவநாமத்தையும் யக்கியதேவர்களாக விருக்கும் பெருமையையு மடைந்து தங்களுடைய ஊனம் பொருந்திய சரீரத்தைக் கழித்து அக்கினி(ச்)சயனமென்னும் கர்மத்தில் ஏழு கபாலங்களைப் பெற்று அமரர்களாகி ஸ்வர்க்கத்தை யடைந்தார்கள். —(எ-று.) மூன்று கூதிர் என்றது மூன்று பனிக்காலமாம். ஒரு வருஷத்துக்கு ஒரு பனிக்காலமே வருமானதால் அச்சொற்றொடர் மூன்று வருஷங்களைக் குறித்தது. மருத்துக்களுக்கு அக்கினி (ch) சயனத்தில் ஏழு கபாலங்கள் வைப்பதென்பதும், அப்பொழுது அம்மருத்துக்களெழுவரையும் ஈத்ரி அந்யாத்ரி, தாத்ரி, ப்ரதித்ரி, மித:, ஸபரா என்றழைப்பதென்பதும் தைத்திரீய ஸம்ஹிதை 4-6-5-ல் சொல்லப்படுகின்றன. 3 வருஷம் அக்கினி கார்யம் செய்து மருத்துக்கள் தேவவுடலைப் பெற்றார்களாதலால், இவர்களும் ரிபுக்களைப்போலவே மனிதராயிருந்து அமரர்களானவர்கள் என்பார் வில்ஸன். ஏழு தட்டுப்பெற்றே யென்பது வடமொழி மூலத்திலில்லை.

4. எக்கியக் குரிய தேவ ரிடமகல் புவிவான் றோன்றி
முக்கியமானபோற்றை முயன்றுருத்திரர்க்குரைத்தார்;
சக்கிரி பாதி யானோற் சார்ந்த மாருதக் கணங்க
ளக்கினி யுயர்ந்த தானத் தமர்ந்துள தோர்ந்தடைந்தார்.

(இ-ள்.) யக்ஞத்துக்குத் தகுந்த தேவர்கள் இடம்பரந்த ரோதஸீயி (வானம் பூமிகளி)ல் வந்து, தேவ அசுர யுத்தத்தில் தேவரை நிலைப்பிக்கும் தனத்தை யபகரிக்கும் ருத்திரனாகிய அக்கினியின் பொருட்டு அவனுக்கருகமான முக்கிய ஸ்தோத்திரங்களை யெடுத்துக் கூறினார்கள். தேவர்களிற் பாதியாகிய இந்திரனைச் சார்ந்து, மருத்துக்கள், அக்கினியுயர்ந்த ஸ்தானங்களாகிய அரசமரமாகிய இடங்களில் தங்கியிருப்பதைக் கண்டு அவனை யடைந்தார்கள்.—(எ-று.) ருத்திரன் ஈண்டு அக்கினியைக் குறித்தது. சக்ரியென்ற சொல் வடமொழி மூலத்திலில்லை. எதுகை நோக்கிச் சேர்த்தது. தேவர்கள் ஒருபாதி இந்திரன் மற்றப்பாதி யென்றது தைத்திரீயம் 1-5-1.

5. நன்குனை யறிந்து தேடி நாடி யுன்பக்கல் சார்ந்து
கொன்பெறு வணக்கிற்கேற்ற கோனுனை மனைவிமாரோ
டன்புற வணங்கி யன்ப ஞான வுன்கடைக்கண் காவ
லுன்றிய தேவர் தம்மெய் சுக்குற யாகஞ் செய்தார்.

(இ-ள்.) உன்னை நன்றாகவறிந்து கண்டு உனது பக்கத்திற் சேர்ந்து, நமஸ்காரஞ் செய்யத்தக்க உன்னைத் தங்கள் பத்தினிகளோடு நமஸ்கரித்துச், சகாவான உனது கடைக்கண்ணினது பார்வையாலேற்படும் காவலையடைந்த தேவர்கள் தங்களது சரீரம் பட்டினியாலிளைத்து மெலிந்துபோக யாகத்தைச் செய்தார்கள்.—(எ-று.)

வருக்கம் 17.

6. மூவெழு கூடயாக முற்ற வுன்னு னிலைத்து
மேவுறு மவற்றை யாகக் கேற்றவர் தெரிந்து மேன்மை
யோவறு மமிழ்தை யோம்பு முவரிடந் தாவரத்தைத்
தாவுறுபசுவைமற்றைப்பிராணியைச்சார்த்திக்காப்பாய்.

(இ-ள்.) 21 இரகஸ்யமான யக்ஞங்கள் உன்னுலேயே முழுவதும் நிலையாக்கப்பட்டவற்றை யக்ஞஞ்செய்யும் யோக்கியதையோடு கூடிய யஜமானர்கள் தெரிந்து, மேன்மை கெடாமல், மரணத்தன்மையல்லாத உன்னை வளர்க்கிறார்கள். அவ்யஜமானர்களிடத்து ஸ்தாவரங்களையும் பசுக்களையும் மற்றும் உபயோகமான ஜங்கமப் பிராணிகளையும் சாரவிட்டுக் காப்பாற்றுவாயாக.—(எ-று.) கூடம், இரகஸ்யம், குஹ்யம். மூவேழாவன: (மண். 1, சூக். 20, செய். 7.) அக்கினியாதேயம், தர்சபூரணமாஸம், அக்கினி ஹோத்ரம், ஆக்கிரயணம், சாதுர்மாஸ்யம், நிரூப பசுபந்தம், ஸௌத்ராமணி, ஆக ஹவிர் யக்ஞங்கள் 7; பஞ்சமஹா யக்ஞம், அஷ்டகாசிராத்தம், பார்வணசிராத்தம், சிரவணு, கர்மப்ரத்தியவரோஹணம், சூலகவம், ஆச்வயுஜி ஆகப் பாகயக்ஞங்கள் 7; அக்கினிஷ்டோமம், அத்யக்நிஷ்டோமம், உக்த்தியம், ஷோடசீ, வாஜபேயம், அதிராத்திரம், ஆப்தோராயாமம் ஆக ஸோமயக்ஞங்கள் 7; ஆக மொத்தம் 21. இவற்றுள் பஞ்சமஹா யக்ஞமென்பது பிரஹ்மயக்ஞம் (வேதமோதுதல்) வேத யக்ஞம் (ஹோமம் வளர்த்தல்), பூதயக்ஞம் (பலியீதல்), பிதிர் யக்ஞம், (தர்ப்பணஞ் செய்தல்,) மநுஷ்ய யக்ஞம் (இரப்போர்க்கீதல்) என்னும் ஐந்து மாம். பாக யக்ஞங்களில் கர்மப்பிரத்தியவரோஹணம்

சூலகவம் என்பவற்றிற்குப் பதிலாக ஆக்கிரகாயணி, சைத்திரி என்ற இரண்டைச் சேர்த்துள்ளார் அகபாதிக்காரர். இவ் விருபத்தொரு யாகங்களும் வைதிக ரஹஸ்யங்களானது பற்றிக் கூடயாகமென்றார், இவற்றிற் கக்கினியில்லாமல் நடவாதானதுபற்றி 'முற்ற உன்னால் நிலைத்து மேவுறும்' என்று அடை கொடுத்தார்.

7. உணர்வன யாவு மோர்ந்து மனிதருக் குணவு சுத்தம்
புணர்வதைப்பிழைப்புக்கங்கிபுணர்த்துக சதமோங்க;
இணங்கும்வான் புவிக்கட்டேவ ரேகுநன்னெறியைத்தேர்ந்து
வணம்பெறச் சோர்வி றாதாய் வயங்குவா யவி சுமந்தே.

(இ-ள்.) அக்கினியே! அறியவேண்டியவற்றை யெல்லா மறிந்து மனிதர்களுக்குப் பரிசுத்தமான ஆகாரத்தைச் சீவன நிமித்தம் எக்காலத்திலு மோங்கும்படி கூட்டுவாயாக. கூட்டியபின் வானம் பூமிகளுக்கு மத்தியில் தேவர்கள் செல்லும் பாதையை யறிந்து சோம்பலில்லாத தூதனைப்போல அழகாக அம்மனிதர்கள் தரும் அவிப்பொருள்களை அத்தேவர்களிடத்துச் சுமந்து செல்லுவாயாக.—(எ-று.)

8. மேன்மைசா னதிகளேழு மேம்படுதொழிலின் வானின்
றுன்றிழிபோது யாக மறிந்தவர் தனஞ்சார் மார்க்கந்
தோன்றுறக் கண்டா ருள்ளந் தோய்நரு ருண்டுவாழ
மான்ற சீர்த்திடத்தாப் பாலை யடைந்தது சரமை மாதோ.

(இ-ள்.) சோபன கர்மத்தோடு கூடி மகத்துவம் வாய்ந்த கங்கை முதலிய எழு நதிகளும் விண்ணின்று இறங்கியபோது யாகவிதிகளை யறிந்த ஆங்கிரஸர்கள் செல்வத்தை யடையும் மார்க்கத்தைக் கண்டார்கள். மனத்தோடு கூடிய மனிதர் சாப்பிட்டுச் சீவிக்கின்ற சிறப்பும் திடமும் பொருந்திய பாலுணவைச் சரமை பெற்றது.—(எ-று.) கங்கை முதலிய 7 நதிகளையும் மண். 1, சூக். 32, செய். 12-ல் பார்க்க. சரமை (ஸரமா)யின் கதையை மண். 1, சூக். 62, செய். 3-ல் நோக்குக.

9. அதிதியின் மக்கள்சாவில் தன்மையை யடைவான் மார்க்கம்
விதியினி னூற்ற வெல்லாக் கன்மமு மியற்றி நின்றார்;
அதிபெரியோர்க ளந்த மகரோடு மதிதித் தாயும்
பிதுவியைத்தாங்க வன்மைபெரி துற்றாள்; அவிகொண்டாயே.

(இ-ள்.) ஆதித்தியர்கள் மரணமில்லாத தன்மையை யடைவதற்கு வேண்டிய மார்க்கங்களைச் செய்யவெண்ணி

அவற்றிற்குக் காரணமான சதுர்த்தசராத்ரம், ஷட்திரிம்சத் ராத்ரம் முதலிய எல்லாக் கர்மங்களையுஞ் செய்தார்கள். அந்த மஹான்களான புத்திரரோடும் அவரது தாயாகிய அதிதி எல்லா ஜகத்தையும் தாங்கத்தக்க மகத்துவத்தைப் பெற்றுச் சிறந்தாள். (அக்கினியே!) அந்த வாதித்தியர் தந்த அவியுணவை நீ யடைந்தாய்.—(எ-று.) ஆதித்தியர் 14 இரவுகள் செய்யும் சதுர்த்தசராத்திரம், 36 இரவுகள் செய்யும் ஷட்திரம்சத் ராத்ரம் என்னும் விரதங்களை ஏற்படுத்தினார்களென்று தைத்திரீயம் (7-4-6) கூறும். பிருதுவி, பிருதுவி, இங்கு எல்லா ஜகங்களையும் குறித்தது. அக்கினியே என்ற ஒரு சொல் அதிகாரத்தை நோக்கி வருவிக்கப்பட்டது.

10. ஈண் டழகமைந்த யாக விருந்தனம் பதித் தீரக்கம்
மாண் டவ ரமைத்த போது வானிடத் தமரர் வந்தார்
தூண்டு தூய்சுடர்க டோய்ந்து நதியெனத் துனைவினூற்றிக்
கீண்டியே சலித்த காலை யின்புற்றார் தேவ ரங்கீ.

(இ-ள்.) இவ்விடத்து அக்கினியில் (யஜமானர்கள்) அழகு வாய்ந்த யாக சம்பத்துகளை ஸ்தாபித்து இரண்டு கண்களையும் அமைத்தபோது விண்ணிலிருந்து தேவர்கள் (யாகஸமயமது தானென்று) வந்தார்கள். அவ்வக்கினியிற் றூண்டப்படும் நிர்மல ரூபமான சுவாலைகள் வேகமாயோடும் நதியைப்போல நான்கு திக்கிலும் பரந்து சலித்தபோது, அக்கினியே, அத் தேவர்கள் ஸந்தோஷத்தை யடைந்தார்கள்.—(எ-று.) துனைவின் நால்திக்கு ஈண்டியே எனப்பிரிக்க. கண்கள் யக்ஞத்தில் சொரியும் நெய்யாம். இவ்விரண்டு கண்களும் சூரிய சந்திரர்கள் என்பார் மேனாட்டாசிரியர். அக்ஷீயக்ஞஸ்ய ஆஜ்யபாக லக்ஷணே(ச்)சக்ஷுஷீ என்பார் சாயணர். மேனாட்டாசிரியர், இந்த ரிக்குக்கே வேறுவிதமாகப் பொருளுரைப்பார்.

வருக்கம் 18.

## 73. மண்டலம் 1. அநுவாகம் 12. சூக்தம் 9.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை பராசரன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.

1. பிதாவி னற்செல்வம்போலப் பேருண வளிப்போ, னூலை
நிதானத் தினுணர்ந்தோனை நேரநல்வழிப்படுப்போன்,

## மண்டலம் 1. சூக்தம் 73.

*னுதாரன தில்லினின்பத்துறைவிருந்தெனக்களித்தோன்,*
*சதா பரிசா னகத்தைத் தாங்குவா னோதா வொத்தே.*

(இ-ள்.) பிதிரார்ஜிதமான சொத்தைப்போல (யஜமான னுக்கு) மிகுந்தவன்னத்தை யளிப்பவனும், தர்ம சாஸ்திரங்களை நன்றாகக் கற்றவனுடைய ஆக்ஞைகளைப்போலக் கேட்பவனை நல்வழிப்படுத்துவோனும், தாதாவின் வீட்டுக்கு வந்த அதிதி (விருந்தாளி)யைப்போலச் சந்தோஷத்தோடு கூடியவனுமான அக்கினி (ஹோதா) ஹோம கர்த்தாவைப்போல எப்பொழுதும் தன்னைச் சேவிக்கும் யஜமானனுடைய வீட்டைக்காப்பாற்றி விருத்திசெய்வான்.—(எ-று.) பிதிரார்ஜித சொத்து ஒருவனுக்குச் சோறுபோடும் ; தர்ம சாஸ்திரங்களைப் படித்தவன் வார்த்தையைக் கேட்டு நடந்தால் ஒருவன் ஸந்தேகந் தீர்ந்து நல் வழிப்படுவான். ஹோதா, ஈண்டு ஹோம கர்த்தா. அவன் அத்வர்யுக்களால் கர்மங்களைச் செய்வித்து யஜமானனுக்கு அவற்றின் பலனை யளிப்பான்.

2. *ஒளிச்சவிதாவைப்போலவுண்மையையுணர்ந்தோனெவ்வெச்*
*சுளிப்புறசமரின்கண்ணுந் தோய்ந்தென்றுங்காப்பான் ; பல்லோர்*
*விளிப்புறநிற்போன் றுன்பில்மெய்யின னுன்மாவென்னக்*
*களிப்பளி சுக மீவோனை யாவருங் காக்கற் பாற்றே.*

(இ-ள்.) எல்லாவற்றையுந் தெரியச் செய்யும் ஒளியை வீசுகின்ற ஸவிதா(சூரியன்)வைப்போல உள்ளவற்றை யறிபவனாகிய அக்கினி எந்த யுத்தத்திலும் பொருந்தி யெப்பொழுதுங் காப்பான். பல யஜமானர்களாலும் அழைக்கப்படுபவனும், வாதையில்லாத ரூபத்தோடு அல்லது சரீரத்தோடு கூடியவனும், ஒருவனுடைய ஆத்மா வவனுக்குச் சுகத்தைத் தருவது போலக் களிப்போடு கூடிச் சுகத்தைத் தருபவனுமான அக்கினியை யெல்லாரும் வணங்கத்தக்கவர்களாம்.—(எ-று.) அக்கினி கார்யத்தை விட்டுவிட்டால் வீர ஹத்திக்குச் சமானமான தோஷமுண்டாகின்றதென்று தைத்திரீய ஸம்ஹிதை (1-5-2) கூறும். தேவ: த்யோதமன: ஸர்வஸ்யப்ரோரக: ஒளியோடு கூடியவன், சூரியன். அடுத்த செய்யுளையும் நோக்குக.

3. *எவன் றிவாமணியைப் போல வெவ்வுலகினையுங் காப்பா*
*னவ னிதநண்பர் நாப்ப ணரசென மகத்திருப்பான் ;*
*எவன் முனர்ச் சார்வார் தந்தையில்லுறை வீரர்போல்வா*
*ரவன் பதிமகிழு நிந்தை யற்ற நாரியிற் றாயோனே.*

(இ-ள்.) எவன் சூரியனைப்போல எவ்வுலகத்தையுந் தாங்குவானோ அந்த அக்கினி ஹிதமித்திரர்களுக்கு மத்தியிலிருக்கும் அரசனைப்போல யக்ஞக்கிருக முதலிய விடங்களிலிருப்பான். எவனுக்கு முன்வந்து அமர்பவர்கள் தகப்பனார் வீட்டிலிருக்கும் புத்திரர்களைப்போலச் சுகமாக விருப்பார்களோ, அந்த அக்கினி தனது நாயகனுக்குகந்த குற்றமற்ற நாரியைப்போலப் பரிசுத்தவான் அல்லது கர்மயோக்கியனுவான்.—(எ-று.) தேவோந சூரியனைப்போல அல்லது திவா மணியைப்போல. என் ? தேவன் பிரகாசிப்பவன் என்று மேற்செய்யுளிற் சொன்னார். வீரர் வீரியத்திற்றோன்றியவர் புத்திரர் என்றபடி.

4. காவல்சா ரூர்க்க ணுன்னை நரர்களுங் கதிக்க நாட்டி
யாவலிற் றம்மகத்தே யநவரதமுஞ் சொலிக்கப்
பாவினு ரவியும் பூரி பரப்பினார் ; உயிர்க்காதார
மேவிய செல்வமெல்லா மேன்மையிற் றுங்கா யங்கீ.

(இ-ள்.) நிச்சலமான விடங்களில் அதாவது உபத்திரவமில்லாத கிராமங்களில் தங்கள் யக்ஞக்கிரகத்தில் மனிதர்கள் உன்னை ஸ்தாபித்து எப்பொழுதும் சுடர்விட்டெரியும்படி (ஸமித்துக்களூட்டி) நிறுத்தினார்கள். அவ்வக்கினியில், வேண்டிய அவிப்பொருள்களையும் (பூரியாக) யதேஷ்டமாக அல்லது பலவிதமாகப் பரப்பி வைத்தார்கள். எல்லா ஜீவன்களுக்குமாதாரமான செல்வங்களை யெல்லாம், அக்கினியே! நீ எங்களுக்காகச் சுமந்துகொண்டு வருவாயாக.—(எ-று.) காவல் சாரூரென்றது காவலோடு கூடிப் பகைவர் உபத்திரவிக்க முடியாத கிராமங்களை. பூரி, ப்ரபூதம், மிகுதி.

5. அங்கி யுன்பூசைச் செல்வ மடைந்தவர் பெறுக வுண்டி ;
பொங்கவிதருங் கர்த்தாக்கள்பொருந்துகவாயுளெல்லாம் ;
எங்களுக்குறுகவொன்னாரேந்தியதனம்போர்க்கண்ணே;
மங்கலில் புகழ்த்தேவர்க்கு வழங்கயா மவற்றிற் பங்கே.

(இ-ள்.) அக்கினியே! உனது பூசையாகிய செல்வத்தைப் பெற்ற யஜமானர்கள் அன்னத்தைப் பெறட்டும். உனக்கு (அவியளிக்கும் (ஸூரிகள்)யாககர்த்தாக்கள் எல்லா ஆயுட்காலத்தையும் அடையட்டும். பகைவர்களுடைய செல்வம் யுத்தத்தில் எங்கள்பால் வந்து சேரட்டும். அவற்றில் யாங்கள் இந்திராதி தேவர்களுக்குப் பாகந் தருவோமாக.—(எ-று.)

வருக்கம் 19.

6. வாஜெளித்தேசி னென்றும் வழங்குறு மடிய, அங்கி
தானடிக்கடி விரும்புந் தன்மைய ரிதஞ்சேர்வோர்க்கே
தேனு கவ்வியத்தை யூட்டுஞ்; செம்மன மிரக்குஞ் சீரி
ஞன பன்னதி குன்றின்வா யடைந்தன தூரநின்றே.

(இ-ள்.) பிரகாசத்தோடு கூடியவையும், எக்காலத்திலும் தரும் பால்மடியோடு கூடியவையும், அடிக்கடி அக்கினியால் விரும்பப்பட்டவையும், ஆன தேனுக்கள் (பசுக்கள்) (ரிதம்) யாகப் பிரதேசத்துக்கு வரும் அக்கினிக்கே பால் முதலிய கவ்வியத்தை யூட்டும். அநுக்கிரக புத்தியை யாசிக்கும் பல ஸிந்துக்கள் (ஆறுகள்) தூரதேசத்திலிருந்து பர்வதத்தின் கண் வந்து சேர்ந்தன.—(எ-று.) குன்று, பர்வதம், அத்திரி இவை ஸோமம் பிழியும் பாறையைக் குறிக்குமென்றும், ஸோமம் பிழியவேண்டி, நீரைக் கால்வாய்கள் வழியாக அப் பாறைக்குக் கொண்டு வருவார்களென்றும் மேனுட்டாசிரியர் (Griffith) கூறுவர்.

7. அங்கி நன்மன மிரக்கு மகத்தினுக் கருக ராவார்
பொங்கொளியுன் மாட்டன்னம்புகழொடுநிறுத்தார்;பின்னர்
மங்குல் காரெனு நிறத்தின் மண்டொளி விளர்த்த நாளுந்
தங்குற விரூபத்தோடு தயக்கியே சமைத்தா ரன்றே.

(இ-ள்.) அக்கினியே! அநுக்கிரக வெண்ணம் வாய்ந்த புத்தியை யாசிக்கும் யக்ஞர்கர்களாகிய தேவர்கள் சோதி நிறைந்த உன்னிடத்து அவியன்னத்தைக் கீர்த்தியோடு ஸ்தாபித்தார்கள். பின்பு கறுப்பு நிறத்து இரவையும், பிரகாசமானது வெளுத்துக்காணும் பகலையும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட வுருவத்தோடு சிருஷ்டித்தார்கள்.—(எ-று.) காரெனு நிறத்தின் மங்குலும், ஒளிவிளர்த்தநாளும் எனக்கூட்டுக.

8. தனம்பெற, மர்த்யர் யாரைத் தூண்டுவா யவரும் யாமுந்
தனம்பெற வங்கி; வானைத் தரையை யந்தரத்தை யுன்ற
னினம்பெறுமொளியினுலே நிரப்பினுய், நிழல்போன்றெல்லா
வனம்பெறு முலகும் வாழும் வண்ண மன்னவை காப்பாயே.

(இ-ள்.) அக்கினியே! எந்த மர்த்தியர்களை (மனிதரை)த் தனத்தைப் பெறுவதற்காக அக்கினிஹோத்ரம் முதலிய கர்மங்களைச் செய்யத் தூண்டிவிடுவாயோ அந்த மனிதர்களும் யாங்களும் செல்வத்தை யடையட்டும். பூமி, வானம் அந்தரமிவற்றை உனது சோதியால் நிரப்பினுய். (குடை) நிழலைப்

போல எல்லா அழகு பொருந்திய உலகங்களேயும் காப்பாற்று வாய்.—(எ-று.) வனம், அழகு. குடைநிழல் வெயிலினின்றும் ஒன்றைக் காப்பதுபோல என்பார் சாயணர்.

9. உன்றுணைகொண்டே, யங்கி, யொன்னலர்மாவை மாவாற்
றுன்னலர் நரரைத் தோய்ந்த நரர்களால் வீரர் தம்மை
மன்னிய வீரர் தம்மால் வாட்டுவேம்; பரவணிப் பொன்
றுன்னு மீசான ரெங்கள் சூரிக ளிமறா றெய்த.

(இ-ள்.) அக்கினியே! உன்னுடைய உதவிகளேப் பெற்றுச் சத்துருக்களுடைய குதிரைகளே யெங்கள் குதிரைகளினுலும், சத்துருக்களுடைய படைஞர்களே எங்களுடைய படைஞர்களா லும், அவர்களுடைய புத்திரர்களே யெங்கள் புத்திரர்களாலும் கொல்லுவோம். பிதிரார்ஜிதமாகத் தொன்றுதொட்டுவந்த செல்வத்தை யடைந்த ஈசனர்க (ஐசுரியவான்கள்) ளாகிய எங்கள் ஸூரிகள் (புத்திரர்களாகிய வித்வாம்சர்கள்) நூறு பனிக்காலத்தை (அதாவது வருஷத்தை) யடையட்டும்.—(எ-று.) வீரர் வீரியத்திற் பிறந்தவர், புத்திரர். பரவணி, பிதிரார்ஜிதம். பரவணிப்பொன், பிதிரார்ஜித செல்வம்.

10. மேதையா மங்கி, யெங்கூற் றிவணுன திதயத் தந்தத்
தீதிலாக் காணத்தோகை சேர்ப்பவாய்ச்செறிக; இன்மை
மோதுறு செல்வந் தாங்கு மொய்ம்புற நியமித் தியாங்கள்,
வாதைதீர் தேவரீந்த வவியுன்மே லடுக்கி வைப்போர்.

(இ-ள்.) மேதாவியாகிய அக்கினியே! எங்களுடைய வசனம் உனது இதயத்திலும், குற்றமற்ற அந்தக்காணத்திலும், ஸந்தோஷத்தை விளேவிப்பனவாகப் பொருந்தட்டும். தேவர்கள் தந்த வவிப்பொருள்களே யுன்மேலடுக்கி ஹோமஞ் செய்வோராகிய யாங்கள் தரித்திரத்தை நீக்குஞ் செல்வத்தை யடையும் நியமஞ் சார்ந்த சக்தியைப் பெறுவோமாக.—(எ-று.) வாதைதீர் என்றது எதுகை நோக்கிச் சேர்த்தது, தீதிலா அந்தக்காணத்தென்க.

வருக்கம் 20.

## 74. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 1.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ரஹூகணன் புத்திரன் கோதமன். வடமொழிச்சந்தம்: காயத்திரி. தேவதை: அக்கினி. இக்கோதமனே நோதஸன் றந்தையாவான்.

## மண்டலம் 1. சூக்தம் 74.

1. தூர நின்றுமெங் தோத்திரங் காதிறை
லோரு மக்கினிக் கோர்மறை யோதுவோஞ்
சாரு நன்மகந் தன்னரு கியாங்களு
மேரி னெய்து மக்காலை யினிதினே.

(இ-ள்.) அக்கினிஷ்டோமாதி யக்ஞத்துக்கு யாங்கள் வரும்போது இன்பமாக ஒரு சூக்தரூபமான மந்திரத்தைத், தூர நின்றும் எங்களுடைய ஸ்தோத்திரத்தைக் கேட்டாநங் திக்கும் அக்கினிக்குப் பாடுவோம்.—(எ-று.) எல்லா ரிடத்தி லும் அக்கினி செல்லுவானாயினும் எம்மிடத்தில் அதிகப் பிரிய முள்ளவன் என்பதை குறிக்கத், 'தூர நின்று மெங்தோத்திரங் காதிறலோரு மக்கினி' என்றார்.

2. தொல்லை நின்று வதையிற் றுதைந்தவர்
புல்லர் கூட்டம் பொருந்திய வர்களை
மல்லி னோட்டி மகப்புரிவான் றன
தில்விற் செல்வமிரட்சனை செய்தவன்.

(இ-ள்.) பண்டைக் காலத்திலிருந்து, கொலை நிறைந்தவரும், அற்பரும், கூட்டமாகப் பொருந்தியவர்களுமான பகைவர்களைத் துரத்தித் தாசுஷ (யக்ஞஞ் செய்வோன்) னுடைய செல்வத்தைக் காத்தவன்.—(எ-று.) அவனுக்கு ஒருமறையை யோதுவோம் என முன்பாட்டோடு கூட்டுக.

3. விருத்திரனை வெகுண்டழியக்கிமிக்
குருத்தெதிர்ந்த வுறழ்வுதொறுந்தனம்
பொருத்துவோன் புறந்தோன்றினன்; பின்பெலா
விருத்து விக்குக்க ளேத்தி யுரைக்கவே.

(இ-ள்.) விருத்திரவதஞ் செய்பவனும், கோபித்தெதிர்ந்த யுத்தத்தில் பகைவர் தனத்தைக் கைக்கொண் டளிப்பவனுமாகிய அக்கினி, (அரணிகளிலிருந்து) வெளிப்பட்டனன். பின்னர் எல்லா விருத்துவிக்குக்க ளாகிய மனிதரு மவனைத் துதிக்கட்டும்.—(எ-று.) விருத்திர வதத்தை அக்கினிக்குக் கூறினதால் அக்கினியையும் இந்திரனையும் அபேதப்படுத்தினார். உறழ்வு, யுத்தம், சண்டை. இருத்துவிக்குக்கள், பொழுதறிந்து புகழ்மறைக் கூறிப்பின்றொழுது சோமத்துளிகளை யூட்டுவோர்.

4. *"எம்மகன் மகத் தேய்குவை தூதனு
யெம்மக னவி தேவர்க் கியைவுற

வம்மையாக வருந்துவை? யார்மகம்
பொம்மலின் மிகத்தோன்றப் புரிகுவாய்?

(இ-ள்.) எந்தயாககர்த்தாவினுடையயாகவீட்டில் தூதனாக நீ நிற்கிறாய்? எந்த யாக கர்த்தாவினது சரு புரோடாச முதலிய வவிப்பொருள்களைத் தேவர்களுடைய வுணவாகப் பொருந்தும்படி நீ உண்கிறாய் அல்லது சேர்க்கிறாய்? யாருடைய யாகத்தைவீறு பெறும்படி செய்வாய்.—(எ-று.) இப்பாட்டின் பொருள் அடுத்த பாட்டோடு முடிகிறது.

5. *" அம்மகனே, மூரண்மக, வங்கிர,
செம்மையா ரவி சேர்ந்தவன், றேவனிற்
செம்மை பெற்றவன், றேருந் தருப்பையி
லம்மையோ" னென் றறைகுவர் மாந்தரே.

(இ-ள்.) "பலத்தின் புத்திரனே! அங்கிரனே (அக்கினியே!) மேற் பாட்டிற் சொல்லப்பட்ட பெருமைகளோடு கூடிய அந்த யாக கர்த்தாவே நல்ல அவிப்பொருளைப் பெற்றவனும்; நல்ல தெய்வத்தை யடைந்தவனும்; நல்ல தருப்பை யழகையுமெய்தினவனும்." என்று எல்லா மனிதருஞ் சொல்லுவார்கள்.—(எ-று.) 4, 5, இரண்டும் குளகமாம்.

வருக்கம் 21.

6. நன் னிலவெறி நாயக தேவரைத்
துன்னு தோத்திரந் தோய்செவி யேற்கவும்,
மன்னு நல்லவி யுண்டு மகிழ்கவும்,
அன்னவர்களை யிவ்விடத் தாக்கவே.

(இ-ள்.) ஆஹ்லாதத்தைத் தரும் நல்ல நிலவை வீசு மக்கினியே, ஸ்தோத்திரங்களைக் கேட்கவும், (அல்லது நாங்கள் ஸ்தோத்திரம் செய்வதற்காகவும்,) எங்களுடைய அவிப்பொருள்களை யுண்டு மகிழவும், அந்தத் தேவர்களை யிங்குக் கூட்டிக்கொண்டு வருவாயாக.—(எ-று.) வடமொழி மூலத்தில் ப்ரசஸ்தயே என்றுள்ளது; ஸ்துதயே என்று சாயணர் பொருள் கூறுவார்.

7. அங்கி தேவர்க்கட் டோதா யணையுமத்
துங்க நற்பொழு தெல்லாந் துகளிலு
னங்க மாரிர தத்தசு வத்தொனி
பொங்கு மின்பம் புணர்ந்தவை கேளுரு.

(இ-ள்.) அக்கினியே! தேவர்களிடத்து நீ தூதனுய்ச்செல் லுங் காலமெல்லா முனது அழகிய தேரின் குதிரைகளாலுண் டாகும் சிரவணார்ஹமான சப்தங்கள் கேட்கப்படமாட்டா.—(எ-று.) வேகமாகச் செல்வதினுல் அச்சப்தங்கள் எங்கள் காதில் படுவதில்லை என்றபடி. ரதத்தொனியாவது அச்வத் தொனியாவது ஒன்றுங் கேட்பதில்லை யென்பார் மேனுட்டா சிரியர்.

8. முன்னிகழ்வுற நின்று முதிர்ந்தவன்
மன்னு கின்ற வவியை வழங்கியே
யுன்னருந் துணையிற் றன மெய்துவான் ;
வன்னி நாணிலன் வாய்குவன் மேன்மையே.

(இ-ள்.) அக்கினியே! அவி வழங்குவதற்கு முன்னர் நிகி ருஷ்டமாயிருந்தவன் உனக்கு அவியளித்து உன்னுலிரட்சிக்கப் பட்டவனுய் அன்னத்தை யடைவான், வெட்கத்தை விட்டவ னுய் மேன்மையைப் பெறுவான்.—(எ-று.) வன்னி, அக்கினி.

9. இன்னுந் தேவ வவியினைத் தேவருக்
குன்னுந் தாசுடற் கங்கி யுயர்நிதி
துன்னு விப்பா யொளியொடு தோய்ந்தது
மன்னும் வீரம் வகைபெற வாய்ந்ததே.

(இ-ள்.) தேவனே (ஒளி நிறைப்பவனே)! அக்கினியே! மேலும் நீ, தேவர்களுக்கு அவியைத் தரும் தாசுஷனுக்கு (யஜ மானனுக்கு) ஒளிபொருந்தியதும், வீரியத்தோடு கூடியதுமான பெரிய செல்வத்தைக் கூட்டுவாய்.—(எ-று.)

வருக்கம் 22.

## 75. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 2.

5 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: ஷடி கோதமன்: வடமொழிச்சந்தம்: காயத்திரி. தேவதை: அக்கினி.*

1. எங்கு மோங்கிய வெங்கள் வசனத்தை
யங்க மாகவே தேவர் மகிழ்வதைத்
துங்க வெம்மவி தோயுன் முகத்தினிற்
பங்க நீங்கப் பரிந்துகொண் டேற்கவே.

(இ-ள்.) எம்முடைய அவிப்பொருள்கள் வீணாகாதபடி யுனது முகத்தில் அவற்றை ஏற்றுக்கொண்டு, எல்லாப் பக்கங் களிலும் விஸ்தாரமாகப் பரந்த எங்களுடைய ஸ்தோத்திர ரூப மான வசனத்தைத், தேவர்களுக்கு அதிக மகிழ்ச்சியை விளைப் பதை, ஒப்புக்கொள்வாயாக.—(எ-று.) விளைப்பதாகிய வசனத் தை என்க.

2. அங்கிரத்தம வக்கினி பின்னர்யாம்
மங்கலில் மதிவாய்ந்தவ வுன்றனுக்
கங்க மாகப் பிரம மறைகுவந்
தங்கு கீர்த்தியோ டின்பந் தருபமே.

(இ-ள்.) அங்கிரோத்தமனே! அக்கினியே! உத்தம புத்தி வாய்ந்தவனே! கீர்த்தி பொருந்தியவையும் பிரியகரமானவையு மான பிரஹ்மத்தை (மந்திரத்தை) யாங்கள் உன்பொருட்டுச் சொல்லுவோம்.—(எ-று) தருபவாகிய பிரமமெனக் கூட்டுக. அங்கிரா, மண். 1, சூக். 1, செய். 6-ல் பார்க்க.

3. யாருனக் குற வெண்ணு மனிதரில்?
யாருனக் கவி யாகத் தனித்துச் சீர்
தேர நிற்பவன்? யாரெரி? செப்புக;
யாரிடத்து நீ யாச்சிரயஞ் சொலாய்.

(இ-ள்.) மனிதரில் (எல்லாக் குணங்களிலுஞ் சிறந்த) உனக்குப் பந்துவாகச் சொல்லத்தகுந்தவன் யார்? (ஒருவரு மில்லை யென்றபடி) உனக்கு யாகத்தினிடத்து அவிப்பொருள் களைச் சிறக்கத்தந்து பெருமையடையுந் திறமை வாய்பவன் யார்? (இன்ன) (வுருவத்தோடு கூடியவனென்றும் உன்னை யொருவரும் சொல்ல முடியாது.) நீ எந்த ஸ்தானத்தைப்பற்றி நிற்பாய்? (அதுவுமொருவருக்குந் தெரியாது.)—(எ-று.)

4. அங்கி யாவற் சனங்களின் பந்துநீ;
தங்கு மன்பிற் றயங்கிய மித்திரன்;
எங்கு முள்ள சகாக்களு மேத்துறுந்
துங்க நற்சகா வென்றுனைச் சொல்வரே.

(இ-ள்.) அக்கினியே! நீ யெல்லாஜநங்களுக்கும் பந்துவா வாம்; அன்பு பொருந்திய மித்திரனுமாவாய். எல்லாத் தோழர் களாலும் வணங்கத்தகும் தோழனுமாவாய்.—(எ-று.) உனைச் சொல்வரே யென்பது வடமொழி மூலத்திலில்லை. யாவத் ஜநங் கள் என்பது யாவற் சனங்களெனத் தற்பவமாயிற்று.

5. எங்களுக்கென மித்ரா வருணனை
யங்க மாக வணங்குக; தேவரைப்
பொங்கு பேர்மகந் தன்னையும் பூசிக்க;
அங்கி யுன்னகத் தியாரையுஞ் சேர்க்கவே.

(இ-ள்.) அக்கினியே! மித்திரா வருணரை யெங்களுக்காக வவிப்பொருளோடு பூஜிப்பாயாக. தேவர்களையும் பெரிய யாகத்தையும் பூஜிப்பாயாக. உனது யக்ஞக்கிரகத்துக்கு எல்லாத் தேவரையும் அழைத்துக்கொண்டு வருவாயாக.—(எ-று.)

வருக்கம் 23.

## 76. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 3.

4 இருக்குக்கள் கொண்டது.

*ரிஷி: ராஹூகணன் கோதமன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.*

(வேறு.)

1. உன்மனங் களிப்பானங்கி யெவ்வகை யுறுவாமுன்மாட்
டுன்சுகத் தமத்தை யீயுமொண்மறை யெதுவாம்? யாகத்
துன்வலி கடப்போன் யாவன்? உனக்கென வெவ்வுள்ளத்தோ
டுன்னரு மவியை யீவோ மிவை யுரைப்பரிய வன்றே.

(இ-ள்.) அக்கினியே! உன்மனம் திருப்தி யடையும்படி, எம்மாதிரி உன்னிடத்தில் வருவோம்? உனக்கு உத்தமமான சுகத்தைத் தரும் மந்திரம் எதுவாகும்? யாகத்தினிடத்து உனது வல்லமையைக் கடப்பவன் யார்? உனக்காக வேண்டிய அவிப்பொருள்களை எந்த புத்தியோடு தருவோம்? இவை சொல்ல முடியாதவையாம்.—(எ-று.) உன்னைத் திருப்திசெய்யும் வருகையும், உனக்குச் சுகத்தைத்தரும் மந்திரமும், உன் பலத்தைக் கடப்பவனும், உனக்கு அவிதரும் சற்புத்தியும் இல்லையாதலின் சொல்லுதற்கு முடியாதவையென்றார். இவை யுரைப்பரியவன்றே' என்னும் வாக்கியம் அந்வயத்தாற், கொண்டது. வடமொழி மூலத்திலில்லை.

2. அங்கிநீ வருக வீண்டுத் தங்குக தூத னாக;
வெங்களை நடத்த நன்கே; துன்புறாய், எங்கு மார்ந்த
மங்குலும் புவியுங் காக்க; மகத்துவ நன்மை முற்றுந்
தங்குளம் பெறுவான் றேவர் தங்களை பூசிப்பாயே.

(இ-ள்.) அக்கினியே! வருவாயாக. இந்த யக்ஞத்தில் ஹோதாவாக அமர்வாயாக. எங்களுக்கு முன் சென்று எங்களை நடத்துவாயாக. ராக்ஷஸர்களால் ஹிம்சிக்க முடியாதவனே! எங்கும் பரந்த வானம்பூமிகளை (ரோதஸீயை)ப் பாதுகாப்பாயாக. மகத்துவம்பொருந்திய நன்மை முழுதும் நிறைந்த அவர்களது நன் மனத்தைப் பெறத் தேவர்களைப் பூசிப்பாயாக.—(எ-று.)

3. அக்கினி, யரக்கர் யாரு மழிகுவா னெரிக்க; யாகம்
புக்கிடர்ப் படுப்பார் நின்றும் புரக்க; பின்னரி யிரண்டிற்
றக்கநற் சோம நாதன் றன்னையுந் தருக; தான
மிக்கவற் கதிதிசற்கா ரம்மிகப் புரிகு வோமே.

(இ-ள்.) அக்கினியே! எல்லா ராட்சஸர்களையும் அழியும்படி சுட்டெரிப்பாயாக. இடைஞ்சல் செய்பவர்களினின்றும் எங்களது யாகங்களைக் காப்பாயாக. நின் இரண்டு குதிரைகளோடுஞ் சோமபதியாகிய இந்திரனைக் கொண்டுவருவாயாக. தானத்திற் சிறந்தவனுக்கு (அழகிய பலன்களைத் தருபவனாகிய இந்திரனுக்கு) யாங்கள் அதிதிசற்காரஞ் செய்வோம்.—(எ-று.) ஸோமநாதன் (ஸோமத்துக்குப் பதி), தான மிக்கவன், இவ்விரண்டு சொற்றொடர்களும் இந்திரனைக் குறித்துநின்றன. அதிதிசற்காரஞ் செய்தல், விருந்தினரை உபசரித்தல். அரி குதிரை.

4. மகத் தரும் வாக்காற் போற்றிச் சுடர்வளர் முகத்தின்வன்னி,
யிகத்துற வழைப்பே னீயு மிவட்பல தேவ ரோடு
மகத்தினி லமர்க; பூசைக் கருக, போதாவோதாவா
யுகப்புற; உதவுவோய்பொன், றோற்றுவோ, யறிவீவாயே.

(இ-ள்.) ஜ்வாலையே முகமாகவுடைய அக்கினியே! பிரஜைகளைத் தரும் வல்லமைபொருந்திய ஸ்தோத்திரங்களால் உன்னைப் போற்றிசெய்து இங்கு வரும்படி யழைப்பேன். நீயும் இங்கு பல (பிற) தேவர்களோடு யாகத்தலத்தில் அமர்வாயாக. பூஜிக்கத் தகுந்தவனே! நீ போதாவினது வேலையையும் ஹோதாவினது வேலையையும் உகப்பாயாக (விரும்புவாயாக.) வசுவை அல்லது செல்வத்தை விசேஷமாகத் தருபவனே! எல்லாவற்றையும் சிருஷ்டிப்பவனே! எங்களுக்கு அறிவை யூட்டுவாயாக.—(எ-று.) போதா, பரிசுத்தஞ்செய்பவன். மண். 1, சூக். 15, செய். 2 பார்க்க. ஹோதா, ஓதா, தேவர்களை

யழைப்பவன். யாகப்பிராமணர் 16 பேர்களில் இவர்கள் சேர்ந்தவர்கள். மகவுத்தரும் மகத்தரு மென்றுயது.

5. கவிகளிற் கவியே தேவ ருணவொடு முணர்வு சான்ற
புவிமுதன் மநுக்களுக்காத் தேவரைப் பூசித்தாற்போ
லிவ ணிசத்தர வோதாவாய்க் களியியை சுருக்கை யேந்தி
நிவமுறு மங்கி யின்று நேடியே சுரர்ப் பூசிப்பாய்.

(இ-ள்.) கவிகளில் (மேதாவிகளில் அல்லது தீர்க்கதரிசிகளில்) சிறந்த கவியே! அவிப்பொருள்களோடு மேதாவிகளாகிய ஆதி மநுக்களுக்காகத் தேவர்களை பூசித்ததுபோல, இன்னும் அக்கினியே! ஸத்தியதரமான ஹோதாவாய் ஸந்தோஷத்தை யூட்டும் நெய்த்துடுவையைக் கையிலேந்தித் தேவர்களைப் பூஜிப்பாயாக.—(எ-று.) மநுக்கள், மனம் ஞானம் என்னும் பகுதியடியாகப்பிறந்தது; மனிதருக்கு மூல புருஷர்கள்.

வருக்கம் 24.

## 77. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 4.

5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ராஹூகணன் கோதமன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.

1. மரணமேயெம்பான்மன்னுந்தேவருக்குணவைஈவோன்,
மரணமில் ரிதவா னோதா வுத்தம யாக கர்த்தா
தருண நல்லங்கி, யன்னாற் கெத்தகை யவி யளிப்பாம்?
அரணமாத்தேவர்ப்போற்றுந்தேசவற்கெப்பணீவோம்?

(இ-ள்.) மரணதர்மத்தோடு கூடிய எம்மிடத்துப் பொருந்துந் தேவர்களுக்கு அவியுணவைத் தருபவனும் மரணதர்மமில்லாத சத்தியவானும், ஹோதாவும், உத்தம யாக கர்த்தாவும் ஆகிய அக்கினிக்கு எம்மாதிரி (தகுந்த) அவிப்பொருள்களை யளிக்கப் போகிறோம்? தேவர்களைப்போற்றி வணங்கும் தேஜோவானாகிய அவனுக்கு எத்தகைய ஸ்தோத்திரப் பாடல்களைச் சொல்லப்போகிறோம்?—(எ-று.) ஹோதா, ஹோமஞ் செய்வோன்.

2. தகப்புரி மனிதனுக்காத் தேவரைத் தருபோ தன்னு
னுகப்புறவவரையோர்ந்தே மனத்தினால் வணங்குவோனே,
மகத்தினிற் சுகத்தமத்தை மருவுவித் துண்மை நோக்கி
னிகத்துத் தெய்வங்களீட்டு மங்கியைத் துதித்துச்சேர்க்க.

(இ-ள்.) தக்க காரியங்களைச் செய்யும் மனிதனாகிய யஜமானனுக்காகத் தேவரைக் கூட்டிக்கொண்டு வரும்போது அவ்யாக கர்த்தா ஸந்தோஷப் படும்வண்ணம் அத் தேவரைத் தெரிந்து மனத்தினால் வணங்குவோனும், யாகத்தில் உத்தம ஸுகத்தை யுண்டு பண்ணுவோனும், யதார்த்தத்தைப் பார்ப்பவனும், இங்கு தேவர்களைக் கொண்டு வருபவனுமாகிய அக்கினியை ஸ்தோத்திரஞ் செய்து எதிர்முகப் படுத்துவீர்களாக.—(எ-று.) சுகத்தமம், உத்தமச்சுகம்; தரம் தமம் என்னும் சொற்கள் மத்தியம, உத்தம (comparative and superlative) அளவுகளை யுணர்த்தும். தீவிரம், தீவிரதரம், தீவிரதமம் என்பதுபோல்.

3. காரிய கர்த்தாச் சாது காலனு மவனே யாவான்;
ஏரியல் நண்ப னென்ன வற்புதப் பொருளியைப்பான்;
சீரிய லகத்தே தேவ சேவையைச் செய்வோர், முன்னர்க்
கூரிய லவனை மேதத் தழைப்பரான் முதன்மை கூர்ந்தே.

(இ-ள்.) அவனே (அக்கினியே) காரியத்துக்குக் கர்த்தாவாம்; சாதுவுமாம்; எல்லாவற்றையும் உபஸம்ஹாரம் செய்யும் காலனு மாவான். மித்திரனைப்போல் அவன் அளவு கடந்த செல்வத்தைத் தருவான். தங்கள் கிருகத்தில் தேவ யஜனம் செய்யும் பிரஜைகள் அவனை முதலில் மூட்டி, முதலில் ஸ்தோத்திரங்களை யேற்க வருவாயாக வென்று அழைப்பார்கள்.—(எ-று.) உபஸம்ஹாரம் செய்தல், அழித்தல். சாது, ஸாது (dhu), ஸாத (dh) யிதா, காரியங்களை உற்பத்தி செய்பவனென்பார் சாயணர்.

4. நரோத்தம னரர்க்க ணென்னூர் நடுங்குற வுண்பானங்கி
கரோத்தமவவியையெங்கடோத்திரங்களைக்கை யேற்க
உரோத்தமச் செல்வ ருண்டி யூட்டுறு மகக்கர்த்தாக்கள்
வரோத்தம மறையோர்க்கொண்டு மகஞ்செய்வோர் துதியுமேற்க.

(இ-ள்.) மாந்தர்களிடத்து உத்தமமான நேதாவும் பகைவர் நடுக்கங்கொள்ளும்படி அவர்களை யுண்பவனும் (அழிப்பவனும்)

## மண்டலம் 1. சூக்தம் 78.

ஆன அக்கினி எங்கள் கரங்களிலுள்ள உத்தம அவிப்பொருள்களையும் எங்களது ஸ்தோத்திரங்களையும் ஏற்றுக்கொள்ளட்டும். பலம்பொருந்திய உத்தமமான செல்வத்தை யுடையவர்களும், அவியுணவை யூட்டும் யஜமானர்களும், சிரேஷ்டமான ரித்விஜர்களைக்கொண்டு யாகஞ்செய்விப்பவர்களுமான யாக கர்த்தாக்களின் ஸ்தோத்திரத்தையும் (அவ்வக்கினி) ஏற்கட்டும் அல்லது விரும்பட்டும்.—(எ-று.)

5. எக்கிய மிழைப்போன் சாத வேதஸனங்கி மேற்சொல்
பொக்கமில் வகையே கோதமக் குடிப்பனவர் போற்றச்
சொக்க மெய்தின னவர்க்குச் சோதியு முணவுமீத்தான் ;
மிக்கவெஞ் சேவையோர்ந்து வேண்டு மோக்கத்தைச் சேர்ப்பான்.

(இ-ள்.) யாகவானும், ஜாதவேதஸனுமான அக்கினி, மேலே சொன்ன பொய்மையில்லாத விதமாகக் கோதம வம்சத்திலுதித்த ரிஷிகள் ஸ்தோத்திரஞ்செய்யப், பிரகாசத்தை (ஸோமத்தை என்பார் சாயணர்.) யடைந்தான். அக் கோதமர்க்கு அந்தப் பிரகாசம் பொருந்திய ஸோமத்தையும் அவிக்கான வுணவையும் தந்தான். எங்களது சேவையை யுணர்ந்து யாங்கள் விரும்பும் ஒக்கத்தை (புஷ்டியை) எங்களுக்குத் தருவான்.—(எ-று.) ஜாதவேதஸன், மண். 1, சூக். 44, செய். 1 நோக்குக. சொக்கம், வெளுப்பு. ஈண்டு ஸோமம் என்பார் சாயணர். ஒக்கம், வாழ்வு, புஷ்டி.

வருக்கம் 25.

## 78. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 5.

### 5 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச்சந்தம்: காயத்ரி. தேவதை: அக்கினி.

(வேறு.)

1. மன்னு தூர திருட்டி வயங்கியோய் !
பன்னிறைர் பணைக் கோதமர் வேதஸ !
உன்னையே யா மடிக்கடி யுன்னியே
துன்னு முன்றெளி தோன்றப் புகழுவாம்.

(இ-ள்.) விசேஷமாக எல்லாவற்றையும் பார்க்கத்தக்க தூரதிர்ஷ்டி வாய்ந்தவனே! ஜாதவேதஸனே! கோதமர் உனக்காகப் பண் பாடினார்கள். அத்தகைய வுன்னை அடிக்கடி நினைத்து உன்னொளியைத் தோற்றும் புகழ் ஸ்தோத்திரங்களைக் கூறுவோம்.—(எ-று) கோதமன் பாடினான் என்பது மரியாதைப் பன்மையாக வந்ததென்பார் சாயணர். கோதமராகிய யாம் பண்ணைப் பாடிப் புகழுவோம் என்று ஒரே வாக்கியமாகக் கொள்வார் மேனாட்டாசிரியர். இச் சூக்தத்தின் பின்னிரண்டடிகள் எல்லாப் பாட்டுகளுக்கும் ஒன்றே.

2. பொன் விரும்பும் புனிதனாங் கோதமன்
மன்ன வுன்னைத் துதித்து வணங்கினான்;
உன்னையே யா மடிக்கடி யுன்னியே
துன்னு முன்னொளி தோன்றப் புகழுவாம்.

(இ-ள்.) தனகாமியாகிய கோதமன் உன்னை ஸ்தோத்திரங்களால் துதித்து வணங்கினான். அத்தகைய உன்னையே யாங்களடிக்கடி நினைத்து உனது கீர்த்தியைத் தோற்றும் புகழ்களைக் கூறுவோம்.—(எ-று.)

3. பொன்னொளித்துப் புகழ்பெறு முத்தம
னுன்னை யங்கிர னொத்து விளிப்பமால்;
உன்னையே யா மடிக்கடி யுன்னியே
துன்னு முன்னொளி தோன்றப் புகழுவாம்.

(இ-ள்.) (உண்டிச்) செல்வத்தை யுத்தமமாக வளிப்பவனாகிய வுன்னை (அக்கினியே!) அங்கிரஸனைப்போலத் துதித்துக் கூவுவோம்.—(எ-று.)

4. மன்னுந் தாசரை யோட்டி மடிப்பவன்
பின் விருத்திரற் கொல்லும் பெரியவன்
உன்னையே யா மடிக்கடி யுன்னியே
துன்னு முன்னொளி தோன்றப் புகழுவாம்.

(இ-ள்.) தஸ்யுக்களை ஓட்டிக் கொல்பவனும், விருத்திரஹந்தாவுமாகிய உன்னையே யாங்கள் அடிக்கடி நினைத்து, உனது கீர்த்தியைத் தோற்றும் புகழ்மொழிகளைக் கூறுவோம்.—(எ-று.) விருத்திரஹந்தா, விருத்திரனைக் கொல்லுபவன். இதனால் இந்திரனையும் அக்கினியையும் ஒன்றுபடுத்தினார்.

5. மன்னு மங்கியைத் தேன்றுளி வார்த்தையாற்
பின்னிராகூ கணர் துதி பேசினும்;
உன்னையே யா மடிக்கடி யுன்னியே
துன்னு முன்றெளி தோன்றப் புகழுவாம்.

(இ-ள்.) ராஹூகணனுகிய (ராஹூகணன் புத்திரனுகிய) யாம் (கோதமன் என்றபடி) அக்கினியின்பொருட்டுத் தேன்றுளிக்கும் இனிய வசனங்களால் ஸ்தோத்திரம் செய்தோம். உன்னையே யாங்கள் அடிக்கடி நினைத்து உனது கீர்த்தி தோன்றும் வண்ணம் புகழுவோம்.—(எ-று.) ராஹூகணன், தத்திதப் பிரத்யயம். ராஹூகண ரென்றது மரியாதைப் பன்மை.

வருக்கம் 26.

## 79. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 6.

12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச்சந்தம்: 1-3 த்ருஷ்டுப், 4-6, உஷ்ணி, 7-12 காயத்ரி. தேவதை: அக்கினி.

(வேறு.)

1. இரணியகேசமுள்ளானெழிலியைச்சலிப்பிப்பான் வல்,
விரைகதி வாயு போல்வான், மேகநீ ரிழியு மாறு
நிரைபெறுசோதித்தூயனிலையிழிமழையை யோர்வான்;
தரைபுகழ்கருமமெய்ம்மைத்தையல்போன்றறியாவைகல்.

(இ-ள்.) பொன்மயமாக விளங்கும் (சிவந்த சோதியாகிய) கேசத்தோடு கூடியவனும், மேகத்தைக் குலுக்கிவிடுபவனும் வல்விரைவிற் செல்லும் வாயுவைப்போல ஓடும் (கொடி மின்னலாகிய) சோதியுள்ளவனும், மேகத்திலிருந்து ஜலம் கொட்டுவதற்காகச் சுத்தமான சோதியோடு கூடியவனுமான அக்கினி மழை பெய்யுந் தன்மையை யுணர்வான். கீர்த்தி பொருந்திய கர்மங்களைச் செய்யும் ஸத்தியவதிகளாகிய ஸ்திரீகளைப்போல உஷஸுக்கள் அம் மழை பெய்யுந் தன்மையை யறியமாட்டா.—(எ-று.) இது வைகலு (உஷஸு) க்கு நிந்தையாகாது. நிந்தாரூபமான ஸ்துதியாம். என்? பேதமை யென்பது மாதர்க்கணிகலமானது பற்றி. மேலும் அக்கினியின் ஞானத்தை யுயர்த்த

வந்ததேயன்றி வைகலை இழித்துக் கூறவந்ததல்ல வாதலினென் பார் சாயணர். இச்செய்யுள் வித்யுத் (மின்னல்) தாகிய அக்கினி யைப் புகழ்ந்தது.

2. கொன்பெறு மருதரோடு கருநிறக் கொண்மூ வார்க்க
வுன்கதிர்ச் சிறைகளென்று நீரொழுகுற வடிப்ப ;
பின்பிவட் சுகத்தை யூட்டி மன்னுறு பேனத் தண்ணீர்
நன்னய மழையின் வீழ்வ ; நடுக்குறவொலிப்ப மேகம்.

(இ-ள்.) அழகிய மருத்துக்களோடு கூடி உன்னுடைய கதிர்களாகிய பற்கள், என்றும், கறுப்பு நிறமுள்ள மேகமா னது சப்திக்க, அம் மேகம் மழையைப் பெய்யும்படி அடிக்கும். அப்பொழுது ஸுககாரியாகிக் காந்தியும் நுரையும் பொருந்திய தண்ணீர் மழையாகக் கீழ் விழும். மேகம் பலரும் நடுங்கும் படி சப்திக்கும்.—(எ-று.) பேனம், நுரை.

3. இவன்றண்ணீர்ச் சாரந்தன்னு லுலகைமேலெடுத்துநோ
யிவனுறுத்தமப் பாதைக்கணடத்தியே விழையுங்காலத்
தவறுரு வகை மேகத்தின் கருப்பையைச் சார் துவக்கை
யிவர்வர் மித்திரன் வருண னரியமா மருதர் கூடி.

(இ-ள்.) இவ்வக்கினி தண்ணீரின் சாரத்தினுல் உலகை வளம்பெறச் செய்து அவ் வுலகத்தவரை (ஸ்நாநபானுதி) யுத் தமமான வழிகளில் நடக்கும்படி செய்யும்பொழுது மித்திர னும், வருணனும், அரியமாவும், மருத்துக்களுங் கூடி மேகக் கருப்பத்தின் மேற்புரையைக் கிழித்துவிடுவார்கள். (மழை பெய்விப்பார்கள்.)—(எ-று.) மித்திரன் பகற்கும், வருணன் இரவுக்கும் அபிமானி தேவதைகளாம். இவர் உலகை நடத்தி, ரிதத்தைக் காப்பவர், உண்மைக்கும் ஒளிக்கும் நாயகர்கள். அர்யமா அல்லது அர்யமான் துவாதச ஆதித்தியர்களில் ஒரு வன். காலை மாலை ஸந்திகளைக் காப்பவன். அதனுல் மித்ர வருணர் களோடு சேர்த்து வணங்கப் பெறுவான். மருத்துக்களைப்பற்றி மண். 1. சூக். 4, செய். 3-ற் பார்க்க. ‘மழையின்றி மாநிலத் தார்க்கில்லை.’ ‘சிறப்பொடு பூசனை செல்லாது வானம், வறக்கு மேல் வானோர்க்கு மீண்டு,’ என்பவை கருதத்தக்கன.

(வேறு.)

4. வலியின் மகனே ! மலியா முதல்வ !
நலிவில் பிறவி நலமோர் பவனே !

மண்டலம் 1. சூக்தம் 79.

தலமா ருணவைத் தருநல் லெரியே !
வலமார் புகழை மருவித் திடலே.

(இ-ள்.) பலத்தின் புத்திரனே! நிறைந்த பசுக்களுக்குத் தலைவனே! ஜாதவேதஸனே! உண்டிப் பொருள்களைத் தரும் ஈசானனாகிய அக்கினியே! பலம் நிறைந்த கீர்த்தியைத் தருவாயாக.—(எ-று.) சாயணர் ச்ரவம் என்பதற்குப் புகழையென்றது உணவை யென்பார்.

5. ஒளியிந்தனவா றுறுதிப் பொருளோன்
நளினக்கவி நன்னய வேத்துரியோன்
அளிகொள் பலவாநந வங்கியெமக்
கிளியில் பொரு ளன்ன மெடுத்தெரிக.

(இ-ள்.) பிரகாசிக்கும் இந்தனங்களோடு கூடியவனும், உறுதியைத் தரும் செல்வத்தோடுகூடியவனும், கவியும் (மேதாவி அல்லது கிராந்ததர்சியும்,) நல்ல ஸ்துதிகளால் ஏத்துதற்குத் தக்கவனும், (பலரும் போற்றப்) பல முகங்களோடு கூடியவனுமான அக்கினி குற்றமற்ற பல பொருள்களோடு கூடிய அன்னத்தைத் தரும்வண்ணம் எரியட்டும்.—(எ-று.) இந்தனம், ஸமித்துமுதலிய விறகுகள். கவி யென்பதும், **Hebrew** வில் **Prophet** என்று பொருள்படும் சொல்லும் ஒரு பொருளன.

6. இரவும் பகலுந் தனியே யெரிக ;
தரமில் பகைவர் தமையோட்டுகவே ;
நிரைகூர்ம் பல்லி னிறையு மெரியே !
யிருள்கூர் நிசிதர்ச் சுடவெவ் வேறே.

(இ-ள்.) கூர்மையான பல் வரிசைகளோடு நிறைந்த அக்கினியே! இரவிலும், பகலிலும் ஒப்பற்று எரிவாயாக. ராக்ஷஸாதி பகைவர்களை யோட்டுவாயாக. அவ் விராட்சதர்களைத் தனித் தனியே சுட்டெரிப்பாயாக.—(எ-று.) திக்ம ஜம்ப: கூரிய பல்லோடு கூடியவன் என்பது பொருள்; அக்கினிச் சுவாலைகள் கூர்த்துத் தெரிவதால் அக்கினிக்கு வந்த பெயர்.

வருக்கம் 27.

(வேறு.)

7. எக்கருமங்க டம்மிலு மேத்துற
மக்கினி யுனைக் காயத்திரி யறைந்

தொக்க யாங்க ளுவப்பிற் றுதிக்கும்போ
தக்கணமே யுதவி யளிக்கவே.

(இ-ள்.) எல்லாக் கருமங்களிலும் துதிக்கப்படுபவனே! அக்கினியே! உன்னைக் காயத்ரிச் சந்தஸாலான சூக்தங்களால் யாங்கள் துதிக்கும்போது நீ உனது உதவிகளால் எங்களைக் காப்பாற்றுவாயாக.—(எ-று.)

8. இன்மை நீக்கு மியைவலிப் பொன்னினைத்
தின்மை யாளர் செருவிற் றொடாததை
நன்மை மிக்கதை நாடி யெங்கட் கங்கி
வன்மை சேர மகிழ்ந்தளி யென்றுமே.

(இ-ள்.) தரித்திரத்தை நீக்கும் வலிமை பொருந்திய தனத்தைத், தீமை செய்பவர்களாகிய பகைவர்கள் எந்த யுத்தத்திலும் தொடமுடியாததை, வரேண்யமானதை, அக்கினியே, நீ தேடி யெங்களுக்குப் பலம் பொருந்தும்படி யளிப்பாயாக.—(எ-று.)

9. ஆயு ளோங்கிட வெங்களை யோம்பலோ
டேயு மின்பமு மெண்ணரு ஞானமும்
ஈயு நற்றன மக்கினி யெங்களுக்
காயுண் முற்றும்வாழ் வோங்க வளிக்கவே.

(இ-ள்.) அக்கினியே! எங்களுக்கு ஆயுள் விருத்தியாகும் வண்ணம் எங்களைப் பாதுகாத்துச் சுகத்தையும், நல்ல ஞானத்தையும் தரும் தனத்தை எங்களுடைய ஆயுட்கால முழுவதும் வாழ்வு சிறந்து நிற்கும் விதமாக வளிப்பாயாக.—(எ-று.)

10. செல்வ நாடுஞ் செறிமனக் கோதம
எல்வளக் கொழுந் தேற்ற வங்கிப்பொருட்
டொல்லுந் தூய்மை யுயர்குண வாசகஞ்
சொல்லும் பண்ணைத் தொடுத்துத் தருகவே.

(இ-ள்.) செல்வத்தை விரும்பும் மனநிறைந்த கோதமனே! ஒளி மிகுந்த கொழுந்துகளோடுகூடிய அக்கினியின் பொருட்டு அக்கினியின் உயர்ந்தகுணங்களை யெடுத்துரைக்கும் சுத்தமான வாசகங்களாற் சொல்லும் பண்களைப் பாடித்தருவாயாக.—(எ-று.) திக்மசோச்சிஷ: கொழுந்துவிட்டெரியும் சோதியோடு கூடியவன்.

11. சேய்மை யண்மை செறிந்தெமை வாட்டத்தி
னேய்மை செய்திடு நொய்ய பகைஞர்கள்

வாய்மையாக நலிவுறல்; எங்களைத்
தூய்மை யங்கி சுகமுற வோம்பவே.

(இ-ள்.) தூரத்திலும், சமீபத்திலுமிருந்து எங்களை ஹிம்சிக்கும் சத்துருக்கள் உண்மையாகவே நாசத்தை யடையட்டும். அக்கினியே, எங்களுக்குச் சுகமுண்டாகும்படி எங்களை வளர்ப்பாயாக.—(எ-று.)

12. ஆயிரக்கணன், அங்கி, அரக்கரைப்,
பாய பார்வை பரந்தவன், ஒட்டுவான்;
தூய தேவரைக் கூட்டுந் துணைவனாய்
ஏயு மெம்மறை யேற்றவன் போற்றுவான்.

(இ-ள்.) ஸஹஸ்ராக்ஷனும், ஒரே பார்வையில் எல்லாவற்றையும் பார்க்கக்கூடியவனுமான அக்கினி ராக்ஷஸர்களை யக்ஞதலத்தினின்றும் ஓட்டிவிடுவான். எமது உக்தங்களை யேற்குமவ்வக்கினி ஹோதாவாய் (தேவர்களைக் கூட்டிக்கொண்டு வருபவனாய்)த் தேவர்களைத் துதிக்கிறான்.—(எ-று.)

வருக்கம் 28.

## 80. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 7.

16 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ராஹூகணன் கோதமன். வடமொழிச்சந்தம்: பங்க்தி. தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. உத்தம வலியோய்! சம்ப முயர்த்தவ வுனை மறையோன்,
மத்தநற் சோம முண்டிவ் வகையுனைக் கீர்த்தி தோன்ற
வைத்தனன்; நீயு முன்றன் வலியினா லகியை யென்று
மித்தரை யிடர்ப்படுத்தா தேகென விறையி னோட்டிச்
சுத்தமாக்கினை புவியைச் சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) உத்தமமான பலவானே! வச்சிரியே! பிராஹ்மங்களை (மறைகளை)க் கூறுவோனான பிராஹ்மணன் மதத்தைத் தரும் சோமத்தைக் குடித்து இம்மாதிரியாக உனது கீர்த்தி விளங்கும்படி உன்னைச் சிறப்பித்தான். நீயும் உன் வலிமையினால் ‘பூமியைத் தொந்தரவு செய்யாதபடி ஓடுவாயாக’ என்று விருத்திரனை (அகியை) விரட்டிவிட்டு உனது சொந்தத் தலைமை

யினை யெல்லாருக்கும் பிரகடன (விளம்பர)ப் படுத்திக்கொண்டு பூமியைச் சுத்தப்படுத்தினை.—(எ-று.) அர்ச்சித்தல், ஈண்டு பிரகடனம் செய்தல், அல்லது விளம்பரம் செய்தல். அகி, விருத்திரன்.

2. பெருக்கெடுத் தொழுகுஞ் சோமம் பெருமதம் விளைக்குஞ்சாறு
செருக்கொடு சேனந் தந்த சுதையினை மாந்த மத்தம்
வருத்தியது, அசனிவாய்ந்தோய்! அந்தரநீர்க்கணின்றும்
விருத்திரன் றனைவெருட்டிவெகுண்டிடர்செய்யேலென்று
துரத்தினை கொன்றாயுன் றன் சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) வச்சிரத்தோடு கூடியவனே! பெருக்கெடுத்து ஒழுகுவதும், மதத்தை விளைவிப்பதும், சேன (பருந்து) வுருவோடிருந்த காயத்ரி கொண்டுவந்து கொடுத்ததுமான சோமச் சுதை உனக்குக் களிப்பை யூட்டிற்று. உன்னுடைய தலைமையை யாவர்க்கும் விளம்பரப்படுத்திக்கொண்டு, அந்தரிட்சத்திலுள்ள நீரிலிருந்தும் விருத்திரனை நீ துரத்திக் கொன்றாய்.—(எ-று.) "அக்கினி ஸோமர்களே! உங்களுள் அக்கினியை மாதரிச்வான் விண்ணின்றும் கொண்டுவந்தான். சோமனைச் சேனப் பட்சி யுருவத்தோடு கூடிய காயத்ரி பெருமலையின் மேலுள்ள ஸ்வர்க்கத்திலிருந்து பலாத்காரமாகக் கொண்டுவந்தான்." என்பது மண். 1, சூக். 93, செய். 6ல் சொல்லப்படுகிறது. சேனம், ச்யேந: சம்ஸநீயகதிமான், புகழத்தக்க வேகத்தோடுகூடியவன் என்பது பொருள். அதாவது கருடனும்.

3. முந்துறச் சிறப்பிற் செல்க; முட்டுகவொன்னார் தம்மை
நிந்தனை படைத் தன்னாரும் நிலையழிந் தேகுமாறு;
சந்திசெய்தெதிர்க்கவுன் றன்சம்பமுமடங்காவாற்றற்(று);
இந்திர, வுன்மொய்ம்பாண்மை யிரிப்பதாம்; எழிலிவாட்டிச்
சுந்தர நீரைக் கொள்க சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) இந்திரனே! நேராகச் செல்லுக; சிறப்புப்பொருந்தும்படி பகைவர்களை முன்னிடுக. அவர்கள் நிலை கெட்டழியுமாறு அவர்களைச் சந்திசெய்து எதிர்ப்பாயாக. உனது வச்சிராயுதம் அடங்காத வல்லமையுள்ளது. உனது பலமும் ஆண்மையுள்ள புருஷர்களை யடக்க வல்லது. உன்னுடைய சொந்தத் தலைமையை விளம்பரப்படுத்திக்கொண்டு, விருத்திரனாகிய மேகத்தை வாட்டி நீரைப் பெறுவாயாக.—(எ-று.)

4. பூமியின் மேலும் வேந்தே பொடித்தனை யந்தரத்தும்
நாமற வழித்தாய் நன்னர் விருத்திரன் றன்னை நாடிக்;

## மண்டலம் 1. சூக்தம் 80.

சாமுறுசீவ ஞேம்புங் கடிபெய லுதகம், கூறி
யேமுறு மருதர் சூழ வியைந்ததைக் கீழ்நோக்குற்றுச்
சோமநின்றொழுகுவிப்பாய் சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) இந்திரனே! விருத்திரனை நீ பூமியின்மேலும் கொன்றனை, ஆகாயத்திலுங் கொன்றனை. உனது சொந்த மேன்மையை எண்ணிப் பிரகடனஞ் செய்து கொண்டு, பிராணிகளைப் பாதுகாக்கும் தண்ணீர் (கூட்டமாகக் களிக்கும்) மருத்துக்களோடு கூடியதை ஆகாயத்தினின்றும் விழும்படி செய்வாயாக. -(எ-று.) கடிபெயலுதகம், மழைநீர். அந்நீர் மருத்துக்களோடு கூடியது. ஸோமம், ஆகாயம். வேந்தன் என்னுஞ் சொல் இந்நூல் முழுவதும் இந்திரன் என்னும் பொருளிலேயே வரும்.

5. கோபங்கொண்டவனும் வேந்தன் கொதித்தெதிரியின் மேற்பாய்ந்தே
யாபங்க ளுறை திக்கு மகன்று கீழொழுகுமாறு
தாபங்கொ ணடுக்கஞ் சாலத் தாங்கிய விருத்திரன்றன்
பாபங்கொ ளநுவி னோங்கி வச்சிரப் படையி னன்னான்
சோபங்கொண் டழியக் கொன்றான் சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) கோபங்கொண்ட விந்திரன், தனது சொந்தப் பெருமை யெல்லார்க்குந் தெரியும்படி செய்து கொண்டு, மழைநீர் நாலா பக்கங்களிலுஞ் சிதறிக் கீழ் விழும்படி, நடுக்கத்திற் பொருந்திய விருத்திரனது தாடையில் தனது வச்சிராயுதத்தால் அவனழியும்படி யடித்துக் கொன்றான்.—(எ-று.) ஆபம், நீர். வேந்தன், இந்திரன். அநு, ஹநு, கதுப்பு, தாடை.

### வருக்கம் 29.

6. கணுக்க ணூறுள்ள தண்டம் வச்சிரங் கையிற்றாங்கி
யணுக்களாப்பொடிக்கின்றானல் விருத்திரன் கனத்தடித்தே
வணக்குறு போற்றி கூறு மாற்றத்திற் கழி மகிழ்ச்சி
யிணக்குற நின்ற வேந்த னியைக்கின்றான் றோழர்க்காகச்
சுணக்குறாவனமார்க்கத்தைச் சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) இந்திரன் நூறு கணுக்களோடுகூடிய ஆயுதமாகிய வச்சிரத்தினால் விருத்திரனது கன்னத்தி லடித்து அவனைத் துகள்படுத்துகிறான். பின்னும் அவன் தனது சொந்தத் தலைமையைப் பிரகடனஞ் செய்துகொண்டு, வணக்கத்தோடு கூடிய ஸ்தோதாக்கள் கூறும் ஸ்துதிகளில் மிகவும் மகிழ்ந்து தனக்குச் சமானமான தோழர்களெனச் சொல்லப்படும் அந்த ஸ்தோதாக்களுக்கு வேண்டிய அன்னம் கிடைக்கும்

வழியை இச்சிக்கிறான் (தேடிச்சேர்க்கிறான் என்றபடி.)--(எ-று.) கனம், கன்ன மென்பதின் இடைக்குறை. அனம், அற்றே, அன்ன மென்பதன் இடைக்குறையாம். போற்றி, ஸ்தோத்திரஞ்செய்பவன். இச் சொல் மலையாளத்தில் போத்தி என வழங்கும். சுணக்கம்-வாட்டம், குறைவு. சுணக்குறா மார்க்கம் குறையாத வழி. வச்சிராயுதம நூறு கணுக்க ளுள்ள தென்பது இதனாற் போதரும்.

7. மேக வாகனனும் வேக்தே குலிச வெம்படையா யுன்றன்
சேகுறு திறமையொன்னார் செகுக்கலாவலிமைத தாமால்;
ஏகமா மாயை சான்றே யுலகினுக் கிடுக்க ணூட்ட
வேகுமம்மிருகந்தன்னையெண்ணுமுன்மாயைதன்னாற்
சோகமார்ந்துற முடித்தாய் சுயவிறைமையையர்ச்சித்தே.

(இ-ள்.) மேகவாகனனாகிய இந்திரனே! வச்சிராயுதத்தையுடையவனே! உனது வீரியமானது பகைவரா லழிக்க முடியாததாம். (அந்த வீரியத்தைக் கொண்டேதான்) உனது சொந்த மேன்மையைப் பிரகடனம் செய்து கொண்டு, மாயையிருந்து உலகத்துக்கு உபத்திரவத்தைச் செய்யு மந்த மிருக ரூபத்தோடு தோன்றிய விருத்திரனை உனது மாயையினாற் கொன்றாய்.—(எ-று.)

8. இந்திர வுன்னு லேவும் வச்சிரம் பலவா யோங்கி
யந்தரத் தடைபட்டுள்ள வாறுகள் பதிற்றேன்பானுஞ்
சிந்துற வடித்த; உன்றன் வீரியஞ் செயிக்கொணுதால்;
முந்துறு முன்கை யாற்றல் மொழியுறுந் தன்மை சாராச்
சுந்தரப் பெருமைத்தைய சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) இந்திரனே! உன்னால் வீசப்படும் வச்சிராயுதங்கள் பலவாக நிறைந்து அந்தரத்தில் அடைபட்டுள்ள தொண்ணூறு நதிகளையும் மழையாகக் கொட்டும்படி யடித்தன. உனது வீரியமானது மகத்தானது அல்லது பிறராற் சயிக்க முடியாதது. உனது சொந்த மேன்மையைப் பிரகடனஞ்செய்து கொண்டுள்ள, உனது கைகளின் வல்லமை சொல்ல முடியாததாம்.—(எ-று.)

9. ஆயிரம் பேர்க ளொன்று யணைந் தருச்சிக்கின்றூரால்;
மேயபே ரிருபதின்மர் வேண்டி யெக்காலும் போற்றைப்
பாயபேரொலியினூர்த்தார்பகர்ந்தனர்பதிறுப்பத்துக்
காயன விருடி மார்க ளடிக்கடி; இந்திரற்குத்
தூயநன்மறைதூக்கிற்றூற்சுயவிறைமையையர்ச்சித்தே.

(இ-ள்.) ஆயிரம்பேர் இந்திரனிடத்து ஒன்றாகக்கூடி யருச்சிக்கின்றார்கள். யாகத்திற் பொருந்திய இருபதுபேரும் எல்லாவிடத்தும் சூழ்ந்து ஸ்தோத்திரம் செய்தனர். அடிக்கடி நூறு (நூற்றுக்கணக்கான) ரிஷிகள் அவனுடைய புகழைக் கூறினார்கள். இந்திரனுக்காகப் பிரஹ்மங்கள் (மந்திரங்கள், அவியுண வென்பார் சாயணர்) அவனது சொந்த மேன்மையைப் பிரகடனஞ்செய்து தூக்கப்பட்டன.—(எ-று.) 20 பேர் 16 ரித்விஜர்களும், யஜமானனும், அவன் பத்தினியும், ஸதஸ்யனும், சமிதாவுமாக இருபதின்மராம். ஸதஸ்யன், பிழை திருத்துவோன். சமிதா, யாகப் பசுவைக் கொல்வோன்; தூக்கிற்று செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது.

10. விருத்திரன் பலத்தை வேந்தன் வெட்டினான்; படைக்கலத்தை
யுருத்தெழுந்தன் படையா லொழித்தனன்; அவனவ் வாண்மை
பெருத்த தன்மையதால்; பேசின் விருத்திரன்றன்னைச்சால
வருத்தியேகொன்றான்; அன்னான் வலியினாற் றகைத்த நீரைத்
தூத்தியே கட்டவிழ்த்தான் சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) விருத்திரனுடைய பலத்தைத் (தனது பலத்தினால், இந்திர னழித்தான். அவனது ஆயுதத்தைத் தனது ஆயுதத்தாலொழித்தான். அவ் விந்திரனுடைய பும்ஸத்துவம் (ஆண்மை) மகத்தானது. விருத்திரனைக் கொன்று தனது சொந்த மேன்மையைப் பிரகடனஞ்செய்து கொண்டு, அவன் அடைத்து வைத்திருந்த நீரை யவிழ்த்துவிட்டான்.—(எ-று.) அவன் ஆறன் றொகை.

11. பொச்சமில் பெருமை சார்ந்த புவியொடு வானிரண்டு
மச்சமுற் றனது கோப மாற்றலா ததிர்ந்த வைய,
வச்சிரப்படையோய்,சூழ்ந்தமருத்துவர் துணைகொண்டுள்ளோய்,
நச்சுறு மிந்திரா நீ நண்ணுமுன் வலியாற் பாம்பைத்
துச்சமாய்க்கொன்ற போதுன்சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) வச்சிராயுதந்தரித்தவனே! மருத்துக்களுடைய துணை வாய்ந்து அவர்களால் சூழப்பட்டவனே! இந்திரனே! நீ உனது சொந்த ஆதிபத்யத்தைப் பிரகடனஞ்செய்து உனது பலத்தினால் விருத்திரனாகிய பாம்பைக் கொன்றபொழுது மகத்துவத்திற் சிறந்த வானம் பூமிகள் உனது கோபத்தைக் கண்டு பயந்து நடுக்கமுற்றன.—(எ-று.)

12. கடகடவென வசைத்து விருத்திரற் கலக்குங் காலும்
இடியி னிந்திரன் முழக்க மிழைத்த வப்போது முள்ள
நடுநடுங்கிலன் ; அவன்ற னன்னய வயத்தா லான
கொடுவலிக் குலிசங் கூர்க ளாயிரங் கொண்டு வெட்டத்
துடிதுடித்தன னகியுஞ் சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) இந்திரன் விருத்திரனைக் கடகடவென அசைத்தாட்டினபோதும், இடிபோலப் பெரு முழக்கஞ் செய்தபோதும் விருத்திரன் பயப்படவில்லை. இரும்பினாலான அவ்விந்திரனது வச்சிராயுதம் அவ் விந்திரனது சொந்த ஆதிபத்தியத்தைப் பிரகடனஞ்செய்து ஆயிரங் கூர்கொண்டு அகியை (விருத்திரனை) வெட்டிற்று. (அப்பொழுது நடுங்கினான்).—(எ-று.) 'துடிதுடித்தன னகியும்' என்றது வடமொழி மூலத்தில்லை.

13. அசனியை யுருப்படுத்தி, யணி முரட் குலிச மென்னும்
வசையிலாயுதமேயாகவனைந்துபின்னெதிர்த்தோர்க்கொல்லும்
பசையிலா வகியைக் கூடப் பரந்திட வமைத்தபோது
நசையி னுன்வலி நாகத்தே விருத்திரன்றனை நலிக்கச்
சுச வியாபக மெய்திற்றுச் சுயவிறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) இடியை யுருப்படுத்தி வலிமை பொருந்திய வச்சிராயுதமாகச்செய்து, பின்னர் எதிர்த்தவர்களைக் கொல்லும் அகியாகிய விருத்திரனையும் பரந்து நிற்கும்படி செய்தபோது, உனது பலமானது உனது சொந்த ஆதிபத்யத்தைப் பிரகடனஞ் செய்து கொண்டு, ஆகாயத்தினிடத்து விருத்திரனைக் கொல்லச் சுயவியாபகத்தை யடைந்தது.—(எ-று.) அஹிம், ஆகத்ய ஹந்தாரம் என்பார் சாயணர். பிரகடனஞ்செய்து அடைந்தது என்க. சுய, சுசவென எதுகைக்காக வந்தது.

14. அத்திரிப் படையைத் தாங்கி யணிபெறு மிந்திரா வுன்
சத்த மிக்கோங்குஞ் சிங்க நாதங் கேட் டசரத்தோடு
தத்து சங்கமங்கள் சார்ந்த விவ்வுல கதிர்ந்த தைய ;
ஒத்த மீப்பயத்தி னுன்றன் கோபத்தாற் றுவட்டாகூடத்
தொத்துகம்பனத்தையுற்றான் சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) அத்திரிப்படை (வச்சிராயுதம்) தரித்தவனே! இந்திரனே! உனது ஸிம்ஹ நாதத்தைக் கேட்டு ஸ்தாவர ஜங்கமங்களிரண்டும் நடுங்கின. உனது கோபத்தாற் பயப்பட்டு (வச்சிராயுத்ததை யுருப்படுத்தின) துவஷ்டாகூட உனது சொந்த

ஆதிபத்யத்தைப் பிரகடனஞ்செய்து, மிகவும் நடுங்கினான்.—(எ-று.) கம்பனத்தைத் தொத்துற்றான் எனக் கூட்டுக. துவஷ்டா வச்சிராயுதத்தைச் செய்தவனென்றதை மண். 1, சூக். 32, செய். 2-ல் பார்க்க.

15. வீரியந் தன்னி னெங்கும் வியாபனஞ் செய்யும் வேந்த
னேர வேறொருவன் றன்னை யெம்மதி தன்னி னேடி
யோரலம்; தூர தேசத் துறைபவ ரறிவார் யாரே?
சாருறு மவற்கு வன்மை சம்பத்தும் விளங்கத் தேவர்
தூரியச் செயலுமிட்டார் சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) தனது வீரியத்தினால் எங்கும் வியாபிக்கும் இந்திரனைப்போல வேறொருவனை யெமது புத்தியிற் றேடி யறிகிலம். தூர தேசத்தி லிருப்பவர்களில் யாரறிவார்கள்? (ஒருவரும் அறிய மாட்டார்களென்றபடி.) அவனுக்குப் பலமும் செல்வமும் விளங்கும் வண்ணம் வீரியம் பொருந்திய படைத்தொழிலையும் (அதாவது போர்க்கன்மத்தையு மென்றபடி) தேவர்கள் அளித்தனர், அவனது சொந்த ஆதிபத்தியத்தைப் பிரகடனஞ்செய்து.—(எ-று.) தூரியம், ஆயுதப் பொது, தூரியச் செயல் ஆயுதங்களோடு செய்யும் போர்க்கன்மம்.

16. யாவர்க்குந்தந்தையென் னுமனு, வதர்வணன், அவன்றன்
பாவக மகன் தத்யச்ச னெனு மிவர் பழக்கமாக
வோவறச் செய்த கன்ம மொன்றல வவற்றில், பண்டு
மேவுறுவதுபோற் போற்று முண்டியும் பிற வெலாமுந்
தூவிய லரிக் கியைந்த சுய விறைமையை யர்ச்சித்தே.

(இ-ள்.) பண்டைக் காலத்து (வஸிஷ்டர் முதலியோர் செய்த) கர்மங்களில் கூறப்பட்ட மறையும் கொடுக்கப்பட்ட அவியும் இந்திரனை யடைந்ததுபோல, எல்லாருக்கும் பிதாவாகிய மநுவும், அதர்வணனும் அவனது பரிசுத்தமாகிய புத்திரனை தத்தியச்சனும் என்னுமிவர்கள் செய்த கர்மங்கள் பலவற்றினும் சொல்லப்பட்ட போற்றுக்களும் (ஸ்தோத்திரங்களும் தரப்பட்ட அவிப்பொருள்களும் அவனது சொந்த ஆதிபத்தியத்தைப் பிரகடனஞ்செய்து கொண்டு, அரி (இந்திரனை) யையடைந்தன.-(எ-று.) அதர்வணன் ஒரு ரிஷி, இவன் முதன்முதல் அரணி கடைந்து அக்கினியைப் பெற்றுத் தேவர்களுக்கு ஸோமமும், ஸ்தோத்திரங்களும் அளித்தவன். அவனது புத்திரன் தத்யச்சன்; இவனுக்குத் ததீசி (ch) என்று ஒரு பெயருமுண்டு. இவனது விருத்தாந்தம் மண். 1, சூக். 48, செய்.

13-ல் சொல்லப்படும். 'சுயவிறைமையை யர்ச்சித்தே' என்ற சொற்றொடரைப் பாட்டுகளில் வாய்ப்பக் கூட்டுக. அரி, இந்திரன்.

வருக்கம் 31.

ஆகச் செய்யுள் 154.

ஐந்து அத்தியாயங்களுமாகச் செய்யுள் 862.

இவ் வத்தியாயத்தில் 185 இருக்குக்க ளாயினும் 65 முதல் 70 வரையிலு முள்ள சூக்தங்களில் இரண்டு ரிக்குக்களுக்கு ஒரு செய்யுள் வீத மேற்பட்டதால் இவ் வத்தியாயத்தின் செய்யுட்கள் நூற் றைம்பத்து நான்கே யாயின.

5-ம் அத்தியாயம் முற்றும்.

---

## 6-ம் அத்தியாயம்.

இவ்வத்தியாயத்தில் 32 வருக்கமும், 14 சூக்தமும், 163 இருக்குக்களு முள்ளன.

## 81. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 8.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ராஹூகணன் கோதமன். வடமொழிச்சந்தம்: பங்க்தி. தேவதை: இந்திரன்.

1. விருத்திரற் கொல்லுவோனு மிந்திரன் மதத்தைமேவி
விருத்திசார் வலியையேற்று, மகத்தினை விளக்குமாந்தர்,
பெருத்திடச் செய்தார்; அன்னான்றன்னையே பெருத்தபோரில்
வருத்திய சிற்றுறழ்வில் வருகெனக் கூவுவோம் யாம்;
உருத்தெழு சங்கிராமத் தவனமைப் புரக்க நன்கே.

(இ-ள்.) விருத்திரஹந்தாவாகிய இந்திரன் மதங்கொண்டு வளரும் பலத்தைப்பெற்று மகத்துவ மடையும்படி யாகம் ஆற்றும் ரித்விஜர்கள் செய்தார்கள். அவனையே பெரிய யுத்தத்திலும் சிறு பூசலிலும் யாங்கள் துணைக்கழைப்போம். யுத்தத்தில் அவன் நம்மை நன்றாகப் பாதுகாக்கட்டும்.—(எ-று.) உறழ்வு சண்டை அல்லது பூசல்.

2. ஒருவனேயேனும் வீரவொரு பெருஞ்சேனை யொப்பாய்;
பாதனந்தன்னை யென்றும் பகைவர்கின் றெடுத்தீவாயால்;
உரமிலானெனினு முன்னைத் துதிப்பவன் றனைப்பலத்தின்
விரவுறவிடுப்பாய்; சோமவெக்கியன் விழையும் பொன்னைத்
தாமுறவளிப்பாய்; உன்றன் றான மட்சயப்பொருளுமே.

(இ-ள்.) நீ யொருவனே யாகிலும் ஒருபெரிய சேனையை யொத்து நிற்பாய். பிறரது செல்வத்தைப் பகைவர்களிடத்தினின்றும் பறித்துத்தருவாய். வலிமை யில்லாதவனும் உன்னைத் துதிப்பவனைப் பலவானாக வாக்குவாய். சோமாபிஷவஞ்செய்யும் யஜமானன் விரும்பும் செல்வத்தை நன்றாகக் கொடுப்பாய். உனது தானமும் மிகப்பெரியதாம் அல்லது அட்சயமானதாம்.—(எ-று.) அட்சயம், குறைவற்றது.

3. எழுந்தபோர்தம்மில் யாவனெதிரியை வெல்வானன்றாற்
கிழிந்துறுச் செல்வம்யாவு மிசைந்திடும்; பகைவர் கர்வ

மழிந்திட வாட்டும் பாய்மா விரண்டையுந் தேரிற் பூட்ட;
கழிந்திடச்செய்வாய் யாரை? கழிதன மியார்க் களிப்பாய்?
கொழுந்தன மிந்திரா நீ கூட்டுக வெமக்கு மின்றே.

(இ-ள்.) [இவ்விடத்து இது சொல்லத்தக்கது. குருஸ்ருஞ் சயர்கள் என்னும் அரசர்களுடைய புரோகிதனும் ரஹூகணன் புத்திரனாகிய கோதமனிருந்தான். அந்த ராஜாக்கள் பிறரோடு யுத்தஞ்செய்தபோது அந்தக்கோதமரிஷி இந்த ஸூக்தத்தினால் இந்திரனைப் போற்றித் தன்னவர்களுக்கு வெற்றியைப் பிரார்த்தித்தான் என்பது. வாஜஸநேயியில் தந்தை மகன் இருவரும் புரோஹிதர்களாக விருந்தார்கள் என்று சொல்லப்படுகிறது]. ஏற்பட்ட சண்டையில் சத்துருவை ஜயிப்பவனுக்குச் செல்வம் கிடைக்கும். இந்திரனே பகைவர்களது கர்வத்தையடக்கும் குதிரைக ளிரண்டையும் உனது தேரிற் பூட்டுவாயாக. யாரை நீ யுத்தத்தில் கொல்லப்போகிறாய்? யாருக்கு மிக்க செல்வத்தை யளிப்பாய்? எங்களுக்கு நல்ல செல்வத்தைக் கூட்டுவாயாக.—(எ-று.)

4. புத்தியாற்பெரியன் சோமம்பொருந்தி யொன்னலர்க்குப்பீம
மெத்தவே விளைத்து வன்மைமிங்கினன்; மாண்டதோற்ற
மொத்தவ னரியோன் றுடையுறுவலியுடையோன்செல்வ
மெத்துவான் சேர்த்த கைகளிரண்டினு மயத்தாலான
வுத்தம வச்சிரத்தை யுயர்த்தியே நிறுத்தினனே.

(இ-ள்.) ஞானத்திற் பெரியவனாகிய இந்திரன், சோமபானஞ்செய்து சத்துருக்களுக்குப் பயத்தை யுண்டுபண்ணி வலிமையிற் பெருத்தான். பார்வைக்கழகானவனும், கதுப்பு வன்மையுடையவனும், ஹரீயென்னும் இரண்டு குதிரைகளோடு கூடியவனுமான வவன் செல்வத்தைப் பெறுமாறு, சேர்த்த இரண்டு கைகளாலும் இரும்பினாலான வச்சிரத்தைத் தூக்கிப் பிடித்தான்.—(எ-று.) ஹரீ, துவிவசனம், பிங்கல வர்ணமுள்ள இரண்டு குதிரைகளாம். மெத்துவான், அடைய.

5. புவிநிறை பொருள்கடம்மை யந்தரத்தினைத் தன்றேசின்
சவியினானிறைத்தான்; வானிற்சருவியே யிலங்குமீனை
யவதியிற்கட்டிவைத்தான்; அரியுனைப்போன்றுதித்தார்
பவிடியத்துனை யிகன்றுற்பவிப்பவர் தாமும் யாரே?
தவவகிலத்தை யெல்லாந்தாங்க விச்சிப்பாய் நீயே.

(இ-ள்.) பூமியில் நிறையும் பொருள்களையும், அந்தரிட்சத்தையும் (இந்திரன்) தனது சொந்த தேஜஸால் நிரப்புகிறான்.

ஆகாயத்தில் நட்சத்திரங்களை அவ்வவற்றின் ஸ்தானங்களில் நிறுத்திவைத்தான். இந்திரனே! உன்னைப்போல் இதற்கு முன்னுதித்தவர்களும், இனி யுன்னைப்போலுற்பவிக்க நிற்பவர்களும் யார்? (ஒருவருமில்லை என்றபடி,) எல்லாச் சகங்களையும் நீ தாங்க விச்சிக்கிறாய்.—(எ-று) அரி, இந்திரன், அண்மை விளி. படர்க்கை முன்னிலையாக மாறியது. பவிஷ்யம், பவிடியம், எதிர்காலம்.

வருக்கம் 1.

6. தாசுடன்றனக்கு மர்த்ய போனகந்தன்னை மிக்க
வாசினிற்றருஞ் சுவாமியாகிய விந்திரன்றான்
பேசுறுமுண்டி யெங்கட்களித்துடன் பிறங்க; செல்வ
மேசவில்வகை பகுக்க; உனதிருநிதி கணக்கிற்
பேசுறவமையா துன்சீர்ச் செல்வத்துப் பெறுகபங்கே.

(இ-ள்.) தாசுஷனுக்கு மனுஷ்ய போஜனத்தைத்தரும் ஸ்வாமியாகிய இந்திரன் எங்களுக்கு உணவுப் பொருட்களைத் தரட்டும். (பின் வருபவை பிரத்தியக்ஷகிருதம்) (இந்திரனே!) நீ செல்வத்தை எங்களுக்குப் பங்கிட்டுத் தருவாயாக. உனது செல்வம் கணக்கிலமையாது. உனது செல்வத்தில் யாங்களும் ஏகதேசத்தை யடையட்டும்.—(எ-று.)

7. மதங்கொண்டு களித்தகாலந் தோறும் வந் தருமகத்தோன்
இதங்கொண்டு பசுக்கூட்டத்தை யெங்களுக்களிப்பான் மெய்யே.
சதங்கொண்ட வகையிற்சார்ந்து மிகுத்திடுந் தனத்தை நன்கே
வதங்கொண்டகர மிரண்டால்வாரி யேன்றெடுக்க; எந்தம்
விதங்கொண்டமதி கூர்ப்பிக்க: வேண்டிய தனத்தை யீக.

(இ-ள்.) ஸோமபானத்தால் மதத்தையடைந்த காலமெல்லாம் கர்மவானாகிய இந்திரன் எங்களுக்கு உண்மையாகவே பசுநிரைகளைத் தானஞ்செய்வான். இந்திரனே! நூற்றுக்கணக்கான செல்வத் தொகுதியைக் கைகளினால் எடுப்பாயாக. எங்களுடைய புத்தியைக் கூர்மைப்படுத்துவாயாக. எங்களுக்கு வேண்டிய செல்வத்தைத் தருவாயாக.—(எ-று.)

8. சூராயாம்பலத்தைவேண்டிச்சொத்தினை வேண்டிச்செய்யு
மாரமிழ்தச் சுதைக்க ணணைந்து தோழமையினுண்டு
சீரியமதத்தை யெய்த; சிறப்புறவெகு தனத்தின்
காரகனீயேயென்று கருதினோ முன்மாட்டெந்தம்
பேரவாவுரைத்தோங் கண்டாய் பெருந்துணை யெமக்கேயாக.

(இ-ள்.) சௌரியம் பொருந்திய இந்திரனே! பலத்தையும் செல்வத்தையும் இச்சித்துப் பிழிந்த ஸோமத்தின்கண் வந்து எங்களது தோழனு யமர்ந்து அதனைக் குடித்து மதத்தையெய்துவாயாக. நீயே வெகுதன காரகனென்று எண்ணி யுன்மாட்டு எமது ஆசையையெல்லா முரைத்தோம். எங்களுக்குத் தனத்தையளித்து ஒத்தாசை செய்வாயாக.—(எ-று.) மதம், உற்சாகம், மண். 1, சூக். 4, செய். 2 நோக்குக.

9. இந்திரவுன திம்மாந்த ரேற்றமாம்பொருள் வளத்தைத்
தந்திடு மவற்றையெல்லா முனக்கெனத் தருகாநிற்பார்;
சுந்தரச்சுவாமி யாகஞ் சுவைக்க வாற்றுதார் செல்வ
மூந்துறவுணர்ந்து பின்பு மொய்ம்பிறைற் பிடுங்கி யெங்க
ளந்தரத்தமைத் துனக்குச் சபலமாக்கிட வளிப்பாய்.

(இ-ள்.) இந்திரனே! உன்னுடைய இந்த யாகவான்களாகிய மனிதர்கள் வளம்பொருந்திய பொருள்களையெல்லாம் உனக்கே அவிரூபமாகத் தருவார்கள். எல்லாவற்றிற்கும் ஸ்வாமியாகியநீ யாகஞ்செய்யாதார்படைத்துவீணுக்குகின்றசெல்வத்தையெல்லா மறிகிறுய். அறிந்து அவ் வயாஜிகளின் செல்வத்தை யாங்கள் உனக்கு பயன்படும்படி செய்யும்பொருட்டு, (உனதுபலத்தினுற்பிடுங்கி)யெங்களுக்குத்தருவாயாக.-(எ-று.) அயாஜிகள், யாகஞ்செய்யாதார். உனக்கு ஸபலமாக்கிட என்ற இடைப்பிறவரல் அந்வயத்தாற் கொண்டது; வடமொழி மூலத்திலில்லை. அம்மாதிரியே மொய்ம்பிறைற் பிடுங்கி யென்பதும் அந்வயத்தாற் கொண்டது.

வருக்கம் 2.

## 82. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 9.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச்சந்தம்: 1—5 பங்க்தி, 6 ஜகதி. தேவதை. இந்திரன்.

1. முன்பெமை யளிக்கவெம்பா முந்துறச்செவி சாய்த்தாற்போ
லின்பினெம்பண்ணை யின்றுங்கேட்க; சீர்மகவான்மாறு
யன்பிலாதுறையல்; எம்மைமெய்த்துதி வசனராக்கிப்
பொன்பெறுமிச்சை கூட்டிப்பூரிப்பி னமைத்தாய்; வேந்தே,
உன்பரியிரண்டை யுன்றேர்ப்பூட்டுக வுடனேமன்னே.

(இ-ள்.) மகவானே! (தனவானாகிய இந்திரனே) பூர்வத்தில் எங்களைக் காப்பாற்றுமாறு எமது ஸ்துதிகளைக் கேட்டது போல் இன்றும் கேட்பாயாக. அதற்கு நேர் விரோதமாக இப்பொழுது எங்களிடத்து அன்பில்லாம லிருந்துவிடாதே. இந்திரனே! எங்களைப் பிரிய சத்திய வசனத்தோடு கூடிய ஸ்தோதாக்களாகச் செய்து பொருளிச்சையையு மூட்டிவிட்டு ஸந்தோஷப்படுத்தினாய். உன் குதிரைக ளிரண்டையும் உனது தேரில் உடனே பூட்டுவாயாக.—(எ-று.)

2. அன்ன நீயளித்த வற்றை யாரவுண் டின்படைந்தார்
துன்னு சொற் றேய்கிலார் மெய்க்கம்பிதத் தொளிமீக்கொண்டு
மன்னிய விப்பிரர்க ளூதனோத்தம மறையால்
நன்னயத் துனைத் துதித்து நாடினா ரதனால் வேந்தே
யுன்பரி யிரண்டை யுன்றேர்ப் பூட்டுக வுடனே மன்னே.

(இ-ள்.) நீ யளித்த அன்னத்தை வயிறாரப் புசித்து, இன்பத்தை யெய்தி வாயினாற் சொல்ல முடியாதவர்களாய்த் தமது சரீரம் கம்பிக்க மேதாவிகள் ஸ்வதேஜஸோடு கூடியவர்களாய் நூதனமும் உத்தமுமான மந்திரத்தை அல்லது ஸ்தோத்திரத்தை மனத்தினாற் கருதிப் பாடித் துதித்தார்கள். இந்திரனே! உன் குதிரைக ளிரண்டையும் உனது தேரிற் பூட்டுவாயாக.—(எ-று.)

3. கொன்பெறு மகவா னுன்றன் கூரருட் கடைக்கணுடை
மன்பதை யாங்க ளுன்னை வணங்கியே துதிக்கின்றாமால்;
உன்னுமத் துதிகொள் நீ போற்றுரைப்பவர்க் களிப்பான், மெய்யே,
துன்னுபேர் நிதிகொடேரிற் றேய்ந்து நேர்வருகவேந்தே
யுன்பரி யிரண்டை யுன்றேர்ப் பூட்டுக வுடனே மன்னே.

(இ-ள்.) பெருமை பொருந்திய மகவானே! உன்னுடைய அநுக்கிரக பார்வையை விரும்பி உன்னைப் பிரஜைகளாகிய யாங்கள் துதிக்கின்றோம். அந்தத் துதிகளை யேற்கும் நீ ஸ்தோத்திரம் செய்யும் பிறருக்கும் அநுக்கிரகம் செய்யும் வண்ணம், மிகுந்த செல்வத்தால் நிறைந்த உனது தேரின்மேலேறிக்கொண்டு உண்மையாகவே (அவசியம்) வருவாயாக. இந்திரனே! உன் குதிரைக ளிரண்டையும் உனது தேரிற் பூட்டுவாயாக.—(எ-று.) மெய்யே வருக எனக் கூட்டுக.

4. தன்னுறு வோர்கட் கார்த்தி சார்த்தி யாக்குழுவை யீண்டு
மன்னுறக் கூட்டி யாரி யோஜனங் கலந்த தேரைத்

### அஷ்டகம் 1. அத்தியாயம் 6.

துன்னுறு சோம பூர்ண பாத்திர நினைப்பிப் பசுத்தை
மின்னுறு மிந்திரா நீ மெய்ம்மையி னேற ; வேந்தே
யுன்பரி யிரண்டை யுன்றேர்ப் பூட்டுக வுடனே மன்னே.

(இ-ள்.) இந்திரனே! தன்னை யடைவோர்க்கு இச்சைகளை யளிப்பதும் பசுக் கூட்டத்தைத் தருவதும் ஹாரியோஜனத்தோடு கூடியதும், சோமம் நிறைந்த பாத்திரத்தை (இந்திரனுக்கு) நினைப்பூட்டுவதுமான தேரில் உண்மையாகவே ஏறி நிற்பாயாக. இந்திரனே உன் குதிரைக ளிரண்டையும் உனது தேரிற்பூட்டுவாயாக.(எ-று.) ஹாரியோஜனம் பிங்கலநிறமுள்ள குதிரைகளைத் தன்னிடத்துப் பூட்டப்பட்டதென்பார் மேனாட்டாசிரியர். ஆனால், ஹாரியோஜனம் 'ஏதத்ஸம்க்ஞகம் (Dh) தானா மிச்ரிதம்' என்பார் சாயணர். அப் பெயருள்ள தானியம் அல்லது பொரி கலந்தது என்று பொருள் படுகிறது. அற்றேல் பொரி அல்லது சாதங் கலந்த சோமமெனக் கூட்ட வேண்டும். அதனால், மன்னுறக் கூட்டுந்தேரை யாரியோஜனங் கலந்து, என இரண்டாம் அடியை மாற்றிப் படிக்க. ஆக்குழு, பசுக்கூட்டம்.

5. உன்னிய நூறு கன்ம முடைய நல்லதிப வுன்றன்
கொன்னுறு தேரிற் றட்சிணத்தி னோர் பரியைக் கூட்ட ;
மன்னுற மிடப்பாகத் தோர் மாவினைத் தளைக ; நேசப்
பன்னிவாய்ச் செல்க சோமம் பருகிய களியின்! வேந்தே
யுன்பரி யிரண்டை யுன்றேர்ப் பூட்டுக வுடனே மன்னே.

(இ-ள்.) சதக்கிருதுவே! உனது (பெருமைபொருந்திய) தேரின் வலது பக்கத்தில் ஒரு குதிரையைச் சேர்ப்பாயாக. இடது பக்கத்தில் ஒரு குதிரையைக் கட்டுவாயாக. சோமங் குடித்த மதத்தோடு உனது பத்தினியிடத்துப் போவாயாக. இந்திரனே! உன் குதிரைக ளிரண்டையும் உனது தேரிற் பூட்டுவாயாக.—(எ-று.) பின்னடிகளால் இந்திரனைத் தனது கிரகத்துக்கு அனுப்புவது சொல்லப்படுகிறது.

(வேறு.)

6. பிரமமதாற் குசைநீண்ட வுன்னிருமா
வினைத்தேரிற் பிறங்கு வித்தேன் ;
வாமருவு மிலநோக்கிச் செல்லுக ; வார்
உன்கரத்தே மருவிற் றுமேலோ ;

தாமதத்தைத் தந்துவிரை வுளக்களிப்பூட்
டுஞ்சுதைகள் சந்தோடத்தை
விரவுவித்த; வச்சிரத்தோய்! பன்னியொடு
செழித்துமத மேவ நன்கே.

(இ-ள்.) (இந்திரனே!) ஸ்தோத்திர ரூபமான மந்திரத்தால் நீண்ட பிடரி மயிரோடுகூடிய உனது இரண்டு குதிரைகளையும் தேரிற் பூட்டினேன். உனது உத்கிருஷ்டமான வீட்டைநோக்கிச் செல்லுக. உன் இரண்டு கைகளாலும் வாரைப் பிடித்துக்கொள்ளுக. மன உற்சாகத்தைக் கொடுத்து வேகமாக மதத்தைத் தரும் சோமத்துளிகள் உனக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணின. வச்சிராயுதத்தை யுடையவனே! (ஸந்தோஷ சித்தனாய்ப்) பத்தினியோடு புஷ்டியை யடைந்தவனாய்க் களிப்பாயாக.—(எ-று.)

வருக்கம் 3.

## 83. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 10.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச் சந்தம்: ஜகதி. தேவதை: இந்திரன்.

1. இந்திரவுன் னுதவியினு னனிகாக்கப்
படுமனித னீண்டு பாய்மா
வந்துறு மில்லுடன் பசுவை முன்படைவான்,
அவனுக்கே வளமார் செல்வந்
தந்துபரி பூரணனு யன்னனை
யாக்குவையாற் றெளிவு சார்ந்து
சுந்தரமாய்ப் பலதிசையும் பாய்ந்துகட
னிறைவிக்குந் தோயம் போன்றே.

(இ-ள்.) இந்திரனே உன்னுடைய உதவிகளினுல் காக்கப்படும் மனிதன் இவ்விடத்துக் குதிரையோடு கூடிய கிருகத்தையும் பசுவையும் (எல்லா எஜமானர்களுக்கும்) முன்பதாகவே யடைவான். அவ் யஜமானனுக்கே மிக்க செல்வத்தை யளித்து அவனைப் பரிபூரணனு யாக்குவாய்; தெளிவான நீரோடுகூடிய ஆறுகள் அழகாகப் பல திக்கிலும் பாய்ந்து சமுத்திரத்தைப் பூரணமாக்குவதுபோல.—(எ-று.) தண்ணீரே விசிஷ்ட ஞான

ஹோதாபூக மென்பார் சாயணர். ஆனால் தெளிந்து செல்வன என்று மொழி பெயர்த்தது, மேனாட்டாசிரியர் உரையை யொட்டி யென்க.

2. ஓதாவின் கலசவயின் வானொழுகு
நீரெனவே யுவந்து தேவர்
மீதாவி னின்றுநனி கீழ்நோக்கி
விரிகதிர்கள் வீழ்வ போலத்
தீதாகா விச்சோம மெமக்கெனவே
பிழிந்ததெனத் தேர்ந்து, சோம
வாதார முன்னேற்றித் தேவர் விழை
விடம், வரின், அன்பிற் சூழ்வார்.

(இ-ள்.) ஹோதாவினது ஸோமபாத்திரத்தினிடம் விண்ணிலோடும் நீரைப்போல ஆகாயத்திற்செல்லும் தேவர்கள் மகிழ்ந்து சூரியனுடைய பரந்த கதிர்கள் கீழ்நோக்கி வீழ்ந்து பார்ப்பதுபோல அச் சோமபாத்திரத்தைப் பார்த்து இச் சோமம் தங்களுக்காகவே பிழியப்படுவ தென்பதைத் தெரிந்து, சோமத்துக்கு ஆதாரமான அக் கலசத்தை (உத்தரவேதிக்கு முன்) கொண்டுவந்து, கன்னிகையைச் சூழ்ந்து நிற்கும் வரர்களைப்போல தேவர்கள் விரும்பு மதனிடத்து அன்புடன் சூழ்ந்து நிற்பார்.—(எ-று.) தேவர்கள் ஆகாயத்தில் செல்வதை வானின் மேலோடும் ஜலத்துக்கும் அவர்கள் பார்ப்பதைச் சூரியகிரண ஒளி வீழ்வதற்கும் ஒப்பிட்டார். சோமவாதார மென்றது, சோமத்தைத் தாங்கும் பாத்திரத்தை; தேவர் விழை வென்றதும் அதனையே. இடம் ஏழனுருபு. மாலையிட நிற்கும் கன்னிகை தனக்கு மாலையிடுவாள் என்று எப்படி ஒவ்வொரு வரனும் அவளைச் சூழ்ந்து நிற்பானோ அப்படியே ஒவ்வொரு தேவனையும் இந்தச் சோமம் தனக்குத் தனக்கென்று அச் சோமப் பாத்திரத்தைச் சூழ்ந்து சேவிக்கும். இந்த ரிக்குக்கே மற்றொரு பொருளுண்டு அது வருமாறு:—(இந்திரனே!) விண்ணிழியும் நீர் பள்ளத்தாக்குகளில் கீழ்நோக்கி ஓடுவது போலத் தேவர்கள் உன்னுடைய ஸ்தோத்திரத்தைச் செய்பவர்களாய் ஹோதாவினிடத்திற்குச் செல்லுவார்கள். சென்று கீழ்நோக்குற்றுப் பரந்த சூரிய கிரணங்களைப் போலப் பார்க்கிறார்கள். கன்னிகையை வரர்கள் சூழ்ந்துகொள்ளுவதுபோல ஸ்தோத்திரப் பிரியனாகிய வுன்னைப் புகழ்ந்து தேவர்களை மனதினினைக்கு மிவனைச், சூழ்ந்து சேவிக்கிறார்கள் என்பதாம். மீ, தாவின்.

3. நெய்யோடிங் குணவிரண்டுங் கலந்தோதத்
தகும்வசன நேடிச் சோடாய்ப்
பெய்யோமத் துடுவையினுற் சொரியோமப்
பூசகனும் பெரிதும் போரி
லெய்யாது நின்விரதங் குலையாதே
யாற்றிநின் றெய்து வான்சீர்;
மெய்யாகச் சுதைபிழியு மகற்குயர்ந்த
சத்திகளு மேவு மாதோ.

(இ-ள்.) நெய்யும் சாதமுங் கலந்து, ஓதத்தகும் சஸ்திர வசனங்களைத் தேடி இரட்டையாய் ஆவுதிசெய்யும் சுருக்கோடு கூடிய ஹோமவான் யுத்தகாலத்திலும் சத்துருக்களை ஜயித்து, உன்னுடைய கருமங்களைத் தவருமற் செய்து சிறப்புப்பெறுவான். உண்மையாகவே ஸோமாபிஷவஞ் செய்யும் யஜமானனிடத்து விசேஷமான வல்லமைகள் பொருந்தி நிற்கும்.—(எ-று.) இரட்டையாய் என்றது நெய்யையும் சாதத்தையுஞ் சேர்த்து என்றபடி. ஓமத்துடுவை, சுருக்கு. ஸோமா பிஷவஞ் செய்தல், ஸோமம் பிழிதல்.

4. அங்கிரஸர் முதன்முதனெய் கலந்தவனஞ்
சம்பாதித் ததற்குப் பின்னர்த்
தங்குமொளி யங்கியொடு சற்கருமந்
தொடங்கிமகஞ் சாதித் தாரால்;
பங்கமிலாப் பசுவோடு குதிரைகளுங்
கால் நடையும் பரந்து சார்ந்த
துங்கதனம் பணியுணவாய் வைத்திருந்த
யாவையுமந் நரர்தோய்ந் தாரே.

(இ-ள்.) அங்கிரஸர்கள் முதன்முதல் நெய் கலந்த அன்னத்தைச் சம்பாதித்துப் பிறகு ஒளி வீசுகின்ற அக்கினியோடு சற்கர்மத்துக்கு ஆரம்பித்து, யாகத்தைச் செய்தார்கள். (அதன் பயனுகப்) பணி யென்னும் அசுரன் தனது போகார்த்தம் அடைத்துவைத்திருந்த பசு குதிரை முதலிய கால் நடைகள் நிறைந்த செல்வத்தை யந்த வங்கிரஸர்களாகிய மனிதர்கள் அடைந்தார்கள்.—(எ-று.)

5. அதர்வானு முதன்முதலில் யாகமிழைத்
தருநெறிக ளமைத்தான்; பின்னர்க்

கதிர்வானத் தந்நெறியின் விரதமதைக்
காப்பாற்றுங் காந்த னென்றா
லெதிர்வானன் ; அவ்வதர்வான் பசுப்பெற்றான் ;
உசனகா வியன்ச காவாய்
வதிவானன் ; நியமனத்துத் தோன்றமிர்தந்
தனைவேண்டி மகஞ்செய் வோமே.

(இ-ள்.) பசுக்களுக்காக அதர்வான் என்னும் ரிஷி முதன் முதல் யாகத்தைச் செய்து பாதைகளை யேற்படுத்தினன். பின்பு ஆகாயத்தில் அப் பாதையில் விரதங்களையெல்லாம் பாதுகாக்கும் காந்தனுகிய சூரிய ரூபமான இந்திரன் எதிர்ப் பட்டான். அந்த அதர்வான் (பணி யென்னு மசுரன் அபகரித் து வைத்திருந்த) பசுக்களை யடைந்தான். அப்போது கவியி னது புத்திரன் உசனன் அசுரரை யடக்கு நிமித்தம் அவ் விந் திரனுக்குத் தோழனுனன். அசுரர்களை யடக்கத் தோன்றிய அமிர்தமாகிய அவ் விந்திரனை விரும்பி யாம் யாகஞ்செய்வோம். —(எ-று.) அதர்வான் மண். 1, சூக். 30, செய். 16-ல் காண்க. உசனகாவியனை மண். 1, சூக். 91, செய். 10-ற் பார்க்க. அமிர்தமென்றது ஈண்டு இந்திரனை.

6. மங்கலகா ரியத்துக்காத் தருப்பையினைக்
கத்தரித்து மருவு மன்றுந்,
துங்கமறை யோன்றுதியை வான்பரவும்
வணமுரக்கச் சொல்லும் போதும்,
அங்கமுறு முபலமுமே சாறிறக்க
மறையொலிபோ லதிருங் காலும்,
வங்கையுறு திந்திரன்மெய் யாகவவன்
வந்துமுக மலர்ந்தார்ப் பானே.

(இ-ள்.) மங்கல காரியத்துக்காகத் தர்ப்பைகளைக் கத்த ரித்து வைக்கும்போதும், ஹோதாவானவன் உயர்ந்த ஸ்தோத் திரத்தை யுரக்கச் சொல்லும்போதும், ஸோமாபிஷவஞ் செய் யும்பொழுது கல்லானது சாறிறக்குவதற்கு, வேத மந்திரங்கள் கோஷிப்பதுபோல, உரக்கச் சத்தமிடும்போதும், இந்திரன் பகைமை கொள்ளாது அவ்விடத்து வந்து உண்மையாகவே முகமலர்ச்சியோடு சந்தோஷத்தைக் குறிக்கும் சப்தத்தைச் செய்வான்.—(எ-று.)

வருக்கம் 4.

# 84. மண்டலம் 1. அநுவாகம் 13. சூக்தம் 11.

20 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச்சந்தம்: 1—6 அநுஷ்டுப், 7—9 உஷ்ணி, 10—12 பங்க்தி, 13—5 காயத்ரி, 16—18 த்ருஷ்டுப், 19 ப்ரஹதி, 20 ஸதோப்ரஹதி. தேவதை: இந்திரன்.

(வேறு.)

1. சோம மிந்திர வுனக்கெனத் துவைத் தெடுத்தனரா
லேம நல்வலி யேய்ந்தவ வேதிலர்த் தெறுவோய்!
சேம மாகவந் தெய்துக வைந்திர வலி; வி
யோமந் தன்னொளி கொண்டுசூ ரியனூரப் பலினே.

(இ-ள்.) இந்திரனே! உனக்காகச் சோமம் பிழிந்தெடுத்தனர். உத்தமமான வலிமை பொருந்தியவனே! சத்துருக்களை யடக்குபவனே! வியோமத்தை (ஆகாயத்தை)த் தனது ஒளியினுற் சூரியன் நிரப்புவதுபோல, நீ வந்து உனது ஐந்திர பலத்தைப் பூரிப்பாயாக.—(எ-று.) வ்யோமம், ஆகாயம்.

2. யாவராலு மிங் கடக்கொணு வலியி னிந்திரனைத்
தாவு வெம்பரி யிரண்டுமே சுமந்து தந்தனவால்
மேவு நல்லிருடியர்த் துதி கேட்கவும், நரர்க
ளோவிலா துனுற் றுயர் மகத் துறுகவு மன்றே.

(இ-ள்.) ரிஷிகள் செய்யும் ஸ்தோத்திரங்களைக் கேட்கவும், இதர மனிதர்கள் எப்பொழுதும் (எங்கெங்கும்) செய்யும் யாகத்தினிடத்து வரவும், ஒருவராலும் அடக்க முடியாத வலிமையை யுடைய இந்திரனைக் கதியோடுகூடிய அவனுடைய குதிரைக ளிரண்டும் சுமந்துகொண்டு வந்தன.—(எ-று.)

3. விருத்திரன் றனைக்கொல்லுவோய்! விரும்பி யேறுகதே
ரருத்தியோடு மெம்மறைகளா லார்த்தபோ துனது
குரத்தரிகளை; சோமக்கல் பிறங்கு நற்குரலின்
வருத்துக வுனை யுன்மனக் கவனத்தைக் கவர்ந்தே.

(இ-ள்.) விருத்திரனைக் கொல்லுபவனே! யாங்கள் எங்களது மந்திரங்களால் உனது குதிரைக ளிரண்டையும் உன் தேரிற் பூட்டியபோது அத்தேரில் ஏறுவாயாக. சோமாபிஷ

வஞ் செய்யும் கல்லானது உரத்த சப்தத்தைச் செய்து உனது கவனத்தை யிழுத்து உன்னை யிங்கு கூட்டிக்கொண்டு வரட்டும்.—(எ-று.) அரிகள், குதிரைகள். வருத்துக, வருவிக்க வென்னும் பொருட்டு. விருத்திரன் என்பதற்குப் பொதுவாகச் சத்துருக்களை யென்பார் சாயணர்.

4. உத்தமச்சுவை மரணத்தை யுடைப்பது, மதத்தை
மெத்த வீவதா மிதனை யிந்திர விழைந் தார்க;
ஒத்த நல்விதி யாகந்தோய் சாலையி னுவந்து
சுத்த வெண்சுவைத் தாரை யுன்னிடம் வரும் தாமே.

(இ-ள்.) மகா சிறப்புப் பொருந்தியதும், மரண மில்லாமற் செய்வதும், மதத்தைத் தருவதுமான இச் சோமத்தை விரும்பிக் குடிப்பாயாக. நல்லொழுக்கங்களோடு கூடிய யாக சாலையில், வெண்மையான ஹோமதாரைகள் உன்னை நோக்கித் தாமே வருகின்றன.—(எ-று.)

5. இந்திரற்கென விக்கண மருச்சனை யியற்ற;
தந்து வாய்ந்த வுக்தங்களைச் சாற்றுக; சுவையி
னிந்துவால் மத மேற்றுக; உத்தமத் தியைந்த
நந்து போர்வலி யினன்றனை நமற்கரித்திடவே.

(இ-ள்.) (இருத்துவிஜர்களே!) இந்திரனுக்காக வேண்டி யிப்பொழுது பூஜை செய்யுங்கள். நூல்களில் சொல்லப்பட்ட மந்திரங்களை அவன் பொருட்டுச் சொல்லுவீர்களாக. ஸோமத் துளிகளால் அவனுக்கு மதத்தை யூட்டுவீர்களாக. கீர்த்தி மிக்க சிறப்புப் பொருந்திய அப் பலவானுக்கு நமஸ்காரம் செய்வீர்களாக.—(எ-று.) நமற்கரித்தல், நமஸ்காரம் செய்தல்.

வருக்கம் 5.

6. மன்னும் பிங்கல மாவினை, யிந்திர, பூட்டித்
துன்னுந் தேரவன் சிறந்தவ னுன்னினு மிலையால்;
உன்னரும்பலங் கொண்டவ னுன்னுதற் குளனோ?
பின்னு முன்பரி யொத்த நற்பரியுளோ னிலையே.

(இ-ள்.) இந்திரனே! இரண்டு பிங்கலமாக்களையும் பூட்டியுள்ள தேரோடு கூடிய வுன்னைக்காட்டிலுஞ் சிறந்த தேருடையவன் வேறொருவனு மில்லை. உனது அரிய பலத்தை யொத்த பல மடைந்தவனும் மற்றொருவனில்லை. உனது குதி

களை யொத்த குதிரைகளோடு கூடியவனும் இன்னொருவ னில்லை.—(எ-று.)

(வேறு.)

7. தனியே வசுவைத் தாதா சுடனுக்,
கினிமை பெறவே, மரண மியைவோற்
குனியீ குபவ னுயரிந் திரன்மெய்த்
துனிதீர் வலியோன் றுகடீ ரிறையே.

(இ-ள்.) தாம் பொருந்திய மர்த்தியனாகிய தாசுஷனுக்கு (அவி யளிப்பவனுக்கு)த் தனியாகவே பொன்னைத் தருபவனா கிய இந்திரன், பிறரால் ஜயிக்க முடியாத பலம் பொருந்தியவ னும் குற்றமற்ற ஸ்வாமியுமாம்.—(எ-று.)

8. மரணத் துறுவோன் மகமில் லவனைத்
திரணத் துறுநாய்க் குடைதேய்ப் பதுபோற்
சரணத் தினிஎன் றுசதித் திடுவான்?
அரணத் தெமபண் ணரியென் றணைவான்?

(இ-ள்.) மரண முள்ளவனும், யாகஞ் செய்யாதவனுமா கிய அவனை அற்பமாகிய நாய்க்குடையைத் தேய்ப்பது போ லக் காலால் எப்பொழுது தேய்ப்பான்? எமது கீதங்களை இந் திரன் எப்பொழுது கேட்பான்?—(எ-று.) அஹிச் சத்ரம், நாய்க்குடை; வடமொழிப் பதத்துக்குப் பாம்புக்குடை யென்று பொருள்.

9. பல்லோர் குழுமப் பருகுஞ் சுதையை
யில்லோ னெவனே யியைபிற் றருவான்
நல்லோ னவனுக் கெனவுக் கிரமா
மல்லே பெறுவான் மகவா னுடனே.

(இ-ள்.) பல்லோர் கூடி நிற்க எந்த யஜமானன் ஸோமம் பிழிந்து இந்திரனுக்காக அளிக்கிறானோ அந்த யஜமானனுக் காகவேண்டி இந்திரன் உக்கிரமான வலியை யடைவான்.— (எ-று.) மகவான், இந்திரன். உனக்காக என்று வடமொழி மூலத்தில் முன்னிலைப் படர்க்கை மயக்கமாக வுள்ளது. அதை உரையில் இந்திரனுக்காகவென மாற்றி யுள்ளார் சாயணர்.

(வேறு.)

10. இவ்வகைப் பரந்து நின்ற இரதமார் சுவைச் சோமத்தைச்
செவ்விதி னிந்திரற்காச் செறித்தபோ துயர்வெள்ளாக்கள்
கவ்வுறு களிப்பிற் காளைக்கடை யழகுறவுலாவும்;
திவ்விய வலியி னன்னான் குடித்தபி னவையு மாந்தி
யொவ்வுறும் பாலி னுக்க ளுயரரி யாட்சி பார்த்தே.

(இ-ள்.) இம்மாதிரியாக (வெல்லா யக்ஞங்களிலும்) பரந்து நின்ற ரஸம் நிறைந்த சோமத்தை இந்திரனுக்காக யஜமானர்கள் நிறைத்தபோது வெண்மையான பசுக்கள், ஸந்தோஷத்தோடு இச்சைகளை யளிப்பவனாகிய அவ் விந்திரனென்னுங் காளையோடு அழகுபெற வுலாவும். அவ் விந்திரன் ஸோமத்தைக் குடித்தபின் தாமும் குடித்துப் பால்மடியோடு கூடிய அப்பசுக்கள் இந்திரனுடைய தலைமையை நோக்கி, மதத்தையடையும்.—(எ-று.) ஒவ்வுறும், மதமொவ்வுறும், மதத்தை யியையும் என்க.

வருக்கம் 6.

11. சித்திர நிறங்களேய்ந்து சீரி னன்னவன் றொடுகை
யொத்திட விழையு மாக்க ளுவப்பி னிந்திரற்கு வாய்ந்த
சுத்த வெண் சோமத்தோடு தோய்த்திடுந் தத்தம் பாலை
நத்து மிந்திரன்ற னன்பு நலமுறு மவை சம்பத்தை
யொத்துறார் தம்மே லோச்சு முயரவ னாட்சி பார்த்தே.

(இ-ள்.) பலவர்ணங்களோடு கூடி அவ்விந்திரனுடைய ஸ்பர்சத்தை விரும்பும் பசுக்கள் அவ்விந்திரனுக்காகப் பொருந்திய சோமத்திற் றமது பாலையும் கலந்துவிடும். அவ்விந்திரனுக்குகந்த தேனுக்கள் (பசுக்கள்) அவனுடைய ஏகாதிபத்தியத்தை நோக்கி யவனுடைய வச்சிராயுதத்தைச் சத்துருக்களின் மேலெறியும். (அதாவது இந்திரன் வச்சிராயுதத்தை யெறியும் வண்ணம் பால்கலந்த ஸோமத்தால் அவனுக்கு மதத்தையூட்டும் என்றபடி).—(எ-று.) சம்பம், வச்சிராயுதம். அவற்றின் பால்கலந்துள்ள சோமத்தைக் குடிக்கவே இந்திரனுக்கு மதம் பெருக, அவன் வச்சிராயுதத்தைப் பகைவர் மீது ஓச்சுகிறான். அதனைப் பசுக்களின் தொழிலாகவே யுபசரித்தார். ஒத்துறார், பகைவர். பசுக்கள் இந்திரன் தங்களைத் தொடவேண்டுமென்று விரும்புவதால் 'அன்னவன் றொடுகையொத்திட விழையுமாக்கள்' என்றார்.

12. அறிவினின்மிக்கவாக்களவன்வலிகருதித்தம்பா
லுறும்பயங்கொண்டுபூசித்துறுதிசார் பற்பனேனும்பாங்,
தெறும்வலிப் பகைவர்தம்மைச்செகுப்பனவற்றைப், பூர்வஞ்
செருநர்கள் பட்டபாட்டைச் சித்தத்திற்கொணருவண்ணம்
நிறுவுற நினைக்கு மன்னு னிமிரா சாட்சி பார்த்தே.

(இ-ள்.) நல்ல ஞானத்தோடு கூடிய அப்பசுக்கள் அவனு டைய பலத்தை யெண்ணித் தம்மிடத்திலுள்ள பயஸினால் (பாலினால்) அவனைப் பூஜித்து, உறுதியைப் பெறக் கூடியவை யும், சத்துருக்களை யழிப்பவையுமாகிய அவனுடைய பல விர தங்களையும் அவனுடைய ஏகாதிபத்தியத்தை யெண்ணி நிலைப் பிக்கும், பழையகாலத்தில் அவனுடைய விரோதிகள் பட்ட உபத்திரவத்தை யடிக்கடி நினைப்பூட்டுமாறு.—(எ-று.) பயம், பயஸ். பசுக்கள் இந்திரனுடைய விரதங்களை நிறுத்துவதற் குக் காரணம், அவனுடைய ஏகாதிபத்தியமும், அவனது பகைவர்கள் முற்காலத்தில்பட்ட அவஸ்தையை நினைப்பூட்டு வதுமாம்.

(வேறு.)

13. மேவலர்களால் வெல்லற் கரியவன்
ஓவில் நல்வலி வேந்தன் றதீசியின்
மாவினேன்ற தலைமன் னெலும்பினால்
பாவுமொன்பது தொண்ணூ றகிகொன்றான்.

(இ-ள்.) சத்துருக்களால் வெல்லமுடியாத வலிமை பொ ருந்திய இந்திரன் ததீசியின் குதிரைத் தலையெலும்பினால் எண் ணூற்றுப்பத்து விருத்திரக் கூட்டங்களாகிய அசுரர்களையும் கொன்றான்.—(எ-று.) இவ்விடத்துப்பின்வரும் சாட்யாயனிக் கூற்று கருதத்தக்கது. "அதர்வணனுக்குத் ததீசி அல்லது தத்தியச்சன் என்று ஒரு புத்திரனிருந்தான். அவனுக்கு இந் திரன் ஒருகாலத்துப் பிரவர்க்கிய வித்தை, மதுவித்தை, என்று இரண்டு வித்தைகளைக் கற்றுக்கொடுத்து அவற்றைப் பிறருக் குச் சொல்லிக்கொடுத்தால் தலைவெடித்துப்போகும் என்று ஆக்ஞாபித்திருந்தான். ஆனால் அசுவினிகள் அவனிடத்தில் வந்து அவ்வித்தையைக் கேட்டார்கள். அவனுண்மையைக் கூற அசுவினிகள் அவன் தலையை வெட்டிக் குதிரைத்தலை யொன்றை அவனுக்குப் பொருத்தி அவ்வித்தையைக் கற்றுக் கொண்டார்கள். பிறகு அத்ததீசியைப் பார்த்த அசுரர்களுக் குக் கர்வம் அதிகமாயிற்று. ஏன்? இந்திரனுடைய ஆணைக்கு

விரோதமான காரியஞ் செய்தும் அவன் சாகாமலிருந்ததைக் கண்டு அவர்கள் கர்விஷ்டர்களானார்கள். அப்பொழுது பூமி யும் ஸ்வர்க்கமும் அசுரர்களால் நிரம்பிவிட்டன. அவர்களைச் சயிக்கும் ஆற்றல் இந்திரனுக்கில்லாமற்போகவே அவன் ததீ சியைத்தேடிப் பூலோகத்துக்கு வந்தான். இவன் அதற்குள் ஸ்வர்க்கம் புகுந்துவிட்டான். இந்திரன் ததீசியைக் கண்டு அக் குதிரைத்தலையைக் கேட்கவும் அதனைப் பூலோகத்திற் போட்டுவிட்டதாகத் ததீசி சொல்லிவிட்டான். உடனே இந் திரன் தனது ஆட்களைக்கொண்டு தேடச் சொன்னபோது குருட்சேத்திரத்தின் பக்கத்திற் சர்யணாவதி யென்னும் ஸர ஸோடிக்கொண்டிருந்த விடத்தில் அக் குதிரைத்தலை கிடைத் தது. அத் தலையெலும்பினால் 810 விருத்திரர்களையும் கொன் றான்.'' என்பது. 810 என்னுந் தொகைக்குச் சாயணர் காரணங் கூறுவர். அது வருமாறு:—'' ஸ்வர்க்க, அந்தரம், பூமியென மூன்று உலகங்களிலும், பூத பவிஷ்ய வர்த்தமானமென மூன்று காலங்களிலும், உற்சாகம் முதலிய மூன்று சக்திகளோடும், ஸத்துவ, ரஜஸ், தமஸென்னு மூன்று குணங்களோடும் கூடி, நான்குதரம் மூன்றைப்பெருக்கினால் வரும் எண்பத்தொன்றை இந்திர, அக்கினி, யம, நிர்ருதி, வருண, வாயு, குபேர, ஈசான் ய, ஆகாச, பாதாளங்களாகிய பத்துத்திக்கினால் பெருக்க 810 ஆவதை கவனிக்க. இம்மாதிரி 3 லோகங்களிலும் மூன்று காலங்களிலும் மூன்று சக்திகளோடும் மூன்று குணங்களோ டும், பத்துத்திக்கிலும் ஸஞ்சரிக்கும் அசுரர்களே 810 விருத்தி ரர்களாம்.'' என்பது.

14. பரியின் வெந்தலை பண்டு விரும்பியே
கிரியி னுப்பட் கிளர்ந்தவன் மூர்த்தனி
சரியணாவதி சார்ந்த தலத்தினிற்
றெரியக் கண்டனன் றேடிய விந்திரன்.

(இ-ள்.) ததீசியின் குதிரைத்தலையை விரும்பித்தேடிய விந்திரன், மலைகளுக்கு மத்தியில் சரியணாவதி யென்னும் ஸர ஸின் பக்கத்தில் அது கிடக்கக் கண்டான்:—(எ-று.) கண்ட தும் எடுத்துரித்து அதன் எலும்பினால் விருத்திரனைக் கொன் றான் எனமுடிக்கவென்பார் சாயணர். சரியணாவதி குருட் சேத்திரத்துக்கு அருகிலுள்ள ஊற்று என்று மேலே சொன் னார். குருட்சேத்திரம் டில்லிக்குப் பக்கத்திலுள்ளது. இப் போது பானிப்பட்டு என்னும் பெயரோடு விளங்கும்.

15. அன்றியங்கு மதிமண்டலத் தனைத்
தொன்றி யல்லி னொளித்துத் துவட்டுவி
னின்ற பேரொளி நேடிப், பரிதியிற்
றுன்று நற்கதிர், தோய்வதைக் கண்டவே.

(இ-ள்.) அப்பொழுது, அங்குள்ள சந்திரமண்டலத்திற் றுவட்டாவின் சுதிரொளி யிரவிலொளித்து, நிலாக்கற்றையாகப் பிரதிபலித்து நிற்பதைச் சூரியனுடைய கிரணங்கள் கண்டன.—(எ-று.) துவட்டாவென்பது சூரியனுக்கு மற்றொரு பெயர். ஜலமயமாயுள்ள சந்திரபிம்பத்தில் சூரியவொளி பிரதிபலிக்கிறது. இந்திரனே சூரியனென்ன அபின்னமாகக்கொண்டு சூரிய கிரணங்கள் கண்டதை இந்திரன் கண்டான் என்று உபசரித்ததும் ஒன்று. அதாவது அக்குதிரைத்தலையைத் தேடித்திரிந்த வன்றுதான், துவட்டா வல்லது சூரியனுடைய ஒளி சந்திரனுடைய பிம்பத்துக்குள் புகுந்து பிரதிபலிக்கிற விஷயத்தைச் சூரிய கிரண ரூபமாயுள்ள இந்திரன் கண்டானென்க. அது பௌர்ணமி தினம்போலும். அதனால் காலையில் சூரிய கிரணங்களின் ஒளி யோங்குவதையும் சந்திரனுடைய ஒளி மழுங்குவதையுங் கண்ட கவிக்குச் சூரியனதொளிதான் இரவிற் சந்திரனிற் பிரதிபலித்துத் தோன்றுகின்றது என்ற வுண்மை மனத்திலுதித்தது போலும்.

வருக்கம் 7.

16. (அ) வீரிய கன்ம முள்ள, தேசுள, வெகுளிற் றாங்கற்
கியாரெனு மரிய, அம்பு கட்டிய முகத்தி னேய்ந்த
நேரல ருரமி திப்ப, நெடுஞ்சுக மீவ, தேரீர்த்
தேருறு மாவையின்று பூட்டுறு மகத்தோன் வாழ்வான்.

(இ-ள்.) வீரியகர்மத்தோடு கூடியவையும், காந்தியுள்ளவையும், ஒருவராலுந் தாங்கமுடியாத கோபத்தோடு கூடியவையும், சத்துருக்களைக் குத்துவதற்காக முகத்தில் அம்புகட்டியுள்ளவையும், பகைவருடைய நெஞ்சிற் கால் வைப்பவையும், தமது பட்சத்தாருக்கு நிலைத்த சுகத்தைத் தருபவையுமாய்த் தேரிழுக்குங் குதிரைகளை இன்று (இப்பொழுது அல்லது இந்தக் கர்மத்திலென்றபடி.) நுகத்தடியிற் பூட்டும் யக்ஞகர்த்தா வாழ்வையடைவான்.—(எ-று.) வெகுளின்யாரேனுந் தாங்கற்கு அரிய எனக்கூட்டுக. இவ்விருக்கை வேறொருவகையாகவும் மொழி பெயர்க்கலாம், அது வருமாறு:—

(இ) எக்கிய கர்ம முள்ள, வெல்லுள, ஆனியெய்தா
முக்கியமறைகள், வாயான் மொழியுறப்பெறுவ, சித்தம்
புக்கொளியளிப்ப, இன்பம்பொருத்துவ, இவற்றையெந்த
வெக்கியன்புணர்த்துவானேவவனிவண்வாழ்வான்மற்றே.

(இ-ள்.) எந்த யாக நிர்வாஹகன், தனது யக்ஞத்தில், (உரைபெறும் மந்திரங்களால் பிரதிபாதிக்கப்படும்) கர்மங்களோடு கூடியவையும், ஒளி பொருந்தியவையும், கேட்டையடையாதவையும், வாயினுலுச்சரிக்கப் படுபவையும், இதயத்தை விளக்குபவையும், சுகத்தைத்தருபவையும் ஆகிய மந்திரங்களை, யக்ஞத்திற் பொருத்துவானே அவனே உயிரோடிருப்பான். (மற்றவர்கள் மரிப்பார்கள்.)—(எ-று.) ஆனி, ஹானி, கேடு. ஆனியெய்தாவென்றது, ஓதுவா ரென்றுமுள்ளபடியால். கா: என்ற வடமொழி பதத்திற்கு மேற்பாட்டிற் குதிரையென்று உரை கூறினவர் ஈண்டு மந்திரங்களாகிய வாக்கு விசேஷங்கள் என்று பொருள் கூறினர்.

17. ஓடுவோன்யாவன்? துன்பமுறுபவன்யாவன்? உள்ளத்
தோடுமச்சத்தோன்யாவன்? உடனருகுறையும்வேந்தைத்
தேடியேயறிவோன்யாவன்? சந்ததி, இபங், தனங்கள்,
நாடிய தநு, சனங்கள், நல்கென விழைவோன் யாரே?

(இ-ள்.) (அநுக்கிரகிக்கும் இந்திரனிடத்தில் வந்தபின் சத்துருக்களுக்குப் பயந்து) ஓடுபவன் யார்? (ஒருவருமில்லையென்றபடி.) துன்பப்படுவோன் யார்? மனத்திற் பயப்படுவோன் யார்? சமீபத்திலிருந்து (எங்களைக் காப்பாற்றும் ரட்சகனை) ஓங்கும் இந்திரனைத் தேடி யறிபவன் யார்? சந்ததியும், யானையும், தனமும், சரீரமும், ஜனங்களுமாகிய இவற்றை விரும்புவோன் யார்?—(எ-று) எங்களைத்தவிர வேறொருவருமில்லை யென்றும், இந்திரனே கேட்காமலிவற்றை யளிக்கிறானென்றும் கூட்டியுரைக்க வென்பார் சாயணர்.

18. நெய்யவி சொரிந்துயாவனிமிரெரி வளர்த்துப்போற்றிப்
பெய்துடுப் பெடுத்துக் காலம்பிறழுறு தேத்துகின்றோன்?
அய்யெனத் தேவர்பொன்னை யாருக்கென்றெடுத்துச்சேர்வர்?
செய்யுநன்மகத்தோன் றேவற்குகந்தவன் றெரிந்தோன்யாரே?

(இ-ள்.) சுருக்கினால் நெய்யாகிய அவியை யூற்றி அக்கினி வளர்த்துக் காலந்தோறும் தவறாமல் ஸ்தோத்திரஞ் செய்

பவன் யார்? தேவர்கள் எந்த யஜமானனுக்காக (கேட்கப்பெறும் சிறந்த) திரவியத்தை விரைவாகக் கொண்டு வருவார்கள்? யக்ஞத்தைப் பெற்றவனும் தேவனுக் குகந்தவனுமாக எந்த யஜமானன் (இந்திரனை) யறிந்தவனாவான் (கண்கூடாகத் தெரிந்தவனும்)?—(எ-று.) ஐயெனல் விரைவுக் குறிப்பு, அய் போலி.

(வேறு.)

19. ஐய வலியி னுத்தமனே! அழகார் தேவ, மர்த்தியனைச்
செய்யவருளிற் றுதிப்பவனை யாசீர்வதித்துச்சேர்குவையால்;
பெய்யுமகவா னுன்னொழியப் பிறங்குநன்மை புரிபவரை
யெய்யேன்; இந்திராவுனக்கெனெழில்சார்வசனம்புகலுவனே.

(இ-ள்.) உத்தம பலவானே! தேவே! உன்னைத் துதிக்கும் மர்த்தியனாகிய யஜமானனை ஆசீர்வதிப்பாய், மகவானே! (தனவானான விந்திரனே!) உன்னைக்காட்டிலும் நன்மை செய்பவர்களை யானறியேன். இந்திரனே உன்பொருட்டு என் அழகிய ஸ்துதி வசனங்களைக் கூறுவேன்.—(எ-று.)

(வேறு.)

20. உனதருஞ் செல்வக் கொடைகளு முறுதி
யுளுற்றிடு மீசனே யென்றும்
பினருன தருமை சார்துணை தாமும்
பேர்த்திடல், மானவர்க் கருள்வோய்!
நினதரு மறையை நேடுறு மெமக்கு
நீள் பொருள் யாவையுந் தேடித்
துனவிடா யெல்லா விடத்துநின் றெடுத்துத்
தோய்ந்தெம திடத்து நன்குறவே.

(இ-ள்.) மனிதர்களுக்கு இதஞ்செய்பவனே! எங்களுக்கு உறுதியைத் தருஞ் செல்வத்தைத் தரு மீசனே! நீ தரும் அரிய செல்வங்களும், உனது அருமை பொருந்திய உதவிகளும் எம்மை யடையாதபடி மாற்றிவிடா திருப்பாயாக. (எம்மை யடையச் செய்வாயாக.) எல்லா விடத்திலிருந்தும் பொருள்களை யெடுத்து எம்மிடத்து நன்றாகப் பொருந்தும்படி சேர்ப்பாயாக.—(எ-று.)

வருக்கம் 8.

அஷ்டகம் 1. அத்தியாயம் 6.

## 85. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 1.

12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஹை கோதமன். வடமொழிச்சந்தம்: ஜகதி; 5, 12 த்ருஷ்டுப். தேவதை: மருத்துக்கள்.

(வேறு.)

1. உருத்திரன்றன் புத்திரர்க ளுயர்வேகஞ்
 சிறந்தோர்க ளூறுதி சான்று
திரத்தமையுஞ் செயல்புரிவோர் மாருதர்கள்
 வழியதனிற் றெரிவை மார்போற்
றாத்தலங்கா ரம்புனைவோ ருரோதசியை
 யோக்கமொடுந் தளிர்க்க விட்டார்;
உரத்தமையவ் வீரர்மலை பொடிப்பவர்கள்
 யாகமதி லோகை கொள்வார்.

(இ-ள்.) உருத்திரனுடைய புத்திரர்களும், வேகமானகதியோடு கூடினவர்களும், உத்கிருஷ்டமான செய்கைகளைப் புரிபவர்களும், வழியிற் செல்லும்போது மாதர்களைப்போலத் தமது அங்கங்களை யலங்கரித்துக் கொள்பவர்களுமான மருத்துக்கள் உரோதஸீயை (பூமிவானங்களை)ச் செழித்தோங்கும்படி செய்தனர். பலம் பொருந்திய அவ்வீரர்கள், மலைகளையுடைத்துப் பொடி செய்பவர்கள், யக்ஞத்தினிடத்து (ஸோமங்குடித்து) மதத்தை யடைவார்கள்.—(எ-று.) மருதர் அல்லது மருத்துக்கள் ருத்திரன் அல்லது மகாதேவனுக்கும் பிருச்நியாகிய தாய்க்கும் புத்திரர்களாம். ஜநந ஜந்யபாவம் உபசாரார்த்தம் என்க. ஸப்த என்பதற்கு வேகமாய்ச் செல்லக்கூடியவர் என்றார் சாயணர். அந்திய காலத்திலெல்லாரையு மழவைப்பவன் ருத்திரன்.

2. அபிடேகம் பெற்றவர்கள் பெருமகிமை
 தனையடைந்தே யழகு தோன்ற
நபமோங்குந் தஞ்சதன நாட்டினரா
 லுருத்திரன்ற னலத்த மைந்தர்;
சுகமாக வருச்சிப்பா ரருச்சிக்கத்
 தகுவோனைத்; தோய்ந்த வீர
நிபமாகு மைந்திரியம் பிருசினிசே
 யவரூட்டி நிதியேற் றாரே.

(இ-ள்.) ருத்திர புத்திரர்களாகிய அவர்கள் தேவர்களால் அபிஷேகஞ் செய்யப்பெற்று மிக்கமகிமையையடைந்து உத்கிருஷ்டமாக ஆகாயத்தினிடத்துத் தமது கிருகத்தை நாட்டினார்கள். அருச்சிக்கத்தக்கவனாகிய இந்திரனை யருச்சிப்பார்கள். வீரத்துக்கு உவமையாகும் ஐந்திரவலிமையை அவ்விந்திரனுக்குப் பிருச்நியின் மக்களாகிய மருத்துக்கள் ஊட்டித் தனத்தை யடைந்து தாங்கினார்கள்.—(எ-று.) பிருச்நி, நாநாரூபமாயுள்ள பூமி. நபம், ஆகாயம். நிபம், ஒப்பு. சதனம், வீடு. ஐந்திரியம், இந்திர சம்பந்தமானது, வீரமென்றபடி. அருச்சிக்கத்தகுவோன், இந்திரன். மருத்துக்கள் ப்ரஹர பகவோ ஜஹ வீரயஸ்வ முதலிய வாக்கியங்களினா லிந்திரனுக்குப் பலத்தை யூட்டுகிறார்கள்.

3. கோவினது புத்திரர்க ளணிகளினா
 லவயவங்கள் கூரப் பூட்டி
 மேவுறுகாந் தியினைவளர்த் திடும்போதிங்
 கலங்காரம் விளங்க வேற்றே
 யோவறுமெய் யொளிபெருகத் தரிப்பார்க
 ளொன்னார்க ளுடைய வாட்டித்
 தாவுறுதந் நெறியெல்லாம் வளந்தருநெய்
 யொழுகும்வணஞ் சமைப்பா ரன்றே.

(இ-ள்.) கோ (பசு) ரூபமாயுள்ள பூமியினது புத்திரர்களாகிய மருத்துக்கள் ஆபரணங்களாற் றமது அவயவங்கள் நிறையும்படி பூட்டி வெளுப்பான காந்தியை வளர்க்கும்போது ஒளிவீசும் அலங்காரங்களை யேற்றுத் தமது சரீரத்தின் தேஜஸ் விருத்தியாகும்படி அவற்றைத் தரிப்பார்கள். பின்னும் அவர்களே பகைவர் தோற்று ஓடும்படி ஹிம்ஸித்துத் தாங்கள் போகும் வழியிலெல்லாம் வளம்பொருந்திய நெய்யானது (சாரம்பொதிந்த மழை நீரானது) விழும் வண்ணஞ் செய்வார்கள்.—(எ-று.) அவர் போனவழியில் மழை பெய்யும் என்றபடி. நெய்யென்றது சாரம் பொதிந்த மழை நீரை.

4. நன்மகத்தீர் படையொளிர்வீர் மாருதர்காள்
 மனோவேக நடையிற் சான்ற
 பொன்பெறுபுள் ளியின்மானை உம்தேரி
 லழகுபெறப் பூட்டு மக்காற்

கொன்பெறுவிண் ணிழிமழையைப் பெய்விக்கு
நீங்கணிலை குலையாதேயுங்
குன்றெனினு மமதூரத்தா னிலைபேர்த்து
நடுக்கமுறக் குயிற்றுவீரே.

(இ-ள்.) நல்ல யக்ஞத்தோடு கூடியவர்களே! ஆயுதாலங்கிருதர்களே! மருத்துக்களே! மனோவேகமாக நடக்கும் திராணியுள்ளவையும் அழகிய வெண்புள்ளியோடு கூடியவையுமான மான்களை உமது தேரிலழகாகப் பூட்டும்போது வானிலிருந்து விழும் மழைத்துளிகளை விழும்படி செய்யும் நீங்கள் நிலைகுலையாதுள்ள பொருப்பாயினும் அதனையசைத்து நடுங்குறச் செய்வீர்கள்.—(எ-று.)

(வேறு.)

5. எள்ளருமுதக, மன்னமியையக்க, வானிழியத் தூண்டிப்
புள்ளிமான் றம்மை யுந்தேர்ப் பூட்டவுமருதீர் செம்மை
யுள்ளிய மின்னிற் றூரை யொல்லென வொழுகித்தோலை
யெள்ள நற் பூமி முற்று மெழில்பெற நனைக்குமன்றே.

(இ-ள்.) மருத்துக்களே! உணவுப் பொருள்களைத் தரும் வண்ணம் மழைநீரை வானி (மேகத்தி) னின்று மிழியுமாறு தூண்டி யுமது புள்ளியோடு கூடிய மான்களை யுமது தேரிற் பூட்டியவுடனே சிவந்த மின்னினின்றும் மழைத்தாரையானது விரைவாக வீழ்ந்து தோலை நனைப்பதுபோலப் பூமியை நனைத்து விடுகின்றது.—(எ-று.)

6. மாருதர்காளும்வேக வெம்பரிகள்
விரைகதியின் மருவி யும்மை
யேருறவே யிவட்டருக; தனங்கரத்திற்
சிறப்புறவே யியைக; வேதி
சாருறுமெம் மிலம்பெரிதாம்; அதிற்சாருங்
குசையதனிற் சற்றே தங்க;
நேருமது ரச்சோம வன்னமதை
மாந்திமத நேர்க வின்றே.

(இ-ள்.) மருத்துக்களே, உமது வேகம் பொருந்திய குதிரைகள் (அதாவது ஈண்டு மான்கள்) வேகமான நடையோடு பொருந்தி யும்மை யிங்கே கொண்டுவருக. நீங்களும் எங்களுக்குத் தரவென்று கைகளிற்பொருள்களை யேந்திக்கொண்டு

வருக. வேதிகை சார்ந்த எமது யக்ஞகிருஹம் விஸ்தாரமாக வமைக்கப்பட்டுள்ளது. அதனிடத்தேயுள்ள தருப்பையிலமர் வீர்களாக. யாங்கள் தரும் மதுரமான ஸோமலட்சண வன்னத் தையுண்டு மதங்கொள்வீர்களாக.—(எ-று.)

வருக்கம் 9.

7. சுயபலத்தால் விருத்தியடைந் தவர்களக
 ஞகமதிற் றேய்ந்தி டம்பா
 டியலுறத்தஞ் சதனமதை யமைத்தார்கள் ;
 விண்டுவுமே மத்த மேய்ந்து
 பயிலுவதா யிச்சையளிப் பதைக்காத்திங்
 கோம்புங்காற் பட்சி போல
 வயலின்விரைந் தன்புடனே தருப்பையினி
 லழகாக வமர்க மாதோ.

(இ-ள்.) தமது ஸ்வபலத்தினு லோங்கினவர்களாய் மருத் துக்கள் ஸ்வர்க்கத்திற்கு சென்று விசாலமான வீட்டைத் தமக் கெனச்செய்து கொண்டார்கள். விஷ்ணுவானவர் மதத்தோடு கூடியதும் இச்சையளிப்பதுமான யக்ஞத்தை அல்லது ஸோமத்தை ரக்ஷிக்கும்போது, அம்மருத்துக்கள் பட்சிகளைப் போலப் பக்கத்தில் விரைவாக வந்து பிரியத்தோடு தருப்பை யின் மேலமரட்டும்.—(எ-று.) மேனுட்டாசிரியர் ரட்சித்த போது அமர்ந்தார்கள் என்பார். ஆனல் சாயணர் உபவிசந்து என்ற உரை கூறியுள்ளார்.

8. போர்புரியக் களிக்கின்ற சூரரென
 விரைகுபவர் போற்று கீர்த்தி
 யோர்விழையும் புருடரென யுத்தமதிற்
 பொருதனரால் ; எப்ப டைப்புங்
 கூர்நடுக்கின் மருதரின்முன் விதிர்விதிர்க்கும் ;
 அந்நரரும், கோனே யென்னப்
 பார்வயிற்ற முக்கிரத்தோற் றத்தெவரும்
 பார்க்கவொணுப் படிவ முற்றூர்.

(இ-ள்.) சௌரியத்தோடு கூடிய யுத்த வீரர்களைப்போல விரைவாகச் செல்லும் மருத்துக்கள் கீர்த்தியை விரும்பும் புருஷர்களைப்போல (விருத்திராதியரோடு செய்த யுத்தத்தில்) சண்டையிட்டனர். எல்லாச் சிருஷ்டிவர்க்கங்களும் அம்மருத்

துக்களின் வரவைக்கண்டு நடுங்கும். அந்த நரர்கள் (நேதாக்கள் அல்லது சேனாதிபதிகள்) தமது உக்கிரமான தோற்றத்தினால், ராஜாவைப்போல ஒருவராலும் எதிரெடுத்துப்பார்க்க முடியாத படிவத்தோ (உருவத்தோ) டிருக்கிறார்கள்.—(எ-று.)

9. செய்திறமைத் துவட்டாவும் பொன்மயத்தி
 னாயிரவெண் செறிந்த கூர்க
ளெய்தியவச் சிரமதனை வேலைப்பா
 டுறவிழைத்த விறையின், வேந்தன்
மொய்திறற்கன் மம்புரிவா னதையேற்று
 விருத்திரனை முடித்தான்; அன்னா
னெய்தினடைத் திருந்தமுகிற் சலமுழுதும்
 பெய்வித்தா னொடியின் மன்னோ.

(இ-ள்.) காரியஞ் செய்வதிற் சிறந்த துவஷ்டா, பொன் மயமானதும், ஆயிரமென்னும் கூர்கள் பொருந்தியதுமான வச்சிராயுதத்தை வேலைப்பாடோடு கூடச் செய்தவுடனே, இந்திரன் வலிமை மிகுந்த போர்க்கன்மத்தைச் செய்வதற்காக அதனைக் கையிலேற்று விருத்திரனைக் கொன்றான்; அவ்விருத்திர னடைத்து வைத்திருந்த மேகநீர் முழுவதையும் விரைவிற் கீழ்நோக்கி யோடும்படி செய்தான்.—(எ-று.) ஆயிரவெண் செறிந்த கூர்கள் என்றது, ஆயிரக்கணக்கான கூர்மைகள் என்றபடி. வேந்தன் இந்நூலின் எப்போதும் இந்திரனுக்கே மறு பெயராக வரும்.

10. அம்மருத ரொருகூபந் தனைவலியால்
 மேற்றூக்கி யதனோட் டத்தை
யம்ம தடுக் கும்மலையை யும்பிளந்தார்;
 நற்கொடையோ ரடுத்த நூறு
செம்முநரம் பியாழதனை வாசித்தார்;
 சோமமதைச் சிறந்து மாந்தி
யிம்மெனவே துதிப்பவருக் கீகவென
 வெகுதனங்க ளிழைத்தா ரன்றே.

(இ-ள்.) அந்த மருத்துக்கள் ஒரு கூபத்தைத் தமது வலிமையினால் மேற்றூக்கி அதனோட்டத்தைத் தடுத்தெதிர்ப்படும் மலையையும் பிளந்தார்கள்; நல்ல தானத்தோடு கூடிய அம்மருத்துக்கள் நூறு தந்தி கொண்ட வீணையை யெடுத்து வாசித்தார்கள். ஸோமத்தைக் குடித்துக் களிகொண்டு ஸ்தோதாக்க

ளுக்காக அநேக செல்வங்களைச் சிருஷ்டித்தார்கள்.—(எ-று.) ஈண்டு இவ்விதிஹாஸம் சொல்லப்படுகிறது. ஒரு நாள் இம் மறை கண்ட ரிஷியாகிய கோதமன் நீர் வேட்கையினால் வருந்தி மருத்துக்களை யாசித்தான். அப்பொழுது அம்மருத்துக்கள் தூரத்திலிருந்த ஒரு கூபத்தை மேற்றாக்கி அதன் தண்ணீரை ஓடும்படி செய்து கோதமனது ஆச்ரமத்துக்குப் பக்கத்தில் ஒரு தொட்டிகட்டி அத் தொட்டியில் விழுவித்து அவ்விருடி யைத் திருப்திப் படுத்தினார்களென்பது.

11. பற்பலவா மொளிவாய்ந்தோ ரக்கூபந்
தனையிருடி பக்கல் சாய்வாய்
முற்படவே கொண்டூர்த்துக் கண்டதொரு
தொட்டியினின் முற்றப் பூரித்
தெற்படுமிவ் வகைத்துணையிற் கோதமனும்
விப்பிரன்க ணேய்ந்து சீர்சால்
சொற்படவா யுளேயோம்புந் தண்ணீரா
லவனாசை தோய்வித் தாரே.

(இ-ள்.) சித்திரம்போல் நானாவிதமான ஒளியோடு கூடிய மருத்துக்கள் அக் கூபத்தை அவ்விருடி யிருக்குந்திசையை நோக்கி வக்கிரமாகக் கொண்டுவந்து அங்கே கட்டிய தொட்டி யிலூற்றி நிறைத்து, இவ்வகை யுதவியோடும் கோதமனிடத்து வந்து, ஆயுள் விருத்தியைச் செய்யும் அத் தண்ணீரால் அவ னது ஆசையை நிறைவேற்றினார்கள்.—(எ-று.)

(வேறு.)

12. மருதர்காள்! உம் முத்தாது மருவிய புகலிடங்கள்,
விரதிகட் களிப்பா னென்ற வீடுகள், தாசுடற்குத்
தருபவை தமை யெமக்குச் சார்த்துக; அருத்தி யீவீர்!
பெருவலிச் சுதரி னன்மை பெருகுறு தனமு மீக.

(இ-ள்.) மருத்துக்களே! மூன்று தாதுக்களிலும் (ஸ்வர்க் கம், அந்தரம் பூமி யென்னும் மூன்று இடங்களிலும் என்ற படி) பொருந்திய உமது புகலிடங்களும், உம்மை ஸ்தோத்தி ரஞ்செய்யும்விரதிகளுக்குத் தருவதற்காக ஸம்பாதிக்கப்பெற்ற வீடுகளும், தாசுஷனாகிய யக்ஞகர்த்தாவுக்குக் கொடுப்ப வைகளு மானவற்றை யெமக்குத் தருவீர்களாக. இச்சையை யளிப்பவர்களே! வீரியம்பொருந்திய புத்திரர்களோடு கூடிய செல்வத்தையும் தருவீர்களாக.—(எ-று.) முத்தாது வென்றது

**அஷ்டகம் 1. அத்தியாயம் 6.**

பூமி முதலிய மூன்றிடங்களை யென்பார் சாயணர். மூன்று மடங் கென்பார் மேனாட்டாசிரியர்.

வருக்கம் 10.

## 86. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 2.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச் சந்தம்: காயத்திரி. தேவதை: மருத்துக்கள்.

1. பேரொளிவான் பிறங்கு மருத்தரே,
யாரகத்தடைந் தின்புடன் சோமத்தைச்
சீரின் மாந்துவீ ரன்னவ னுத்தம
வேரிற் காவல ரெய்தி நிலைப்பனே.

(இ-ள்.) சிறந்த ஒளியோடு அந்தரத்தில் விளங்கும் மருத்துக்களே! எந்த யஜமானனது கிரஹத்தில் வந்து ஸந்தோஷத்தோடு ஸோமபானஞ் செய்வீர்களோ அந்த யஜமானன் உத்தமமான காப்பாளர்களோடு கூடியவனாவான்.—(எ-று.)

2. மகத்தை யோம்பு மருதீர் துதியுடன்
மகத் தமரு மறையவன் போற்றையும்,
அகத்துள வவி யாற்றலர் கூற்றையும்,
இகத்து நுஞ்செவி யேற்பீர் கடிதினே.

(இ-ள்.) மகத்தை (யாகத்தை)த் தாங்குகின்ற மருத்துக்களே! ஸ்தோத்திரங்களோடு யாகத்திலவியைத்தரும் மேதாவியாகிய விப்பிரனது வணக்கமொழிகளையும் அவிதராது ஸ்தோத்திரம் மாத்திரஞ் செய்வோனது வார்த்தைகளையும் (துதிமொழிகளையும்) விரைவிற் கேட்பீர்களாக.—(எ-று.) இதனால் கர்மமில்லாமல் ஸ்தோத்திரம் மாத்திரம் செய்வோருக்குங் கூடத் தெய்வவருள் ஏற்படுமென்பது வெளியாகும்.

3. இன்னும் யாரகத் தெய்து மவியினர்,
துன்னும் விப்பிரக் கூட்டந் துதைவுற
மன்னுவிப்ப ரம்மானவ னுநிறை
துன்னு கோட்டத்துத் தோய்பவ னுவனே.

(இ-ள்.) இன்னும், எந்த யஜமானனுடைய வீட்டில் அவி யுணவோடு கூடிய ரித்ஜவிர்கள் விப்பிரர்களாகிய மருத்துக்கூட்டம் நெருங்கிவரும்படி செய்வார்களோ, அந்த யஜமானன் பசுக்கூட்ட நிறைந்த கொட்டிலுக்குள் செல்லும் பெருமைபெற்றவனுவான். (அதாவது) நிறையப் பசுக்களை யடைவான்.—(எ-று.) கோட்டம், கோஷ்டம், பசுக்கொட்டில்.

4. எக்கியத் தினத் தெய்துந் தருப்பையின்
மிக்க வீர ரவர்கள் விழைமகத்
துக்த மன்னர் களிக்க வுரை பெறும்;
தக்க சோமத்தின் சாறும் பிழிவுறும்.

(இ-ள்.) யக்ஞதினத்தன்று தருப்பையிற் சிறந்த வீரர்களாகிய மருத்துக்கள் விரும்புகின்ற யாகத்தில் உக்தம் (சஸ்திரங்கள்) அவர்கள் மதத்தைப் பெறுமாறு சொல்லப்பெறும். சோமச்சுஜையும் பிழியப்பெறும்.—(எ-று.)

5. ஒன்னலர்க ளெல்லாரையு மோட்டுவோர்
மன்னு மிம்மகன் மந்திரங் கேட்டிட;
துன்னு மம்மறை தூண்டு மகத்தனு
மன்ன மன்னு ரளிக்க வடைகவே.

(இ-ள்.) சத்துருக்களெல்லாரையும் துரத்துவோர்களாகிய மருத்துக்கள் இந்த யாககர்த்தாவின் மந்திரத்துக்குச் செவி கொடுக்கட்டும். அந்த மந்திரத்தைக் கூறும் யாககர்த்தாவும், அம்மருத்துக்கள் அன்னப்பொருள்களைத்தர, அவற்றை யடையட்டும்.—(எ-று.) ஸூரம் என்பதற்கு மகத்தனெனப் பொருள்கொள்ளாது சூரியனெனப் பொருள்கொண்டு, இஷ: என்பதற்கும் பலமென வெடுத்துரைத்து மேனாட்டாசிரியர் 'சூரியனை யெட்டும் பலமவனுக்கு உண்டாகட்டும்.' என மொழி பெயர்ப்பார். கடையடி முற்றுமோனை.

வருக்கம் 11.

6. மருதர்காள், முன்வயங்கிய பற்பல
சரிதுக்களிற் சர்வமுங் கண்டவும்
உரமுறுந் துணையுற்றவி யீந்துளோம்;
தரமுறவின் றளிப்பதுந் தாங்கவே.

(இ-ள்.) மருத்துக்களே! முன்பு விளங்கிய பல கூதிர்க் காலங்களிலெல்லாம் சர்வக்ஞர்களான உமது வலிமை பொருந்திய உதவிகளையடைந்து உமக்கு அவியளித்திருக்கிறோம். அதனால் இன்று தரும் அவியையும் ஏற்பீர்களாக.—(எ-று.) 'தாமுறவின்றளிப்பதுந் தாங்கவே' என்றது வடமொழி மூலத்தில்லை. அந்வயத்தாற் கொண்டது. சரரிது, கூதிர்காலம், பெரும்பொழுதாறனுள் ஒன்று. கூதிர்காலமென்று இலக்கணையால் வருஷத்தைச் சுட்டிக்காட்டினார்.

7. பூச்சியோத்தம பூதர் மருதர்காள்!
ஆச்சியத்தோடெவன் றரு மன்னத்தை
யேச்சறவெடுத் தேற்றுப் பிறங்குவீர்
வாய்ச்ச நன்னிதி மர்த்திய னன்னனே.

(இ-ள்.) நன்றாக வணங்கற் குரியவர்களாகிய மருத்துக்களே! எவனுடைய அவியன்னத்தை நீங்கள் ஏற்பீர்களோ அவன் சோபனதனத்தோடு கூடிய மனிதனும்.—(எ-று.) மர்த்தியன், மரணதர்மம் வாய்ந்தவன், மனிதன் என்றபடி. வாய்ச்ச, போலி: நன்னிதிவாய்ச்ச மர்த்தியனென்க.

8. உண்மை நல்வலி யுற்ற நரர்களே!
திண்மை யாகத் துதித்து வியர்க்குமெய்
யொண்மையோ டுமையுற்று விரும்புவோற்
கெண்மை சார விருத்துக விச்சையே.

(இ-ள்.) உண்மையான நல்வலிமையோடு கூடிய நரர்களே! (நேதாக்களாகிய மருத்துக்களே!) உம்மை நன்றாகத்துதித்து அத்துதியின் சிரமத்தினால் வியர்க்கின்ற சரீரத்தோடு உம்மையடைந்து விரும்பும் ஸ்தோதாவுக்கு அவனுடைய ஆசைகள் எளிதாகக் கிடைக்கும்படி செய்வீர்களாக.—(எ-று.) விதஎன்று வடமொழி மூலத்திருப்பினும் லம்பயத, ப்ரயச்சதவெனப் பொருள் கூறுவார் சாயணர்.

9. சத்தியப் பலஞ் சார்ந்தவர்கா ளும
துத்தமப் புக ழோங்கு மகிமையைப்
பெற்றொளிருக; மின்னிற் பிறங்கிடு
மற்றதனு லாக்கரை வாட்டவே.

(இ-ள்.) உண்மையான (பிறராற்கடக்கமுடியாத) பலத்தோடு கூடியவர்களே (மருத்துக்களே!) உம்முடைய உத்தம

மான மாகாத்மியத்தோடு பிரகாசிப்பீர்களாக. மின்னலைப்போற் பிரகாசிக்கும் அம்மகிமையினால் (எங்களுக்குத் துன்பத்தைத் தரும்) ராக்ஷஸர்களை வாட்டுவீர்களாக.—(எ-று.) மற்று, அசை.

10. குகையிருளைக் குலைத்து மடித்திட;
வகையின் யாவையு முண்டு மகிழ்ந்திடுந்
தகையில் வெய்யனைச் சாடி விரட்டுக;
தகையிற் சார்த்துக யாம்விழை சோதியே.

(இ-ள்.) (மருத்துக்களே!) குகையில் வசிக்கும் இருட்டினை யெங்கள் கண்ணெதிரிற்படாதபடி நாசப்படுத்துவீர்களாக. எல்லாப் பொருள்களையு முண்டுமகிழும் ராக்ஷஸர்களை யடித்தோட்டுவீர்களாக. யாங்கள் விரும்புமொளியைத் தருவீர்களாக.—(எ-று.)சரீராந்தத்தில் எமது மனக்குகையிற் புகுமஞ்ஞானமாகிய விருட்டையோட்டிப், புருஷார்த்தத்தை யாங்கள் அடையாதபடி யுண்டொழிக்கும் காமக்குரோதாதி ராக்ஷஸர்களைத் துரத்திப், பரத்துவ ஸாட்சாத்காரமாகிய ஜோதியைத்தருவீர்களாகவென்பது தொனிக்கும் பொருளாம்.

வருக்கம் 12.

## 87. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 3.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச் சந்தம்: ஜகதி. தேவதை: மருத்துக்கள்.

(வேறு.)

1. வயிரிகளை மடிப்பவர்கள் வலிமிகுந்தோர்
பல்லார வார வெற்றித்
தயிரியசா லிகள், சிறந்தோர், போற்றுறுவோர்
கணமுற்றோர், சாரும் யாகத்
தியலுறும்பூ ஜோத்தமரா நரோத்தமர்க
டம்முடலி னியலுங் கோலம்
பயிலணியி னபந்தோன் றுஞ், சூரியன்றன்
சிலகதிரிற் பரந்தார் மன்றே.

(இ-ள்.) சத்துருக்களைக் கொல்வோரும், மிக்க வலிமையோடு கூடியவரும், பலஜயகோஷங்களைச் செய்யும் தயிரியசாலிகளும், ஸர்வோத்கிருஷ்டரும், மூன்றும் ஸவனத்தில் ஸ்துதி பெறுபவரும், நரோத்தமர்களும் (உத்தமநேதாக்களும்,) ஆகிய மருத்துக்கள் தங்களது சரீரங்களிற் கட்டப்பெற்ற அழகு பொருந்திய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களாய் ஆகாயத்தினிடத்தே சூரியனுடைய சில கிரணங்கள் காணப்படுவதுபோலக் காணப்படுகிறார்கள்.—(எ-று.) மருத்துக்கள் முதலில் சிலரோ ஒன்றிரண்டு சூரிய கிரணங்களைப்போலக் காணப்படுகிறார்கள் என்று பொருள் விரிப்பர் மோட்சமூலர் **(Maxmuller).**

2. மாருதர்கா ணபமதனிற் கருவுயிர்க்கும்
 வகைமுகிலே வயானம் போல
ஏருறவே விரைந்தடுக்கு மக்காலஞ்
 சிலவானும் மெழில்சார் தேரிற்
றுரைகளை யுதிர்த்திடுவ வாதலினு
 னுமைப்போற்றுஞ் சால்புள் ளோனுக்
காருமழை நீரதனைத் தேறலெனத்
 தெளிந்ததனை யமைப்பீ ரன்றே.

(இ-ள்.) மருத்துக்களே! ஆகாயத்து மேகங்கள் தாங்கொண்ட நீரைக்கொட்டும் வண்ணம், பட்சிகளைப்போல விரைவாக அவற்றின்கண் விரைந்தடுக்கும்போது சிலமேகங்கள் உமது தேரின்மேல் மழைத்தாரைகளைப் பெய்யும். அதனுல் உம்மை ஸ்தோத்திரஞ் செய்யும் யஜமானனுக்கு (ஸாரபுஷ்டியுள்ள) மழை நீர் மதுவைப்போல ஸ்வச்சமானதைத் தருவீர்கள்.—(எ-று.) கருவுயிர்த்தல் ஈண்டுதாங்கொண்ட நீரைக் கொட்டுதலைக் குறித்து நின்றது. வடமொழியிலுள்ள க்ருதம் என்னும் சப்தத்துக்கு விருஷ்டியுதகம் அல்லது மழை நீரென்பார் சாயணர். ஏன்? அந்நீர் நெய்யைப்போல ஸாரபுஷ்டியோடு கூடியதன் நிமித்தமென்க. வயானம், பறவை. வான், மேகம்.

3. நன்மைசெய மாருதர்க டந்தேரில்
 மான்பரியை நலக்கப் பூட்டித்
தின்மையற மலையசையக் கடவும்போ
 தவனி, பதி சிதைந்த மாதின்,
வன்மையறத் துளங்குறுமால்; விளையாட்டி
 னெழுகுமவர் வாள்கூர் கையிற்

## மண்டலம் 1. சூக்தம் 87.

கன்னடுங்குஞ் செயலாளர் தம்மாற்ற
விணைக்காட்டிக் களிகொள் வாரே.

(இ-ள்.) மருத்துக்கள் (மழைதருவதாகிய) சுபகாரியத்துக்காகத் தமது தேரில் மானகிய குதிரையைப் பூட்டித், தீமையானது நீங்கும் வண்ணம் மலைகணடுங்கும் விதமாகத் தமது தேரை யோட்டிக்கொண்டு போகும்போது பூமியானது, கணவனை யிழந்தவள் (அரசனுடைய உபத்திரவம் முதலியவற்றிற்குப்) பயப்படுவதுபோலப், பலமற்று நடுக்கங்கொள்ளும். கிரீடாசீலர்களும் சலனஸ்வபாவ முள்ளவர்களும், ஆயுதத்தோடு விளங்குபவர்களும், மலை நடுங்கும்படியான செய்கையோடு கூடியவர்களும், ஆன மருத்துக்கள் தமது வல்லமையைப் பிரகடனஞ் செய்து ஸந்தோஷிப்பார்கள்.—(எ-று.) வாள் ஈண்டு பொதுவாக ஆயுதத்தைக்குறித்தது. கல், மலை.

4. சுயசலன முள்ளவர்கள், வெண்புள்ளி
 மான்பரியோர், தோய்ந்த வன்மை
நயமுளவர், கட்டிளமை வாய்ந்தவர்கள்,
 சத்தியர்க ளுடுஞ் செல்வ
மயமளிப்போர், நிந்தையிலார், மழைபினையப்போ
 ரின்கூட்ட மகிகள் யாவும்
வயமாக்கு மீசானர் யாம்புரியு
 மறைக்கரும மதித்துக் காக்க.

(இ-ள்.) பிறராற்றூண்டப்படாமல் தாமே சலிப்பவர்களும், வெண்மையான புள்ளிகளோடு கூடிய மானைக் குதிரையாகவுடையவர்களும், அஸாதாரணமான பலத்தோடு கூடியவர்களும், எப்பொழுதும் இளமைவாய்ந்தவர்களும், ஸத்தியர்கள் விரும்பும் பலதனத்தையும் தருபவர்களும், பழிப்பில்லாதவர்களும், மழையைக் கூட்டுவிப்பவர்களுமான மருத்துக்கூட்டத்தார், எல்லாப்புவனங்களுக்கும் ஈசானர்கள், யாங்கள் செய்யும் மந்திரங்களோடு கூடிய கன்மத்தைக் காக்கட்டும்.—(எ-று.) மகி, பூமி. கூட்டத்தாராகிய ஈசானரென்க.

5. எம்பிதா வழிமுன்னே ருபதேசத்
 துறுமொழியை யியம்பு கின்றோம் ;
இம்பரெங் நாத்துதிக்குஞ் சோமங்கண்(டு) ;
 எக்கியப்பே ரேய்ந்தா ரன்னார்

**அஷ்டகம் 1. அத்தியாயம் 6.**

நம்பிரா னிந்திரனு மகிழுமுதலோர்
தமைவதைக்க நாடு மன்று,
தம்பிரான் றுதிகூறித் துணைநின்றே
யவனருகிற் றழைத்த போதே.

(இ-ள்.) எமது பிதாவாகிய ரஹூகணன் வழியில் வந்தமுன்னோர்கள் சொல்லப் பாரம்பரியமாகக்கேட்ட விருத்தாந்தத்தை யாங்கள் சொல்லுகின்றோம். ஸோமத்தைப் பிழியுங்கர்மத்தில் ஸோமத்தைக் கண்டவுடனே எங்களது நாக்கு ஸ்தோத்திரங்களைக் கூறுநிற்கும். (நம்பிரானாகிய) இந்திரன் விருத்திரன் முதலியோரை வதைக்க விரும்பிய வக்காலத்தில் (பிரஹர பகவோ ஜஹிவீரயஸ்வ முதலிய) துதிகளைக்கூறி அவனுக்குத் துணையாக நின்று அவனது பக்கத்தில் நிறைந்தபோதுதான், யாகத்துக்குரிய பேர்களாகிய, ஈதிருக், அந்யாதிருக், தாதிருக், பிரதிதிருக், மிதஃ, ஸம்மிதஃ, ஸபரா என்னும் நாமங்களைப் பெற்றனர்.—(எ-று.) இவ்வேழு பெயர்களும் தைத்திரீயஸம்ஹிதை 4-6-5 துள்ளன. இவற்றை மண். 1, சூக். 72, செய். 3-ன் உரையிற் பிழைபடக் காட்டியுள்ளது.

6. பானுகிர ணங்களொடு மவருதக
முயிர்போற்றப் பரிந்தொ ழுக்கித்,
தேனொழுகுந் துதியோடு மிருத்துவிக
ரளியவியைச் சிறக்க வுண்டு,
ஞானமொழி யொடுகூடி விரைகதியோர்,
பயமில்லோர், நாடுந் தங்க
வீனமிலா மருத்துவநல் லுயர்பதத்தை
பிறையதனி னெய்தி னாரே.

(இ-ள்.) சூரியகிரணங்களோடும் அவர் (மருத்துக்கள்) மழைநீரைப் பிராணிகளை வளர்க்க விரும்பிப்பெய்வித்து, நல்லஸ்துதி வசனங்களோடு ரித்விஜர்கள் தரும் அவியுணவைச் சாப்பிட்டு ஞானமொழிகளோடு கூடி, வேகமான கதியுள்ளவர்களாயும், பயமற்றவர்களாயும், தம்முடைய உத்கிருஷ்டமான மருத்துக்கள் என்னும் பதவியை விரைவாக அடைந்தனர்.—(எ-று.) தாம் பெற்ற மருத்துவபதவியை நிலைநிறுத்திக்கொண்டனரென்பார் மோட்சமூலர். இப்பதவி இவருக்கு வந்தவகையை மண். 1, சூக். 72, செய் 3ற் பார்க்க.

வருக்கம் 13.

## 88. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 4.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷைி கோதமன். வடமொழிச்சந்தம்: 1-ம் 6-ம் பிரஸ்தார பங்க்தி, (ஜகதிபோல் முற்பாதியும் காயத்திரிபோலப் பிற்பாதியும்) 2—4 த்ருஷ்டுப், 5 விராட் ரூபா (அறுசீர்க்கழி நெடில்). தேவதை: மருத்துக்கள்.

1. மின்னலொடு பொருந்தியுள, நல்லருக்கம்
வாய்ந்துள்ள, விளங்குத் தூண,
மன்னசுவச் சிறகுடைய தேர்களின்மேல்
மருத்துக்காள் வருக பெய்வான்;
துன்னுமாயை துறைந்தவர் காளெமக்
கன்ன வோக்கத்திற், புள்ளி, னணைகவே.

(இ-ள்.) மருத்துக்களே! மின்னொளியோடு கூடியவையும், நல்லதுதி வாய்ந்தவையும், தூண்களோடு கூடியவையும், பறக்கும் சிறகுகளோடு கூடியவையுமான உங்கள் தேர்களின்மீது ஆரோகணித்து (மழை பெய்யுமாறு) வருவீர்களாக. நல்லகர்ம ஞானம் நிறைந்தவர்களே! எமக்கு வேண்டிய மிகுந்த உணவுப் பொருள்களோடு, பட்சியைப்போல, வேகமாக வருவீர்களாக. —(எ-று.) ஈண்டு சாயணர் மருத்துக்களுக்குச் சப்தார்த்தம் கூறுகிறார். (1) மிதம் நிர்மிதம், அந்தரிட்சம், ருவந்தி சப்தம் குர்வந்தி, அதாவது நிருமிக்கப்பட்ட அந்தரிட்சத்தை யடைந்து அங்கே சப்தம் செய்பவர்கள்: (2) அல்லது (மிதம் ஸ்வைர் நிர்மிதம் மேக (gh)ம் ப்ராப்ய வித்புதாத்மகாரோச்சமாந:) அந்தரத்தில்நிருமிக்கப்பட்ட மேகத்தை யடைந்து அங்கே மின்னலாகப் பிரகாசிப்பவர்கள். (3) அல்லது (மஹத்யந்தரிட்சே த்ரவந்தி) பெரிய அந்தரிட்சத்தில் செல்லுபவர்கள். (4) எத்தேவ கணங்கள் மத்திமஸ்தானத்தில் காசிபன் புத்திரர் 7 கணங்களாகச் சேர்ந்த 49 பேர்கள் என்று சொல்லப் படுவார்களோ அவர்களாம்.

"தக்கன்கனி வயிற்றுதித்தா ரைம்பதின்மர்
தடங்கொங்கைத் தைய லாருள்
தொக்கபதின் மூவரையக் காசிபனும்
புணர்ந்தான்; அத் தோகை மாருள்

மிக்கவதி திப்பெயராண் முப்பத்து
முக்கோடி விண்ணோ ரீந்தாள்;
மைக்கருங்கட் டிதியென்பா ளதினிரட்டி
யசுரர்தமை வயிறு வாய்த்தாள்.''

என்னும் பாட்டு கருதத்தக்கது. (கம்பராமா-சடாயுகாண் படலம் செய். 25.)

(வேறு.)

2. செம்மை பிங்கல மிரண்டுஞ் செறிந்த மாப்புனைந்த தேரில்,
இம்மையிற் றுதிமுழக்கு மெக்கியன் சுபத்தை யேய,
அம்மையே வருவார்; தங்க மன்ன சித்திரன் குலிசஞ்
செம்மிய கையன்; தேர்க்கால் செறிசுவட் டலைத்தார் பூவை.

(இ-ள்.) இவ்வுலகத்து ஸ்தோத்திரஞ் செய்யும் யாகவான் நன்மையை யடையும் வண்ணம், சிவப்புப்பிங்கலம் இரண்டுங் கலந்த வர்ணமுள்ள குதிரைகளைக் கட்டிய தேரின்மேலேறிக் கொண்டு மருத்துக்கள் வருவார்கள். வச்சிராயுதத்தைக் கையிலேந்தியவன் காந்தியோடு கூடிய ஸவர்ணம்போலப் பார்ப்பதற் கழகிய ஒளிபொருந்தும் தோற்றத்தையுடையவன். அம்மருத்துக்கள் தங்களுடைய தேர்க்காற் சுவடுகளால் பூமியை வருத்தினார்கள்.—(எ-று.) குலிசஞ் செம்மிய கையனென்றது இந்திரனை யென்பார் மேனாட்டாசிரியர். ஆனால் ஸ்வதி (Dh) தி: என்பதற்கு வச்சிராயுதம் என்று பொருள் கூறிப், பின்னர் அது சத்துருக்களைக் கண்டிக்கு மாயுதத்தைக் குறிக்குமெனக் கொண்டு அத்தகைய ஆயுதத்தோடு கூடிய மருத்துக் கூட்டம் ஸ்வர்ணத்தைப்போற் பார்ப்பதற்கழகாக விருக்கும் என அவ்வொருமை வினைக்கேற்பப் பொருண்முடிபு கூறுவார் சாயணர். எப்படியேனும் கொள்ளுக.

3. மருதர்காள் செல்வ முன்னி யாயுத மருவு மும்மெய்;
தருநிறை வனத்தைப் போலத் தம்மக முயரு மாறு
நிறுவினர்; நற்றோற்றத்தீர் நலம்பெறு சோமங் கூட்டப்
பெருகுறு தன மகத்தோர் பிறக்கினர் கல்லைத் தானே.

(இ-ள்.) மருத்துக்களே! உங்களது சரீரத்தில் ஆயுதமானது செல்வந் தருவதற்காகப் பொருந்தியுள்ளது. அம்மருத்துக்கள் விருட்சங்கள் நிறைந்த வனத்தைப்போல யஜ

மானர்களைக்கொண்டு யாகத்தை யோங்குவிக்கிறார்கள். நல்ல பிறப்போடு கூடியவர்களே! (மருத்துக்களே!) உங்களுக்கு ஸோமாபிஷவஞ் செய்வதற்காகச் செல்லவான்களாகிய யக்ஞ கர்த்தாக்கள் சோமம்பிழியுங்கல்லை விளங்கவிட்டார்கள் (அதாவது ஸோமம் பிழிகிறார்கள்).—(எ-று.)

4. நீர்விரும் பும்மைச் சூழ நெடும்பகல், உதகம் வாய்ந்த,
ஏர்பெற வளைந்து நீரை யியைந்திடுங் கருமஞ் செய்த;
பேர்பெறு மவ்வருக்கப் பிரமத்தைக் கோதமர்கள்
சீர்பெறச் செய்து தாகந் தீர்கிண றெடுத்தார் மேக்கே.

(இ-ள்.) [தாகத்தோடிருந்த கோதமர்களால் துதிக்கப்பட்ட மருத்துக்கள் அக் கோதமருக்காகத் தேசாந்தரத்திலிருந்த கூபத்தை மேலே தூக்கிக் கொண்டுவந் தளித்தார்கள். அதைக் கண்ட ரிஷி சொல்லுகிறான்.] (கோதமர்களே!) தண்ணீர் விருப்பமுள்ள உம்மைச் சூழ்ந்து எப்போதும் ஜலஸம்ருத்தியுள்ள பகல்கள் வந்து தண்ணீரைத்தரும் அக்கினிஷ்டோமாதி கர்மத்தைச்செய்தன. பெயர்பெற்ற இவ்வர்க்கங்களோடு கூடிய பிரஹ்மத்தை (அவியுணவை)க் கோதமர்கள் தந்து தாகத்தைத் தீர்க்குங் கூபத் தண்ணீரை மேலே தூக்கினார்கள். —(எ-று.) முதலிரண்டடிகளால் கோதமரது பகல்கள் ஜலத்தைத் தரும் மந்திரங்களோடு கூடிய கர்மங்களைச்செய்து கழிந்தன வென்று கூறிப், பின்னர் அம்மந்திரத்தோடு கூடிய யக்ஞமே ஜலத்தைத் தந்தனவெனச் சிறப்பித்தார். வார்க்காரியமென்பது மழைபெய்யச்செய்யும் கர்மமென்றும் அக் கர்மஞ்செய்யின் மழைபெய்யு மென்றும் கூறுவர்.

5. தீதில் பொன்னுருளின்மீது விவிதமாச் செறிந் தயக்கொம்
பேதிசார் வராக மென்ன வுமையவ னெதிர்ந்த போது
கோதம னுமக்காப் பாடிக் குயிற்றிய விதனைப் போல
யாதொரு மறையு முன்னர் யாருமே யறிந்தி லாரே.

(இ-ள்.) குற்றமற்ற பொற்சக்கரத்தின்மீது, இரும்பைப்போன்ற தந்தமாகிய வாயுதத்தோடு கூடிய காட்டுப்பன்றிகளைப்போல நீங்கள் பலவிதமாக வந்து கோதமனுக்கெதிரில் தோன்றியபோது, அக்கோதமன் உங்களைத்துதித்த இம்மறையைப்போலச் சிறந்தது வேறொன்றுமில்லை.—(எ-று.) ஏதி, ஆயுதப்பொது, கொம்பாகிய வேதியென்க.

(வேறு.)

6. இத்துதிகள் உங்களையே மாருதர்காள்
உங்கணம்போ லேற்றத்திற்பின்
பற்றுவன; தனித்தனியே துதிப்பவர்தம்
வாணியும் பண் பரந்துரைத்தாள்
சற்றுமே களைப் பின்றிச், சமைத்தவூண்
முற்று மெங்கர மொய்ப்பித்த போதினே.

(இ-ள்.) மருத்துக்களே! இந்த எங்களது துதிகள், உங்களது கூட்டத்துக் கொத்தவை உங்களைப் பின்பற்றிச் செல்லுகின்றன. நீங்கள் எங்கள் கைகளில் அன்னத்தை யமைத்தபோது ரித்விஜர்களது வாக்கும் பண்ணோடு அநாயாஸமாக உங்களைத் துதித்துக் கூறிற்று.—(எ-று.)

## 89. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 5.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷடி கோதமன். வடமொழிச்சந்தம்: 1-5, 7 ஜகதி, 6 விராட்ஸ்தானம் (அறுசீர்க்கழி நெடில்) 8-10 த்ருஷ்டுப். தேவதை: விச்வதேவர்கள்.

1. பயன்றருகல் யாணகுண மாமகங்கள்,
அசுரர்களாற் பாடில்லாத,
இயன்றபகை யெதிர்க்கரிய, எதிர்த்தாரை
வெற்றிகொளு மிவை, பஃறிக்கும்
பயின்றெமிடத் தோங்குகவால், தினந்தோறுந்
தேவர்களெப் பலனு மீவோர்
குயின்றெமது காவலரா யெந்நாளு
மெஞ்சதனங் கூடு மாறே.

(இ-ள்.) தினந்தோறும் எல்லாப்பயன்களையும் தரும் (விச்வ) தேவர்கள் எங்களுடைய ரட்சகர்களாய் எப்பொழுது மெமது யக்ஞச்கிரகத்துக்கு வரும் வண்ணம், அசுரர்களால் உபத்திரவிக்க முடியாதவையும், சத்துருக்களாற் றடுக்கமுடியாதவையும், பகைவரை ஜயிப்பவையும், தக்க பலன்களைத்தரும் கல்யாண குணங்களோடு கூடியவையுமான (அக்கினிஷ்டோமாதி) யாகங்கள் எல்லாத் திக்கிலிருந்தும் வந்து அவ்விடத்து வளர்ந்தோங்கட்டும்.—(எ-று.) விச்வதேவர்களென அதிகாரத்தாற் கொள்க.

2. சுபம்புரியுந் தேவர்களி னனுக்கிரக
மதியெம்பாற் றோய்க ; நேர்மைத்
தபம்புரியவ் யஜமானர்க் களிதேவக்
கொடைகளெமைச் சார்க ; என்றும்
நிபம்பெறயா மத்தேவர் நட்பளிக்குங்
கருமமதை நேடிக் கொள்க ;
வபுவதனிற் சீவன்மிக வோங்கிடவே
தேவர்களும் வளர்க்க வின்றே.

(இ-ள்.) சுபத்தைச் செய்யும் (விச்வ) தேவர்களி னநுக்கிரக புத்தி யெம்மிடத்துப் பொருந்துக. ஸத்தியமும் தபோ வனுஷ்டானங்களுமுள்ள யக்ஞகர்த்தாக்களுக்குத் தரும் தேவக் கொடைகள் எப்பொழுதும் எங்களைச் சார்ந்து நிற்கட்டும். பிறர்க்குச் சுட்டாக நிற்கும் வண்ணம் யாங்கள் அத்தேவர் களது சிநேகத்தைத் தருங் கருமத்தைத் தேடி யடைவோமாக. எமது சரீரத்தில் ஆத்மாவோங்கிச் சீவிக்குமாறு தேவர்கள் எங்களாயுளை விருத்திசெய்வார்களாக.—(எ-று.) வபு, உடல்.

3. பகனோடு மித்திரனை யதிதியினைத்
தட்சனையும் பகர்ம ருத்துத்
தொகையோடு மரியமணன் வருணனொடு
சோமனையுஞ் சோடா வெண்ணும்
வகைத்தேவ ரசுவினிக டங்களையும்
பழமறையால் வருக வென்பாம் ;
சுகமீக சோபனநன் னிதியியைந்த
சரச்சுவதி தோய்கதெ மக்கே.

(இ-ள்.) பகன், மித்திரன், அதிதி, தக்ஷன், மருத்துக் கூட்டங்கள், அரியமணன் அல்லது அரியமான், வருணன், ஸோமன், இரட்டைத்தேவர்களாகிய அச்வினிகள் ஆகிய வெல்லாத்தேவர்களையும் பிராசீநமான மந்திரங்களாற் கூவி யழைப்போம். சோபனத்தோடு கூடியவளான ஸரஸ்வதி எங் களுக்குச் சுகத்தையளிக்கட்டும்.—(எ-று.) பகன் துவாதச ஆதித்தியர்களிற் சிறந்தவன். மித்திரன் (ப்ரமீதேஸ்த்ராயகம்) உண்மையறிவைப் பாதுகாப்பவன் ; பகலபிமானி தேவதை. அதிதி (அகண்டநீயாம் அதீனம் வா தேவமாதரம்) பூரண மானவள், கஷ்டந்தராதவள், தேவத்தாய். தட்சன் எல்லா ஜகத் தையு நிருமிப்பதிற் சமர்த்தன். பிரஜைகளுக்குப் பதி, அல்லது பிராணரூபமாய் எல்லாப்பிராணிகளுக்குள்ளும் பரந்து நிற்

கும் ஹிரண்யகர்ப்பன். 'பிராணோ வை தக்ஷ' வென்பது சுருதி (தைத்திரீ யஸம்ஹிதை 2-5-2). அஸ்ருதம், சோஷணரஹிதம், எப்போதும் ஒரு ரூபத்தோடு திரியும் மருத்துக்கூட்டமென்பார் சாயணர். அர்யமணன் மந்தேஹர் முதலிய சத்துருக்களை யடக்குவோன், சூரியன். (மந்தேஹர் சூரியனது தேரைத்தடுப்பவர்களாக வெண்ணப்படுமசுரர்கள்.) அதனாற்றான் அர்யமான் அல்லது அர்யமணன் காலை மாலை ஸந்திகளுக்கு அதிதேவதையாகக் கருதப்படுகிறான். இவனே ஸூர்யனென்று (அஸௌ வாதித்யோர்யமா) தைத்திரீய ஸம்ஹிதை (2-4-4) கூறும். வருணன், பாவகாரிகளை யவர்களது பாபங்களால் ஆவரணஞ் செய்பவன் அல்லது மூடுபவன், ராத்திரியபிமானி தேவதையென்று தைத்திரீயப் பிராஹ்மணம் (2-18-9) கூறும். ஸோமன் தன்னை இரண்டு கூறுபடுத்திப் பூமியிற் கொடி (ஸோமலதை) யாகவும், விண்ணில் சந்திரனது ஆத்மாவாகிய தேவதையாகவு முள்ளவன். அச்வினிகள் எல்லாவிடத்தும் வியாபிப்பவர்கள். இவர்கள் தியாவா பிருதிவிகள் (வானம் பூமியிரண்டும்) என்று சிலரும், அஹோ ராத்திரிகள் (பகலிரவு) என்று சிலரும், சூரிய சந்திரர்களென்று சிலரும், புண்ணியஞ் செய்யும் ராஜாக்களிருவரென்று சிலருஞ் சொல்லுவார்கள். சிலவற்றை ரஸத்தாலும் சிலவற்றை ஜோதிஸாலும் நிரப்புவோர்.

4. வாயு தர சுகமளிக்கு மம்மருந்தைப்,
  புவித்தாயு மகிழ்ந்தளிக்க,
ஏயுமெம தரும்பிதா வாம்வானு
  மேய்க்கவதை ; பிறக்குஞ்சோம
மாயுமகப் பயனதனைக் கூட்டுவிக்குங்
  கல்லிரண்டு மணைக்க லஃதைத் ;
தோயுமறி வசுவினிகா ணோய்தீர்க்கு
  மதைச்செவிக்கட் டோய்த்தி டீரே.

(இ-ள்.) சுகத்தைத்தரும் அந்த பேஷஜத்தை (மருந்தை), வாயு கொண்டுவரட்டும். பூமியாகிய தாயும் அதனைக் கொண்டுவரட்டும். எமது பிதாவாகிய வானமும் அதனைத்தாங்கட்டும். ஸோமஸூதை பிழிந்து யாகபலனாகிய சுகத்தையளிக்கும் இரண்டு கற்களும் அதனையிங்கு சேர்க்கட்டும். அறிவுமிக்க அசுவினிகளே எங்களது நோயைத் தீர்க்கவல்ல அதனை நீங்களும் கேட்டு வைப்பீர்களாக.—(எ-று.) பிதாதியௌ : என்பதே தியௌப் பிதா என்றாயிற்றென்பார் மேனாட்டாசிரியர்.

5. ஈசானன் றாவரசங் கமவுலகின்
 பதியாவான், எழில்சார் கன்ம
வாசாரத் தாற்றிருத்தி செயத்தக்கோ
 னவன்றன்னைத் துணைக்க ழைப்போம்;
தேசாரு மெம்பொன்னைப் பெருக்கிவளர்த்
 தழிவுபெறுச் சிறப்பிற் பூடன்
வேசாறி யாங்கேட்டை யடையாத
 நல்வகையே விழைந்து காக்க.

(இ-ள்.) ஈசானனும் (ஐசுவரியவானும்) தாவரசங்கம வுலகங்களுக்குப் பதியும், அழகிய கன்மத்தாற் றிருப்திப் படுத்தத் தக்கவனுமாகிய வவனை (இந்திரனையென்பார் சாயணர்) நமக்குக் காவலாக வழைப்போம். எமது தனமெல்லாம் வளரும்படி காத்து ஒருவராலும் அழிக்கமுடியாத அல்லது இம்சிக்க முடியாத சிறப்போடு கூடிய பூஷன் யாங்கள் துக்கத்தையும் கேட்டையும் அடையாதபடி யெங்களைக் காப்பானாக.—(எ-று.) பூஷன், பூடன், சூரியாபிமானி தேவதை, செல்வமளிப்பவன்.

வருக்கம் 15.

(வேறு.)

6. அழிவிலாத் தன்மை யெங்கட் களிக்க மீத்துதியேய் வேந்தன்
அழிவிலாத் தன்மை யெங்கட் களிக்க வெப்பொருள் சார்பூடன்
அழிவிலாத் தன்மை யெங்கட் களிக்க வாரழியாத் தார்க்யன்;
அழிவிலாத் தன்மை யெங்கட் களிக்க மாமறைக் கர்த்தாவே.

(இ-ள்.) மிகுந்த துதியைப் பொருந்திய இந்திரன் எங்களுக்கு அழிவின்மையைத்தரட்டும். எல்லாப் பொருள்களையுமடைந்துள்ள பூஷன் எங்களுக்கு அழிவின்மையைத்தரட்டும். அழியாத தேர்ச்சக்கரக்கட்டைக் கால்களையுடைய தார்க்ஷயன் (கருடன்) எங்களுக்கு அழிவின்மையைத் தரட்டும். பிரஹஸ்பதி யெங்களுக்கு அழிவின்மையைத் தரட்டும்.—(எ-று.) தார்க்ஷயன், திருட்சன் மகன், கருடன். மாமறைக்கர்த்தா வென்றது பிரஹஸ்பதியை. எப்பொருள் உம்மைத் தொகை.

(வேறு.)

7. மான்பரியோர், பிருசினித்தாய் பெற்றவர்கள்,
 சுபந்தருவோர் மருதர், யாகத்
தேன்றுறுவோ, ரக்கினியே தந்நாவா
 யடைந்தவர்க ளென்றே போலக்

கான்றவொளிக் கண்ணுடையோர் யாவுமுணர்
மதியுடையோர், காப்பான் வேண்டித்
தோன்றுகவெல் லாத்தேவர் தாமுமிவ
ணின்றெமக்குச் சுகமீ பாக்கே.

(இ-ள்.) புள்ளிமானாகிய வாஹனத்தை யுடையவரும், பிருசினி மாதாவின்மக்களும், சுபகாரகர்களும், யாகத்தை நோக்கி வருபவர்களும், அக்கினியைத் தமது நாவாகக்கொண்டவர்களும் (அல்லது அக்கினித் துவாரா ஆவிப்பொருளை யேற்பவர்களும்) சூரியனைப்போல வொளிகாலுங் கண்ணோடு கூடியவர்களும், எல்லாவற்றையு மறியும் புத்தியை யுடையவர்களுமான மருத்துக்களாகிய விச்வதேவர்கள் எங்களை யிவ்விடத்துக்காத்து எங்களுக்குச் சுகத்தை யளிக்க வரட்டும்.—(எ-று.) என்று, சூரியன்.

(வேறு.)

8. வணங்குதற் குரியீ ரெங்கள்காதுமங்களச்சொல்கேட்க;
அணங்குறு தேவர்கா ளெங்கண் ணழகமைந்த நோக்க;
இணங்குறு திடவங்கத்தி னுடலியைந் தும்மை யாங்கள்
வணங்கியே தேவனீந்த வாயுளைப் பெறுக மாதோ.

(இ-ள்.) யக்ஞத்திற் போற்றத்தக்கவர்களே! எங்களுடைய காது மங்கலமான வார்த்தைகளைக் கேட்கட்டும். பெருமைபொருந்திய தேவர்காள், எங்களது கண்கள் அழகுபொருந்திய காட்சிகளைப் பார்க்கட்டும். உறுதியமைந்த காசரணுதியவயவங்களோடு கூடிய யாங்கள் உம்மைத்துதித்துத் தேவநிர்மிதமான பூரண வாயுட்காலத்தை யடையட்டும்.—(எ-று.) தேவநிர்மிதம் பிரஹ்மாவால் ஸ்தாபிக்கப்பட்டது. பூரண வாயுளென்றது 112 அல்லது 120 வயதாம் என்பார் சாயணர். இது ஜோதிஷமதம். ஆனால் அடுத்த செய்யுளில் நூறு என்றே கூறப்படுகிறது; 'வேத நூற்பிராய நூறு' என்றார் பிறரும். பத்ரம் கர்ணே என்னும் மந்திரம்.

9. தேவர்காளெம்மெய் கெட்டுச் சரையினைச்சேர நூறு
தாவரு கூதிராகும்; தடையுறவிடையி னஃதை
யோவுறச்செய்யீர்; உன்னு முதற்கு ளெம்மகார்கடாமே
மேவுறுபிதாக்களாகு மேன்மையை யடைவாரன்றே.

(இ-ள்.) (விச்வ) தேவர்களே! எமது சரீரங் கிழத்தன்மையை யடைந்துகெட நூறு சரற்காலங்களாம் (அல்லது வருஷமாம்). நடுவில் அதனைக் குறைத்துவிடாதீர்கள். அதற்குள் எமது புத்திரரும் பிதாக்களாகிவிடுவார்கள்.—(எ-று.) புத்திரர் பிதாக்களாவார்க ளென்பதற்குத் தாங்களே குழந்தைகளைப் பெற்று விடுவார்களென்றும், தாங்கள் வயதுசென்ற எங்களைப் போஷிக்கத் தொடங்கி விடுவார்களென்றும், இருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

10. அதிதியே வானும் அந்தரிட்சமு மதிதியேயாம்;
அதிதியே தாயாம், தந்தை புத்திரன் றானுமாகும்;
அதிதியே தேவரெல்லாம், ஐவகைச் சனங்கடாமும்;
அதிதியே பிறப்பின் மூலம், அதிதியே பிறப்புமென்ப.

(இ-ள்.) அதிதியே விண்ணும். அதிதியே (விண்ணுக்கும் புவிக்குமிடையிலுள்ள) அந்தரிட்சமாம். அதிதியே தாய்; அதிதியே தந்தை; அதிதியே புத்திரனுமாம். அதிதியே விச்வதேவர்களாம். அதிதியே ஐந்துவகையான ஜனங்களாம். அதிதியே பிறப்புக்கும் காரணமாம். அதிதியே பிறப்பென்றும் சொல்லுவார்கள்.—(எ-று.) ஐவகைச் சனங்கள், கந்தர்வர், பிதிர்க்கள், தேவர்கள், அசுரர்கள், ராட்சஸர்கள் என்பவர்களாம். நான்கு வருணத்தவரும் நிஷாதருமென்றும் சொல்லலாம். தேவர், மனிதர், கந்தர்வர் அல்லது அப்ஸரஸ், ஸர்ப்பர் அல்லது நாகர், பிதிர்க்கள் என்பார் யாஸ்கர்.

வருக்கம் 16.

## 90. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 6.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ரஹூகண கோதமன். வடமொழிச்சந்தம்: காயத்திரி, 9 அநுஷ்டுப். தேவதை: விசுவ தேவர்கள்.

(வேறு.)

1. வருணன் மித்திரன் மற்றிவ ரெங்களுக்
குரிய தான முணர்ந்தனர் நேர்நெறி
மருவு வித்திட; தேவர் மகிழ்வுறும்
அரியமாவு மணைத்திட வன்னதே.

(இ-ள்.) வருணனும், மித்திரனும் எங்களுக்குத் தகுந்த உத்தமமான விடத்தை யறிந்தவர்களாய் எங்களை நேரான பாதையிற் சேர்க்கட்டும். இந்திராநி தேவர்கள் பிரீதிகொள்ளும் அரியமாவு மந்நெறியிலேயே எம்மைச் சேர்க்கட்டும்.—(எ-று.) பகலபிமானி தேவதையாகிய மித்திரனும், இரவபிமானி தேவதையாகிய அரியமாவும் எங்களுக் குரித்தான நற்பதவியை யறிந்து எங்களை யப்பதவிக்குச் செல்லும் நேர்மை நெறியிற் சேர்க்கட்டும் என்க. மித்திரன், வருணன், அரியமாவென்னும் பதப்பொருள்களை மண். 1, சூக். 89, செய். 3ன் உரையிற் காண்க.

2. செல்வ மேய்த்துச் சிறக்கு மவர்மயக்
கில்லவராய் மகத்துவத் தேசினுற்
நல்வளத்தி னெந்நாளுங் கருதியே
பல்வகைய விரதமும் பாலிப்பார்.

(இ-ள்.) செல்வத்தையளித்துச் சிறப்புப்பெறு மவ் விசுவ தேவர்கள் மயக்கமில்லாதவராய் அல்லது நல்ல ஞானத்தோடு கூடியவர்களாய்த் தங்களுடைய மகத்துவம்பொருந்திய தேஜஸினுல் எல்லாநாட்களிலும் விரதங்களைக் காப்பார்கள்.—(எ-று.) விரதம் என்றதற்கு ஜகநிர்வாஹக ரூபமாயுள்ள தங்கள் தங்கள் கர்மங்களென்று உரை கூறுவார் சாயணர்.

3. பகைவர் தங்களை நாசப்படுத்துவோர்
தகைமை சாரு மமரர் மரணத்தின்
வகைபொருந்திய மர்த்தியரா மெமக்
கிகவயிற் சுக மீத்துச் சிறக்கவே.

(இ-ள்.) பகைவர்களை நாசப் படுத்துவோர்களும் அமிருதத் தன்மை வாய்ந்தவர்களுமாகிய விச்வதேவர்கள் மரண தர்மம் பொருந்திய (அநுஷ்டாதாக்களாகிய) எங்களுக்கு இவ் வுலகத்துச் சுகத்தைத் தரட்டும்.—(எ-று.)

4. வந்தனீயராம் பூடன் மருதரு
மிந்திரனும் பகனு மெம்பாதையை
நந்து தீமை நெறியிற் பிரிக்க, யா
முந்து மாறு துறக்கப் பலனையே.

## மண்டலம் 1. சூக்தம் 90.

(இ-ள்.) வந்திக்கத்தக்கவர்களாகிய பூஷன், மருத்துக்கள், இந்திரன், பகன் என்னுமிவர்கள், யாங்கள் ஸ்வர்க்காதி பலன்களையடையுமாறு, எங்களது பாதைகளைத் தீமைசெறிந்த வழிகளினின்றும் விலக்கிக் காக்க.—(எ-று.)

5. மன்னும் போஷக வாவுறு விண்டுவே!
இன்னு மிவ்வழி யேகு மருதரே!
துன்னுவிப்பீர் பசுவெந் தொழிலகத்(து);
உன்னு மார்க்கத்தை யூட்டுக வெங்கட்கே.

(இ-ள்.) பூஷனே! (போஷக தேவதையே!) வியாபிக்கும் தன்மைபொருந்திய விஷ்ணுவே! இன்னும் அவ்வழியில்வரும் (மருத்துக்களே!) எமது (ஆப்தோர்யாமமென்னும்) கர்மத்திற் பசுக் கூட்டங்களைச் சேர்ப்பீர்களாக. எங்களுக்கு வாழ்வை யளிப்பீர்களாக.—(எ-று.) ஆப்தோர்யாமமென்றது ஸோம யக்ஞங்கள் ஏழனுள் ஒன்று. இவ்யக்ஞத்தைச் செய்பவர் பசுப் பெறுவர் என்பது வேதத் துணிபு.

### வருக்கம் 17.

6. ஒழுங்கின் யாக முஞற்று மவனுக்கு
வழங்கு சிந்துவும் வாயுக்களு மிவண்
வழங்க வின்ப மதுவினை; ஓடதி
வழங் கினிப்பினின் வைக வெமக்குமே.

(இ-ள்.) ஒழுங்காக யாகஞ் செய்வோனுக்கு ஸிந்துக்களும் (நதி அல்லது ஸமுத்திர அபிமான தேவதைகளும்) வாயுக்களும் இன்ப மதுவாகிய கர்ம பலத்தை யளிக்கட்டும். ஓஷதிகள் எங்களுக்கு மாதுரியத்தைத் தந்து சிறக்கட்டும்.—(எ-று.)

7. மதுவணைந் தெமக் கேய்க நிசியுமே;
மதுவணைந் தெமக் கேய்க பகல்களும்;
மதுவணைந் தெமக் கேய்க புவியுலகு;
மதுவணைந் தெமக் கேய்க விட்டந்தையே.

(இ-ள்.) எங்களுக்கு இரவு மாதுரிய பலதாதாவா யிருக்கட்டும். பகற் காலங்களும் எங்களுக்கு இனிய பலன்களைத் தரட்டும். பூவுலகமும் எங்களுக்கு மாதுரியமான விசேஷ பலன்களை யளிப்பதா யிருக்கட்டும். விண்ணுகிய பிதாவும் எங்களுக்கு மதுரம் வாய்ந்தவனு யிருக்கட்டும்.—(எ-று.) மூலத்திலுள்ள

உஷஸ் என்னும் பொருள் இலக்கணையாற் கொண்டது. பார்த்தி வம் ரஜம் (Terrestrial Atmosphere) என்பதற்குப் புவியுல கென்றது 'லோகா ரஜாம்ஸ்யுச்யந்த' என்ற யாஸ்கர் வசனத்தை யாதாரமாகக்கொண்டு. விண்ணாகிய தந்தை, விட்டந்தை; விருஷ் டியை முக்கியமாகக் கொண்டு எல்லாவற்றையும் பரிபாலிப் பதால் (த்யௌ,) வானம் பிதா வெனப்பெற்றது.

8. மது வமைந்தவ ளுக வனப்பதி;
மது வமைந்தவ ளுக நபப்பதி;
மது வமைந்த பயத்தோ டெமக்கென
மது வமைந்தன வாக பசுக்களே.

(இ-ள்.) யூபாபிமானி தேவதையாய் வனத்தைக் காக்கும் வனஸ்பதி யெங்களுக்கு இனிமைபொருந்தியவனுயிருக்கட்டும். நபப்பதியாகிய சூரியனும் இனிமை பொருந்தியவனுயிருக்கட் டும். இனிமை வாய்ந்த பாலோடுபசுக்களும் எங்களுக்கு இனிமை செய்வனவா யிருக்கட்டும்.—(எ-று.) நபம், ஆகாயம். பயம், பயஸ், பால்.

(வேறு.)

9. எமக்கு மித்திரன் சுகந்தர; வருணனுஞ் சுகத்தை
யெமக் களித்திட; அரியமாச் சுகத்தினை யியைக்க;
யெமக்கரி விருகற்பதி யிடரினை விலக்க;
எமக்கு நற்சுகம் போடி விண்டுவுங் கொடுக்க.

(இ-ள்.) மித்திரன் எமக்குச் சுகத்தை யளிக்கட்டும். வருணன் எங்களுக்குச் சுகத்தைத் தரட்டும். அரியமா வெங்க ளுக்குச் சுகத்தையீயட்டும். அரி (இந்திரன்), பிரஹஸ்பதி இவர் கள் துன்பத்தை விலக்கிச் சுகத்தை வழங்கட்டும். பெரிய அடி யோடு கூடியவிஷ்ணு எங்களுக்குச் சுகத்தைக்கொடுக்கட்டும்.— (எ-று.) போடி யென்றது வாமனனுய் மூவுலகளந்த பெரு மையை முன்னிட்டு. "இங்கே விஷ்ணு திருமாலன்று; சூரி யனே, காலை, நண்பகல், பிற்பகல் என்னும் முப்பொழுதினும் வான் கடந்து செல்லு நிலையில் விஷ்ணு வென்னும் பெயரோடு பொலிகின்முன் என்று சொல்லப்பட்டிருக்கின்றது" என்பார் 'பண்டைக்காலத்தமிழரும் ஆரியரும்' என்னும் நூலினுசிரியர். விருகற்பதி, ப்ரஹஸ்பதி. மித்திரன், வருணன், அர்யமா இவர் களைப்பற்றி மண். 1, சூக். 89, செய். 3ன் உரையை நோக்குக.

வருக்கம் 18.

# 91. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 7.

ரிஷி: ஷைதி கோதமன். வடமொழிச்சந்தம்: 1-4, 18-23 திருஷ்டுப், 5-16 காயத்திரி, 17 உஷ்ணி. தேவதை: ஸோமன்.

23 இருக்குக்கள் கொண்டது.

(வேறு.)

1. சோமனே யறிவின்மிக்காய், தோயுநேர்நெறியினெம்மை
யேமுற நடத்துவாயால்; எங்கண் மூதாதை யோர்கள்
காமுறுதீரருன்றன் கருதுறு துணைகொண்(டு); இந்தோ!
தாமுறு மாதனத்தைச் சார்ந்தனர் தேவர் மாட்டே.

(இ-ள்.) ஸோமனே! நீ யறிவின் மிகுந்தவன். எம்மை நேரிய நெறியில் நடத்துவாய். இந்துவே! (ஸோமத்துளியே!) எங்கள் முன்னோராகிய தீரர்கள் உனது உதவினாலேயே தேவர்களிடத்திலிருந்து ரத்நங்களை யல்லது ரமணீய தனங்களைப் பெற்றனர்.—(எ-று.) இந்தோவென்றது வடமொழிப் போக்காகக் கூறியது. எம்மூதாதையர் பெற்றார், இப்பொழுது யாமும் பெறுகவென அவாய்நிலையாற் கொள்ளுக.

2. சோமநீமகஞ்செய்வோரிற் சொல்பெறுமகத்தோன்; மொய்ம்பி
னாமுறுவோரி னன்மொய்ம் புற்றவன்; நடை யெலாம்பெற்
றேமுறுவள்ளறம்மினெழில் பெறுவள்ளல்; மாந்தர்
காமுறுகண்ணவாய்: சீர்காண்பொருள் பொருளினெல்லாம்.

(இ-ள்.) ஸோமனே! நீ யாககர்த்தாக்களில் நல்ல யாககர்த்தா. பலத்திற் பேர்பெற்றவர்களில் சிறந்த பலவான். செல்வத்தையெல்லாம் பெற்ற தாதாக்களிற் சிறந்த வள்ளலாம். யாகஞ் செய்யும் மனிதர்களுக்குப் பலனைப் பார்க்குங் கண்ணவாய். எல்லாப்பொருள்களிலும் சிறப்புப்பொருந்திய அன்னப்பொருளாம்.—(எ-று.)

3. வந்தலே! வருண னீதி யுன்னரு நோன்பே; சோம!
வந்து முன்னெனி கம்பீரத் தேய்ந்த பேரெழிலிற்(று); அன்பு
தோய்ந்த மித்திரனிற் றூய்மை துதைந்துளாய்; சோமனே! நீ
வாய்த்ததெதனையும் வளர்ப்பா யரியமான் மானத் தேசின்.

(இ-ள்.) பிராஹ்மணர்களுக்கு ஸ்வாமியாகிய ஸோமனே! வருணன் செய்யும் யாகாதி விரதங்கள் உன் விரதங்களேயாம். உன்னுடைய காந்தியானது கம்பீரமும் மிகுந்த வழகும் வாய்ந்தது. அன்போடு கூடிய மித்திரனைப் போலப் பரிசுத்தமானவன் நீ; ஸோமனே, அர்யமாவினைப் போலத் தேஜஸோடு கூடி நீ யெல்லாவற்றையும் வளர்ப்பாய்.—(எ-று.) ஸோமன், சந்திராபிமானி தேவதை. சந்திர கிரணங்களால் பயிர் முற்றுவது உலக மறிந்த விஷயம். ஈண்டு மித்திரன், வருணன், அர்யமா, ஸோமன் நால்வரையும் ஒருமிக்க உரைத்தார்.

4. எந்தலாஞ் சோம வுன்மாட் டெய்து பேரொளி வானத்தி
லேந்துறு புவியி லெண்ணும் பருப்பத மதனி னேய்நீர்
காந்தி யோடதியி னீரிற் கலந்தன ; அவையா வோடுஞ்
சாந்தியிற் குணமனத்தி னேற்க யாந்தரும் பலியே.

(இ-ள்.) மன்னனாகிய ஸோமனே ! உன்னிடத்துத் தோன்றும் பெரிய காந்திகள் வானத்திலும், பூமியிலும், பர்வதங்களிலும், நோயைத்தீர்க்கும் ஔஷதங்களிலும், நீரிலும் கலந்தன. இவ்வெல்லாக்காந்திகளோடுங் கோபமற்றவனாய் நன்மனத்தோடுகூடியவனாய் வந்து யாங்கள் தரும் பலியை யேற்பாயாக. —(எ-று.) ஸோமனென்பதன் பொருளை, மண். 1, சூக். 80, செய். 3-ல் நோக்குக.

5. சோம நீ சற்புருடரி னற்பதி,
தாம மன்னன், விருத்திரன் றன்னை நீ
நாம மின்றி நலிப்பவன்; மங்கல
நேம கன்மமு நீயெனக் கூறுவாம்.

(இ-ள்.) ஸோமனே! நீ ஸத்புருஷர்களுக்குப்பதியாவாய், ராஜனுமாவாய். விருத்திரவதஞ் செய்பவனு நீயே. மங்கல காரியங்களும் நீயே.—(எ-று.) ஸோமங்குடித்து இந்திரன் செய்வதை ஸோமத்தின் செய்கையாகவே கூறினார். ஸோமத்தினால் யாகங்கள் நடைபெறுவதனால் ஸோமமே யாகமென்றார்.

6. சோம யா மரணத்தினைத் தோய்வுறு
தேம மாக வுலகி லிருப்பது,
காமுறு நற்றுதியிற் களித்திடும்
வாம கானப்பதி யுன் வசத்ததே.

(இ-ள்.) ஸோமனே! யாங்கள் மரணத்தை யடையாமல் இவ்வுலகத்திற் ஜீவித்திருப்பது, ஸ்தோத்திரப் பிரியனும் வனஸ்பதியுமாகிய வுன்னாலேயே.—(எ-று.)

7. வயது சென்றவன் வாலிப னாயினும்
நய விரதஞ், சோம நடத்துவோற்
குயரும் போகத்தை யூட்டுந் திறமையிற்
செயிராறும் பொன் சிறக்க வழங்குவாய்.

(இ-ள்.) ஸோமனே! யக்ஞஞ் செய்பவன் வயதுசென்றவனாயினும், வாலிபனாயினும், அவனுடைய உபயோகங்களுக்கு வேண்டிய பொன்னைச் சிறப்புப்பெறத் தருவாய்.—(எ-று.)

8. எம்வயிற் றுய ரேய்ப்பவனின்று மெப்
பம்பு திக்கும் பரந்திரட் சிக்கவே;
எம்பெரு மிறைச் சோம வுனையொத்தோர்
தந்துணையினர் தம்மை யழிக்கவே.

(இ-ள்.) எமது ராஜாவாகிய ஸோமனே! எம்மிடத்துத் துயரை விளைப்பவனிடத்திலிருந்தும் எம்மை எல்லாப்பக்கத்தினின்றும் வந்து காப்பாற்றுவாயாக. உன்னைப்போன்ற தோழர்களது துணையைப்பெற்ற புருஷரை நாசப்படுத்தாதொழிக.—(எ-று.)

9. தாசுடர்க்குச் சுகந்தரு தன்மையிற்
பேசு மத்துணை கொண்டு பிறங்கெமை
யாசிற் சோம வணைந்தவ் வுதவியி
னேசுறு தியைபின் னெமை யோம்புக.

(இ-ள்.) ஸோமனே அவியளிக்கும் யஜமானனுக்குச் சுகத்தைத்தரும் உதவிகளோடு எம்மிடத்து வந்து அவ்வுதவிகளாலெம்மைப் பாதுகாப்பாயாக.—(எ-று.)

10. யாமியற்றுமிவ் வெம்மகந் தன்னையும்
யாமியம்பு மிவ்வெம் வசனத்தையும்
சோம! வேற்றெமைத் தோய்ந்திட வண்மையின்;
ஓம வெக்கிய மோங்க வளர்க்கவே.

(இ-ள்.) ஸோமனே! யாங்கள் செய்யுமிந்த யாகத்தையும், யாங்கள் சொல்லுமிந்த ஸ்துதிவசனங்களையும், நீ யேற்றுச் சமீ

பத்தில் வருவாயாக. எங்கள் யாக கார்யங்கள் ஓங்கி வளரும் படி செய்வாயாக.—(எ-று.)

11. சோம சொல்வலி தோய்ந்தவர் யாங்களுந்
தாமஞ் சொல்விற் றயக்கி யுன தரு
நாமந்தன்னை நலக்க வுயர்த்துவோம்;
வம மீபவ வெங்கண் வருகவே.

(இ-ள்.) ஸோமனே! ஸ்துதி லட்சண வசனங்களை யறிந்த யாங்கள் ஸ்துதி லட்சண கீதங்களால் அல்லது மாலைகளால் உன்னை விருத்தி செய்வோம். சோபன ஸுகத்தைத்தரும் அத் தகைய நீ எம்மிடத்து வருவாயாக.—(எ-று.) தாமம், மாலை, ஈண்டு சொன்மாலை.

12. செல்வ மீத்துச் சிறப்பிப்பவ, அணங்
கல்ல னீக்கி யரு நிதி சேர்ப்பவ,
பல்கு செல்வத் தினைப் பருப்பிப்பவ,
நல்லுளத்து நண்பாகுக, சோமனே!

(இ-ள்.) செல்வத்தையளித்து வளர்ப்பவனும், நோய்த் துன்பத்தை நீக்கி (ஸ்தோதாக்களுக்கு)ச் செல்வத்தைத் தருப வனும், ஸம்பத்தை விருத்தி பண்ணுபவனுமான ஸோமனே! எங்களுக்கு நன்மனத்தோடு கூடிய தோழனாக விருப்பாயாக. —(எ-று.) அணங்கு, நோய்.

13. ஆக்க டட்டையை யார்ந்து களித்தலின்
நீக்கமில் தன தில்லினின் மர்த்திய
னூக்கமோடுறலின் னெம்மனத்தினிற்
றேக்கு மின்பிற் சிறந்துறல், சோமனே!

(இ-ள்.) பசுக்கள் தட்டையுணவைத்தின்று ஸந்தோஷிப் பது போலவும், ஸ்வக்கிரஹத்தில் மரண தர்மத்தோடு கூடிய மனிதன் தமது புத்திர பிருத்தியாதி செல்வங்களுடனே தங் கிச் சுகப்படுவதுபோலவும், ஸோமனே, நீ எங்களது இதயத் திற்றங்கி ரமிப்பாயாக.—(எ-று.) எங்களிடத்திலேயே யிருந்து எங்களுக்கே ஸந்தோஷ மூட்டுகவென்று, பசுவுண்டி, கிரஹ ஸுகம் என்னும் இரண்டு உவமைகளினாலுங் கூறினார். தட்டை பசுவுணவு.

14. தேவ சோம சிறந்தவுன் றோழமை
மேவு மர்த்தியன் வேண்டித் துதிப்பவன்
ருவி லன்னவன் றன்னைக், கவியெனு
மோவிலாற்றனீ யொன்றி யருளுவாய்.

(இ-ள்.) தேவனே! ஸோமனே! உனது நட்பினைப்பெற்ற மரண தர்மமுள்ள ஸ்தோதாவைக் கவியும் ஸர்வகாரிய ஸமர்த்தனுமாகிய நீ யடைந்து அநுக்கிரகிக்கிறாய்.—(எ-று.) கவி, கிராந்த தர்சி.

15. சோம வெம்வசை நீக்கிப் புரக்கவே;
தீமைப் பாவங்கள் சேரா தெமக்கென்றுஞ்
சேம மீக; சுகத்தைச் சிறப்பினீந்
தேம நண்பி னியைந்திதஞ் செய்கவே.

(இ-ள்) ஸோமனே! எமது நிந்தனைகளை நீக்கிக் காப்பாயாக. எங்களால் செய்யப்பெறும் பாபங்க ளெங்களை யடையாதபடி காத்து, எங்களுக்கு க்ஷேமத்தைத் தருவாயாக. சுகத்தை யெங்களுக்குத் தந்து எங்களோடு நட்புக் கூடி யெங்களுக்கு ஹிதஞ் செய்வாயாக.—(எ-று.)

வருக்கம் 21.

16. ஓங்க சோம! உறுக வெத்திக்கினும்
வீங்கு முன்னுடை நற்றிற வீரியம்;
தாங்கு நல்வலி யன்னந் தயங்குற
ஈங்கு நீகொணர்ந் தெங்கட் களிக்கவே.

(இ-ள்.) ஸோமனே! நீ வளருவாயாக. எல்லாப் பக்கத்திலும் உன்னுடைய வீரியமானது வந்து தங்கட்டும். வலிமையைத்தரும் அன்னத்தை யெங்கட்குக் கொண்டுவந்து தருவாயாக.—(எ-று.)

(வேறு.)

17. மத்தம் பெறு முத்தம சோம, வெலா
வுத்தம் பெறு மங்கமு மோங்குக; எஞ்
சித்தம் விழை யுத்தம கீர்த்தியினை
கித்தம் வளர் நண்பி னிலைத்துறவே.

(இ-ள்.) மதோத்தம ஸோமனே! எல்லா யுக்தமான (லதா) அங்கங்களும் ஓங்கட்டும். எமது சித்தம் விரும்பும் கீர்த்தியை (அல்லது சாயணருரைப்படி அன்னத்தை) எப்பொழுதும் வளர்க்கும் சினேகிதனாக நீ எங்களுக்கிருப்பாயாக.—(எ-று.) உத்தம், யுக்த மென்பதன் சிதைவு. லதா, கொடி.

(வேறு.)

18. பகைவரை வாட்டும் வீரம், பலத்தொடு சாரந் தோய்ந்து
வகைபெறு முண்டி, யுன்கண் மருவியே கூடி நிற்க;
தகைபெறு மமரமெம்மைச் சார்ந்திட வோங்கிச், சோம,
நகைபெறு வானிற் கீர்த்தி யுத்தம நடையிற் றுங்காய்.

(இ-ள்.) ஸோமனே சத்துருக்களைக் கொல்லும் வீரமும், பலமும் ஸாரமுந் தோய்ந்த அவிபுணவும் உன்னிடத்துக் கலந்து நிற்கட்டும். மரணமில்லாத தன்மையானது எம்மைச் சாரும்படியாக ஒளிபொருந்திய ஆகாயத்தில் நல்ல கீர்த்தியைத் தாங்குவாயாக.—(எ-று.) மேற் பாட்டு லதை ரூபமான ஸோமனையும் இப்பாட்டு சந்திர ரூபமான ஸோமனையும் துதித்ததாம். வீரம் உண்டி எண்ணும்மை தொக்கன.

19. வான்முத லிடத்துவைகுன் றேசினைச் சோம யாகம்
வான்பெறவியற்றுவோரும்வணங்குவார்; அத்தேசெந்தம்
மேன்படுமகத்தேசூழ்க;வெறுக்கைதந் தகமோட்டிக் கா
ருன்கெடாதளித்துவீரார்த்தயக்குவோன்வரவெம்மில்லே.

(இ-ள்.) ஸோமனே! வான்முதலிய விடங்களில் தங்கும் உனது தேஜஸை யாகஞ் செய்பவர்கள் வணங்குவார்கள். அந்தத் தேஜஸானது எம்முடைய உயர்ந்த யாகத்தினிடத்தும் வந்து பொருந்தட்டும். செல்வத்தையளித்து எங்கள் பாபங்களை யோட்டி எங்கள் (கால்) சந்ததி கெடாதபடி வீரர்களை (புத்திரர்களை)ப் பாதுகாப்பவனே, எமது எக்ஞத்துக்கு வருவாயாக.—(எ-று.) வடமொழியில் அவீரஹா வென்றுள்ளது. அதாவது வீரர்களைக் கொல்லாதவனே, அல்லது வீரர்களைப் பாதுகாப்பவனே என்பது பொருள். வீரர்; வீர்யோத்பன்னர், புத்திரர்.

20. அவிதரு மகத்தோற் காக்கும், அருங்கதி யசுவங், கற்று,
அவிதரு கருமத் தன்றி யிலௌகிகத் தகத்தொழிற்க
ணவியினிற் சகல கல்வி யார்வினிற் கீர்த்தி யோங்கிக்
கவலறு பிதாகேட் டின்பங்காணும்வீரனைச்சோமன்னே.

(இ-ள்.) ஸோமனானவன் அவியுணவை யளித்து யாகஞ் செய்யும் எங்கள் யஜமானனுக்கு வேகத்திற் சிறந்த குதிரையையும் கன்றோடுகூடிய கறவைப் பசுவையும், யாக கர்மத்திலும் உலக நடையிலும் வீட்டு வேலைகளிலும் அவி தரும் தர்ச பூரண மாஸாதி கர்மங்களிலும் சகல வித்யா பூரணத்திலும், புகழ் பெற்றும் பிதா கேட்டானந்திக்கும் படியான வீரன் அல்லது புத்திரனையும் தருவான்.—(எ-று.) ஸோமன், அசுவம், கற்று, வீரனை மகத்தோற்கு ஆக்கும் எனப் பொருண் முடிவு கூறுக.

வருக்கம் 22.

21. போரினிற்புறங்கொடாதாய், வெற்றியைப்பொருத்துவோய், தண்
ணீரொடு துறக்கமீவோய், திறலினைநிறுத்துவோய், நற்
பேருளமகத்தோய், இல்லநலத்தினைப்பெற்றோய், கீர்த்தி
யேருளோய், சயத்தோய், சோம, உன்னிட மதங்கொள்வாமே.

(இ-ள்.) யுத்தத்திற் சத்துருக்களாற் றுரத்த முடியாதவனும், ஜயத்தை யுண்டுபண்ணுபவனும், (மழைத்) தண்ணீரையும் ஸ்வர்க்கத்தையும் தருபவனும், வலிமையைக் காப்பவனும், கீர்த்தி பொருந்திய யாகத்தை யுடையவனும், நல்ல வீட்டினை யடைந்தவனும், புகழ் பெற்றவனும், வெற்றியாளனுமாகிய ஸோமனே! உன்னிடத்து நாங்கள் களிப்பையடையட்டும்.—(எ-று.) ஒடு, உம்மைப்பொருளது.

22. சோம, விவ்வோடதிக்கள் யாவையுந் தோயந்தன்னோ
டேமவாக்குழுவு, மெய்த்துவிரித்தனை பரந்துதோன்றுஞ்
சேமவந்தரத்தை யங்ஙன் செறிந்த பேரிருளை யுன்ற
னுமை வெஞ்சோதிதன்னு னவித்து நீ வீட்டினாயே.

(இ-ள்.) ஸோமனே இப் பூமியி லுற்பவிக்கும் எல்லாச் செடிகளையும் தண்ணீரையும் பசுக்கூட்டத்தையுங் கூட்டுவித்துப் பரந்து விளங்கும் அந்தரத்தை விஸ்தாரமானதாகச் செய்தாய். அவ்விடத்து நிறைந்த பெரிய இருட்டினை உனது பெரிய சோதியினாற் கெடுத்தழித்தனை.—(எ-று.) ஓடதி, ஓஷதி, மருந்துச் செடி, பொதுவாகச் செடியையும் குறிக்கும்.

23. வலனுறு சோம தேவ மருவுமுன் றெய்வச் சித்தத்
தலைவறு பொன்னெமக்கிங் கூட்டுவான் பொருக; ஈர்சார்
வலியினுக் கீச னுன்னை யொருவரு மறிக்கா தேய்க;
மலையுறு போரி லெம்மை மதித்துறு மிடரை நீக்காய்.

(இ-ள்.) பலம்பொருந்திய ஸோமனாகிய தேவனே! உனது தெய்வத்தன்மை பொருந்திய (அல்லது ஒளிபொருந்திய) புத்தியினால் கெடாத பொன்னை யெமக் களிக்கும் வண்ணம யுத்தம் செய்வாயாக. இருதிறத்தாரது வலிமைக்கும் நீயே ஈசனும், உன்னை யொருவரும் தடுக்காதிருக்கட்டும். யுத்தத்தில் எங்களுக்கு நேரும் இடர்களை நீக்குவாயாக.—(எ-று.) ஈர்சார், உபயகட்சி, இருதிறத்தார்.

வருக்கம் 23.

## 92. மண்டலம் 1. அநுவாகம் 14. சூக்தம் 8.

18 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை கோதமன். வடமொழிச்சந்தம் 1-4 ஜகதி, 5-12 த்ருஷ்டுப், 13-18, உஷ்ணி. தேவதை: 1-15 உஷஸ். 16-18 அசுவினிகள்.

(வேறு.)

1. இவ்வைகற் றேவதைக டங்கொடியை
 யுயர்த்தினவா லேன்ற பூர்வ
 செவ்வியுறு திக்கினிற் பேர்பாதியினைத்
 தம்மொளியாற் செறித்த; வீரர்
 கவ்வையுறு தடர்ப்பவர்த மாயுதத்தைத்
 தீட்டுதலிற் காந்தி தன்னா
 லெவ்வமற வுலகளிக்குந் தாய்ப் பசுக்கள்
 செவ்வொளியி னேயா நிற்கும்.

(இ-ள்.) இங்கே தோன்றும் விடியற்கால தேவதைகளாகிய உஷஸுக்கள் தமது (இருட்டை யோட்டும்) கொடிகளை யுயர்த்தின. கிழக்குத் திக்கிற் பாதிப் பாகத்தைத் தமது ஒளியினால் நிறைத்தன. பகைவரை யடக்கும் வீரர்கள் தங்கள் (வாள் முதலிய) ஆயுதங்களைத் தீட்டுவதுபோலத் தமது பிரகாசத்தால் உலகத்தை யளிக்கும் தாய்ப் பசுக்கள் (செவ்வானங்கள்) தமது சிவந்த ஜோதியோடு பொருந்தி வருகின்றன.—(எ-று.) இவ்வகைய உஷஸுக்கள் நம்மைக் காக்கட்டும் எனக் கூட்டுக. வைகல்கள் எனப் பன்மைப்படுத்திக் கூறியது உபசார வழக்கென்பார் யாஸ்கர். செவ்வானங்கள் அங்குமிங்கு

மசைவது வீரர்கள் சட்டங்களிற் கத்திகளைத் தீட்டுவதுபோ லுள்ளது என்ற உவமை வியக்கத்தக்கது.

2. செவ்வொளிகள் சுயமாக மிகவெளிதி
   னுதித்தனவாற்றேரின், வெண்மை
   யொவ்வுறுநல் லாக்களினைத் தேரினெளி
   தாகப்பூட் டுறு மவற்றை
   யெவ்வமறத் தகைத்தேறி முன்போல
   வுயிர்களுக்குத் தெளிவை யேற்றிக்
   கவவுதம தொளியோடு சூரியன்றன்
   சோதியினிற் கலந்தவன்றே.

(இ-ள்.) சிவந்த ஒளிகள் தாமாகவே அநாயாஸமாகத் தோன்றின. வெண்மையான பசுக்கள் (ஈண்டு கதிர்க்கற்றைகள்) தேரில் நன்றாகப் பூட்டிக்கொள்ளு மவற்றைத் தமது தேரில் கட்டி யேறி முன் (கழிந்த பகல்களைப்) போலப் பிராணிகளுக்கு ஞானத்தை யளித்துத் தமது காந்தியோடு சூரியனுடைய தேஜஸிற் கலந்துகொண்டன.—(எ-று.)

3. நாரியர்க டம்மொளியி னொருங்கியைந்து
   தூரதல நின்று நாடி
   யேரியலு நபதேசந் தனையருச்சித்
   தொளிபரப்பும், எண்ணும் வீரர்
   தாரியலுந் தோள்வலியாற் றாவுதலின்;
   அணிகருமந் தன்னை யாற்றிச்
   சாரமுறுஞ் சுதை பிழிந்து மகஞ் செய்வோர்க்
   கெப்பொருளுந் தயக்கு மன்றே.

(இ-ள்.) நாரியர்களாகிய உஷஸுக்கள் தமது பிரகாசத்தால் ஸமானமாக ஒன்று கூடித் தூர தேசத்திலிருந்து வந்து அழகுபொருந்திய ஆகாயப் பிரதேசத்தை யர்ச்சித்துத் தோள்வலியிற் சிறந்த காளைகள் (தமது ஆயுதங்களோடு) எல்லாவிடங்களிலும் தாவுவதுபோல வொளியை பரப்புவார்கள். அழகிய கர்மத்தைச்செய்து லாரமுள்ள ஸோமத்தைப் பிழிந்து யாகம் செய்பவனுக்கு எல்லாப் பொருள்களையுந் தருவார்கள்.—(எ-று.) பரப்பும், தயக்கும், இணை மயக்கம். நாரியர், நரரை விருத்திசெய்வோர்.

4. நடமாதர் மானப்பல் லுருவவுடை
தரித்திருளை நாடி யோட்டித்
தடமடியைப் பசுசுரக்குந் தன்மையினிற்
றன்னுரத்தைத் திறந்து காட்டி
யிடமகலெல் லாப்புவனத் தினுஞ்சோதி
விரித்தாக்க ளியையுங் கோட்டத்
திடைநின்று தாமாக வெளிப்படவி
னுஷைதோன்றி யிருள் சீப்பாளே.

(இ-ள்.) நடனஞ் செய்யும் மாதரைப் போலப் பலநிற மான உடையைத் தரித்து இருளை யோட்டி விசாலமான மடியைப் பசு சுரந்து காட்டுவதுபோலத் தனது மார்பைத் திறந்து காட்டி, இடமகன்று எல்லா உலகங்களிலும் தனது ஜோதியை விரித்துப் பசுக்கள் கொட்டிலிலிருந்து தாமே வெளிப்படுவதுபோல உஷஸ் வெளித்தோன்றி இருட்டைச் சேதிப்பாள்.—(எ-று.) ந்ருதூரிவ என்பதற்கு ந்ரூம் ஸ்தூர் வதி ரிக்தீ கரோதி ந்ருது: நாபித: என்றும் ஒரு பொருள் கூறுவர். மயிர் வினைஞனைப்போல இருட்டை வபனஞ் செய்து என்பது பொருள்.

(வேறு.)

5. கிழக்கினிற் செறியன்னுடன் களரொளியாருங்கண்டார்;
பழக்குறச் சர்வ திக்கும் பரந்து பேரிருள் சீக்கின்றாள்;
பழிச்சுறு மகயூபத்திற் பளிச்சென நபத்திற் றன்றே
சமுத்துவள்வான்பெண், கோலக்கிரணமெல்சேவித்தாளே.

(இ-ள்.) கிழக்குப் பக்கத்தில் நிறைந்த அவளது (உஷஸினது) காந்தியை எல்லாரும் பார்த்தார்கள். பின்பு எல்லாப் பக்கத்திலும் பரந்து உலகை மூடியுள்ள இருட்டை யோட்டுகின்றாள். ஸ்தோத்திரம் செய்கின்ற யாகத்திலுள்ள கட்டுத்தறியைப்போலப் பளபளவென மின்னும்படி தனது காந்தியை யாகாசத்திற் சேர்ப்பாள். விண்ணின் புத்திரியாகிய உஷை சித்திர பானுவாகிய சூரியனைச் சேவித்தாள்.—(எ-று.) பட்டையோடு கூடி நன்றாகச் சீவப்பட்ட யூபஸ்தம்பத்திற்கு நெய் முதலியவற்றை யூற்றி அத்வர்யுக்கள் அழகுபடுத்துவதுபோல உஷஸ் தனது அழகிய ரூபத்தால் ஆகாயத்தை யழகுபடுத்துகிறாள் எனத் தொழிலுவமையாகக் கொள்க.

வருக்கம் 24.

6. கடந்தன மிவ்விருட்டி னெல்லையை ; காணும் வைகல்
மடந்தனை யகற்றி மன்னு முயிர்களை மீட்டுயர்த்தாள் ;
இடந்தரு சீரை யெய்வாள் வசிகரன் மலர்ச்சி யெய்திச்
சுடரொடு மனங்களிக்கத் துகளிரு ளருந்தி ளுளே.

(இ-ள்.) இந்த இருட்டினது எல்லையைக் கடந்தனம். மேலெழுந்து தோன்றும் வைகல் (விடியற்காலாபிமானி தேவதை) எல்லாப் பிராணிகளின் அஞ்ஞான அந்தகாரத்தையு மோட்டி அவற்றை எழுப்பினள். கீர்த்தி யடையும்படி ஜனங்களை வசியம்பண்ணுவதிற் சாமார்த்தியமுள்ளோளானது நகைமுகத்தைப் போலப் பிரகாசத்தை யடைந்து நல்ல காந்தியோடு (கண்டோர்) மனம் களிக்கும் வண்ணம் குற்றம் பொருந்திய இருட்டைத் தின்றொழித்தாள்.—(எ-று.)

7. வான்மகளொளியின்வாய்ந்தா ளுண்மையை மருவுவோரை
யேன்றிவ ணடத்துவாளை யேத்தினர் கோதமக்கா
ரேன்றினோர் துதியாலன்னந் தோற்றுவாயுஷையேமக்கள்
சான்று நன்மா வா வோங்கி யடிமைகள் சார்ந்த சீரின்.

(இ-ள்.) விண்ணின் புத்திரியும், ஒளி சிறந்தவளும், உண்மை யுள்ளவர்களை நடத்துபவளுமாகிய உஷையைக் கோதமக் குடியிலுதித்தவர்கள் ஸ்தோத்திரங்களால் ஏத்தினார்கள். உஷைத்தேவியே! புத்திர பௌத்திரர்களோடு சிறந்து, குதிரைகளும் பசுக்களும் நிறைந்தது, வேலைக்காரர்கள் மிகுந்த சிறப்போடு கூடிய அன்னத்தை (போகத்தை)த் தருவாயாக.—(எ-று.)

8. பொன்னொடு மொளிசிறந்து நல்வினைப் போற்றுவக்கு
நன்னய வுஷையே, வன்ன நண்ணிய பெருந்தனத்தை,
மன்னுறு கீர்த்தி மக்கள் மாவொடு மேவ லாளர்
துன்னுறு மதனை, நீயும் விளக்குவித்ததனைத், தோய்வாம்.

(இ-ள்.) பொன்னோடு பிரகாசம் பொருந்தி ஸத்கர்மங்களோடு கூடிய ஸ்தோத்திரத்தைக்கேட்டுக் களிகொள்ளும் உஷஸே! உணவுப்பொருள்களோடும், கீர்த்தியோடும், புத்திரர்களோடும், குதிரைகளோடும் வேலைக்காரர்களோடும் கூடிய பெரிய செல்வம் உன்னால் பிரகாசம்பெறத் தரப்பெற்றதை யாங்கள் அடைவோமாக.—(எ-று.)

9. தேவி யிப்புவன மெல்லாம் நோக்கி, மேற்காகும் திக்கிற்
பாவு தன்னொளியாற் பற்ப லிடமெலாம் பரந்து பூமி

*மேவிய சீவனெல்லாந் தொழிலுற விழிப்பித் தெண்ணுந்*
*தூவிய லவற்றெலாங்கட் டோய்ந்த வாக்குணர்ந்தா ளன்றே.*

(இ-ள்) (உஷஸாகிய) தேவி இப்புவனங்களை யெல்லாம் நோக்கி, மேற்குப்பக்கத்திற் பரந்த தனது ஒளியினால் பலவிடங்களிலும் வியாபித்து, (பூமியின் கண்ணுள்ள) எல்லாப் பிராணிக் கூட்டங்களுந் தத்தந் தொழிலைச் செய்யுமாறு அவற்றை யெழுப்பி, அவையெல்லாம் மனத்தில் நினைத்துப் பேசும் வாக்கை யறிந்தாள்.—(எ-று) இக்காரணத்தினாற்றான் 'உஷஸ் ஸூந்ரிதாவதி என்று பெயர் பெற்றாள். அதாவது, உஷை பிரிய ஸத்திய வாக்கோடு கூடியவள் என்று சொல்லப் பெற்றாள் என்ப. உஷஸ் வாக்கை யறிந்தாள் என்பதற்கு, உஷஸ் காலத்திற்றான் பிராணிக் கூட்டங்கள் இரவு கழிந்த பின்னர்ச் சப்தஞ் செய்யத் தொடங்குகின்றன வென்பது பொருள். 'பூமிமேவிய' என்னும் அடை வடமொழி மூலத்திலில்லை. அவற்றெலாங்கண், அவற்றின்கணெல்லாம் என மாற்றிப் பொருள் கொள்ளுக.

10. *பழமை வாய்ந்தவளாந் தேவி பழகுறு மொரே நிறத்தி*
*னெழுவளே மீட்டு மீட்டு மெண்ணிறத்தன் காந்தியோடும்;*
*கெழுமுறு மரணத் தோர்த மாயுளைக் கிழப்படுப்பா*
*ளழகிய பறவைப் பட்ச மரிந்துகொல் மறத்தி போன்றே.*

(இ-ள்) பழமையாக வந்துகொண்டிருக்குந் தேவியாகிய உஷை நாடோறும் ஒரே ரூப நிறங்களுடன் (சூரியோதயத்துக்கு முன்) எழுவாள். வேடஸ்திரீ பறவையின் சிறகுகளை நறுக்கி ஹிம்ஸிப்பதுபோல (உலகத்திலுள்ள) மர்த்தியர்களது ஆயுளைக் கிழப்படுத்துவாள்.—(எ-று) விஜ: இவ ஆமினாதி என்னும் வாக்கியம், மண். 2 சூக். 12 ரிக் 5-ல் மறுபடியும் வருகிறது.

வருக்கம் 25

11. *வானுறு தமஞ் சதிப்பாள், வயங்குயி ருணர்த்தித் தானே*
*யீன மார்ந் தொளிக்கு மல்லை பேகுவித், துகங்கள் மாந்த*
*ரூனமில் வகைபடைத்த வவற்றினை யுடைத்துச் சாரன்*
*றானுகர் காந்தை தன்கண் கொண்டொளி சார்த்துவாளே.*

(இ-ள்) இருளையழிக்கும் ஜாரனாகிய சூரியனது காந்தையும், வானத்தின்கணுள்ள இருளை யொழிப்பவளுமாகிய உஷை எல்லாப் பிராணிகளையுந் துயிலுணர்த்தித், தானாகவே யொளிந்து கொள்ளுகிற இருட்டையோட்டி, மனிதர்கள் ஏற்படுத்தியுள்ள (கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும்) காலநிர்மாணங்களைப்

போவதும் வருவதுமாக ஹிம்ஸித்துத் தனது சொந்தப் பிரகாசத்தி ஞல் விளங்குவாள்.—(எ-று.) யுகம் காலவளவை. ஸ்வஸாரம் என் னும் வடமொழிப்பதத்திற்கு உடன்பிறப்பு என்று பொருள் கூறுவர் மேஞட்டாசிரியர். இரவும் உஷஸும் உடன்பிறப்புக்களாம். ஆனல் சாயணரோ 'ஸ்வயமேவ ஸாந்தீம் நிசாம்' தானே போகும் நிசியை யென்பார். சாரன், ஜாரன், ராத்ரே: ஜரயிது, ஸூர்யண். இரவை மறை யும்படி செய்பவன் அதாவது சூரியன் என்பார் சாயணர். அவனுக் குகந்த யுவதி உஷஸாம்.

12. சித்திர வொளிசார் செல்வி பசுக்களிற் றிரிந்தகன்று
தத்துநீர் கீழ்நோக் குற்றுச் சார்வதின் வெகுசார் சென்றே
யுத்தமத்தெய்வ நோன்பை யுளைத்திடாள் காத்தாதித்தன்
மெத்திய கிரணத்தோடு மேன்மையின் விளங்குவாளே.

(இ-ள்) சித்திரகாந்தியோடு கூடிய செல்வியாகிய உஷை, பசுக் கள் காட்டில் பல விடங்களிலுந் திரிவதுபோலப் பரக்கத்திரிந்து, ஜலம் பள்ளமான விடங்களிற் செல்லுவது போல வெகுதூரம் போய், தெய்வ விரதங்களாகிய தர்சபூர்ண மாசாதிகளைப் பாதுகாத்துச் சூரிய னுடைய கிரணங்களோடு கலந்து விளங்குவாள்—(எ-று) இத்தேவ விரதங்கள் பகலிற் செய்யப்படுவனவன்றி இரவிலல்லவென்பது பொருள்.

வேறு

13. செல்வஞ்செறி நல்லுஷை யெம்மகருக்
கெல்வந்திடு மம்மகரின் மகருக்
கில்கொண்ட சிறப்பினை யீத்துதவுஞ்
செல்வந் தருவாய் திகழ் கேழுளதே.

(இ-ள்) (அவியுணவாகிய) செல்வ நிறைந்த உஷையே! எங்களது புத்திரர்களுக்கும் அப்புத்திரர்களது புத்திரர்களுக்கும் வீடு முதலிய வற்றை யமைத்துப் பராமரிக்கும் அழகிய வொளிபொருந்திய செல் வத்தைத் தருவாயாக.—(எ-று) எல்வந்திடு மென்றது எதுகைநோக் கிச் சேர்த்தது. கேழுளதாகிய செல்வம் என்க.

14. மாவும் பசுவும் வசனத் தெழிலும்
மேவும் முஷையே, மிளிர்வோய், பொருளைப்
பாவுந் தொழிலைப் புரியும் மெமது
தாவில் திசையிற் றமமோட் டுகவே.

(இ-ள்) (எங்களுக்குக் கொடுக்கப்) பசுக்களோடும், குதிரை களோடும் கூடியவளே, பிரியஸத்தியவாக்கோடு கூடியவளே! விபா

வரியே (ஒளியோடு மிளிர்பவளே)! உஷையே! செல்வத்தைப் பரப்பும் கர்மங்களைச் செய்யும் எமது திசைக்கணுள்ள இருட்டையோட்டுவாயாக—(எ-று)

15. அவிசார் பொருள்க ளணைவோ யுஷையே!
சவிசா ரருணச் சடிலந் தனையே
புவிவாய் புனைக; பொருள் சோபனமேய்
குவை யாவையு மின்று கொடுத்தருள்க.

(இ-ள்) வாஜினீவதியே! (அவிக்குரிய வுணவுப்பொருள்களை யடைந்தவளே!) உஷையே! விளக்கம் பொருந்திய அருண நிறமுள்ள குதிரைகளைத் தேரிற்பூட்டுக. சௌபாக்கிய நிறைந்த பொருட்குவைகள் யாவற்றையும் இன்று கொண்டுவந்து தருவாயாக.—(எ-று) சடிலம், குதிரை. சவி, ஒளி. அருணம், சிவப்பு. புவி, தேர்.

16. பகை வெல்லுறுவீர், பரியும் மனமொத்
துகையும் முமதே, ருய ரச்சுவினீர்,
தகைசால் தனமும் பசுவுந் தழுவும்
வகைசே ரெமநல் லகமே மருவீர்.

(இ-ள்) (இதுமுதல் 3 இருக்குக்களால் உஷஸோடு கூடச்செல்லும் புத்தியோடு கூடிய அசுவினிகளைத் துதிக்கிறார்.) பகைவர்களை ஜயிப்பவர்களே! அசுவினிகளே! ஸமானமான மனதோடு கூடியவர்களாய் உங்களது தேரைச் செலுத்துங்கள். சிறந்த பொன்னும், பசுவும் நிறைந்தவெமது கிருஹத்தை நோக்கி வாருங்கள்—(எ-று) பரியும், விரும்புகின்ற; விரும்புகின்ற உள்ள மொத்தவர்களா யென்க.

17. வானின் னொளியை மனிதர்க் கெனவே
தானுந் நிறுவிப் புகழ் சண் ணுறுவீ
ரேனும் முறுதிப் பொருளீந் திவணே
யூனம் மறவெம் முறவச் சுவினீர்.

(இ-ள்) அசுவினிகளே! விண்ணினது ஒளியை மனிதர்களின் பொருட்டு நிலவவிட்டுப் பெருமை பெறுவீர்களாயினும், எங்களுக்கு உறுதிப்பொருள்களை (அவியுணவுகளை) யளித்து எம்மை யடைவீர்களாக.—(எ-று) வடமொழி ரிக்குக்குச் சாயணர், 'அசுவினிகளே! நீங்களிருவரும் ஆகாசத்தில், புகழத்தக்க சோதியை எங்களால் அறியப்பட்ட விதமாகச் செய்தீர்கள். (அதனாற்றான் ஒளி உங்களிடத்து உண்டானது.) நீங்களிருவரும் எங்களுக்காகப் பலத்தைத்தரும் அன்னத்தைக் கொண்டுவருவீர்களாக' என மொழிபெயர்ப்பர். அசுவினிகள் சூரியசந்திரரென்றும், பகலிரவுகளென்

றும், தியாவாபிருதுவிகளென்றும் எண்ணப்படுவர்—யாஸ்கர். மண். 1, சூக்-89. ரிக்-3 நோக்குக.

18. வைகுஞ் சுக காரணர் பொற் குயவோர்
வைகா தரியை வதை செய்பவரை
வைகல் லெழுவீ ரிரு தேவரையு
மைதிற் றருவீர் சுதை யுண்டிடவே.

(இ-ள்) விடியற்காலத்தி லெழுபவர்களே! சரீர ஆரோக்கியத்தை யுண்டுபண்ணுபவர்களும், பொன்மயமான தேரோடு கூடியவர்களும், சத்துருக்களை வதைப்பவர்களுமாகிய இரண்டு தேவர்களையும் சோமம் குடிப்பதற்காக இங்கு அழகாகக் கொண்டுவருவீர்களாக (எ-று) வைகல் லெழுவீரென்றது அசுவங்களை யென்பார் சாயணர். ஆனல் காலையிலெழும் அத்வர்யு முதலிய ரித்விஜர்களை யென்பதும் பொருந்து மென்பார் மேனட்டாசிரியர். அரி, பகைவர். குயவு, தேர். கடைசி வரி இனவெதுகை.

**வருக்கம் 27**

## 93. மண்டலம் 1. அநுவாகம் 14 சூக்தம் 9.

12 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: ஷி கோதமன். வடமொழிச்சந்தம், **1-3** அநுஷ்டுப், **4-7** த்ருஷ்டுப், **8** திருஷ்டுப்பும் ஜகதியும் **9-11**காயத்திரி, **12** த்ருஷ்டுப். தேவதை: அக்கினியும் ஸோமனும்.

1. யானு ரைத்திடுங் கவுரவ விளியினை யெதிர் கேட்
டீனமின் மறை யியம்பு மென்வசனத்தை யேற்றே
மேனலந்தரு விழைவினிற் சோம வக்கினிகாள்,
தானுறுஞ் சுகந் தாசுட னணையவே தயக்கீர்.

(இ-ள்) இச்சைகளை வர்ஷிக்கும் அக்கினி ஸோமர்களே! யான் சொல்லுங் கவுரவமான கூவிளிகளை யெதிர் கேட்டு மந்திர ரூபமான ஸூக்தங்களைச் சொல்லும் எனது வசனத்தை யேற்றுக்கொண்டு தாசுஷனுக்குச் சுகத்தை யளியுங்கள்.—(எ-று) தாசுஷன், யாகஞ் செய்பவன். அக்கினி ஸோமர் இணைத்தெய்வங்களென்றதை மண். 1 சூக். 17 ரிக். 1-ற் பார்க்க. வ்ருஷணுவென்பதற்கு வன்மையிருந்தோ ரென்பார் மேனட்டாசிரியர்.

2. யாருமை யிக்து வக்கினி யிருவர்கா ளீண்டு
பேருறும் வசனத்தினுற் பிறங்குறத் துதிப்போன்

ஏருற வவனுக்கு நல் வீரி யத்தோடு
சீருறவளர் பசுவினை மாவொடுஞ் செறிப்பீர்.

(இ-ள்) சோம வக்கினிகளே! உம்மைச்சிறந்த வசனங்களால் துதிப்பவனுக்கு நல்ல வீரியத்தையும், பசுக்களையும் குதிரைகளையுந் தருவீர்களாக.—(எ-று) இந்து, ஸோமன்.

3. நெய்சொரிந் தெவன் புரோடச நிறுவி யாவுதியைப்
பெய்பவ, னவ, னக்கினி சோமர்காள், பிறங்கும்
வெய்ய சந்ததி வீரியத் தியன்றவர் தம்மை
மையி லாயுட் காலம்மெலா மேலுறப் பெறவே.

(இ-ள்) அக்கினி ஸோமர்களே! எவ்யஜமானன் நெய்யைச் சொரிந்து புரோடாசத்தை யளித்து ஆவுதி செய்கின்றானோ அவன் விரும்பத்தக்க வீரியமிகுந்த புத்திரர்களைக் குற்றமற்ற தனது ஆயுட் காலமெல்லாம் பெறட்டும்.—(எ-று) புரோடசம் இடைக்குறைந்தது.

வேறு

4. தக்க நற்பசு வன்னத்தைப் பணிவயி னபகரித்த
வக்கினி சோமர்கா ளும் வீரிய மதனை யாங்கள்
மிக்குணர்குவம்; எத்திக்குஞ் சூழ் பிருசய னெச்சத்தைப்
பக்குறக் கொன்று பல்லோர்க் கேகசோதியைக் கண்டீரே.

(இ-ள்) அக்கினி ஸோமர்களே! பணியென்னும் அசுரனிடத்தி லிருந்து நீங்கள் பசுக்களாகிய அவனது உணவை யபகரித்த திறமை எங்களா லறியக்கிடந்தது. எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்த, பிருச யன் அல்லது துவட்டாவென்னு மசுரனது புத்திரனாகிய விருத் திரனைப் பிளந்து கொன்று பலருக்கும் ஒரே சோதியை யமைத் தீர்கள்.—(எ-று.) பணி பசுக்கூட்டங்களை யடைத்து வைத்திருந்த கதையை மண். 1 சூக். 6 ரிக் 5-ற் காண்க. (Brisaya) ப்ருஸய: துவட்டாவுக்கு ஒரு பெயர். ஏன்? (ப்ரஸ்யதி ஸர்வம் வேஷ்டயதி) எல்லாவற்றையுஞ் சுற்றிக்கொள்ளுவதால். சேஷம், எச்சம், பிள்ளை யென்ற பொருளில் வந்தது.

5. தொழிலினிற் சமான மானீ ரக்கினி சோமர்கா ணீ
ரெழிலினி னாகாயத்தே யிருத்தினீ ரொளிசார் மீனைப்
பழியினின் வசைசார் பாபம் பற்றிய நின்றும் யாறு
கழிதர விடுவித்தீரா லக்கினி சோமர்கா ணீர்.

(இ - ள்) ஒத்த கர்மத்தோடு கூடிய அக்கினி ஸோமர்களே! ஒளி பொருந்திய நட்சத்திர முதலியவற்றை ஆகாயத்திலமைத்தீர்

கள். ஆறுகள் தாங்களடைந்த பழியும் அவதூறான பாபங்களும் கழியுமாறு, அக்கினி ஸோமர்காள், அவ்வாறுகளை அவற்றினின்றும் விடுவித்தீர்கள் அல்லது நீங்கச் செய்தீர்கள்.—(எ-று) இந்திரன் விருத்திரவதஞ் செய்ததனாற் பெற்ற பிரஹ்மஹத்தி தோஷத்தைப் பூமி, மரம், ஸ்திரீ, நீர் இவற்றிற் பாவச்செய்தான். அவற்றின் சுத்தியை அக்கினி ஸோமர்கள் செய்தார்களென்ப. மேலும் இந்திரனாற் சொல்லப்பெற்ற விருத்திரன் ஆறுகளில் விழுந்தான். அவனது சவம் விழுந்த காரணத்தால் ஆறுகள் வரம்பு கடந்து துஷ்டத்தனஞ் செய்தன. அதனால் நதிகளடைந்த தோஷத்தை அக்கினி ஸோமர்கள் நீக்கினார்களென்பது. தற்காலத்தும் ஆடிமாதம் முதன் மூன்று தேதிகளில் நதிக்குத் தீட்டென்று காவிரியில் ஸ்நானஞ் செய்வதை நிறுத்திவைப்போருமுண்டு. அவ்வழக்கம் இவ்விருக்கை யாதாரமாகவுடையது போலும். 'அப்பிடை நுரையாய்' என்னும் பரஞ்சோதி வாக்கை நோக்குக.

6. உங்களி லொருவன் றன்னை யுயர்ந்த மாதரிச்சுவானன்
றங்கும் விண்ணிடத்தினின்றுந் தந்தனன்; மற்றையோனைப்
பொங்கரி னின்று மீர்த்தான் சேனனும்; மறையாற்பொங்கி
யங்கண் மாதல மமைத்தீர் யாகத்துக் கங்கி சோமீர்.

(இ-ள்) அக்கினி ஸோமர்களே! உங்களில் ஒருவனாகிய அக்கினியை மாதரிச்வான் முதல் முதல் விண்ணிலிருந்து (பிருகுவுக்காக)க் கொண்டுவந்தான். மற்றொருவனாகிய ஸோமனை (கொடி ரூபமாக விருந்தவனை) (மேரு) மலை யுச்சியின்கண்ணிருந்து சேனப் (பருந்து) பட்சி ரூபமாக விருந்த காயத்திரி கொண்டுவந்தாள். நீங்களிருவரும், ஸ்தோத்திரஞ் செய்யப்படும் மந்திரங்களால் வளர்ச்சியையடைந்து (இதர தேவர்களது) யாககாரியங்களுக்காகப் பரந்த உலகத்தைச் சிருஷ்டித்தீர்கள்.—(எ-று) மாதரிச்வான் அக்கினியைத் தந்த கதையை மண் 1 சூக் 60 ரிக் 1-ல் நோக்குக. சேனஞ் சோமந் தந்த கதைமேல் மண். 1 சூக். 80 ரிக் 2-லும் காட்டினார்.

வருக்கம் 28.

7. அக்கினி சோமர்காள் யாமளித்திடு மவியை யுண்பீர்;
மிக்க வள்ளன்மை யுள்ளீர், மேவு மதனைதேற்றுத் துட்டி
புக்கபிற் சிறந்த காவல் பொருந்திய சுகத்தைச் சேர்ப்பீர்;
தக்க நன்மகத்தோற் கென்று சமனமுந் தெளிவு மீவீர்.

(இ-ள்) அக்கினி ஸோமர்களே! யாங்கள் தரும் (ஓமத்துக்காக ஆஹவநீய ஸமீபத்தில் வந்துள்ள இந்த) அவியுணவை யுண்ணுங்கள். வண்மையிற் சிறந்தவர்களே! அதனை யேற்றுத் திருப்தியடைந்து எங்

களுக்கு நல்ல காவலோடு கூடிய சுகத்தை யளிப்பீர்களாக. யாகஞ் செய்பவனுக்கு ரோகசமனத்தையும் பயநிவாரணத்தையும் தருவீர்களாக.—(எ-று) துட்டி, துஷ்டி, ஸந்துஷ்டி, திருப்தி. வடமொழியில் சமநம் யாவநம் என இரண்டு சொற்களுண்டு. அவற்றுள் முன்னையது ரோக சாந்தியையும் பின்னையது பயத்தெளிவையும் குறிக்கும். சமனஞ்ச ரோகாணும் யாவநஞ்ச பயாநாம்' என்பது யாஸ்கர் வசனம்.

**வேறு**

8. யா, ரங்கிசோமர்கா, ளிங் கெய்திய தேவ பத்தி
கூர, வூண்புரோடா சத்தைக் கொடுத்தவிசொரிவோ, னன்னுன்
றாரணியி லியற்றுமகந் தனைக்காத்துப் பாபமதைச்சாரா தோட்டி
யேருறவவ் யஜமானன் றனக்குநனி பெருஞ்சுகத்தை யீகுவீரே.

(இ-ள்) அக்கினி ஸோமர்களே ! எந்த யாககர்த்தா தெய்வபக்தியோடு சரு புரோடாசங்களைத்தந்து அவியைச்சொரிபவனோ, அந்த யஜமானன் செய்யும் யாகத்தைக் காப்பாற்றி அவனுடைய பாபங்களையோட்டுவது மல்லாமல் அவனுக்கு மிகுந்த சுகத்தையு மளிப்பீர்கள். (எ-று) இவ்விருக்கு இருசந்த முள்ளதாகப் பாடப்பட்டுள்ளது. என் ? வடமொழியிலும் த்ருஷ்டுப் ஜகதியென இருசந்தங்களோடு கூடியிருப்பதா லென்க. சருவென்பது சமைத்த வுணவு, அதனை யூண் என்றார். புரோடாசம், மாவைக் கிண்டி நீரூற்றிப் பிசைந்து குதிரைக்குளம்பு வடிவமாகக் கூர்மப்படுத்தியது.

**வேறு**

9. அங்கிசோமி, ரிணையழைப் பெய்துவீர் !
தங்கு மொத்த தனத்தினிர், எந்துதி
யங்க மாக வுவந்திடிர்; தேவர்நாத்
தங்குவீர் சிறப்பாகத் தயங்கியே.

(இ - ள்) அக்கினிஸோமர்களே! ஸமானமாக வழைக்கப்படுபவர்களே! செல்வத்திலொத்த பெருமை வாய்ந்தவர்களே! எங்களது ஸ்தோத்திரங்களினிடத்து ஸந்தோஷிப்பீர்களாக. தேவர்களுக்கு மத்தியில் சிறப்பாகத் தயங்கி யமர்வீர்களாக.—(எ-று.) நா, மத்தி, நாப்பண்.

10. அங்கி சோமனிர், ஆச்சியங் கொண்டுமக்
கிங்கவியை யீயைத்திடும் யாகவா
னங்க மாக வருநிதி யெய்துறப்
பொங்கொளியிற் புரிந்து வயங்குவீர்.

(இ - ள்) அக்கினிஸோமர்களே! நெய்கொண்டு உமக்கு அவியைத் தரும் யாககர்த்தா பெரிய செல்வத்தை யடையுமாறு ஒளிகாலுவீர்களாக.—(எ-று.)

11. அங்கி சோமனிர், ஆரிவ் வெமதவி
தங்க விட்டதைத் தாங்கி, மகிழ்வினைத்
துங்க மாகத் துதைந்து குழுவியே
யெங்க ளண்மை யியைய வருகுவீர்.

(இ - ள்) அக்கினி ஸோமர்களே! நிறைந்த இந்த எங்களுதவிப் பொருளையேற்று மகிழ்ந்துகூடி எங்களருகின் வருவீர்களாக.-(எ-று)

வேறு

12. அக்கினி சோமர்கா, ளெ மசுவத்தை யோம்பீர் ; ஆக்கள்
மிக்க நல் லவிப் பொருள்கள் மிளிருற வளர்க; எங்கட்
கொக்க விம்மகத்தோனுக்கு முறுத்துக வலியை : யாஞ்செய்
தக்க விம்மகத்தைச் செல்வச் சித்தியிற் றயக்குவீரே.

(இ - ள்) அக்கினி ஸோமர்களே! எங்களது குதிரைகளைப் பரிபாலிப்பீர்களாக. பசுக்கள், பால் முதலிய அவிப்பொருள்களிற் சிறந்து வளரட்டும். எங்களுக்கும் இவ்யாக கர்த்தாவுக்கும் பலத்தை யூட்டுவீர்களாக. யாங்கள் செய்யும் இந்த யாகத்தைச் செல்வப் பயன்றருவதாகச் செய்வீர்களாக.—(எ-று.) சாயணர் எங்களுக்கும் யாக கர்த்தாவுக்கும் என உம்மைத்தொகையாகக் கொள்ளாது யாகஞ் செய்பவர்களாகிய வெங்களுக்கு என உரை கூறுவர். இந்நூலாசிரியர் மேனுட்டாசிரியருரையைப் பின்பற்றிப் பாடியது இவ்விருக்கு.

வருக்கம் 29.

## 94. மண்டலம் 1. அநுவாகம் 15 சூக்தம் 1.

16 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஆங்கிரஸன் புத்திரன் குத்ஸன். வடமொழிச் சந்தம்: 1-14 ஜகதி, 15, 16 த்ருஷ்டுப். தேவதை: அக்நி. இச்சூக்தம் உபயோகப்படும் இஷ்டிகளில் மித்ரன், வருணன், அதிதி, ஸிந்து, பிருதிவி, தியாவா வென்னும் ஆறு தேவதைகளுங் கூடவரும். ஆனல் இச்சூக்தத்துக்கு அதிதேவதை யெதுவென்றுல் அக்கினியே.

1. வணக்குரியன் சாதவே தசனுக்கா
விம்மறையை மனத்தி னுன்னி
யிணக்குறுவாந் தேரதனைத் தச்சனுறுத்
துதனேர; இதனைப் போற்று

மணத்தொழிலில் யாங்கணனி சிரத்தையொடு
தெளிவுள்ளோம் ; வளரு மங்கீ !
உணக்கமுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பை யுவந்த பின்பே.

(இ - ள்) வணங்குதற்குரியவனும், ஜாதவேதஸனுமாகிய அக்கினிக்காக இந்தச் சூக்த ரூபமான மந்திரத்தை மனத்தினால் நினைத்துத், தச்சன் தேரை யுருப்படுத்துவதுபோல உருப்படுத்திச் சேர்ப்போம். இவ்வக்கினியை ஸ்தோத்திரஞ் செய்வதாகிய மங்களகாரியத்தில் சிரத்தையும் புத்தித்தெளிவு முடையோம். அக்கினியே ! உனது நட்பைப்பெற்ற பின்னர் யாங்கள் கெட்டுப்போகாதபடி எங்களைக் காப்பாயாக.—(எ-று) ஜாதவேதஸன் என்னும் பதத்தின் பொருளை மண். 1. சூக். 44. ரிக். 1-ற் பார்க்க.

2. எவ்யஜமா னனுக்கென நீ யவிசுமப்பா
யம்மகத்தோ னெணமு டிப்பான்,
தெவ்வரிலா துறைகுவான், வீரியஞ்சார்
தனமதனைச் சிறக்கத் தாங்கி
யெவ்வமற வோங்குவான், இன்மையவன்
றனைச்சாரா(து) ; ஏய்ந்த வங்கீ !
கவ்வையுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பைக் கண்ட பின்பே.

(இ - ள்) எந்த யாககர்த்தாவுக்காக நீ அவிப்பொருளை யேற்பாயோ அந்த யாக கர்த்தா தனது எண்ணத்தைச் சாதித்துக் கொள்ளுவான் ; பகைவரில்லாது வாழ்வான் ; வீரியம் பொருந்திய தனத்தைப் பெறுவான் ; பெற்றுக் குறைவின்றி யோங்கி வாழ்வான். அவனைத் தரித்திர மடையாது. அக்கினியே! உன்னுடைய நட்பைப்பெற்ற பின்னர் யாங்கள் கெட்டுப் போகாதபடி யெங்களைக் காப்பாயாக.—(எ-று.)

3. உனை மூட்டுஞ் சத்தியெமக் கியைக ; எம
தெண்ணமெலா முடனே பூர்த்தி
வனைக ; உன திடத்தே பஃ றேவர்களு
மவிப்பொருளை மதித்துண் கின்றார் ;
பினர்நீயு மதிதிசுரர்த் தருக, இவ்வை
விரும்புகின்றோம்; பிறங்கு மங்கீ,
பிணைதலுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பை யியைந்த பின்பே.

(இ-ள்) உன்னை மூட்டுஞ் சக்தி யெங்களுக்குண்டாகட்டும்; எங்களெண்ணங்களையெல்லாம் உடனே பூர்த்தி செய்வாயாக; உன்னிடத்திலேயே எல்லாத் தேவர்களும் அவிப்பொருளைப் புசிக்கிறார்கள். பின்பு நீ அதிதிபுத்திரர்களாகிய ஆதித்தியர்களை அல்லது தேவர்களைக் கூட்டிக்கொண்டு வருவாயாக; இவையெல்லாம் யாங்கள் உன்மாட்டு விரும்புங் காரியங்களாம். அக்கினியே! (மற்றவை முன்போல)—எ-று) 'மிக்கவதிதிப் பெயராள் முப்பத்து முக்கோடி விண்ணோரீந்தா' னென்னும் கம்ப ராமாயண வாக்கு ஈண்டு கருதத்தக்கது.

4. தமித்தன்றிப் பர்வணங்க டோறுனக்கு
நினைப்பூட்டச் சார்ந்து யாகச்
சமித்துக்க ளெரிவளர்க்கத் தேடுவோ,
மவிப்பொருளுஞ் சம்பா திப்போம்;
நிமித்தகா ரணசீவ னோடதிக
ணிலைதொழிலை நிறுத்தாய்; அங்கி!
துமித்திடா தெமையடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பைத் தோய்ந்த பின்பே.

(இ-ள்) நிறையுவா குறையுவாக் காலங்க டோறும் உனக்கு ஞாபகமூட்டும்படி பொருந்தி 21 விதமான மரச்சமித்துக்களையும் அக்கினி காரியங்களுக்காகத் தேடுவோம். அத்தர்சபூரணமாஸாதி கர்மங்களில் வேண்டிய சரு புரோடாச மாதிய அவிப் பொருள்களையும் சம்பாதிப்போம். ஜீவனுதாரமாயுள்ள ஓஷதிகளை நிலைப்பிப்பாயாக. அக்கினியே! (மற்றவை முன்போல)—(எ-று) பர்வணம், ஒரு பட்சம். பர்வணங்கடோறும் பூர்வபட்ச அமரபட்சங்கடோறும் அதாவது ஒவ்வொரு அமாவாசை பௌர்ணமியிலும். அதை வற்புறுத்தவே தமித்தன்றி யென்ற அடை கொடுத்தது. ஒரு அமாவாசையோடாவது அல்லது ஒரு பௌர்ணமியோடாவது நின்று விடாமல் என்றபடி. சமித்துக்கான மரங்கள் இருபத்தொன்றென்பார் சாயணர். சரு அன்னமும், புரோடசம் அல்லது புரோடாசம் கிளறினமாவுமாம்.

5. அவன்கிரண மாந்தர்களைக் காப்பதனிற்
செல்கின்ற வன்றிப் பின்னர்த்
துவயத்தோ டீரிரண்டு காலுயிர்க்க
டமைக்கதிராற் றுனதைந்து காக்கும்;
நவமயமா யிருள்சீத்தெல் லாந்தோற்று
முஷையினினீ யுயர்ந்தாய்; அங்கி!
யவமடையா தெமையெடுப்பா யுவப்பினுன
தருநட்பை யடைந்த பின்பே.

(இ - ள்) அவ்வக்கினியினது கதிர்கள் மனிதர்களைக் காப்பாற்று வதிற் செல்லுகின்றன; அல்லாமலும், இரண்டுகாற் பிராணிகளையும், நாற்காற் பிராணிகளையும் நெருங்கிக் காப்பாற்றும். புதிதாக விருளை யோட்டி யெல்லாப் பொருள்களையும் கண்ணுக்குத் தோற்றுவிக்கும் (உஷஸ்) விடியலினைக் காட்டிலும் நீ பெரியவன். அக்கினியே! (ஏனை யவை முன்போல)—(எ - று) அக்கினி இரவு முழுவதும் இருட்டினை யோட்டி நிற்க, உஷஸ் விடியற்காலத்தில் மாத்திரமே அவ்விருட்டை யோட்டுவதால் அக்கினி உஷஸி னுயர்ந்த தென்பார் சாயணர்.

வருக்கம் 30

6. அத்துவர னேயன்றி முக்கியமா யோதாவு
 மாவாய் ; யாக
மெத்தியவம் மறையோர்க்குத் தொழின்முறையைத்
 தெரிவிப்பாய் ; மேவும் போதா ;
ஒத்தகுடிப் புரோகிதனே, யாவுமுணர்
 தீர,நிறை வுறுத்து மங்கீ
சொத்தையுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
 தருநட்டைத் தோய்ந்த பின்பே.

(இ - ள்) அக்கினியே! நீ அத்வர்யுவாம்; முக்கியமான ஹோதா வாம்; யாகப்பிராஹ்மணர்களுக்குச் செய்யும் முறையையும் காலத்தை யுங் கற்பிக்கும் பிரசாஸ்தாவாம்; (யாகசாலையைச் சுத்தஞ் செய்து சாமக்கிரியைச் சேகரித்து வைக்கும்) போதாவுமாம்; தொல்குடியில் வந்த புரோகிதனே அல்லது பிரஹ்மாவே! எல்லாவற்றையு மறிந்த தீரனே! (ஏற்றக்குறைவில்லாமல் யாகத்தைப் பரிபூர்ணமாக்குபவனே! உனது சினேகிதத்தைப் பெற்ற பின்பு எங்களுக்கு அருங்கேடு வரா மற் காப்பாயாக.—(எ-று.) இவ்விருக்கில் அக்கினியே யாகப்பிராஹ் மணர் பதினறுவருமாம் என்று கூறினர். அவராவார், அத்வர்யு, ஹோதா, பிரஹ்மா, ஆக்நீத்ரன், உத்காதா, பிராஹ்மணச்சமஸ, அச்சாவாக, ப்ரஸ்தோதா, பிரசாஸ்தா முதலியோர். உத்காதா ஸாம வேதமும், ஹோதா ரிக்வேதமும், அத்வர்யு யஜுர்வேதமும் தெரிந்து சொல்லுபவரென்று மேல் மண். 1 சூக். 7 ரிக் 1-ற் சொன்னர். ஈண்டு அத்வர்யு யாகப் பொருள்களை யளிக்கும் கர்த்தாவென்றும், பிரசாஸ்தா மித்திரா வருணர்களென்றும், புரோஹிதன், பிரஹ்மா அல்லது பிரஹஸ்பதி தேவர்களுக்கிருப்பதுபோ லிருந்து யாக கார் யத்தை நடத்துவோனென்றும் சாயணர் விசேஷவுரை கூறுவர். சொத்தை, அருங்கேடு.

7. அழகமரு மங்கம்வாய்ந் தெத்திசையுஞ்
சமமாக வார்கின் றாய்நீ ;
பழகுமொளி யருகினிற்போன் மிக்கொளிர்வா
யதிதூரம் பரந்து நின்றும் ;
கழியிருளி னிரவெனினுந் தேவநனி
காந்தியொடு காண்பா யங்கி ;
யிழிவுபெறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பை யெய்ந்த பின்பே.

(இ - ள்) அக்கினியே! அழகு பொருந்திய அவயவங்களோடு எல்லாப் பக்கத்திலுஞ் சமமாக நீ நிறைந்து நிற்கின்றாய்; தூரதே சத்திலிருந்தும் ஸமீபத்திலிருப்பது போலப் பிரகாசிக்கிறாய். மிக்க இருணிறைந்த இரவிலும், தேவனே, மிகுந்த வொளியோடு பார்க்கி றாய். உனது நட்பை ஊதியமாகப் பெற்ற பின்பு எம்மைக் கெடுக்கா தெடுப்பாயாக.—(எ - று.)

8. சோமாபி டவம்புரியு மவன்றேரே
முன்னிற்க ; தோயு மெந்தம்
ஓமாதி சயமுறைபண், தேவர்காள்,
தீயோரை யொறுத்து வெல்க ;
வாமாதி நிறையெமது மொழிகேட்டுப்
பொலிவுபெற வளர்ப்பீர் ; அங்கி !
தோமேயா தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பைத் தோய்ந்த பின்பே.

(இ - ள்) (அக்கினியை அவயவமாகவுடைய ஸர்வ) தேவர்களே! ஸோமம் பிழியும் யஜமானனது தேரே மற்றெல்லாருடைய தேரைக் காட்டிலும் முன்னணியில் நிற்கட்டும். எமது புகழ்க் கீதங்கள் பாப புத்தியுள்ளவர்களைத் தண்டித்துச் சயங்கொள்ளட்டும். அழகு முத லிய நிறைந்த எமது வசனங்களைக் கேட்டு அவற்றை யோங்கச் செய் வீர்களாக. (ஸர்வ தேவர்களுக்கு மாதாரமாயுள்ள) அக்கினியே! உனது நட்பைப் பெற்ற பின்பு எமக்குத் தோஷம் சேராதபடி காப் பாயாக.—(எ - று.) சோமாபிடவம், ஸோமம் பிழிதல்.

9. உனது படைக் கலங்களினாற் றீமொழியுந்
தீநினைவு முற்றார் தம்மை
மனதுகுளி ரக்கொல்க ; வரக்க, ரரு
கொடுதூர மருவி யோரை

யனையமுறை யாற்ற; துதிப் போர்க்குமக
நன்னறியை யமைக்க; அங்கி!
யினையலுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பை யியைந்த பின்பே.

(இ - ள்) அக்கினியே, உனது ஆயுதங்களாற் றீமொழியும் தீ நினைப்பு முள்ளவர்களைக் கொல்லுக. தூரத்திலும் சமீபத்திலு முள்ள ராக்ஷஸர்களையு மம்மாதிரியே கொல்லுக. ஸ்தோத்திரஞ் செய்பவனுக்கு யாகத்துக்கு வேண்டிய நல்ல மார்க்கத்தை யேற் படுத்துவாயாக. உனது சினேகத்தை யடைந்தபின்பு எங்களுக்குக் கேடு வாராதபடி காப்பாயாக.—(எ-று.)

10. செவ்வொளியிற் பிறங்குமிரு குதிரைகளைத்
தேரதனிற் சிறக்கச் சேர்த்த
வவ்வமயங் காறாண்ட வுன்னுத
மிடபமுழக் கடுத்து நிற்கும்;
கவ்வுபுகைக் கேதனத்திற் கானகத்துப்
பரந்திடுவாய் கடிதின்; அங்கி!
கவ்வையுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பைக் கண்ட பின்பே.

(இ - ள்) அக்கினியே! சிவந்தவொளியோடு கூடிய குதிரைக ளிரண்டையும் உனது தேரில் நீ பூட்டிய அச்சமயத்தில் வாயு தூண்டாநிற்க உனது சப்தம் எருதின் முக்காரம்போற் கேட்கும். தூம கேதுவோடு காட்டினிடத்தே நீ பரந்து செல்லுவாய். உனது நட்பைப் பெற்றபின்பு எங்களுக்குப் பழிநேராதபடி காப்பாயாக.—(எ-று.) புகைக்கேதனமென்றது, புகையுள்ள காரணத்தால் நெருப் புண்டென்று அறியப்படுவதால் அக்கினிக்குத் தூமம் கேது (கொடி அல்லது நினைப்பூட்டுவது) ஆயிற்று. உன் நாதம் எனப் பிரிக்க.

வருக்கம் 31

11. உன்முழக்கிற் பறவைகளு நடுங்குறுமால்;
துரும்புநீ யுண்ணும் போது
நின்பொறிக ணெடுந்தூரம் பரந்துவிழும்;
பின்னர்நெறி, நினக்கும், நின்னை
மன்சுமக்குந் தேரினுக்குஞ் செலற்கெளிதா
வாய்ந்திடுமே; மகிழு மங்கி
துன்பமுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்பைத் தோய்ந்த பின்பே.

## மண்டலம் 1. சூக்தம் 94.

(இ-ள்) அக்கினியே (மேற்பாட்டிற் சொல்லப்பட்ட விதமாக நீ காட்டிற்குள் நுழைந்து) காம்பீர்யமான முழக்கத்தைச் செய்வதைக் கேட்டுப் பறந்து செல்லக்கூடிய பட்சிகளெல்லாம் நடுக்கமடையும் (பட்சிகளே நடுங்குமென்றால் ஓநாய் முதலிய பிராணிகளின் நடுக்கத்தைச் சொல்லவே வேண்டியதில்லை யென்பார் சாயணர்). அக்காட்டிலுள்ள துரும்புகளை யுண்ணும்போது உனது பொறிகள் பரந்து நெடுந்தூரத்திற் போய்விழும். அதற்குப்பின் அக்காட்டு நெறியானது உனக்கும், உன்னைச் சுமந்து செல்லும் தேருக்குஞ் செல்லுவதற்கு மிக எளிதாக வமையும். உனது நட்பை யடைந்தபின்பு எங்களுக்குத் துன்பம் நேராதபடி யெங்களைக் காப்பாயாக.—(எ-று.)

12. மித்திரனை வருணனையு மிவன்றங்கு
 மாற்றமெலாடு மேவி நிற்க;
தத்துறவே கீழ்ச்செலுங்கால் மருதர்சின
 மற்புதமாச் சாரும்; எங்கட்
கொத்தசுக மளிக்க;அவர் மனமெம்பாற்
 றிரும்புநெறி யுறுத்தாய்; அங்கீ,
சொத்தையுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
 தருநட்பைத் தோய்ந்த பின்பே.

(இ - ள்) (அக்கினியைத் துதிக்கும்) இவன் மித்திரா வருணர்களின் றுரணையையும் பெறட்டும். (அதாவது பகலபிமானி தேவதையாகிய மித்திரனும் இரவபிமானி தேவதையாகிய வருணனும் இவ்வக்கினியை வணங்குவோனைக் காக்கட்டும் என்றபடி.) மருத்துக்கள் கீழ்நோக்கிச் செல்லும்போது அவர்களுடைய கோபமானது அற்புதமாய் (தாங்கமுடியாததாய்) அமைந்து கிடக்கும். அக்கினியே! எங்களுக்குச் சுகத்தை யளிப்பாயாக. அவர்களுடைய (மருத்துக்களுடைய) மனம் எம்பாற் றிரும்பும்படியான மார்க்கத்தை யமைப்பாயாக. உனது நட்பை யடைந்தபின்பு எங்களுக்கு அருங்கேடு நேராதபடி காப்பாயாக.—(எ-று.)

13. தேவர்களிற் றேவனுநீ; யாவருக்கும்
 பெருமைமிகு சிநேகி தன்னீ;
மேவுவசுக் களில்வசுநீ; யாகமதிற்
 சோபனத்தின் மேவு வாய்நீ,
தாவுமுன திடமகலுத் தமப்புகலிற்
 றங்கவெமைத் தயக்காய்; அங்கீ!
யோவலுறு தெமையெடுப்பாய் வாய்ப்பினுன
 தருநட்பை யுவந்த பின்பே.

(இ - ள்) அக்கினியே! நீ தேவர்களிற் சிறந்த தேவனும் (ஒளி பொருந்தியவனும் என்றபடி.) எல்லாருக்கும் மகிமை பொருந்திய சிநேகிதனும் நீயாம். செல்வங்களிற் சிறந்த செல்வமும் நீ. யாகத்திற் சோபனத்தோடு வந்து வீற்றிருப்பாய். உனது விஸ்தீரணமான பாதுகாவலமைந்த யாகத்தலத்தில் யாங்கள் தங்குமாறு செய்க. உனது நட்பைப் பெற்ற பின்னர் யாங்கள் கேட்டை யடையாதபடி யெங்களைக் காப்பாயாக.—(எ-று.)

14. உன்னகத்தே வளர்க்கப்பட் டுயர்சோம
வாவுதியோ டுறைந்து நீயு
மன்னுசுகோத் தமமளிப்பான் போற்றடைந்து
கீர்த்தியொடு மருவு வாய்; பி
ஹன்னுகின்ற தாசுடனுக் குயர்ந்தமணி
நிதியளிப்பாய், ஓங்கு மங்கீ
யின்னமுறு தெவைமயெடுப்பாய் வாய்ப்பினுன
தருநட்புக் கிடைத்த பின்பே.

(இ - ள்) உன்னுடைய ஸ்வஸ்தானமாகிய (உத்தர வேதியில்) வளர்க்கப்பட்டு, ஸோம ஆஹுதியைப் பெற்று நீயும் உத்தமச் சுகத்தை யளிக்குமாறு ரித்விஜர்களால் ஸ்தோத்திரம் செய்யப் பெறுகிறாய். பின்னர் அவியளிக்கும் யஜமானனாகிய தாசுஷனுக்கு ரமணீயமான கர்மபலத்தையும், செல்வத்தையும் தருவாய். அக்கினியே! உன்னுடைய அரிய நட்பை யடைந்த பின்பு எங்களுக்குத் துன்பம் நேராதபடி காப்பாயாக.—(எ-று.) மணியென்பதற்கு ரத்நம் என்பது வடமொழிப்பதம். அதற்குச் சாயணர் ரமணீய கர்மபலம் என்று உரை கூறுவார்.

வேறு

15. எங்கணும் பரந்தோய் நன்மையேய் பொருள்படைத்தோய், யார்
தங்குற முழுச்சுபத்திற் றுபங்க ணீக்கித் தன்மை [க்குத்
யிங்குற வைப்பாய், யாவற் கெழில்வலி யூட்டுவாய், அச்
சிங்கலி னரன் சிறப்பான்; றிகழ்க யா முன் றனத்தே.

(இ - ள்) எல்லாவிடத்தும் பரந்தவனே! நன்மை சிறந்த பொருள்களைப் படைத்தவனே! எவனுக்கு முழுச்சுபமும் பொருந்தும் வண்ணம் தாபங்களை நீக்கிக் குணம் நிறைவிப்பாயோ எவனுக்குச் சிறந்த பலத்தைச் சேர்ப்பாயோ அந்த மனிதன் சிறந்து தோன்றுவான். யாங்கள் நீ யளித்த செல்வத்தோடு விளங்குக.—(எ-று.)

16. பாவுறு குணங்கள் முன்பு பகர்ந்தவை பரந்த வங்கி
தேவ, சௌபாக்கியத்தை தேர்ந்திங் கெ மாயு ளோம்ப,
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திர வருணர் தாமு மெம்மதனைக் காக்க.

(இ - ள்) மேற்சொல்லிய குணவிசேஷங்கள் பரந்த அக்கினி தேவனே! ஸௌபாக்கியத்தை யறிந்து எங்களது ஜீவிய காலத்தை இந்தக் கர்மத்தினிடத்து விருத்தி செய்வாயாக. பிருதுவியும், வானமும், ஸிந்துவும் அதிதியும், மித்திரனும் வருணனும், எம்முடைய அவ்வாயுளைக் காக்கட்டும்.—(எ-று.) மித்திரன், வருணன், அதிதி இவற்றின் பொருளை மண். 1 சூக். 89 ரிக் 3-ற் காண்க. ஸிந்து, 'ஸ்யந்தனசீலா உதகாத்மா தேவதா' ஓடும் சிறப்பு வாய்ந்த நீரபிமானி தேவதை. பிருதுவி, 'ப்ரதிதா பூ தேவதா' விரிந்த அல்லது பெருமை சிறந்த பூமி யபிமானி தேவதை. இனி 101-வது சூக்தம் வரையில் இப்பாட்டின் பின்னிரண்டடிகள், இரண்டு சூக்தமொழிந்த ஏனைய சூக்தங்களுக்கெல்லாம் கடைசி ரிக்கின் கடையடிகளாக வரும்.

**வருக்கம் 32**

ஆகச்செய்யுள் 1026

6-வது அத்தியாயம் முற்றும்.



# 7 - வது அத்தியாயம்

இவ்வத்தியாயத்தில் 38 வருக்கமும், 18 சூக்தமும் 172 இருக்குக்களுமுள்ளன.

## 95. மண்டலம் 1. அநுவாகம் 15. சூக்தம் 2.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஆங்கிரஸன் புத்திரன் குத்ஸன். வடமொழிச் சந்தம் : த்ருஷ்டுப். தேவதை : அக்கினி.

1. முராணுருவமைந்தோர் முற்ற, விருவர் வெவ்வேறு மெல்லை
யுறமுறச்செல்வோர் வற்சனொருவனை வளர்ப்பா ரூட்டி; [ன்;
பொருவுசெங்கிறத்தொருவன் பொருந்தியே யவியைக்கொள்வா
மருவுவெண்ணிறத்துத் தேசின் மற்றவன் றோன் றுவானே.

(இ - ள்) முற்றவும் மாறுபட்ட வுருவத்தோடு கூடிய இருவர், ஒருவர்க்கொருவர் விரோதமான நடையை யுடையவர்களாகிய பகலும் இரவும் தனித்தனி ஒரு குழந்தையை யூட்டி வளர்ப்பார்கள். அக்குழந்தைகளில் 'ஒருவன் செந்நிறத்தை யடைந்து அவியை யேற்பான். மற்றொருவன் வெண்மையான நிறத்தோடு ஆகாயத்திற் றோன் றுவான்.—(எ-று.) முற்ற முராணுருவமைந்தோ ரென்றது சுக்கில கிருஷ்ண வர்ணங்களை யடைந்துள்ளதால், வெவ்வேறுமெல்லை யுறமுறச் செல்வோர்' என்றது இரவு முடிந்த காலத்துப் பகலும் பகல் முடிந்தகாலத்து இரவுந் தோன் றுவதால். இரவெலாம், கருப்பத்திற் சிசு மறைந்து கிடப்பதுபோற் கிடந்து விடியற்காலத்தி லுதிப்பதால் சூரியன் இரவின் புத்திரனும். அச்சூரியனுக்குக் காலையில் ஆவுதி செய்வார்கள். பகலில் அக்கினியினது ஒளி மழுங்கி நிற்க இரவு அதற்கு வெளிச்சத்தைத் தருவதால் அக்கினி இரவின் புத்திரன் என்றார். சாயங்காலஞ் செய்யும் ஆவுதி அக்கினி கார்யமாம்.—சாயணர். ஒருவன் அக்கினி; மற்றவன் சூரியன்.

2. தன்னொளி பரந்து மாந்தர் தந்நடு விளங்கிக் கூர்த்த
மின்னொளிச் சுவாலை கூடிப் பல்லிட மிளிரு மித்தீ
தன்னையத் துவட்டா வீன்ற தருணியர் பதின்ம ரூக்கந்
தன்னமுங் குறையார் தந்தார்; நரர் தம தகஞ் சேர்த்தாரே.

(இ - ள்) தனது பிரகாசம் நாலாபக்கத்திலும் பரவ, மனிதருக்கு மத்தியில் விளங்கிக் கூர்மையான சுவாலையோடு கூடிப், பலவிடங்களிலும் பிரகாசிக்கும் இந்த வக்கினியை நித்ய யௌவனம்

வாய்ந்து கொஞ்சமும் சோம்பலில்லாதவர்களான துவஷ்டாவின் பெண்கள் பதின்மரும் (அரணிகடைந்து) தந்தார்கள். மனிதர்கள் அதனைத் தங்கள் தங்கள் கிருஹங்களுக்கு எடுத்துக்கொண்டு போனார்கள்.—(எ-று.) தருணியரென்றது பத்து விரல்களையும்; மேல் மண். 1 சூக். 71 ரிக் 1-ல் ஓரிடத் துதித்த நேச வுடன் வயிறென்றது மிவரையே. அ, பண்டறிசுட்டு. இவ்விருக்குக்கு வேறொரு பொருளு முண்டு. "எல்லாப் பூதங்களிடத்தும் ஜடராக்கினி ரூபமாய்ப் பிரிந்திருப்பதும், கூர்மையான தேஜோமுகத்தோடு கூடியதும், ஸ்வயமான கீர்த்தியைத் தோற்றுவதும், எல்லாவிடங்களிலும் பிரகாசிப்பதும் அல்லது பலர்க்கு முபயோகமாவதும், ஆன மின்னலாகிய அக்கினியை, தமது கார்யங்களால் ஜகத்தைப் போஷிப்பதில் ஆலஸ்யமில்லாதவர்களும், நித்யதருணிகளும் அதாவது ஜராமரணமற்றவரும், ஆகிய இந்திராதி பத்துத் திசைகள் (மண். 1 சூக். 84 ரிக் 13 பார்க்க.) மேகங்களின் அகட்டிற் செல்லும் ஒளிக்கு மத்தியில் வாயுவிலிருந்து தோற்றின" என்பதாம். ஈண்டு துவஷ்டு: ஒளியென்ற பொருளிலும் தசவென்பது பத்துத் திசைகள் என்னும் பொருளிலும் வந்தன.

3. தோன்றிய விடங்கண் மூன்றைத் தோத்திரஞ்செய்வார்; அங்கி
தோன்றிய மூன்றிலொன்று சலதியாந் தோயமொன்று
மேன்றவிண்ணொன்று மிங்ஙனியைந்தது புவிக்கட் பூர்வத்
தான்றர செய்திக் கால வொழுங்கினு றமைத்த தன்றே.

(இ - ள்) அக்கினி யுற்பத்தியான மூன்றிடங்களையும் ஸ்தோத்திரம் செய்வார்கள். அவற்றிலொன்று சமுத்திரமாம். மற்றொன்று (மேக) நீராம். ஆகாயம் மூன்றுவதாம். இவ்வாகாயத்திற் பொருந்தியது கீழைத்திசைக்கண் பெருமையடைந்து பூமியின்கண் ஆறு பெரும் பொழுதுகளாகிய காலவொழுங்கினையு மமைத்தது.—(எ-று.) மூன்றிடங்கள் ஸமுத்திரம் மேகம், விண்ணெனபன. ஸமுத்திரத்தில் வடவைத்தீயாகவும், மேக நீர்க்கண் மின்னற்றீயாகவும், ஆகாசத்தில் ஸூர்யனாகவும் அக்கினி யுற்பவித்ததென்க. இவற்றுள் காலதேச வர்த்தமானங்களாற் கட்டுப்படாமல் அகண்டமாயிருந்த உலகம் ஸூர்யகதியால் திக்குக் காலங்களை யடைந்தது என்றார். இளவேனில், (வஸந்த), முதுவேனில் (கிரீஷ்ம), கார் (வர்ஷ), கூதிர் (சரத்), முன்பனி (சிசிர), பின்பனி (ஹேமந்த), எனப் பெரும்பொழுதுகள் (ருதுக்கள்) ஆறும். இவற்றையே ஒழுங்கின் ஆறு என்றார்.

4. மறைந்தவிவ் வுண்மை யும்முண் மதித்துணர்ந் தவர்கள் யாரே?
சிறந்திடு மவியாற் றாய்மார்ச் சேர்த்தனன் றனயன்; பல்லோர்

நிறந்தரு பகட்டி னூற்றோ னீரினு ணின்று தோன்றி
யறந்தரு மவிபெற்றானு யணைந்தனன், கவி மகானே.

(இ - ள்) மறைந்துகிடந்த இவ்வுண்மையை (ரித்விஜர்களே !) உம்முள் மதித்தறிந்தவர்கள் யார்? (ஒருவருமில்லை யென்றபடி) அவி அன்னத்தினால், மேகத்தின் புத்திரஸ்தானத்தில் மின்னல் ரூபமாக விருந்த இவ்வக்கினி தாய் முறையிலுள்ள மழைநீரைப் பெற்றான். கவியும் மகானுமாகிய இவ்வக்கினி, மேகம் ஸமுத்திரம், உஷஸ் என்னும் பல்லோர் வயிற்றிலும், மின்னல், வடவை, சூரியன், என்னும் உருவங்களோடிருந்து வெளிப்பட்டு நல்ல ஆவுதிகளை யடைந்து தண்ணீருக்குள் வெளிப்படுகிறான்.—(எ-று) தனயன் அக்கினியும், தாய்மார் மேகமும் கடலும் வானமுமாம். அக்கினிக்கு ஆவுதி செய்வதாற் சூரியன் நிலைபெறுகிறான். சூரியனால் மழை பெய்கிறது. மழையினால் அன்னம் விருத்தியாகிறது, அன்னத்தாற் பிரஜைகளோங்குகிறார்கள். அதாவது யாக காரியங்கள் நிறைவேறுகின்றன என்பது ஸ்மிருதி.

அக்நௌப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக்ஆதித்யமுபதிஷ்டதே
ஆதித்யாஜ்ஜாயதேவ்ருஷ்டிர்வ்ருஷ்டேரந்நம்தத:ப்ரஜா.

5. வளைந்துறுஞ் செல் குறங்கில் வாலுற மேனுைக் குற்றுத்
திளைந்த தன்கீர்த்தி சார்ந்து திகழுறச் சுடரைக் கான்று
வளர்ந்தனன்; இருவ ரச்சங் கொண்டனர், ஒளிவளர்தீக்
கிளர்ந்தபோ தவனை நோக்கிச் சேவித்தார் கேசரிக்கே.

(இ - ள்) குடிலகதியோடு கூடிய மேகநீரினது மடியில் (மின்னல் ரூபமாக) அழகுற மேனுைக்கி யொளிர்ந்து, தனது சொந்தக் கீர்த்தியை யடைந்து, நல்ல சுடரை வீசிக்கொண்டு (அக்கினி) வளர்ந்தான். (வானம் பூமிகள்) இருவரும் பயந்தார்கள். சோதியினின்றும் பிறந்தோங்கிய அக்கினி தோற்றியபோது, அவனைப் பார்த்து அவ் அக்கினியாகிய சிங்கத்தைச் சேவித்தார்கள்.— (எ - று) 'ஸிம்ஹம் ஸஹநசீலம் அபிபவநசீலம்' பொறுக்கவல்லது அல்லது ஜயிக்கவல்லது என்பது பொருள். ஈண்டு அக்கினியைக் குறித்து நின்றது. துவஷ்டு: என்னும் மூல பதத்தை மேனாட்டாசிரியர் துவஷ்டாவெனக் கொண்டு, அவனால் சிருஷ்டிக்கப்பட்ட வானம் பூமிகளை யென்று சேர்ப்பார். ஆனால் சாயணர் தீப்தாத் என்று, ஒளி அல்லது சோதியினின்றும் என்று பொருள்கொண்டு, ஒளியினின்று பிறந்த அக்கினியெனக் கூட்டுவார். பாட்டிற் பின்னுரையே கூறியுள்ளார். இருவர் என்பதற்குப் பகலிரவுகளென்றும், அரணிக

ளிரண்டுமென்றும் பொருள்கொள்ளுவதுமுண்டு. இது யாஸ்கர் மதம். கேசரிக்கு, வேற்றுமை மயக்கம்.

வருக்கம் 1.

6. உருவ வங்கனையார் மான விருவருஞ் சேவித்துற்றார்,
பரிவொடு முழங்கு மாவிற் பரிந்தவ னருகு சேர்ந்தார்;
மருவியோர் வலத்திலோங்கி வகைபெறு மவி யளிக்கும்
பெருமைவா யவனு மொய்ம்பிற் பிறங்கினோர்பதி யானானே.

(இ - ள்) அழகிய ஸ்திரீகளிருவர் சாமரையோடு அரசனைச் சேவிப்பதுபோல, தியாவாபிருதுவிகளிருவரும் (அல்லது பகலிரவுகளும், அரணிக்கட்டைகளிரண்டும்) அக்கினியைச் சேவித்தார்கள். கன்றினிடத்திலுள்ள ஆசையோடு சப்திக்கும் பசுக்களைப்போல அவனது சமீபத்தில் வந்தடைந்தார்கள். (ஆஹவநீயத்தின்) வலப் பக்கத்திற் பொருந்திய ரித்விஜர்கள் சரு புரோடாசம் முதலிய அவிப் பொருள்களைத் தரும் பெருமையை யடைந்த அவ்வக்கினியும் பல வான்களுக்கெல்லாம் நாயகனானான்.—(எ-று) சருபுரோடாசங்களைப் பற்றி மண். 1 சூக். 93 ரிக். 8-ற் காண்க.

7. சவிதுவே யெனக்கரங்கண் மேலுறச் சார்த்தி நீட்டிக்
குவலயம் வானிரண்டிற் கூடிய தனது தேசை
யுவப்புற நடுக்கை யீவோ னோட்டிப்பி னெவற்றுஞ் சாரா
நிவப்புற வேற்றித் தாய்மார்நின்று புத்துடையீர்ப்பானே.

(இ - ள்) எல்லாருக்கும் நடுக்கத்தைத் தரும் அக்கினி, ஸவிதா (சூரியன்) வைப்போலத் தனது கிரணமாகிய கரங்களை மேலே நீட்டிப், பூமி வானங்களிற் கூடிய தனது ஒளியைப் பரவவிட்டு, எல்லாவற்றையுமடைந்து அவற்றிற் கொளரி தரும் ஸாரத்தை வெளிப் படுத்திக், தனது தாய்மார்களாகிய மழைநீரிலிருந்து புதிய உடையை வெளிக் கொணர்வான்.—(எ-று) ஸவிதா, சவிதுவென வந்தது. சூரியோதயத்துக்கு முன் சூரியனுக்கு ஸவிதா வென்பார். 'ஸர்வஸ்யப்ரேரக:' எல்லாவற்றையும் தூண்டுபவன் அல்லது நடத்துவோன் என்பது பொருள். தாய்மார் நின்றும் புத்துடையீர்த்தலாவது, மேகநீர் அக்கினிக்குத் தாய்மாரின் நிலையாயுள்ளது; அதனிடத்திலிருந்தும் புதிதாய் உலகத்தைக் கவ்விக்கொள்ளும் சோதியாகிய வஸ்திரத்தை வெளிப்படுத்தலாம். சாரா, சார்ந்து.

8. அந்தரத் தகவு மேகத்தொடு திடித்தென வலர்ந்து
நந்தி, நோக்கரிய சோதி நாட்டு மக்காலை ஞான

*மந்துறு கவி நீர்மூல வந்தரத்தினைத் தன் றேசால்*
*முந் தலங்கரிப்பான் ; தேவ யாஜந முற்று மாங்கே.*

(இ - ள்) அந்தரிட்சத்திற் செல்லும் மேகத்தில் மின்னலாக விளங்கிப் பார்க்கமுடியாத சோதியை அங்கே நிலைநிறுத்தும்போது ஞானம் பொருந்திய கவியாகிய அக்கினி தண்ணீருக்கு மூலமான அவ் வந்தரத்தைத் தனது தேஜஸினால் அலங்காரப்படுத்துவான். அவ் விடத்து அத்தேவனால் விரிக்கப்பெற்ற ஒளி எங்களது சுதையோடு கூடக் கலந்து விளங்கும் (அதாவது தேவயஜநம் அங்கே நடக்கும்) —(எ - று) அந்துதல், சேர்தல், திசைச்சொல்.

9. *மகத்துவம் வாய்ந்தவுன்றே சொன்னலர்த் தெறுத்தொளிர்வ*
*தகத்து நீர்கொண்டகன்ற வந்தர வெளியி னேயும் ;*
*மிகச் சுடர்தர யா மூட்டி விட்ட வக்கினியே ! யாரு*
*மகைக்கலாத் துணைச் சுபாவ வழகினே டெம்மைக் காக்க.*

(இ - ள்) பகைவரை வாட்டி விளங்குவதான மகத்துவம் பொருந்திய உனதொளி, தன்னிடத்து நீரைக்கொண்டு பரந்த வந்தர வெளியிற் பரவும். நன்றாகக் கொழுந்துவிட்டெரியும்படி யாங்கள் மூட்டி விட்ட அக்கினியே ! ஒருவராலும் வருத்தமுடியாத பாதுகாப்பமைந்த தன்மை வாய்ந்த அழகோடு எங்களை ரட்சிப்பாயாக.—(எ - று)

10. *அந்தரத் தொழுகு மூர்மி யார்ந்தநீ ரோட்டெடுப்பான்*
*சுந்தரமாக வாற்றிப் புவியின்கண் வெளந் துறைப்பான் ;*
*அந்தமா யகட்டி னெல்லா அனப்பொரு ளமைப்பதன்றி*
*விந்தையின் நவ முளைக்கண் மேவி நன்கியங்குவானே.*

(இ - ள்) (அக்கினி) அந்தரிட்சத்திற் செல்லும் அலைமிகுந்த நீரைப் பிரவாஹமாகச் செல்லவிட்டுப் பூமியில் வெள்ளத்தை நிறைவிப்பான். தனது அகட்டில் (வயிற்றில் அல்லது உள்ளிடத்தில்) எல்லா வுணவுப் பொருள்களையும் அமைப்பதோடு புதிதாகத் தோன்றும் பயிர் முளைகளுக்குள்ளும் சென்று சலிப்பான்.—(எ - று)

11. *பாவக, சமித்தாலோங்கிப் பரந்தசீ ரன்ன மீவா*
*னேவற வெமக்கொளிர்ந்திங் கோங்குவாய் ; எமதிப் போற்றைத்*
*தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு*
*மேவு மித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.*

(இ - ள்) பாவகனே ! (பரிசோதகனே !) நீ ஸமித்தினால் வளர்க்கப்பெற்று எங்களுக்குக் கீர்த்தி பெருகிய அன்னப் பொருள்களை யளிப்பதற்காகப் பிரகாசத்தோடு விளங்குவாயாக. எம்முடைய

இந்தப் பிரார்த்தனையைப் பூமி வானம், ஸிந்து, அதிதி, மித்ரன், வருணன் என்னுமிவர்கள் விரும்பிக் காக்கட்டும்—(எ - று)

வருக்கம் 2.

## 96. மண்டலம் 1. அநுவாகம் 15. சூக்தம் 3.

9 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: ஷை குத்ஸன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: செல்வகாரணனான அக்கினி.

1. வலியினான் முறுக வாங்கிக் கடைந்திட வளர்வோன் வல்லே
மலிதரு ஞானமெல்லாம் பழமைபோல் வகித்தான் மெய்யே;
சலிலமும் வாக்கு நட்பிற் றயக்கின வவனை; செல்வ
நலமளி தீயைத் தேவர் நாடி யாதரித்தா ரன்றே.

(இ - ள்) பலத்தினால் (அரணிகளைக்) கடைந்தவுடன் தோன்றும் அக்கினி, தான் உதித்தவுடன் எல்லா ஞானத்தையும் பழமையா யடைந்ததுபோல, விரைவில் உண்மையாகவே தயங்கினான். மேக நீரும், வாக்கும் அவனைச் சிநேகமாகப் பெற்றன. தனந்தருபவனாகிய அக்கினியை (இந்திராதி) தேவர்கள் நாடி யாதரித்தார்கள்.—(எ-று) 'ஞானமெல்லாம்' என்பதற்குப் பதிலாகக் 'காவ்யமெல்லாம்' என்று படிப்பதும் ஒன்று. அதற்குக் கவியினது எல்லாக் கர்மங்களையு மென்று உரை கூறி இவ்வக்கினி முன்பே யறிந்ததுபோல உற்பத்தி யானவுடனேயே தனது அவிவகிக்குந் தொழிலைச் சேர்ந்தான் என விரிப்பார் சாயணர். 'தி (dh) ஷணு' வென்பதற்கு மாத்யமிகா வாக்கு என்பர். சூக்குமை, பச்யந்தி, மத்திமை, வைகரி யென வாக்கு நான் காம். தேவ சப்தத்துக்கு ரித்விஜர் என்று பொருள் கொண்டு ரித் விஜர்கள் கார்ஹபத்யாதி ரூபத்திற் றாங்கினார்கள் என்பதும் ஒன்று. பச்யந்தீ தமிழிற் பைசந்தி என்று வழங்கலாயிற்று.

2. கலையுண ராயு முன்னாட் கவிபுகன் றிட மனுவின்
குலமுறு மக்களாகு மிவர்தமைக் குலவ விட்டான்;
தலநிறை யொளியால் வானை நீரினைச் சமைத்தான்; செல்வ
நலமளி தீயைத் தேவர் நாடி யாதரித்தா ரன்றே.

(இ - ள்) கலைகளை யுணர்ந்து ஸ்தோத்திரஞ் செய்யும் ஆயுவின் அல்லது மனுவின் (குணநிறைந்த) கவிகளைக் கேட்டு, (அக்கினி) மனு வழியினுதித்த இம்மனிதரைப் பிறப்பித்தான். விஸ்தாரமாகப் பரவும் தனது ஒளி (கண்)யினால் வானத்தையும் நீரையும் (அல்லது அந் தரத்தையும்) சிருஷ்டித்தான். செல்வ நலத்தை யளிக்கும் அக்கினி

யைத் தேவர்கள் (அல்லது ரித்விஜர்கள்) விரும்பி வளர்த்தார்கள்.—(எ - று) ஆயு மனுவென்றது சாயணருரை. அக்கினி தோன்று மெயுழ வாய். அக்கினி குலவவிட்டா னெனக.

3. *சுலவெரி வளர்ப்பீர் தேவ முக்கியன் யாகந் தோய்ப்பான்*
*பலிபெறுபவன் றுதிக்கட் சிறப்புறுபவ னல் லுண்டி*
*மலிமக னுயிர்கடாங்கும் வள்ளலைப் போற்றீர்; செல்வ*
*நலமளி தீயைத் தேவர் நாடி யாதரித்தா ரன்றே.*

(இ - ள்) அக்கினியைச் சூழ்ந்து வளர்ப்பவர்களே! தேவர்களில் முதன்மை வாய்ந்தவனும், (தர்ச பூரணமாஸமாதிய) யக்ஞங்களை நிறைவேற்றுபவனும், யாகபலியை (அவிப்பொருள்களை) யேற்பவ னும், ஸ்தோத்திரங்களாற் பெருமைபெற அலங்கரிக்கப்படுபவனும், உணவின் புத்திரனும், நல்லதான கர்த்தாவுமாகிய அக்கினியை ஸ்தோத்திரஞ் செய்வீர்களாக. செல்வ காரணனை அக்கினியைத் தேவர்கள் நாடி வளர்த்தார்கள்.—(எ-)று.) அக்கினி யுணவினாற் புதி தாக வுண்டாக்கப் பட்டு ஜடாக்கினியாக வளர்க்கப்படுவதால் உண வின் புத்திர னென்றார்.

4. *பலவிதப் பொருள் வளர்த்தோன், பலரையுங் காப்போன் சோதித்*
*தலமெனுந் துறக்கமீவோன், தரணிவான்பெற்றோ, னெங்கான்*
*முளைக்கென மாதரிச்சுவான் வழிதெரிந்தான்; செல்வ*
*நலமளி தீயைத் தேவர் நாடி யாதரித்தா ரன்றே.*

(இ - ள்) பலவிதமான சிரேஷ்டமான பொருள்களின் புஷ்டியை யடைந்துள்ளவனும், பலரையும் ரக்ஷிப்பவனும், (யாகஞ் செய்வித்து) சோதித்தலமாகிய ஸ்வர்க்கத்தை (யாககர்த்தாவுக்குத்) தருபவனும், வானம் பூமிகளைத் தோற்றியவனும், மாதரிச்வானும் (எல்லாவற்றிற் குந் தாயெனத் தகும் அந்தரிட்சத்தில் நடப்பவனும்) ஆகிய அக்கினி எங்கள் புத்திரனுக்கு (அநுஷ்டான மார்க்கத்தை) யுண்டுபண்ணி னான். செல்வ காரணனை அக்கினியைத் தேவர்கள் விரும்பிப் போற் றினார்கள்.—(எ-று.) மாதரிச்வான் மண். 1. சூக். 31 ரிக். 3 நோக் குக. ஈண்டு அச்சொல் அக்கினியையே குறித்து நின்றது. மேனாட் டாசிரியர் 'எங்கான்முளைக்' கென்னாது 'தன்கான்முளைக்' கென்பார். அவர் உரைப்படி, மாதரிசுவான் முதல் முதல் அக்கினியைப் பிருகு வுக்காகக் கொண்டுவந்து கொடுத்தவனைக் குறிப்பதால். மண். 1 சூக். 60 ரிக். 1ல் பார்க்க.

5. *உலவுறு பக்லிராக்க ளொன்றன் வன்னத்தை மற்றொன்*
*றிலையென லாக்கி யோர்சேயினுக் கவியூட்டுங் கூடி;*

மண்டலம் 1. சூக்தம் 96.

மலியொளி வீசுமஃது வான்புவி யிடையே; செல்வ
நலமளி தீயைத் தேவர் நாடி யாதரித்தா ரன்றே.

(இ - ள்) மாறிமாறி யுலாவும் பகலிரவுகள் ஒன்றினது நிறத்தை மற்றொன்று மாற்றி இரண்டுமாகப் (பகலின் புத்திரனாகிய) ஒரு குழந்தைக்கு அவியுணவை யூட்டும். அக்குழந்தையாகிய அக்கினி வானம் பூமிகளுக்கிடையே மிக்க வொளியை வீசும். செல்வகாரணனை அக்கினியைத் தேவர்கள் விரும்பிப் போற்றினார்கள்.—(எ - று.) குழந்தை அக்கினியைக் குறித்து நின்றது. மண். 1 சூக். 95 ரிக். 1 நோக்குக.

6. மலிதன மூலம், செல்வக் களஞ்சிய, மகத்தின் கேது,
நிலைதரு அதியாளன்ற னினைப்பினைச் சாதிப்போனைக்,
கலவுறு மமரத் தன்மை காத்திடுந் தொழிலர் செல்வ
நலமளி தீயைத் தேவர் நாடி யாதரித்தா ரன்றே.

(இ - ள்) நிறைந்த தனத்துக்கு மூலாதாரமானவனும், செல்வக் களஞ்சியமும் யாகத்தின் கொடியும் (அல்லது யாகத்தை ஞாபகமூட்டுபவனும்) ஆன அக்கினியை, மரணமின்மையைக் காத்து நிற்கும் தேவர்கள் விரும்பி வளர்த்தார்கள்.—(எ - று.)

7. பழமையு மின்றும் பூதி யுறைவிடம், பரிந்த வில்லாந்
தலமதி லுதித்தவற்றோ டுதிக்கநின் றிடு மனைக்கும்,
அலகிலா தேய்ந்தவற்றோ டெய்வவுங் காப்போன், செல்வ
நலமளி தீயைத், தேவர் நாடி யாதரித்தா ரன்றே.

(இ - ள்) புராதன காலத்திலும் இப்பொழுதுஞ் செல்வமுறையுமிடமும், முன்பே பிறந்தவற்றிற்கும் இனிப் பிறக்க நிற்பவற்றிற்கும் வீடு போன்றவனும், கணக்கில்லாத வஸ்துக்கள் ஏற்கெனவே யுள்ளவற்றிற்கும் இனி யேற்பட நிற்பவற்றிற்கும் ரட்சகனுமான செல்வ காரண அக்கினியைத் தேவர்கள் விரும்பிப் போற்றினார்கள்.—(எ - று)

8. செல்வத்தைத் தருவோனெங்கட் சேர்க்க சங்கமச் செல்வத்தை
செல்வத்தைத் தருவோனெங்கட்சேர்க்க தாவரச் சிறப்பைச்;[ச்
செல்வத்தைத் தருவோன் வீரத் தநயரோ டன்னஞ் சேர்க்க;
செல்வத்தைத் தருவோன் தீர்க்க வாயுளைத் தரவெமக்கே.

(இ - ள்) செல்வத்தைத்தரு மக்கினி எம்மிடத்து ஜங்கமச் செல்வத்தையும், ஸ்தாவரப் பெருமையையும், புத்திரரோடு கூடிய உணவுப் பொருள்களையும், தீர்க்கவாயுளையும் தருவானாக.—(எ - று)

9. பாவக! சமித்தா லோங்கிப் பரந்தசீ ரன்ன மீவா
னேவற வெமக்கொளிர்ந்திங் கோங்குவாய்; எமதிப் போற்றைத்

தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானும்
மேவு மித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) எல்லாவற்றையும் பரிசோதிப்பவனாகிய வக்கினியே! ஸமித்தினால் வளர்ந்து மிகச் சிறப்புப் பொருந்திய அன்னத்தைத் தாவேண்டி எங்களுக்கு ஒளியை வீசி யிவ்விடத்து விளங்குவாயாக. எங்களுடைய இந்தப் பிரார்த்தனையைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் விரும்பிக் காப்பாற்றுவாராக—(எ-று) ச்ரவஸே என்பதற்கு அன்னமென்றது கீர்த்தியின் பொருட்டென்பார் மேனாட்டாசிரியர்.

### வருக்கம் 4.

## 97. மண்டலம் 1. அநுவாகம் 15. சூக்தம் 4.

8 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: ஷை குத்ஸன். வடமொழிச் சந்தம்: காயத்திரி. தேவதை: அக்கினி.

### வேறு

1. எங்கள் பாபத்தை யெங்கள்நின் றோட்டியே
பொங்கு நற்றன மெல்லாப் பொழுதினுந்
தங்கு மாறு விளங்குக, வக்கினி,
எங்கள் பாபத்தை யெங்கணின் றோட்டவே.

(இ - ள்) அக்கினியே! எங்களுடைய பாபங்களை யெங்களிடத்தினின்றும் போகுமாறு செய்து, விசேஷ தனம் எல்லாக் காலத்திலும் எங்களிடத்து வந்து அடையுமாறு பிரகாசிப்பாயாக. எங்களது பாபங்களை யெங்களிடத்தினின்றும் (அக்கினியின் ஒளி) ஓட்டட்டும்.—(எ - று)

2. துங்க வாழ்வொடு தோய்தரு நல்விலு
மங்க நன்னெறி யும்பெறு மார்த்தியின்
மங்கலில் மகமாற்றி வணங்குவோம்;
எங்கள் பாபத்தை யெங்கணின் றோட்டவே.

(இ - ள்) பரிசுத்தமாகிய செல்வத்தையும் நல்ல வீட்டையும், சன்மார்க்கத்தையும் பெறு மிச்சையோடு அவிப்பொருளைத் தந்து (அக்கினியை) வணங்குகிறோம். எங்களது பாபங்களை யெங்களிடத்தினின்றும் (அக்கினியின் ஒளி) ஓட்டட்டும்—(எ - று.)

3. துங்க மாமறை தோயுத்தம ஞகை
அங்க மாயிவன் மன்னுக; சூரிக
ளெங்கட் சேர்ந்தவ ரென்றும் புகழ்பெறல்;
எங்கள் பாபத்தை யெங்கணின் ஞேட்டவே.

(இ - ள்) இக் குத்ஸ ரிஷி உத்தம ஸ்தோதாவாய்ப் பொருந்தட்டும். எம்மிடத்துள்ள ஸூரிகள் (வித்வாம்ஸர்கள் அல்லது ஸ்தோதாக்கள்) எப்பொழுதும் கீர்த்தியை யடையட்டும். மற்றது முன் போலவே—(எ - று.) ஸூரிகள் ஈண்டு ஸ்தோத்திரஞ் செய்பவர். இவன், இக் குத்ஸ ரிஷி.

4. அங்கி யென்றைக்குன் சூரிக ளார்தரு
துங்க மக்களைத் தோய்குவ ரன்றைக்கு
னெங்குலமுந் தழைத்தெழி லெய்துக;
எங்கள் பாபத்தை யெங்கணின் ஞேட்டவே.

(இ - ள்) அக்கினியே என்றைக்கு உனது ஸ்தோதாக்கள் புத்திர பௌத்திரர்களைப் பெறுவார்களோ அன்றைக்கே யுன்னை யடுத்த எமது குலமும் புத்திர பௌத்திரர்களோடு தழைத்து விளங்குக. மற்றது முன்போல—(எ - று.)

5. எங்கணும் பரந் தேதிலரைத் தெறு
மங்கியின் கிரணம் பல வாசையின்
மங்குறுது வளர்ந்திடு போதினி
லெங்கள் பாபத்தை யெங்கணின் ஞேட்டவே.

(இ - ள்) எல்லாவிடத்திலும விரிந்து சத்துருக்களைக் கொல்லும் அக்கினியின் கிரணங்கள் பல திக்கிலும் சென்று பிரகாசிக்கும் போது (அவனது ஒளி) எங்களுடைய பாபச் செய்கைகளை யெங்களிடத்தினின்றும் ஓட்டட்டும்—(எ - று.) ஆசை, திக்கு.

6. எங்கு நோக்கு முகத்தை யியைந்தவ,
அங்க மாகவெத் திக்கினுங் கூடியே
யெங்க ளொன்னலர் நின்றெமைக் காக்க நீ;
எங்கள் பாபத்தை யெங்கணின் ஞேட்டவே.

(இ - ள்) எல்லாப் பக்கத்திலும் பார்க்கும் முகத்தோடு கூடிய வக்கினியே! எல்லாப் பக்கத்திலும் பொருந்தி, எங்கள் பகைவர் எம்மை யணுகவொட்டாதபடி காப்பாயாக, எங்கள் பாபங்களை எங்களிடத்திலிருந்தும் ஓட்டுக—(எ - று.)

7. எங்கு நோக்கு முகத்தை யியைந்தவ,
வங்க மென்னவே வாலிதி னெங்கட்குப்
பங்க மின்றிப் பகையைக் கடத்துக ;
எங்கள் பாபத்தை யெங்கணின் றோட்டவே.

(இ - ள்) எல்லாப் பக்கங்களிலும் பார்க்கக்கூடிய முகத்தோடு கூடிய வக்கினியே! நாவாய் நீரைக் கடந்து அக்கரை சேர்ப்பதுபோல எங்களுடைய சத்துருக்களை யாங்கள் கடந்து செல்லுமாறு செய்க. எங்களது பாபங்களை யெங்கணின்று மோட்டுக—(எ - று.)

8. எங்கள் சேமத்தை யெண்ணி நதியினிற்
றங்கும் வங்கந் தனிலெமைத் தூக்கியே
கங்கு சேர்த்தல் கடுப்பக் கடத்துவாய் ;
எங்கள் பாபத்தை யெங்கணின் றோட்டவே.

(இ - ள்) (மேற் செய்யுளிற் சொன்னதையே மீண்டுங் கூறி யுறுதிப் படுத்துகிறார்.) (அக்கினியே!) எங்களுடைய க்ஷேமத்தை யுத்தேசித்துக் கப்பலிற் றாக்கி ஆற்றைக் கடந்து அக்கரை சேர்ப்பதுபோல எங்களைச் சத்துருக்களில்லாத விடத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக. மற்றது முன்போல—(எ - று.)

வருக்கம் 5

## 98. மண்டலம் 1 அநுவாகம் 15 சூக்தம் 5

3 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஷை குத்ஸன் ; வடமொழிச் சந்தம் : த்ருஷ்டுப் ; தேவதை : அக்கினி.

வேறு

1. விச்சுவ நரர்க்கு நாத னன்மனம் பெறுக யாங்கள் ;
விச்சுவ புவனம் போற்றும் வேந்தனன்னவனே ; இங்கு
விச்சுவந்தனை நோக்குற்றான் மேலுறப் பிறந்தபோதே ;
விச்சுவ நரர்க்குநாத னிகல்வன் விண்மணியி னோடே.

(இ - ள்) வைச்வாநரனுடைய நன்மனத்தை (அநுக்கிரஹ புத்தியை) யாங்கள் அடைக. எல்லாப் புவனங்களிலுமுள்ள பிராணிக் கூட்டங்களால் வணங்கப் பெற்று அவ்வைச்வாநரன் அவற்றிற்கு ராஜாவாகிறான். இரண்டு அரணிகளினின்றும் தோன்றிய தட்சணமே எல்லாச்சுகத்தையும் நன்றாகப் பார்க்கிறான். அவ்வைச்வாநரன் சூரியனோடு போட்டியாக வெழுவான்—(எ - று.) வேந்தன் ஈண்டு ராஜா

வென்னும் பொருளிலேயே வந்தது. சூரியனுடைய கிரணங்கள் கீழ் நோக்கி வரும்போது அக்கினியின் கிரணங்கள் மேனோக்கிச் சென்று அவற்றைச் சந்திப்பதைக் கண்டு ரிஷிகள் அக்கினி சூரியனோடு இகல்வதாக (போட்டி போடுவதாக)ச் சொன்னார்களென்பார் சாயணர். இக் கருத்து தைத்திரீயப் பிராஹ்மணம். 2—1—2லும் சொல்லப்பட்டிருக்கிறது. யாஸ்கரும் இப்படியே நிருக்தத்தில் கூறியிருக்கிறார். 'அமுதோமுஷ்ய ரச்மய: ப்ராதுர்பவந்தீதோஸ்யார்ச்சிஷஸ் தயோர் பாஸோ: ஸம் ஸங்கம் த்ருஷ்ட்வைவமவக்ஷ்யத். விண்மணி - சூரியன்.

2. வானிடத்துறுவான் பூமி மருவியே யுறைவா னங்கி
யீனமி லோடதிக்கண் யாவற்றும் புகுந்தான்; எங்குந்
தானுறு வலியாற் றங்கும் வைச்சுவா நரனு மங்கி
யூன மொன்னல ருழுத்தா தோம்புக வெமை யல்லிலல்லே.

(இ - ள்) வானத்திற் றங்குபவனும், பூமியினிடத்து வந்து தங்குபவனுமாகிய அக்கினி, எல்லா ஓஷதிகளிடத்திலும் வந்து புகுந்தான்; தனது அஸாதாரண சக்தியினால் எங்கு நிறைபவனாகிய வைசுவாநராக்கினி பகலிலும் இரவிலும் சத்ருருக்கள் எங்களை யிம்சிக்காதபடி காக்கட்டும்—(எ - று) வைசுவாநரன், எல்லா நரர்களுக்கும் நேதா அல்லது ஸ்வாமி அதாவது அக்கினியென்பது பொருள்.

3. மேவுக வுனதிவ் வுண்மை; வைச்சுவாநர வெம்மாடே
ஓவறு தனமிகுந்தோ ருறைக சூழ்ந்(து); எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானும்
மேவு மித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) உன்னுடைய அது (பாதுகாப்பு) கர்மபலனைத் தருவதாகப் பொருந்தட்டும். வைசுவாநரனே! எம்மிடத்து, தனகாமிகளாயுள்ள தனமிகு புத்திரர்கள் சூழ்ந்துறையட்டும். எங்களுடைய ஸ்தோத்திரத்தைப் பூமியும், வானமும், ஸிந்துவும், அதிதியும், மித்திரனும், வருணனும் விரும்பிக் காக்கட்டும்—(எ - று) இச்சூக்தம் சாதுர்மாஸ்யாரம்பத்தில் வைசுவாநரனையும் பர்ஜன்யனையும் துதிக்க உபயோகப்படுத்துவது.

வருக்கம் 6.

## 99. மண்டலம் 1. அநுவாகம் 15 சூக்தம் 6.

1 இருக்குக் கொண்டது

ரிஷி: மரீசி புத்திரன் கசியபன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அக்கினி.

## அஷ்டகம் 1. அத்தியாயம் 7.

1. சாதவேதனுக்குச் சோமச் சாற்றினைப் பிழிவோம் ; ஒன்னார்
தீதுறு நிதியை யன்னோன் றீய்க்க ; வெந்துயரை முற்றும்
மோதுற வீட்டி யெம்மை மோசிக்க வங்கி, நாவாய்
ஓதுற நதிகடப்பித் துக்கரை விடுத்த லொத்தே.

(இ - ள்) ஜாதவேதஸனுக்காக ஸோமாபிஷவஞ் செய்வோம். பகைவரது தனத்தை யவன் சுட்டு நாசமாக்கட்டும். நாவாய் ஆற்றைக் கடந்து அக்கரையிற் சேர்ப்பது போல அக்கினி எங்களது துக்கத்தைக் கெடுத்து அதினின்றும் எம்மை விடுவிக்கட்டும்—(எ - று) ஜாதவேதஸன் என்னும் பதத்தின் பொருளை, மண். 1 சூக். 44 ரிக். 1-ல் பார்க்க.

### வருக்கம் 7.

## 100. மண்டலம் 1. அநுவாகம் 15 சூக்தம் 7.

19 இருக்குக்கள் கொண்டது.

ரிஷிகள் ; வ்ருஷாகிரன் என்னும் ராஜரிஷியின் புத்திரர் ஐவர் வார்ஷாகிரர். அவர் ரிஜ்ராச்வன், அம்பரீஷன், ஸஹதேவன், பயமானன், ஸுராதஸன் என்பவராம்.

வடமொழிச்சந்தம் : த்ருஷ்டுப். தேவதை : இந்திரன்.

இச்சூக்தம் தசராத்திரத்தில் 6-வது பகலில் மருத்துக்களோடு கூடிய இந்திரனைத் துதிப்பதற் குபயோகப்படுவது.

1. அருத்தியையளிப்போன், வீரமார்ந்துளோர் தம்மாற்சூழ்ந்தோன்,
பெருத்தநன் மகிமைவாய்ந்தோன், பிருதுவி வான வண்ணல்,
பொருத்து வோனீரை, நண்ணும்போரினி லழைக்க நிற்போன்
மருத்துவ ரிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) இச்சையை யளிப்பவனும், வீரர்களாற் சூழப்பட்டவனும், மகிமை வாய்ந்தவனும், பூமி வானங்களுக்கு ஈசுவரனும், நீரைத் தருபவனும், யுத்தத்தில் ஸ்தோதாக்களாலழைக்கப்படுபவனும், மருத்துக்களாற் சூழப்பட்டவனுமாகிய விந்திரன் எங்களை ரட்சிக்கட்டும்—(எ - று)

2. பரிதியிற், கிட்டலாகாப் பாதையை யடைந்தோ, னெவ்வெச்
செருவினுந் தன்னோ டேகுஞ் சிநேகிதர் கூடி வண்மைக்
குரிய வுத்தமன், வறுப்போன், ஒறுத் தகிகொல்லுஞ் சீலன்,
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) சூரியனைப்போல, நெருங்க முடியாத பாதையோடு கூடியவனும், எல்லா யுத்தத்திலும் தன்னோடு கூடச்செல்லும் சினே

கிதர்களோடு கூடியவனும், தனது உத்தமதான சீலனும், (அசுரர்களை) வெறுப்பவனும் (வாட்டி, யவர்களை வறட்டுபவனும்), விருத்திர ஹந்தாவும், மருத்துக்களோடு கூடியவனுமான இந்திரன் எமக்குத் துணையாக நிற்கட்டும்—(எ - று) அஹி, அகி, விருத்திரன்.

3. முரணொடு பிறர்தடாத் தன் முன்புறு கிரண, மென்றின்,
றரமுறு நீர்பிலிற்றச் சாருவோன், பகைகடந்தோன்,
உரமுறு மாண்மை தன்னா லொன்னலர் தமை யொறுப்போன்,
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) பிறராற்றடுக்க முடியாத தனது பலம்பொருந்திய கிரணங்கள் வானத்திலுற்ற நீரைக் கொட்டுவிக்கும் வண்ணம், சூரியனைப்போல வருபவனும், பகையைக் கடந்தவனும், தனது பும்ஸத்துவத்தால் சத்துருக்களை வெல்லுபவனும், மருத்துக்களோடு கூடியவனுமாகிய இந்திரன் எங்கட்குத் துணையாக விருக்கட்டும்—(எ - று) என்றின்—சூரியனைப்போல்.

4. தாத்துறு மங்கிராக்க டம்மிலுத்தமன், பேர்வள்ள
லருத்தியை யளிப்போர் தம்மி, லன்பரி லன்பன், போற்றற்
குரித்துளோர் தமி லுயர்ந்தோ, னேதுவார் தம்மின் மூத்தோன்,
மருத்துவ ரிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) அவ்விந்திரன், நடையிற் சிறந்தவர்களாகிய அங்கிரஸர்களி லுத்தமனும், இச்சைகளை யளிப்பதில் வள்ளலும், அன்பர்களி லன்பனும், பூஜிக்கத்தக்கவர்களில் உயர்ந்தவனும், ஸ்தோதாக்களிற் பெருமை வாய்ந்தவனுமானோன். மருத்துக்களோடு கூடிய இந்திரன் எமக்குத் துணை செய்யட்டும்—(எ - று) அங்கந்தி கச்சந்தி இத்யங்கிரஸோ கந்தார : நடை சிறந்தோர் என்பார் சாயணர்.

5. உருத்திரர், சுதரைப்போல, வுற்றநல் வலியோன், போரி
லுருத்தெழு பகைவர் தம்மை யொறுப்பவ, னுடன்வசிக்குங்
கிருத்திய ரோடுமன்னங் கிளர்த்திடு மழை பெய்விப்பான்;
மருத்துவ ரிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) அவ்விந்திரன், உருத்திர புத்திரர்களாகிய மருத்துக்கள் தனது குழந்தைகளைப்போலத் துணைசெய்யும் பெருவலிமையை யுடையவன்; யுத்தத்திற் சத்துருக்களை யடக்குபவன்; சமானமான வீடுகளில் வசிக்கும் (கிருதகிருத்தியர்களாகிய) மருத்துக்களோடு கூடி உணவுப் பொருள்களைத் தரும் மழையைப் பெய்விப்பான். அம்மருத்துக்களோடு சேர்ந்துள்ள இந்திரன் எங்களுக்கு உதவி செய்யட்டும்—(எ-று.) மருத்துக்கள் உருத்திர புத்திரர்களென்

பதை மண். 1 சூக். 14 ரிக். 3-ற் பார்க்க. ஸநிளேபி: என்பது மூலபதம்; உடன்வசிக்குங் கிருத்தியர்களென்றூர் செய்யுளில். அச்சொற்றொடருக்கு மருத்துக்களென்பதே பொருள். ச்ரவஸ்யாணி கீர்த்திக்குரிய தொழில்களென்பார் மேனுட்டாசிரியர். அற்றேல், 'கிருத்தியரோடு கீர்த்தி கிளர்ந்திடுந் தொழிலையாற்றும்;' எனப் பாடபேதமாகக் கொள்க.

வருக்கம் 8.

6. கருவத்தை யடக்குவோ, னற் கண்ணியர்பதி, யுத்தத்தில்
மருவிய கருத்தா, வன்றிப் பலருமே வணங்கு நாதன்,
நிறுவுக வென்றூ ழின்று நேடு மெம்புருடரோடு;
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) (சத்துருக்களால் அபகரிக்கப்பட்ட பசுக்களுக்காக அவர்களோடு யுத்தத்துக்குச் செல்லும் ரிஜிராச்வான் முதலியவர்கள் இந்த ஸூக்தத்தாற் றுதித்தார்கள்.) அவ்விந்திரன் கர்வமுள்ள கோபிஷ்டர்களை யடக்குவோன்; கண்ணியர்களுக்கு ஸத்பதி; யுத்தத்திற்குக் கர்த்தாவாம்; அன்றியும் பல யக்ஞகர்த்தாக்களாலு மழைக்கப்படுபவன்; அவன் இன்றைக்கு எங்கள் வீரர்களுக்குச் சூரிய வெளிச்சத்தைத் தரட்டும் (எமது சத்துருக்கள் இருட்டிலுழலட்டும் என்றபடி.) மருத்துக்களோடு கூடிய விந்திரன் எமது துணையாக நிற்கட்டும்—(எ-று.) நிறுவுக ஒலி யெதுகை.

7. மருவவன் றுணைகள் வீரப்போரினின் மலர்ச்சி யீந்தார்;
தெரிதரு மவனைச் சேமக் காவலாச் சேர்த்தார் மண்ணோர்;
கருதுறு பலன்றோர் கன்மம் யாவைக்கு மவனே யீசன்;
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) அவனுடைய உதவிகளாகிய மருத்துக்கள், வீரம் பொருந்திய யுத்தத்தில் 'ப்ரஹர பகவோ ஜஹி வீரயஸ்வ' ஆதிய வசனங்களை அவன்பொருட்டுக் கூறி, அவனைச் சந்தோஷப்படுத்துகிறூர்கள். பூமியிலுள்ள மனிதர்கள் தமக்கு ரக்ஷணையோடு கூடித் தனத்தைப் பாதுகாப்பவனுக அவனைச் சேர்த்துக்கொள்ளுகிறூர்கள். பலனைத் தரும் கர்மங்களுக்கெலாம் ஓரே நாயகனுக அல்லது ஈசனுக வவனே யாகிறூன். மருத்துக்களோடு கூடிய இந்திரன் எங்களைக் காத்து உதவிசெய்யட்டும்—(எ-று.) துணைகள், மருத்துக்கள் என்பது சாயணருரையிற் கண்டது.

8. நரர்களும் வீரன்றன்னை நன்னிதி யோடு காவ
றெரிதர வயக்கு மாறு சேர்த்துவார்; பார்வை யாக்கு

## மண்டலம் 1. சூக்தம் 100.

*மிருளினுஞ் சோதி தன்னை யேஉற வவன் விடுத்தான்*
*மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.*

(இ - ள்) ஸ்தோதாக்களாகிய மனிதர்களும், செல்வத்தையும் பாதுகாப்பையும் தங்களுக்குத் தரும் வண்ணம், வீரனாகிய இந்திரனை யடைவார்கள். பார்வையை மறைக்கும் இருட்டிலும் நல்ல வெளிச்சந் தோன்றும்படி அவன் செய்தான். மருத்துக்களோடு கூடிய அவ்விந்திரன் எமக்குத் துணைசெய்யட்டும்—(எ-று.) சித்த வியாமோகத்தைத் தரும் இருட்டிலும் சித்தத் தெளிவாகிய ஒளியை யளித்தானென்றும், சத்துரு பீடை நேர்கின்ற ஸங்கிராமமாகிய இருட்டிலும் விஜய லட்சணமாகிய வொளியை யளித்தானென்றும் கொள்ளலாம். யாத்தல், கட்டுதல், ஈண்டு மறைத்தல். வீரனென்றது இந்திரனை.

9\. *உரமுறு பகைவ ரேனு மொடுக்குவா னிடக்கரத்தால்;*
*தரவவி யீந்தவற்றைத் தட்சிணக் கரத்தா லேற்பான்;*
*வரமுறு கீர்த்தி போற்று மவனுக்கும் வளமளிப்பான்;*
*மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.*

(இ - ள்.) வலிமை பொருந்திய சத்துருக்களையும் அவ்விந்திரன் இடதுகையா லடக்குவான். யஜமானர்கள் தரும் அவிப்பொருள்களை யெல்லாம் வலதுகர மொன்றினாலேயே வாங்கிக்கொள்வான். (ஏழைமையால் யாகஞ் செய்யமுடியாமல்) ஸ்தோத்திர மாத்திரங் கூறு மவனுக்கும் செல்வத்தைத் தருவான். மற்றது முன்போல—(எ-று.)

10\. *நரர்களி னீட்டத்தோடு நற்பய னீவான்; வல்லே*
*யுருளுறு தேர்களோடு மொளிருவான் மாந்தர் யார்க்கும்;*
*கருதலர் தம்மை யாண்மைக் கலியினா லடக்குவானால்;*
*மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.*

(இ - ள்) நரர்களாகிய மருத்துக்களுடைய கூட்டத்தோடு வந்து நல்ல பலன்களைத் தருவான்; வேகமாக வுருண்டோடுந் தேர்களோடு எல்லா மனிதர்களது கண்ணிலும் படுவான். சத்துருக்களைத் தனது பலத்தினா லடக்குவான். மருதரோடு கூடிய அவ்விந்திரன் நம்மை இரட்சிக்கட்டும்—(எ-று.)

### வருக்கம் 9.

11\. *உறவினரோடு மல்லா வேதிலரோடும் போர்க்குப்*
*புருகுதன் வெற்றி யீர்சார்ப் புத்திர பவுத்திரர்க்குந்*
*தரவெனச் செல்லும் போது சயந் தங்கியவனே யாவான்*
*மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.*

(இ - ள்) (புருஹூதன்) பலராலு மழைக்கப்படுபவனுகிய விந்தி ரன் மருத்துக்களோடு கூடப் பந்துக்களோடும் பந்துக்களல்லாதவ ரோடும் உபயவிதமான புருஷர்களது புத்திர பவுத்திரர்களுக்கும் வெற்றியைத் தருவதற்காகயுத்தத்திற்குச் செல்லும்போது அவனே ஜயம் பெற்றவனுகிருன். (வேறென்ன சொல்வது? உத்தமஸ் தோதாக்களாகிய வெங்களுக்கும் அவனே ஜயந்தருபவ னுகட்டும்.) மருத்துக்களோடு கூடிய விந்திரன் எமக்குத் துணை செய்யட்டும்— (எ-று.) மேனுட்டாசிரியர் 'அபாம்' என்பதற்குத் தண்ணீரையெனப் பொருள் கொண்டு தண்ணீரையும், புத்திர பவுத்திரர்களையும் தரு வதற்காக யுத்தத்துக்குச் செல்லும்போது என்பார். ஆனுல், சாயணர் 'தேஷாமுபயவிதாநாம், அபாம் இந்த்ரம் ப்ராப்நுவதாம் புருஷாணும்' என்று பொருள் கூறுவர். பந்துகள் பந்துத்துவமில்லாதவர்களென்னு மிருவகைப்பட்டு இந்திரனை யடையும் புருஷர்களது புத்திர பௌத் திரர்களுக்கு மென்பது பொருள். வடமொழியில் மீஹ்ளாமென்றுள் ளது. மீஹ்ளா, தனம் அதற்குக் காரணமான யுத்தத்தைக் குறித்த தென்பர் சாயணர்.

12. *தரித்தவன் குலிசந், தாசர் தமைக்கொலும் பீம, னுக்ரன்,*
*கருத்தி னூற்றவர் துதிப்போ, னுபிரங் கலையுணர்ந்தோன்,*
*பெருத்தவன், சோம மென்ன வலியின, னைவர்ப்பேணி*
*மருத்து வரிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.*

(இ - ள்) (ஒருவராலும் தாங்க முடியாத) வச்சிராயுதத்தைத் தாங்கி யுள்ளவனும், தஸ்யுக்களைக் கொல்லுபவனும், பயங்கரமானவ னும், உக்கிரனும், நூற்றுவரால் கருதித் துதிக்கப்படுபவனும், ஆயி ரங் கலைகளையுணர்ந்தவனும், மஹானும், ஸோமத்தைப்போல வலிமை யுள்ளவனும், ஐந்து வகைபட்ட ஜனங்களையும் ரட்சிப்பவனும், மருத் துக்களோடு கூடியுள்ளவனுமாகிய இந்திரன் எங்களுக்குத் துணை செய்க—(எ - று.) ரிப்வா வென்பதற்கு 'உருபாஸமானுமஹான்வா' வென்பர் சாயணர். ஒளி பொருந்தியவன் அல்லது மஹானென்றுங் கூறலாம் என்பது பொருள். ஐவகை ஜனங்கள் நான்கு வருணத்தா ரும் நிஷாதரும்; அல்லது கந்தருவர், அப்ஸரஸ், தேவர், அசுரர், ராட் சஸர் என்னு மைவரு மாவா ரென்பார் சாயணர். துர்வசர் யதுக்கள் அநுக்கள் த்ருஹ்யுக்கள் புருக்கள் என்னும் ஐந்து ஆரியர் குடியேற்ற வகுப்பைக் குறிக்குமென்பார் மேனுட்டாசிரியர். மண் 1 சூக். 7 ரிக். 9 பார்க்க. நூறு, ஆயிரமென்னு மெண்கள் மிகுதியைக் குறித்து நின்றன.

13. *தருபவன் வானினீரைத், தாங்குவோ னெளியை யென்றின்,*
*உருமுவினதை, னன்புக் கிரியையன், மிகத் தன் சம்பத்*

திரங்குவிப்பவ னென்னுரை, யிவற்குறுந்தன தானங்கள்;
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) மழைநீரைத் தருபவனும், சூரியனைப்போலப் பிரகாச முள்ளவனும், கர்ச்சனைக்கு நாதனும், லோகானுக்கிரஹக்கிரியைக ளோடு கூடியவனும், தனது வச்சிராயுதத்தாற் சத்துருக்களை யடிப் பவனுமாகிய விவ்விந்திரனைத் தனங்களும் தானங்களும் வந்தடை யும். மருத்துக்களோடு கூடிய இந்திரன் எமக்குத் துணையாக நிற்கட் டும்—(எ - று.) உருமு, இடி, கர்ச்சனை.

**14.** உரைபெறு வலிக்கு மான, மோங்குரோதசி யெப்பாலும்
புரையற வென்றுஞ் சூழ்வான்; போற்று மெஞ்செய்கை மாட்டு
விரைவுற வாமோதித்தெந் தீவினை வீட்ட வன்னோன்;
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) பலராலும் புகழ்ந்துரைக்கப்படும் பலத்துக்கு அவன் அளவுகோலாம் (அல்லது உவமையாவான்). ரோதஸீ அல்லது வானம் பூமிகளின் எல்லாப் பக்கத்திலும் எப்போதுஞ் சூழுவான். அவன் எங்களது யாக கர்மத்திற் சந்தோஷத்தை யெய்தி யெங்களது பாபங் களைத் தூர நீக்கட்டும். மற்றது முன்போல—(எ - று.)

**15.** கரையறு தெய்வத் தன்மை கண்டவன் வலியி னெல்லை
இறையள வடைந்தா ரில்லைத் தேவர் மர்த்தியரு நீரும்;
அரிதெனு மவன தாண்மை வான்புவியினைக் கடக்கும்;
மருதரை யிணைந்த வேந்தன் மருவி யெந்துணையா நிற்க.

(இ - ள்) கணக்கில்லாத வன்மை முதலிய தெய்வத் தன்மை சிறந்த அவ்விந்திரனது சாமர்த்தியத்தின் எல்லையை வஸுவாதிய தேவர்களும் மனுஷ்யரும் நீரும் அடைந்ததில்லை. சத்துருக்களை யடக்கும் அருமை வாய்ந்த வவனதாண்டன்மை வானம் பூமி யிரண் டுக்கும் மேற்போனதாம். மற்றது முன்போல—(எ - று.) இறை ஒலி யெதுகை.

வருக்கம் 10

**16.** கருமையுஞ் செம்மை தானுங் கலந்தது, நீளுறுப்பிற்
றிருவுறு மணியிற் சொர்க்கத் துறைவது, ரிஜிராச்வற்கு
மருவுறு தனத்தைச் சேர்க்குந் தேர்நுக மன்னி யீர்க்கும்
பரி, களிப்பளிப்ப, தோர நின்றதா னரர் சேனைச்கண்.

(இ - ள்) கறுப்பும் சிவப்பும் கலந்ததும், தீர்க்கா வயவங்களோடு கூடியதும், கலனை முதலிய குதிரை யணிகளைத் தரித்ததும், விண்

ணுலக வாசியும், ரிஜ்ராசுவனுக்கு வேண்டிய செல்வத்தைச் சேர்க்கும் (இந்திரனமர்ந்துள்ள) தேரின் நுகத்தடியிற் கட்டப்பட்டு அத்தேரை யிழுப்பதுமான குதிரை (அல்லது சாயணருரைப்படி குதிரைப்பந்தி) காலாட்சேனைகளுக்கு மத்தியில் ஆற்றலாதத்தை யளிப்பதாய் நிற்கக் காணப்பட்டது—(எ-று.) அக்குதிரைப் பந்தியோடு கூடிய இந்திரன் யுத்தத்தில் அநுக்கிரஹஞ் செய்யட்டும் எனக் கூட்டுக வென்பார் சாயணர். இவ்விருக்கிற் கூறப்படும் விசேஷணங்களை ஆறு குதிரை களின் பேராமென்று லுட்விக்கென்பவர் கூறுவர். வெற்றி பெற்ற பின்னர் இதுமுதல் நான்கு செய்யுட்களும் சேர்க்கப்பட்டன போலு மென்பார் மேனாட்டாசிரியர்.

17. இச்சையை யளிக்கும் வேந்தே யெழில் விருஷாகிரன்றன்
மெச்சுறு பரிகள் ரிஜ்ராச்வானனும் பக்கல் மேவு
முச்சித வம்பரீஷன் சகதேவன் சுராதன் ருமு
மிச்சுதி நீயுவக்க வியம்பினர் பயமானனே.

(இ-ள்) இச்சைகளை வர்ஷிக்கும் இந்திரனே! விருஷாகிரன் புத்திரர்கள் ரிஜ்ராச்வானனும் அவன் பக்கத்திலுள்ள அம்பரீஷன், ஸஹதேவன், ஸுராதன், பயமானன் என்னு மிவர்களும் இந்த ஸ்தோத்திரத்தை யுனக்கு ஸந்தோஷமுண்டாகும்படி கூறினார்கள்—(எ-று.) இவ்வார்ஷாகிரர்கள் இம்மறையைக் கண்டவர்கள். அவர்கள் பெயர்கள் காரணப்பெயர்களாகத் தோன்றுகின்றன. சாயணர் அவற் றிற்குரை கூறுவர். ரிஜ்ராச்வன் வேகமான குதிரைகளோடு கூடிய வன். ஸஹதேவன், தேவர்களோடு வர்த்திப்பவன். பயமானன் பய மில்லாதவன். ஸுராதன், நல்லதனத்தோடு கூடியவன். அம்பரீஷன் சப்தத்தோடு செல்பவன் என்பதாம். சுதி, சுருதி, மந்திரம்.

18. புருகுத னிவர்களோடு புவிநிறை தாசர் சிம்யு
விருவர்தந் தொகையை யாயுதத்தினு லெய்து கொன்றான்;
பொருவறு வெண்ணிறத்துப் புல்லுந ரோடு பண்பின்
மருவிய குலிசன் றந்தான் மண், கதிர், நீர் மூன்றும்மே.

(இ-ள்) புருஹூதனுகிய விந்திரன் இம்மருத்துக்களோடு கூடிப் பூமியில் நிறைந்திருந்த தஸ்யுக் கூட்டத்தையும் சிம்யுக்களையும் தனது ஆயுதத்தினால் அடித்துக்கொன்றான். வெண்மையான நிறத்தோடு கூடிய நண்பர்களாகிய மருத்துக்களோடு பொருந்திய வச்சிராயுதந் தரித்த அவ்விந்திரன் (சத்துருக்களுடைய) பூமியையும், (விருத்திர னால் மறைக்கப்பட்டிருந்த) சூரியனையும், (அவனால் கட்டிவைக்கப்பட் டிருந்த) மழை நீரையும் எமக்களித்தான்—(எ-று.) தஸ்யுக்கள் வெட்கமற்ற கள்வரென்றும், சிம்யுக்கள் கொல்லும் மறவர்கள் அல்

லது ராட்சஸர்கள் என்றும் பொருள். இவர்கள் ஆரியரோடெதிர்த்த இந்நாட்டுப் பூர்வ குடிகளென்பார் மேனாட்டாசிரியர். வெண்மை நிறத்தைச் சுட்டியது கருநிறமுள்ள பூர்வகுடிகளினின்றும் வெண்ணிற ஆரியர்களைத் தோற்றுவிக்கப்போலு மென்பார் மேனாட்டாசிரியர்.

19. தேவர்தம் வேந்த னென்று மெம்வயிற் சேர்ந்து பேசல்;
தாவமே யின்றிச் செல்வந் தாங்க யாம்; எமதிப்போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவுமித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) (தேவ ராஜாவாகிய) இந்திரன் எப்போதும் எமது சார்பாகவே பரிந்து பேசட்டும். கஷ்டமில்லாதபடி யாங்கள் செல்வத்தை யடையட்டும். எங்களுடைய இப்பிரார்த்தனையைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் ஆகிய இவர்கள் விரும்பிக் காக்கட்டும்—(எ-று.)

வருக்கம் 11.

## 101. மண்டலம் 1 அநுவாகம் 15 சூக்தம் 8.

11 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: அங்கிரஸன் புத்திரன் குத்ஸன். வடமொழிச் சந்தம்: 1-7 ஜகதி, 8-11 த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. பிணைந்தரிஜிச் வாேனாடு கிருட்டினன்றன்
கருவறுத்துப் பிறங்கி யோனுக்
கிணைந்தவவிப் பொருளோடு மேத்துமறை
நனியாமு ரின்பார்ப் பாற்கே;
திணிந்த வலக்கயக்குலிச, னிச்சையளிப்
பவ, னெம்மைச் சேர்ந்து காவ
லணைந்த மருத்துவனை யெமதருந்துணைவ
னாகவெனா வழைப்போ மன்றே.

(இ - ள்) ரிஜிச்வான் என்னும் ராஜரிஷியைத் தோழனாகக் கொண்டு, கிருஷ்ணன் என்னும் அசுரனது பத்தினியின் கருப்பத்திலுள்ள சிசுகூடச் சாகும்படி கொன்று, இன்பத்தை நிறைப்பவனாகிய இந்திரனுக்கு அவிப்பொருளை யளித்து (ரித்விஜர்களே!) ஸ்தோத்திரங்களைப் பாடுவீர்களாக. வலதுகரத்தில் வச்சிராயுதத்தைத் தாங்கினவனும், அபீஷ்டங்களை யளிப்பவனும், மருத்துக்களைத் துணைக்காவலர்களாகப் பெற்றவனுமான அவ்விந்திரனை யெமதருந் துணைவனாகக் கூவுவோம்—(எ-று.) கிருஷ்ணன், கருப்புநிற

முள்ள ஓரசுரன். அவனது வம்சமே யில்லாமற் செய்தானென் பார் கருவறுத்து என்றார். ரிஜிச்வான் (மண். 1 சூக். 51 ரிக் 5 பார்க்க) ஒரு ராஜரிஷி. இந்திர பக்தி மிக்கவன், இந்திரனால் காப் பாற்றப்பட்டவன்.

2. துணிந்தமனக் கோபமதின் வியம்ஸன்சம்
பாணிவரைத் துணித்துக் கொன்றோன்,
பிணைந்த விரதம் பொய்த்த பிப்புருவைச்
சேதித்தோன், பெரிதும் வற்று
திணைந்தமகன் சுட்டுணனை மூலத்தோ
டறவொழித்தோ னிந்திரன், சீ
ரணைந்த மருத்துவனை யெமதருந்துணைவ
னாகவென வழைப்போ மன்றே.

(இ - ள்) பொங்கிவரும் கோபத்தினால் (தோள் போனவனை) வியம்ஸனையும் (அல்லது விருத்திரனையுமென்பார் சாயணர்) சம்பரா சுரனையும் கொன்றவனும், விரதாநுஷ்டானமில்லாத (கர்ம விரோதி யாகிய) பிப்புருவைக் கொன்றவனும், தான் கொஞ்சமும் வற்றாமல் (எல்லாப் பொருள்களையும் வற்றடிப்பவனாகிய) சுட்டுணனையும், ஸமூல மாக ஹதஞ் செய்தவனு மாகிய இந்திரனை, மருத்துவரைத் துணையாகக் கொண்டவனை, யாங்கள் எங்களுக்குத் துணைசெய்ய வழைப்போம்— (எ-று.) இவ்வசுரர்களைப்பற்றி மண் 1 சூக். 51 ரிக். 5-ல் பார்க்க.

3. இணைந்த வான்புவி யெவன்ற னூரப்பெருக்கைத்
தோற்றுபவை, யெவன்ற னோன்மைத்
துணிந்து வருணன் றானுஞ் சூரியனுங்
கடக்கரியர், தோயம் வாய்ந்து
புணர்ந்த பலநதி களுமெவ் விந்திரன்ற
னாணைவழி போகு, மச்சீ
ரணைந்த மருத்துவனை யெமதருந் துணைவ
னாகவென வழைப்போ மன்றே.

(இ - ள்) பூமியும் வானமும் எவன் பலத்தைத் தோற்றுவிக் கின்றனவோ, எவனது விரதங்களைக் கடவாது வருணனும் சூரிய னும் ஒழுகுகிறார்களோ, எந்த இந்திரனது ஆக்ஞைப்படி நதிஜலங் கள் ஓடுகின்றனவோ, மருத்துவரைத் துணையாகக்கொண்ட அந்த இந்திரன் எங்களுக்கு உதவியாகவேண்டுமென்று அவனை யழைப் போம்—(எ - று.)

4. புணர்ந்தவுரக் குதிரைகளுக் காக்களுக்குப்
பதி, தனது போக்கோ, னென்றும்
பணிந்தாற்றுங் கன்மங்க ளெவற்றிடத்துந்
திரமாகப் பாரித்தோன், போற்
றணைந்துவாரான், வலியனெனு மகமாற்றான்
றனைவதைப்போ, னரிசால் வேந்த
னணைந்த மருத்துவனை யெமதருந்துணைவ
னாகவென வழைப்பா மன்றே.

(இ - ள்) பலம் பொருந்திய குதிரைகளுக்கும் பசுக்களுக்கும் நாயகனும், (ஸ்வதந்திரனும்) தன் போக்கே போக்காக வுள்ளவனும், எப்பொழுதும் வணங்கிச் செய்கின்ற யாககர்மங்க ளெல்லாவற்றிலும் ஸ்திரமாக வந்து நிலைப்பவனும், ஸ்தோத்திரங்களா லடையப்படாதவனும், யாகஞ் செய்யாதவன் வலிமையுடையவனாயினு மவனைக் கொல்லுபவனும், மருத்துவர்களைத் துணையாகப் பெற்றவனுமாகிய இந்திரனை எங்களுக்குத் துணைசெய்யும்படி யழைப்போம் (எ - று.) போற்றணைந்து வாரான் என்பதற்கு ஆரித: என்று வடமொழியிலுள்ளது. அதற்கு ப்ரத்யருத: ஸ்தோமாந் என்று யாஸ்கரும், 'ஸ்துதிபி: ப்ராப்தோ ந பவதி' என்று சாயணரும் உரை கூறுவர். வெறும் ஸ்தோத்திரத்திற்கு மாத்திரம் வாராதவன், யாககார்யங்கள் செய்தாற்றான் வருபவன் என்று பொருள் சொள்ளவேண்டும். வலியனெனும், வலியனெனினுமென்க.

5. தணந்திடந் தோறுயிர்த் தொழுகும் பிராணிகளா
னிறையுலகப் பதியாச் சார்ந்தோன்,
கொணர்ந்தவனுக் கேளமுதலிற் பிராமணற்காக்
கண்டெடுத்துக் குவலயத்தே,
யணங்குறத்தாசக் கூட்டத்தாரைக் கீ
ழழுத்தியவ, னரிசீர் சான்றே
யணைந்தமருத்துவனை யெம தருந்துணைவ
னாகவென வழைப்பா மன்றே.

(இ - ள்) இடம்விட்டுப் பெயர்ந்து எல்லாவிடங்களிலும் சுவாஸம் விட்டுக்கொண்டு செல்லும் பிராணிகள் நிறைந்த உலகத்துக்கு நாயகனும், அங்கிரனென்னும் பிராஹ்மணனுக்காகப் பணியென்னு மசுரனாலடைத்து வைக்கப்பட்ட பசுக்களை எல்லாத் தேவர்களுக்கும் முதலிற் கண்டுபிடித்துக் கொடுத்தவனும், தஸ்யுக்களைத் தன்பமுறும்படி யடித்துக் கீழ்ப்படுத்தியவனும், இந்திரனும், மருத்துக்களைத் துணையாக்கிக்கொண்டவனுமாகிய வவனை யெமக்குத் துணையாகென வழைப்

போம். (எ-று.) உலகமுழுதும் பரந்த பிராணிக்கூட்டங்களுக்கு அரச னென்றுஞ் சொல்லலாம். பணியொளித்த பசுக்களை மீட்ட கதையை மண். 1 சூக். 6 ரிக். 5 பார்க்க.

6. திணிந்தவலிச் சூரர்களாற் பயமடுத்த
 கோழையாற் சிறக்கக்கூவி
மணந்தழைக்கப் பெறுபவன், வெற்றியை யியைந்தோர்
 புறங்காட்டும் வலியி லாள
ரிணைந்தழைக்கு மிந்திர, னெல்லாப் புவனத்
 தவருநனி யேத்துஞ்சீரி
னணைந்தமருத் துவனையெம தருந்துணைவ
 னாகவென வழைப்பா மன்றே.

(இ - ள்) பலம்பொருந்திய சூரர்களால் யுத்தத்துக்கும் பய மடைந்த கோழையர்களாற் றுணைக்கு மழைக்கப்பெறுபவனும், ஜய மடைந்தவனும் தோற்றோடுபவனுமாகிய இருவரும் அழைக்கநிற்பவ னும், எல்லாவுலகத்தவர்களும் நன்றாக ஸ்தோத்திரஞ் செய்யும் சிறப் புப் பொருந்திய விந்திரனும் மருத்துக்களைத் துணையாக வடைந்த வனு மானவனை எமக்குத் துணை செய்ய வழைப்போம்—(எ-று.)

வருக்கம் 12

7. பணிந்தொழுகு முருத்திரர்கள் பாவுதலத்
 தொளியோடும் பரிந்து செல்வான்;
அணங்குமகல் வெளியதனி லுருத்திரரோ
 டோக்கமுற வணைவாள் வல்லே;
வணங்குரைசார் மறை, யரியைச் சிறந்து புகழ்ந்
 தவன்கீர்த்தி வாய்ப்பக் கூறும்;
அணைந்த மருத்துவனை யெமதருந்துணைவ
 னாக வென வழைப்பா மன்றே.

(இ - ள்) (சூரிய ரூபமாய்ப் பிரகாசிக்கு மிந்திரன்) உருத்திரபுத்தி ரர்களாகிய மருத்துக்கள் உலவுமிடத்து விரும்பிச் செல்லுவான். இடம் பரந்த அந்தரிட்சத்தில் அவ்வுருத்திர புத்திரர்களோடு (ரோத ஸீயாகிய) மாதும் (அல்லது சாயணருரைப்படி மத்திமை வாக்கும்) விஸ்தாரமாகப் பரந்து விரைவாகச் செல்லுவாள். வணக்கம் பொருந் திய மொழிகளோடு கூடிய ஸ்துதியும், இந்திரனைப் புகழ்ந்து அவனது கீர்த்தியைப் பரக்கக் கூறும். மருத்துவர்களோடு கூடிய அவ்விந்திரனை எமக்குத் துணையாகுமா றழைப்போம்—(எ - று.) அம்மாது ரோதஸீ யென்னும் ருத்திரன் மனைவியென்பார் லுட்விக் (Ludwig). ஆனால்

சாயணர் அது மாத்யமிகாவாக் கென்றும் இது இந்திர ஸ்துதியினிடையில் வந்த மருத்துவர் புகழ்ச்சி யென்றும் சொல்லுவார். முதலடிக்குச் சாயணர், ஆத்யாத்மிகப்பிராண ரூபமாயுள்ள மருத்துக்கள் செல்லுமிடமெல்லாம், அல்லது இறந்து போனவர்களுக்காக அழும் பிராணிக் கூட்டங்களிடத்தெல்லாம், சூரியாத்மாவாய்ப் பிரகாசிக்கும் இந்திரன் செல்லுவானெனப் பொருள் கூறுவர்.

**வேறு**

8\. மருத்துவ ரிணைந்தோ யுண்மைத் தனநிறை வள்ளலே நீ,
வரத்துயர் மாடத்தேனும் வரமிலாக் குடிற்கணேனுந்
தரத்துளங் களித்தபோதுந் தழைக்க வெம்மகத்தின் கண்ணே;
யருத்தியோ டுன்னன்புக்கென் றவியினை யிழைத்திட்டோமே.

(இ - ள்) மருத்துவர்களோடு கூடியவனே! ஸத்தியதன நிறைந்த வள்ளலே! உத்கிருஷ்டமான மாளிகையிலேனும் அற்பக் குடிசையிலேனும் திருப்தியோடு ஸந்தோஷங்கொண்டபோது எமது யக்ஞத்தை நோக்கி வருவாயாக. உனது அன்பைப்பெறு நிமித்தமே யாங்கள் அவிப்பொருள்களைத் தயார்செய்தோம்.—(எ - று.)

9\. நல்வலி யிந்திரா, உன் றன்னையே நாடிச் சோமம்
பல்குற வடிக்காநின்றேம்; மறைவளர்ப்பவ, பலியை
நல் கினம்; மாவியைந்தோய், மருத்துவர் கணத்தோ டண்டிப்
புல்லுக குசை; மகிழ்ச்சி பொருந்துக வெம்மகத்தே.

(இ - ள்) நல்ல வலிமை பொருந்திய விந்திரனே! உனக்காகவே ஸோமம் பிழிந்தோம். மறைகளால் வளர்க்கப் பெறுபவனே! எமது அவிப்பலியை உனக்களித்தோம். குதிரையோடு கூடியவனே! மருத்துவர் கூட்டத்தோடு தருப்பையி லமர்க. எங்களது யக்ஞத்தில் மகிழ்ச்சியை யடைவாயாக—(எ - று.)

10\. உன் னரிமாவி னோங்கு மகிழ்ச்சியை யுறுக வேந்தே;
உன்னிரு தாடைதம்மை யுதட்டினை நனி யங்காக்க;
துன்னு சிங்கார கன்னந் தோய்ந்தவ வுனை மாச்சேர்க்க;
மன்னி யெம்மவியை யேற் றெம் மாட்டுநீ மகிழ்க வீண்டே.

(இ - ள்) இந்திரனே! உனது இரண்டு பிங்கல வர்ணமுள்ள குதிரைகளிடத்துந் திருப்தியடைவாயாக. ஸோமங் குடிப்பதற்காக உனது இருதாடைகளையும் உதட்டையும் (அல்லது சாயணருரைப்படி நாக்கையும்) நன்றாகத் திறப்பாயாக. அழகிய கதுப்பு வாய்ந்தவனே! உன்னைக் குதிரைகள் சுமந்துகொண்டு வருக. எமது அவியுணவை யேற்று எம்மிடத்து மகிழ்ச்சி கொள்ளுக—(எ-று.)

11. பாவுறுவோன் மருத்தோ டொன்னலர்த் தெறுவோன் காவ
லோவுறு வெமக்கு வேந்த னனந்தரல்; எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) மருத்துக்களோடு சேர்த்துத் துதிக்கப்படுபவனும், சத்துருக்களை யோட்டுபவனுமாகிய இந்திரனது பாதுகாப்பிலுள்ள வெமக்கு அவ்விந்திரனால் உணவுப்பொருள் கிடைக்கட்டும். எங்களது இப்பிரார்த்தனையைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் விரும்பிக் காக்கட்டும்—(எ - று.)

வருக்கம் 13

## 102. மண்டலம் 1. அநுவாகம் 15. சூக்தம் 9.

11 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: அங்கிரஸன் புத்திரன் குத்ஸன்; வடமொழிச்சந்தம்: ஜகதி, 11, த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. மகத்துவனே யிப்பெரிய மறையுனக்குத்
தேர்ந்தளித்தேன்; மன்னு முன்ற
னகத்தறிவும் யான்புரியு மத்துதியிற்
றிருத்தியினை யடைந்த தன்றே;
பகைத்தவரை யுடனெறுக்கும் வலியுடைய
விந்திரன்கட் பண்பிற் றேவ
வகைக்கருமம் புரிவோரு முற்சவத்திற்
பொருட்பிறப்பின் மகிழ்ந்தார் மாதோ.

(இ - ள்) மகானே! பெரிய மந்திரமொன்று உனக்காகத் தேடியளித்தேன். உனது புத்தியும் அந்த ஸ்துதியில் திருப்தி யடைந்தது. சத்துருக்களை யடக்கும் வலிமை பொருந்திய விந்திரனிடத்துத் தேவயஜநஞ் செய்யும் ரித்விஜர்கள் உத்ஸவத்துக்காகவும், செல்வந் தோற்றுவதற்காகவும், ஸந்தோஷத்தை யடைந்தார்கள்—(எ - று.)

2. நதியேழு மவன்கீர்த்தி தனைப்பரக்கச்
சுமந்தொழுகும்; நாடு மன்னு
னுதி வபுவை வான் பூமி யந்தரமும்
வயக்கிடுமால்; நோன்பாற்றும் யாம்
அதியன்பி னணைந்திடவு மணைபொருளை
நோக்குறவு மாகாயத்தே
கதிமாறிச் சூரிய சந்திரர்களுத
யாத்தமனங் காட்டும் வேந்தே.

## மண்டலம் 1. சூக்தம் 102.

(இ - ள்) கங்கை முதலிய நதிகளேழும் அவனது கீர்த்தியை விஸ்தாரமாகச் சுமந்துகொண்டொழுகும். அவனது புகழ் நிறைந்த சரீரத்தை வானம், பூமி, யந்தரம் என்னுமிவை (சூரியரூபமாகத்) தாங்கும். இந்திரனே! விரதங்களை யநுஷ்டிக்கும், யாங்கள் சிரத்தை யோடமரவும், பதார்த்தங்களைப் பார்க்கவும், ஆகாயத்தில் சூரிய சந் திரர்கள் மாறி மாறி உதயத்தையும் அஸ்தமனத்தையும் அடைவார் கள்—(எ - று) நதியேழு, மண். 1. சூக். 32. ரிக். 12. பார்க்க. விருத்திரனைக் கொன்றதனால் ஏற்பட்ட மழை ஜலத்தால் ஆறுகள் நிரம்பியோடுவதால் நதி யேழுமவன் பெருமையைக் காட்டுமென்றார். இந்திரனே ஸூர்ய சந்திர ரூபமாக விருந்து பிரகாசிக்கிறானென்பது கருத்து. நுதி, புகழ். ஒன்றுதிக்க ஒன்றஸ்தமிக்குமென்க. இவ் விருக்கு இமயமலை உன்னதப் பனிமலையாவதற்கு முந்திய காலத் தைக் குறியா நின்றது. ஏன்? இந்திரனது செய்கையாகிய மழைப் பெருக்கால் கங்கை முதலிய நதிகள் பெருகுவதைக் கூறுவதாலென்க.

3. பகைவாட்டும் போரதனில் யாந்துதிக்கும்
வெற்றித்தேர், பலர் துதிப்போய்,
மகவானே, தனலாபம் பெறவெமக்கத்
தேரினையே மருவுவிக்க;
தகவா யெம்மனம் போற்று மிந்திரனே
தக்கசுகஞ் சார்ந்த காவல்,
மகவானே, யுனையடுத்து நேசிக்கு
மெமக்கினைய மதிக்கொள்வாயே.

(இ - ள்) மகவானே! பலர் துதிக்க நிற்பவனே! பகைவரை யடக்குகின்ற யுத்தத்தில் யாங்கள் முறைப்படி துதிக்கிற வெற்றி பொருந்திய தேரையே எங்களுக்குப் பொருள் லாபம் ஏற்படும் வண் ணம் தூண்டி யெங்கண் சேர்ப்பாயாக. எங்களது மனம் சிறப்போடுந் துதிக்கு மிந்திரனே! தனவானே! உன்னை யடுத்து நேசிக்கும் எங்க ளுக்குச் சுகம் பொருந்திய பாதுகாப்பை யமைப்பாயாக—(எ - று.) மகவான் தனவான் என்னும் பொருட்டு.

4. உன்றுணையி னேங்கியயா மொன்னாரைத்
தெறுக; வெம துயர் பக்கத்தே
துன்றி யடிக்கடி யெப்போரி னினுமெமக்
குதவிதால்; தோயும் வேந்தே,
யொன்றுதனஞ் சுகமாக வெமக்குறுநல்
வகையதனை யுடனே யாற்றாய்;
கன்றியவெம் பகைவரது வீரியத்தை
மகவானே கடிகுவாயே.

(இ - ள்) உனது துணையை யடைந்த யாங்கள் சத்துருக்களை ஜயிக்கட்டும். எங்களது பக்கத்திலேயே நீ பொருந்தி நின்று எல்லா யுத்தத்திலும் எங்களுக் கடிக்கடி யுதவி செய்வாயாக. இந்திரனே! பொருந்துகின்ற தனம் எங்களுக்குச் சுகமாகக் கிடைக்கக்கூடிய வண்ணம் செய்வாயாக. எங்களோடு பகைத்த வீரர்களது ஆண்மையை, மகவானே, கெடுப்பாயாக—(எ - று.)

5. தனம்யாவுந் தரித்தவனே, யுனைப்போற்று
 மிம்மனிதர் சார்ந்துன் றன்னை
யெனையோம்ப லெனையோம்ப லென்றுபல
 விதமாக வேத்தா நின்றார் ;
மனவேத மியையாத வுனதுறுதி,
 வெற்றியினை மாண்பி னீயும் ;
தனதான மெங்களுக்கே தருந்தேரை,
 யிந்திரனே, தாவுவாயே.

(இ - ள்) தனங்களைத் தாங்கி நிற்பவனே! உன்னை வணங்கும் இம்மனிதர்கள் உன்னைச் சார்ந்து பலவாறாகத் துதிப்பார்கள். வியாகுலத்தை யடையாத வுனது மன வுறுதி உண்மையாகவே ஜயத்தைத் தரும். இந்திரனே! செல்வக்கொடையை யெங்களுக்கே செய்யும் தேர்மேல் நீ யேறுவாயாக—(எ - று.) மன வதம் என்றது வியாகுலத்தை.

வருக்கம் 14.

6. பசுவனைக்கு மவன்கரங்கள் ; அமிதவறி
 வியைந்தவனும் ;பகர் சிரேட்டன் ;
வசதிபெறக் கருமந்தோ றுதவிகளை
 நூறு பெறவயக்கி, யுத்த
மசதிபெறு தெழுப்புவன் ; தன் போக்கரியே
 தனியாண் மையனைந் தோன்கொற்ற
மிசையுமெலா வுயிர்களினும் ; ஆதலிற்பொன்
 விழைபவர் பல்லேத் தெடுப்பார்.

(இ - ள்) அவனது கரங்கள் பசுக்களைத்தரும். அவன் அளவில்லாத ஞானத்தையுடையவன் ; சிரேஷ்டனுமாம் (அதாவது சத்துருக்களைக் கட்டுபவனும்.) கருமங்கள்தோறும் நூறு (பல) வுதவிகளைச் செய்வான். யுத்தத்தை யுண்டுபண்ணுவான். ஸ்வதந்திரமுள்ள விந்திரனே எல்லாப் பிராணிகளினும் பலவான். அதனால் தனகாமிகள் அவனைப் பலவாறாகத் துதிப்பார்கள்—(எ-று.) சாயணர் 'இந்திரனே! யுன் கரங்கள்' என்று தொடங்கி மறுபடியும் அத

னைப் படர்க்கையாக மாற்றி யுரை கூறுவார். தன் போக்கு என்றது ஸ்வதந்திரத்தை. மேனாட்டாசிரியர் 'அமிதவறிவினையந்தவனு' மென்னுது 'அமிதவலி வாய்ந்தவனு' மென்பார். க்ரது ஞானம் கர்மம் என்னும் இரண்டு பொருளும் படும். அரி, இந்திரன்.

7. மகவானே போற்றுவோர் தனந்தலையுன்
சீர்த்தனமும் வளர்ந்து நூறாய்
மிகவாரும்; நூற்றுக்கு மேலோங்கி
யாயிரமாம்; வேண்டி யாஞ்சொல்
தகவாரும் பெருந்துதிக ளளவுபடா
துன்பெருமை சார்த்தி நின்ற;
இகலாரும் பகைப்புரங்கள் பொடிப்பவனே
விருத்திரரை யிகுப்பாய் நீயே.

(இ - ள்) தன நிறைந்தவனே! ஸ்தோதாக்களுக்கு மத்தியில், உனது கீர்த்தியைத் தோற்றுவிக்கும் செல்வம் நூற்றுக்கணக்காக வளர்ந்தோங்கும். நூற்றுக்குமேலும் போய் ஆயிரக்கணக்காகப் பெருகும். யாங்கள் விரும்பிக் கூறுகின்ற பெரிய ஸ்துதி வசனங்கள் உன் பெருமையை யளந்தறியமுடியாதபடி தயக்கின. சத்துருக்களுடைய கோட்டைகளை யழிப்பவனே! விருத்திரர்களை நீயழிப்பாய் —(எ-று.) ச்ரவ: கீர்த்தி, அன்னம் அல்லது தனம் என இரண்டு பொருளுள்ளது. தி (dh) ஷணு வென்பதற்கு ஸ்துதி லக்ஷணு வாக்கென்று ஸாயணர் உரைகூறுவார். ஆனல் மேனாட்டாசிரியர் அதற்கு ஸோமபாத்திரம் என உரை கொண்டு 'மகத்தாகிய ஸோமபாத்திரமானது உனது ஆற்றலை யளவுபடாதபடி விருத்திசெய்துவிட்டது' என்று மொழிபெயர்ப்பார். விருத்திரர்க ளென்றது விருத்திரன், சுஷ்ணன், நமுசி, பிப்புரு, சம்பரன், உரணன் முதலியவர்களை. மண். 1 சூக். 51, ரிக். 5 நோக்குக.

8. நரபதிநீ முப்புரிபோல் வலிக்கெல்லா
மெதிரளவாய் நாட்டத் தக்காய்;
தாமுயரு முப்பூமி தேசுயரு
முச்சுடர்க ளாங்கா நிற்பாய்;
வரமுயரும் புவனங்கள் யாவற்று
மோம்பி முரண்வளர நின்றாய்;
அரி,யுனது பிறவிநடை யெனச்சநா
தனமாக வரியற் றுயே.

(இ-ள்) நரபதியே! மூன்று புரியமைந்த கயிற்றைப்போல நீ வலிமைக்கெல்லாம் எதிரளவாகப் பொருந்தியவன். வான், அந்தரம்

பூமி என்னும் மூன்றிடங்களையும், சூரியன், மின்னல், அக்கினி யென்னும் மூன்று சுடர்களையும் வளர்த்துப் பலத்திற் பெருக்க மடைகிறாய். இந்திரனே! நீ பூர்வகாலந்தொட்டு, உனக்குப் பிறவிக் குணமென்னும்படி, சத்துருக்க ளற்றவன்—(எ-று.) போதாயன சூத்திரம் முதலத்தியாயத்தில் 'த்ரிதாது பஞ்ச தாதுவா சுல்பம் கரோதி' மூன்றுபுரி அல்லது 5 புரிகளால் கயிறு செய்கிறான் என்று சொல்லப்படுகிறது. முப்புரி கயிற்றுக் குறுதிதரும். முப்பூமி, விண், அந்தரம், பூமியென்பன. முச்சுடர்· விண்ணிற் சூரியனும் அந்தரத்தில் மின்னலும், பூமியில் ஆஹவனீயம் முதலிய அக்கினியுமென்பார் ஸாயணர். முதலரி இந்திரனையும் இரண்டாவது அரி சத்துருவையும் குறித்தன.

9. தேவர்தனந்தலை யுனைமுற் கூவுகிறோம்;
யுத்தமதிற் சேர்ந்து நீயே
யாவலொடு பகைவர்களை யடக்குகிறாய்;
அவ்வரியு மணைந்து போற்றி
மேவு துதியோ ரெமக்குப் பகைவாட்டு
ஞானமகார் வினமுக; போரிற்
பாவுபல தடைகளையும் பறித்தெரியும்
வணமெந்தேர்ப் பரிக்க மாதோ.

(இ-ள்) தேவர்களுக்கு மத்தியில் உன்னை முன்னு லழைக்கிறோம். யுத்தத்தில் நீயே வந்து எமது சத்துருக்களை யடக்குபவனாகிறாய். அந்த இந்திரனும் ஸ்துதிப்பவர்களாகிய எங்களுக்குச் சத்துருக்களை வெல்லுந் திறமை வாய்ந்த ஞானம் பொருந்திய புத்திரர்களைத் தரட்டும். எங்களது தேரை, யெதிரிடுந் தடைகளைக் கடந்து செல்லத்தக்கதாகச் செய்யட்டும்—(எ-று.) அவ்வரியும் என்றதுமுதல் பரோக்ஷப்படுத்திக் கூறினார். அதனால் முன்னிலைப் படர்க்கையாக மாறியது.

10. பகைவர்தமை வெல்லுகிறு, யவர்பொருளை
யெமக்களிக்கப் பரியா நின்றாய்;
மகவானே! தொடுத்தபோ ரற்பமெனும்
பெரிதேனு மருவு முன்றன்
வகைசாருந் துணையினையாந் தோத்திரத்தா
லுரப்பிப்போம்; சாரும் வேந்தே!
யகமார யுத்தமதி லழைக்கும்போ
தவந்தூக்க மருள்செய்வாயே.

(இ - ள்) நீ சத்துருக்களை ஜயிக்கிறாய். அவர் பொருளை மறைந்துவையாமல் எங்களுக்கே விசேஷமாகக் கொடுக்கிறாய். மகவானே! சிறுபூசலாயினும் பெரும்போராயினும் உனது சிறந்த துணையினை யாங்கள் எங்களது ஸ்தோத்திரங்களால் உக்கிரம் பெறச்செய்வோம். இந்திரனே! யுத்தத்தில் உன்னை யழைக்கும்போது வந்து எங்களுக்கு ஊக்கத்தை (வெற்றி பொருந்துமாறு) அருளுவாயாக— (எ-று.) மூலத்தில் 'நருமோதித்' என்றுள்ளது அதற்கு ஒளித்து வைக்கமாட்டாய் என்பது பொருள். எங்களுக்குக் கொடுப்பாய் என்பது அந்வயத்தாற் கூட்டியது.

11. தேவர்தம் வேந்த னென்று மெம்வயிற் சேர்ந்து பேச ;
தாவமே யின்றிச் செல்வந் தாங்கயாம்; எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவுமித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) இந்திரன் எல்லாக் காலத்திலும் எமது சார்பாகவே பரிந்து பேசட்டும். யாங்கள் கஷ்டமின்றிக் (கெட்ட வழியிற் செல்லாது) செல்வத்தைப் பெறட்டும். எங்களது இந்தப் பிரார்த்தனையைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் காக்கட்டும்—(எ-று) இச் செய்யுள்முன் 100-ம் சூக்தத்தின் கடைச்செய்யுளாகவும் வந்துளது.

### வருக்கம் 15

## 103. மண்டலம் 1. அநுவாகம் 15 சூக்தம் 10.

8 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: ஷி குத்ஸன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. உன்பர மேந்திர மொய்ம் புயர்த்தினர் கவிகள் தூரத்
தின்புறப் பொருவான் முன்னர் ; இரும்புவி யொன்றும் வானங்
கொன்பெற வொன் றுங்கண்ட ; கூடுமின்னவை யொன்றோடொன்
றன்புறக் கொடிகள் போரி லடுத்தெதிர் கூடல்போன்றே.

(இ - ள்) (இந்திரன்!) உனது ஐந்திர வலிமையைக் கவிகள் தூரத்திலுள்ள யுத்தப்பிரதேசத்தை நோக்கிச்செல்லத் தாங்கினர்கள். உனது தேஜஸில் ஒன்றாகிய அக்கினியைப் பூமியும், மற்றொன்றாகிய சூரியனை வானமும் தாங்கின. இவ்விரண்டு தேஜஸ்களும் யுத்தத்தில் கொடிகள் ஒன்றோடொன்று ஸந்திப்பதுபோல ஸந்திக்கின்றன—(எ - று.) Benfey என்பவர் 'இந்திரனது வலிமை இரண்டு கூறாக்கப்பட்டு

ஒன்று அவன் யுத்தத்தில் வெற்றியடைவதற்காக ஹோமகாரியங்களாலும் ஸோமாகுதியினாலும் கவிகளால் தாங்கப்படுகிறது' என்று விரித்துக் கூறுவார். 'அக்கினியும், ஸூர்யனும் இந்திரனுடைய ஜோதிகளாம். அக்கினி பூமியிலும், சூரியன் ஆகாயத்திலும் காணப்படும். பகலில் அக்கினியின் ஒளி ஸூர்யனிற் கலக்கிறது. இரவிற் சூரியனதொளி அக்கினியோடு கலக்கிறது' என்பார் சாயணர். தைத்திரீயப் பிராஹ்மணத்திலும் (2-1-2.) இப்படியே சொல்லப்படுகிறது.

2. தரணியைப் பீடையின்றித் தாங்கியே விரித்தமைத்தான்;
வரமுறு குலிசத்தாலே வாட்டி நீரோடுவித்தான்;
தரமறு மகியைச் சக்தி கொண்டடித் துரௌகிணன்றன்
விரைவினி றெய்தவிட்டு வியம்ஸனை மகவான் கொன்றான்.

(இ - ள்) (இந்திரன்) அசுரர்களது உபத்திரவமில்லாமல் பூமியை தாங்கினன். பின்பு அதை விஸ்தாரமுள்ளதாகச் செய்தான். தனது வச்சிராயுதத்தினால் வாட்டி மேகநீரை யோடச் செய்தான். அந்தரத்தோடும் அகியை அல்லது மேகத்தைத் தனது சக்தியினால் அடித்துக் கொன்று ரோஹிணன் (இந்திர நீலநிறமுள்ள மேகம்) முடிவை யடையும்படி செய்தான். (தோள்போனவனை) வியம்ஸ (விருத்திர)னையும் மகவான் (தனவானாகிய விந்திரன்) கொன்றான்—(எ-று.) அஹி, மேகம். ரோஹிணன் ஓரசுரன் என்பார் சாயணர். அது இந்திர நீல நிறமுள்ள மேகத்தைக் குறிக்குமென்பார் மேனாட்டாசிரியர். வியம்ஸன். மண் 1. சூக். 101. ரிக். 2 பார்க்க.

3. அசனி யாயுதந் தரித்தோ னகத்தொ டாதரத்திற் றசர்
வசமுறு புரங்கள் பேர்த்து வாவிதிற் றிரிந்தானைய;
இசைவுறு குலிச, ஞானீ, தாசர்மாட் டெறிக வேலை,
நசையினாரியர் பலத்தைக் கீர்த்தியை நடத்த வேந்தே.

(இ - ள்) அசனி (இடி)யாகிய வாயுதத்தைத் தரித்தவனாகிய விந்திரன், தனது பலத்தினால் ஆதரத்தோடும் தஸ்யுக்களின் கோட்டைகளைப் பிளந்து நானுபக்கங்களிலுந் திரிந்தான். வச்சிராயுதந் தரித்தவனே! (ஸ்துதிகளின் கருத்தை யறியும்) ஞானியே! தஸ்யுக்களின் மேல் உனது ஆயுதத்தை யெறிவாயாக. இந்திரனே! வித்வான்களாகிய ஆரியர்களின் பலத்தையும் கீர்த்தியையும் விருத்தி செய்வாயாக—(எ-று) ஐய! அசை. நடத்த - நடக்கச் செய்வாயாக அல்லது விருத்தி செய்வாயாக என்பது பொருள். அகத்தொடு - பலத்தினால்.

4. பகையடைக்கதனைச் சொல்வோற் காமெனப் பரித்து, மாந்தர்
வகைபெறக் காணுகங்க ளாக்கினன் மகவான்; அஃதை

யகிமுதற் றுசர்க் கொல்வா னடுத்துற விடுத்தான் சூநு,
தகைபெறு குலிச னென்னுர்ச் சாடுஞ்சீர் தரித்த வன்றே.

(இ - ள்) சத்துருக்களை யடக்கும் அவ்வைந்திர வலியைத், தனது திறமையைப் புகழ்ந்து கூறும் யஜமானனுக் குபயோக மாகு மென்று மகவான் (தனவானுகிய விந்திரன்) தாங்கி, மனிதர்களாற் காணப்படும் அஹோராத்திர அளவால் ஏற்பட்ட கிருதயுகம், திரேதா யுகம் முதலிய யுகங்களை யேற்படுத்தினுன். சத்துருக்களைத் தூண்டு பவனும், வச்சிரியுமான விந்திரன் பகைவர்களை வாட்டும் கீர்த்தியைத் தரித்த அப்போதே விருத்திரன் முதலிய தஸ்யுக்களைக் கொல்லும் வண்ணம், அவ்வலிமையை எங்களது யக்ஞக்கிருஹ ஸமீபத்தில் வர விடுத்தான்—(எ-று.) ஸூநு : சத்ரூணும் ப்ரோபித: இந்த்ர : என்று பொருள் கூறுவர் சாயணர். தஸ்யுக்களைக் கொல்லத் துணியும் இந்திரன் தன் புகழைக் கூறும் ஸ்தோதாவின் புத்திரன் போல ஆய் விட்டான்.' என்பது கருத்து என்பார் (Ludwig) லுட்விக் கென்பவர்.

5. அவன் பெருஞ் செல்வமோங்கி யணைந்திடு மதனை நோக்க;
அவன் பெரு வீரியத்தை யைந்திர வலியைப் போற்றல்;
அவன் பசுக்கண்டா, னன்றிப் பரிகளை யவனே கண்டான்;
அவன் செடிக் காடு கண்டான், நீர்த்தமு மவன் கண்டானே.

(இ - ள்) ரித்விஜர்களே! அவ்விந்திரனது வீரியமாகிய செல்வம் விரிவாக வளர்ந்தோங்குவதைப் பாருங்கள். அவனது பெரிய வீரிய மாகிய இந்திர வலிமைக்கு மரியாதை செய்யுங்கள். அவனே, பசுக் கள், குதிரைகள், ஓஷதிகள், வனங்கள், தீர்த்தங்கள் முதலியவற்றைக் கண்டவனும்—(எ-று) எந்த வீரியத்தினுல் பசு முதலியவற்றைக் கண்டானே அந்த வீரியமாகிய செல்வத்தை நீங்கள் கண்டு போற்றுங் கள் என வினை முடிவு செய்வார் சாயணர். வநாநி என்பதற்குக் காடு கள் என்னுது (வநீயாநி தநாநி) அழகமைந்த செல்வங்கள் என்று உரை கூறுவார் அவரே.

வருக்கம் 16

6. பலவித வீரச்செய்கை பாவிய காளைக், குண்மை
வலிபெறு மவனுக், காண்மைவாய்ந்தவனுக்குச், சோமங்
குலவுற வாற்றுவோம்; அச் சூர னுவலின் மகத்தி
னலமிலார் பொருள் கொண்டேகு மாறலைக் கள்வ னோர்ந்தே.

(இ - ள்) பலவிதமான வீரச்செயல்கள் பரந்த விருஷபமும் ஸத்தியமாயுள்ள வலிமை பொருந்தியவனும் ஆண்டன்மை வாய்ந்த வனுமாகிய இந்திரனுக்காக ஸோமம் பிழிந்து தருவோம். அந்தச்

சூரனாகிய இந்திரன், வழிப்பறி செய்யும் திருடனைப்போல, யாகம் செய்யாதவனது பொருளை ஆவலோடு பறித்துக்கொண்டு போவான்—(எ - று) ஆண்டன்மை வாய்ந்தவற்கென்றது மழையைப் பெய்விப்பவனுக்கென்று கூறுவதும் ஒன்று.

7. இந்திர மத்தத் தேய்ந்த அகியினை வச்சிரத்தின்
முந்துறத் துயிலுணர்த்தம் மொய்ம்புறு செய்கை நன்றே;
அந்நிலுன்னிடத் துவப்பை அணைந்தனர் தேவமாதர்
நந்தினர் களித்தார் நாகர் யாவரு மருதரோடே.

(இ - ள்) இந்திரனே! மதோன்மத்தத்தில் மூழ்கி யிருந்த விருத்திரனை (அகியை) உனது குலிசத்தால் எழுப்பிய அந்தப் பலம் பொருந்திய செய்கையானது பிரக்கியாதி பெற்றது. தேவபத்தினிகளும் தேவர்களும் மருத்துக்களும் உன்னிடத்து ஸந்தோஷத்தை அடைந்தார்கள்—(எ - று.) வய: என்பதற்கு, கமனசீலா: மருத: வேகமாகச் செல்லுவோர்களாகிய மருத்துக்கள் என்பார் ஸாயணர்.

8. சாவுறக் குயவன் கண்ணன் பிப்புரு அகியைச் சாடிக்
காவல் சம்பரனூர் காய்ந்தாய், இந்திர, எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானும் சிந்துவு மதிதி தானும்
மேவு மித்திர வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) இந்திரனே! குயவன், கிருஷ்ணன், பிப்ரு, விருத்திரன் இந்நால்வரையும் கொன்று சம்பரனுடைய நகரங்களையும் அழித்தாய். இந்த எங்களது பிரார்த்தனையைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரர், வருணர் இவர்கள் காக்கட்டும்—(எ-று.) சம்பரன் புரத்தையும் முக்கியமான நால்வரையும் அழித்ததால் மற்றைய அசுரர்களுடைய கோட்டைகளையும் அழித்தா யெனக் கொள்ளுக வென்பார் சாயணர். சம்பரன் முதலியோரைப் பற்றி மண். 1 சூக். 51 ரிக். 5, 6 பார்க்க.

வருக்கம் 17

## 104. மண்டலம் 1. அநுவாகம் 15. சூக்தம் 11.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷெி குத்ஸன். வடமொழிச் சந்தம்: திருஷ்டுப். தேவதை: இந்திரன்.

1. இந்திர நீ யுறைவான் வேதி யேய்ந்தது; கனைத்துக்
கந்துகம் விரைவ தொத்துக் கடிதினீண் டேய்ந் தமர்க;
எந்தமைக் காக்குமாறு பகலிராக்களின் மகத்தே
சந்தமோடுன்னை யிங்குத் தரும்பரித் தளையை நீக்க.

(இ - ள்) இந்திரனே! நீ தங்குவதற்கென்று வேதியானது அமைக்கப் பெற்றது. அதனைத்துக் கொண்டு குதிரை வேகமாய் வருவதைப் போல நீ இங்கு வந்து உட்காருவாயாக. எங்களைக் காக்கும் வண்ணம் இரவும் பகலும் உன்னை யாகதலத்துக்குக் கொண்டுவரும் (தேரிற் கட்டப்பட்ட) குதிரைகளின் கடிவாளங்களைத் தளர்த்தி விடுவாயாக.—(எ - று.)

2. அந்நர ருதவிக்காக விந்திரனிடத் தணைந்தார் ;
அன்னவர் நெறிக்க ணன்னு னடைக வல்விரைவின் ; தேவர்
துன்னிய தாசன் கோபம் துடைக்க; எந்தமக்கென் றன்னூர்
மன்னிய அனிட்டம் மாற்று மவனை யெக்கியத்தே யேய்க்க.

(இ - ள்) யாகம் நடத்தும் அவ்யஜமானர்கள் உதவி வேண்டி இந்திரனைச் சேர்கின்றார்கள். அவ்விந்திரனும் விரைவில் அவர்களுடைய அநுஷ்டான மார்க்கத்தை அடையட்டும். தேவர்களெல்லாரும் எதிர்த்து யுத்தத்துக்கு வரும் தாஸனுடைய கோபத்தை அழிக்கட்டும். எங்களுக்கென்று அத்தேவர்கள் அநிஷ்ட நிவாரண கர்த்தாவாகிய அவ்விந்திரனை யக்ஞத்திற்குக் கூட்டிக்கொண்டு வரட்டும்.—(எ - று.)

3. பிறர்தனம் பெரிது மோர்ந்த குயவன் கைக்கொள்வான் றானே ;
அறனனந்தலை யுறைந்தவ் வறலினைப் பேனத்தோடு
முறையிலா தபகரிப்பான் ; முழுகுவர் பாலினன்னான்
பிரியைகள் ; அவர்க ளாழம் பிறங்கிய சிபையின் மூழ்க.

(இ - ள்) பிறருடைய தனத்தை நன்கறிந்த குயவன் என்னும் அசுரன் அத்தனங்களைத் தானே கைக்கொள்வான். தண்ணீருக்குள் வசித்து அத்தண்ணீரை அவன் நுரையோடும் அபகரித்துக் கொள்வான். அவனது பத்தினிகள் இருவரும் அவ்வள நிறைந்த (பாலில்) மழைநீரில் ஸ்நானம் செய்வார்கள். இப்படி அநியாயம் செய்யும் குயவனும் அவன் மனைவியருமாகிய இவர்கள் ஆழம் மிகுந்த சிபை என்னும் ஆற்றில் மூழ்கி இறக்கட்டும்—(எ - று.) குயவன் மண். 1 சூக். 103 ரிக். 8-ல் கூறப்பெற்றவன். ஓரசுரனென்பார் சாயணர். ஆரியரோடு யுத்தம் செய்த ஒரு அநாரிய அரசனது பெயரா யிருக்கலாமென்பர் மேனாட்டாசிரியர் (Griffith). பேனம் உறையும் அறல் என்றது மழை நீரைக் குறிக்குமென்பார் (Benfey) பென்வே என்பவர். 'தனக்கு இல்லாத பொருளை அடைய விரும்பும் ஆரியனுக்குத் தனது சௌசங்களுக்குவேண்டிய தண்ணீர் கிடையாதபோது, பகைவனது மனைவியர் தமது செல்வச் செருக்கைத் தோற்றுவிக்கப் பாலிற் குளிக்கிறார்களென்பது கருத்து' என்பார் லுட்விக் என்பவர். பால்,

வள நிறைந்த மழைநீரைக் குறிக்கும். மண். 1 சூக். 64 ரிக். 5 பார்க்க. சிபா, சிபை ; ஓர் நதியின் பெயரென்பார் சாயணர்.

4. நீர்நடு வுறைந்து சேர்ந்தோ னிலயமுந் தெரியாதோங்கும் ;
பூர்த்தியி னனந்த நீர்க்கட் பூரித்துச் சூரனுள்வான் ;
ஆர்ந்தநீர் வீரபன்னி குலிசியும் அஞ்சஸீயும்
சார்தரு முவப்பை யூட்டித் தாங்கும் பால்தந் நீர்க்கண்ணே.

(இ - ள்) தண்ணீருக்கு மத்தியில் உறைந்து சேர்ந்தவனாகிய குயவனென்னு மசுரனுடைய காவல் பொருந்திய இடம் ஒருவருக்கும் தெரியாது கிடந்தது. பூர்த்தியாயுள்ள நீரில் அச்சூரனாகிய குயவன் வளர்ந்து அரசாளுகிறான் (அல்லது தனது சௌரியத்தினால் உலகப் பிரஸித்தியை அடைகிறான்). வீரபத்தினி (ஸரஸ்வதி போலும்), அஞ்சஸி, குலிசி என்னும் மூன்று ஆறுகளும் அவனுக்கு ஸந்தோஷத்தை அளித்துத் தமது நீரில் பால் ஒழுகும் பெருமையைத் தாங்கும்—(எ - று.) நாபி என்னும் வடமொழிப் பதத்துக்கு ' ஸந்நத்தம் ஆவஸஸ்தானம் ' என்பார் சாயணர். காவலிடம் என்றார் உரையில். சூரன் ஈண்டு குயவனைக் குறித்தது. குயவனைப்பற்றி மேல் 3-ம் செய்யுளில் நோக்குக. வீரபத்நி ஸரஸ்வதியைக் குறிக்குமென்றது மேல் மண். 6. சூக். 49 ரிக். 6-ல் அச்சொல் ஸரஸ்வதியின் அடைமொழியாக வருவதால். அஞ்சஸி நேராக அல்லது விரைவாக ஓடுவது என்பது பொருள். குலிசி, குலத்தை விருத்திக்குக் கொண்டுவருவது. இம்மூன்றும் நதிப்பெயர்களாம். அவை குயவனது பெருமையைத் தோற்றுவிப்பன. பால், ஸாரம் பொதிந்த நீர்.

5. தாசன்றன் சுவடுகண்ட தக்கண மவனில்லத்தை [ர்ப்
ஆசின் ஆத் தொழுவமெய்துங் கணக்கென வடைந்தான்; பின்ன
பேசுறு மகவா னேயெந் துன்பினைப் போப்பாய் ; வேசை
நேசனு நிதியை வீசும் நிலைமையி னெமைத் தள்ளற்க.

(இ - ள்) அத்தஸ்யுவாகிய குயவனுடைய அடிச்சுவடுகள் காணப்பட்ட மார்க்கத்தைக் கண்டதும், கன்றுள்ள கொட்டிலை யறிந்த பசு நேராக அக்கொட்டிலுக்குப் போவதுபோல் அவனது வீட்டிற்கு (இந்திரன்) சென்றான். பிற்பாடு இந்திரனே, அவனால் நேரும் எங்கள் கஷ்டத்தை நீக்குவாயாக. வேசிகாந்தன் பணத்தை வாரி வீசுவது போல எம்மைப் புறம்பாகத் தள்ளிவிடற்க—(எ - று.) இந்திரன் அடைந்தானெனக் கொள்ளல்வேண்டும். படர்க்கை முன்னிலை மாற்று வேதஸஹஜம்.

வருக்கம் 18.

6. அன்ன இந்திரநீ எங்கட் காதவ னொளியின், நீரின்
றன்னமும் பாவமில்லாத் தன்மையின், சீவப்பேற்றின்,

மன்னுறும் பங்கமைக்க; வெளிவராச் சந்தானத்தைப்
பின்னமே யுறுத்திடாய், உன் பெருமுரண் நம்பினேமே.

(இ - ள்) அத்தகைய இந்திரனே! நீ எங்களுக்குரிய வெளிச்சத்திலும் தண்ணீரிலும் பாபமின்மையிலும் கீர்த்தியிலும் பங்கு தருவாயாக. இன்னும் பிறவாதிருக்கும் எமது புத்திரர்களைக் கெடுத்துவிடற்க. உனது பெரிய ஐந்திர வலிமையை நம்பியுள்ளோம்—(எ-று.) ஸாயணர், ஜீவப்பேறாகிய பாபமின்மையிற் பங்களிக்க' எனக் கூட்டுவர். ஆனால் மேனாட்டாசிரியர் (Griffith). அவற்றை உம்மைத் தொகையாகக் கொள்வர். ஜீவப்பேறு, கீர்த்தி. 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்றார் பிறரும். உன் பெருமுரண் என்றது ஐந்திர வலிமையை.

7. உணர்ந்தனென்; யாங்களுன் மாட் டன்புறு துதி யிழைத்தோம்;
புணர்ந்திடு பெருந்தனத்திற் பொருத்துக; மகானே, வள்ளால்!
தணந்திடு நிதியில்லத்திற் றயக்கிடலெமை; பசிக்குக்
கொணர்ந்திடு மன்னபானங் கூட்டுக புருகூதன்னே!

(இ - ள்) (இந்திரனே!) உன் மனதை யறிந்து கொண்டேன். உனது பலத்தைத் தோற்றுவிக்கும் புகழ் வசனங்கள் எங்களால் ஆசையோடும் செய்யப்பட்டன. மகானே! இச்சைகளை யளிப்பவனே! எங்களை மிகுந்த செல்வத்தில் வைப்பாயாக. செல்வம் குறைந்து கொண்டு வரும் வீட்டில் எங்களை வையாதொழிக. (புருஹூதனே) பலராலும் அழைக்கப்படுபவனே! பசிக்கு அன்னபானாதிகளை எங்களுக்குத் தருக—(எ - று.) நிதிதணந்திடுமில்லம் என்க.

8. வதைக்கல் இந்திர எம்தம்மை; கைவிடலெம்மை; வாழ்வைப்
புதைக்கலெம் போனகத்தை; பொருளுளோய், சத்திமான், எம்
உதித்திடாச் சந்தானத்தை ஒழித்திடல்; ஆதானத்தே
மதித்துறும் பாத்திரங்கள் தம்மையு முடைத்திடற்க.

(இ - ள்) இந்திரனே! எங்களைக் கொல்லாதொழிக. எம்மைக் கைவிடற்க. எமது வாழ்வையும் போஜன வஸ்துக்களையும் இல்லாமற் செய்யற்க. மகவானே! சக்கிரனே! கர்ப்பத்திலுள்ள எங்களுடைய சிசுக்களை அழித்துவிடாதே. அக்கினியாதானத்திலுள்ள ஸ்ருவம் முதலிய பாத்திரங்களை உடைத்து விடற்க—(எ - று.) 'இனித் தோன்ற நிற்கும் ஸந்தானங்களைத் தரிக்கும் பாத்திரங்களாகிய மாதரைச் சிதையாதொழிக' என்று மேனாட்டாசிரியர் பொருள் கூறுவர். அற்றேல்,......................' அவரைத் தாங்கு மதிப்புறு பாத்திரங்கள் மரித்திடாதாற்றுவாயே' எனப்பாட பேதமாகக் கொள்க.

9. வருகவெம் மாட்டு; சோம மகிழ்பவ னென்று ருன்னை;
மருவுமிச் சுதையை மத்தம் வளர்ந்திடப் பருகல்; உன்றன்
பெருமுறுப் பகட்டிற் பேசு மதனையே யூற்றல்; கூவிற்
சருவியெம் போற்றைக் கேட்க தந்தையே யென்ன, மாதோ.

(இ - ள்) எம்மிடத்து வருவாயாக. உன்னைச் சோமங் குடித்து மகிழ்பவனென்று பூர்விகர்கள் சொன்னார்கள். இந்த ஸோமத்தை மதம் பெருகுமாறு குடிப்பாயாக. பெரிய அவயவத்தோடு கூடிய உனது விசாலமான வயிற்றில் இச்சோமத்தை யூற்றுவாயாக. யாங்கள் அழைக்கும்போது, எங்களருகே வந்து பிதா தன் புத்திரனது வார்த்தையைக் கேட்பதுபோலக் கேட்பாயாக.—(எ-று.) இந்திரனே! என்னும் விளியைக் கூட்டிக்கொள்க.

வருக்கம் 19.

## 105. மண்டலம் 1. அநுவாகம் 15. ஸூக்தம் 12.

19 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஆப்த்யன் த்ரிதன் (குத்ஸன் என்றும் கொள்ளலாமென் பார் மேனாட்டாசிரியர். ஏன்? குத்ஸனும் த்ரிதனும் இருவரும் கிணற்றில் விழுந்ததாகச் சொல்லப்படுவதால். த்ரிதன் நினைக்கக் குத்ஸன் அவன் நினைப்பை யெடுத்தோதினான் என்பதும் ஒன்று.)

தைத்திரீய பிராஹ்மணத்தில் அபனுக்கு ஏகதன், துவிதன் திருதன் என்னும் 3 புத்திரர்கள் பிறந்தார்கள் என்று சொல்லப்படுகிறது. "ஒரு நாள் இம்மூவரும் நீர் வேட்கையால் ஊரெங்குஞ் சுற்றி ஒரு கூபத்தைக் கண்டார்கள். அப்போது த்ரிதன் கிணற்றுக்குள் ளிறங்கித் தான் நீரருந்திய பின்னர் மற்றைய ஸஹோதரர்களுக்குங் கொண்டுவந்து கொடுத்தான். அவர்கள் அந்நீரை யருந்திவிட்டு அவனைக் கிணற்றிலேயே போட்டு மூடிவிட்டு அவன் சொத்தை யெடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். பிறகு இரவிற் சந்திரனது கிரணம் கிணற்றில் விழுந்ததைக் கண்டு குறைகூறித் துக்கித்தான்." என்பது சாட்யாயன கதை. அபன் ஒரு ரிஷி.

வடமொழிச் சந்தம்: பங்தி, 8 மகாப்ரஹதி யவமத்யா (இரண்டு காய்ச்சீர்வரும் அறுசீர்க்கழிநெடில் ஓரடிமேல்வைப்பு.) 19 த்ருஷ்டுப்.

தேவதை: விச்வதேவர்கள், (இது பொதுப்படக் கூறியது.) விவரித்துக் கூறின், 1 விச்வதேவர்கள், 2 ரோதஸீ, 3 விச்வதேவர்கள், 4 அக்கினி ரோதஸீக்கள், 5, 6, 7 விச்வ தேவர்கள், 8 இந்திர ரோதஸீக்கள், 9 சூரிய கிரணமும் ரோதஸீக்களும், 10 விச்வ தேவர்கள், 11 சூரியகிரணமும் ரோதஸீக்களும், 13, 14 அக்

கினியும் ரோதஸிக்களும், 15 வருணனும் ரோதஸிக்களும், 16, 17 விச்வதேவர்கள், 18 ரோதஸிக்கள், 19 விச்வதேவர்கள் இதுமுதல் மூன்று சூக்தங்கள் விச்வதேவர்களைக் குறித்துப் பாடியவையாம்.

**வேறு**

1. அந்தர வட்டத் தோடு மணிகதிர்ச் சிறகா லாருஞ்
சந்திர கிரணம் வானிற் றனியுற வுலவும்வல்லை;
சந்திர மயமா நேமி சார்கிர ணங்காள்! உந்தஞ்
சுந்தரப் பதத்தை யெங்கண் தோய்ந்தறி யாம னின்ற;
நந்துவான் புவிகா ளென்ற னிஃது நீருணா் பாற்றே.

(இ - ள்) அந்தரிட்சத்தின் மத்தியிலோடும் சூரியனது கதிர்களால் நிறைந்த சந்திரனது கிரணங்கள் ஆகாசத்திற் றனியாக வேகமாக வுலாவும். பொன்மயமான சக்கரத்தைச் சார்ந்த கிரணங்களே! நீங்கள் உற்பவிக்கும் அழகிய ஸ்தானத்தை யெங்களது கண்கள் (கிணற்றில் விழுந்த காரணத்தினல்) அறியவில்லை. பூமிவானங்களே! என்னை விரும்பி என்னுடைய இந்தத் துக்கத்தை யுணர்ந்து எனது இந்த ஸ்தோத்திரத்தைக் கேட்டு, எங்களை இந்தக் கூபத்தினின் றெடுப்பீர்களாக—(எ - று.) கதிர்ச் சிறகு ஸௌர்யரச்மிகள். சந்திரமயமாநேமி, ஹிரண்யநேமி, பொன்மயமான சக்கரம். சுந்தரப்பதமென்றது அவை யுற்பத்தியாகும் ஸ்தானத்தை. ஐந்தாமடி மூலத்தி லுள்ளபடியே மொழிபெயர்க்கப்பட்டது. வித்தம் மேஅஸ்ய ரோதஸீ யென்பதற்கு, பூமி வானங்களே! என்னுடைய இது உங்களால் அறியத்தக்கது என்பது சரியான பொருள். உரையிற் கூறிய விரிவெல்லாஞ் சாயணருரையிற் கண்டது.

2. ஆர்த்திசார் மாந்தர் வேண்டு மத்தத்தைப் பெறுவார் மெய்யே;
சீர்க்கண வன்றன் சார்பிற் சேர்ந்தொழு குவளில் லாளும்;
நீர்த் திருவரும்பி ணைந்து நீதிசா ரன்பின் மூழ்கி
யார்த்த பண்டியிற் சாரத்தை யணைத்துநன் மகாவை யீவார்;
கூர்த்தவான் புவிகா ளென்ற னிஃது நீ ருணாற் பாற்றே.

(இ - ள்) உண்மையாகவே தனகாமிகளாயுள்ள மாந்தர் தாங்கள் விரும்பிய செல்வத்தை யடைவார்கள். (எனக்குக் கிடைப்பதில்லை என்றபடி.) மனைவி தனது புருஷனைப் பின்பற்றி நடப்பாள். இருவரும் அன்போடு கூடி வீரியமாகிய ரஸத்தைக் கர்ப்பாதானஞ் செய்து சற்புத்திரனைப் பெறுவார்கள் (எனக்கு அத்தகைய புத்திரன் கிடைப்பது துர்லபம் என்றபடி): வானம் பூமிகளே என்னுடைய இத்துக்கம் உங்களா லறியத் தக்கது.—(எ - று.) நீர்த்து, நீர்மை

கொண்டு, நீர்மையோ டொழுகி என்றபடி. பண்டி, வயிறு, கருப்பா சயம்.

3. தேவர்காள், வானத்தும்பர் சிறக்குமவ்வொளியென் றைக்குந்
தாவுமப் பதத்தி னின்றுங் கீழுறா தமைக; சோம
மாவலிற் பருகுந் தன்மை யடைந்தவெங் கட்கு நன்மை
மேவுற வியற்று மைந்தர் விடாதத்தை யுண்டு பண்ணல்;
தூவிய வுரோத ஸீயென் றுயரமீ துணரற் பாற்றே.

(இ - ள்) தேவர்களே! விண்ணிற்குமேற் சிறக்கு மந்தப் பிரகாசம் எப்பொழுதும் அப்பதத்தினின்றுங் கீழிறங்காத வண்ண மியையட்டும். ஸோமங் குடிக்கும் எங்களுக்கு, நன்மை புரியும் புத்திரர்களது சோகத்தை யேற்படுத்தாதீர்கள். பூமி வானங்களே! எனது இந்தத் துக்கத்தை யுணர்வீர்களாக. (எ-று.) ஒளியென்றது மேனுட்டாசிரியர் உரை பற்றி யுரைத்தது. ஸாயணர் எங்கள் பிதா, பிதாமஹ, ப்ரபிதாமஹ ரூபமாயுள்ள ஸந்தானம் என்பார். மேனுட்டாசிரியர் ஒளி யென்ருர், பிதிர்க்கள் நட்சத்திரங்களாக மாறுகிருர்களாதலின். மேல் 9-வது ரிக்கை நோக்குக. எங்களுக்குப் புத்திரரில்லாததால் எங்கள் பிதிர்க்கள் ஸ்தான ப்ரஷ்டர்க ளாகாம லிருக்கக்கடவது வென்பது கருத்து என்பார் ஸாயணர். ஐதரேயப் ப்ராஹ்மணத்தில் புத்ர லோகாந் ஜயதி நாஅபுத்ராஸ்ய லோகோஸ்தி என்று சொல்லப் படுகிறது. விடாதம், விஷாதம், மனவருத்தம்.

4. எக்கியத் திளமை யெய்ந்த தேவனை வினவு வல்யான்
முக்கிய தூத னன்னுன் மொழிக வித் தார மாக;
எக்கடை போயிற் றுன்ற னெழிலுறு பூர்வ நேமம்?
இக்கண மதனைப் போற்று நூதன காரி யாவன்?
மிக்கசீ ருரோத ஸீயென் வேதனை யுணரற் பாற்றே.

(இ - ள்) யக்ஞத்தினிடத்து முற்பட்ட (இளமை வாய்ந்த) தேவனுன அக்கினியை யான் கேட்பேன். தேவர்களது முக்கிய தூதனாகிய அவன் விஸ்தாரமாக எனக்குப் பதிற் சொல்லட்டும். (அக்கினியே!) பூர்வ காலத்தி லிருந்து வரும் உனது நியமங்கள் எங்கே போயின!? இப்போது அவற்றைச் செய்யும் புதியவன் யார்? வானம் பூமிகளே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக.—(எ - று.) அக்நிர் தேவாநாம் அவமம் என்பது தைத்திரீயப் பிராஹ்மணம். எக்கியச் சிறுமை யெய்ந்த தேவனை என்றுங் கூறலாம்.

5. தேவர்காள், முத்தா னத்துஞ் செம்மையி னொழுகீர்; அன்ன,
பாவுமென் றூழின் சோதி பரந்ததால் விளங்கா நிற்கும்;
மேவிய வெமது போற்றி னுண்மைபொய்ம் மைகளு மெங்கே?

தாவில்சீர்ப் பழமையாக யான்றரு மகந்தா னெங்கே?
தூவிய லுரோத ஸீயென் றுயரமீ துணரற் பாற்றே.

(இ - ள்) தேவர்களே! பூமி, வான், அந்தரம் என்னு மூன்றிடங்களிலும் நன்றாக நடப்பீர்களாக. அவை சூரிய வெளிச்சத்தால் பிரகாசமாகத் தெரிகின்றன. அவற்றை யாங்கள் புகழும் ஸ்தோத்திரங்களின் உண்மையும் (அவற்றைத் துவேஷித்தலாகிய) பொய்ம்மையும் எங்கே போயின? இன்னும் பழமையாக யாங்கள் செய்யும் யாகங்கள் எங்கே? வானம் பூமிகளே!..........................யுணர்வீர்களாக.—(எ - று.)

6. சத்திய நடைக்குத் தக்க பயனளி யுமது மாண்பு
மெத்திசை போயிற்று? அன்பை யிவைவரு ணன்ற னோக்கந்
தத்திய தெங்ஙன்? சீர்சா லரியமான் ரூரி யெங்கே?
சத்துரு தம்மை யென்றுஞ் சயித்தியாந் தயங்க நன்கே;
ஒத்தநல் லுரோத ஸீயென் றுன்பமீ துணரற் பாற்றே.

(இ - ள்) (தேவர்களே!) ஸத்தியமான நடைக்குத் தக்க பலனைத் தரு முமது பெருமை யெங்கே போயிற்று? வருணனது அன்பை யளிக்கும் பார்வை யெங்கே போயிற்று? அர்யமான் செல்லும் வழி யெது? யாங்கள் (எங்களுக்குத் தீங்கை யிழைத்த அல்லது எங்களைக் கிணற்றிற் றள்ளி மூடின) சத்துருக்களை ஜயித்து விளங்கட்டும். வானம் பூமிகளே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக—(எ - று.) "பாப புண்யங்களும் நியாய வரசும் உலகத்தினின்றும் போயினவா உமது பக்தன் இவ்வளவு கஷ்டத்தை யடைய? என்பது கருத்தென்பார் லுட்விக்.

7. பூருவ காலந் தன்னிற் சுதைபிழிந் தெடுத்த போது
நேருறப் பலபோற் றுக்க ணேடியே யுரைத்தோன்யானே;
தீரும் வாதை சார்ந்த கவலைக ளென்னைத் தேடிச்,
சாருநீர் வேட்கை மானை விருகத்திற், றின்று சாரும்;
வருறு முரோத ஸீயெ னிடும்பையீ துணரற் பாற்றே.

(இ - ள்) பண்டைக்காலத்து ஸோமம் பிழிந்தபோது பல துதிகளையும் தேடி யுரைத்தவன் நானே (வேறொருவருமில்லை. ஆனால் என்னை ஏன் கைவிட்டுவிட்டீர்கள் என்று கேட்டபடி.)காட்டில் தண்ணீர் வேட்கையோடு அலையும் மானை ஓநாய் பிடித்துத் தின்னுவதுபோல வென்னைக் கவலைகள் தின்கின்றன. பூமி வானங்களே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக—(எ-று.) வ்ருகம், கோநாய், ஓநாய், காட்டு நாய். தமிழில் விருக மெனலாயிற்று.

வேறு

8. கூபப் பித்தி யென்பக்கல் குறுகி யெல்லாத் திக்கினிலு
மாபத் துக்குள் ளாக்கினவா லடையுஞ் சக்க ளத்திகளின்;
யூபக் கிரியை நூறுள்ளோய்! யோசனைகள், மூஞ்சூறு
சோபத் தறிநூ றின்னுதலிற், றுதிக்குமென்னைப் பட்சிக்கும்;
தாபத் தணையா வான்புவியென் சங்கடத்தை யுணருகவே.

(இ - ள்) இக்கிணற்றின் சுவர்கள் எனது பக்கத்தில் நாலு திக்குக்களிலுஞ் சூழ்ந்து சக்களத்திகளிருவர் ஒரு புருஷனை யிம்சிப்பதுபோல என்னை யிம்சித்தன. சதக்கிருதுவே! மூஞ்சூறு கஞ்சி தோய்த்த சேடனது தறிநூலைத் தின்பதுபோலப் பலவித யோசனைகள் உன்னைத் துதிக்கும் என் மனத்தைத் தின்னுகின்றன. வானம் பூமிகளே! எனது கஷ்ட முணரத்தக்கது—(எ-று.) "மூஷோநசிச்நா" வென்பதற்குச் சேடனது கஞ்சி தோய்ந்த நூலை எலிகள் தின்னுவது போல என்று ஸாயணர் உரை கூறியது யாஸ்கர் மதத்தை யொட்டி. ஆனால் சிச்ந சப்தம் வீர்யேந்திரியத்தைக் குறிக்கும். ஈண்டு வாலுக்கு உபசாரமாகக் கொள்ளத்தக்கது. எலிகள் வாலை எண்ணெய் நெய் முதலியவற்றிற் றோய்த்து நக்குவதுபோல வெனப் பொருள் கொள்ளலும் ஒன்று என்பார் அவர். மேனாட்டாசிரியர் யாஸ்கர் மதத்தையே பின்பற்றி அப்பொருள் வலிந்துகொண்டதாகும் என்பார். (Ludwig) லுட்விக்கென்பார் மரச் சிவலிங்கங்களைக் குறிக்குமென்று கூறுவர். இவ்வுவமை மறுபடியும் மண். 10 சூக். 33 ரிக். 3-ல் வருகிறது.

வேறு

9. கிரணங்க ளேழு மோங்கிக் கிளருறு தலத்தெ னில்லம்
வரமுறு குடும்பந் தாமும் வளமுறப் பொருந்தி நிற்கும்;
திரிதனுப் தியனே யீது தெரிந்தவன்; உடன் விழுந்தோற்
குருகிய துதியு ரைத்தா னூறெலா நீங்க வென்றே;
பெருகிய வுரோத ஸீயென் பீழையீ துணரற் பாற்றே.

(இ - ள்) சூரியனது எழு கிரணங்களும் விளங்குமிடத்தில் எனது வீடும் என் முன்னோரது குடும்பமும் பொருந்தி யுள்ளன. இவ்வுண்மையை ஆப்தியனாகிய திரிதனே யறிந்தவன். அறிந்து தன்னோடுகூடக் கிணற்றில் விழுந்தவனுக்காகக் கஷ்டநிவாரணார்த்தம் இத்துதியைக் கூறினான். பூமிவானங்களே! என்னுடைய இக்கஷ்டத்தை யுணர்வீர்களாக.—(எ - று.) திரிதன், அஞ்ஞானத்தைத் திரஸ்கரித்தவன்; அவனது முன்னோர் நட்சத்திர ரூபமாக விண்ணிடத்தில் விளங்குகிறார்கள். அபன் புத்திரன் ஆப்தியன்; அவன் திரிதனே.

3-வது 4-வது வரிகளில் தன்னையே படர்க்கைப்படுத்திக் கூறினன். வடமொழியில் ஜாமித்வாய என்றுள்ளது 'சகோதரற்கா' வென்று மாற்றிப் படித்தலுமொன்று. ஆனல் உடன் விழுந்தோற் கென்றது ஸாயணர் உரையிற் கண்டது. 'ஜமதி கச்சதி இதி ஜாமி:' 'ஜமதிர் கதிகர்மா' யாஸ்கர். கூடக் கிணற்றில் விழுந்தவனுகிய குத்ஸனையுங் கருதிப் போலும் அவ்வகைத் துதித்தது.

10. பெருமைசார் வானி னுப்பட் பிறங்குமுன் னதத்த லத்தே
மருவுறு மைவர், மாந்தர் விழைவன வருடிப் போர்க,
ளருளொடு மெனதிப் போற்றைத் தேவர்பாலிணைந்து தாங்கி
விரைவொடு மர்ப்பித் தீண்டு மீளுக திருத்தி சார்ந்தே;
யுருவவான் புவிகா ளென்ற னுறுகணீ துணரற் பாற்றே.

(இ - ள்) பெருமை பொருந்திய வான மத்தியில் உயர்ந்த விடத்திலிருந்து மனிதர் விரும்பியவற்றைத் தரும் ஐந்து ஜோதிகளும் என்னுடைய இந்த ஸ்தோத்திரத்தை ஒன்று கூடிச் சுமந்து கொண்டுபோ யளித்துத் திருப்தியோடு திரும்பி வரட்டும். வானம் பூமிகளே! எனது துன்பத்தை யுணர்வீர்களாக.—(எ - று.) ஐவர், ஐந்து ஒளிகளைக்குறித்தது. பூமியில் அக்கினி, விண்ணிற் சூரியனும், அந்தரத்தில் வாயு, சந்திரன், நட்சத்திரங்களுமாக ஐவரையும் குறிக்குமென்பார் ஸாயணர்.

வருக்கம் 21.

11. அழகிய சிறகு வாய்ந்த வவையெங்கும் பரவி வானம்
பழகுறு மையந் தன்னிற் பரந்துநின் றன; அம் மார்க்கந்
தழுவிய காட்டு நாயைத் தடநதி நீரைத் தாண்டி
யொழுகிய ததனைப் பின்சென் ஞேடுவான் விலக்கா நிற்கும்;
கிழமையா ருரோத ஸீயென் கேதமீ துணரற் பாற்றே.

(இ - ள்) அழகிய சிறகோடு கூடியவை (அதாவது சூரிய கிரணங்கள் என்றபடி) எல்லாவிடத்தும் வியாபித்து வானத்தின் மையத்தில் பரந்துள்ளன. அந்த மார்க்கத்தில் ஆற்றைக் கடந்துவந்த காட்டு நாயைத் திரும்பி யோடும்படி செய்தன. வானம் பூமிகாள்! என் துன்பத்தைக் கருதுங்கள்.—(எ - று.) அழகிய சிறகோடு கூடியவை சூரிய கிரணங்களென்பார் சாயணர்; நட்சத்திரங்களென்பார் மேனட்டாசிரியர். அவரே, காட்டுநா யென்றது. இருட்டு அல்லது சந்திரகிரஹணம் என்பார். திரிதன் கிணற்றில் விழுவதற்கு முன்பு அவனைத் தின்ன ஒரு கோநாய் ஆற்றைக் கடந்து வந்ததென்றும் சூரிய வெளிச்சத்தைக் கண்டதும் அது திரும்பிப்போயிற்றென்றும் ஸாயணர் ஒரு கதை சொல்லுவார். ஆனல் யாஸ்கரது மதம் அதுவல்ல. அந்தரிட்ச

மார்க்கத்தில் 12 கிரணங்களோடு கூடிய சூரியனது பாதை குறுக்கிடும் சந்திரனை அச்சூரிய கிரணங்கள் ஒளி மழுக்குகின்றன வென்பதாம். அப: நீரென்னுது அந்தரிட்ச மென்றெடுத்து, வ்ருகம் சந்திரமஸம் அதாவது சந்திரனை யென்று பொருட்படுத்துவார் அவர்.

12. தேவர்கா ணவம தாகக் குயிற்றியே சிறக்கு மிவ்வும்
பாவுசீ ரோதும் போற்றுப் பலர்துதி யுறுதி வாய்ந்த,
தோவற வொழுகுஞ் சிந்து வுதகத்தை யோயா துந்தும்;
மேவிய சூரன் றன்மெய்க் கதிர்களை விரியா நிற்பான்;
தூவிய லுரோத ஸீயென் றுயரமீ துணர்ற் பாற்றே.

(இ - ள்) தேவர்களே! புதிதாகச் செய்து சிறப்பைப் பெறும் உமது கீர்த்தியைத் தோற்றும் இத்துதி பல ரித்விஜர்களால் துதிக்கத்தக்க வுறுதியைப் பொருந்தியது. தடையில்லாம லொழுகும் ஆறு அடிக்கடி நீரைச் சுமந்துகொண்டு செல்லும். சூரியனும் தனது ஸத்தியகிரணங்களை விரிப்பான். பூமிவானங்களே! என்றுயரம் உணரற்பாலது.—(எ-று.) ரிதம், ஈண்டு, உதகம் அல்லது நீரைக் குறிக்குமென்றூர் ஸாயணர். ஆனல் அதன் உண்மைப் பொருள் இயற்கை யொழுங்கு என்பதாம். பகலிரவுகள் மாறிமாறி வருவதும், சூரியன் தனது வீதியிற் செல்லுவதும், மழைகாலத்திற் பெய்வதும், அம்மழையினுல் ஆறுகள் பொய்க்கா தொழுகுவதும், ஆகிய இவற்றை யெல்லாம் அது பிண்டமாய்க் குறிக்கும். இக்கடையாய ஆற்றின் செய்கைக்கும் அச்சொல் உபயோகப்படுவதாற்றுன் ரிதம் நீரைக் குறித்ததுபோலும் என்பார் (Wallis) வாலிஸ் என்பவர் தமது ரிக்வேத அண்ட சாஸ்திரம் (Cosmology of the Rig-Veda, Page 93) என்னும் நூலில்.

13. அங்கியே, தேவரோடு மணைந்தவுன் னுறவு மெத்தப்
பொங்குறு புகழிற் றுமாற்; பொலிவுற நீயு மெங்க
டுங்கதல் லெக்கி யத்தே, துகளறு ஞானம் வாய்ந்தோய்!
தங்குக, மனு மகத்தின் றேவரை வணங்கி யேத்தல்;
மங்கலில் புவிவா னென்றன் மம்மரீ துணரற்பாற்றே.

(இ - ள்) அக்கினியே! தேவர்களோடும் பொருந்திய உனது பந்துத்வம் மிகப் பிரசித்தி பெற்றது. சிறந்த ஞானத்தோடு கூடியவனே! மநுவினது யாகத்திற் றங்கினதுபோல எங்கள் யாகத்தினிடத்துத் தங்கித் தேவர்களைப் பூஜிப்பாயாக. பூமி வானங்களே! என் துன்பத்தை யுணர்வீர்களாக.—(எ - று.)

14. நனியறி வார்ந்தோன் றேவர் நாப்பணோர் தேவனுனேன்
மனிதன்போ லோதா வாக மருவியீண் டமர்ந்து ஞானம்

புனையுழுத் தமனு மங்கி பொருத்துக தேவர் மாட்டிங்
கினிதின்யா மளிக்குந் தேவத் திரவியத் தினையி றையின்;
வனமுறு புவிவா னென்றன் வருத்தமீ துணரற் பாற்றே.

(இ - ள்) மிக்க வறிவு நிறைந்தவனும் தேவர்களுக் கிடையில் ஒரு தேவனும், மனிதனைப்போல ஹோதாவாக இவ்விடத்துத் தங்கிய சிறந்த ஞானவானுமாகிய அக்னி, யாங்கள் தரும் அவிப் பொருள்களைச் சாஸ்திர மரியாதைப்படி விரைவில் தேவர்களிடத்துச் சேர்க்கட்டும். புவி வானங்களே! என் வருத்தத்தை யுணர்வீர்களாக.—(எ - று.)

15. அனிட்டத்தை நீக்குந் தேவன் வருணனுங் காவல் சார்ந்தா,
னனிட்டமில் லாது மார்க்க மணைப்பவன் றனையி ரப்பாம்;
இனிக்குமிம் மறையோ னுள்ளத் தெழுந்துதி யுரையா நின்றான்
புனிற்றுறு துதியை வாய்ந்தோன் பொருந்துக மகத்தின் மெய்
சனித்தவான் புவிகா ளென்றன் றுபமீ துணரற் பாற்றே. [யே;

(இ - ள்) (அனிஷ்ட நிவாரணஞ் செய்யுந் தேவனாகிய) வருணன் எங்களைக் காக்குந் தொழிலைக் கைக்கொண்டான். மார்க்கத்தில் நேருந் துன்பங்களை நிவர்த்திக்கும் அவ்வருணனைப் பலன்றரும்படி யாசிப்போம். இந்த ஓதுவான் தனது இதயத்திலெழுந்த இனிய ஸ்தோத்திரத்தைக் கூறினான். புதிய துதியை யடைந்தவனாகிய வருணன் எமது ரிதத்தில் (யக்ஞத்தில்) பொருந்துக. பூமி வானங்களே! எனது கஷ்டத்தை யுணர்வீர்களாக.—(எ - று.)

வருக்கம் 22.

16. தேவர்கா ளீண்டு தோற்றிச் சிறப்புற நிருமித் தோக்க
மேவிய கதிரோன் மார்க்கந் தன்னைநீங் களுமே மீறி
யாவலிற் கடக்க வல்லீ ரல்லிரே! மர்த்தி யர்காள்!
பாவுறு மதனை யுங்கள் பார்வையா னுணரீர்; மற்றுத்
தூவிய லுரோத வீயென் றுயரமீ துணரற் பாற்றே.

(இ - ள்) தேவர்களே! இங்கே யாவருங் காண நன்றாக வமைக்கப்பட்டுப் பெருமை பொருந்திய சூரியனது பாதையை நீங்களும் தாண்டிச் செல்லமாட்டீர்கள் (ஏன்? பரிவிராஜகர்கள் ஸூர்யத்துவாரா பிராஹ்மலோகத்துக்குப் போகிறார்களென்ற சுருதி யுண்மையால். அதுவே யன்றித் தேவர்கள் வாழ்வுக்கு அதுவழியுமாவதா லென்க.) மரண தர்மத்தோடு கூடியவர்களே! அச்சூரியனை உங்கள் கண்ணினாற் காணமாட்டீர்கள். (மந்திர திருஷ்டாவாகிய எனக்குத் தெரிகிறது. பாபிகளாகிய உங்களுக்குத் தெரியவில்லையே யென்று துக்

கித்தபடி.) வானம் பூமிகளே! எனது கஷ்டத்தை யறிவீர்களாக.—(எ - று.) தேவர் வாழ்வுக்குச் சூரியன் வழியென்றதை ஸாயணர் விளக்குகிறார். ஸூர்யனால் வஸந்த மாதிய ரிதுக்க ளேற்படுகின்றன. ரிதுகாலங்களில் யக்ஞங்கள் நடைபெறுகின்றன. யாகங்களால் ஸத்துக்களுக்கு ஜீவன மேற்படுகின்றது. அதனால் தேவர்களும் அதனை அதிக்கிரமத்து நடப்பதில்லை யென்றபடி. (Benfey,) பென்வே யென்பவர் ஸூர்ய பந்தா வென்றது மேற் பன்னிரண்டாவது செய்யுளிற் கூறப்பட்ட சத்திய நெறி அல்லது இயற்கை யொழுங்கைக் குறிக்கு மென்பார்.

17. கிணற்றில்வீழ்ந் தவதிப் பட்ட திரிதனு முதவி கேட்டுப்
பணித்தனன் றுதியைத்தேவர்பால்,அவ னிழைத்த போற்றைக்
கணித்தனன் றேவ வாசான் கண்ணுறு மவன்றன் பாபந்
துணித்தவன் றன்னைத் தூய்மை துலங்குற விடுவித்தற்குப்;
பிணைத்தவான் புவிகா ளென்றன் பீடையீ துணரற்பாற்றே.

(இ - ள்) கிணற்றில் விழுந்த திரிதன் உதவியை நாடித் தேவரைத் துதித்தான். அவன் பாவத்தைச் சேதித்து அவனை விடுதலை செய்வதற்காக அவன் ஸ்தோத்திரத்தைத் தேவராட்சகனாகிய பிரஹஸ்பதி கேட்டான். வானம் பூமிகளே! என் பீடையை யறிந்து விளக்குவீர்களாக.—(எ - று.)

18. செந்நிறந் தன்னை வாய்ந்த சீரினோர் விருக மோர்நாள்
மன்னிய வெனது பாதை மாட்டியான் படரும் போது
துன்னியோர் முறையென் றன்னைக் கண்டது; சுவனே யுற்றுப்
பின்னுற வளையுந் தச்சன் புரையப் பின் மறைந்து சென்ற,
துன்னும்வான் புவிகா ளென்ற னுறுகணீ துணரற் பாற்றே.

(இ - ள்) செந்நிறமுள்ள கோநா யொன்று ஒரு நாள் என் வழி வந்து என்னைச் சந்தித்தது. முதுகுவலி யெடுத்த தச்சன் பின்னால் வளைந்து கொடுப்பது போலத் திரும்பிச் சென்று மறைந்தது. வானம் பூமிகளே! என் துன்பத்தை யுணருவீர்களாக.—(எ - று.) இவ்விருக்குக்கு வேறொரு பொருளு முண்டு. அது வருமாறு:—

18-அ இடமக லுலகைத் தோற்ற மெய்துற விளக்கி மாதந்
திடமுற வாக்குஞ் சீதன் வானெறி செல்லு மீனைத்
தடையறக் கண்டான், பின்ன ரவற்றொடு சென்றான் கூபத்
திடையுறு மென்பா லெய்த வெண்ணில, னென்னே யென்னே!
மிடையுறு முரோத லீயென் விழுமமீ துணரற் பாற்றே.

(இ - ள்) பெரிய உலகத்தைப் பிரகாசிப்பிக்கும் மாஸகிருத்தாகிய சந்திரன், வானத்திற் செல்லும் நட்சத்திரங்களைக் கண்டு அவற்றோடு கூடச் சென்றான். கிணற்றில் விழுந்த வென்னிடத்து வரவெண்ணவில்லை. இது என்ன அநியாயம்! வானம் பூமிகளே! என் துன்பத்தை யறிந்து அதனை நீக்குங்கள்.—(எ - று.) ஈண்டு, மாஸகிருத்தெனப் பிரிக்காது மாஸகிருத் என்று ஒரு சொல்லா யெடுத்துப் பட்ச, மாஸ, ரிது, அயனாதி காலங்களுக்கு ஆதாரமாயுள்ள விருகம் அல்லது சந்திரனென்றார் யாஸ்கர். விருகம், விக்ருத ஜ்யோதிஷ்கோவா விகுருதஜ்யோதிஷ்கோவா விக்ராந்த ஜ்யோதிஷ்கோவா வென்பார். சாகல்யத்திலும் மாஸ கிருத்தென இரண்டு பதங்களாகவே பிரித்துள்ளது. அதன்படி, "தட்சனது புத்திரிகளாகிய நட்சத்திரங்கள் அடிக்கடி யென்னைப் பார்க்கின்றன. அது தெரிந்தும் அந்த நட்சத்திரங்களினோடேயே செல்லுகிறான். என்னைக் கிணற்றினின்று தூக்கிவிட வருவதில்லை. இது அநுசிதம்" என்பது பொருள்.

19. கூவிய விப்போற் றுல்யாங் கோபதிதுணையின் வீரர்
யாவரு மிணையிப் போரில்வெல்லுவாம்; எமதிப்போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவும் மதிதிதானு
மேவுமித்திரவ ருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) சப்தத்தோடு கோஷிக்கு மித்தோத்திரத்தை, யிந்திரனைத் துணையாகக் கொண்டவர்களும் வீரர்களாகிய புத்திர பௌத்திரர்களோடு கூடியவருமாகிய யாங்கள் கூறிச் சத்துருக்களை ஜயிப்போம். எமது இவ்வேண்டுகோளைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் காக்கட்டும்—(எ - று.) கோபதி, இந்திரன்.

வருக்கம் 23.

## 106. மண்டலம் 1 அநுவாகம் 16 சூக்தம் 1.

7 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை குத்ஸன். வடமொழிச் சந்தம்; ஜகதி, 7 த்ருஷ்டுப். தேவதை: விச்வதேவர்கள்.

வேறு

1. இந்திரனை மித்திரனை வருணனொடு
மக்கினியை யீட்டஞ் சார்ந்த
சுந்தமா ருதாதிதி யிவர்களையாந்
துணைபுரியத் தோய்ந்த ழைப்பாம்;

உந்துறுமே டவலுறையும் பாதையினிற்
றேரதனை யோட்ட லொப்ப
நந்தமது பாவமெலா நற்கொடைசால்
வசுக்கள்நமி ஞடி யோட்ட.

(இ - ள்) இந்திரனையும், வருணனையும், அக்கினியையும், மருத்துக் கூட்டத்தையும், யாங்கள் உதவிசெய்யுமாறு கூவுவோம். மேடும் பள்ளமுமாயுள்ள பாதையினின்றும் (தேர்ப்பாகர்கள்) தேரை யோட்டிச் செல்லுவதுபோல நமது பாபங்களை யெல்லாம், நல்லதானத்தோடு கூடிய வஸுக்கள் (செல்வ நிறைந்த தேவர்கள்) நம்மைவிட்டுப் போகும்படி யோட்டி விடட்டும்.—(எ - று.) வஸுக்கள் ஈண்டு பொதுவாகத் தேவர்களைக் குறித்து நின்றது. மித்திரன் முதலியோர் வரலாற்றை மண் 1. சூக் 88. ரிக் 1., மண் 1. சூக் 89. ரிக் 3. இவற்றிற் பார்க்க.

2. அந்தமுறு மதிதியின தரும்புதல்வீர்
யாம்வாழ்வை யடையச் சார்வான்
முந்துறுவீர்; தேவர்காள் போரினில்யாம்
வெற்றியுறச் சுகத்தை யூட்டீர்;
உந்துறுமே டவலுறையும் பாதையினிற்
றேரதனை யோட்ட லொப்ப
நந்தமது பாவமெலா நற்கொடைசால்
வசுக்கணமி ஞடி யோட்ட.

(இ - ள்) அழகிய அதிதி புத்திரர்களே! (ஆதித்யர்களே) யாங்கள் வாழ்வைப் பெறுமாறு முதற்கண் வருவீர்களாக. தேவர்காள், யுத்தத்தில் எங்களுக்குச் சுகத்தை யளிப்பீர்களாக. பின்னிரண்டடியின் பொருள் முன்பாட்டைப்போலவே.—(எ - று.) வசுக்கள் நம்மின் நாடி யோட்ட எனப் பிரிக்க.

3. சந்தமுறத் துதிக்கவருந் தந்தையரு
மெமைக்காக்க, சார்ந்த தேவர்
சந்ததியென் றெண்ணுமிரு தேவியர்வான்
புவிகள்ரிதஞ் சாதிப்போரும்;
உந்துறுமே டவலுறையும் பாதையினிற்
றேரதனை யோட்ட லொப்ப
நந்தமது பாவமெலா நற்கொடைசால்
வசுக்கணமி ஞடி யோட்ட.

(இ - ள்) சுகமாகத் துதிக்கத்தக்கவர்களாகிய எங்களுடைய தந்தையர் (அக்கினி முதலிய தேவர்கள்) எம்மைக் காக்கட்டும். எல்

லாத் தேவர்களுக்கும் புத்திர ஸ்தானத்திலிருந்து ஒழுங்கு அல்லது ஸத்தியத்தை வளர்ப்பவர்களாகிய வானம் பூமிகளும் எம்மைக் காக்கட்டும். மற்றது முன்போல.—(எ - று.)

4. நந்துமனந் தனைப்பெருக்கு நராசம்ஸன்
றன்னையிவ னுடும் வீரர்க்
கந்தமுறு நாயகனும் பூடனையுந்
தோத்திரத்தோ டணைந்தி ரப்பாம்;
உந்துறுமே டவலுறையும் பாதையினிற்
றோதனை யோட்ட லொப்ப
நந்தமது பாவமெலா நற்கொடைசால்
வசுக்கணமி னுடி யோட்ட.

(இ - ள்) மிகுந்த அன்னப்பொருள்களை (அல்லது மேனுட்டாசிரியருரைப்படி வலிமையை) வளர்க்கும் நராசம்ஸன் என்னும் தேவனுகிய, அக்கினியையும்; வீரர்களுக்கு நாயகனுகிய பூஷனையும் நாம் ஸ்தோத்திரத்தோடு நெருங்கி யாசிப்போமாக. ஏனையது முன்போலவே—(எ - று.) நராசம்ஸன். நரர்களால் துதிக்கப்படுபவன் அக்கினி. மண். 1 சூக். 13 ரிக். 3 பார்க்க. பூஷன் மண். 1. சூக். 14 ரிக். 3 பார்க்க.

5. மந்திரியே! யெக்காலு மெங்களுக்குச்
சுகநெறியை மருவு விப்பாய்;
சிந்தைபய நிவாரணியு நோய்மருந்தும்
வேண்டியுனைச் சேர்ந்தி ரப்பாம்;
உந்துறுமே டவலுறையும் பாதையினிற்
றோதனை யோட்ட லொப்ப
நந்தமது பாவமெலா நற்கொடைசால்
வசுக்கணமி னுடி யோட்ட.

(இ - ள்) பிரஹஸ்பதியே! எப்பொழுதும் எங்களுக்குச் சுகத்தைத் தரும் மார்க்கத்தைச் சேர்ப்பாயாக. உன்னை யடுத்துப் பய நிவாரணத்தையும் ரோக சமனத்தையுந் தருவாயாக வென யாசிப்போம். மற்றது முன்போல—(எ - று.) சமநஞ்ச ரோகாணும் யாவநஞ்ச பயாநாம், என்பது யாஸ்கர் வசனம். மந்திரி பிரஹஸ்பதியின் பெயர். அவல், பள்ளம்.

6. இந்திரனை, விருத்திரனைக் கொல்பவனைக்,
கருமமெலா மெணிக் காப்பானை
யந்திலுறு கூவலினுழ் குற்சனெனு
மிருடிதனை யழைத்திரந்தான்;

உந்துறுமே டவலுறையும் பாதையினிற்
றேரதனை யோட்ட லொப்ப
நந்தமது பாவமெலா நற்கொடைசால்
வசுக்கணமி ஞடி யோட்ட.

(இ - ள்) கிணற்றில் விழுந்த குத்ஸரிஷி, விருத்திரஹந்தாவும், சசீபதியுமான இந்திரனை யுதவி செய்யுமாறு வேண்டினான். மற்றது முன்போல—(எ - று) விருத்திரஹந்தா விருத்திரனை அல்லது சத்துருவைக் கொல்லுபவன். சச்சீபதி யென்றதற்கு எல்லாக் கர்மங்களையும் பரிபாலிப்பவனென்றும், இந்திராணியின் புருஷனென்றும் இரண்டு பொருளுண்டு. பின்பொருளைக் கொள்ளின், 'இந்திரனை, விருத்திரனைக் கொல்பவனைச் சசிதேவி யெண்ணுங்கோனை' என முதலடியைப் படிக்க. குத்ஸன் கூபத்தில் விழுந்தவனென்பது மேற் சூக்தத்திற் சொல்லப்பட்டது.

7. தேவியா மதிதி யெம்மைத் தேவரோ டென்றுங் காக்க;
காவற்றே வெமை விழிப்பிற் காத்திட; எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானும்
மேவுமித் திரவருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) தானமுதலிய குணங்களிற் சிறந்த தேவியாகிய அதிதி எங்களைத் தேவர்களோடு எப்பொழுதுங் காக்கட்டும். காவற்றேவனாகிய ஸவிதா வெங்களை ஜாகரூகனா யிருந்து காக்கட்டும். எங்களுடைய இந்த ஸ்தோத்திரத்தைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னுமிவர்கள் காக்கட்டும்—(எ - று.) தேவஸ்த்ராதா, காவற்றேவு, எல்லாரையும் ரட்சிப்பவன், ஸவிதா.—ஸாயணர்.

வருக்கம் 24.

## 107. மண்டலம் 1. அநுவாகம் 16 சூக்தம் 2.

3 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை குத்ஸன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: விச்வதேவர்கள்.

1. எக்கியந் தேவரீயுஞ் சுகத்தினைப் பெறுக; எம்மாட்
டெக்குறு சுகத்தை, யாதித்தியர்களே, யியைக்க; உந்த
மிக்கநற் கடாட்ச மெங்கண் மேவுக; இன்மைசார்ந்தோன்
பக்கலுந் தனத்தை யீயும் பண்பினுத் தமர்கீ ராக.

(இ - ள்) எங்களுடைய யக்ஞம் தேவர்கள் தருஞ் சுகத்தை யடையட்டும். ஆதித்தியர்களே! எங்களுக்குச் சுகத்தை யளிப்பீர்

களாக. உம்முடைய சிறந்த கடாட்ச மெங்களிடத்துப் பொருந் தட்டும். தரித்திரனுக்குக்கூடத் தனத்தை யியைக்கு முத்தமர் களாக நீங்க ளாகக்கடவீர்களாக—(எ - று.) அம்ஹேசித் என்ப தற்குப் பாபிகளுக்குக்கூட அல்லது கஷ்டப்படுபவர்களுக்குக் கூட வென்று பொருள் கொள்ளினுந் தகும். தரித்திரனுக்குக்கூட என்றார்.

2. அங்கிரர் பாடுஞ் சாமத் தநிட்டித மடைந்த தேவர்
தங்குறு துணையோ டொன்றாச் சார்ந்தெங்கண் வருக; வேந்தன்
பொங்குதன் னுமமொய்ம்பின், மருத்துவர்தங் கூட்டத்தி
னங்கமாத் தஞ்ச மீக, வதிதியுந் தேவ ரோடே.

(இ - ள்) ஆங்கீரஸர்கள் பாடும் ஸாமகானத்தைப் பெற்ற தேவர்கள் தமது உதவிகளோடு ஒன்றாகக்கூடி எம்மிடத்து வருக. இந்திரன் சத்துருக்களை யடக்கும் தனது வலிமையோடும், மருத் துவர்களுடைய கூட்டத்தோடும் எங்களுக்கு அடைக்கலத்தைத் தாட்டும். அதிதியும் தன் புத்திரர்களாகிய தேவர்களோடு எங்க ளுக்கு அடைக்கலந் தரட்டும்—(எ - று.) மருத்துக்கள் ஏழெழுவ ராம், மண். 1 சூக். 88 ரிக் 1 பார்க்க. மொய்ம்பின், மொய்ம்பொடு; கூட்டத்தின் கூட்டத்தோடு என்க. அதிதியுந் தேவரோடே யீக வென்க.

3. பாவுறு முண்டி யங்கி வருண னிந்திரன் சவிதா
ஆவலி னரியமானு மளித்திட; எமதிப் போற்றைத்
தாவறு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திரர் வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) யாங்கள் யாசிக்கும் அன்னப் பொருள்களை, அக் கினி, வருணன், இந்திரன், ஸவிதா, அர்யமான் இவர்கள் தாட்டும். எங்களது இந்த ஸ்தோத்திரத்தைப் பூமியும் வானமும் ஸிந்துவும் அதிதியும் மித்திரனும் வருணனுங் காக்கட்டும்—(எ - று.)

வருக்கம் 25.

## 108. மண்டலம் 1 அநுவாகம் 16 சூக்தம் 3.

13 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷுி குத்ஸன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவ தை: இந்திராக்கினிக ளிருவரும்.

1. சித்திர வொளிசார் தேரிற் றிகழுறு புவன முற்றுந்
தத்தியே சூழ்ந்து நோக்குந் தன்மைவாய்ந் ததனிலேறி

யொத்திவ ணணையி, ருன்னு மங்கியிந்திரர்காள், சோம
வத்துவார் சுதையை யீண்டு பிழிந்தொழுகுவதை மாந்தீர்.

(இ - ள்) இந்திராக்கினிகளே ! சித்திரகாந்திபொருந்தியதும், எல்லாப் புவனங்களையும் பார்க்கும் பெருமை பொருந்தியதுமான தேரிலேறி இங்கு வருவீர்களாக. ஸோமம் பிழிந்துள்ளதைக் குடிப் பீர்களாக—(எ-று.)

2. இப்புவ னங்கள் யாவு மெத்தகை விசால மாயு
மொப்புறு கெம்பீரத்து முற்றுள, விந்தி ராங்கி,
யப்பெரும் பரப்பாழத்திற் சோமமு மமைந்து நிற்க,
செப்புறு நீவி ருள்ளத் திருத்தியிற் பருக வென்றே.

(இ - ள்) இந்திராக்கினிகளே ! இப்புவனங்களெல்லாம் எவ் வளவு விசாலமாயும் கம்பீரத்தோடு முள்ளனவோ, அவ்வளவு விசாலமாயும் ஆழமாயும் இந்த ஸோமமும் நீங்கள் மனத்திருப்தி யோடு பருகுமாறு அமைந்திருக்கட்டும்—(எ-று.) கபீரம் காம்பீர்யோ பேதம் என்பதற்கு ஆழ்ந்துள்ளது என்று மேனுட்டாசிரியருரை கூறுவார். இந்திராங்கீ தீர்க்கஸந்தி.

3. இந்திராக் கினிகா ணீங்க ளியைந்து மங்கல நாமத்தை
முந்துற வடைந்தீர் ; கூடி முயன்றனி ரகியைக் கொன்றீர் ;
வந்தனை யளிக்கு மேலீர், மருவியீண் டமர்ந்து சோம
மந்தில்பே ராற்ற லூட்டுந் தகையதைக் குடிப்பீ ரன்றே.

(இ - ள்) இந்திராக்கினிகளே ! நீங்க ளிருவருஞ் சேர்ந்து கல் யாண நாமத்தை யடைந்தீர்கள். இருவருஞ் சேர்ந்து முயற்சி செய்து விருத்திரனுகிய பாம்பைக் கொன்றீர்கள். பிரார்த்தித்த பொருள்களைத்தரும் பெரியவர்களே ! இங்குவந்தமர்ந்து பெரிய வல்லமையை யூட்டும் பெருமை வாய்ந்த ஸோமத்தைக் குடிப்பீர் களாக—(எ-று.)

4. சுருக்கிரண் டெடுத்துத் தூய தருப்பையை விரித்துத் தீயைப்
பொருத்திநற் சமித்தை மூட்டும் பொழுதினி லழகு பெற்றார் ;
உரத்துறு சோமஞ் சூழ வூற்றிய திமுக்க வேகி
யருத்தியை யளிக்கு மெண்ணத் தகைகவிந் திரவங் கீயே.

(இ - ள்) (அத்வர்யுவும் பிரதிப்ராஸ்தாதாக்களுமாகிய விருவர்) இரண்டு சுருக்கினுலும் நெய்யை எடுத்துப் பரிசுத்தமான தர்ப்பையை விரித்துத் தீயைப் போற்றிச் சமித்துக்களை மூட்டும்போது கவுரவத் தையடைந்தார்கள். சுற்றிலும் ஊற்றப்பட்ட வலிமையைத்தரும்

ஸோமமானது உங்களை ஆகர்ஷிக்க, இந்திராக்கினிகளே, எங்களது இச்சைகளையளிக்கும் எண்ணத்தி னமைக—(எ-று.) அழகு பெற்றூர் என்பது மூலத்திலில்லை. அத்வர்யு, பிரதிப்ரஸ்தாதா வென்னுமிரு வரு மென்றது ஸாயணருரையிற் கண்டது. அவர்கள் யாகப்பிரா மணர்கள் 16 பேரிற் சேர்ந்தவர்கள். அத்வர்யு, ஹோதா, பிரஹ்மா, ஆக்னீத்ரன், உத்காதா, பிரதிப்ரஸ்தாதா, நேதா போதா, ஸுப்ரஹ் மண்யன், க்ராவஸ்துத், பிராஹ்மணுச்சாம்ஸி, அச்சாவாகன், ப்ரஸ் தோதா, ப்ரசாஸ்தா முதலியோர் பதினறுவர். மேல் மண் 1 சூக். 95 ரிக் 6 பார்க்க.

5. வீரியச் செய்கை கட்கா, மிகுவலி யிந்திராங்கீ,
பாரெலா முலவுந் தோற்றம் படைத்த தற்காக, வண்மை
யேரியை யுங்க ணட்புப் பண்டுதொட் டொளிர்வ தற்காத்
தாரினிற் சமைக்குஞ் சோமச் சுதையினைப் பருகு வீரே.

(இ - ள்) மிக்கவலிமை பொருந்திய இந்திராக்கினிகளே! வீரிய கிருத்தியங்களைச் செய்ததற்காவும், உலகமெல்லாவற்றிலுமுள்ள சிருஷ்டிகளைப் படைத்ததற்காகவும், வள்ளன்மை பொருந்திய உங் களுடைய சிநேகம் பண்டைக்காலத்திலிருந்து விளங்குவதற்காகவும், பூமியில் எல்லாராலும் பிழியப்படும் ஸோமத்தைக் குடிப்பீர் களாக—(எ-று.) இந்திராக்கினிகளே எல்லா ஜகத்சிருஷ்டிகளையும் செய்கிறூர்கள்; இந்திரன் ஸூர்ய ரூபமாக விருந்து மழையைப் பெய்விக்கிறுன்; மழையினுல் எல்லாப் பிராணிகளு முண்டாகின்றன வென்க.

வருக்கம் 26

6. முதன்முத லும்மைத் தேர்ந்த பொழுதினின்மொழிந்தாற்போல
சுதைப்பொருட் டசுர ரோடு தொடர்ந்துபோராட வேண்டிச் [ச்
ததைந்த(து), இச்சத்தியத்தைத் தாங்களு முணர்ந்து வந்து
துதைந்தசோ மப்பெருக்கைத் தோய்ந்து வாய்மடுத்திடீரே.

(இ - ள்) (இந்திராக்கினிகளே!) யான் முதன்முதலும்மை யக்ஞத்துக்காகத் தேர்ந்தபோது சொன்னது போலவே ஸோமத் தின்பொருட்டு அசுரர்களோடு தொடர்ந்து போராடவேண்டி வந்தது. இவ்வுண்மையை நீங்களு மறிந்து இவ்விடத்து நிறைந்துள்ள சோம வெள்ளத்தைக் குடிப்பீர்களாக—(எ-று.)

7. இந்திராக் கினிகா, ளுந்தஞ் சுயகி ருகத்திலேனும்
அந்தமார் மறையோ னன்றி யரசனோ டேனும், தூயீர்,
முந்துறு களிப்பி னுழ்ந்து மூழ்கினு மங்கு னின்று
வந்தருள் புரிவீர் சோமச் சுதையினை மாந்து வீரே.

(இ - ள்) பரிசுத்தமான இந்திராக்கினிகளே! உம்முடைய ஸ்வக்கிருகங்களிலாதல், அல்லது வேறொரு பிராஹ்மண யஜமானன் வீட்டிலாதல், அல்லது ஒரு க்ஷத்திரிய அரசனோடாதல் நீங்கள் உள்ளக்களிப்போடு அமர்ந்து கொண்டிருந்தாலும், யான் கூப்பிடும்போது வருவீர்களாக. வந்து, பிழிந்துள்ள ஸோமத்தைப் பருகுவீர்களாக—(எ - று.)

8. யதுக்கள் துர் வசர்களோடு பூருக்க ளநுக்களோடு
வதியினுந் துருகியாரோ டுறையினு, மிந்தி ராங்கி,
துதியின ரிச்சை தோய்ப்பீர், தோயுமவ் விடத்தி னின்று
மதிவிரை வோடு வந்தீண் டமிழ்தினைப் பருகுவீரே.

(இ - ள்) இந்திராக்கினிகளே! ஸ்தோதாக்களினுடைய இச்சைகளை வர்ஷிப்பவர்களே! யதுக்கள், துர்வசர்கள், பூருக்கள், அநுக்கள், த்ருஹ்யுக்கள் என்னும் ஐந்துவகை மாந்தர்களிடத் துறையினும், நீங்களுள்ள அவ்விடத்தினின்றும் விரைவாகவந்து இங்குள்ள சோமத்தைப் பருகுவீர்களாக—(எ - று.) யதுக்கள், துர்வசர்கள், பூருக்கள், அநுக்கள், த்ருஹ்யுக்கள், இவர்கள் யயாதியின் வம்சத்தினரான, யது, துர்வசன், பூரு, அநு, த்ருஹ்யு என்னும் ஐவரையும் வழிக்கொண்டவர்கள் என்பார் மேனாட்டாசிரியர். மண் 1 சூக். 7 ரிக் 9 பார்க்க. ஆனால் ஸாயணரோ யதுக்கள் நியமம் வாய்ந்த அஹிம்ஸகர்களென்றும், துர்வசர்கள் தீங்கிழைக்கும் மாந்தர்களென்றும், த்ருஹ்யுக்கள் பிறருக்குத் துரோகஞ்செய்யும் நினைப்புள்ளவர்களென்றும், அநுக்கள் ஞானமும் அநுஷ்டானமு முள்ளவர்களென்றும், பூருக்கள் திருப்தி நிறைந்த இதர ஸ்தோதாக்களென்றும் பொருள் கூறுவர். பாட்டுக்காக துருகியார் என்றார் த்ருஹ்யுக்களை.

9. பிதுவியா மடிக்க ணேனும் பெருகுமத் தியத்தி லேனு
மதிபர மோச்சத் தேனு மணையினு, மிந்தி ராங்கி,
துதியின ரிச்சை தோய்ப்பீர், தோயுமவ் விடத்தி னின்று
மதிவிரை வோடு வந்தீண் டமிழ்தினைப் பருகு வீரே.

(இ - ள்) ஸ்தோதாக்களின் இச்சையை யளிக்கும் இந்திராக்கினிகளே! தாழ்ந்த தலமாகிய பூமியிலேனும் மத்தியதலமாகிய அந்தரிட்சத்திலேனும் பரமோச்சஸ்தலமாகிய விண்ணிலேனும் எங்கிருந்தாலும் அங்கிருந்து வேகமாக வந்து ஸோமத்தைப் பருகுவீர்களாக—(எ - று.) மூலத்தில் பிருதிவ்யாம் என்பது மத்திய நிலைத்தீபகமாக வுள்ளது. அங்கே பிருதுவி யென்பதற்கு ஸ்தலம் என்பது பொருள். தாழ்ந்த ஸ்தலமாகிய விண்ணிலாவது என்று அந்வயிக்க.

அடுத்த ரிக்கில் பூமி இப்பொருளில் வந்துள்ளது. பிருதுவி, பிதுவி யென மருவியது.

10. அதிபர மோச்ச பூமி யாயினு நடுவ ணேனும்
கதுவுகீட் டலத்தி லேனுங் கலக்கினு, மிந்திராங்கி,
துதியின ரிச்சை தோய்ப்பீர், தோயுமவ் விடத்தி னின்று
மதிவிரை வோடு வந்தீண் டமிழ்தினைப் பருகு வீரே.

(இ - ள்) முன்போலவே—(எ - று.) மேற்பாட்டிற் சொன்ன முறையை மாற்றித்துதித்தது. ஈண்டு பூமி, இடம், ஸ்தலம் என்னும் பொருளில் வந்தது.

11. வதிவதா காயத் தேனு மண்தலத் தேனு மன்றிக்
குதாத்தி னீரிற் பூண்டிற் குலவினு, மிந்திராங்கி,
துதியின ரிச்சை தோய்ப்பீர், தோயுமவ் விடத்தினின்று
மதிவிரை வோடு வந்தீண் டமிழ்தினைப் பருகுவீரே.

(இ - ள்) காமாபிவர்ஷகர்களே! இந்திராக்கினிகளே! நீங்கள் வானத்திலிருப்பினும் பூமியிலிருப்பினும், மலை, நீர், பூண்டு இவற்றிற் கலந்திருப்பினும் அங்கிருந்து விரைவாக வந்து இங்குள்ள ஸோமத்தைப் பருகுவீர்களாக—(எ - று.) குதாம் மலை என்க.

12. ஆதவ னுச்சி நண்ணு மப்பொழு தவியன் னத்தைக்
காதலி னுண்டு நீவிர் களிக்கினு மிந்திராங்கி,
மாதுதி யினர்த மிச்சை வழங்குவீர், அங்க னின்று
மாதரத் தோடு மீண்டுற் றமிழ்தினைப் பரு குவீரே.

(இ - ள்) இச்சையை யளிப்பவர்களே! இந்திராக்கினிகளே! சூரியன் உச்சிக்கு வரும் மத்தியான காலத்தில் நீங்கள் அவியுணவையுண்டு ஸந்தோஷித்திருப்பினும் அங்கிருந்து ஆசையோடும் இங்குவந்து ஸோமத்தைக் குடிப்பீர்களாக—(எ - று.) அவியுணவையுண்டு களிக்கினு மென்றது உங்களது ஸ்வதேஜஸோடு விளங்கினும் என்றும் மூலத்திற்கு ஒரு பொருள் கூறுவதுமுண்டு.

13. ஈவகை யெம்சோ மத்தை மாந்தியே, யிந்திராங்கி,
பாவுபல் பொருளை யீந்து பரித்திடீர்; எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவுமித் திரர் வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) இந்திராக்கினிகளே, இவ்வகை எங்களது ஸோமத்தைக் குடித்துப் பல பொருள்களையுந் தந்து எங்களைப் பாதுகாப்பீர்களாக.

எங்களுடைய இத்துதியைப், பூமி வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னும் இவர்கள் காக்கட்டும்—(எ-று.)

வருக்கம் 27.

## 109. மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் 4.

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷை குத்ஸன். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: இந்திராக்கினிகள்.

1. வாழ்வினை விழைந்த யானென் மனத்தினுன் ஞாதி யேனுந்
தாழ்விலாப் பந்து வேனுந் தயங்கிடச் சூழ்ந்தேன்; உம்மின்
வாழ்வளி மதியோர் வேறு மன்னில, ரிந்திராங்கீ,
சூழ்விழைந் துருகிப் போற்றைக் குயிற்றினே னும்பொருட்டே.

(இ - ள்) வாழ்வையடைய விரும்பிய யான் ஞாதியாவது இதரஸமான பந்துக்களாவது கிடைக்கட்டுமென்று எண்ணினேன். (நீங்கள் ஞாதிகளும் பந்துக்களுமானீர்கள் என்றபடி.) உம்மைக்காட்டிலும் வாழ்வைத்தரும் நன்மதியுள்ளவர்கள் எனக்கு வேறொருவருமில்லை. இந்திராக்கினிகளே! அன்னத்தை விரும்பி யுருகுகின்ற இந்த ஸ்தோத்திரத்தை யுமக்குத் திருப்தியுண்டாகும்படி செய்தேன்—(எ-று.) உருகு இப்போற்றையெனப் பிரிக்க.

2. கல்விகேள்வியிற் குறைந்த கடையனு மணாளன் றன்னின்,
நல்விவா கத்தி ருந்து நடையளி பிராதாத் தன்னிற்
செல்வமிக் கீவீ ரென்று கேட்டுளேன்; உமக்குச் சோமம்
பல்குறா தனத்தோ மத்தைப் பயிற்றினே, னிந்தி ராங்கீ.

(இ - ள்) கல்வி கேள்விகளிற் குறைவான (ரூபமில்லாத) குணக்கடையனுகிய மணாளன் பெண்ணுக்குப் பரிசம் நிறையக் கொடுப்பதைக்காட்டிலும், விவாக காலத்திலிருந்து (சகோதரியின் திருப்திக்காகச்) சகோதரன் சீதனம் யதேஷ்டமாகக் கொடுத்துக்கொண்டு வருவதைக் காட்டிலும், நீங்கள் வெகு செல்வமளிப்பவர்களென்று கேட்டுள்ளேன். இந்திராக்கினிகளே! உங்களுக்கு ஸோமத்தோடு கூடிய ஒரு புது ஸ்தோமத்தை யியற்றியுள்ளேன்—(எ-று.) பெண்ணுக்குத் தகுந்த வரனல்லாதவன் பெண்வீட்டாருக்கு மிகப் பொன் தருவதும், சகோதரன் சகோதரிக்குத் தனமளிப்பதும் மரபு. நடை, பொன், ஈண்டு, ஸ்திரீதனமாயிற்று.

3\. தாம்பினைத் தறியோம்; முன்னோர் சத்தியு முவர்த மல்லுந்
தாம்பெறு வமிசப் பேற்றைத் தடையறப் பெறுவா னில்லாள்
ஓம்புறு மவர் யாசித்தார், பகையுணர் இந்திராங்கி,
தாம்பல வுரைக்கும் ஸ்தோத்திரச் சுகமுற வருகி ருந்தே.

(இ - ள்) பகைவர்களை யறியும் அல்லது வருத்தும் இந்திராக்கினிகளே! யாங்கள் எங்கள் வம்சாவளியாகிய கயிற்றை யறுத்து விடமாட்டோம். எங்கள் முன்னோரது பலமும், (உவர்தம்) இவ் விந்திராக்கினிகளின் பலமும் பொருந்திய வம்சப்பேற்றை யடைவ தற்காகப், (விருஷ்ண:) புத்திரர்களைப் பெறத்தக்க மனைவியரோடு கூடிய யஜமானர்கள், தாங்கள் சொல்லும் ஸ்தோத்திரங்களால் உங்களுக்குச் சுகமுண்டாகும்படி பக்கத்திலிருந்து யாசித்தார்கள்—(எ-று.) பின்னிரண்டடிகளை வேறுமாதிரி படித்தலும் ஒன்று. அது வருமாறு: 'ஓம்புறுமவர் யாசித்தாருயா திசவனத்தோலி, னேம்பலிற் பிளிறுஞ் சோமக் கற்களி னருகிருந்தே.' இவ்வுரைப்படியே மேனாட்டாசிரியர் மொழி பெயர்த்துள்ளார்; 'யஜமானர்கள் ஸோமம் பிழியும் தோலிற் சத்தத்தோடு சப்திக்கும் ஸோமக்கற்களிரண்டிற்கும் அருகினின்றும் யாசித்தார்கள்' என்க. தாம்பு சந்ததியென்பார் மேனாட்டாசிரியர். விருஷ்ண: ஸேக்தார: புத்ரோத்பாதேன ஸமர்த்தா: ஸபத்நீகா இத்யர்த்த: புத்திரரைப்பெற வல்லவர், பத்தினியோடு கூடியவரென்பது பொருள். திஷணா, மந்திரம் அதிஷவணசர்மம் என்னும் இரண்டு பொருளும் படும். உவர்தம் மல் என்றது இந்திராக்கினிகளின் வன்மை யென்க.

4\. உம்மிரு வருக்கு மத்த மூட்டுவா, னிந்திராங்கி,
செம்முறு தெய்வ வின்பச் சருமஞ் சோமஞ்சி றக்க
வம்மையி னூற்றும்; வாசிச் சுபக்கரக் கோல வத்தத்
திம்மென வருவீர் நீரி னினிமையை யிதற்கூட்டீரே.

(இ - ள்) இந்திராக்கினிகளே! உங்களிருவருக்கும் மதத்தை யூட்டும் வண்ணம், தெய்வவின்பத்தோடு கூடிய சோமம்பிழியுந்தோல் ஸோமத்தை வடிக்கும். குதிரையோடும், சுபம் பொருந்திய முன்கைகளோடும், அழகிய மேற்கையோடும், நீங்கள் விரைவின் வருவீர்களாக. தண்ணீரினது மாதுர்யத்தை இச்சோமத்துக் கூட்டுவீர்களாக—(எ-று) மேனாட்டாசிரியர், கடைசியடியினுரையில், அசுவினிகளே! யென வேறொரு விளியை வருவித்து ஸோமம் பிழியும் அசுவினிகளே யெனக் கூட்டுகவென்பார். அவ்விருவருமே அத்வர்யுவும் பிரதிப்பிரஸ்தாதாவுமாக விருந்து காரியங்களை நடத்துபவர்களாக மதிக்கப்படுபவர்க ளாதலாலென்க. மண். 1 சூக். 108 ரிக் 1 பார்க்க.

5. விருத்திரற் செற்றுப் பொன்னை விபசனஞ் செய்த காலை
யுருத்தபோராற்ற லுற்றீ ரென்றபேச் சொன்று கேட்டேன்
திருத்திய நோக்கி ரிந்தி ராங்கிகாள், சேர்ந்திவ் வெக்ஞ
வருத்தியிற் றருப்பை மீதார்ந் தமிழ்தினிற் களிகொள்வீரே.

(இ - ள்) விருத்திரனைக்கொன்று தனத்தைப் பக்தர்களுக்குப் பங்கு செய்தளித்தபோது, இந்திராக்கினிகள் மிகப்பலம் பொருந்திய வர்கள் என்ற பேச்சொன்று கேள்வியுற்றேன். நல்லபார்வையோடு கூடியவர்களே! இந்திராக்கினிகளே! இங்குவந்து இந்த யக்ஞத்தினி டத்துப் பிரியங்கொண்டு தருப்பைமீதமர்ந்து யாங்கள் தரும் ஸோமத் திற் சந்தோஷிப்பீர்களாக—(எ-று.) விபசனம், (Vibhajanam.) பங்குபோடுதல்.

வருக்கம் 26

6. ஆகவந் தன்னிற் காவற் கழைக்கும்போ, திந்தி ராங்கீ,
சேகுறு மனிதர் தம்மிற் றீவிர மார்ந்து, வானம்
பூதல மிவற்றின் மேலாய்ப் பூதர நதிக டம்மின்
வாகுற வுயர்ந்து மற்றைப் புவனங்க ளினுமோங் குற்றீர்.

(இ - ள்) யுத்தத்தில் உம்மைத் துணைக்கழைக்கும்போது, இந்திராக்கினிகளே, நீங்கள் வலிமைபொருந்திய மனிதரினுந் தீவிரங் கொண்டவர்களாய், வானம் பூமி யிவைகளைக் காட்டிலும் பெரியவர் களாய், மலை நதி யிவற்றின் ஆற்றலையுங் கடந்து இதர எல்லாப் புவனங் களினுமுள்ள பிராணிக் கூட்டங்களின் வலிமைக்கும் மேற்போனவர்க ளானீர்கள்.—(எ - று.)

7. வச்சிர வாகு கொண்டீர், மாழையைத் தாங்கி வந்தே
யுச்சித மாக வீவீர்; உந்துணை கொண் டளிப்பீர்;
நச்சியெம் பிதிரர் கூடி நற்கதி பெற்ற ஞாயி
றிச்சம யத்தெங் கண்ணு மிலங்குக விந்தி ராங்கீ!

(இ - ள்) வச்சிரத்தைக் கையிலேந்தியவர்களே! தனத்தைத் தாங்கிக் கொண்டுவந்து எங்களுக்குத் தருவீர்களாக. எமக்குத் துணைசெய்து எம்மைக் காப்பாற்றுவீராக. எமது பிதிர்கள் சென்று நற்கதி யடைந்த வழியாகிய சூரியனது கதிர்கள், இந்திராக்கினிகளே, இப்பொழுது எங்கள் கண்ணிலும் படட்டும்—(எ-று.) மாந்தர் சூரி யனைப் பேதித்துக்கொண்டு அர்ச்சிராதி மார்க்கத்துவாரா பிரஹ்ம லோகத்தை யடைகிறார்களென்று சாந்தோக்கிய உபநிடதம் கூறும். அர்ச்சிராதி மார்க்கம் என்றும், தூமாதிமார்க்க மென்றும் இரண்டு மார்க்கங்களுண்டு. அவற்றுள் ஒன்று ஒளியுள்ளது; மற்றொன்று இருணிறைந்தது. உத்தராயணம் சுக்கிலபட்சம் முதலிய காலங்

களில் இறப்பவர்கள் அர்ச்சிராதி மார்க்க வழியாகச் செல்லுகிறார்கள் என்றும், தட்சிணாயனம், அபரபட்சம் முதலிய காலங்களிலிறப்பவர்கள் தூமாதிமார்க்கமாக இருட்டு நிறைந்த வழியிற் செல்லுகிறார்களென்றும் கூறுப.

8. மேவலர்ப் புரம் பொடிப்பீர், வீசுக குலிசக் கையீர்,
காவல்செய் வீரெஞ் ஞாட்பி, னிந்திராங்கி ; யெம்போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவுமித் திரர்வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) சத்துருக்களின் கோட்டைகளை யழிப்பவர்களே! வச்சிராயுதத்தைக் கையிற் றாங்கியவர்களே! இந்திராக்கினிகளே! பொன்னைக் கொடுப்பீர்களாக. எங்களது யுத்தத்தில் எங்களைக் காப்பீர்களாக. எமது துதியைப் பூமி, வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் என்னு மிவர்கள் காக்கட்டும்.—(எ - று.) வீசுக, கொடுக்க, தானஞ்செய்க என்பது பொருள்.

வருக்கம் 29

## 110. மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் .5

9 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஷி குத்ஸன். படமொழிச்சந்தம்: ஜகதி, 8, 9, த்ருஷ்டுப். தேவதை: ரிபுக்கள்.

வேறு

1. முன்பென்னு லாற்றப்பட் டணைதொழிலி
னிப்பொழுதும் முயங்கி னேனால் ;
அன்புசிறந் தொழுகுமென தருந்துதியு
முமதுபுக ழார்த்திற் றன்றே ;
இன்பினெலாத் தேவருக்கென் றிக்கடலு,
மிரிபுவர்கா, ளீண்டி நின்ற
தின்பமுறச் சுவாகாவென் றளிசோம
முண்டுகளி யெய்து வீரே.

(இ - ள்) முன்பு என்னாற் செய்யப்பட்ட அக்னிஷ்டோமாதி கருமங்களையே மீண்டும் செய்யத் தொடங்கினேன். அன்பு மிக்க எனது அரிய ஸ்தோத்திரமும் உங்களது புகழை நிறைவித்தது. ரிபுக்களே! எல்லாத் தேவருக்காகவும் (விசுவதேவருக்காக என்றபடி) சமுத்திர மென்னத்தக்க ஸோம ரஸம் கூடிற்று. ஸ்வாஹா வென்று கூட்டியளிக்கும் அச்சோமத்தைக் குடித்து ஸந்தோஷத்தை

யடைவீர்களாக—(எ - று.) கடல், ஸமுத்திரம் என்று வடமொழி மூலத்திலுள்ளது. ஸமுந்தநசீலோயம் ஸோமரஸ: என்பார் ஸாயணர். கசியக் கூடியதாகிய இந்த ஸோமச்சாறு என்பது பொருள். இரிபுவர்காள், ரிபுக்களே! ரிபுக்கள் மூவர்; ரிபு, விப்வான், வாஜன் என்பவர். இவர்கள் ஆங்கிரஸ கோத்திரத்து ஸுதன்வனது புத்திரர்கள் (குத்ஸனும் ஆங்கிரஸ கோத்திரத்தவனே.) மண். 1. சூக். 20. ரிக் 1 நோக்குக.

2. பக்குவஞா னம்பொருந்திப் பண்டிருந்தென்
   கிளையினரைப் பரிவி னோர்ந்து
மிக்குறுபல் போகமதை யிச்சித்துத்
   தபோவனத்தின் மிகத்தி ரிந்த
வக்கணத்துச் சுதன்வனது புத்திரர்கா,
   ணெடுந்தூர மாடி யோடிச்
சிக்கெனத்தா சுடன்சவிதுப் புவிக்கிருகந்
   தனைத்தேடிச் சேர்ந்திட் டீரே.

(இ - ள்) ஸுதன்வனுடைய புத்திரர்களாகிய ரிபுக்களே! பக்குவ ஞானத்தைப் பொருந்திப் பழையகாலத்திலிருந்து என்னுடைய ஆங்கிரஸ வம்சத்தில் வந்த பந்துக்களை யுணர்ந்து, அவர்களளிக்கும் போக்கியங்களை விரும்பித் தபோவனத்தில் உங்களிச்சைப்படி திரிந்து கொண்டிருந்த அக்காலத்தில் நெடுந்தூர நடந்துவந்து (அல்லது ஸாயணர் உரைப்படி நன்றாகச் சம்பாதிக்கப்பட்ட தபஸோடு கூடியவர்களாய்ப்) பூமியின்கண் அவியளிக்கும் ஸவிது அல்லது ஸோமம் பிழியும் யஜமானனது வீட்டைத் தேடி யடைந்தீர்கள்—(எ - று.) குத்ஸனும், ஸுதன்வனும் ஆங்கிரஸ கோத்திரத்தா ரென்பதை முன்பே சொன்னோர். ஸவிது ஸோமயாஜக னென்பது ஸாயணர் கூற்று. ஸாயணருரைப்படி "மிகுந்ததவ மணைந்திங்கோடி," என்று செய்யுளை மாற்றிப் படிக்க. மண். 1. சூக். 20 ரிக் 5 நோக்குக.

3. மறைவுபடாச் சவிதாவை யபேட்சித்து
   வேண்டுகோள் வகுத்த வன்று
குறைவுபடா வமரரது தன்மையினை
   யுங்களுக்குங் கொடுத்தா னன்றே;
நிறைவினுற வொன்றாக வசுரன்றான்
   குடிப்பதற்கு நிருமித் திட்ட
நறையுறுமப் பாத்திரத்தை நான்குறுப்போ
   டேய்ந்துறநீர் நாட்டி னீரே.

(இ - ள்) ஒருவராலும் மறைக்கப்படாத ஒளியோடு கூடிய ஸவிதாவை விரும்பிப் பிரார்த்தித்தபோது அவன் குறையாத தேவத்

தன்மையை யுங்களுக்குத் கொடுத்தான் (உங்களைத் தேவர்க ளாக்கினன் என்றபடி.) அசுரனாகிய துவட்டா ஒன்றாகச் செய்த ஸோமநிறைந்த பாத்திரத்தை நான்கு சமஸத்தோடு கூடியதாகச் செய்தீர்கள்—(எ - று.) அசுரன் துவட்டா. இவன் ஸோமத்தொட்டி யும் 3 சமஸங்களும் செய்தவன். சமஸம், மரவை. பெரிய பாத்தி ரத்திலிருந்து மொண்டு ஊற்றுவதற்கு உபயோகப்படுவது. மண். 1. சூக். 20. ரிக் 6 நோக்குக.

4. யாகமதிற் சிரத்தையொடு மிருத்துவிக
ராய்க்கரும மியற்றி யன்னார்
சோகமற நின்றபோ தமர்த்தியரா
யினர்மரிப்பைத் தோய்ந்து நின்றும்;
மாகமுறு கதிரொளியே யிரிபுவர்கள்
சுதன்வனது மைந்த ரோராண்
டேகுவதன் முன்னரே கருமமதிற்
கலந்துபுக மெய்தி னாரே.

(இ - ள்) யக்ஞகார்யங்களைச் சிரத்தையோடு ரித்விக்குக்களா யிருந்து நடத்தினபோது அவர்கள் மரணதர்மத்தோடு கூடியவர் களாயிருந்தும் அமர்த்தியர்களானார்கள். ஆகாயத்திலுள்ள சூரியனது வெளிச்சத்துக்குச் சமானமான ஒளியோடு கூடிய ரிபுக்களாகிய சுதன் வனது புத்திரர்கள் ஒரு வருஷமாவதற்கு முன்பே வஸந்தாதி காலக் கிரமங்களிற் செய்யும் யக்ஞகர்மங்களுக்கு இன்றியமையாதவர்களாகக் கருதப்பட்டுவிட்டார்கள்—(எ - று.) அமர்த்தியர், மரண மற்றவர்.

5. அருகிருந்தோர் துதிக்கவுறு மிரிபுவர்கள்
யாகமதை யாற்ற வாய்ந்த
வொருகலசந் தனை,யளவு கோலொன்றாற்
கேத்திரம்போ லுபாய மாக
வரையறுத்தா,ருவமைபெறும் பொருள்வேண்டிப்
பிரார்த்தனைகள் வயக்கித் தேவர்
சரைமரணம் வாயாதா ரமத்தியினி
லவிச்சீரைச் சாரு மாறே.

(இ - ள்) சிறந்த செல்வங்களை யெல்லாம் வேண்டிப்பிரார்த்தனை களைச்செய்து ஜராமரண துக்கமில்லாத தேவர்களுக் கிடையில் தாங் களும் ஒருவராய் அவியேற்கும் பெருமையடையும் வண்ணம், பக்கத்தி லுள்ள ரிஷிகள் ஸ்தோத்திரஞ் செய்யத்தக்க ரிபுக்கள் யாகத்துக் கென வமைந்த ஒரு ஸோமபாத்திரத்தை ஓர் அளவுகோலால் வயலையளப்பதுபோல அளந்துவிட்டார்கள்—(எ - று.) நான்காக அளந்

தார்கள் என்க. இப்பாத்திரம் சந்திரனைக் குறிக்கும் என்பார் மேனாட்டாசிரியர். க்ஷேத்திரம், க்ஷேத்திரம், வயல்.

வருக்கம் 30.

6. *அந்தரத்தி னுப்பணுறு நரர்களுக்குச்*
*சுருதியுணர் வாரும் யாங்கள்*
*சிந்துறுநெய்த் துடுவையினை மானவெம*
*தருமறையைச் சேர்க்கா நிற்போஞ்,*
*சந்தமுறு மிப்பெரிய தந்தையொடு*
*மருகணைந்து தயங்கு மன்ன*
*முந்துசுதை தனையுண்பான் விண்ணுலகெய்*
*திருபவரா மொய்ம்பி னர்க்கே.*

(இ - ள்) அந்தரிட்ச வுலகத்திலுள்ள வேதாக்களும், அழகு பொருந்திய இச்சூரியனாகிய தந்தையின் சமீபத்திலிருந்து விளங்கிச் சோமலட்சண வுணவை யுண்பதற்காக விண்ணுலகை (அல்லது தேவ வுலகை)ப் பெற்றவர்களுமான ரிபுக்களின் பொருட்டு மந்திர வேத் தாக்களாகிய யாங்கள் சுருக்கிலிருந்து ஒழுகும் நெய்யைச் சேர்ப் பதுபோல அரிய மந்திரத்தையும் கூறுவோம்—(எ - று.) தந்தை யென்றது ஆதித்தியனை அல்லது சூரியனை; ஏன்? அவன் எல்லா வுலகங்களையும் பரிபாலிப்பவ னுனதுபற்றி. ஆதித்யரச்மயோபி ரிபவ உச்யந்தே என்று நிருக்த வாக்கியமுள்ளதால். அதாவது சூரிய கிரணங்களையும் ரிபுக்களென்று சொல்லுகிறார்கள் என்பது பொருள். ரிபுக்கள் சூரியன் பக்கத்தில் அந்தரிட்ச வுலகத்தில் உலாவுவோர்களானார்கள். திவோரஜம் விண்ணுலகம். முன்பு பார்த் திவம் ரஜம் என வந்தது. மண். 1 சூக். 90 ரிக் 7 பார்க்க. ரஜச் சப்தோ லோகவாச்சி' ரஜமென்றால் உலகமென் றர்த்தம். மேல் மண். 6 சூக். 9. ரிக் 1 பார்க்க. விண்ணுக்கும் பூமிக்கும் இடையி லுள்ள ஆகாயத்தைத் திவோரஜம், பார்த்திவம் ரஜம் என இரண்டு கூறுபடுத்தியுள்ளார். (Heavenly Atmospere and Terrestrial Atmosphere.) வேத்தா, அறிந்தவன். இருபவர், ரிபுக்கள்.

7. *ரிபுக்களே யெங்களுக்கு நவவலியா*
*ரிந்திரனும்; ரிபுக்க ளாவார்,*
*தபுத்தறியா வன்னமொடு செல்வமதைச்*
*சார்ந்தெமக்குந் தருவார் பொன்னை;*
*விபுத்துவமார் தேவர்களே, யுந்துணையின்*
*நன்னாளின் விழையா தெம்மாட்*
*டுபத்திரவ காரகரா மகமாற்றார்*
*சேனையினை யொடுக்கு வோமே.*

## மண்டலம் 1. சூக்தம் 110.

(இ - ள்) ஸுதன்வன் புத்திரர்களாகிய ரிபு, விப்வான், வாஜன் என்னும் மூவருமே யெங்களுக்குப் புதியதரமான வலிமை சிறந்த இந்திரன் (பரமேச்வரன் அல்லது ரட்சகன் என்றபடி) ஆவர். ரிபுக்கள் உணவுப் பொருள்களுக்கும் தனத்துக்குங் காரண பூதர்களாவர். அவற்றையே யெங்களுக்குங் கொடுப்பார்கள். தேவர்களே! உமது துணைகொண்டு அநுகூலமான நாளில் எங்களுக்கு உபத்திரவத்தைத் தரும் அயாஜி (யக்ஞஞ் செய்யாதவர்) களைக் கொல்லுவோம்—(எ-று.) ரிபுக்கள் சூரிய கிரணங்களாம். இந்திரனு மென்பதால் (உரு பாதி) ரிபு வென்னும் பதம், உரு பிரகாசிப்பது என்னும் பகுதியடியாகப் பிறந்த வாச்சியார்த்தத்தை யெண்ணிக் கவி கூறினர் என்பார் நிருக்தக்காரர். தபுத்தறியா, விபுத்துவமார், என்பனவை எதுகை நோக்கிச் சேர்த்தன.

### வேறு

8. சருமத்தி னின்று நீங்க ளோர்முறை பசுவுயிர்ப்பித்
தருமையிற் கன்றின் பக்க லணைத்திட்டீர் தாயை மீட்டும்;
வாமுறு நாட்கள் சீரிற் சுதன்வன்பெற் றிடும்ரி புக்காள்;
தாமுறும் விசேட கன்மத் திளமைபெற் றோர்க்கு மீட்டீர்.

(இ - ள்) (பூர்வம் ஒரு ரிஷியின் கற்று மரிக்க அவர் ரிபுக்களைத் துதித்து ஸந்தோஷப்படுத்தினர். உடனே அதனைப் போலிருந்த வேறொரு பசுவின் தோலைக் கொண்டு அக்கற்றுவை யுருப்படுத்தி யுயிரளித்துக் கன்றின் பக்கத்திற் சேர்த்தார்கள் என்ற ஒரு கதை முன்னிரண்டடியிற் கூறப்படுகிறது.) யக்ஞத்தின் நேதாக்களே! ஸுதன்வனது புத்திரர்களே! நீங்க ளொருமுறை ஒரு பசுவைத் தோலினின்றும் உருப்படுத்திக் கன்றின் பக்கத்திற் றுயாகிய வதனைச் சேர்த்தீர்கள். சிறந்த உமது விசேஷ கன்மத்தில் மாதா பிதாக்களுக்கு மறுபடியும் யௌவனத்தை யுண்டுபண்ணினீர்கள்—(எ-று.) தாமுறு உம் விசேட கன்மத்து எனப் பிரிக்க. மேற் கதை ஸாயணருரையிற் கண்டது. ஆனால் மேனுட்டாசிரியர் காய்ந்த தோல் வறண்டு கரிந்த பூமியா யிருக்கலா மென்றும், பசு வென்றது மழை பெய்த பிறகு செழிப்படைந்த பூமியென்றும், தாயும் அதுவே யென்றும் கன்றென்றது சரற்கால ஸூர்யனென்றும், பெற்றோர்க்கென்றது பூமி வானங்களுக் கென்றும் அந்வயப்படுத்திக் கூறுவார்.

9. மேவிய போரிற் காக்க மீளியின், ரிபுசார் வேந்தே;
பாவுசித் திரப்பொ னீந்து பண்புற; எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவுமித் திரர்வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) ரிபுக்களோடு கூடிய விந்திரனே ! ஏற்பட்ட யுத்தத்தின் வலிமையை யளித்து எங்களைக் காப்பாயாக. சித்திர மயமான தனத்தை யளித்துச் சிறப்பை யெய்துக. எமது இந்த ஸ்தோத்திரத்தைப் பூமி வானம், ஸிந்து, அதிதி, மித்திரன், வருணன் இவர்கள் விரும்பிக் காக்கட்டும்—(எ - று.) மீளியின் என்னுது உண்டியின் என்பார் ஸாயணர், அவரே, போரில், உனது குதிரைகளின் உதவியைக் கொண்டு எங்களைக் காப்பாயாக வென்றும் உரை கூறுவர். இந்திர ஸ்துதியும் வந்ததற்குக் காரணம் மண். 1 சூக். 20 ரிக் 5-ல் நோக்குக.

வருக்கம் 31.

## 111. மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் 6.

5 இருக்குக்கள் கொண்டது

ரிஷி. ஷுஷி குத்ஸன். வடமொழிச் சந்தம் : ஜகதி, 5 த்ருஷ்டுப். தேவதை ; இந்திரன்.

**வேறு**

1. தொழின்மாண்பி னிருபுக்க ளெளிதினுருள்
 தேரதனைச் சுவைக்கச் செய்தார் ;
எழில்பெறப்பொன் பலகூட்டி யிந்திரனைச்
 சுமந்துவர விழைத்தார் மாவைக் ;
கிழமாரும் பெற்றோர்கள் யௌவனத்தை
 மீண்டுமுறக் கிளர்த்திட் டாராற் ;
குழகிளங்கன் றதனருகே தாய்ப்பசுவுங்
 கூடும்வகை குயிற்றி னாரே.

(இ - ள்) காரியங்களைச் சிறப்புப்பெறச் செய்யும் ரிபுக்கள் இலகுவாக உருண்டோடத்தக்க தேரைச் செய்தார்கள். பலவகைய செல்வத்தோடும் இந்திரனைத் தூக்கிக்கொண்டு வரும் அரிக (குதிரைக) ளிரண்டையும் சிருஷ்டித்தார்கள். கிழத்தன்மை பொருந்திய மாதா பிதாக்களை மீண்டும் யௌவன முள்ளவர்களாகச் செய்தார்கள். இளங்கன்றினருகிற் றாய்ப்பசு கூடும்படி செய்தார்கள்—(எ - று.) பெற்றோர், கன்று தாய்ப்பசு இவற்றின் பொருளை மண். 1. சூக். 110 ரிக் 8ல் பார்க்க.

2. எம்மகத்தின் பொருட்டுமிகச் சிறந்தொளிரும்
 வீரியத்தை யென்றுந் தோற்ற ;
எம்மரிய கன்மமதில் வலியுறையச்
 சுதரொடுசோ றெமக்கி யைக்க ;

மண்டலம் 1. சூக்தம் 111.

பொம்மலுறு வீரமக ராம்பிரசை
யோடுசுகம் பொருந்தி வாழ
விம்மிதமா ரைந்திரிய நற்றனத்தை
யெமக்களிக்க விழைந்திடுமே.

(இ - ள்) எமது யக்ஞத்தின்பொருட்டு மிகப் பிரகாசிக்கும் வீரியத்தை (ஜீவசக்தியை) யெங்களுக்குத் தோற்றுவீர்களாக. எமது கார்யத்துக்காகவும், பலத்துக்காகவும் சற்புத்திரர்களோடு உணவுப் பொருள்களைச் சேர்ப்பீர்களாக. சோபனம் பொருந்திய வீரர்களாகிய பிரஜைகளோடு யாங்கள் சுகத்தைப் பொருந்தி வாழும் வண்ணம் எங்களுக்கு இந்திரனது செல்வத்தைத் தருவீர்களாக— (எ - று.) வய: வீரிய மென்னுது, ஹவிர் லட்சணமன்ன மென்பார் சாயணர். அற்றேல் 'சிறந்தொளிரு மவியுணவை யென்றுந் தோற்ற;' என மாற்றிப் படிக்க.

3. நராகு மிருபவர்காள், வாழ்வெமக்குத்
தந்திடுக; நாடுந் தேர்க்குந்
தரமாக வாழ்வளிக்க; குதிரைகட்கு
மங்களமே தருக வாழ்வை;
யுரமாரும் போரதனி லுறவினரை
யல்லாரை யுரத்தான் வென்று
திரமாருஞ் சயசீல மெந்நாளு
மேலோங்கச் சிறப்பிப்பீரே.

(இ - ள்) யக்ஞ நேதாக்களாகிய ரிபுக்களே! எங்களுக்கு வாழ்வாகிய செல்வத்தைத் தருவீர்களாக. எங்களுடைய தேருக்கும் வாழ்வை அல்லது வேகமாக ஓடுஞ் சிறப்பை யளிப்பீர்களாக. எங்கள் குதிரைகளுக்கும் வாழ்வைத் தருவீர்களாக. பலம் பொருந்திய போரிற் பந்துக்களையும், அயலாரையும் யுத்தத்திற் சயித்து எல்லா நாட்களிலும் ஸ்திரமான ஜயசீலமானது எங்களுக்கு மேன்மேலும் ஓங்கி வளரும் வண்ணம் எங்களைப் பெருமைப் படுத்துவீர்களாக— (எ-று.) இருபுக்கள், இருபவர்கள், இரண்டும் ரிபுக்களையே குறிக்கும்.

4. பெருந்தலத்தி லுறும் வேந்தை யுதவிபுரி
கெனவிளிப்பேன்; பிறங்கு சோம
மருந்தவென ரிபுக்களையும் வாஜரையு
மருதரையு மழையா நிற்பேன்;

பொருந்திருவ ரசுவினியர் வருணனொடு
மித்திரர்க்குப் புகல்வேன் ; நூனம்,
திருந்துபொருள், ஞானமொடு வெற்றியினை
யவரெமக்குச் சேர்க்க வின்றே.

(இ - ள்) பிரகாசம் பொருந்திய பெரிய ஸ்தானத்திலுள்ள இந்திரனை யுதவி புரிவதற்காகக் கூவுவேன். ஸோமத்தைக் குடிக்க வாருங்களென்று ரிபு, விப்வான், வாஜன் இம்மூவரையும் மருத்துக்களையும் அழைப்பேன். இரட்டையர்களாகிய அசுவினிகளையும், மித்திரா வருணர்களையும் அவசியமாக ஸோமங் குடிக்க வாருங்களென்று கூவுவேன். அவர்கள் எங்களுக்கு நல்ல செல்வத்தையும், ஞானத்தையும் ஜயத்தையும் இன்றைக்குத் தரட்டும்—(எ - று.) ரிபுக்ஷணம் என்பதற்கு ரிபுக்களுக்குத் தலைவனாகிய இந்திரனை யென்று பொருள் கூறுவார் மேனாட்டாசிரியர். ஆனால் உருபாஸமாநே ஸ்தாநே க்ஷியதி நிவஸதி இதி ரிபுக்ஷ: என்பார் சாயணர். அதாவது பிரகாசமான பெரிய ஸ்தானத்திலுள்ளவனென்பது. நூனம், அவசியம். ரிபுக்களையும் வாஜனையும் கூற இடையிலுள்ள விப்வானையும் உடனெண்ணியபடி.

**வேறு**

5. காவல்சார் தனத்தைப் போர்க்கு ரிபு உடனளிக்க ; வாஜ
னுவலிற் பகைவ றுப்போ னளித்திட ; எமதிப்போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவுமித் திரர்வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) ரிபு யுத்தத்தின் பொருட்டு எங்களுக்கு மிகுந்த பொன்னைத் தரட்டும். பகைவரை ஜயிப்பவனாகிய வாஜன் எங்களைக் காக்கட்டும். எங்களுடைய இத்துதியைப் பூமி, வானம், ஸிந்து, மித்திரன், வருணனென்னு மிவர்கள் காக்கட்டும்—(எ - று.)

**வருக்கம் 32.**

## 112. மண்டலம் 1. அநுவாகம் 16 சூக்தம் 7.

**9 இருக்குக்கள் கொண்டது**

**வேறு**

1. தலைநினைவை யவர்க்கூட்டப் புவிவானைப்
போற்றிடுவேன் ; சார்ந்து யாகத்
தலையவர்கள் வருபாக்குக் காந்தியொளி
ரக்கினிக்குத் தலையைத் தாழ்ப்பேன் ;

மண்டலம் 1. சூக்தம் 112.

நிலைஇயபெரும் பேரிலும தரும்பாகம்
பெறச்சங்க நேடிப் பூரித்
துலைவிலஉந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) முதன்முதல் அசுவினிகளைப்பற்றிய நினைப்பை யெங்களுக்குத் தருமாறு பூமிவானங்களைப் போற்றுவேன். அவர்கள் யாகத்தினிடத்து வர ஆஹவநீயரூபமாக இருந்து விளங்கு மக்கினியை வணங்குவேன். அசுவினிகளே ! நிலைத்த பெரிய போரில் உமதரிய பாகத்தைப் பெறச் சங்கவாத்தியத்தை வாசித்துக்கொண்டு கேடில்லாத உமது உதவியுடன் எம்மை நோக்கி யிவ்விடத்து வருவீர்களாக—(எ - று.)

2. மங்கலநற் றுதியேந்திப் பிறர்விழையுந்
தன்மையினர், மதித்துத் தேர்க்கட்
டுங்கமுறு முங்கொடையை யெண்ணியறி
வாளர்மொழி துணைப்பத் தோய்ந்தார் ;
அங்கமுறு தேவகா ரியமாற்று
மறிவதனை யழகிற் கூட்டி
யிங்குறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமை நோக்கி யீங்கெய் தீரே.

(இ - ள்) மங்கலமான ஸ்தோத்திரங்களைத் தாங்கி, பிறரால் விரும்பத்தக்க பெருமை வாய்ந்த ஸ்தோதாக்கள், உமது நற்கொடைகளைக் கருதி, ஞாதாக்களது வார்த்தைகளைப்போல, உமது தேரில் வந்தமர்ந்தார்கள். அசுவினிகளே ! தேவகாரியங்களைச் செய்யும் அறிவை யெங்களுக்குத் தந்து உமது துணையோடும், எம்மிடத்து வருவீர்களாக—(எ - று.) நியாயத்தோடு கூடிய வார்த்தைகளை ஸ்தோதாக்கள் தமது அறிவு விசாலிக்கப் பிறர் வயிற் கேட்டுப் பெறுவது போல உமது தேரைப் பெற்று அதில் உம்மை ஸ்துதித்துக்கொண்டு அமர்ந்தார்கள் என்க. ஆனல் மேனாட்டாசிரியர் "எங்களது அவிப் பலியானது ஸ்தோத்திரங்களாகிய தேரை யேறி நின்றது" என்று முதற்பகுதிக்கு உரை கூறுவார்.

3. திவ்வியநற் சோமமளிக் கும்வலியி
னீவிரெலாத் திசையு முற்ற
செவ்விய நன் மாந்தர்களுக் காணையளி
யீசர்களாச் செறிந்து நின்றீர் ;

எவ்வமற மலட்டாவைப் பால்தரவே,
நேதாக்கா, ளிழைக்கும் வண்ண
மொவ்வுறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமை நோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) திவ்வியமான ஸோமத்தைத் தரும் வலிமையோடு கூடிய நீங்கள் எல்லாப் பக்கத்திலுமுள்ள ஸத்புருஷர்களுக்கு ஆக்ஞைகளைத் தரும் ஈசர்களானீர்கள். அசுவினிகளாகிய நேதாக்களே, (சயுவென்னும் ரிஷியினுடைய) மலட்டாவைப் பால்தரும் வண்ணம் புரிந்த உமது துணையுடன், எம்மிடத்து இங்கு வருவீர்களாக— (எ - று.) சயு ஓர் ரிஷி. அவனது மலட்டுப் பசுவை யசுவினிகள் பால்தருங் கறவையாக்கினர்கள் என்றது இதிகாசம். மண். 1 சூக். 116 ரிக் 22, மண். 1 சூக். 117 ரிக் 20 இவற்றில் இவ்விருடியின் பெயர் வருகிறது.

4. சுழன்றடிக்குங் காலினது தனயனன்றித்
தாயிருவர் தோய்ந்து நின்ற
கொழுந்தனலின் வலிகொண்டு, விரைகதியோர்
தமின் விரைவிற் குலவ விட்டு
வழங்குறுமூ விதயக்ஞ வறிவினொடு
ஞானவான் மருவச் செய்த
வொழுங்குலவுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) அசுவினிகளே, சுழற்சியாக வீசுங் காற்றின் புத்திரனும், இரண்டு மாதாக்களாகிய அரணிகளையுடையவனுமான கொழுந்து விட்டெரியும் அக்கினியின் பலத்தைக்கொண்டு வேகமாகச் செல்வோரினும் வேகமாக நிலவும்படிசெய்த அவிர்யக்ஞம், பாக யக்ஞம் ஸோம யக்ஞமென்னும் மூன்று வித யக்ஞமந்திர வறிவோடுங் கூடிய ஞானவானாகிய கட்சீவான் அவற்றை நடத்துவதற்கு உதவி செய்த உம்முடைய உதவிகளுடன், நீங்கள் இங்கு வருவீர்களாக— (எ - று.) அக்கினி காற்றின் புத்திரனும் அரணித்தாய ரிருவர் கொண்டவனுமாம். ஞானவான் கட்சீவானைக் குறிக்குமென்பார் ஸாயணர்.

5. நேசத்தோ டிரேபனைநல் வந்தனனை
வானொளியை நேரே பார்க்கப்
பாசத்தாற் கட்டுண்டு கிணற்றாழ்த்தப்
பட்டவரைப் பரிந்து தூக்கி

நீசத்தா ரிருணிறுத்த கண்ணுவனை
வெளிக்கொணர்ந்த நியமம் வாய்ந்த
வோசத்துந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) கயிற்றினாற் கட்டிக் கிணற்றில் வீழ்த்தப்பட்டவர்களாகிய ரேபனையும் வந்தநனையும் வாளொளியாகிய சூரியனைப் பார்க்கும் வண்ணம் மேலே தூக்கிவிட்டு, இருட்டில் அடைக்கப்பட்ட கண்ணுவரிஷிக்கும் அவ்வித வுதவியளித்து அவனை வெளிக் கொண்டு வந்த வலிமை தங்கிய உமது துணைகளோடும், அசுவினிகளே, எம்மை நோக்கி வருவீர்களாக—(எ - று.) ரேபன் வந்தநன் இவர்கள் அசுரர்களால் கிணற்றில் தள்ளி மூடப்பட்டவர்கள். இவர்களை அசுவினிகள் காப்பாற்றினார்களென்பது இதிஹாஸம். கண்ணுவனும் அவ்வித அவஸ்தையையே பட்டவன். (Wilson) வில்ஸன் என்பவர் இக்கதைகளையும் மேல்வரும் கதைகளையும் நோக்குமிடத்துப் பண்டைக் காலத்து ஆரியமத போதகர்கள் தமது நாகரிகத்தைப் பரவச்செய்த போது இந்நாட்டுப் பூர்வ குடிகளிடத்து அவர்கள் பட்ட அவஸ்தையை இவை குறிக்குமென்பார். ஓசம், ஓஜம், வலிமை.

6. ஆழமுறு கூபமதி லருந்துன்பா
ழந்தகனை, ஆழ்முந் நீரிற்
பாழவதிப் படும்புஜியன் றன்னையட
லுதவிகொடு பண்பிற் காத்துச்
சூழுறுதுன் பேகவெனக் கர்க்கந்து
வய்யனையுஞ் சுகமாத் தேற்று
மூழுளஉந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) ஆழமாகிய கிணற்றில் அருங்கேடுற்றுநின்ற அந்தகனென்னும் ராஜரிஷியையும், ஆழமாகிய ஸமுத்திரத்தில் மூழ்கி யவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்த (துக்கிரன் மகனாகிய) புஜ்யன் என்னும் ராஜரிஷியையுங் கைதூக்கிவிட்டு, கர்க்கந்து வய்யன் இவர்களுடைய துன்பத்தையும் நீக்கின உமது துணைகளோடு, அசுவினிகளே, இங்கு எம்மைநோக்கி வருவீர்களாக—(எ - று.) அந்தகன் ஒரு ராஜரிஷி. புஜ்யன், துக்கிரன்மகன், இவனும் ஒரு ராஜரிஷி. கர்க்கந்துவைப் பற்றி வேறொன்றும் நமக்குத் தெரியாது. வய்யன் தூர்வீதியின் தகப்பன். இவ்விருவருக்கும் ஆழமான ஆற்றைக் கடக்கும் பாதையை யேற்படுத்தினான் இந்திரன் என்பது மண். 1- சூக். 61. ரிக் 11-ல் சொல்லப்பட்டது.

7. செல்வமொடு பாக்கியமா ரில்லமதைச்
சுசந்திபெறச் சேர்த்து, வெப்பம்
பல்கியஞர் விளைத்திடுமப் பொறியினை அத்
திரிக் கின்பப் பண்பி னுற்றிச்
சொல்பெறவே புருகுற்சன் பிரிசிநிகு
விருவரையுஞ் சுவையிற் காத்தே
யொல்லுறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய்தீரே.

(இ - ள்) ஸு(ச்) சந்திக்குச் செல்வத்தையும் பாக்கியம் பொருந்திய வீட்டையுந் தந்து, அத்திரிக்கு வெப்ப மிகுந்த துன்பத்தை விளைக்கும் பொறியானது இன்பத்தைத் தரும்படியாகச் செய்து, புருகுத்ஸன், ப்ரிச்நிகு இருவரையும் காப்பாற்றின உமது உதவிகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி இங்கு வருவீர்களாக— (வி - று.) புருகுத்ஸன், மண். 1. சூக். 63 ரிக். 7 பார்க்க. (Suchanti) ஸு(ச்) சந்தி, பிரச்நிகு இவர்களைப்பற்றி வேறொன்றும் தெரியாது. அத்திரி மண். 1, சூக், 51, ரிக் 3 பார்க்க. இவன் எரிக்குழியில் தள்ளப்பட்டவனென்பார் மேனாட்டாசிரியர். நெருப்புப்பொறியில் தள்ளப்பட்டானென்றும் அவனுக்காக நூறு துவாரங்களை யேற்படுத்தினான் இந்திரன் என்றும் மண். 1, சூக் 51, ரிக். 3-ல் சொல்லப்பெற்றது.

8. இச்சையளிப் பவர்காளுஞ் ஞானமதாற்
பராவிருஜன் முடமி றுத்தீர் ;
நச்சுமிரிச் சிராசுவன்றன் குருட்டினைநீக்
கினிர் ; விகுண நண்ணுஞ் சானு
வெச்சமறப் பொருந்தினியா லூர்க்குருவி
கோநாய்வா யிருந்து மீட்டீர் ;
உச்சமுறுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) இஷ்டப்பட்ட வஸ்துக்களைத் தருபவர்களே! உம்முடைய ஞானத்தினால் பராவிருஜனது முடத்தன்மையைப் போக்கினீர்கள். ரிஜிராசுவனது குருட்டினை நீக்கினீர்கள் ; முழங்கால் கெட்டுப்போயிருந்த ரிஷிக்குக் குறைவு வாராமல் அம்முழங்காலைச் சரிப்படுத்தினீர்கள் ; ஓநாயின் வாய்க்குள் அகப்பட்டுக் கொண்ட (சடகம்) ஊர்க்குருவியை அதனின்று மீட்டீர்கள். இத்தகைய உம்முடைய துணைகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி இங்கு வருவீர்க

ளாக—(எ - று.) வ்ருகம் கோநாய் சூரியனென்றும், வர்த்திகாம் என்பது ஊர்க்குருவி யன்று உஷஸ் என்றும் யாஸ்கர் உரை கூறுவர். (Benfy) பென்வே யென்பவர் பாரவ்ருஜம் என்பது அஸ்தமய ஸூர்யனைக் குறிக்குமென்பார்; அதனையே இனி வெளிச்சந் தரப்போவதில்லையாதலால் குருடென்றும், இனி ஓட்டம் காணப்படுவதில்லையாதலால் முடமென்றும் கவி கூறினரென்பார்; ஆனால் பராவ்ருஜனும், ரிஜ்ராச்வனும் ரிஷிகளின் பெயரென்பார் ஸாயணர். ச்ரோணன் விகுணமுழங்காலோடு கூடிய ஒரு ரிஷியென்று தெரிகிறது. ரிஜ்ராச்வன் மண். 1. சூக். 100, ரிக் 17 நோக்குக. அசுவினிகளின் வாகனமாகிய கழுதையொன்று காட்டு நாயுருவத்தோடு வர அதற்காக நூறு ஆடுகள் பலி கொடுத்தவன் அவன். அதனால் அவனுடைய தந்தை குருடாக்கின கண்ணை அசுவினிகள் தரப் பெற்றான். மண் 1, சூக். 116, ரிக் 16 காண்க.

9. மதுரமுறு நீர்ப்பெருக்கா னதிகளினை
வற்றாதே வழங்கத் தோய்த்திங்
கெதிர்வுபெருச் சரையினர்காள் வசிட்டனைக்கூர்
மகிழ்ச்சியினி லிருத்திக், குற்சன்
அதியுதவி, சுருதரிய னரியனிவர்
மூவர்களு மணைய வாற்றி
யுதயமுறுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய்தீரே.

(இ - ள்) கிழத்தன்மை யடையாதவர்களே! அசுவினிகளே! ஆறுகள் மாதுரியமான வெள்ளத்தோடு எப்போதும் வற்றாமலோடுவித்து, வஸிஷ்டனுக்கு மகிழ்ச்சியை யளித்து, குத்ஸன், ச்ருதர்யன், நர்யன் என்னும் மூன்று ரிஷிகளுக்கும் மிக்க உதவியைச் செய்து விளங்கும் உமது துணையோடு எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக—(எ - று.) ஸிந்தும் என்பது மூலத்திலுள்ள பதம். அதற்கு "ஸ்யந்தநசீலாம் நதீம் என்று சாயணர் உரை கூறுவார். ஆனால் மேனாட்டாசிரியர், "அசுவினிகள் வெளிச்சத்தை முதன்முதற் கொணர்பவர்களாதலால் தங்கள் வருகையால் அந்தரிட்சமாகிய ஸமுத்திரத்திலுள்ள நீரோட்டங்களை யுயிர்பெறச் செய்வார்கள்" என்பார். வஸிஷ்டனுக்கு ஊட்டிய மகிழ்ச்சி எத்தகையதோ வென்பது அறியக் கிடந்ததில்லை. குத்ஸன் மண் 1, சூக். 51, ரிக் 6 பார்க்க. ச்ருதர்யனைப் பற்றி வேறொன்றும் தெரியவில்லை. நர்யன் மண். 1. சூக். 54, ரிக் 6 பார்க்க. மற்றவைகளோடு பொருந்த உதயமுறுஉம் எனப் பிரித்துப் படிக்க.

10. சகத்திரப்பொன் றரும்போரிற் றனம்விழைந்து
நடைபோன தையல், கேலன்
சுகத்தமரும் விசுபலைக்கு நடையுதவி
யசுவனது சுதன் வசன்றான்
வகுத்ததுதி யினிற்களித்துப் பெரிதுமவன்
றனைக்காத்துப் பிறங்கி நின்ற
வுகத்துலுறுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) ஆயிரக்கணக்கான செல்வத்தைத் தரும் யுத்தத்தில் பணவிச்சையாற் றிரிந்து கணைக்காலையிழந்த கேலனது பந்துவாகிய விச்பலைக்கு நடக்குஞ் சக்தியையளித்து, அச்வனது புத்திரனாகிய வசனுடைய ஸ்துதிக்கண் மகிழ்ந்து அவனைப் பாதுகாத்த உமது துணையுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக—(எ - று.) பூர்வத்தில் கேலனென்று ஒரு அரசன் இருந்தான். அவனுடைய பந்து விச்பலை என்னும் மாது. கேலன் செய்த யுத்தத்தில் சிதறுண்டு கிடக்கும் செல்வத்தைச் சேர்க்க அவள் போனபோது சத்துருக்கள் அவளது கணைக்காலைத் தறித்துவிட்டார்கள். உடனே கேலன் வேண்ட அவனது குலகுருவாகிய அகஸ்தியர் அசுவினிகளைப் பிரார்த்தித்தார். அவர்கள் அவளுக்காக இரும்புக்காலொன்றைச் செய்துகொடுத்து அவளை நடக்கும்படி செய்தார்கள் என்பது ஓர் இதிஹாஸம். மண். 1 சூக் 116, ரிக் 15 நோக்குக. மேனுட்டாசிரியர் அதர்வ்யம் என்பதற்குப் பொருள் தெரியவில்லையென்பார். ஆனால் ஸாயணர் தெளிவாகத் 'த (th) ர்வதிர் கதிகர்மா' என்று எழுதி யிருக்கிறார். அச்வன் புத்திரன் வசன் ஓர் ரிஷி; மண் 8. சூக் 46 ஐக்கண்டவன்.

வருக்கம் 34.

11. எத்துணைகொண் டௌசிஜனுந் தீர்க்கசிர
வன்வணிக மியற்று வானுக்
கித்தரையின் மேகமது சுவைத்தண்ணீர்
வருடித்த தேத்து வாய்ந்த
சித்தமுளன் கட்சீவான் சிறப்புறவெவ்
வுதவியினைச் சேர்த்தீ, ரந்த
வுத்தமவுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) எந்த வுதவியைக்கொண்டு (ஜீவனார்த்தம்) வியாபாரம் செய்துகொண்டிருந்த உசிஜையின் புத்திரனாகிய தீர்க்கச்ரவன் வேண்

டிக்கொண்ட காரணத்தால் மேகமானது மாதுரியமான மழையைப் பெய்ததோ, எந்த வுதவியை ஸ்தோதாவாகிய கட்சீவானனுக்குச் சேர்த்தீர்களோ, அந்த உத்தமமான வுதவியோடு, அசுவினிகளே, எம்மைநோக்கி இங்கு வருவீர்களாக—(எ - று.) தீர்க்கதமஸன் பத்தினி உசிக் என்பவளாம். அவளது புத்திரன் தீர்க்கச்ரவன், மழையில்லாததால் பிழைப்புக்காக வியாபாரஞ் செய்துவந்தான். அவன் வேண்ட மழைபெய்ததென்பது முதலிரண்டடியிற் சொல்லப்பட்டது. கட்சீவான் உசிஜ புத்ரன். இவ்விருவரது வரலாறுகளையும் மண் 1. சூக். 18 ரிக் 1லும், மண். 1 சூக். 51 ரிக் 14 லும் பார்த்தறிக. உசிக், உசிஜ் என்பன ஒரு மாதின் பெயரையே குறித்து நின்றன. ஆனால் ஔசிஜன் என்பது (Patronymic) பரவணப் பெயரென்பார் மேனாட்டாசிரியர். உண்மையில் (Matronymic) தாய்வழிப் பெயரெனத் தெரியவரும்.

12. கரையுடைக்கும் வெள்ளமதோ டொழுகுறநன்
னதியினையே கடிதிற் பூரித்
திருமைபெறப் பரியில்லையாத் தேரதனை
வெற்றிபெற வெடுத்துக் காத்துத்
திருமுறுகற் றுக்களினைத் திரிசோகன்
கொண்டேகத் திருந்த வாற்றி
யுரைபெறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) மழையில்லாமல் வற்றிக்கிடந்த (ரஸாவென்னும்) நதியினைக் கரையுடைக்கும் வெள்ளத்தோ டோடுவித்து, குதிரையற்ற தேரை வெற்றிபெறும்படி செய்து, அசுரர்களிடத்திலிருந்து விடுபட்டுத் திரும்பிப்போகும் பசுக்களைக் கண்ணுவபுத்திரனை த்ரிசோகன் என்னும் ரிஷி கொண்டுபோகும்படி செய்து பேர்பெற்ற உமது துணைகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக—(எ - று.) ரஸா என்னும் வடமொழிப் பதத்துக்கு "ரஸா நதீ பவதி ரஸதேச் சப்தகர்மண." என்று யாஸ்கர் கூறுவர். அதையொட்டி ரஸா நதிகளையென ஸாயணர் உரைகூறுவார். ஆனால் ரஸா என்பது ஒரு நதியின் சிறப்புப் பெயரென்றும், ரஞ்ஹாவென்று அதனை ஜாரதுஷ்டிர மதத்தைச் சேர்ந்த பார்ஸீக்களும் கூறுவார்களென்றும், ஆரியர் பஞ்சாப்புக்கு வந்தபின்பு அதனை மறந்துவிட்டதால் அது நதியென்னும் பொதுப்பெயரை யடைந்ததென்றும் மோட்சமூலர் கூறுவர். இச்செய்யுளிற் கூறப்பட்ட இதர இதிஹாஸங்களொன்றும் விஸ்தாரமாகத் தெரியவில்லை. கண்ணுவனது புத்திரன் த்ரிசோகனென்பார் சாயணர்.

13. சேயுறையும் போதென்றைச் சூழ்ந்துலவிக்
காப்பாற்றித் தேச பார
மீயுறைந்த மாந்தாதா தன்னரசு
செலுத்துதற்கு வேண்டுஞ் சத்தி
யாயிடையீந் துயர்பரத்து வாசனெனும்
விப்பிரனை யடைவிற் காத்தே
யேயுமது துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யீங்கெய்தீரே.

(இ - ள்) தூரத்திலிருக்கும்போது சூரியனைக் (கிரஹணம் பீடிக்காதபடி) அதனைச் சூழ்ந்து உலாவிக் காப்பாற்றி, தேசபாரம் தாங்கிய மாந்தாதா வென்னும் ராஜரிஷி செங்கோலைச் செவ்வனே செலுத்துதற்கு வேண்டிய பலத்தை யவனுக்கு அளித்து, (பிரஹஸ்பதி புத்திரனாகிய) பரத்வாஜன் என்னும் ரிஷியைக் காப்பாற்றி நிலைத்த உம் உதவிகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக--(எ - று.) மாந்தாதா யுவனாச்வனது புத்திரன். ஒரு ராஜரிஷி, மண். 10 சூக். 134 ஐச் கண்டவன். பரத்துவாஜன் ஆறாவது மண்டலத்துப் பெரும்பான்மையான சூக்தங்களைக் கண்டவன்.

14. சம்பரனை வதைத்த அன் றதிதிகளைச்
சற்கரிக்குந் தன்மை வாய்ந்து
பம்புநீர் தனிலுலவுந் திவோதாசன்
றனைப்பண்பிற் பரிந்து காத்து
வம்பர்புரம் பேதிக்குங் காலமதிற்
றிரசதசி யுவினை வாழ்வித்
தும்பருறுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) சம்பராசுரனைக் கொன்றபோது அதிதிஸத்காரத்திற் சிறந்து அசுரர் பீடைக்குப் பயந்து தண்ணீரிற் சுற்றிக் கொண்டிருந்த திவோதாஸ னென்னும் ராஜரிஷியைக் காப்பாற்றியும், சத்துருக்களின் கோட்டையை யழித்தபோது த்ரஸதஸ்யு வென்னும் ரிஷியை வாழ்வித்தும், மேன்மை பெற்ற உமது துணைகளோடு, அசுவினிகளே, வருவீர்களாக—(எ - று.) மேனாட்டாசிரியர் வடமொழி மூலத்திலுள்ள அதிதிக்வம் கசோஜுவம் என்பவற்றைச் சிறப்புப் பெயர்களாகக் கொள்ளுவார். ஆனால் ஸாயணர் அவற்றைத் திவோதாஸனுக்கு அடைகளாகவே உரை கூறியுள்ளார். திரசதசியு, த்ரஸதஸ்யு, வெற்றிக்கும், வண்மைக்கும் பேர் போனவன். "தூர்கஹன் புத்திரனாகிய புருகுத்ஸன் சிறைப்பட்டான். அவன் மனைவி ராஜ

யத்தை யாளுவதற் கொருவரு மில்லாததை யுணர்ந்து, எதிர்ச்சை யாகக் கூடி வந்து கொண்டிருந்த ஸப்த ரிஷிகளைப் பூஜிக்க அவர்கள் இந்திரா வருணர்களின் அநுக்கிரகத்தால் த்ரஸதஸ்யு வென்னும் புத் திரனை யவளுக் களித்தார்கள்." என்பது மண் 4, சூக், 42, ரிக் 8-ற் கண்ட இதிஹாஸம். புருகுத்ஸன் மேல் 7-வது செய்யுளிற் கூறப்பட்டவன்.

15\. சூழ்ந்துள்ளோர் துதித்தேத்து மட்பசையார்
வோன் வமிரன் றேயு மில்லாள்
வாழ்ந்துறுமக் கலியனிவ ரிருவர்களைக்
கவுரவங்கண் மலியக் காத்துத்,
தாழ்ந்துறுவான் குதிரையிலாப் பிருதியினை
யும்முள்ளச் சிறப்பி னேம்பி
யூழ்ந்தலுறுத் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) சுற்றிலுமுள்ளவர்கள் புகழ்ந்து துதிக்கும் பெருமை வாய்ந்து மண்ணிலுள்ள ஈரப்பசையைக் குடிப்பவனாகிய (விகநஸன் புத்திரன்) வம்ரனையும், மனைவியின் சுகத்தைப் பெற்ற கலியையும் காப்பாற்றி, குதிரை யில்லாமல் தாழ்ந்து நின்ற ப்ருதி யென்பவனை உயர்வு பெறச் செய்து, கேடில்லாத உமது உதவிகளுடன், அசுவினி களே, எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக—(எ - று.) வமிரன் வம்ரன், விகநஸனது புத்திரனென்பார் ஸாயணர். மேனாட்டாசிரியர் உபஸ்துதனையும் எனச் சிறப்புப் பெயராகக் கொள்வர். கலியன் கலி யென்று மூலத்திலுள்ளது. இவன் பெயர் மண். 9 சூக். 39 ரிக் 8-ல் சொல்லப்படுகிறது. ப்ருதி குதிரையை யிழந்த ஒரு ராஜரிஷி ஊழ்ந்தல் மெலித்தல் விகாரம், வீழ்தல் ஈண்டு கெடு ஆயிற்று.

வருக்கம் 35.

16\. நேதாக்காள் சயுவோடு மத்திரிக்கு
விமோசனத்தை நேடி யாற்றித்
தோதாக மனுவென்னு மரசனுக்கு
முன்னாளிற் றுணை யளித்து
வாதாரும் பகைவர்வயி னம்புகளைச்
சியூமரச்மி மதிக்க வோட்டி
யோதாருந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) நேதாக்களே! அசுவினிகளே! சயுவுக்கு நேர்ந்த துக் கத்தை யொழித்தும், அத்திரி யகப்பட்டுக்கொண்ட நெருப்புப்

பொறியைக் குளிரச்செய்தும், மனுவென்னும் ராஜரிஷிக்கு யவ முதலிய தானியங்களை யதேஷ்டமாக விளைவித்து அவன் தரித்திரத்தை யோட்டியும், ஸ்யூமரச்மியென்னும் ரிஷிக்காக அம்பைப் பகைவர்மேலெய்தும், துதிநிறைந்த உமது துணைகளுடன் எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக—(எ - று.) சயுவினிடத்திலிருந்த ஈனெழிந்த பசுவைக் கன்றுபோடச்செய்து அவனுடைய யாக காரியங்களுக்குப் பால் முதலியவை யளித்தார்கள். இச் சூக்தம் 3-வது ரிக் நோக்குக. அத்திரி கதையை மண். 1 சூக் 51. ரிக். 3-ற் பார்க்க. மனுவுக்கு யவமாதி தானியங்களை விதைக்கக் கற்பித்து அவனது நாட்டில் இன்மையை நீக்கினரென்று ஸாயணர் உரை கூறுவர். சியூமரச்மி. ஒரு ரிஷி, மண் 10. சூக். 77, 78. ஐக் கண்டவன். தோது, ஸௌகரியம். ஓது ஆரும், துதி நிறைந்த.

17. யாகதலத் தக்கினியுங் காட்டமதிற்
பற்றியபி னெரிதல் போலத்
தேகபலத் தோடுறையும் படர்வாவை
யுத்தமதிற் றிகழ்த்தி யாக்கம்
வாகினமர் பெரும்போரிற் சரியாதன்
றனம்பெறவே மதித்துத் தூக்கி
யோகையுறுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) யக்ஞக்கிருகத்தில் இந்தனத்தில் பற்றிக்கொண்ட பின்னர் அக்கினி பலமாக வெரிவதுபோலப் பலம் பொருந்திய சரீரத்தோடு கூடிய படர்வாவென்னும் ராஜரிஷியை யுத்தத்திற் சிறப்படையச் செய்து, செல்வ நிறைந்த பெரிய போரில் சர்யாதனைக் காப்பாற்றிக் களிக்கும் உமது உதவிகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி இங்கு வருவீர்களாக—(எ - று.) 'படர்வாவென்பது ஒரு ராஜரிஷியின் பேரன்று. ஜடாஸ்ய என்பதற்குச் சரீரத்தை யுடையவென்று பொருள்கொள்வது சரியன்று. என்று சில மேனாட்டுரையாளர்கள் வாதிப்பர். அவருள் (Ludwig) லுட்விக்கென்பார், படருவென்பது ஒரு கோட்டையெனக் கொண்டு, ஜடானுடைய (புயலினுடைய) பலத்தினால் படருவென்னும் கோட்டையில் நெருப்பை வைத்துப் பிடித்துக்கொள்ளாதபடி செய்த உமது துணைகளோடு அசுவனிகளே வாருங்கள் எனக் கூட்டச் சொல்லுவார். ஆனால் (Griffith) மேனாட்டாசிரியர், ஸாயணர் உரை வலிந்து பொருள்கொள்ளுமாயினும் அதனையே பின்பற்றியுள்ளார். சர்யாதனும், வைவஸ்வத மனுவின் புத்திரனை சர்யாதியும் ஒருவரோயோவென்று மேனாட்டாசிரியர் ஆசங்கிப்பார். இச்சர்யாதன் பிருகு கோத்திரத்து வந்த ராஜரிஷியான சார்யாதனின் தந்தையாம். மண். 1. சூக். 51. ரிக் 12 பார்க்க.

18. எதுகொண்டங் கிரசாக்க டம்மனத்தே
துதியெண்ணி யேத்தா நிற்பா
ரெதுகொண்டு கோத்தனத்தை வெளிப்படுத்தித்
தேவர்வயி னெய்து வார்க
ளெதுகொண்டு மனுவென்னுஞ் சூரன்யவ
மாதியைமிக் கெளிதாப் பெற்றா
னதுகொண்ட துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) எந்த வுதவியையெண்ணி அங்கிரா வம்சத்தவர்கள் ஸ்தோத்திரஞ் செய்ததுமன்றி, (பணியென்னும் அசுரனா லபகரிக்கப் பட்ட) பசுக்களாகிய செல்வத்தை (மழைமுகில்களை)த் தேவர்களிடத் திருந்து பெறுவார்களோ, எந்த உதவியைக் கொண்டு மனுவென்னும் அரசன் யவமாதி தானியங்களை யெளிதிற் பெற்றானோ அந்த வுதவி களுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக— (எ - று.) இம்மறைகண்ட குத்ஸனும் அங்கிரஸ வம்சத்தவனாதலால் பற்றி அங்கிரஸாக் குடியைச் சிறப்பித்துக் கூறினானென்க.

19. பன்னியினை விமதனுக்குப் பரிந்தளித்துச்,
சிவப்புநிறப் பண்பார் காந்தி
மன்னியநல் லாக்களினைத் தானமளித்,
துயரீகை மன்ன னாகத்
துன்னியசீர்ச் சுதாசனுக்கு நற்றனத்தை
நலமாகத் தோய்த்து வாய்ந்தே,
யுன்னியவுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) விமதனென்னும் ரிஷிக்கு (புருமித்திரன் மகளாகிய) மனைவியை யளித்துச், செந்நிறம் வாய்ந்த ஒளிபொருந்திய பசுக் களைத் (செந்நிற மேகங்களை யென்றபடி) தானமாகத்தந்து, வள்ளன் மைக்குப் பேர்போந்த (பிஜிவனன் மகனாகிய) ஸுதாஸனுக்கு மிகுந்த நெல்வளத்தைச் சேர்த்து, பெருமை பெற்ற உமது உதவிகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி வருவீர்களாக—(எ - று.) ஸுதேவ்யம் என்னும் வடமொழிப்பதத்துக்கு நற்றனமென்பார் ஸாயணர். ஆனால் மேனாட்டாசிரியர் ஸுதேவியை யெனப் பொருள் கூறுவார். அற்றேல் "நற்றனத்தை" யென்ற சீர்க்குப் பதிலாகச் சுதேவியினை என்ற சீரையமைக்க. ஸுதாஸன் மண். 1, சூக். 47, ரிக் 6 பார்க்க. விமதனது பெயர், மேல் 116-வது சூக்தத்தில் மீண்டும் வரும்.

20. தாசுடற்கு நாடுமுறைச் சுகமதனைத்
தந்தருளுந் தன்மை வாய்ந்து
பேசுறுபுச் சியனுக்கு மத்திரிகு
வென்பாற்கும் பேர ருள்செய்
தாசறுநற் சுகந்தாங்கு மன்னமதை
ரிதத்துபற்குச் சார்த்தி, மிக்க
வோசுறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) அவியளிப்பவனுக்குச் சுகத்தையளித்தும், துக்ர புத்திரனாகிய புஜ்யனுக்கும் அத்திரிகு என்னும் யாகப்பசுவை வெட்டுஞ் சமிதாவுக்கும் அருளைத் தந்து, (உண்மை பேசுவோனாகிய) ரிதஸ்துபனுக்கு நல்ல ஸுகப்ரதமான உணவை யீந்து பலமுறும் உமது உதவிகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி வேகமாக வருவீர்களாக—(எ - று.) புச்சியன், புஜ்யன்மேல், 6-வது ரிக்கைப் பார்க்க. அத்ரிகு (Adhrigu) அபன் ஆகிய இருவரும் தேவர்களுடைய சமிதாக்களென்னும் ஐதரேயப்ராஹ்மணம். சமிதா யாகப்பசுவை வெட்டுவோன். ஸுபராவென்பதை மேனாட்டாசிரியர் சிறப்புப்பெயராகக் கொள்வர். ஆனால் ஸாயணர் நன்மையாகிய ஸுகத்தைத் தாங்கும் என விசேஷணமாகக்கொண்டு இஷா அன்னமென ஒரு சொல் வருவித்து உரை கூறுவார். ரிதஸ்துப் என்னும் பதத்திற்கு உண்மையே யுச்சரிப்பவன் என்பது பொருள். அது ஒரு ரிஷியின் பெயராயது. தமிழில் ரிதத்துபனென்றார். ஓஜஸ், வலிமை; அது ஓசென நின்றது.

வருக்கம் 36

21. செருவதனிற் கிருசானன் றனைக்காத்து,
வேகமுடன் செல்லும் வண்ண
மருவிளமை யவனுடைய குதிரையினைப்
பந்தயத்தே வயக்கித், தேனீ
பிரசமதை நன்காரச் சுவையுளதாத்
தந்தவற்றைப் பெரிதுங் காத்தே,
புரசுறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) ஸோமகாவலர்களுள் ஒருவனான க்ருசானுவென்பவனை யுத்தத்திற் காப்பாற்றி, இளமை வாய்ந்தவனாகிய புருகுத்ஸனுடைய குதிரையைப் பந்தயத்திற் ஜயிப்பித்துத், தேனீக்களுக்கு நல்ல தேனைத்தந்து அவற்றைக்காப்பாற்றிப் பெருமைபெறும் உமது துணைகளுடன், அசுவினிகளே, எம்மை நோக்கி இங்கு வருவீர்களாக—(எ-று.) ஹஸ்தன், ஸுஹஸ்தன், க்ருசானு என்பவர் ஸோமத்தைக்காப்

பாற்றுவார்களென்று தைத்திரீய ஸம்ஹிதை (1-2-7) கூறும். பார்ஸீ வேதமாகிய அவஸ்தாவில் இப்பெயர், கெரெசானியென வழங்கும். கிருசானு, அமிர்தமாகிய மழைபெய்யாமற் றடுக்கும் ஒரு பூதமாயிருக்கலாமென்பார் மேனாட்டாசிரியர். கருடன் ஸோமனைக்கொணர்ந்த இதிஹாஸத்தைக்கூறும் மறையாகிய மண். 4. சூக் 47. ரிக் 7-ல் இப்பெயர் மறுபடியும்சொல்லப்படுகிறது. இளைஞன் புருகுத்ஸனென்பார்ஸாயணர்.

22. வித்தமொடு கேத்திரமும் பசுக்களுமே
பெறுமாறு விழையும் வீரர்
மெத்தியவெம் போரதனி னேதாவை
விரைவுறுத்தி மேன்மை சார
வுத்தரியைத் தேரதனைப் பத்திரமாய்க்
காப்பாற்றி யொழுகுஞ் சீரி
னொத்துறுமுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) செல்வமும், நிலமும், பசுக்களும் பெறும் வண்ணம், போர்வீரர்கள் நிறைந்த யுத்தத்தில் நேதா அல்லது யஜமானனைத் துரிதப்படுத்தி யவனது குதிரையையும், தேரையும், பத்திரமாகக் காப்பாற்றி விளங்குகின்ற உம்துணையோடும், அசுவினிகளே, எம்மை நோக்கி யிங்கு வருவீர்களாக—(எ - று.) உத்தரி, குதிரை, உத்தரியைத் தேரதனை யும்மைத் தொகை. வடமொழியில் தநயஸ்ய என்றுள்ளது. அதற்குப் புத்திரன் என்ற ஸாதாரணப் பொருளை மேனாட்டாசிரியர் கூறுவர். ஆனால் ஸாயணரோ 'தநயசப்தே தனவாச்சீ என்றாராதலின், புத்திரரும்' என்னாது 'வித்தமொடு' என்றார் செய்யுளில். 'புத்திரரும்' எனக் கொள்ளின், கடையிருசீரைப் 'பொருந்தும் வீரர்' எனப் படிக்க.

23. நூறுகிரு துக்களுக்கு நாயகரே!
யருச்சுனனி னேன்பி னுற்ற
வீறுபெறு குற்சனைக்காத் தெழிலுறவே
துருவீதி, விழை தபீதி
பெறுபேறத் துவசந்தி புருடந்தி
யிந்நால்வர்ப் பெரிதுங் காத்த
ஆறுபெறுந் துணையுடனன் கசுவினிகா
ளெமைநோக்கி யூங்கெய் தீரே.

(இ - ள்) பலவித கர்மங்களுக்கும் நாயகரே! அசுவினிகளே! (இந்திரனுடைய மறை பெயரான) அர்ச்சுனனுடைய புத்திரனை குத்ஸனைக் காப்பாற்றித், துர்வீதி, தபீதி, த்வஸந்தி, புருஷந்தி என்னும் நான்கு ரிஷிகளுக்கும் எழிலும் வாழ்வும் பெறுமாறு காத்

தருளிய குற்றமற்ற உதவிகளுடன் எம்மை நோக்கி வருவீர்களாக. —(எ - று.) அர்ச்சுனன் இந்திரனுடைய குஹ்ய நாமம் என்று வாஜஸநேயி கூறும். குத்ஸன் இந்திரனது வரத்தால் வந்த புத்திரனனது பற்றி யவனை யிந்திரபுத்திர னென்றார். தூர்வீதி மண். 1. சூக் 61 ரிக் 11, பார்க்க. (Dabhiti) தபீதி இந்திரனுக்கு உகந்த ஒரு ரிஷி. மண். 2 சூக். 15 ரிக் 9 பார்க்க. துவசந்தி (Dhvasanti) த்வஸந்தி ஒரு ரிஷி. புருடந்தி, புருஷந்தி, ஒரு வள்ளல் மண். 9. சூக். 58 ரிக் 3 நோக்குக.

வேறு

24. இச்சையை யளிப்பீர், மாற்றார் தமைத்தெறு சீரின்மிக்க
வச்சுவி னிர்கா ளெங்கள் மொழிக்கணே யமைக்க சித்தி ;
மெச்சுமோத் தறியு ஞானம் வீசுவீ ரிருட்டீற் றியாமத்
துச்சமாயழைத்தேன் போரினியைக்க வோக்கம்மெமக்கே.

(இ - ள்) இச்சைப்பட்டவற்றைத் தருபவர்களும் பகைவரை யடக்குவோருமாகிய அசுவினிகளே! எங்கள் வார்த்தைகள் பலிக்கக் கூடியவையாகச் செய்க. எங்களுக்கு வேதார்த்தங்களையறியும் ஞானத்தைத் தருக. இருட்டான இரவின் கடைச்சாமத்தில் உம்மையழைத்தேன். எங்களை யுத்தத்திற் பெருமை பெற்றவர்களாகச் செய்க— (எ - று.) அசுவினிகளை இரவிற் கடைசி ஜாமத்தில் துதித்தழைப்பது தான் முறை. அத்யூத்யே என்னும் வடமொழிப்பதத்துக்குச் சூதாட்டத்தில் தோல்வியுறும்போது எனப்பொருள் கொள்ளுவர் மேனாட்டாசிரியர். ஆனால் ஸாயணர் த்யோதநரஹிதே ப்ரகாசநரஹிதே ராத்ரே : பச்சிமயாமே! வெளிச்சமில்லாத இரவின் கடையாமத்தில் என்று உரை கூறுவர்.

25. தாவுறாத் தனத்தி னல்லும் பகலுமெந் தம்மைச் சூழ்ந்து
தூவிய வசுவி னிக்கா ளோம்புக ; வெமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதிதானு
மேவுமித் திரர்வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) துன்பத்தைத் தாராத செல்வத்தோடு இரவும் பகலும் எம்மைச் சூழ்ந்து, அசுவினிகளே, ரட்சிப்பீர்களாக. எம்முடைய இந்தஸ்தோத்திரத்தைப் பூமி, முதல் அறுவரும் காக்கட்டும்—(எ-று.) தாவு துன்பம், உறா அடையாத வென்க.

வருக்கம் 37

ஆகச் செய்யுள் 1198.

**முக்கிய குறிப்பு:**—இவ்வத்தியாயத் தொடக்கத்தில் 38 வருக்கமும் என்பதை 37 வருக்கமும் என மாற்றிக்கொள்க.

7-வது அத்தியாயம் முற்றும்

## மண்டலம் 1. சூக்தம் 113.

## 8-வது அத்தியாயம்

இவ்வத்தியாயத்தில் 26 வருக்கமும், 9 சூக்தமும், 135 இருக்குக்களு முள்ளன.

## 113. மண்டலம் 1 அநுவாகம் 16 சூக்தம் 8.

20 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: ஆங்கிரஸன் புத்திரன் குத்ஸன். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: உஷஸ்; 2-வது இருக்கிற் பாதி இரவுமாம்.

1. சோதியிற் சிறந்த சோதி தோய்ந்த தீண்டைதின்; யாவுந்
தீதற விளக்குங் காந்தி செறிந் தெலாவிடத்துந் தோன்றிற்
றேதமி லென் றுதிப்பா னேகிய விரவு, வைகல்
நீதியி னுதயமாகத் தோற்றுவாய் நிறுவிற் றன்றே.

(இ - ள்) சோதிகளிற் சிறந்த (உஷஸாகிய) சோதி இங்கு அழகாக வந்தது. எல்லாவற்றையுங் கண்ணுக்குத்தெரிவிக்கும் கிரணங்கள் எல்லாப் பக்கங்களிலும் நிறைந்து தோன்றின. குற்றமற்ற சூரியன் உதிப்பதற்காக இடங்கொடுத்து மறைந்த இரவு (அப்படி மறையும்போது) உஷஸுக்கு ஒரு பிறப்பிடத்தை யேற்படுத்திச் சென்றது —(எ - று.) என்று, சூரியன். சோதி உஷஸாம். தோற்றுவாய், பிறப்பிடம்.

2. வெண்மையுந், தபனனுகும் வெளுப்புறு சுதனோ டோங்கி
யண்மினுள்; அவட்குக் கார் அல் அளித்தனள் தனதிடத்தைத்;
தண்மையார் அமரத்தன்மை சார்ந்துமுன் இராப் பின்வைகல்
ஒண்மைசார் நிறங்கள் மாறி யொழுகுவார் உறவொத்தோரே.

(இ - ள்) வெண்மையாகிய உஷஸும் ஸூர்யனுகிய பிரகாசம் பொருந்திய புத்திரனோடு வந்தாள். அவளுக்குக் கரிய இரவு தன்னிடத்தை யளித்தாள். குளிர்ச்சியும் மரணமின்மையும் சார்ந்து ஸமான பந்துக்களாகிய இரவும் உஷஸும் தமது நிறங்கள் மாறிமாறி முன்னும் பின்னுமாக ஒழுகுவார்கள்—(எ-று.) உஷஸின் பக்கத்தில் சூரியன், தாயின் பக்கத்துப் புத்திரனிருப்பது போலிருப்பதினுல், சூரியனை உஷஸின் புத்திரனென்றூர். அன்றித்தாயின் முலைப்பாலாகிய ஸாரத்தை யுண்பதுபோல சூரியன் உஷஸின் ஸாரத்தை யிழுப்பதனுலும் புத்திரனென்று ரென்பார் ஸாயனர். வெண்மை யீண்டு உஷஸ். அல், இரவு. முன் இரவும் பின்வைகலுமாக மாறி மாறி ஒன்றன் நிறத்தை மற்றொன்று பேதித்து ஒழுகும். இவ்விரண்டும்

மரணமின்மை வாய்ந்து ஒத்த பந்துக்களாம். ஏன் ? காலம் நித்திய மானதுபற்றி.

3. உடன்வயி றுழுகு மார்க்க மொன்றதா முடிவில்லாதாம் ;
திடமுறத் தேவராணை செறிந்துபின் னன்னியான்யத்
துடனுறச் செல்வார் ; ஓங்கு முருவினர் விவிதரூப
மடையினு மிரா வைகல்க ளுளமொத்தார் நிலார் மோதாரே.

(இ - ள்) சகோதரிகளாகிய இரவும் வைகலும் செல்லும் மார்க்கம் (ஆகாசமாகிய) ஒன்றே. அது எல்லையற்றது. திடமாகத்தேவர்களுடைய ஆக்ஞையை யடைந்து பக்கம் பக்கமாகச் சேர்ந்து அவர்கள் செல்வார்கள். நல்ல உருவத்தோடு கூடிய அவ்விரவும் உஷஸும் ஒருவருக்கொருவர் மாறுபட்ட ரூபத்தையடையினும், மனமொத்தே, ஓரிடத்து நில்லாமலும் ஒருவரோடொருவர் முட்டிக்கொள்ளாமலும் செல்வார்கள்—(எ-று.) இரவும் உஷஸுமாகிய ஸஹோதரிகள் மாறி மாறிச் செல்வர். வேறுபட்ட வுருவத்தோடியையினும் மனமொத்து நிற்காமலும் தடைபடாமலும் செல்வர் என்க. மோதார் தற்பொருட்டில் வந்தது.

4. இன்பமார் தொனி யெழுப்பு மிவளெயெங் கண்களுக்கும் ;
கொன்பெறு சித்திரத் தோற்றத் துஷை சகத்திருட்டைக்
கொன்றொளி காலவிட்டாள் ; உலகத்தை வெளுப்பித்,தாக்க
மின் றெமக் கொளிர்த்தி யெல்லா வுயிரையு முயிர்ப்பித்தாளே.

(இ - ள்) இன்பம் நிறைந்த (பிராணிகளின்) தொனிகளை யெழுப்பிவிடும் இவ்வுஷஸை எமது கண்கள் பார்க்கும். பெருமை பொருந்திய சித்திரம்போன்ற தோற்றத்தையுடைய உஷஸ் ஜகத்தின் இருட்டைப்பேதித்துப் பிரகாசத்தை யுண்டுபண்ணினள். உலகத்தைப் பிரகாசிப்பித்து, எங்களுக்குச் செல்வம் கண்ணுக்குத் தெரியும்படிசெய்து, எல்லாப்புவனங்களிலுமுள்ள பிராணிகளை மறுபடியும் உயிர்பெற்றனவென்னும்படி செய்தாள்—(எ-று.) விடியற்காலத்தில் பசு பட்சிகள் சத்தஞ்செய்வதால் தொனியெழுப்புமிவளென்றார். தூங்கி யெழுதல் மறுபிறவிபோலிருப்பதால் உயிர்ப்பித்தாளென்றார். 'உறங்குவதுபோலும் சாக்காடு, உறங்கி விழிப்பது போலும் பிறப்பு.' என்பது கருதத்தக்கது.

5. மகோனி மெய் முடக்கித் தூங்கு மனிதரைப் போகமாரத்
தகோதய மகத்தை யாற்றத் தனத்தினைப் பெற நடத்தும்
சுகோதயத் தூர திட்டி சுலவிட வற்ப நோக்கி
னிகோதயர்த் தூண்டி யெல்லா வுயிரையு முயிர்ப்பித்தாளே.

(இ - ள்) மகோனி (தனவதி)யாகிய உஷஸ், சரீரத்தைமுடக்கிக் கொண்டு தூங்கும் மனிதரையெழுப்பி, போகம் அநுபவிக்கச் சிலரையும், யக்ஞம்செய்யச் சிலரையும், செல்வத்தைப்பெறச் சிலரையுமாகத் தூண்டிவிடுவாள். பார்க்கமுடியாமலிருந்த மனிதரை வெகு தூரம் பார்க்கும் வண்ணம் செய்து எல்லாப்பிராணிகளையும் மறுபடியும் உயிர்பெற்றார்களென்னும்படி செய்தாள்.—(எ - று.) மகோனி, தனமுடையவள்; உஷஸின் மற்றொரு பெயர். இருட்டினால் அற்ப நோக்குற்றவரென்க. இகோதயர் இகத்துப் பிறந்துள்ள மனிதரென்க.

வருக்கம் 1.

6. பொன்னியை போருக்கன்றி யன்னத்தைக் கருதி மேன்மை
துன்னிய இட்டிக்காகத் துதை பொருளீட்டுமாறு
மன்னிய நானா ரூப மலிதொழில் கருதிச் செல்வா
னின்னிய லுஷையு மெல்லா வுயிரையும் முயிர்ப்பித்தாளே.

(இ - ள்) பொன்னைத்தரும் போருக்காவும், அன்னத்தைப் பெறுதற்குச் செய்யும் மேன்மை பொருந்திய அக்கினிஷ்டோமாதி இஷ்டிகளுக்காகவும், செல்வம் சம்பாதிப்பதற்காகவும், பின்னும் பல விதத்தொழிலை நாடிச்செல்வதற்காகவும், உஷஸானவள் எல்லாப் பிராணிகளையும் எழுப்பினாள்.—(எ - று.) இச்சூக்தத்தில் 4, 5, 6 இருக்குக்கள் மாத்திரம் கடையடியொன்றாக வருவதால் இவை பின்னர் இடைப்புகுத்திய இருக்குக்கள்போலு மென்பார் மேனாட்டாசிரியர். இவ் விடைப்புகுத்திய காலம் சௌநகருக்குப் பின்னும் காத்தியாயநருக்கு முன்புமாயிருந்திருத்தல் கூடும். ஏனெனின் வருக்கம் ஏற்பட்ட பிறகு இடைப்புகுத்துதல் சாலாது. அவ் வருக்காநுக்கிரமணி யளவுபடுத்தப் பட்டிருத்தலால். மேலும் இப்பாட்டின் தொழின் முறைகளைக் கவனிக்கின் சாதித்தொழிற் பிரிவினைகள் வெளிப்படத் தோன்றுகின்றன. பொருநர், இஷ்டிகர், வணிகர், பணி செய்வோர் எனத்தொனித்தல் காண்க. ஆதியிற் பொருநரே சிறந்து நின்றாரெனவறிக.

7. வான்மகள், யுவதி, காந்தி வளர்ந்திடு மாடை பூண்டு
தோன்றின ளிருளைச் சீத்துத்; துதையுறு புவனமெல்லா
மேன்ற செல்வங்கட் கெல்லாம் நாயகீ, யுஷை, யின்றீண்டை
யான்றசீர்த் தனத்தோ டுற்றே யல்லிரித் தொழுகுவாயே.

(இ - ள்) விண்ணின் புத்திரியும், தருணியுமாகிய உஷஸ் பிரகாசம் பொருந்திய வஸ்திரத்தைத் தரித்து இருட்டை நீக்கியுதயமானாள். எல்லாப் புவனங்களிலுமுள்ள செல்வங்களுக்கெல்லாம் நாயகியே! உஷையே! இப்பொழுது இவ்விடத்துச் சிறப்புப் பொருந்திய செல்

வத்தோடு இருட்டை விலக்கி யெழுவாயாக—(எ - று.) இடமாற்றை நோக்குக.

8. கணக்கில்லாப் பலவைகல்கள் காண நிற்பவின் முதன்மை
யிணக்கியவுஷை முன்சென்ற வைகலி னெறியே யெய்ந்தாள் ;
உணக்கமா ருறுப்பிற் றாங்கு மொவ்வொரு சீவ தேகத்
திணக்குறு முணர்ச்சி யெல்லா மெழுப்பிக் காரிருள் சீத்தாளே.

(இ - ள்) எண்ணிறந்த விடியற்காலங்கள் இனி வருபவற்றிற் கெல்லாம் முதல்வைகலாகிய இவ்வுஷஸ், இதற்கு முன் வந்துபோன விடியற் காலங்களின் நெறியிலேயே பொருந்தித் தோன்றினள். (தூக்கத்துக்கு முன் உயிர்த் தன்மையோடு பிராணிகளை யியக்கிய உஷை) இறந்ததுபோல உணர்வற்றுத் தூக்கத்தி லாழ்ந்து கிடக்கு முறுப்புக்களோடு கூடிய ஒவ்வொரு பிராணியின் உடலினையும் உணர்ச்சி பெறச் செய்து இருட்டினை யோட்டினள்—(எ - று.) மேனுட்டாசிரியர் உயிரோடிருக்கும் பிராணிகளை யெழுப்புவாள். இறந்துபோனவற்றை யெழுப்பமாட்டா ளென்பார்.

9. எரியினைச் சமித்தி னூட்டி யிலங்கு சூரியன்றன் கண்ணுற்
றெரியலாப் பொருடெரித்துத் திகழ்மக மாற்று மாந்தர்க்
குரிமையி னவரை யூக்கி யுயர்சிறப்பான்ற கன்ம
மருவ விட்டனை தேவர்க்கா மதிக்கரு முஷை நீதானே.

(இ - ள்) உஷஸே ! நீ, சமித்திற் றீமூட்டி, மறைந்து கிடந்த பொருள்களை ஸூர்யனுடைய வெளிச்சத்தினுல் தெரியக் காட்டி, யாகஞ்செய்வோரைத் தொழிலின் முயக்கிச் சிறந்த (மூவித) கர்மங் களையும் தேவர்களுக்காகப் புரிவித்தனை—(எ - று.) மூவித கர்மமென் ருர் ஸாயணர், அவிர்யக்ஞம், பாகயக்ஞம், ஸோமயக்ஞங்களை.

10. வைகல்க ளருகே தோன்றி வளர்ந்த வெத்தனை நாளாக ?
ஐதி னெவ்வளவு காலமினி யவை யெழும்? இவ்வைகல்
மொய்குறப் பிறமகோனி முன்புற விழைந்து மற்றை
வைகலோ டொளிர்ந்து சித்த வோகையிற் செல்வாளன்றே.

(இ - ள்) ஆதிகாலந் தொட்டு எத்தனை நாட்களாக இவ்வுஷ ஸுக்கள் சமீபத்திற் ருேன்றி வந்துகொண்டிருக்கின்றன ? இனி யெத்தனை காலம் இவ்வுஷஸுக்கள் உதிக்கும் ? இன்றுதோன்றிய இவ்வுஷஸ் பிற மகோனிகளாகிய உஷஸுக்களோடு சேரவிரும்பி இதர விடியற்காலங்கள் கழிந்து போனவையோடு போய்ச் சேர் வாள்—(எ-று.) உஷஸ், வைகல்.

11. வைகறைத் தோற்றந் தன்னை மகிழ்வொடு முன்பு கண்டார்
பைதலிற் சென்றார் ; இன்று பரிவொடு வாழும் யாங்கள்
செய்கையிற் சிறந்த வன்ன செறியொளி நோக்காநிற்பேம் :
மைகுலவா வச்சோதி நோக்குவோர் சார்வார் வல்லே.

(இ - ள்) உஷஸின் உதயத்தை முன்பு கண்டவர் அநேகர் துன்பத்திற் கழிந்திறந்தனர். இந்நாள் வாழும் யாங்கள் அச்சிறப்புப் பொருந்திய ஒளியைப் பார்க்கா நிற்போம். குற்றமற்ற அச்சோதியைப் பார்க்கப் பின்னும் பலர் சீக்கிரத்தில் உதிப்பார்கள்—(எ - று.) உஷஸின்தோற்றம் பூத பவிஷ்ய வர்த்தமான காலங்களினு முண்டென்றபடி. மேற் பத்தாஞ் செய்யுளிலுள்ள ஐதின், இச்செய்யுளிலுள்ள பைதலில் இவ்விரண்டும் வல்லினவெதுகையாம்.

12. பகையினை யோட்டி, யாகம் பரிந்துகாத் ததற்காத்தோன்றி,
நகையுவப் பளித்து, நன்மைசா ரொலியெழுப்பித், தேவர்
தகையுற வுண்பான் யாகந் தந்து, மங்கலப்பண் பேய்ந்து
மிகுமிசை யுஷையே யின்றீண் டொளிபெற விளங்குவாயே.

(இ - ள்) பகைவர்களாகிய ராக்ஷஸாதி நிசாசர்களைத்துரத்தி, யக்ஞத்தை விரும்பிக்காத்து, அவ்யக்ஞத்துக்காகவே உற்பவித்து, ஸந்தோஷத்தைத்தரும் சுகத்தைத்தந்து, (பசுபட்சி முதலியவற்றின்) இனிய சத்தங்களை யெழுப்பி, தேவர்கள் அவி விரும்பும் யாகங்களைச் செய்வித்து, (எப்பொழுதும்) மங்கலத்தன்மையோடியைந்து கீர்த்தி மிகும் உஷாதேவியே, இப்பொழுது இவ்விடத்தில் ஒளிபெறப் பிரகாசிப்பாயாக—(எ - று) 'உஷஸ் உதிக்கத் துர்த்தேவதைகள் விலகுகின்றன. புராதனமாய்வரும் ஸநாதன ஏற்பாட்டின்படி உஷை யுதித்து இயற்கை யொழுங்குகளைக் கவனித்துப் பாதுகாக்கிறாள். உஷஸ் உதயமாவது தேவகாரியங்களைச் செய்ய மனிதர்களுக்கு ஓர் அடையாளமாம்' என்பது கருத்து.

13. நித்தலு முன்னர்த்தேவியுஷை நிறைந்தொளிர்ந்தாள் பின்பு
சுத்த நற் பிரகாசத்தை மகோனியு மின்று தோய்ந்தாள் ;
மற்றுப் பின்றோன்று நாட்க டன்னினு மலர்வ ளற்றே ;
யுற்றிடாள் மூப்புச் சாக்கா டொழுகுவாள் சுயதே சோடே.

(இ - ள்) எப்பொழுதும் முன்காலத்தில் உஷஸாகிய தேவி ஒளிநிறைந்து எழுந்தாள். அதற்குப் பிறகு இப்பொழுதும் (மகோனி) தனவதியாகிய வுஷை பரிசுத்தமான நல்ல பிரகாசத்தைத் தந்தாள். இனித்தோன்றும் நாட்களிலும் அப்படியே விளங்குவாள். ஜராமரண

துக்க மில்லாமல் தன் ஸ்வயதேஜஸோடு எப்பொழுதும் நடப்பாள்—(எ - று.)

14. வானுறு திக்கி னெல்லை வயங்கின ளொளியிற் ; றேவி,
தானுறுங் கறுத்த மேனி களைந்தன ளுஷைதன்றேசால் ;
ஊனுறு முயி ருணர்ச்சி யுற் றெழுகிடச் சிவந்த
மானுறு தேரி னேறி மருவின ளீண்டு மாதோ.

(இ - ள்) (உஷை) ஆகாசத்திற் பரவியுள்ள திக்கின் எல்லைகளி லெல்லாம் ஒளியோடும் விளங்கினள். ஒளி பொருந்திய அவ்வுஷை யாகிய தேவி (இரவினுடையேற்பட்ட) கறுப்பு ரூபத்தைத் தன் தேஜஸால் மாற்றினள். உடலினுற்ற உயிர்கள் (தூக்கந்தெளிந்து) உணர்ச்சியைப் பெறுமாறு செக்கிறமான குதிரைகளைக் கட்டிய தேரிலேறி வந்தாள்—(எ - று.) மான், குதிரை.

15. உயிரினை யோம்புஞ் செல்வ மொன்றல வெடுத்து மாந்தர்
செயிரறு முணர்வை யூட்டிச் சிறந்த பேரொளி விரித்தாள் ;
பயிறரு முஷையு முன்பு பயின்ற வைகறைகட் கெல்லா
மியறரு முவமை யாகி யினியெழு மவைக்கு மூத்தாள்.

(இ - ள்) ஜீவன்களை வளர்க்கும் பலவகையான செல்வங்களையும் தாங்கிக்கொண்டு மனிதரது குற்றமற்ற வுணர்ச்சிகளை யவர்களுக் களித்துப் பெரிய காந்தியை வீசினள். உஷை முன்னாட்களில் விளங்கிய வைகல்களுக்கு முந்தினவளாய் வளர்ந்தாள்—(எ-று.)

வருக்கம் 3.

16. எழுக ! நஞ்சீவசக்தி யேய்ந்தது ; தம மொழிந்த(து),
உழிதரு சோதி யுற்ற(து) ; ஓங்கிய வென்றாழ் செல்வான்
வழியினை யமைத்தாள் ; மாந்த ராயுளைப் பெருக்கு மன்னந்
தழைதரு மவ்விடத்தே சார்ந்தனஞ் சிறக்க யாமே.

(இ - ள்) ஜநங்களே ! எழுவீர்களாக. நம்முடைய ஜீவசக்தி சரீரத்தில் (மீண்டும்) பொருந்திற்று. இருட்டொழிந்தது. சூழ்ந்து செல்லும் ஜோதி வந்தது. ஸூர்ய வீதியை (உஷை) யமைத்தனள். மக்களது ஆயுளை விருத்தி செய்யும் அன்ன தானஞ் சிறக்கு மவ்விடத்தில் யாங்கள் பெருமைபெற வடைந்தோம்—(எ - று.) மாந்தர்காள் எழுக வென்றும், உஷை யமைத்தன ளென்றும் கூட்டுக.

17. தோத்திர முரைப்போன் வைகற் சோதிபாற்போற்றைத் தந்து
மாத்திரை யாகப் பாடி வழங்குவான் ; மகோனி யின் றீண்

டேத்துவோன் பக்க லுன்ற வொளியினை யோச்ச எம்பாற்
பாத்தளி தனமுஞ் சந்தானங்களும் படைத் திலங்க.

(இ - ள்) ஸ்தோதாவானவன் உஷஸின் மேல் ஸ்தோத்திரங்களை வேத மாத்திரைகளின் கணக்காக வமைத்துப் பாடி அவற்றை உச்சரிப்பான். மகோனியே! (உஷையே!) இப்போது இவ்விடத்து உன்னைப் புகழுவோன் பக்கத்தில் உனது ஒளியை வீசுவாயாக. எங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் செல்வத்தையும் ஸந்தானங்களையும் படைத்துப் பிரகாசிப்பாயாக—(எ - று.) தந்து, நூல், ஈண்டு வேத நூலைக் குறித்தது.

18. வீரர் யாவரையு மாக்க டம்மையு மசுவத்தோடும்
வருற வவியைத் தாங்கு மர்த்தியற் கியைக்கும் வைகல்,
சோருறுத் துதிகள் பாடிச் சோமத்தைப் பிழிந்து வாயு
தாருறு கதியிற் சாற்றி முடிப்பவ னிவற்றைச் சார்க.

(இ - ள்) தாசுஷனாகிய மர்த்தியனுக்கு எல்லா வீரர்களையும் பசுக்களையும் குதிரைகளையும் தரும் வைகல்களாகிய இவற்றை, ஸ்துதிகளைப்பாடி முடிக்கும்போது வாயுவேகமாக முடிக்கும் ஸோமாபிஷோதாவாகிய யஜமானன் எய்தட்டும். (—எ - று.) தாசுஷன் அவியளிப்பவன். ஸோமாபிஷோதா, ஸோமம்பிழிவோன். வைகல்களாகிய விவற்றை, முடிப்பவன் சார்கவென வினைமுடிபு செய்க.

19. தேவர்தந் தாயே, சீர்த்த வதிதியின் முகமே, யாக
மேவு நற்கொடியே, மேன்மை யோங்குற விளங்க விண்டே;
தாவுசீ ரெம்மறைக்க ணொளியினைத் தயக்கித் தோன்றாய்;
ஓவற வுயர்ந்தோ யெம்மை யுயர்த்துக மனிதர்க் கண்ணே.

(இ - ள்) தேவர்களுக்கு மாதாவே! அதிதியின் (பூமியின்) சிறப்புப் பொருந்திய முகமே! யாகத்துவசமே அல்லது யாகத்தினைப் பூட்டுபவளே! இங்கு மேன்மை பெற விளங்குவாயாக. சீர்பொருந்திய எமது மந்திரங்களின் பொருட்டுப் பிரகாசிப்பாயாக. எல்லாரினும் உத்கிருஷ்டமானவளே! மனிதர் கூட்டத்தில் எம்மை யுயர்த்துவாயாக—(எ - று.) விளிகளெல்லாம் உஷஸைக் குறித்து நின்றன.

20. ஓவறு மவியு மேத்து முடன்கொடு பூசிப் பானுக்
கீவதற் குஷை தரும் பொன் சிறந்து மங்கலமாம்; இஃதைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திரர் வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) குறைவற்ற அவிப்பொருளோடு ஸ்தோத்திரமு கூறிப் பூஜிப்பவனுக்குத் தருவதற்காக உஷஸ் தாங்கிக் கொண்

வரும் தனமானது மங்கலச் சிறப்பைப் பெறும். இப்போற்றைப் பூமி முதலிய அறுவரும் காக்கட்டும்—(எ - று.)

வருக்கம் 4.

## 114. மண்டலம் 1 அநுவாகம் 16 சூக்தம் 9.

11 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: ஷை குத்ஸன். வடமொழிச் சந்தம்: ஜகதி, 10, 11 த்ருஷ்டுப். தேவதை: உருத்திரன்.

வேறு

1. வலியோங்குஞ் சடையாளன், றனவீரர்
 நாயகனு மருவு ருத்ரற்
 கொலியோங்கு மிப்புகழ்ப்பாக் களையீவோ
 மிருபாதத் தொழுகு மாந்தர்
 நிலையோங்க, நாற்பதத்துப் பிராணிகளுஞ்
 சுகமோங்கி நிலைக்க, வெம்மூர்த்
 தலையோங்கு மவரெல்லாந் திடமோங்கி
 நோய்நீங்கித் தழைக்கு மாறே.

(இ - ள்) இரண்டு பாதத்தி னொழுகும் மனிதர்கள் விருத்தி யடையுமாறும், நாற்காற் பிராணிகளாகிய பசு குதிரை முதலியவை கள் சுகத்தி லுறுமாறும், எம்மூர்க்கண்ணுள்ளவர்கள் திடம் பெற்று நோய் நீங்கிச் சிறக்குமாறும், வலிமை பெருத்த ஜடாதாரியும், தன வீரர்களாகிய மருத்துக்களுக்குத் தந்தையுமான உருத்திரனை, ஒளி மிகுந்த இந்த ஸ்தோத்திரப் பாக்களாற் புகழுவோம்—(எ - று.) ருத்ரன், உருத்திரன். (1) முடிவு காலத்தில் எல்லாவற்றையும் அழ வைப்பவன். (2) ஸம்ஸாரமாகிய துக்கத்தை விநாசப்படுத்துபவன். (3) சப்த ரூபத்தால் பிரதிபாதிக்கப்படுபவன். (4) அந்தகாரத்தை யழிப்பவன். (5) தேவாசுர யுத்தத்தில் அக்கினி ரூபமாய் இருந்து தேவர்களுக்காகத் தனத்தைப் பறித்துக் கொண்டு வந்தபோது அழு தவன். என்று ஐந்து பொருள் கூறுவார் ஸாயணர். கபர்த்தி, சடா தரன். வீரர் மருத்துக்க ளென்பார் ஸாயணர்.

2. உருத்திரனே! யெம்மிடத்துச் சுகத்தமர்க;
 வெமக்குவகை யுடனே யீக;
 உருத்தெழுமத் தனவீரர் நாயகனே,
 பிரணயத்தோ டுனைச்சே விப்போம்;

## மண்டலம் 1. சூக்தம் 114.

பெருத்தவெம தாதிபிதா மநுயாகத்
தெச்சமனம் பிறங்கெச் சாந்தி
யுரித்துறவே பெற்றனனவ் விரண்டுமுன
தருணேக்கா லுறுக யாமே.

(இ - ள்) ருத்திரனே! எம்மிடத்துச் சுகமாகத் தங்குவாயாக. எங்களுக்கு உவகையை அல்லது சுகத்தைத் தருவாயாக. தனவீரர் களாகிய மருத்துக்களின் றந்தையே! வணக்கத்தோடு உன்னை வணங்குவோம். எங்களுடைய ஆதிபிதாவாகிய மநு பெற்ற ரோக சமனம் பயசாந்தி யாகிய விரண்டையும் யாங்கள் உனதருளால் அடையட்டும்—(எ - று.) ரோகசமனமும் பயச்சாந்தியும் என்பார், சமநஞ்ச ரோகாணும் யாவநஞ்ச பயாநாம், என்பது நிருக்தமொழி.

3. வள்ளன்மை யோங்குமுருத் திரனே,நல்
வீரர்களா மருதர் நாத,
எள்ளருமு னருண்மனத்தைத் தேவயா
ஜநமதனு லியைக யாமும்;
கொள்ளரிய சுகமதையெங் குடிமதித்தீந்
தருளுகவால்; குலவும் வெற்றி
யுள்ளியவெவ் வீரர்பெறும் யாங்களுமுன்
மாட்டவியை யுவந்தீ வோமே.

(இ - ள்) வண்மையிற் சிறந்த ருத்திரனே! தனவீரராகிய மருதர்களுக்கு நாதனே! யாங்கள் தேவயஜநகார்யங்களால் உனது அநுக்கிரஹாத்மக புத்தியை யடையட்டும். எங்கள் குடியை மதித்துச் சுகத்தை யளிப்பாயாக. இம்சை யடையாத (அதாவது வெற்றி பொருந்திய) வீரராகிய புத்திரரோடு கூடிய யாங்கள் உனக்குச் சரு புரோடாசமாதிய அவிப்பொருள்களைத் தந்தோம்—(எ - று.)

4. எக்கியத்தை முற்றுவிப்போன் குடிலகதி
யுள்ளகவி யென்று மெம்மை
முக்கியமாய்க் காக்கவென வுருத்திரனை
யாசிப்போம்; முற்றும், தேவ
ருக்கிரமார் குரோதத்தைத் தூரமதி
லோட்டுகவெம் முறைநின்(று); அன்னோன்
றக்கவருண் மனத்தினையா மடைபாக்குத்
துதியென்றுஞ் சாற்று வோமே.

(இ - ள்) யக்ஞத்தை நிறைவேற்றுவிப்பவனும் வக்கிரமான கதியோடு கூடியவனும் கவியுமாகிய உருத்திரன் எம்மைக் காக்கட்டு

மென்று இரப்போம். தேவர்களுடைய கோபமானது எம்மை யடை யாதபடி அதனை யவன் முற்றுந் தூரத்தி லோட்டட்டும். அவனு டைய அநுக்கிரக புத்தியை யடையுமாறு அவனைத் துதிப்போம்— (எ - று.)

5. வானொளிரும் வராகத்தைச் செந்நிறத்துக்
கபர்த்தியினை வளருஞ் சோதி
தானொளிரு முருவமதை வணக்கத்தோ
டழைப்போமால்; தழைக்கு நோயை
யூனமுறத் தீர்க்கும்பல் லோடதியைக்
காத்தேந்து முவனெங் கட்கு
மானமுறு சுகத்தினைநற் கவசமதை
யில்லமொடு வழங்க மாதோ.

(இ - ள்) ஆகாயத்திற் றோன்றும் வராஹம்போற் றிடவங்க முள்ளவனும், சிவந்த நிறத்தோடு கூடிய சடையாளனும், சோதி யோடு கூடிய வுருவத்தையுடையவனுமாகிய உருத்திரனை வணக்கத் தோடு கூவி யழைப்போம். நோய் நீக்கும் ஓஷதிகளையுடைய வவன் எங்களுக்குப் பெருமை வாய்ந்த சுகத்தையும், ஆயுதங்களினின் று காக்கும் கவசத்தையும், வீட்டையு மளிக்கட்டும்—(எ - று.) வராஹம் என்பதற்கு 'வராஹாரம் உத்க்ருஷ்ட போஜநம் யத்வா வராஹவத் த்ருடாங்கம்' என்பார் ஸாயணர். சிறந்த ஆகாரம் அல்லது பன்றி போலத் திடமான வுறுப்போடு கூடியவன் என்பது பொருள்.

வருக்கம் 5.

6. மருத்துவரின் றந்தையா முருத்திரனைக்
குறித்துநனி மதுரஞ் சார்ந்து
பெருத்தவற்றி னினியமறை யுரைத்தனமால்;
மரிப்பில்லாப் பெரும்பண் பார்ந்தோய்,
அருத்தியொடு மர்த்தியர்த முண்டியினை
யெமக்களிக்க; அடைந்த வெற்கும்,
உருத்திகழென் புத்திரபௌத் திரர்களுக்குஞ்
சுகமதனை யுவந்தீ வாயே.

(இ - ள்) மருத்துக்கள் நாற்பத்தொன்பதின்மருக்குந் தந்தை யாகிய ருத்திரனைக் குறித்து நல்ல ரஸமிகுந்து சிறந்த மந்திரத்தைக் கூறினேம். மரணதர்ம மற்றவனே! எங்கட்கு மர்த்திய போஜ னத்தை யளிப்பாயாக. எனக்கும், எனது புத்திர பௌத்திரர்களுக் கும் சுகத்தைத் தருவாயாக—(எ - று.) மருத்துக்கள் நாற்பத்

தொன்பதின்மரின் வரலாற்றைப்பற்றிப் பின்வரும் இதிஹாஸத்தை ஸாயணர் எழுதியிருக்கிறார்:—முன் ஒரு காலத்தில் இந்திரன் அசுரர்களை ஜயித்தான். அப்பொழுது அசுரமாதாவாகிய திதி இந்திரனைக் கொல்லும் வலிமை வாய்ந்த புத்திரனைப்பெற வெண்ணித் தபஸினால் புருஷனை யொத்த கருவைத் தரித்தாள். இவ்விருத்தாந்தத்தை யிந்திரன் அறிந்து வச்சிராயுதத்தைக் கையிற்றாங்கி ஸூக்ஷ்ம ரூபத்தோடு அவளுடைய வயிற்றுக்குள் நுழைந்து அந்தக் கருவை ஏழாக வெட்டினான். பின்பு ஒவ்வொரு துண்டையும் எவ்வேழாகக் கண்டித்தான். அந்த 49 துண்டுகளும் கருப்பத்தினின்று நழுவிக் கீழ்விழுந்து அழுதன. அந்த ஸமயத்தில் லீலார்த்தமாகப் போய்க்கொண்டிருந்த பார்வதி பரமேச்வரர்கள் இவர்களைக் கண்டார்கள். மஹேசனைப் பார்த்துப் பார்வதி, 'இந்த மாம்ஸத் துண்டங்கள் தனித்தனிப் பிள்ளைகளாகட்டும். இப்படி நீ செய்தால் எனக்குப் பிரீதியாயிருக்கும்' என்று சொன்னாள். அம் மஹேச்வரனும் அவர்களை ஸமான ரூபம், ஸமான வயது ஸமான அலங்காரத்தோடுகூடிய புத்திரர்களாகச் செய்து கௌரியினிடத்து 'இவர்கள் உன் புத்திரர்களாக விருக்கட்டு' மென்று கொடுத்தான். அவர்களே நாற்பத்தொன்பது மருத்துக்களாம்.

7. மூத்தோனை, யுருத்திரனே வதைக்கற்க ;
இளையோனை முடிவாக் கற்க ;
ஏத்தாரு நடுவயதுக் காளையினைக்
கொல்லல் ;கரு வேய்ந்த மாதை
மாய்த்தொழிக்கல் ; தந்தையினைச் செகுக்கற்க ;
தாயினையும் வாட்டி வீட்டல் ;
சாய்த்து வதை புரியற்க நட்பாரு
மெமதுடலைச் சற்றுந் தானே.

(இ - ள்) ருத்திரனே ! வயது முதிர்ந்தவனையும், வயதிற் சிறியவனையும், மத்திம வயதுள்ளவனையும், கருப்ப ஸ்திரீயையும், தந்தையையும், தாயையும், எமக்குப் பிரியமான எமதுடலையுங் கொல்லாதொழிக—(எ- று.) உக்ஷந்தம், உக்ஷிதம் என்பவற்றுக்கு முறையே வளரும் சிறுவனையும் வளர்ந்த பெரியவனையும் என்று பொருள் கூறுவர் மேனாட்டாசிரியர். ஆனால் ஸாயணர் உரையையே இந் நூலாசிரியர் பின்பற்றியுள்ளார்.

8. புத்திரரை, யவர்தமது தநயர்தமை,
மாந்தரெமைப் பொருந்து வோரை,
நத்துமெம தாக்களினை, யசுவமதை,
நீ சற்று நலிக்கா தேய்க ;

தத்துபுகழ் வீரர்களை யுனக்கெழுந்த
கோபமதிற் சதித்தி டற்க;
கொத்தமரு மவியோடு முருத்திரனே,
யுனையென்றுங் கூவு வோமே.

(இ - ள்) ருத்திரனே! எமது புத்திரர்களையும், பவுத்திரர்களையும், எம்மைச் சார்ந்த மனிதர்களையும், எமது பசுக்களையும், குதிரைகளையும் இம்சிக்காதே. சௌரியம் பொருந்திய வீரர்களை உன்னுடைய கோபத்திற் கொன்றுவிடாதே. அவிகளோடு உன்னை யெப்பொழுதுங் கூப்பிடுவோம்—(எ - று.)

9. மாருதர் தந் தந்தை யுன்பாற் பசுமேய்ப்பான்
மான மறை வகுத்த ளித்தேன்;
ஏருலவுஞ் சுகத்தினை நீ யெமக்கமைக்க;
நன்மதிசா ரெண்ணம் வாய்ந்து
சீருலவு முத்தமமா முன்னரிய
நன்கொடைகள் சிறக்கும்; உன்றன்
கூருதவி தருகவென வெக்காலு
முன்றுணைக்கே கூப்பு வோமே.

(இ - ள்) மருத்துக்களின் தந்தையாகிய ருத்திரனே! பசுமேய்ப்பவன் காலையில் எஜமானனிடத்திலிருந்து பெற்ற மாடுகளைச் சாயந்திரம் ஜாக்கிரதையாக வவனிடத்து மீட்டும் ஒப்புவிப்பது போல, யான் உன்னிடத்திலிருந்து (அல்லது உனது அருளினால்) பெற்ற மந்திரங்களை மீண்டும் உனக்கே ஸமர்ப்பித்தேன். நல்ல ஸுகத்தை யெங்களுக் கமைப்பாயாக. நல்ல புத்தியோடு சிறந்த உத்தமமான உனது சுகக்கொடைகள் சிறந்து நிற்கும். உனது துணைக்காகவே நாங்கள் உன்னை வணங்குவோம்—(எ - று.)

வேறு

10. பகைவரை நலிக்கும் வீர, பசுவினை மாந்தர் தம்மை
மிகைபடக் கொலும் படைகள் மேவுக தூரம்; எங்கட்
ககவுக வன்ற னன்பு மாசியுஞ் சுகமும்; தேவ,
தகவுறு மீரிடத்துத் தஞ்சமுந் தர வெமக்கே.

(இ - ள்) சத்துருக்களை வாட்டும் வீரனாகிய ருத்திரனே! எங்கள் பசுக்களையும், மாந்தரையுங் கொல்லும் ஆயுதங்கள் எங்களை விட்டு வெகுதூரம் செல்லட்டும். உனது அன்பும், ஆசீர்வாதமும், சுகமும் எங்களை யடையட்டும். தேவனே! (வான் பூமி யென்னும்) இரண்டிடங்களிலுமுள்ள உனது புகலிடத்தை எங்கட் களிப்பாயாக—(எ - று.)

11. சேவகன், மருதர் சூழ்ந்த வுருத்திரன் றுணையைச் சேரக்
கூவிளி யுரைத்தோங் கேட்க ; கூர்ந்திடு மெமதிப்போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திரர் வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) மருத்துக்களாகிய தனது புத்திரர்களோடு கூடிய வுருத்திரனது துணையை யாங்கள் விரும்பி யழைத்ததை யவன் கேட்கட்டும். இந்தத் துதியைப் பூமி முதலிய அறுவருங் காக்கட்டும்—(எ - று.)

வருக்கம் 6.

## 115. மண்டலம் 1. அநுவாகம் 16. சூக்தம் 10.

6 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : ஷுடி குத்ஸன். வடமொழிச் சந்தம் : த்ருஷ்டுப். தேவதை : ஸுூர்யன்.

வேறு

1. அக்கினி வருணன் மித்ர னவர்களின் கண்ணுந், தேவர்த்
தொக்க சித்திர வொளியி னுருவமாஞ், சூரன் றோன்றி
யிக்குவலயம் வா னந்தரிட்சமு நிறைந்தா, னோட்ட
மிக்க நல்லுயிர்க்குந் தாவரங்கட்கு மாத்துமாவே.

(இ - ள்) அக்கினி, வருணன், மித்திரன் என்னு மூவர்களின் கண்ணுவானும், தேவர்களது ஆச்சரியமான தேஜஸெல்லாங் கூடிய வுருவமாவானும், ஸ்தாவர ஜங்கம உயிர்களுக்கு ஆத்மா போன்றவனுமான சூரியன் உதித்துப் பூமி, வானம், அந்தரிட்சம் என்னும் இம்மூன்றிடங்களிலும் நிறைந்தான்—(எ - று.) ஓட்டமிக்க நல்லுயி ரென்றது ஜங்கம வுயிர்களை.

2. ஏந்திய வவியோர் பன்னி யிணைந்து மங்கல கன்மத்தை
வாய்ந்த நற்பலனுக்காக வயக்கு மவ்விடத்துச் செல்லுங்
காந்திசா ருஷையாந் தேவிதனைக் கதிரவன், வனப்பிற்
காந்தையிற் காளைசெல்லுங் கணக்கினிற், றொடர்ந்துசெல்வான்.

(இ - ள்) கையில் அவிப்பொருளைத் தாங்கிய யஜமானர்கள் தங்கள் பத்தினிகளோடு நல்லபலன் கிடைக்கும் வண்ணம் அக்கினி ஹோத்திராதி மங்கலகர்மங்களைச் செய்யுமிடங்களை நோக்கிச் செல்லும் ஒளிபொருந்திய உஷஸாகிய தேவியினிடத்து, அழகிய ஸ்திரீயின் பின்செல்லும் காளையைப்போலச் சூரியன் தொடர்ந்து செல்லுவான்—(எ - று.) யுகானி வெகுகாலமாக என்றும், பத்தினியோடு

சேர்ந்து இருவராயென்றும், இரண்டுபொருள் கொள்வதுண்டு. அல்லது கலப்பை முதலிய உபகரணங்களோடு என்று பொருள் படுத்திக் கிருஷியாகிய மங்கலகர்மத்தைப் பலன்பெறச் செய்யும் என்று கொள்வதும் மற்றொரு வகையாம்.

3. சித்திர நீல வன்னஞ் சிறந்தன, வெற்றி யார்ப்பின்
மத்த மோங்குவன, எந்தம் வணக்கமார் துதிசுமக்க
வொத்தன, என்றாழ் மாக்கள் மங்கல முற்று வான்மோட்
டித்தரை யேறி வானம் புவியினை யுடனே சுற்றும்.

(இ - ள்) அழகிய நீலநிறத்திற் சிறந்தவைகளும், ஜயகோஷத்தோடு மதங்கொண்டவையும், எங்களுடைய வணக்கத்தோடு கூடிய ஸ்துதிகளைச் சுமப்பவையுமான சூரியனுடைய உபய குதிரைகளும் மங்கலப்பண்பையடைந்து விண்ணின் உச்சியிலேறி வானம் பூமிகளைச் சுற்றும்—(எ - று.) 'ஏதக்வா, இத்யேத துபய மச்வ நாம' என்றும் ஏதம் ஏதவ்யம் கந்தவ்யம் மார்க்கம் கந்தாரோச்வா : ஏதம் சபல வர்ணம் நீலவர்ணம்வா ப்ராப்நுவந்தோ அச்வா :' என்றும் ஸாயணர் உரை கூறுவர்; அதாவது ஸூர்யனது இரண்டு குதிரைகளென்றும், மார்க்கத்திற் செல்லும் குதிரைகள் அல்லது நீலவர்ணக் குதிரைகளென்றும் பொருள்.

4. சூரியன் கடவுட்பண்பும் மகிமையுஞ் சொல்லற் கீதாம்;
பாரியல் கரும நாப்பட் பாந்த தன்கதிர்ச் சுருட்டும்:
பேரியன் மாவைத் தேரி னின்றவிழ்த் திட்ட பின்னர்
வரிய வியாவின்மீதும் போர்வையை யியைப்பா னல்லே.

(இ - ள்) ஸூர்யனது தெய்வத் தன்மையும் மகிமையும் சொல்லுதற் கித்தன்மையனவாம். உலகத்திற் கருமங்கள், நடந்து கொண்டிருக்கும் போதே மத்தியில் தனது கதிர்களை அச்சூரியன் சுருட்டிக்கொள்ளுவான். அவன் தனது குதிரைகளினைத் தேரினின்று மவிழ்த்து விட்டவுடனே, இரவு எல்லாவற்றின் மீதும் தனது இருட்டாகிய போர்வையைப் போட்டுவிடும்—(எ - று.) யா, எல்லாம். ஈதாம் எண் வழுவமைதி.

5. வானத்தின் மடியிற் சூரன் மித்திரா வருணர் பார்க்குந்
தானத்திற் றன்னுருவைத் தயக்குவான்; அவன்றன் பாய்மா
மானத்தி, னந்தமெய்தா வவன்வலி சுமந்து, சோதி
தாவெனக்க வோர்கால், மற்றோர்சமயங் காரியையத், தாங்கும்.

(இ - ள்) வானத்தின் சமீபத்திலும், மித்திராவருணர்கள் பார்க்கு மிடத்திலும், சூரியன் றனது ரூபத்தை அல்லது எல்லா

வற்றையும் விளக்கும் சோதியைப் பிரகாசிக்கச் செய்வான். பெருமையோடு ஸநாதனமான வவனது வலிமையைத் தாங்கிப் பகலாகிய சமயத்தில் அச்சூரியனது சோதிதோன்றும் வண்ணமும், இரவாகிய மற்றொரு சமயத்து இருளானது பொருந்தும் வண்ணமும் அச்சூரியனை அவனது குதிரைகள் சுமந்து செல்லுகின்றன—(எ - று.) என்ன சொல்வது அவன் மஹிமையை யென்று சூரியனைத் துதித்த படி யென்பார் ஸாயணர்.

6. தேவர்கா ளின்று சூர னுதிக்கு மக்காலேச் சேர்ந்த
பாவமும் பழிப்பு நீக்கிப் பரித்திடீர் ; எமதிப் போற்றைத்
தாவரு புவியும் வானுஞ் சிந்துவு மதிதி தானு
மேவு மித்திரர் வருணர் தம்மொடு விழைந்து காக்க.

(இ - ள்) தேவர்களே ! (அல்லது ஸாயணருரைப்படி பிரகாசம் பொருந்திய சூரியகிரணங்களே !) இன்றைக்கு ஸூர்யனுதிக்கும் வேளையில் எங்களைச் சேர்ந்த பாவம் பழிப்புக்களை நீக்கி யெங்களைப் பரிபாலிப்பீர்களாக. எங்களுடைய இத்துதியைப் பூமி முதலிய அறுவர்களுங் காக்கட்டும்—(எ - று.) சூரியனைக் காண்பது பிரஹ்மஹத்தி யாதி பாபங்களையும் போக்கும் என்பது சுருதி நம்பிக்கை.

வருக்கம் 7.

## 116. மண்டலம் 1. அநுவாகம் 17 சூக்தம் 1.

25 இருக்குக்கள் கொண்டது

ரிஷி: கக்ஷிவான். வடமொழிச்சந்தம்: த்ருஷ்டுப். தேவதை: அசுவினிகள்.

1. விமதன்றன் மனைத்தக்காளை மேவலர்க் கரிய தேரிற்
சுமந்து வந் தளித்த நாஸத்தியர்ப் பொருட் டென் றோமத்தை,
யமைதரு தருப்பைபோல வொழுங்குற வமைத்தப் போற்றைச்
சமிரண னடித்த மேகச் சாயலி னனுப்பு வேனே.

(இ - ள்) சத்துருக்களால் அடையமுடியாத தேரில் விமதன்றன் பார்யையைத் தூக்கிக்கொண்டுவந்தளித்த நாஸத்தியர்களுக்காக (அசுவினிகளுக்காக,) தருப்பையை நறுக்கி யொழுங்காக வைப்பது போல, ஸ்தோமத்தை யேற்படுத்தி, அந்த ஸ்தோமத்தை வாயுவானது மழை தாங்கிய மேகத்தை அங்குமிங்கு மனுப்புவதுபோல அனுப்புவேன்—(எ - று.) சமிரணன் = ஸமீரணன் என்பது இடைகுறுகிற்று. வாயுவென்றபடி. நா அஸத்தியா, பொய் புகலாதவர், அசுவினிகளின் பெயர். அமைத்து அப்போற்றை எனப் பிரிக்க.

2. வலிச் சிறைக் கதி விரைந்த வாகனங் கொண்டோ, தேவர்
கெலிப்புறத் தூண்டியோ, உம் அத்திரி யமன் கிளர்த்தும்
மலைப்புறு போரி னூற்றுப் பதின்மரைப் பந்தயத்தில்
நலித்தது; வெற்றி, நாஸத்தியவர்காள், நண்ணிற் றுலோ.

(இ - ள்) நாஸத்தியர்களே! (அசுவினிகளே!) பலமும், வேகமாகச் செல்லுஞ் சிறகுங் கொண்ட வாகனங்களின் உதவியினாலோ, (இந்திராதி) தேவர்கள் வெற்றிக் கொள்ளத் தூண்டியதனாலோ, உமது கழுதை, பிரஜாபதியாகிய யமன் கிளப்பிவிட்ட யுத்தத்தில் ஆயிரம்பேரையும் ஜயித்துப் பந்தயத்தில் வெற்றி யடைந்தது—(எ - று.) இப்பந்தயத்தைப்பற்றி மண். 1. சூக். 34. ரிக் 5-ல் விஸ்தாரமாகக் கூறியிருப்பதைக் காண்க. அத்திரி, கழுதை.

3. துக்கிரன் புஜியன் றன்னைத், தொக்கதன் றனத்தை நீத்துத்
துக்கமோ டிறந்த லோபி துணைப்ப, முந்நீரின் விட்டான்,
அக்கண மவனை யுந்த மருங்கலத், தசுவினீர்காள்,
எக்குவித் துதகத் தும்பர் விசும்பினூ டெடுத்துச் சென்றீர்.

(இ - ள்) ஈண்டு ஒரு இதிஹாஸம் உண்டு. (துக்கிரன் என்று ஒரு ராஜரிஷி அச்வினிகளுக்குப் பிரியமானவனாயிருந்தான். அவன் தீபாந்தரத்திலிருந்த சத்துருக்கள் தனக்கு வெகு தொந்தரவளித்துக் கொண்டிருந்தவர்களை ஜயிக்குமாறு தன் புத்திரனாகிய புஜ்யனைச் சேனையோடும் கப்பலி லனுப்பினான். அக்கப்பல் சமுத்திரத்தில் வெகுதூரஞ் சென்ற பிறகு காற்றாலடிக்கப்பட்டு உடைந்துபோயிற்று. அப்பொழுது அந்த புஜ்யன் சீக்கிரமாக அசுவினிகளை ஸந்தோஷப் படுத்தித் துதித்தான். அவ்வசுவினிகள் அப்புஜ்யனை யவனது சேனையோடு தமது கப்பலிலேற்றிக் கொண்டு மூன்று நாள் பகலும் இரவும் பிரயாணஞ் செய்து, அவனது தந்தையாகிய துக்கிரனிடத்துக் கொண்டுபோய் விட்டார்கள் என்பது. இப்பொருள் இதுமுதல் மூன்று கவிகளாற் சொல்லப்படுகிறது.) தனது செல்வத்தை விட்டுத் துக்கத்தோடு இறக்கும் லோபியைப்போலத் துக்கிரன் தன் மகன் புஜ்யனைச் சமுத்திரத்தின்மே லனுப்பினான். அசுவினிகளே! அப்பொழுது அப்புஜ்யனை யுங்களுடைய கப்பலில் ஏற்றிக்கொண்டு தண்ணீருக்குமேல் அந்தரமார்க்கத்திற் றூக்கிச் சென்றீர்கள்—(எ - று.) அசுவினிகளது கப்பல்கள் தண்ணீருக்குமேல் அத்தண்ணீரில் நனையாமற் சென்றன என்று கூறப்படுகிறது. அவற்றிற்குச் சிறகிருந்ததாகவுந் தெரிகிறது. எக்குவித்தல், ஏற்றுவித்தல்.

4. மூன்றிராப் பகல்கண்மூன்று முடுகிய பதங்கங்கண் மேற்
றோன்றி, மெய்யுரைப்பீர், புஜ்யற்றூக்கித் தண்ணீர்க் கரைக்க

ஞன்ற வாரிதி தீரத்தே யணைத்துத் தேருருள்க ணூறு
சான்ற முத்தேரி ஞறு சடில மேய்ந்தவிற் றந்தீரே.

(இ - ள்) நாஸத்தியர்களே! மூன்று இரவுகளும் பகல்களுமாகச் சிறகோடு கூடிய நாவாய்களிற் பிரயாணஞ் செய்து, புஜ்யனைத் தூக்கி நூறு சக்கரங்களும் ஆறு குதிரைகளுங் கட்டிய மூன்று தேர்களிற் சுமந்து கொண்டுவந்து நீர்க்கரையாகிய சமுத்திரதீரத்தில் விடுத்தீர்கள்—(எ - று) ஏய்ந்தவில், ஏய்ந்தவற்றில். சாரியையின்றி விகுதி புணர்ந்தது. ஆறு சடிலம், ஆறு குதிரைகள்.

5. நிலையின்றிப் பற்றுமின்றி யாதாரவின்றி நின்ற
சலநிதி மீது வீர பராக்கிரமங் தயங்க
நிலவிய நூறு கோலா னெட்டிய நாவாயேற்றி
யிலமருவிட விடுத்தீர் புஜியனை யசுவினீரே.

(இ - ள்) அசுவினிகளே! நிலையற்று ஆழமாய்ப் பற்றிக்கொள்வதற்குச் சாகைகளொன்று மில்லாமல் ஆதாரவு மில்லாமலிருந்த சமுத்திரத்தில் உமது வீரபராக்கிரமமானது விளங்க, நூறுகோலாற் றள்ளப்பட்ட கப்பலில் புஜ்யனை யேற்றி அவனது வீடு சேரும்படி செய்தீர்கள்—(எ - று.) (Wilson) வில்ஸன் என்பவர், 'இக்கவிகளில் சொல்லப்படும் சமுத்திர யாத்திரை அவ்வளவு துல்லியமாக விவரிக்கப்படவில்லை' யென்பார். மேல் மண். 1 சூக். 119 ரிக் 4 பார்க்க.

வருக்கம் 8.

6. கொல்லுறுப் பரியோன் பேதுகொள்கெனக் கொடுத்த வெண்மா
மல்லுற வெற்றி யென்றும் வயக்கிய(து); உங்கள் வண்மை
சொல்லுறு மகிமைத் தாமால்; அசுவினீர், பேது தோய்ந்த
வெல்லுறும் வேக மாவு மெங்களால் விளிக்கற் பாற்றே.

(இ - ள்) அசுவினிகளே! கொல்லமுடியாத குதிரையோடு கூடிய (அகாச்வனுகிய) பேதுவென்னும் ராஜரிஷி பெறும்வண்ணம் நீங்கள் கொடுத்த வெள்ளைக்குதிரை எப்பொழுதும் ஜயத்தையே புரிந்தது. உங்களுடைய அந்தக்கொடை கீர்த்தி பொருந்தியதும் பெருமை வாய்ந்ததுமாம். பேதுவடைந்த அந்த வேகமார்ந்த வெற்றிக் குதிரையும் எங்களாற் போற்றத்தகுந்தது—(எ - று.) 'பேது வென்ற ஒரு ராஜரிஷி அசுவினிகளை ஸந்தோஷப்படுத்தினன். அதிற் றிருப்தியடைந்து அவர்கள் அவனுக்கு ஒரு வெள்ளைக்குதிரையை யளித்தார்கள். அக்குதிரையும் மிகுந்த வெற்றியை யவனுக்களித்தது.' என்பது இதிஹாஸம். அகாச்வனென்பதற்குத் துஷ்டக்குதிரையோடு கூடியவனென்பது பொருளென்பார் மேனாட்டாசிரியர்.

7. வீரர்காள்! கட்சீவானன் பச்சிரன் மகனுக்காகப்
பேரிய லறிவை யீந்தீர் பெரிதவன் றுதிக்கு மெச்சி;
ஆருநற் சுராவை நூறு கும்பத்தி னமைத்தீர், உந்தஞ்
சீரிய மாக்குரத்தைச் செப்பு நெய்யரி யேய்வித்தே.

(இ - ள்) வீரர்களாகிய அசுவினிகளே! பஜ்ர கோத்திரத்து (அங்கிரஸ கோத்திரத்து) வந்தவனை கக்ஷீவானுக்காகப் பேரறிவை யளித்தீர்கள். அவனுடைய ஸ்தோத்திரத்துக்கு உவந்து, உமது குதிரையின் காற்குளம்புகளிலிருந்து, ஸோமம்பிழியுங் கம்பலத்தின் வழியாக ஸோமத்தை யூற்றுவதுபோல, ஸோமத்தை யூற்றி நூறு (பல) குடங்களை (உமது யாகத்தின் பொருட்டு ஸௌத்ராமணி யென் னுங் கர்மஞ் செய்பவர்களுக்காக) நிரப்பினீர்கள்—(எ - று.) பஜ்ரன் ஆங்கிரஸ கோத்திரத்தவன். ஒரு காலத்துக் கட்சீவான் அறிவு மழுங் கிக் கிடந்தபோது அசுவினிகளை வேண்ட அவர்கள் ஸந்தோஷப்பட்டு அவனுக்குச் சிறந்த ஞானத்தை யளித்தார்களென்பது இதிஹாஸம். கட்சீவானைப்பற்றி மண். 1 சூக். 51 ரிக். 13 பார்க்க. காற்குளம்பி லிருந்து ஸோமம் வழிந்தது, ஸோமம் பிழியுங்கம்பலத்தினின்று வடி வது போலிருந்தது எனக்கொள்க. இது லுப் தோபமா(குறையுவமை.) தமிழ் ரிக்கிற் றேரெலென்னுது நெய்யரி யென்றூர் தற்காலம் கள் வடிப்ப வர்கள் அதனை யுபயோகிப்பது பற்றி.

8. கொழுந்துவிட் டெரியுந் தீயின் கொதிப்பினை யிமத்தா லாற்றி
வழங்கினீர் வளஞ்செறிந்து கொழுவிய வுண்டி தன்னை;
அழுங்கியே பொறியிற் பட்ட வத்திரிதனைச் சுகத்துச்
செழுங்குடிக் கணங்களோடு, மசுவினீர், சேர்த்தீ ரன்றே.

(இ - ள்) அத்திரி யகப்பட்டுக்கொண்டிருந்த பொறியிற் கொழுந்துவிட்டெரியும் அக்கினியின் சூட்டை இமத்தால் (உதகத் தால் அல்லது மழைநீராலென்பார் ஸாயணர்.) மாற்றி அவனுக்கு ஸார புஷ்டியோடு கூடிய ஆகாரத்தை யளித்தீர்கள். அசுவினிகளே! மன வருத்தத்தோடு அசுரரது யந்திரத்தில் அகப்பட்டுக்கொண்ட அத்ரி ரிஷியை, அவனது குடும்பத்தாரோடு (அல்லது இந்திரிய ஸமூகங் களோ டென்பார் சாயணர்) காப்பாற்றிச் சுகத்திலிருத்தினீர்கள்— (எ - று.) அத்திரி ரிஷியை யொருகாலத்து நூறு வாயில்களுள்ள ஒரு பீடாயந்திரக்கிருஹத்தில் அசுரர்கள் அடைத்துத் துஷாக்கினி யால் வருத்தினூர்கள். அப்பொழுது அவ்விருடியினுற் றுதிக்கப்பெற்ற அசுவினிகள் அந்நெருப்பைத் தண்ணீரினுலாற்றி அப்பொறிக்கண் கலங்காத இந்திரியவர்க்கங்களோ டிருக்கும்படி செய்தார்கள்.' என் பது இதிஹாஸம். பீடாயந்திரக்கிரஹம் என்றது தீப்பொறியை. துஷாக்கினி யென்பதற்கு இரண்டு பொருளுண்டு. உமியிற் பற்ற

வைத்த நெருப்பு என்பது ஒன்று. முற்காலத்தில் ஒரு மனிதன்மேல் வைக்கோற் புரிகளைச் சுற்றி நெருப்பு வைக்கும் ஒரு வழக்கம் உண்டு. அதுவும் துஷாக்கினியேயாம். இவற்றில் எவ்வகையேனுங் கொள்க.

9. அடிப்புறந் தலை மேலாகத் தலைப்புறங் கிழக்கு நோக்கப்
பிடித்தனிர் கூபம்; நாஸத்தியர்களே, கோதமன்றன்
குடிச்சனந் தாகந் தீரக் குடிநைக டாகத்தோடு
மடுத்தன வோட்டஞ் சார்ந்த வாயிரந் தனங்களோடே.

(இ - ள்) நாஸத்தியர்களே! அடிப்புறம் மேலாகவும், மேற்புறம் கீழாகவும் ஒரு கூபத்தைக் (கோதமனுக்காகத்) தூக்கிப் பிடித்தீர்கள். கோதம வம்சத்தவர்கள் தாகந் தீரும் வண்ணம், ஆயிர வகையான செல்வங்களோடும் அக்கூபத்தினின்று நீரோட்டங்கள் பெருக்கெடுத்து ஓடின—(எ - று.) அக்கூபம் மழை முகிலாக விருக்குமென்பார் மேனாட்டாசிரியர். தண்ணீரில்லாத ஒரு பாலைப் பிரதேசத்தில் கோதமரிஷி திரிந்தபோது அவ்விருடிக்காக வேறிடத்தில் ஓடிக்கொண்டிருந்த ஒரு கூபத்தைப் பேர்த்து அவரிருக்குமிடத்து வரும்படி செய்தார்கள். அக்கூபம் அவரது ஸ்நானபானாதிகளுக்கு உபயோகமாகும்படி அதனைத் தலைகீழாக நிறுத்தினார்கள். மண். 1 சூக். 85 ரிக். 11-ல் இச்செய்கை மருத்துக்கள் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

10. மெய்யுரைத் தற்புதத்தை யாற்றுவீர்! வயதின் மேம்பட்
டெய்யுறு சிவனன் றேகப் போர்வையைக் கவச மேய்ப்ப
அய்யென வுரித்தீர், மக்கள் யாவரு நிராகரித்தும்
மெய் யிளமையினைமீட்டுக் கன்னியர் பதியாச் செய்தீர்.

(இ - ள்) நாஸத்தியர்களே! தஸ்ராக்களே! வயது முதிர்ந்து சரையையுற் றிளைக்குஞ் சியவனன் என்னும் ரிஷியின் தேகப் போர்வையை, கவசத்தை வீரர் கழற்றுவதுபோல, கழற்றுவித்து அவனுடைய புத்திரர் முதலியோர் அவனைத் தள்ளிவிட்ட காலத்தும் அவனுக்கு மீண்டும் யௌவனத்தை யளித்துக் கன்னியர்களின் பதியாகச் செய்தீர்கள்—(எ - று.) தஸ்ராவென்பதற்கு அற்புதமாற்றுவீர் என்பார் மேனாட்டாசிரியர். ஆனால் பார்க்க அழகாக விருப்பவர்களே யென்பார் ஸாயணர். பூர்வம் ச்யவனன் என்னும் ரிஷி நரை திரை மூப்பினால் தேகம் மலினப்பட்டுப் புத்திரர் முதலியோரால் றள்ளப்பட்டு அசுவினிகளைத் துதித்தான். அவ்வசுவினிகள் அவனது சரைத்தன்மையை நீக்கி அவனுக்கு மீண்டும் யௌவனத்தை யளித்தார்கள் என்பது இதிஹாஸம். தற்காலத்தும் ஊசி குத்தி டாக்டர்கள் சட்டை யுரிப்பதுபோலத் தோலுரிப்பது கண்கூடு. ஐ, அய்போலி,

11. வந்தநன் றுன்ப மோர்ந்து, புதையலை மானக் கூபத்
தந்தினின் றவனைத் தூக்கி யுதவிய ஞான்(று)உம் செய்கை
வந்தனைப் புகழ்ச் சிறப்பிற், றுற்ற நன்மதியின் ஞானம்
முந்துற்றீர் நார்கா ளுண்மை மொழியுறு மசுவினீரே.

(இ - ள்) வித்வாம்ஸர்களே! நரர்களே! (ஆரோக்கியத்தின் நேதாக்களே!) நாஸத்தியர்களே! அசுவினிகளே! வந்தநன் என்னும் ரிஷியின் றுன்பத்தினைக் கண்டு அவனைக் கிணற்றினின்றும் புதையலை யெடுப்பதுபோ லெடுத்துவிட்ட உமது செய்கை வந்திக்கவும் புகழவும் தகுந்த சிரேஷ்டத்தோடு கூடியதாம்—(எ - று.) வந்தனன். மண். 1 சூக். 112 ரிக். 5-ல் நோக்குக. உற்றமதியென்க.

12. பரிச்சிரங் கொண்டதர்வன் புத்திரன் தத்தி யச்சன்
உரித்தெனை மதுவின் வித்தை யுரைத்தபோ தவன் சிரத்தைப்
பொருத்திய வுமது வீரச் செய்கையை, நரர்காள், மேகம்
வருத்திய மழையிடியின் வழங்குவேன் றனங் கொள்பாக்கே.

(இ - ள்) நரர்களே! (அசுவினிகளே!) அதர்வணன் புத்திரனாகிய தத்தியச்சன் (ததீசி) குதிரைத்தலையைக் கொண்டு மதுவித்தையைச் சொன்னபோது கேட்டு மீண்டும் அவனது சிரத்தைப் பொருத்திய உம்முடைய வீரச் செய்கையை, மேகம் மழைக்கு முன் வரவிடும் இடியைப் போலத் தனலாபார்த்தம் சொல்லுவேன்—(எ - று.) தத்தியச்சனைப் பற்றி மண். 1 சூக். 84 ரிக். 13-ற் பார்க்க. அதனோடு பின் வருவதையும் கூட்டுக. 'இந்திரன் ததீசிக்கு மதுவித்தை ப்ரவர்க்க வித்தை யென்னும் இரண்டையும் உபதேசித்து இவற்றைப் பிறருக்குச் சொன்னால் சிரச்சேதம் செய்து விடுவதாகச் சொன்னான். பிற்பாடு அசுவினிகள் ஒரு குதிரையின் தலையை வெட்டி, அவனது தலையையும் வெட்டிப் பத்திரப்படுத்தி, யவனது உடற்குறையில் குதிரைத் தலையை வைத்தார்கள். அத்தலையின் உதவியைக் கொண்டு ததீசி அவ்வித்தைகளின் மந்திரங்களையும் ப்ராஹ்மணங்களையும் சொல்ல அசுவினிகள் பெற்றார்கள். உடனே இந்திரன் தெரிந்து அக் குதிரைத் தலையை வெட்டினான். அசுவினிகள் உடனே, ஏற்கனவே பாதுகாத்து வைத்திருந்த அவனது சொந்தத் தலையை மறுபடியும் ஒட்ட வைத்தார்கள்.' என்று சாட்யாயின வாஜஸநேயிகளிற் சொல்லப்படுகிறது.

13. மெய் யுரைப்பவர்காள், கைகள்மிகுந்துளீர், உம்பாற்பத்தி
செய்யும் வத்திரிமதியுஞ் சிறந்த பேர் மகத்துப் பல்கா
லெய்யுறூ தழைத்த காலை யவள்குறைக் கிரங்கிப் பொன்னார்
கய்யனை யளித்தீர், ஆணைகதழ்வுற, அசுவினீரே.

(இ - ள்) நாஸத்தியர்களே! வெகு புஜத்தோடு கூடியவர்களே! அசுவினிகளே! உம்மிடத்துப் பக்திபண்ணிய வத்திரிமதியென்னும் ஒரு ராஜரிஷியின் புத்திரி, யக்ஞத்தினிடத்துப் பலதரம் உம்மை யழைத்தபோது, குருவினுடைய வசனத்தைச் சீடன்ஏகாக்ரசித்தத்தோடு கேட்பதுபோலக் கேட்டு அவளுடைய குறைவுக்கிரங்கி, அவளுக்கு ஹிரண்யஹஸ்தன் என்னும் புத்திரனைத்தந்தீர்கள்—(எ - று.) 'நிஸர்க்க ஷண்டோ வத்திரிச்ச' என்பது நிகண்டு. வத்திரிமதி, ஷண்டனைப் புருஷனாக வுடையவள். பொன்னார் கையன், ஹிரண்யஹஸ்தன், புத்திரனுடைய நாமம். வத்திரிமதியின் பர்த்தா நபும்ஸகனென்றும், அதனாற் புத்திரனுக்காக அவள் அசுவினிகளை வேண்டினாளென்றும், அவளது வேண்டுகோளைக் கேட்டு அவளுக்கு ஹிரண்யஹஸ்தன் என்னும் புத்திரனை யருளினார்கள் என்றும் அறிக. கய்,கை.

14. பல்கர முடையீர், மெய்ம்மை பகருவீர், நரர்காள், கோநாய்
மெல்லு மூர்க்குருவி தன்னை விடுவித்தீர்; கவி களிக்கச்
செல்லலை நீக்கிப் பூன்ற பார்வை சேர்ந்திடு மவ்வண்ணம்
மல்லலி னவற்களித்தீர் வழங்கு தண்ணளி மிகுந்தே.

(இ - ள்) பலபுஜங்களோடு கூடியவர்களே! (பலரைப்பரிபாலிப்பவர்களே யென்றும் பொருள் கூறுவர் ஸாயணர்.) நாஸத்தியர்களே! நரர்களே! காட்டு நாய் வாயிலிருந்து ஊர்க்குருவியை விடுவித்தீர்கள். (ரிஜிராசுவனாகிய) கவி (ரிஷி) களிக்குமாறு அவன் மாட்டுக் கிருபைகூர்ந்து அவனுக்குப் பூரணமான பார்வையை யளித்தீர்கள்—(எ- று.) கவி, ரிஷி. இக்கவி ரிஜ்ராச்வன் என்று மேல் மண். 1 சூக். 112 ரிக் 8-ற் கூறப்பட்டது. இவன் வ்ருஷாகிரன் புத்திரன். இச் சூத்தம் 16-வது செய்யுளிலும் இவன் பெயர் வருகிறது. யாஸ்கர் 'மீண்டும் மீண்டும் வரும் ஒவ்வொரு நாளும் நடக்கின்றன வென்பார். உஷஸைச் சூரியன் வாயினின்று மீட்பீரென்று பொருள் கொள்ளுவார். மண். 1 சூக். 112 ரிக் 8 நோக்குக.

15. மறமுறு கேலன் போரில் மாற்றலர்ச் செகுத்துக், காணப்
பறவையின் சிறகு போலப், பறித்த விச்சுபலை காற்குத்
திறமொடும் அயக்கால் சேர்த்துத் திரப்படுத்தினிர் நிசிக்கண்
மறுதின நடக்கு ஞாட்பின் மகிழ்வொடு நடைகொண்மாவே.

(இ - ள்) கேலனுடைய யுத்தத்திற் சத்துருக்கள் பட்சியின் சிறகை வெட்டியதுபோல வெட்டியெறிந்த விச்பலையின் காலுக்கு இரும்பாலான கணைக்காலைச் சேர்த்து மறுநாள் நடக்கும் போரில் அவள் நடக்கும் வண்ணம் செய்தீர்கள்—(எ - று.) விசுபலை, விச்சு

பலே இரண்டும் விச்பலேயைக் குறிக்கும். இவள் சரிதத்தை மண். 1 சூக். 112 ரிக் 10-ல் நோக்குக.

வருக்கம் 10.

16. காட்டுப் பெண்ணுய்க்கு வேண்டிக் களிப்புட னூறு மேட
மூட்டிய விரிஜிராச்வ னெளியினைப் பிதா கெடுத்தான் ;
ஈட்டுநல் லற்புதத்தீர், மெய்ம்மையீர், வைத்தியர்காள்,
பூட்டினீ ரவற்குப் பார்வை பூரண விழி தந்தீரே.

(இ - ள்) காட்டுப் பெண்ணுய்க்கு நூறு ஆடுகள் பசிக்களித்த ரிஜ்ராச்வனுடைய பிதா அவனது கண்ணைக் கெடுத்தான். தஸ்ராக்களே! (அற்புதச்செய்கை செய்பவர்களே!) நாஸத்தியர்களே! (தேவ) வைத்தியர்களே! அவ் விரிஜ்ராச்வனுக்குப் பார்வையை யளித்தீர்கள்—(எ - று.) இச்சம்பவத்தை மண். 1 சூக். 112 ரிக் 8-ல் நோக்குக. அக் காட்டு நாய் வேஷம் போட்டு வந்தது அசுவினியரின் வாஹனமாகிய கழுதை யென்ப. இரிஜிராசுவன், இரிஜிராச்வன் எல்லாம் ஒரு பெயரையே சுட்டும். 101 ஆடுகொடுத்ததாகவும் அந்நூற்றொன்றுவது ஆடு ரிஜிராசுவனே யென்றும் ஒரு இதிஹாஸமுண்டு. அசுவினிகள் தேவ வைத்தியர்களென்பது தைத்திரிய ஸம்ஹிதை.

17. இலக்கினை யுணர்ந்து முன்ன ரேகுறும் பரிகளோடு
நலக்க முன்னுற்ற வுந்தேர் நாடிச் சூரியன் புதல்வி
கலக்கமில் மனத்திற் சார்ந்தாள் ; கண்டவர் தேவர் யாரும்
விலக்கல ரொப்ப, நாஸத்தியவர்காள், திருவேய்ந்தீரே.

(இ - ள்) போய்ச்சேர வேண்டிய விடத்தை யுணர்ந்து எல்லாவற்றிற்கும் முன்பாகச் செல்லும் குதிரைகளோடு எல்லாத்தேவர்களுக்கும் முன்னர் வந்த உமது தேரில் சூரியன் புதல்வி யேறிக்கொண்டாள். இதைக் கண்டு மற்றெல்லாத் தேவர்களும் ஒத்துக்கொள்ள, நீங்கள் (ஆயிரம் இருக்குக்கள் பாடுவதனுற் கிடைக்கும் லாபமாகிய) ஸம்பத்தினை அல்லது (ஸூர்யையாகிய) காந்தையைப் பெற்றீர்கள்—(எ - று.) இச்சரிதத்தைமேல் 2-ம் இருக்கிலும் மண். 1 சூக். 34 ரிக் 5-லும் பார்க்க.

18. அசுவினீர் நீர் பரத்து வாசனுந் தேத்தக் கேட்டுக்
கசிவொடு திவோதாசன்கட் கடுக, வன்னுன் மனைக்கட்
பிசி நிறைந் துமது தேரும் பிறங்கிற்றால்; அத்தேர் முன்னர்
நசையி னே ரிடபஞ் சிம்சு மாரமு நாட்டி னீரே.

(இ - ள்) அசுவினிகளே! திவோதாஸனுடைய குல குருவாகிய பாரத்துவாஜன் ஸ்தோத்திரஞ் செய்ய, அத் திவோதாஸனது வீட்டுக்கு வந்தபோது உமது தேர் உணவு முதலிய அரும்பொருள்களால் நிறைந்திருந்தது. அத்தேரின் முன் (உமது ஸாமர்த்தியத்தைக் காட்ட ஒன்றுக்கொன்று விரோதமான) காளையையும் சிம்சுமாரம் என்னும் பிராணியையும் பூட்டியிருந்தீர்கள்—(எ - று.) திவோதாஸன், இவனுக்கு அதிதிக்வன் என்று மற்றொரு பெயருண்டு. மண். 1 சூக். 51 ரிக் 6 நோக்குக. இவன் பெயர் மண். 1 சூக். 112 ரிக் 14-லும் வந்துளது. சிம்சுமாரம் என்றது கடற் பன்றி யென்பார் மேனாட்டாசிரியர். நீர் யானையாக விருத்தலும் கூடும். பிசி, அரும்பொருள்.

19. வலிசெறி தனமும் வீரம் வயங்கிய மக்கள் கூடிப்
பொலிதரு மாயுளும், பொய் புகன் றறியாதீர், தாங்கி
யலர்தரு முள்ளத் தோடு மவிப் பொருளோடுஞ் சன்னு
நிலைதரு மக்கள் மும்மைச் சவனமு முளோர்ச் சார்ந்தீரே.

(இ - ள்) நாஸத்தியர்களே! வலிமை பொருந்திய செல்வத்தோடும், வீரம் வாய்ந்த புத்திரர்களோடு விளங்கும் ஆயுளோடும் (அல்லது ஸாயணருரைப்படி யன்னத்தோடும்) உள்ள வோகையில் அவிப்பொருள்களைத் தாங்கி மூன்று ஸவனமுஞ் செய்யும் ஜஹ்நு மஹா ரிஷியின் புத்திரர்களை யடைந்தீர்கள்—(எ - று.) ஸவனம், யக்ஞம். ஈண்டு மும்மை, காலை, மாலை, உச்சிச்சவனங்களைக் குறித்தது.

20. பகைவர்சூழ் சாகுடன்றா னின்பமா யேகு மாற்றிற்
சுகமுற நிசியிற் றாக்கிப், பொய்யினைச் சொல்லீர், மூப்புத்
தகையுறீர், அரியைத் தாக்குந் தேரினிற் சார்த்தி, மாற்றார்
வகையுற வேறு வெற்பைத் தாண்டினீர் மதிக்க நீரே.

(இ - ள்) நாஸத்தியர்களே! முதுமையுறாதவர்களே! எல்லாப் பக்கத்திலும் பகைவரால் சூழப்பட்ட ஜாஹுஷன் என்னு மரசன் கஷ்டமில்லாமற் செல்லும் பாதைகளிற் சுகமாக விருட்டிற் செல்லும் வண்ணம் அவனை நடத்திச் சத்துருக்களைப் பேதிக்கும் உங்கள் தேரிலேற்றிப் பகைவர்களால் ஏறமுடியாத மலையைத் தாண்டினீர்கள்—(எ - று.) சாகுடன், ஜாஹுஷன், அரி, சத்துரு.

வருக்கம் 11.

21. ஆயிரந் தனமிங் கோர்நாள் வசமெனன் பா, னசுவினீர்காள்,
ஏயுறக் காத்தீர்; இச்சை யியைக்குவீர், வேந்த னோடே
யாயிடைச் சேர்ந்து, துன்ப மார் பிருதுச் சிரவன்
ஏயலர் தம்மை யோட்டி யெடுத்தனி ரவனை மாதோ.

(இ - ள்) அசுவினிகளே! ஆயிரக்கணக்கான செல்வத்தை ஒரு நாள் (அசுவன் மகனாகிய) வசன் என்பவன் பெறும் வண்ணம் அவனை யுத்தத்திற் காத்தீர்கள். இச்சையை யளிப்பவர்களே! இந்திரனோடு சேர்ந்து, கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த (கானீதன் மகனாகிய) ப்ருது ச்ரவன் என்னும் அரசனுடைய பகைவரைக் கெடுத்து அவன் கீர்த்தியைப் பரவச்செய்தீர்கள்—(எ - று.) ப்ருதுச்ரவன் கானீதன் மகனென்றும் அவனது குலகுரு வசனென்றும் மேல் மண். 1 சூக். 112 ரிக் 10-ல் சொன்னார்.

22. சர னிரிசற்கன் றோன்றல் தாகந் தீர்வுற அருந்த
வரமுறு நீரை மேக்கு வயக்கினீ ராழ்ங் கிணற்றில்;
உரமொடுஞ் சயுக் களைப்பை யோட்டுவா, னுண்மை பேசும்
பெருமையீர், மலட்டா தன்னைப் பாலுறப் பிறக்கி னீரே.

(இ - ள்) (Richatka) (ரிச்) சத்கன் புத்திரனாகிய சரனுடைய தாகமானது தீரும் வண்ணம் அவன் குடிக்கும்படியான நல்ல நீரை யாழமாகிய கிணற்றிற்கு மேல்வரச் செய்தீர். நாஸத்தியர்களே! சயு வென்னும் ரிஷியின் களைப்புத்தீர, உமது சக்தியினால் அவனது மலட்டுப் பசுவைப் பால் கறக்கும் வண்ணஞ் செய்தீர்கள்—(எ - று.) ஆர்ச்சத்கன் என்று மூலத்திலுள்ளது. ரிச்சத்கன் மகன் என்பது பொருள். அவன் பெயர் சரன் என்பதாம். சயு மண். 1 சூக். 112 ரிக் 10 நோக்குக.

23. நேரியோன், கண்ணன் றோன்றல் விசுவகன் உந்துணைக்கா
வரியன் றேத்து வோன்ற னெழில்பெறு சுதன்விண்ணுபு
கூரிய நோக்கிற் றோன்றக் கொடுத்தனிர், மெய்யுரைப்பீர்,
தாரினிற் கெட்ட காலி சார்த்தலி, னுமது மொய்ம்பின்.

(இ - ள்) நாஸத்தியர்களே! கிருஷ்ணனுடைய புத்திரனும், நேர்மை வாய்ந்தவனுமான விச்வகன் என்னும் ரிஷி உமது துணையை விரும்பி யேத்தினபோது, கெட்டமாட்டைத் திருப்பிக் கொண்டுவந்து காட்டுவதுபோல, உமது சக்தியினால் அவனுடைய புத்திரனாகிய விஷ்ணாபு வென்பவனை அவனுக்கு முன் கொண்டுவந்து காட்டியருளினீர்கள்—(எ - று.)

24. கட்டுப்பட் டாழ்ந்து காயப்பட்டு வெம்மையினிற் றுன்ப
மட்டுப்பட் டோயா ரேப, னசுவினீர், கூபத்தாழ்ந்தோன்
ஒட்டி யொன்பதுநாட் பத்து நிசி யுமைத்துதிக்க மொய்ம்பால்
நெட்டி மேற்கொணர்ந்தீர் சோமந் துடுவையா னெடுத்தனே ர.

(இ - ள்) அசுவினிகளே! அசுரர்களாற் கட்டப்பட்டுக் காயத்தோடும் மிகுந்த கஷ்டத்தோடுங் கூபத்தில் விழுந்த ரேபன் என்னும் ரிஷி ஒன்பது பகலும் பத்து இரவும் ஸ்தோத்திரம் செய்ய, பத்தாநாட் பகலில், அத்வர்யுவானவன் ஸோம ஸ்தாலியிலிருந்து அகப்பையினுல் ஸோமத்தை யெடுப்பதுபோல, அவ்விரேபனைத் தூக்கிவிட்டீர்கள்—(எ - று.) ரேபன் ஒருநாள் சாயந்திரம் விழுந்தானென்றும் பத்தாநாள் விடியலிலெடுக்கப்பட்டதால் 10 இரவும் 9 பகலும் துதித்தானென்றும் தெரிகிறது. மண். 1 சூக். 112 ரிக் 5 பார்க்க.

25. உம் பல கருமந் தம்மை யுரைத்தனென்; அசுவினீர்காள்,
செம்முறு பசுவும் வீரர் தாமுமே செறிந்து வேந்தாய்ப்
பொம்மலி னுறுக; பார்வை பொருந்தியே தீர்க்க வாயுள்
விம்முற, வீடு போல, வயதினை யெய்த யானே.

(இ - ள்) அசுவினிகளே! உம்முடைய புராதந காரியங்களையெல்லாம் சொன்னேன். பசுக்களையும் வீரர்களையும் பெற்று யான் இத்தேயத்துக்கு (இவ்விடத்துக்குப்) பதியாக விருக்கட்டும். சத்துரு பீடையில்லாமல் வீட்டிற் சுகமாக விருப்பதுபோல, நல்ல பார்வையோடு கூடித் தீர்க்காயுள் பொருந்திய பூரண வயதை (100 வருஷகால வளவினை) யான் பெறட்டும்—(எ - று.) இது கவியின் வேண்டுகோளை யுணர்த்திற்று. பீடையும் பகையுமின்றியிருக்கும் வீட்டினிற் றங்குவதுபோல, இந்திரிய வுணர்ச்சி கெடாமல் தீர்க்காயுளோடு கூடிய கிழத்தன்மையை யானடையட்டும் என்க. பார்வையைச் சொன்னதனுல், இனத்தினுல் மற்ற இந்திரிய வுணர்ச்சிகளையும் கொள்க வென்பார் ஸாயணர்.

வருக்கம் 12.

## 117. மண்டலம் 1. அநுவாகம் 17. சூக்தம் 2.

25 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : கக்ஷீவான். வடமொழிச்சந்தம் : த்ருஷ்டுப். தேவதை : அசுவினிகள்.

1. புராதன வோதா வும்மைப் புதுமதுச் சோமந் தன்னுற்
றராதரத் தீண்டு மத்தந் தழைப்பிக்க வழைத்தான்; மெய்யீர்,
சாாதனத் தேன்ற தெங்கள் கொடை; மறை வகுத்துச் சார்ந்த;
இராசியி னன்னம் மொய்ம்போ டீட்டுக வசுவினீரே.

(இ - ள்) நாஸத்தியர்களே! அசுவினிகளே! புராதனமாயுள்ள உமது ஹோதாவானவன் உம்மைச் சோமத்தினுல் மதர்ப்பிக்கக்

கூவினுன். எங்களுடைய ஸோமலட்சண அவியாகிய கொடை தருப்பையாகிய ஆஸனத்தில் வைக்கப்பட்டது. மந்திரங்கள் ரித்விக்குக்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டன. (அவர்கள் துதிக்கிறூர்கள் என்றபடி.) வலிமையும் அன்னமுந் தருவீர்களாக—(எ - று.) வடமொழிக்கண் இவ்வினைகள் நிகழ்காலத்திலுள்ளன. சராதனம், சராஸநம், தருப்பாசனமென்க. ஈட்டுக, சேர்க்க, தருக.

2. மனத்தினும் வேகஞ் சார்ந்த நற்பரி வயங்கப் பெற்றுச்
சனத்தின்க ணேகும் உம் அச் சையத்தில், அசுவினீர்காள்
வனப்புறு மியாக வில்லந் தேடியே வரும் நரர்காள்,
இனிப்புற வெமதகத்தும் ஏகுவீர் அதன்மே லுற்றே.

(இ - ள்) அசுவினிகளே ! யக்ஞக்கிருகங்களை நாடி வரும் நரர்களே ! மனத்தினும் வேகமாகச் செல்லும் குதிரைகளோடு கூடி யக்ஞம் செய்யும் யஜமானர்களிடத்துப் போகும் அத்தேரின் மேலுற்று எம்முடைய யக்ஞக் கிருஹத்தினிடத்தும் வருவீர்களாக— (எ - று.)

3. பகைவரை வாட்டித் தாசர் மாயையாம் படரை யோட்டி
வகைபெறு மைங்குடியோர் மதித்துரை யத்திரியைத்
தகை பெறக் கிளைகளோடுந் தாங்கினீர், நரர்காள், பாபத்
தகையுறு பொறியினின்று, மிச்சையைத் தருகுவீரே.

(இ - ள்) நேதாக்களே! இச்சைகளை யளிப்பவர்களே! (அசுவினிகளே யென்றபடி) சத்துருக்களை இம்சித்து தஸ்யுக்களின் மாயையாகிய துன்பங்களை முன்னுணர்ந்து ஓட்டி, ஐந்து பெருங்குடியிலுதித்தவர்களும் சிறப்பித்துக் கூறுகின்ற அத்திரி ரிஷியை அவனது சுற்றத்தாரோடும் பாபரூபமான தீப்பொறியிலிருந்து விடுவித்துக் காப்பாற்றினீர்கள்—(எ - று.) ஐம்பெருங்குடிகளை மண். 1 சூக். 7 ரிக் 9-ற் பார்க்க. மண். 1 சூக். 108 ரிக் 8-ஐயும் நோக்குக. அத்திரிகதையை மண். 1 சூக். 116 ரிக் 8 நோக்குக. அத்திரி ஐந்து பெருங்குடியாளர்க்கும் இதஞ் செய்பவனென்க.

4. இச்சையை யளிக்கும் வீர வசுவினீர், தீயர், தீரி,
லெச்சமா ரவயவத்தோ டிடும்பையை யெய்த, மாவின்,
விச்சையின் முழுக்கி விட்ட ரேபனை மிருடி மேன்மை
நச்சுறக் காத்தீர்; உந்தம் பழஞ் செய னலிவுறுவே.

(இ - ள்) இச்சைகளைத் தரும் நேதாக்களாகிய அசுவினிகளே! அசுரர்கள் கட்டுப்பட்ட அங்கங்களோடு துன்பப்படும்படி, தண்ணீரிற் குதிரையை முழுக்குவதுபோலக், கிணற்றில் முழுக்கிவிட்ட ரேப

னென்னும் ரிஷி மேன்மையைப்பெறும் வண்ணம் அவனைக் காப்பாற்றி னீர்கள். உம்முடைய பழைமையாகிய இவ்வீரச் செயல்கள் என்றும் அழிவு பெறாவாம்—(எ - று.) ரேபன், மண். 1 சூக். 112 ரிக் 5, மண். 1 சூக். 116 ரிக் 24 நோக்குக. மாவின், தொழிலுவமை. குதிரை யைக் குளிப்பாட்டும்போது முழுக்குவதுபோல வென்பார் மேனாட் டாசிரியராகிய கிரிபித் (Griffith.)

5. பூமியி னகட்டிற் றூங்கும் புருடனி, னிருட்டை யோட்டும்
வாமமா ரென்றி, ஞழத் தோங்கிய பொன்னிற், பார்வைக்
கேமமார் வந்தனன்று னிருங்கிணற் றாழ்ந்தான் றன்னை,
தீமையி றோற்றத்தீ ரச்சுவினியீர், தூக்கிச் சேர்த்தீர்;

(இ - ள்) அழகிய தோற்றத்தோடு கூடிய வசுவினிகளே! பூமியி னுள்ளிடத்துத் தூங்கும் புருஷனைப்போலவும், (கிணற்றில்) இருட்டை யோட்டும் அழகிய சூரியனைப்போலவும், ஆழத்துப் புதைந்து கிடைக் கும் ஒளி பொருந்திய பொன்னைப்போலவும், கிணற்றில் விழுந்த அழ கிய வந்தகன் என்னும் ரிஷியை மேலே தூக்கிவிட்டீர்கள்—(எ - று.) தஸ்ரா வென்பதற்குக் கண்ணுக்கினியவர்களே யென்று ஸாயணரும், அற்புதச் செய்கைகளைப் புரிபவர்களேயென்று மேனாட்டாசிரியரும் உரை கூறுவர். இவ்விரு பொருள்களையும் இந்நூலாசிரியர் கவிக் கிசைந்ததுபோலக் கையாளுவர். வந்தகன், மண். 1 சூக். 116 ரிக் 11 பார்க்க.

வருக்கம் 13

6. மெய்புக னரர்காள் சூழ்ந்து செல்லுவீர் மர்க்குரத்தா
லொய்யென நூறு கும்ப மதுவினை மாந்தர்க்காகப்
பெய்த வுஞ்செய்கை, பஜ்ரன் பிறங்கிய மகன் கட்சீவான்
அய்யென வேத்துந் தன்மை யார்ந்ததா லீண்டு மாதோ.

(இ - ள்) நாஸத்தியர்களே! நேதாக்களே! சூழ்ந்து செல்பவர் களே! குதிரைக்குளம்பிலிருந்து நூறு கும்ப நிறைய ஸோமத்தை மனிதர்க்காகப் பெய்வித்த உமது செய்கையானது, பஜ்ரன் மகனாகிய கக்ஷீவான் ஸ்தோத்திரஞ் செய்யும் பெருமை வாய்ந்தது—(எ - று.) கட்சீவான் தன்னையே படர்க்கைப்படுத்திக் கொண்டது. இச்சம்ப வத்தை மண். 1 சூக். 116 ரிக் 7-ற் பார்க்க. அய்யென, ஐயென.

7. விசுவகன், கண்ணன்றோன்றல் வேண்டிட, மகன் விண்ணுபு
விசைவுற, நரர்காள், தந்தீர் ; வயதினன் மெலிந்து நின்றாள்,
அசுவினீர், தந்தை யில்லத் தமர்ந்த கோஷா வென்பாட்கு
வசமுறு கணவன்றன்னை மதித்தளித் தருளினீரே.

(இ - ள்) நாசர்களே! கிருஷ்ணன் புத்திரனாகிய விச்வனுக்கு அவனது மகன் விஷ்ணுபுவைத் தந்தீர்கள். வயதினாலும் (குட்ட நோயினாலும்) மெலிவடைந்து தந்தையாகிய கட்சீவான் வீட்டிலேயே யிருந்த பிரஹ்மவாதினியாகிய கோஷாவென்பவளுக்கு (அவளது நோயை நீக்கி) யொரு கணவனை யளித்தீர்கள்—(எ - று.) விஷ்ணுபு மண். 1 சூக். 116 ரிக் 23 பார்க்க. கோஷா கட்சீவான் மகளென்றும், குட்டநோயால் வருந்தியவளென்றும், பிரமவாதினியென்றும், மூப்படையும்வரையில் தந்தையின் வீட்டிலேயே யிருந்தாளென்றும், அசுவினிகள் அவளது நோயை நீக்கி அவளுக்கு ஒரு புருஷனையும் சம்பாதித்துத் தந்தார்களென்றும் தெரிகிறது. ஆர்ஷத்தில் மாதர் முதுக்குறைவுற்ற பின் செய்த மணத்துக்கு இது ஓர் சுட்டாகும்.

8. சியாவனுக் குருசதீயைச் சேர்த்தனிர்; பார்வையில்லா
துயாவுறு கண்ணுவற்குத் தேசொளிப் பெருங்க ணீந்தீர்;
தயாநிறை யசுவினீ ரிச்செய்கை போற்றுரித்தாம்; இச்சை
கியாதியி னளிப்பீர், நாருடதன் செவி கேட்பித்தீரே.

(இ - ள்) அசுவினிகளே! இச்சையளிப்பவர்களே! (குஷ்டரோகியாயிருந்த) ச்யாவனுக்கு அவன் நோயை நீக்கி ருசதீயென்னும் பெண்ணை யளித்தீர்கள். பார்வையில்லாது வருந்திய கண்ணுவனுக்கு மிக்க ஒளியோடு கூடிய பெரிய கண்ணை யளித்தீர்கள். இக்கண்ணை யளித்த செய்கை போற்றற்குரியதாம். ந்ருஷதன் புத்திரனாகிய நார்ஷதனது செவிட்டை நீக்கினீர்கள்—(எ - று.) ச்யாவன் மண். 1 சூக். 61 ஐக் கண்டவன். இவனை அசுரர்கள் மூன்று துண்டாக வெட்டினார்களென்றும், அசுவினிகள் அவனை மறுபடியும் உயிர்ப்பித்தார்களென்றும் மேல் 24-வது இருக்கால் தெரிகிறது. ந்ருஷதன் மகனென்றது கண்ணுவனை யெனத் தெரிகிறது. "இச்சைகளை வர்ஷிப்பவர்களே! அசுவினிகளே! ந்ருஷத புத்திரன் கண்ணுவன் பொருட்டு உஷஸ் அறியும்படி வீணை வாத்தியத்தை பலமாக வாசித்த அந்தச் செய்கை புகழத் தகுந்தது" என வேறொரு பொருளுமுண்டு. அசுரர்கள் கண்ணுவ ரிஷியை இருட்டில் நிறுத்தினதாகவும் அங்கு நின்றுகொண்டே உஷையைக் கண்டறிந்ததாகவும், அசுவினிகள் வீணை வாசிக்கும் அச்சத்தத்தைக் கேட்டே உஷஸின் வரவையறிந்ததாகச் சொன்னதாகவும் ஒரு இதிஹாஸம் உண்டு. அசுவினியர்க்குப் பூஜை இரவின் கடையாமத்தில் நடைபெறுவது யாவர்க்குந் தெரிந்த விஷயம். அப்பூஜாகாலத்து ஸ்தோதாக்களை நாடி யசுவினிகள் செல்லுவதும் விசதமானது. அவர்களது பாட்டோ அவர்களுக்

காக ஸ்தோதாக்கள் பாடிய பாட்டோ நார்ஷதனுகிய கண்ணுவ ரிஷியின் காதிற் பட அவன் விடியற்காலம் சமீபித்ததை யுணர்ந்தான்.

9. பேது வென்பானுக், கச்சு வினியர்காள், பெரிதும் பன்மை
யோதுரு வெடுப்பீர், ஆசி னோடு மக்குதிரை, வன்மை,
தீதறு கீர்த்தி, வெற்றி, செருக்கலா வீரம், பாம்பை
யோதுறு பண்பி, ளுயிரம் பொனீவது நேர்ந்தீரே.

(இ - ள்) அசுவினிகளே! வெகுவிதமான கர்மங்களைக் கருதி வெகுவிதமான வுருவெடுப்பவர்களே! வண்மையும், கீர்த்தியும், ஜயமும், பிறரால் வெல்லமுடியாத வீரமும், பாம்பைக் கொல்லுந் தன்மையும் (அல்லது ஸாயணருரைப்படி, வரும் சத்துருக்களைக் கொல்லும் தன்மையும்) பொருந்தியதும், ஆயிரம் பொன்றருவதும், விரைவாகத் தாண்டிச் செல்லக்கூடியதுமான குதிரையைப் பேதுவுக்காகத் தந்தீர்கள்—(எ - று.) மண். 1 சூக். 116 ரிக். 6 பார்க்க. பாம்பைக் கொல்லுந் தன்மை யுண்மையை மண். 9 சூக். 88 ரிக் 4-ல் காண்க.

10. வண்மையிற் சிறந்தீ, ருந்தம் வீரிய கன்மம் யாவு
முண்மையிற் கீர்த்தி வாய்ந்த, வுரோதசி யாவீர், பண்ணி
னண்மையி னுறைவீர், அச்சு வினியர்காள், பஜ்ரன் மக்க
ளெண்மையின் விளிக்கும் பண்கேட் டுண்டிநல் வலியேய்ப்பீரே.

(இ - ள்) வண்மையிற் சிறந்தவர்களும், வானம் பூமியாக விளங்குவோர்களும், கீர்த்தனங்களுக்கருகி லுறைபவர்களுமான அசுவினிகளே! உம்முடைய வீர்ய கர்மங்களெல்லாம் கீர்த்தி வாய்ந்தவையாம். அங்கிரஸ கோத்திரத்துப் பஜ்ரனது சந்ததியார் உரக்கக் கூவுவது கேட்டு அவர்களுக்கு நல்ல வலிமையையும் அன்னத்தையும் தருவீர்கள்—(எ - று.) அசுவினிகள் த்யாவாப் பிருதிவி யென்று சிலர் சொல்லுவார்கள் என்பது நிருக்தம். மண். 1 சூக். 89 ரிக் 3 பார்க்க.

வருக்கம் 14.

11. சூனுவின் றுதி விழைந்தே யகத்தியன் பத்தி யோடு
வானுற வுரைத்த வேத மறைக்கென விசுப லீயி
னூனுறு முறுப்பை யீந்தீ ருண்மையா அசுவி னீர்காள்
தேனுறு பாடலோனுக் குண்டியைச் சேர்த்துக் காப்பீர்.

(இ - ள்) அசுவினிகளே! பரத்வாஜனது சுவை பொருந்திய பாடல்களைக் கேட்டு அவனுக்கு உணவை யளித்தவர்களே! கும்பஸூநுவாகிய அகஸ்தியனது துதியை விரும்பி யவன் பெருமை பெற

வுரைத்த வேத மந்திரங்களைக் கேட்டு விச்பலையின் குறைபட்ட கணைக்காலைப் பொருத்தினீர்கள்—(எ - று.) சூனு ஈண்டு கும்பஸூநு வென்றும், பாடலோன் பரத்துவாஜனென்றும் ஸாயணர் கூறுவர். மகன் தந்தையைப் புகழ்வதுபோல வென்ற பொருள் தொனிப்பதுங் காண்க.

12. சயுவினைக் காப்பீர், அச்சு வினியர்காள், என்றாழ் பெற்றீர்,
நியமமா ரருத்தி யீவீர், பொன்னிறை கலத்தை நேர
வியலுறும் பத்தாம் வைகல் புதைந்து ளோன்றனை யெடுத்தீர்,
உயனன் போற்றேற்கச் சென்றீ ருரைத்திடரெங் கெடுத்தீர் ?

(இ - ள்) சயுவினைக் காப்பவர்களே! அசுவினிகளே! ஸூர்யன் பெற்றவர்களே! ஆசைகளை யளிப்பவர்களே! நீங்கள் தங்கம் நிறைந்த கலசத்தை யெடுப்பதுபோலப் புதைந்துகிடந்த ரேபனைப் பத்தாநாள் விடியற்காலத்தி லெடுத்தீர்கள். உசனுகாவ்யனது ஸ்தோத்திரத்தைக் கேட்கச் சென்ற நீர் எவ்விடத்தில் ரேபனைத் தூக்கிவிட்டீர்களென் றுரையுங்கள்—(எ - று.) 'உரைத்திட ரெங் குற்றீரே' என்று மேனுட்டாசிரியர் மொழி பெயர்ப்பார். பத்து நாள்வரையில் தாழ்க்கக் காரண மென்னவென்பது பொருளென்பார் அவர். உசனுகாவ்யன் மண். 1 சூக். 83 ரிக். 6 நோக்குக. புதைந்து கிடந்தவன் ரேபன். மண். 1 சூக். 112 ரிக். 5 பார்க்க. திவோநிபாதா வென்பதற்குச் சூரிய புத்திர ரென்பார் ஸாயணர். ஸூர்யாவினது கணவர்களானதுபற்றிப் போலும். முன் உசனன் (உயனன்) உரைக்குந் துதியைக் கேட்கச் சென்ற அசுவினிகள் வழியில் கிணற்றில் விழுந்துகிடந்த ரேபனைப் பார்த்து அவனைத் தூக்கி விட்டார்கள். அவர்கள் சென்ற உசனனது வீட்டைக் கண்ட இச் சூக்த ரிஷியாகிய கட்சீவான் அக்கிண றெங்கே யிருந்ததென்று கேட்ட இருக்கு இது.

13. அசுவினீர், உங்கள் வன்மை ஆர் மருந்தளிக்குங் கன்மத்
திசைபுறச் சியவனன்றன் மூப்பினை நீக்கி, மீட்டும்
நசையுறு மிளமை தந்தீர்; ஞாயிற்றின் புதல்வி சீர்த்தி
யிசைவுற வுமது தேரி லேறினள், மெய்ம்மை யீரே.

(இ - ள்) நாஸத்தியர்களே! அசுவினிகளே! உங்களுடைய வீரிய மிகுந்த மருந்துகளைப் பிரயோகிக்கும் கர்மத்தினிடத்துக் கீர்த்தி தோன்றச் சியவனன் என்னும் ரிஷியின் கிழத்தன்மையை நீக்கி மறுபடியும் அவனுக்கு இளமையை யளித்தீர்கள். சூரிய புத்திரியாகிய ஸூர்யா வென்பவள் பெருமை வாய்க்க வுமது தேரி லேறிக்

கொண்டாள்—(எ - று.) ச்யவனன் மண். 1 சூக். 116 ரிக். 10 பார்க்க. ஸூர்யாவைப்பற்றி மண். 1 சூக். 116 ரிக். 17 நோக்குக.

**14.** துக்கத்தை யொழிப்பீர் பூர்வ காலத்துத் துக்கி ரன்றன்
முக்கிய துதியை யேற்ற வண்ணமே, நீரின் மூழ்கித்
துக்கமார் புஜியன் றன்னை வல்கதித் துரகத் தேற்றிப்
பக்கலி னிறுத்த வன்றும் பரிந்து மீண் டெண்ணினீரே.

(இ - ள்) துக்கநிவாரணஞ் செய்யும் அசுவினிகளே! பண்டைக் காலத்தில் (அதாவது புஜ்யன் சமுத்திரத்தில் விழுவதற்கு முன்பு) துக்கிரனுடைய ஸ்தோத்திரங்களைப் பிரியமாக வேற்றதுபோலவே, ஆழமாகிய சமுத்திரத்தில் தன் சேனையோடு முழுகிய புஜ்யனை வேக மாகச் செல்லும் குதிரைகளின் மேலேற்றி யவனுடைய பிதாவின் பக்கத்திற் கொண்டுவந்து விட்டவன்றும், புஜ்யனது பிதாவாகிய துக் கிரனால் சொல்லப்பட்ட துதிகளையும் மறுபடியும் ஸந்தோஷத்தோடு கைக்கொண்டீர்கள்—(எ - று.) ஏற்றவண்ணமே, யெண்ணினீரென் றதனால் அவர்களுக்குத் துக்கிரனது போற்றுப் பழமைபோல மீண் டுங் கிடைத்ததெனவுணர்க. துக்கிர புத்திரனாகிய புஜ்யனது சரிதையை மண். 1 சூக். 119 ரிக். 3-ல் பார்க்க. துரகத்தேற்றி யென்றிருப்பினும் துரகம் வாய்ந்த ரதத்திலேற்றியென முன் சரிதையை யொட்டி உரைகொள்ளுக வென்பார் ஸாயணர். மேல் 119-ம் சூக்தம் ரிக் 4 பார்க்க.

**15.** மனமெனச் செல்வீர், இச்சை வருடிப்பீர், அசுவினீர்காள்!
வனதியி னாழ்ந்துந் துன்ப மன்னுறு தும்மைப் போற்று
மினிய தௌக்கிரனை நன்கு பூட்டிய தேரிற் றாக்கித்
துனியிலா தெடுத்துத் தந்தை யகத்தினிற் சுகத்திட்டீரே.

(இ - ள்) மனம்போல வேகமாய்ச் செல்லுபவர்களே! இச்சை களை வர்ஷிப்பவர்களே! அசுவினிகளே! ஸமுத்திரத்தில் மூழ்கி யும் துன்பப்படாது உம்மைத் துதித்த துக்கிர புத்திரனாகிய புஜ்யனை நன்றாகப் பூட்டிய உமது தேரிற் றாக்கி வைத்துக்கொண்டு போய்த் தந்தையினது வீட்டிற் சுகமாக விட்டீர்கள்—(எ - று.) தௌக்கிரன், துக்கிரன் மகன் புஜ்யன் (Bhujya).

வருக்கம் 15

**16.** காட்டுநாய் வாயினின்றுஞ் சடகத்தைக் கடிதினீரு
மீட்டவன் றதுவு மும்மை வேண்டிற்று லசுவினீர்காள்!
ஈட்டிய வெற்றித் தேரின் மலைமுடி யேறித் தாண்டி
மாட்டிய விடத்தால் விட்டுவா சன்றன் மகனைக் கொன்றீர்.

(இ - ள்) அசுவினிகளே! கோனுயின் வாயினின்றும் ஊர்க் குருவியை வேகமாக நீர் மீட்டபோது அப்பெண்ணூர்க்குருவியும் உம்மைத் துதித்தது. ஜயத்தை யடைந்த உம்முடைய தேரிற் பகை வராற் பீடிக்கப்பட்ட ஜாஹுஷனை யேற்றிக்கொண்டு, அச்சத்துருக் களாலேற முடியாத மலையைக் கடந்தீர்கள். பலவித நடையுள்ள (விஷ்வாச்சன்) என்னும் அசுரனது மகனை விஷங் கொடுத்துக்கொன் றீர்கள்—(எ - று.) வ்ருகம் கோனுயன்று, விவ்ருதஜ்யோதிஷ்க: ஸூர்ய: என்றும், வர்த்திகா வர்த்ததே ப்ரதி திவஸம் ஆவர்த் ததே இதி வர்த்திகா உஷா: என்றும் கூறி, ஸூர்யனுற் பிடிக்கப் பட்ட உஷஸ், அசுவினிகளே, உம்மைச் சத்தமிட்டழைக்க நீங்கள், சூரியனோ டொன்றுயிருந்த வவளை யச்சூரியனினின்றும் வேறுபடுத் திச் சூரியோதயத்துக்கு முன்பும் இரவின் கடைப்பாகத்திலும் தோற்றுவித்தீர்கள் என்பது பொருள் என்று ஸாயணர் குறிப்புரை யெழுதுவார். யாஸ்கர் மதம் அது. சடகம், ஊர்க்குருவி. மண். 1 சூக். 116 ரிக் 14 பார்க்க. விஷ்வா(ச்)சன், ஓரசுரன்.

17. நூறு மேடங் கோனுய்க்கு நோன்பொடு கொடுத்ததற்கென்
றூயுறப் பிதா வியற்றுங் கண்ணின னிரிஜிராச்வன்
பேறுறு மட்ச மோங்கப் பிறக்கினீர், அசுவினீர்காள்
மாறுறுச் சோதி யீந்து வளர்த்தனிர் நோக் கந்தற்கே.

(இ - ள்) கோநாய் (உருவத்தோடு வந்த அசுவினிகளின் வாஹந மாகிய கழுதை)க்கு நூறு ஆடுகளைப் பலி கொடுத்ததற்காகப் பிதா ஊறுபடுத்தின கண்ணினனுகிய ரிஜ்ராச்வனது கண் தெரியும்படி செய்தீர்கள். அசுவினிகளே! குருடனுகிய அவனுக்கு எல்லாவற் றையும் பார்க்கும் வண்ணம் ஒளி பொருந்திய கண்ணை யளித்தீர்கள்— (எ - று.) ரிஜ்ராச்வன் கதையை மண். 1 சூக். 116 ரிக் 16-ற் பார்க்க.

18. 'அருத்தியை யீவீர், அச்சுவினியர்காள், இரிஜிராச்வன்,
பரத்தையை விழையுஞ் சாரன்புரைய, வென்றனக்குப்பள்ளை
பொருத்தினு னூறொடொன்று, நார்களே,' யென்று கோநாய்
கருத்தினிற் குருட னேகை கண்டிடக் கரைந்த தன்றே.

(இ - ள்) 'இச்சையை யளிப்பவர்களே! அசுவினிகளே! நரர் களே! பரஸ்திரீயை விரும்பும் யௌவனத்தை யடைந்த ஜாரன் அப்பாதாரத்துக்குப் பொன்னை வாரி வீசுவதுபோல எனக்கு நூற் றொரு ஆடுகளை (ஊராரிடத்திலிருந்து அபகரித்துத்) தந்தான்' என்று குருடனுகிய ரிஜ்ராச்வன் ஸந்தோஷிக்க (அதாவது அவன் கண் பார் வையைப் பெறுமாறு) அவ்வோனுய் கதறிற்று—(எ - று.)

19. சுகந்தரு மூந்த மூதி மகிமையிற் சூழ்ந்த தாமால் ;
அகந்தனிற் கருதும் போற்றேற லசுவினீர், ஒடிந்தவங்கஞ்
சுகம்பெறப் பொருத்தினீர் ; உந்தம்மையே ஞானந் தோய்ந்தா
ளிகந்தனி லைழத்தாள் வந்தீர் பற்பல காவ லேன்றே.

(இ - ள்) சுகத்தைத் தரும் உமது பாலனம் மகிமை பொருந்தியது. உள்ளத்து நினைத்துக் கூறும் ஸ்தோத்திரங்களை யேற்கும் அசுவினிகளே ! கேலனது பாதுகாப்பிலிருந்த விச்பலையின் ஒடிந்த அங்கத்தைச் சரிப்படுத்தினீர்கள். (புரந்தி) ஞானம் வாய்ந்தவளாகிய கோஷா உம்மைக் கூவப் பலவித வுதவிகளோடும் அவளிடத்து வந்து அவளாசைகளை நிறைவேற்றினீர்கள்—(எ - று.) புரந்தியெனச் சிறப்புப் பெயராகக் கொள்வர் மேனாட்டாசிரியர். அச்சொற்கே, ஞானம் வாய்ந்த கோஷா அல்லது விச்பலாவெனு மிருவருளொருவரெனப்பொருள் கொள்ளுவர்ஸாயணர். ஆனால் இந்நூலாசிரியர் ஒடிந்த அங்கத்தைச் சுட்டும்போது விச்பலையையும், ஞானம் வாய்ந்தாளென்றபோது இச் சூக்த ரிஷியாகிய கட்சீவான் மகள் கோஷாவையுந்தனித் தனி கொண்டுள்ளார். ஸாயணரோ ஸ்ராமம் ஸம்ரிணீ (த்)த: என்பதற்கு ஒடிந்த அவயவமுள்ள புருஷனது அவயவங்களைப் பொருத்தினீர்களென்கிறார். அப்புருஷன் பெயரை யெடுத்துரைக்கவில்லை. அவ்வொடிந்த வங்கமுள்ளவன் புருஷனாயின் அவன் ச்ரோணனாயிருக்கலாம். மண். 1 சூக் 112 ரிக் 8 நோக்குக. அங்கே ச்ரோணன் விகுணமுழங்காலோடிருந்தான் என்று தெரிகிறது. ஊதி, உதவி, பாலனம் என்க.

20. ஈனுத லொழிந்து வற்றி யிருந்த தேனுவிற் சயுவுக்
கானுறு பானிறைத்தீர், அசுவினீர், அழகு வாய்ந்தீர் !
வானுறு முமது வன்மை கொண்டு நல்விமதனுக்கு
மேனலம் புருமித் ரன்றன் பொன்னினை மேவுவித்தீர்.

(இ - ள்) அழகிய தோற்றத்தோடு கூடியவர்களே ! அசுவினிகளே ! ஈனுத லொழிந்து வற்றிப் போயிருந்த பசுவின் மடியிற்பால் நிறையும்படி சயுவென்னும் ரிஷிக்காகச் செய்தீர்கள். சத்துருக்களோடு சண்டை செய்யச் சக்தியில்லாதிருந்த விமதன் என்னும் ரிஷிக்காக, உங்களுடைய பலமான கிருத்தியங்களாற் புருமித்திரன் என்னும் அரசனது குமாரத்தியைத் தூக்கிக்கொண்டு வந்து, அவனுக்கு மனைவி யாக்கினீர்கள்.—(எ - று.) சயு, மண். 1 சூக் 112 ரிக். 16 நோக்குக. விமதன். மண். 1 சூக். 116 ரிக். 22 பார்க்க.

வருக்கம் 16

21. யவத்தினை, யசுவினீர்காள், கலப்பையா லுழுது வித்தி,
நிவப்புறு தோற்றத்தீர், நன்னிலை மனிதருக்குத் துப்பை
யுவப்பினிற் சொரிந்து, தாச ருலைய வச்சிரத்தால் வீட்டிச்
சிவப்புறு சோதி யெங்கு மோங்க வாரியர்க்குச் சேர்த்தீர்.

(இ - ள்) அசுவினிகளே! அழகு வாய்ந்தவர்களே ! யவ மாதிய வெல்லாத் தானியங்களையுங் கலப்பையாலுழுத நிலத்தில் விதைத்து, மனிதருக்காக உணவுப்பொருளைச் சொரிந்து, தஸ்யுக்கள் கெடும்படி அவர்களை வச்சிராயுதத்தாற்கொன்று, சிவந்த சோதி யெங்கும் பரவும் வண்ணம் ஆரியரைப் பெருமைப்படுத்தினீர்கள்.—(எ - று) யவம் என்றதனால் இதர தான்யங்களையும் இனத்தாற்கொண்டார். தஸ்யு, தாசர், கள்வர் என்றபடி. பகுரேண என்றது வடமொழிப்பதம். இதற்குச் சங்கவாத்தியத் (trumpet) தால் என்பார் மேனாட்டாசிரியர். ஆனால் ஒளி பொருந்திய வச்சிரத்தினாலென் றுரை கூறுவார் ஸாயணர். 'ஆரியர்களுடைய தேஜஸ் எல்லாருக்கும் தெரியும்படி செய்தீர்கள்.' என்பது கடைசியடியின் கருத்து.

22. அதர்வணன் றத்தியச்சற், கசுவினீர், பரிச்சிரத்தை
யிதமுறக்கொணர்ந்து சேர்த்தீர் ; தோற்றஞ்சா லுங்கட்கஃது
ரிதம் உனி மதுத்துவட்டா மறையினைக் கூறிற்று ; அன்னான்
பதமுறு சிரம் பரிந்து மற்றதும் பகர்ந்த தன்றே.

(இ - ள்) அசுவினிகளே ! அழகிய தோற்றத்தவர்களே ! அதர்வணன் புத்திரனாகிய ததீசி (தத்யச்சனு)க்குக் குதிரைத்தலையைப் பொருத்திய போது அது ஏற்கனவே வாக்குக் கொடுத்திருந்த வுண்மையைக் கருதித், துவட்டா விந்திரனிடத்திலிருந்து பெற்ற மந்திரமாகிய மதுவித்தையை யுபதேசித்தது. பின்னர் அத்தலையை யிந்திரன் வெட்டினதால், அசுவினிகள் அவனது சொந்தத் தலையைப் பொருத்திய போது அத்தலை பிரவர்க்க வித்தையையும் உபதேசித்தது.— (எ - று.) மதுவித்தை துவட்டாவுக்கும் சொந்தமாம், ஏனெனில் அவனும் அதை யிந்திரனிடத்திலிருந்து பெற்றிருந்தான். ததீசியின் சொந்தத் தலையை அக்குளிற் சேர்த்தபோது அது ப்ரவர்க்க வித்தையையும் சொல்லிற்று என்பார் ஸாயணர். ததீசியின் சரிதத்தை, மண். 1 சூக்தம் 116 ரிக். 12-ற் பார்க்க. மேனாட்டாசிரியர் மதுவித்தையை யென்றது இனிய ஸோமத்தை யென்பா

23. என்றுமும் அருளுள்ளத்தைக், கவிகளே, யெண்ணினேன்
துன்று மச்சுவினீ ரெல்லாக் கருமத்துந் துணையா நிற்க; [யான்;
ஒன்றும் பொய்யுரை யாடாதீர், புகழெலா மோங்கு மக்கள்
நன்குசூழ் பெருந்தனத்தை யெனக்கு நீர் நல்குவீரே.

(இ - ள்) கவிகளே! அசுவினிகளே! நாஸத்தியர்களே! எப்பொழுதும் உமது அநுக்கிரக புத்தியோடுகூடிய மனத்தினை நான் கருதினேன். எல்லாக் கர்மங்களிலும் உதவி செய்வீர்களாக. கீர்த்தி பரந்த புத்திரர் நிறைந்த செல்வத்தை யெனக்குத் தருவீர்களாக.—(எ - று.) கவி, தீர்க்கதரிசி யென்பது பொருள்.

24. கொடைமடஞ் சிறந்தீர், அச்சுவினியராம் நரர்காள், நீவிர்
நடைபெறப் பொற்கையானை வத்திரிமதிக்கு நல்கி,
யிடையுற மூன்று கூறு மெய்திய சியாவன் றேகந்
தடையுறு துயிரி னோங்கத் தயக்கினீர், தானஞ் சான்றீர்!

(இ - ள்) வள்ளன்மையிற் சிறந்த அசுவினிகளே! நரர்களே! நல்ல தானத்தோடு கூடியவர்களே! வத்திரிமதி யென்பாட்கு ஹிரண்யஹஸ்தனென்னும் புத்திரனை யளித்து, ச்யாவன் என்னும் ரிஷியை அசுரர்கள் மூன்று துண்டாக வெட்டியபோது அக் கூறுகளைப் பொருத்தி அவனுயிரோடிருக்கும்படி செய்தீர்கள்—(எ - று.) வத்ரிமதீ மண். 1 சூக் 116 ரிக் 13 பார்க்க. ச்யாவன், இச் சூக்தம் 8-ம் இருக்கைப் பார்க்க.

25. பண்டை நீர் செய்த வீர பராக்கிரமம் மிவற்றை
மிண்டிய வாயுளுள்ளோர் விளம்பின ரவற்றைப் போற்றி
னண்டியே யசுவினீர் யா மறைகுவேம், அருத்தி யீவீர்,
மண்டி யெம் வீரமக்கள் சூழுறு மகத்தி லின்றே.

(இ - ள்) அசுவினிகளே! இச்சையை யளிப்பவர்களே! பண்டைக்காலத்து நீர் செய்த வீர பராக்கிரமச் செய்கைகளாகிய இவற்றை மனிதர்கள் எடுத்துச் சொன்னார்கள். வீரம் பொருந்திய எமது புத்திரர்கள் சூழ்ந்துள்ள யக்ஞத்தினிடத்து யாங்களும் இப்பொழுது அவற்றைச் சொல்லுவோம்—(எ - று.)

வருக்கம். 17

## 118. மண்டலம் 1. அநுவாகம் 17. சூக்தம் 3.

11 இருக்குக்கள் கொண்டது

ரிஷி : கட்சீவான். வடமொழிச் சந்தம்: த்ருஷ்டுப். தேவதை : அசுவினிகள்.

1. சேனம் போற்பறப்ப, தான்ற சுகமெலாஞ் செறிந்த, திச்சை
மானவர்க்களிப்பீர், மாந்தர் மனத்தினின் விரைவ, தெண்ணு
மீனமில் தனம் பொதிந்த, தெய்து மூ வாதனத்த,
தேனைக் காற்செலவிற் றுந்தேர் எமையுற, அசுவினீரே,

(இ - ள்) மனிதரது இச்சைகளை யளிப்பவர்களே! அசுவினிகளே! சேனப்பட்சியைப் (பருந்தைப்)போற் பறப்பதும், நல்ல சுகத்தைத் தருவதும், மக்களது மனத்திலும் வேகமாகச் செல்வதும், குற்றமற்ற செல்வம் வாய்ந்ததும், மூன்று ஆஸனங்களோடு கூடியதும், வாயு வேகமாகச் செல்வதுமான உமது தேர் எம்மை நோக்கி வரட்டும்—(எ - று.) சேனம் என்பதற்குப் புகழ்ந்து பேசும் கதியோடு கூடிய குதிரை யெனப் பொருள் கொள்ளுவது முண்டு. வந்துரம் என்பதற்கு ஸாரதிஸ்தானம் என்பார் ஸாயணர். கவியிற் பொதுவாக ஆஸனம் என்றார்.

2. மூன்றுருள் மூன்று போக்கும் மூன்றெனும் பாகன்றட்டு
மேன்று தீவிரமா யோடுந் தேரினி லெம்மாட் டுற்றுச்,
சான்ற வெம் பசுக்களுக்கும் பாலினை வளர்த்துச், சார்ந்த
தோன்ற, லச்சுவினீர், போற்றித், துரகத்தை யுவப்பிப்பீரே.

(இ - ள்) அசுவினிகளே! மூன்று சக்கரங்களும், மூவகைச் செலவும், மூன்று ஸாரதி ஸ்தானங்களுமுள்ள உமது வேகமான தேரின்மேல் ஏறிக்கொண்டு எம்மை யடைந்து, உமது பசுக்களுக்குப் பாலை விருத்திசெய்து, எங்களது புத்திரர்களாகிய வீரர்களைப் பாது காத்து, எமது குதிரைகளையும் ஸந்தோஷப்படுத்துவீர்களாக—(எ - று.) போக்கு—கதி, செலவு.

3. வல்கதிச் சுலப வோட்டம் வயங்கிய தேரிற் றோற்றம்
பல்கிய வசுவினீர்காள், பரிந்துரை போற்றைக் கேளீர்;
மல்கிய முன்னோ ரும்மை, வழங்கு நற்றுதியோ, ரின்மை
செல்குற விரைவிற் சேர்வீரென் றெவ்வாறுரைத்தார் செப்பீர்.

(இ - ள்) அழகிய தோற்றத்தையுடைய வசுவினிகளே, வேகமான கதியும், இலகுவான ஓட்டமும் அமைந்த தேரின்மே லேறிவந்து யாங்கள் ஆதரத்தோடு கூறும் ஸ்தோத்திரங்களைக் கேட்பீர்களாக. புராதனமான ஸ்தோதாக்கள் 'எங்களது தரித்திர நீங்க விரைவாக வாருங்கள்' என்று எவ்வகையாகத் துதித்தார்களென்பதைப் பற்றிச் சொல்லுவீர்களாக—(எ - று.) அத்ரே: என்னும் வடமொழிப் பதத்துக்கு ஆதரம் குர்வத: ஸ்தோது: என்பார் ஸாயணர். அதாவது அன்பு காட்டும் போற்றுளர் என்பது பொருள். ஆனால் ஸோமநசுக்குங் கல்லெனப் பொருள்கொண்டு ஸோமக்கல்லின் சத்தத்தைக் கேளுங்கள் என்பார் மேனாட்டாசிரியர்.

4. மெய்புக லசுவினீர்காள், வேகமார் சிறையிற் சேனம்,
மெய்ம்மை நீரோட்ட மென்னக் கழுகுவான் வீழ்ந்ததென்ன

மண்டலம் 1. சூக்தம் 118.

ஐயெனத் தூக்கி வல்லே யவிவயிற் றருப, எம்மாட்
டொய்யெனக் கொணர்க வும்மை யுமதுநற் றேரினோடே.

(இ - ள்) நாஸத்தியர்களே! அசுவினிகளே! நீரோட்டத்தைப் போலவும், கழுகு வானிற் பறப்பது போலவும், விரைவாகத் தூக்கிக் கொண்டு போய் அவியுணவினிடத்தில் விடுபவைகளும், வேகமாகச் செல்லக் கூடிய சிறகோடு கூடியவையுமான சேனப் பட்சிகள் (அல்லது ஸாயணருரைப்படி குதிரைகள்) உங்களை உங்களது தேரோடும் எங்களிடத்து மெதுவாகக் கொண்டுவரட்டும்—(எ - று.)

5. சூரியன் புதல்வி யன்பு தோய்வுறுந் தருணி யுந்தந்
தேரினி, னரர்காள், தாவி யேறினாள்; சிறகிற் காந்தி
யேருறு முடலிற் றுள்ளி யேகுறு மாக்க ளும்மைச்
சீருறு மெம்மிலத்திற் சேர்க்க வுந் தேரி னோடே.

(இ - ள்) நரர்களே! (அசுவினிகளே!) சூரியனுடைய புத்திரியாகிய அன்பு மிகுந்த யுவதி உமது தேரிலேறினாள். சிறகோடும் காந்தி பொருந்திய வுடலோடும், துள்ளிச் செல்லுகின்ற குதிரைகள், உங்களை உங்கள் தேரினோடும் எமது வீட்டுக்கருகிற் கொண்டுவரட்டும்—(எ - று.) ஸூர்யன் புதல்வியைப்பற்றி மண். 1 சூக். 116 ரிக். 17 காண்க.

வருக்கம் 18.

6. வந்தநன் றனை யிரேபன் றன்னையுந், தோற்றஞ் சான்று
வந்தனை யளிப்பீர், மொய்ம்பின் மகிழும் வன் றிறலிற்றூக்கி
வந்தனை புரிந்த துக்கி ரன்மகன் றனைக்க ரைசேர்த்,
தந்தமா யிளமை மீட்டு மமைத்தனிர் சியவ னற்கே.

(இ - ள்) அழகிய தோற்றத்தவர்களே! பிரார்த்திக்கப்பட்ட பொருள்களை யளிப்பவர்களே! வந்தநனையும், ரேபனையும் உமது வலிமையினாலும், சாமர்த்தியத்தினாலும் கிணற்றினின்றும் மேற்றூக்கி, ஸ்தோத்திரஞ் செய்த துக்கிரனது மகன் புஜ்யனை ஸமுத்திரத்தைக் கடந்து கரையிற் கொண்டுவந்து விடுத்து ச்யவனனுக்கு மறுபடியும் யௌவனத்தை யளித்தீர்கள்—(எ - று.) வந்தநன், ரேபன், புஜ்யன், ச்யவனன் இவர்களை மண். 1 சூக். 117 ரிக். 5, 12, 14, 13, இவற்றில் முறையே பார்க்க.

7. கொதிப்பினாற் பீடை யெய்திப் பொறியுறு மத்திரிக்குத்
துதிப்பரு சுகத்தோ டுண்டி தோய்குவா, னசுவினீர்காள்,
மதிப்புட னருளினீர்; நற் றுதியினின் மகிழ்ந்து பார்வை
விதித்தனிர் மீட்டுங் கண்ணுவன் புல னிழந் தோனுக்கே.

(இ - ள்) பீடா யந்திரக் கிருஹத்தில் உஷ்ணத்தினல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த அத்திரி ரிஷிக்குச் சுகமும் உணவும் அளித்தீர்கள். பார்வை யிழந்த கண்ணுவனுக்கு நன்ருய்க் கண் தெரியும்படி செய்தீர்கள்—(எ - று.) அத்திரி, மண். 1 சூக். 51 ரிக். 3 பார்க்க. கண்ணுவனை யசுரர்கள் அவனுடைய பிராஹ்மண்யத்தைப் பரீட்சிக்கும் பொருட்டு இருட்டு வீட்டி லடைத்து வைத்தார்க ளென்றும், அவ னங்கிருந்தவாறே உஷஸின் உதயத்தைக் கண்டானென்றும், அவ்வுஷையை யறியும் வண்ணம் அவனுடைய பிரீதிக்காக அவ்வீட்டின் மேற் போய்க்கொண்டிருந்த அசுவினிகள் உரத்த வீணுகானஞ் செய்தார்க ளென்றும், மண். 1 சூக். 117 ரிக் 8-ற் சொல்லப்பட்டது.

8. முன்புமை யிரந்து நின்ற சயுவுடைத் தேனு பாலை
யின்புற வளிக்கச் செய்தீர்; அசுவினீர், கோநாய் வாய்நின்
றன்புடன் குருவி மீட்டீ ரத னுறுகண்ணை யோர்ந்து;
பின்பொருகா லளித்தீர் விசுபலை பிறங்கத்தானே.

(இ - ள்) முன்பு உங்களை யாசித்து நின்ற சயுவென்னும் ரிஷியினுடைய பசு பால் தரும் வண்ணம் செய்தீர்கள். அசுவினிகளே! காட்டுநாய் வாயினின்றும் குருவியை அதன் றுன்பத்தை யுணர்ந்து மீட்டீர்கள். (அல்லது சூரியனிடத்திலிருந்து உஷஸைப் பிரத்தியேகப்படுத்தினீர்கள்.) விசுபலைக்குக் கணைக்கா லளித்தீர்கள்—(எ - று.) சயு, மண். 1 சூக். 112 ரிக் 18 நோக்குக. குருவி, மண். 1 சூக். 116 ரிக் 14 பார்க்க. விச்பலா, மண். 1 சூக். 112 ரிக் 10 காண்க.

9. கனைகுரற் புரவி, வெண்மை கண்டது, பகை மடிப்ப,
திணைகுவ தகியை, யுக்கிரத்த தாண்டன்மை யேய்ந்த
தினமுறு முறுப்பு வன்மை யியைந்த, தாயிரம் பொனீந்து
கனமுறு மதனைப் பேதுக்கடை யிட்டீ ரசுவினீரே.

(இ - ள்) அசுவினிகளே! வெண்மையானதும், பகைவரை மடிப்பதும், அகியைக் கொல்லுவதும், உக்கிரமானதும், ஆண்டன்மை வாய்ந்ததும், ஆயிரக்கணக்கான பொன்னை யளிப்பதுமான குதிரையைப் பேதுவுக் களித்தீர்கள்—(எ - று.) பேது, மண். 1 சூக் 115 ரிக் 6 ஐயும், மண் 1 சூக். 117. ரிக் 9 ஐயும் பார்க்க. அஹிஹநம் என்ற சப்தத்துக்கு ஆகத்ய ஹந்தாரமித்யஹி: அஹீநாம் ஆகத்யஹந்த்ரூணும் சத்ரூணும் சத்ரூந்வா ஹந்தாரம் என்பார் ஸாயணர். அதற்கு 'வந்தெதிர்த்துக் கொல்ல வெண்ணுஞ் சத்துருக்களைக் கொல்லுவதை' யென்று பொருள். மண். 9 சூக். 88 ரிக் 4-ல் அஹி நாம்

நாம் ஹந்தா வென்றிருப்பதைக் கொண்டு மேனுட்டாசிரியர் அஹி ஹனம் பாம்பினங்களாகிய பகைவரைக் கொல்லுவதென்றே பொருள் கூறுவர்.

10. பெருமை சால் பிறப்பி னச்சு வினிரொனு நரர்கா, ளும்மை
யிருமையுற் றியாமுதவி யிழைத்திட வழைப்போம்; எம்பா
அருமையை யுணர்ந்து வாழ்வை யாம்பெற வெம்முற் செல்வ
நிருமிதத் தேரினேறி வருகுவீர் நிறைவி னன்கே.

(இ - ள்) பெருமை வாய்ந்த பிறப்பையுடையவர்களே! அசுவினிகளே! நரர்களே! உம்மைத் தனகாமிகளாகிய யாங்கள் துன்பமுற்று உதவி செய்யுமாறு கூவுவோம். எங்களது பாட்டுகளின் அருமையையறிந்து, யாங்கள் வாழ்வை யடையும்படி, எங்கட்குமுன் உம்முடைய செல்வ நிறைந்த தேரில் ஏறி நன்றாக வருவீர்களாக—(எ - று.)

11. ஒத்த வன்புடையீ, ருண்மை பேசுவீ, ரசுவினீர்காள்!
தத்திய நவீன வன்மைச் சேனத்தின் கதியிற் சாரீர்;
நித்திய முதிக்கும் வைக றிறைந்த வேரவி சுமந்து
துத்தியஞ் செய்து போற்றோ டழைத்தனென் றுதிக்க யானே.

(இ - ள்) ஸமமான அன்போடு கூடியவர்களே! நாஸத்தியர்களே! அசுவினிகளே! புதிதாக வுண்டான பலத்தோடு கூடிய சேனப் பட்சியின் (அல்லது உங்கள் தேரை யிழுக்கும் குதிரையின்) வேகத்தோடு வருவீர்களாக. நித்தியமும் உதயமாகும் விடியற் காலத்தில், மிகுந்த அவியுணவோடு ஸ்தோத்திரஞ் செய்து வணங்கி யும்மை யானழைத்தேன்—(எ - ள்.) சேனம், பருந்து, அசுவினியர் வாகனம். சிறகுகளோடு கூடிய குதிரைகளென்பது ஸாயணர் மதம். சேனப்பட்சி கூட்டிக்கொண்டு வரக்கூடிய வேகத்தோடு வாருங்களென்பது கருத்து. மேல் மண். 1 சூக். 119 ரிக் 4 பார்க்க.

வருக்கம் 19.

## 119. மண்டலம் 1. அநுவாகம் 17. சூக்தம் 4.

10 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கக்ஷீவான். வடமொழிச்சந்தம்: ஜகதி. தேவதை: அசுவினிகள்.

வேறு

1. உயிரோடு வாழ்வான்யான் எக்கியத்தைச்
சாரவவி யோட ழைப்பேன்
செயிரேலாப் பலமாயை மனோவேகந்
தனநூறு பரித்து, வன்மை

பயின்மாவைப் பூண்டு, கொடைப் பொருள்சிறந்தா
யிரங்கொடியைப் பண்பிற் றூங்கி
நயமோடுஞ் சுகமுடனீத், தறல்நிறையுந்
தேரதனை நாடித் தானே.

(இ - ள்) அசுவினிகளே! குற்றமற்ற பல மாயைகளையும் (அல்லது ஆச்சர்யமான செய்கைகளையும்) மனோ வேகத்தையும் நூற்றுக் கணக்கான செல்வத்தையும் தாங்கி, பலம் பொருந்திய குதிரைகளைப் பூண்டு, கொடைப் பொருள்கள் சிறந்து, ஆயிரம் கொடிகளையேந்திச், சுகத்தை விரைவிற் றந்து, தண்ணீர் நிறையும் தேரை, யக்ஞதலத்துக்கு வருமாறு, எனது ஜீவனத்தின் பொருட்டு, அவிப்பொருள்களோடும் அழைப்பேன்—(எ - று.) சுருஷ்டிவாநம், வநிநம் என்னும் பதங்களுக்குச் சுகத்தை யுடனே யளிப்பதும், நீர் நிறைந்ததும் என்று பொருள் கொள்ளாது உடனே கீழ்ப்படிவதும் இடமகன்றது மெனப்பொருள் கூறுவர் மேனாட்டாசிரியர். அற்றேல் 'நயமோடு முடனடங்கி யிடமகன்ற தேரதனை நாடித்தானே.' எனக் கடைசியடியை மாற்றிப் படிக்க.

2. அத்தேரொ னருகிலுறத் துதிசாலொன்
மதியுயர்வா யணைந்த து;ஆயி
னெத்திசையு மொன்றாகக் கூடாநின்
றன துதிக்க; என்றி யானு
மெத்நவினிப் புற வவியைக் கூட்டுகிறேன்;
துணையினரு மேவா நின்றார்;
அத்தேரி லூர்ஜாநி யாவவின்உம்
மாட்டடைந்தாள், அசுவி னீரே.

(இ - ள்) அசுவினிகளே! உம்முடைய அந்தத்தேர் ஸமீபத்தில் வரவே என்னுடைய ஸ்தோத்திர புத்தியானது உயர்வுபெற்றணைந்தது. யோசித்துப் பார்க்கில் எல்லாத் திக்குகளும் போற்றிசைக்க ஒன்றாகக் கூடுகின்றன. யானும் இனிய அவிப்பொருள்களைச் சேர்க்கிறேன். எனக்கு உதவி செய்யும் ரித்விஜர்களும் கூடியுள்ளார். உமது அந்தத் தேரிற்றான் சூரிய புத்திரியாகிய ஊர்ஜானி யேறி யும்மை யடைந்தாள்—(எ - று.) ஊர்ஜாநி பலத்தை யுருவகப்படுத்திய தென்பார் மேனாட்டாசிரியர். ஆனால் ஸூர்ய புத்திரியென்பது ஸாயணர் மதம்.

3. அளவோடா மகவீரர் தனம்பெறவே
போட்டியொடு மாக வத்தே
யொளியோடுங் குழுமியவக் காலமதி,
லசுவினிர்காள், உந்தேர், பூமி

யுளிதோன் றுமுண்மையினி, னெக்காலுஞ்
சூரிகளுக் குயர்ந்த தான
மளியோடுஞ் சுமந்,தவற்றை யவர்க்களிக்க
வெனவாங்கே யமைந்து நின்றே.

(இ - ள்) அசுவினிகளே! கணக்கிலாத ஜயசீலர்கள் யக்ஞத்தோடு கூடியவர்கள் செல்வம் பெறுவான் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டு யுத்த பூமியிற் கூடியபோது, உமது தேர், ஸூரிகளுக்கு (ஸ்தோதாக்களுக்கு) உயர்வாகிய தானத்தைச் செய்ய வென்று செல்வத்தைக் கொண்டுவந்து, அப்பொருள்களை யவர்களுக்குத் தருவதற்காகப் பூமியின்கண் (உண்மையாகவே) காணப்படும்—(எ - று.)

4. அருத்தியளித் திடுவீர்கா, டாமேவந்
தேய்வுற்ற வழகார் மாவின்,
வருத்தமுற நீர்மூழ்கும் புஜ்ஜியனை
நாவாயின் மதித்துத் தூக்கிப்
பொருத்தினிராற் றந்தையிடம் வெகுதூர
மாயிருந்தும்; புரையில் கீர்த்தி
யிருத்தியதாற், றிவோதாசன் றனக்குநீர்
பேருதவி யிழைத்த தன்றே.

(இ - ள்) இச்சைகளை யளிப்பவர்களே! ஒருவர் பூட்டாமற்றாமே வந்து பூட்டிக்கொள்ளும் குதிரை கட்டிய நாவாயின் மேல், நீர்க்குள் ஆழ்ந்து துன்புறும் புஜ்யனைத் தூக்கி யவனது பிதவாகிய துக்கிரனது உறைவிடத்தில் வெகு தூரத்திலிருந்து கொண்டுபோய் விட்டீர்கள். நீங்கள் (சம்பரனைக் கொன்று) திவோதாஸனுக்குச் செய்த உதவி குற்றமற்ற கீர்த்தியை யுங்களுக்களித்தது—(எ - று.)
விபி: என்பது வடமொழிப்பதம். அதற்கு மாவினென்னுது புள்ளின் என்பார் மேனுட்டாசிரியர். குதிரையாயினும் சிறகுண்மைபற்றிப் புள்ளின் என்பது நியாயமே. மாவின், மாவோடு கூடியவென்க. ரிக்கில் ஸமுத்திரத்தைத் தாண்டி நாவாயிலும், ஸமுத்திரக் கரையிலிருந்து துக்கி னில்லத்துக்குப் போகக் குதிரை வாய்ந்த தேரிலும் கொண்டுபோனார்கள் என்று சொல்வதுபோலத் தெரியும். ஆனால் அசுவினிகளின் ஊர்தி, தண்ணீரிலும் அந்தர மார்க்கத்திலும் பூமியிலும் போகவல்லது. தண்ணீரிற் போகும்போது அதற்குள்ள நூறு துடுப்புக்களும் உபயோகமாகும். பூமியிற் போகும்போது அவ்வூர்தியிற் கட்டிய பரிகள் அதனை இழுத்துச் செல்லும். அந்தரத்திற் செல்லும்போது அப்பரிகளே தங்கள் சிறகுகளின் உதவி

யாற் பறந்து செல்லுமென்க. மண். 1 சூக். 116 ரிக் 3, 5 பார்க்க. திவோதாஸனைப்பற்றி மண். 1 சூக். 116 ரிக் 18 பார்க்க.

5. சோபனஞ்சார் காட்சியுறப் பூட்டியதேர்ப்
பரியிரண்டைச் சுவைக்க நீரே
தாபமிலாக் குரல்கொண்டு தூண்டவவை
முந்தினவால் முடிவு சார;
ஏழ்பரியோன் மகள்யுவதி நண்பினைவேட்
டும்மருகே யெய்ந்தா ளும்மைச்
சோபையுறு பதிகளென நாயகராய்
வரித்திட்டாள் துலங்க மாதோ.

(இ - ள்) அழகிய தோற்றத்திற்காக உமது தேரிற் பூட்டிய இரண்டு குதிரைகளையும் நீர் தூண்ட அவை போய்ச் சேரவேண்டிய விடத்தைச் சேர்வதற்காக முந்தின. ஸூர்ய புத்திரியாகிய யுவதி உம்முடைய ஸ்நேகத்தை விரும்பி உம்மை யடைந்தவள் உம்மையே நாயகர்களாக வரித்தாள்—(எ - று.) மணாளனது தோழர்களாக வந்த உம்மை மணாளர்கள் ஆக்கிக் கொண்டாளென்பது பொருளென்பார் (Ludwig) லுட்விக் கென்பவர். அது உண்மையே. முதலில் அவளை ஸோமனுக்குக் கொடுப்பதாகவே யேற்பாடா யிருந்தது. மண். 1 சூக். 34 ரிக். 5 பார்க்க.

வருக்கம் 20

6. இரேபனைப்பி டிப்போர்த முபத்திரவ
நின்றளித்தீர்; எரியுங் கூட்டிற்
புராதனத்து வருத்தியவத் திரியையிமத்
தாற்றணித்துப் புகழிற் காத்தீர்;
தராதபய சினைத்தருவான் சயுப்பசுவைச்
சமைத்திட்டீர்; சார்ந்த வாயுள்
தராதலத்தே மிகப்பெருக வந்தநனுக்
குதவியினைத் தந்தாண் டீரே.

(இ - ள்) (அசுவினிகளே!) ரேபனை யிம்சித்த அசுரர்களது உபத்திரவத்தினின்று அவனைக் காப்பாற்றினீர்கள். அக்கினிப் பொறியிலகப்பட்டு வருந்திய அத்திரியைப் பனியால் (அல்லது மழைத் தண்ணீரினால்) காத்தீர்கள். சயுவினது பசு (பயஸை) பாலைத் தரும்படி செய்தீர்கள். வந்தநனுக்கு ஆயுள் வளரும் வண்ணம் உதவி செய்தீர்கள்—(எ - று.) பயசு, (பயஸ்) பால். ரேபன், அத்ரி, சயு, வந்தநன் இவர்களைப் பற்றி, மண். 1 சூக். 112 ரிக். 5; மண். 1 சூக். 51

ரிக். 3, மண். 1 சூக். 112 ரிக். 3, மண். 1 சூக். 119 ரிக். 11 இவற்றில் முறையே பார்க்க.

7. அழகமர்தோற் றத்தொளிர்வீ ரருந்திறலிற்
றொழில்புரிவீ ராயு ணீண்டு
பழகியதாற் சரையாரும் வந்தநனைத்
தேர்போலப் பழுது பார்த்துக்
குழகுறவே செய்தனிர்;கேத் திரத்துறைந்து
துதிமறையோன் குலவு சன்மந்
தழுவும்வகை யமைத்தீர்;வத் தெடுப்போற்கும்
பேருதவி சார்க சீரே.

(இ - ள்) அழகிய தோற்றத்தை யுடையவர்களே! சாமர்த்திய மான கார்யங்களைச் செய்பவர்களே! வயது முதிர்ந்ததனாற் கிழத் தன்மையை யடைந்த வந்தநனைத், தேரைப் புதிப்பிப்பதுபோற் புதிப் பித்து, அவன் மீண்டும் இளமை பெறச் செய்தீர்கள். கருப்பத்தி லிருந்து துதித்த வாமதேவன் கருப்ப ஸ்தானத்திலிருந்து வெளிப் படும் வண்ணம் (அதாவது பிறக்கும் வண்ணம்) செய்தீர்கள். உம்மை வணங்கும் யஜமானனுக்கும் உமது உதவிகள் நன்றாகப் பொருந்தட் டும்.—(எ - று.) ஜன்மம், சன்மம், பிறப்பு. வந்தநனைக் கிணற்றினின் றெடுத்தது மாத்திரமேயன்றி யவனுக்கு மீட்டும் இளமை வருவித்த தாகவும் இவ்விருக்காற் றெரிகிறது. வாமதேவன் அம்மறையோ னென்று ஸாயணர் சொல்லுகிறார். க்ஷேத்திரம், க்ஷேத்ரம், ஜநநஸ்தான மென்பார் ஸாயணர். எடுப்போற்கு உம் எனப் பிரிக்க.

8. தந்தைவிடுத் தலிற்றூர தேசமதிற்
றுன்பார்ந்து தயங்கு மன்னன்
முந்துதுதித் திடவவன்மாட் டேகினீர்;
நீர்செய்த மொய்ம்பா ரூதி
நந்துவா னெறியொளியிங் கடைந்திட்ட(து);
அவனருகே நாடி நின்று
விந்தையுற நீர்செய்த துணை வியப்பை
யெவ்வுயிர்க்கும் விளைவித் தன்றே.

(இ - ள்) தந்தை விட்டுவிட்டதாற் றூரதேசமான ஸமுத்திர மத்தியில் விழுந்து துன்பப்படும் அப்புஜ்யன் உம்மைத் துதிக்க அவனிடத்துச் சென்றீர்கள். நீங்கள் செய்த உதவி விண்ணை யடைந்து சித்திர காந்தியோடு இப்பக்கத்தில் வீசிற்று. அவனது ஸமீபத்தே நின்று நீங்கள் செய்த துணை யெல்லா வுயிர்களும் ஆசைப் படத் தக்கதா யிருந்தது—(எ - று.) புஜ்யனை அவன் தந்தை தள்ளி

விட்டது மோசக் கருத்தோ டென்பார் மேனுட்டாசிரியர். ஊதி, உதவி.

9. பின்னுமுமை மதுவாய்ந்தீர், தேனியு
மதுவிரும்பிப் பெரிதும் பாடிற்(று);
இன்னுமவு சிஜன்சோம மார்ந்துமதங்
கொண்டும்மை யெதிர்வி ளித்தான்;
உன்னுமனந் ததீசியின தும்மனத்தோ
டொன்றுவித்தீ ரோங்கும் பாய்மா
இன்னலத்தி னீரமைத்த தலையுமக்கு
மன்பின்மது இயம்பிற் றன்றே.

(இ - ள்) மதுவடைந்தவர்களே! பின்னும் தேனீயானது மதுவை விரும்பி யும்மை ஸ்தோத்திரஞ் செய்தது. உசிஜ புத்திரனாகிய கக்ஷீவான் ஸோமத்தைக் குடித்து மதத்தை யடைந்து உம்மைக் கூவினான். ததீசியைச் சேவித்து அவன் மனமும் உம் மனமும் ஒன்றுபடச் செய்தீர்கள். அவனுக்கு நீரமைத்த குதிரைத்தலையுமக்கு அன்போடு மதுவித்தையை யுபதேசித்தது:— (எ - று.) தேனீ யென்பதும் கட்சீவானையே குறிக்கு மென்பார் மேனுட்டாசிரியர். ததீசி, மண். 1 சூக். 116 ரிக் 12 பார்க்க.

10. பலர்நயக்குந் தன்மையதாய்ப் பகைவரினைக்
கடப்பதுவாய்ப் பண்பின் வெண்மை
நலநயந்தே யுத்தமதி லம்புகொடு
சயிக்கரிதாய் நாடுங் கன்மம்
பலநயக்கும் போதெல்லா முபயோகப்
படுஞ்சீர்த்தாய்ப், பாக சாதன்
வலிநயந்து பகைவரை மேற் கொள்பரியைப்
பேதுவுக்கு மகிழ்ந் தீந்தீரே.

(இ - ள்) பலரும் விரும்புந் தன்மையோடு கூடியதாய்ப், பகைவர்களைக் கடந்து செல்வதாய், வெண்மை நிறமுள்ளதாய், யுத்தத்தில் அம்பினுற் சயிக்க முடியாததாய், இந்திரனது வலிமையை யொத்த பலம் பொருந்தியதாய், பகைவரைச் சயிப்பதா யுள்ள குதிரையைப் பேதுவுக் களித்தீர்கள் - (எ - று.) பேது, மண். 1 சூக். 117 ரிக் 9 பார்க்க.

மேற் சூக்தங்களில் அசுவினிகளைப் பற்றிச் சொல்லியவை சிற்சில இயற்கை யாவிர்ப்பவங்களைக் குறிப்பன வென்றும், அவற்றை வெறுஞ் சரிதங்களாக மாத்திரங் கொள்வது நியாயமல்ல வென்றும் மோட்சமூலர் மதத்தை யநுசரித்த (Benfey) பென்வே யென்பவர்

கூறுவார். யாஸ்கர் மதமும் அதுவே. ஆனால் மூர் (Muir) என்பவர் அவை யத்தகையவாயின் இத்தனை வேறுபட்ட பெயர்களோடு மாறுபட்ட பலசூணிலைகளில் வர்ணிக்கவேண்டிய அவசியமில்லையென்றும், அதனால் அவ்வக்காலங்களில் அசுவினிகள் செய்ததாகச் சொல்லிக் கேட்ட சரிதங்களைத் தொகுத்து இச்சூக்தங்களை யவ்விருடிகள் பாடினதேயன்றி வேறில்லையென்றும் சொல்லுவார்.

வருக்கம் 21.

## 120. மண்டலம் 1 அநுவாகம் 17 சூக்தம் 5.

12 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி: கட்சீவான். வடமொழிச் சந்தம்: 1, 10, 11, 12, காயத்திரி, 2 ககுப், 3 காவிராஜ், 4 நஷ்டரூபி, 5 தநுசிரா, 6 உஷ்ணி, 7 விஷ்டாரப்ாஹதி, 8 க்ருதி, 9 விராஜ். தேவதை: அசுவினிகள்.

ககுப், தநுசிரா, உஷ்ணி, க்ருதி இவை கந்தாநுபூதிக் கலிவிருத்தத்திலும், விஷ்டாரப்ாஹதி ப்ாஹதி போலும், நஷ்டரூபி கலிநிலைத்துறையிலும்; காவிராஜ் விராஜ் இவை மூன்றடித்தாழிசையிலும், யாக்கப் பட்டுள்ளன.

வேறு

1. எத்து திந்தும் மருளினை யேய்த்திடும்?
ஒத்த வும்மிரு வோரையு, மச்வினீர்,
நத்தி யின்பனித் தோங்குவன் நாடின்யார்?
சித்த ஞான மிலாமெனங்ஙன் செய்வனே!

(இ-ள்) எந்தஸ்தோத்திரமானது உமது அருளைக் கொண்டு வந்து தரும்? அசுவினிகளே! உம்மிருவரையும் விரும்பி உங்களுக்கு ஸந்தோஷ மூட்டுவான் யார்? உமது மகிமை யறியாத அஞ்ஞானி யுங்களை யெவ்விதம் துதித்து வணங்குவான்?—(எ-று.)

வேறு

2. இற்றே சடரும் எழில் ஞானிகளை
யுற்றே வழி வேண்டுவர்; மற்றையவர்
சற்றே யுணரார்; பகைதாண் டறியீர்,
மற்றே விரைவின் மாணர்க் கருளீர்.

(இ-ள்) இம்மாதிரியாகவே யறிவில்லாதவர்களும் ஞானிகளாகிய அசுவினிகளை யடைந்து அவர்களைப்போற்றும் நெறிகளைக் கற்கும்படி வேண்டிக்கொள்வார்கள். அசுவினிகளல்லாத இதரர்

கொஞ்சமும் அந்நெறிகளை யுணரமாட்டார்கள். பகைவர்களாற் கடக்க முடியாதவர்களே! வேகமாக மனிதர்களுக்குச் செல்வந்தருவீர்களாக—(எ - று.) மற்றே, அசை.

வேறு

3. மூதறிஞ ராமுமையா முற்படவே யழைக்கின்றோம்;
மூதறிஞர் நீரெமக்கின் றுயர்துதியை மொழிந்திடுக;
ஆதரத்தி னுமைவிரும்பி யர்ச்சித்தே னிப்பொழுதே.

(இ - ள்) வித்வாம்ஸர்களாகிய உம்மை யாங்கள் முன்னர் அழைக்கின்றோம். வித்வாம்ஸர்களாகிய நீர் எமக்குச் சிறந்த ஸ்தோத்திரத்தைச் சொல்லிக்கொடுப்பீர்களாக. ஆசையோடு உம்மை இப்பொழுது அவியோடும் வணங்கினேன்—(எ - று.)

வேறு

4. பக்கு வமதிப் பிறகட வுளரையான் வினவேன்;
மிக்கு யர்வலித் தோற்றத்தீர், விளம்புக வஷட்டோ
டெக்கி யத்துறு மற்புதம்; எங்களைக் காக்க,
மிக்க நல்வலிக் கருவமா ரதனின் மேற் றூக்க.

(இ - ள்) அழகிய தோற்றத்தை யுடைவர்களே! பக்குவ ஞானம் பொருந்திய வேறு தேவர்களை யான் கேட்கமாட்டேன். (அவர்கள் உம்மவ்வளவு பெருமையில்லாதவர்களாமெலன்க.) யக்ஞத்தில் 'வஷட்' டென்னும் பிரயோகச்சொல் செய்யும் அற்புதத்தை யுரைப்பீர்களாக. மிகுந்த வலிமை பொருந்தியதும் கர்வமுள்ளதுமான அதனின்று மெம்மை யுயர்த்திக் காப்பாற்றுவீர்களாக—(எ-று.) வஷட் என்று செய்யும் ஆஹுதி நன்மையைத் தரும். ஆயினும் அம்மறையை முறைபிறழக் கூறி யுபதேசித்தல் வெகுவாகிய கேட்டைத் தரும் ஆகையால் அவ் 'வஷட்'டின் அற்புத சக்தியை யெமக்குணர்த்துவதுடன் அதனால் ஒருவிதக் கேடும் நேராதபடி யெம்மைக் காப்பீர்களாக வென்று கவி பிரார்த்தித்துக்கொண்டபடி யென்பார் மேனாட்டாசிரியர். 'வஷட்'டென்பதற்கு, 'அக்கினியாகிய அவன் அவியைத் தேவர்களிடத்துச் சுமந்து செல்லட்டும்.' என்பது பொருள். மண். 1 சூக். 31 ரிக் 5 நோக்குக.

வேறு

5. கோடன் பிருகு நிகர் சோபையுற
நாடும் மறையைப் பஜிரன் குடியோன்
தேடி யறிவிற் பெரியோன் சிவணப்
பாடும் மதுவும் பலனா ருகவே.

(இ - ள்) கோஷாவினது புத்திரனாகிய ஸுஹஸ்த்யன் பிருகுவி னது சோமபயைப்போன்ற சோமபயை யடைவதற்காக விரும்பி யோதிய மந்திரத்தைப் பஜ்ரான் வம்சத்தவனாகிய கட்சீவான் தேடிக் கண்டுபிடித்து (அன்னமிச்சிக்கும்) வித்வானைப்போலப் பாடுகின்ற அம் மந்திரமானது பலனோடு கூடியதாக விருக்கட்டும்—(எ - று.) கோஷா, இம்மறையைக்கண்ட கட்சீவானது புத்திரி, பிரஹ்ம வாதினி. அவ ளது மகன்பெயர் ஸுஹஸ்த்யன் என்பார் ஸாயணர். மண். 1 சூக். 117 ரிக் 7 பார்க்க. பஜ்யன் அங்கிரஸ குலத்தவன், இவனது குலத்தவன் கட்சீவான் என்க.

வருக்கம் 22.

6. 'காயத்துறு தன்னடை மந்த முளோன்
காயத்திரி கேட் டவனம் பகமீந்
தேய் அச்சுவினீர், சுபவெம் பதியீர்
வயத்தருவீர் பலன்'என் றறைவேன்.

(இ - ள்) 'அசுவினிகளே! சுபப்பதிகளே! (கண்ணிழந்ததனுல்) நடையின் வேகம் குறைந்த ரிஜ்ராச்வன் காயத்திரிச் சந்தஸாலான மந்திரத்தாற் றுதித்ததைக் கேட்டு அவனது கண்ணை யீந்தவர்களே! யான் விரும்பிய பலன்களையும் தருவீர்களாக.' என்று நானுந் துதிப் பேன்—(எ - று.) ரிஜ்ராச்வனென்பது ஸாயணருரை.

வேறு

7. பெரிய செல்வந் தருபவர்காள், பேசுமதனைக் காத்தழிப்பீர்;
அரிய வசுவி னயகர்காள், நீங்க ளெம்மை நன்கிரட்சித்
துரிய வெமது பொருளிரிய வோர்க்கும் பாப சிந்தையுடன்
றிரியுங் காட்டு நாய்நின் றுஞ் செம்மை யாகக் காப்பீரே.

(இ - ள்) அசுவினிகளே! மகத்தாகிய செல்வத்தை யளிப்பவர் களே! அச்செல்வத்தைக் காப்பவர்களும் அழிப்பவர்களும் நீங்களே. வஸுக்களே! நீங்கள் எங்களை நன்றாக இரட்சிப்பதுடன், பாப சிந்தையோடு எங்கள் சொத்துக்களைத் திருட நினைத்துத் திரியும் ஓநாய் போன்ற திருடனது கையிலகப்படாதபடியும் காப்பீர்களாக— (எ - று.) காட்டு நாய், ஓநாய், அது திருடனுக்காக நின்றது என்பார் ஸாயணர். வசு, செல்வம்.

வேறு

8. விழையா னொருவன் வயினெம்மை விடீர்;
எழில்கொண் மடிபி லெமதுண் டியினைத்
தழுவுங் கபிலே'தம கன் றினைவிட்
டொழுகா தருளீ ரியலா வுழையே.

(இ - ள்) (அசுவினிகளே !) எம்மை விரும்பாத பகைவனிடத்து எம்மைத் தந்துவிடாதீர்கள். எமக்கு வேண்டிய வுணவை மடியிற் றாங்கும் பசுக்கள் தங்கள் கன்றுகளைவிட்டு எமக்கியலாத (எம்மால் அடைய முடியாத) இடத்திற் போய் விடாதபடி யருளுவீர்களாக— (எ - று.) இயலாஉழை, எங்களாலடைய முடியாத இடம்.

வேறு

9. உமை விரும்புந் துதியாளர் நண்பர்களை யோம்புதற்கென்
றமைவலிநற் றனமதனை யடைவர்; அதை யாமுமுறல்;
எமையடைவா னருளுகவாற் பசுவாரு மன்னமுமே.

(இ - ள்) உமை விரும்பும் ஸ்தோதாக்கள் மித்திரர்களைக் (பந்துக்களை யென்பார் ஸாயணர்) காப்பாற்றுவதற்காக வலிமை பொருந்திய செல்வத்தை உம்மிடத்திலிருந்து பெறுவர். அத்தகைய வலிமை பொருந்திய செல்வமுடையவர்களாக எங்களையுஞ் செய்வீர்களாக. பசுக்களோடு கூடிய உணவினை யாங்க ளடையுமாறு செய்வீர்களாக— (எ - று.) பசுவாரு மன்ன மென்பதற்குப் பசுக்கள் தரும் பால் முதலிய உணவுப் பொருள்க ளென்பார் மேனாட்டாசிரியர்.

வேறு

10. வன்புறையுஞ் செயன்மலி யச்வினிர்
கொன்பெறுந்தேர் குதிரையே யில்லது
மன்பெறவே யடைந்தனென் ; பூரியும்
பின்பு வேண்டினென் பெற்றேனத் தேரினே.

(இ - ள்) வலிமை பொருந்திய செயல்கள் மலிந்த அசுவினிகளது பெருமை வாய்ந்த தேர், குதிரை கட்டாது ஓடுவதை யான் (வணங்கி) யடைந்தேன். மிகுந்த கீர்த்தியோடு கூடிய செல்வத்தை விரும்பி, அத்தேரினின்றும் அதனைப் பெற்றேன்—(எ - று.) பூரி, ப்ரபூதம் ச்ரேய: என்பார் ஸாயணர். மிகுந்த கீர்த்தி அல்லது செல்வ மென்றுஞ் சொல்லலாம்.

11. செல்வமோ டுறு தேர்,எந் தனுவினைப்
பல்கு மாறு புரிக ; பலசுக
நல்கு தேரு நலக்க மனிதர்க்கண்
மல்கு சோமம் பருகத் தருகவே.

(இ - ள்) செல்வத்தோடு கூடவுறும் (அசுவினிகளது) தேரே ! நீ எமது சரீரத்தைப் (புத்திர பௌத்திராதி ஸந்தானங்களைப் பெறும் வண்ணம்) விஸ்தாரப் படுத்துவாயாக. பலவித ஸுகங்களை

யும் தருந் தேர், யஜமானர்களிடத்திலுள்ள ஸோமத்தைக் குடிக்க அசுவினிகளை யவரிடத்துக் கொண்டுவரட்டும்—(எ - று.) முன்னி லைப் படர்க்கை மாற்றைக் கவனிக்க. இது வேத ஸஹஜம்.

12. வைகல் வேளைக் கனவின் விலகினேன் ;
வைகு நற்றனம் வாய்ந்தும் பிறர்க்களித்
துய்குறாத வவனி னொழிந்தனென் :
ஐகென வழிவா ருப யருமே.

(இ - ள்) விடியற் காலத்திற் றோன்றும் ஸ்வப்நத்தினின்றும் விலகினேன். பெற்றும் ஈத்துண்ணானையும் நீங்கினேன். அந்த ஸ்வப்நமும், இந்த லோபியும் விரைவில் அழிவது நிச்சயம்.—(எ - று.) ஸ்வப்நத்திற் கண்ட பொருள் கைக்கெட்டாதது போல அநுபவியாதவனது சொத்தும் விரைவில் அழியும். இவ்விரண்டு வகை சொத்தினாலும் எனக்கு உபத்திரவமில்லை யென்று பொருள். இங்கே ஸ்வப்ந மாத்திரத்தினால் ஸத்துவமின்மையைப் பிரதிபாதிப் பதிலிருந்து, துஸ்ஸ்வப்னங்களுக்கும் பலமில்லை யெனப் போதருத லால், இவ்விருக்கு துஸ்ஸ்வப்ந நாசனீயாம் என்பார் ஸாயணர்.

வருக்கம் 23.

## 121. மண்டலம் 1. அநுவாகம் 18. சூக்தம் 1.

23 இருக்குக்கள் கொண்டது.

ரிஷி : கட்சீவான். வடமொழிச்சந்தம் : த்ருஷ்டுப். தேவதை ; விச்வதேவர்கள் அல்லது இந்திரன்.

வேறு

1. ஒளிபெறு வள்ள றன்னை யுன்னி யங் கிரசன் மக்கள்
அளிபெற வோதும் போற்றை நராளிப்பவனென் றேற்பான் ?
தளியென விளங்கு மில்லச் சனத்தினைச் சாரும்போது
தெளிவுறு துதிக்கு வாய்ந்தோன் றிகழுவன் மகத்தின் மாடே.

(இ - ள்) காந்தி பொருந்திய தான கர்த்தாவாகிய விந்திரனை யெண்ணி அவனது தண்ணளியைப் பெற அங்கிரஸன் வம்சத்து மக்களாகிய யாங்கள் கூறும் ஸ்துதிகளை, மாந்தரை (நேதாக்களை)க் காப்பவனாகிய அவ்விந்திரன் எப்பொழுது ஏற்பான் ? யக்ஞக்கிருஹத் திலுள்ள ரித்விஜர்களாகிய ஜனங்களை யடையும்போது துதிக்க அல் லது வணங்கத்தகுந்தவனாகிய அவன் யக்ஞத்தினிடத்து விளங்கி மகிழ்வன்—(எ - று.) தளியென விளங்கும் என்னும் அடைவட

மொழி மூலத்திலில்லை ; யக்ஞக் கிருஹங்களில் தேவகார்யங்கள் நடப் பதாற் கோயில் போன்று என்று கூறினர் தமிழிருக்கில்.

2\. வானுல கவனமைத்தான் ; பசுக்களி னேதா, காந்தி
தானுறு முடலோன் றண்ணீர் சீர்பெற வவற்றின் பின்னர்
மானுற வோட விட்டான், மகத்துவ, னிரவின் பின்னர்
ஈனுற வடவைக் கன்றை யியைத், தொளி கான்றிட்டானே.

(இ - ள்) அவ்விந்திரன் விண்ணுலகத்தை நிலைப்பித்தான். பணி யென்னு மசுரனாற் கவரப்பட்ட பசுக்களை (அதாவது மழை முகில் களைக்) கொண்டுவரும் நேதாவாகிய விந்திரன் அப்பசுக்களின் பின் ஓடிவரும் மழைத் தண்ணீரைப் பிராணிகளுக்கு உபயோகமாகும் வண்ணம் பெய்வித்தான். மகானாகிய வவன் பெட்டைக் குதிரைக்கு லீலார்த்தமாக ஒரு பசுக்கன்றை யுற்பவிக்கச் செய்து, (தான் எப் பொழுதும் ஸ்வயம் பிரகாசனாயிருந்தும்) இரவிற்குப் பின் (இனத்தி னால் வைகலையுங் கொள்ளுக வென்பார் ஸாயணர்) ஸூர்ய ரூபமாக நின்று பிரகாசிக்கிறான்—(எ - று.) லுட்விக் கென்பவர் மாதரம்கோ : என்பதை மாதரம் என மாற்றிக் குதிரைக்கு (சூர்யனுக்கு)ச் சோடு, எல்லாவற்றிற்கும் தாய்நிலையிலுள்ள பூமியாகிய பசுவென்பார்.

3\. அங்கிரர்க் கென்றும் பொன்னீந் தருணமாருஷை விளக்கித்
தங்கிய வவன் பழமை சாரழைப்பதனைக் கேட்க ;
தங்கிடக் கொலையிற் சம்பந் தயக்கினன் ; விண்ணமைத்தான்
துங்கமாரிருகான் மாந்த ரொடு சதுஷ் பதங்களுக்கே.

(இ - ள்) அங்கிரஸ வம்சத்து மனிதர்களுக்கு அநுதினமும் தனத்தை யளிப்பவனும், செந்நிறமான உஷஸைப் பிரகாசிப்பிப்ப வனுமான (அச்சூரிய ரூபமான) விந்திரன், பழமையாக உபயோகிக்கப் பட்டு இப்பொழுது நாங்கள் கூறும் ஆஹ்வானங்களை (அழைப்புக் களைக்) கேட்கட்டும். மேலும் அவ்விந்திரன் தனது ஆயுதமாகிய வச்சிராயுதம் எப்பொழுதும் கொலை பயின்ற வண்ணமாகவே யிருக் கும்படி செய்தான். இரண்டு கால் மனிதருக்காகவும், நாற்காற் பிராணிகளுக்காகவும் விண்ணைக் கீழ் விழுந்து விடாதபடி நிறுத்தி னன்—(எ - று.)

4\. இதன் மதங் கொண்டு நீயு முனைத்துதி மகத்திற்காகப்
பதமுற முழங்கும் ஆக்கள் குகை பதிந்தவற்றைத் தந்தாய் ;
கதமுற மூவ்வுலகுங் கதித்துயர்ந்தவன், போர் நேரிற்
பதனற மகாரை வாட்டும் பாதையை விலக்குவானே.

(இ - ள்) (இந்திரனே !) இந்த ஸோமத்தைக் குடித்தலால் வரும் உற்சாகத்தால் நீ யுன்னை வணங்கும் யக்ஞத்திற்காகப் (பணியென்னு மசுரனால்) குகைக்கண் அடைத்து வைக்கப்பட்ட பசுக்களை (மழை மேகங்களை)த் திறந்து விட்டாய். மூன்றுலகங்களிலும் உன்னதமான விந்திரன் யுத்தம் நேர்ந்தால் மனிதரை யிம்சிக்கும் பாதைகளை விலக்கி விடுவான்—(எ - று.) இடமாற்றை நோக்குக. த்ரி ககுப் என்பதற்கு முப்பட்டையாய்க் கூரிய வச்சிராயுதம் என்பார் மேனாட்டாசிரியர். “முக் கூருள்ளது வேகத்தோடு எதிர்த்து வரும்போது, இந்திரன் மனிதனுக்கு இடைஞ்சல் செய்யும் கதவுகளை யெல்லாம் பரக்கத் திறக்கிறான்!' என்று பின்னிரண்டடிகளை மொழி பெயர்ப்பார் அவர். பசுக்கள் சரிதையை மண். 1 சூக். 62 ரிக் 3 பார்க்க.

5. வல்கதிப் பெற்றோர், பூமி வளமுறுத்துபவ ரோங்கும்
பல்சுவை யவியாஞ் செல்வப் பான்மை சார் தூய பாலை,
மல்குறச் சுரக்கு மாக்கண் மடியினின் றொழுகுமஃதை,
நல்கியுன் றனைக் குறித்து நயமகம் புரிந்த போதே.

(இ - ள்) வேகமானகதியோடு செல்லும் பெற்றோரும், எல்லா ஜகங்களையும் வளப்படுத்துபவர்களுமாகிய தியாவாப் பிருதுவிகள் பலவித சுவையோடு கூடிய அவியும், செல்வ நிறைந்ததும் பரிசுத்த மானதும், நன்றாகச் சுரக்கும் பசுக்களின் மடியிலிருந்து ஒழுகுவது மான பாலைத் தந்து உன்னைக் குறித்து யக்ஞம் நடத்தியபோது—(எ - று) நீ (இந்திரன்) மனிதரை யிம்சிக்கும் பாதைகளை விலக்கி விடுவா யென மேற்பாட்டினின்றும் ஒரு வாக்கியம் எடுத்துக் கூட்டுக வென்பார் ஸாயணர்.

அங்கிக்க ணவுதியை யார்ந்தளிக்க வாதித்யன்
தங்கின, னன்னான் றழைத்திடவே—மங்குல்
மழையீந்த, தம்மழையால் வான்பயிரோங் கிற்றிஃதா
விழிவினரார் வந்தனரென் றேத்து.

என்னுஞ் செய்யுளின்கருத்து ஈண்டு ப்ரதிபாதிக்கப் பட்டது.

வருக்கம் 24.

6. பிறந்தன னங்கே யன்னான் ; பகைவரைப் பேர்க்குஞ் சோமம்
பிறங்குறும் வைக லென்றாழ் பெருகொளி மான வீசித்
திறம் பெற மதமளிக்க, சேர்ந்திடு மவி மிக் கீத்துச்
சிறந்த நல்லிடத்தில் போற்றிற் சுருக்கொடு பொழிவேமுக்கே.

(இ - ள்) அவ்விந்திரன் அவ்விடத்துத் (துதியை விரும்பினவ னாய்த்) தோன்றினான். பகைவரை வாட்டும் ஸோமமானது, உஷஸ்

காலத்துக்குப்பின் ஒளிவிட்டுத் தோன்றும் சூரியனது காந்தியைப் போன்ற ஒளியை வீசி, அவ்விப்பொருள்களை யதேஷ்டமாக வளித்து, ஆஹவநீயமாகிய நல்ல ஸ்தானத்தில் ஸ்தோத்திரங்களோடு சுருக்கினால் ஆஹுதி செய்யும் எங்களுக்கு மதத்தைத் தாட்டும்.

நன்மரத் துண்டா லான விந்தனங் குவிந்த நாளில்
வன்மையி னத்து வர்யு பசுவினை வரியாகிற்பன் ;
கன்மமார் பகலிற் சூரன் கதிரொளிர் காலை நீயும்
பொன்மயச் சகடங் காட்டுட் போக்குவாய் சமித்துக்கென்றே.

(இ - ள்) நல்ல மரக்கட்டைகளாலான விந்தனங்கள் மூட்டப் பட்டெரியு மந்நாளில், வலனாகிய அத்வர்யு யாகப் பசுவை யூபத்திற் கட்டுவான். இந்திரனே! கர்மம் புரியு நாட்களில் சூரியரூபமான நீ பிரகாசிக்கும் போது சமித்துக் கொண்டுவருவதற்காக வண்டியைக் காட்டுக்குட் செல்லுமாறு தூண்டி விடுவாய்—(எ - று.) இவ்விருக்குக்கு வேறொரு பொருளுமுண்டு. அது வருமாறு :

சூரியன் கதிரோன் மேகசாலம் பெய்விக்க விண்ணில்
நேரியல் மகத்துக்காகச் சூரனப்படலஞ் சீப்பான்
தாரி அற் றியங்குஞ் சாரிற் சார்ந்துள பசுவை மீட்ட
வேரினின் விரைகுவாய் நீ யெண்ணுமம் மாந்தர்க்கென்றே.

(இ - ள்) சூரிய கிரணங்களைக்கொண்டு மேகக் கூட்டங்கள் மழையைப் பெய்விக்கும்போது, இம்சிக்கப்படாதவனாய் அந்தரத்திற் சென்று, சூரனாகிய விந்திரன், யாககார்யங்கள் செவ்வனே நிறைவேறும் பொருட்டு அம்மேகப் புரைகளை நன்றாகக் கிழித்து விடுவான். இந்திரனே! செல்வதற்கு வழியில்லாத விடங்களிற் றிரியும் பசுக்களைத் திரட்டவெண்ணும் மனிதர்களுக்காக நீ விரைவாகச் சென்று அப்பசுக்களைத் திரட்டுவாய்—(எ - று.) இவ்விரண்டு செய்யுட்களிலும் பின்னிரண்டடிகள் பிரத்தியக்ஷீகிருதம், அதாவது முன்னிலையாகக் கூறியது.

8. கற் கொண்டு, மத வின்பூட்டும், பாலொடுகலந்தசோமம்
முற்கொண்ட காற்றி னீயும் பருகுவான் பிழி கன்மத்தே
நிற் கொண்ட குடிமா மிச்சங் குடித்திட; நிமிர்ந்த போரோய்
மற் கொண்ட வெஞ்சீர் வாட்டும் பகைவரை வாட்டு வாயே.

(இ - ள்) மதத்தையும், மனோஹரத்தையு மூட்டுவதும், பசுவின் பால்கலந்து பலத்தை யடைந்ததும், காற்றைப் போல வேகமாக உன்னாற் குடிக்கப்படுவது மான ஸோமம், கற்களால் நசுக்கிப் பிழியப் படும்போது உனது ஸோமங்குடிக்குங் குதிரைகளிரண்டும், மிச்சத்

தைக் குடிக்கட்டும். போரில் வல்லவனே ! எமது செல்வத்தைக் கெடுக்கும் பகைவரை நீ யழிப்பாயாக—(எ - று.)

9. குற்சனுக் குதவியாகச் சுட்டுணன் றனைக் கணக்கி
னற் சரம், புருகூதன்னே, நாடிச் சூழ்காலை வானின்
றெற் செறி துவட்டா வீந்த வயக்குலிசத்தை, மாற்றார்
கற் செறி தோளை வாட்டுங் கருவியை வீசினாயே.

(இ- ள்) புருகூதனே! (பலராற் போற்றப்படுபவனே!) குத்ஸன் என்னும் ரிஷிக்கு உதவியாகச் சுஷ்ணன் என்னும் அசுரனைக் கணக் கில்லாத கொலைப் படைகளை நாடி யெடுத்துக்கொண்டு சூழ்ந்தபோது விண்ணினின்றும் துவட்டா கொண்டுவந்த ஒளி பொருந்திய இரும்பு வச்சிராயுதமாகிய பகைவரை யடக்குங் கருவியை நீ வீசினாய்-(எ-று.) குத்ஸன், மண். 1 சூக். 51 ரிக் 6 பார்க்க.

10. அத்திரிப் படையோய்! என்றாழடைபடத் தம மூடாமுன்
பொத்திய மேகத்தின்மேற் பொருக்கெனக் கருவி யோச்சிச்
சுற்றுறச் சூழ்ந்து நின்ற சுட்டுணன் வலியை நன்கு
பற்றற வானி னின்றும் பறித்தனை யுறுதி வாய்ந்தும்.

(இ - ள்) வச்சிராயுதந் தரித்த இந்திரனே ! சூரியன் மறையும் வண்ணம் இருட்டுச் சூழ்ந்துகொள்ளுவதன்முன் அச் சூரியனை மூடிய மேகத்தின்மே லுன் வச்சிரத்தை வீசி, அம் மேகத்தைச் சூழ்ந்து நின்ற சுஷ்ணனது பலமானது உறுதியோடிருந்தும் அதனைத் தொலைத்தனை—(எ - று.) அத்திரிப் படை, வச்சிராயுதம்.

வருக்கம் 25.

11. மிகுவலிப் பெரிய வானம் புவியிவை யுருளே யின்றித்
தகு மிடம் பரந்த, வேந்தே, மதத்தை நின்செயற்க ணீந்த ;
அகி யெனும் வராகத் தண்ணீ ராழ்ந்துள ததனை வன்மை
மிகு மழுவதனாற் றூக்கம் மேவுற வீழ்த்தி னாயே.

(இ - ள்) இந்திரனே ! மகத்துவமான வலிமை பொருந்திச், சக்கர மில்லாமலெல்லா விடத்திலும் வியாபித்தொழுகும் வானமபூமிகள் விருத்திரவதஞ் செய்யும் கர்மம்போன்ற கர்மங்களில் உனக் குச் சந்தோஷத்தை யூட்டின. தண்ணீர்க்குள் படுத்துக் கிடக்கும் பெரிய உருவமுள்ள விருத்திரனை வலிமை தங்கிய வச்சிராயுதத்தா லடித்து என்றும் தூக்கத்திலேயே கிடக்கும்படி வீழ்த்தினாய்.—வரா ஹம், பன்றி, இட அங்க முள்ளது ஈண்டு அது அகி அல்லது விருத் திரனைக் குறித்து நின்றது.

12. காற்றெனப் பூண்டு செல்லு மாவை கல்வாகனத்தைப்,
போற்றுமம் மனிதர்க் கின்பம் புரிந்திடும் வேந்தே, யேறல் ;
சாற்று காவிய னுசானன் சம்பகிற் கியா முன்ன
ராற்றினன் மதத்தி னஃதை யகிகொன்று பகையை யோட்ட.

(இ - ள்) ஸ்தோதாக்களுக்கு இன்பத்தைத் தரு மிந்திரனே ! தேரிற் பூட்டிக்கொண்டு வாயுவேகமாகச் செல்லும் குதிரைகளாகிய உனது வாஹநங்களை யேறுவாயாக. கவியின் புத்திரனாகிய உசனன் மதத்திற் சிறந்த வச்சிராயுதத்தை யுனக்குத் தருவதற்குமுன் அதனை விருத்திரவதஞ் செய்யக்கூடியதாகவும், சத்துருக்களைக் கடக்கவல்லதாகவுஞ் செய்தான்—(எ - று.) உசனா காவ்யனைப்பற்றி மண். 1 சூக். 51 ரிக் 10ற் பார்க்க.

13. சூரியன் கபில மாவைச் சூரனீ நிறுத்த, வன்னு
னேரியல் தேருருளை யேதச னிழுத்தான், வேந்தே ;
பேரியல் பதிற்றென்பானு நதிகளைக் கடந்து பேரச்
சீரியலாத கன்மப் புரட்டரைச் சேர்த்தா யன்றே.

(இ - ள்) இந்திரனே ! சூரியனது கபில நிறமுள்ள குதிரைகளைச் சூரிய ரூபமாக வொழுகும் நீ, ஓடாமல் மேற்குக் கரையில் நிறுத்தியபோது, இரவில் அச்சூரியனது தேருருளைகளை ஏதசன் என்னும் குதிரையானது இழுத்து மறுபடியும் கிழக்குப் பக்கத்திற் கொண்டுவந்துவிட்டது. யக்ஞகன்மஞ் செய்யாத வசுரர்களைக் கப்பல் செல்லக்கூடிய பெரிய நதிகள் தொண்ணூறைத் தாண்டித் தூர தேசத்திற் போயிருக்கும்படி செய்தாய்—(எ - று.) ஏதசன், ஓர் ரிஷியின் பெயராக மண். 1 சூக். 61 ரிக் 15-ல் வந்துளது. ஈண்டு அது சூரியனை யிரவில் மேற்கிலிருந்து கிழக்கிற் கொண்டுவந்து நிறுத்தும் ஒற்றைக் குதிரையாகச் சொல்லப்படுகிறது. தைத்திரீயஸம்ஹிதை 1—6—4 பார்க்க. ஏதசோக என்னும் வடமொழிப் பதத்திற்கு ஏதசனும் என்று உரை கூறுவர் ஸாயணர். (M. Bergaigne) பெர்கேன் என்பவர் ஏதசன் என்னும் ரிஷிக்குப் பதிலாக அவ்விருடியாற் காக்கப்படும் அக்கினியையாவது, அல்லது ஆஹுதி செய்யப்படும் ஸோமத்தை யாவது கூறலாமென்றும், அந்த ஸோமமே அடிக்கடி குதிரையாக வுருவகிக்கப்படுவது வேத மரபென்றும், அதனால் ஏதசன் ரிஷி குதிரை ஆகிய இருபொருள் குறித்தல் தகுதியேயென்றும் கூறுவர்.

14. இந்திர, வெமை யித்துன்பி னெடுக்க வச்சிரத் தோய்: மேலு
மந்தி லெம்பாப மெல்லா மபகரித்திடுக ; தேரி

னந்துறு செல்வம், பாய்மா நலக்கமே கூட்டுமஃதை
யெந்தஞ் சீர், உண்மை, யுண்டி யெண்ணியே யிடுக நன்கே.

(இ - ள்) வச்சிரியே! இந்திரனே! எம்மை இக்கஷ்டத்தினின்றும் நீக்குக. எமது பாபங்களை யெல்லாம் பரிகரிப்பாயாக. எங்களுடைய கீர்த்தியையும், ஸத்திய வாக்கையும், உணவையும் கருதி எங்களுக்குத் தேரோடு கூடிய குதிரைகளாகிய செல்வத்தை நன்றாக வளிப்பாயாக—(எ - று.)

15. வலியினிற் பெருத்தோ,யுன்றன் வள ரருண்மதி யெப்போது
நலிவுறா தெம்மைச் சேர்க; நல்லன வெம்மைச் சூழ்க;
வலியுறு பதி நீ கோக்கள் யாம்பெற மகவா னீக;
பொலிவுறு துதியோர் யாமுஞ் சந்ததி பொருந்தி வாழ்க.

(இ - ள்) வலிமையிற் பெரிய விந்திரனே! உனது அநுக்கிரக புத்தி யெப்போதுங் கெடாமலெம்மைச் சேருக. நல்ல அன்னமானது எம்மைப் பொருந்தட்டும். மகவானே! தனஸ்வாமியாகிய நீ எங்களுக்குப் பசுக்களை யளிப்பாயாக. ஸ்தோதாக்களாகிய யாம் புத்திர பௌத்திராதி ஸந்தானங்களைப் பெற்று வாழ்க—(எ-று.) அர்ய: என்பதற்கு தனஸ்வாமியாகிய நீ யென்பார் ஸாயணர். ஆனால் சத்துருவினுடைய வென்பார் மேனாட்டாசிரியர். அற்றேல் 'நலிவுறு பகைவன் காலி நாம் பெற மகவானீக;'' என மூன்றாமடியை மாற்றிப் படிக்க. இச் சூக்த தேவதை விச்வதேவர்கள் அல்லது இந்திரனெனக் குறிக்கப் பட்டிருப்பினும், ரிஷி இந்திரனையே முற்றிலும் துதித்துள்ளார்.

வருக்கம் 26

ஆகச் செய்யுள் 1334

8-வது அத்தியாயம் முற்றும்

## முதலஷ்டகம் முற்றிற்று.

---

வேதங் கதியென்னு மென்னுணர்வைப் பல்லுரையாம்
போதந் தருதாழி பூட்டிநவ—நீதமெனுங்
கட்டுரையோ டிந்நூலைக் கண்டே னருளாளர்
தொட்டுணருந் தூய்மை சுவைக்க.

(இ - ள்) வேதமே கதி யென்றெண்ணிய வென் புத்தியைப் பல பாஷ்யங்களாகிய தாழியிற் செலுத்திக் கடைந்தெடுத்ததாகிய நவநீதம் என்னும் பெயரிய உரையோடு கூடிய இந்நூலைச் சொன்னேன், இதனை யருளாளர்கள் படித்தறியும் வண்ணம்—(எ - று.)

வேத புருஷாய மங்களம்.

## முதலஷ்டக அட்டவணை

இம்முதலஷ்டகத்தில், மதுச்சந்தஸ் முதலிய 16 ரிஷிகள் பாடியுள்ளார். இதனிடத்துக் காயத்திரி முதலிய 23 சந்தஸ்களும் 121 சூக்தமு முண்டு. இவ்வஷ்டகத்திற் பாடல் பெற்ற தேவதைகள் அக்கினி முதற் முப்பத்தறுவ ராம். இவருள் இணைத்தேவதைகள் இந்திரா வருணர் முதற் பதின்மராம்.

## முதல் அஷ்டக அட்டவணை

இந்நூலின்கண் வரும் தெய்வப் பெயர் மக்கட் பெயர்களுக்கு ஓர் அகராதி இந் நூலினிறுதியில் வெளி வரும். வடமொழிச் சந்தங்களெல் லாம் எழுத்து வகையா லமைக்கப்படுவன. அம்மாதிரி எழுத்தெண்ணி யமைக்கப்படும் தமிழ்ச் செய்யுள் வகைகள் மிகச் சிலவாதலின் அதனைக் கரு தாது வடமொழி இருக்குக்களின் அடிப் பெருமை சிறுமைக்கேற்பத் தமிழ்ச் செய்யுள் வகைகளை யமைத்துள்ளதோடு அவ்வொழுங்கே நூன்முழுதும் பின் பற்றப்பட்டுள்ளது. பங்க்தி என்னும் சந்தஸ்மட்டும் இருவகைப்பட்ட பாக்களால் எழுதப்பட்டுப் போயிற்று. இதனை நான்காவது அஷ்டகத்தே கண்டறிக.

| அத்யாயம். | வருக்கம். | சூக்தம். | வடமொழிரிக். | தமிழ் இருக்கு. |
|---|---|---|---|---|
| 1-வது | 37 | 19 | 195 | 195 |
| 2-வது | 38 | 13 | 189 | 189 |
| 3-வது | 35 | 14 | 173 | 173 |
| 4-வது | 29 | 15 | 152 | 152 |
| 5-வது | 31 | 19 | 185 | 155 |
| 6-வது | 32 | 14 | 163 | 163 |
| 7-வது | 37 | 18 | 172 | 172 |
| 8-வது | 26 | 9 | 135 | 135 |
| ஆக. 8 அத். | 265 | 121 | 1364 | 1334 |

## முதலஷ்டகத்தின் சூக்த அட்டவணை

### முதலத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 1 | மதுச்சந்தஸ் | அக்கினி | காயத்திரி | கலிவிருத்தம். |
| 2 | ஷை | வாயு இந்திரவா | ,, | ,, |
| | | யுக்கள், மித் | ,, | ,, |
| | | திராவருணர். | | |
| 3 | ,, | அசுவினிகள் | | |
| | | விச்வ தேவர்கள், | ,, | ,, |
| | | ஸாஸ்வதி, | | |

## ரிக்வேதம் முதலஷ்டகம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 4 | ,, | இந்திரன் | காயத்திரி | ,, |
| 5 | ,, | ,, | ,, | ,, |
| 6 | ,, | இந்திரன், மருத்துக்கள். | ,, | ,, |
| | | இந்திரா மருத்துக்கள் | ,, | ,, |
| 7 | ,, | இந்திரன். | ,, | ,, |
| 8 | ,, | ,, | ,, | ,, |
| 9 | ,, | ,, | ,, | ,, |
| 10 | ,, | ,, | அநுஷ்டுப் | கலிநிலைத்துறை |
| 11 | ஜேதா | ,, | ,, | ,, |
| 12 | மேதாதிதி. | அக்கினி. | காயத்ரி. | கலிவிருத்தம். |
| 13 | ,, | அக்கினியின்பல ரூபங்கள் | ,, | ,, |
| 14 | ,, | விச்வதேவர்கள் | ,, | ,, |
| 15 | ,, | ரிதுக்கள் இந்திரன் மருத்துக்கள் துவஷ்டா, அக்கினி மித்திராவருணர், அசுவினிகள் | ,, | ,, |
| 16 | ,, | இந்திரன் | ,, | ,, |
| 17 | ,, | இந்திராவருணர். | காயத்ரி<br>பாதநிச்ருத். | ,,<br>வேறோர்வகைக்கவி |
| 18 | ,, | பிரஹ்மணஸ்பதி, இந்திரஸோமர், தக்ஷிணை. | காயத்ரி. | கலி விருத்தம். |
| 19 | ,, | அக்கினியும் மருத்துக்களும் | ,, | ,, |

### 2-வது அத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 20 | ,, | ரிபுக்கள். | ,, | ,, |
| 21 | ,, | இந்திராக்கினிகள். | ,, | ,, |
| 22 | ,, | அசுவினிகள், ஸவிதா, அக்கினி, இந்திராணி வாருணி அக்னாயி மூவரும், | ,, | ,, |

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| | | வானம் பூமி கள் பூமி, விஷ்ணு. | | |
| 23 | ,, | வாயு | | ,, |
| | | இந்திர வாயுக்கள், மித்திரா | புரவுஷ்ணி, | கந்தாநுபூதிக் கவி |
| | ,, | வருணர்கள், விச்வதேவர்கள், பூஷன், ஆப: | அநுஷ்டுப் பிரதிஷ்டா. | கலிநிலைத் துறை கலிவிருத்தம் |
| 24 | சுநச்சேபன் | வருணன், அக்கினி, ஸவிதா. | த்ருஷ்டுப் காயத்ரி | அறுசீர்க்கழி நெடில், கலிவிருத்தம். |
| 25 | ,, | வருணன். | காயத்ரி | கலிவிருத்தம். |
| 26 | ,, | அக்கினி | ,, | ,, |
| 27 | ,, | ,, | காயத்ரி த்ருஷ்டுப் | கலிவிருத்தம். அறுசீர்க்கழிநெடில். |
| 28 | ,, | இந்திரன், உரலும் உலக்கையும். | அநுஷ்டுப் காயத்ரி | கலிநிலைத் துறை கலிவிருத்தம். |
| 29 | ,, | இந்திரன். | பங்க்தி | அறுசீர்க்கழி. நெடில் ஓரடி மேல்வைப்பு. |
| 30 | ,, | இந்திரன், அசுவினிகள் உஷஸ். | காயத்ரி பாதநிச்ருத் த்ருஷ்டுப் | கலிவிருத்தம். ஷை வேறு. அறுசீர்க்கழி. நெடில் |
| 31 | ஹிரண்யஸ தூபன். | அக்கினி. | ஜகதி, த்ருஷ்டுப். | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழிநெடில், அறுசீர்க்கழிநெடில். |
| 32 | ,, | இந்திரன், | த்ருஷ்டுப். | அறுசீர்க்கழிநெடில். |

## 3-வது அத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 33 | ஹிரண்யஸ் தூபன் | இந்திரன், | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில் |
| 34 | ,, | அசுவினிகள், | ஜகதி த்ருஷ்டுப் | ஷை 4 காய்ச் சீருள்ளது, அறுசீர்க்கழிநெடில். |
| 35 | ,, | ஸவிதா, அக்கினி, மித்திரா வருணர்கள். இரவு, | ,, ,, | ,, ,, |

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 36 | கண்வன். | அக்கினி, யூபம். | ப்ரஹதி ஸதோப்ரஹதி | ஷ 3-ம் சீரும் 6-ம் சீரும் காய்ச் சீருள்ளது, எழுசீர்க்கழிநெடில். |
| 37 | கண்வன். | மருத்துக்கள். | காயத்ரி | கலிவிருத்தம். |
| 38 | ,, | ,, | ,, | ,, |
| 39 | ,, | ,, | ப்ரஹதி ஸதோப்ரஹதி | சூக். 36 போல. |
| 40 | ,, | ப்ரஹ்மணஸ்பதி | ,, | ,, |
| 41 | ,, | வருணன், மித்திரன் அர்யமான் ஆதித்தியர்கள் | காயத்ரி | கலிவிருத்தம். |
| 42 | ,, | பூஷன். | ,, | ,, |
| 43 | ,, | ருத்திரன், மித்திராவருணர், ஸோமன். | அநுஷ்டுப். | கலிநிலைத் துறை |
| 44 | பிரஸ்கண்வன். | அக்கினி. | ப்ரஹதி. ஸதோப்ரஹதி | 3-ம் சீரும் 6-ம் சீரும் காய்ச்சீருள்ள அறுசீர்க்கழிநெடில், எழுசீர்க்கழிநெடில். |
| 45 | ,, | அக்கினி. | அநுஷ்டுப் | கலிநிலைத்துறை. |
| 46 | ,, | அசுவினிகள். | காயத்ரி. | கலிவிருத்தம். |

## 4-வது அத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 47 | பிரஸ்கண்வன் | அசுவினிகள். | ப்ரஹதி, ஸதோப்ரஹதி, | சூக்தம் 44 போல. |
| 48 | ,, | உஷஸ் | ,, | ,, |
| 49 | ,, | ,, | அநுஷ்டுப் | கலிநிலைத் துறை |
| 50 | ,, | ஸூர்யன் | காயத்ரி அநுஷ்டுப் | கலிவிருத்தம் கலிநிலைத்துறை |
| 51 | ஸவ்யன் | இந்திரன் | ஜகதி, த்ருஷ்டுப் | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில், அறுசீர்க்கழி நெடில் |
| 52 | ,, | ,, | ,, | ,, |
| 53 | ,, | ,, | ,, | ,, |
| 54 | ஸவ்யன். | இந்திரன் | ஜகதி. த்ருஷ்டுப். | 4 காய்ச்சீரறுசீர் அறுசீர்க்கழி நெடில். |
| 55 | | | ஜகதி. | 4 காய்ச்சீருள்ள அறுசீர்க்கழி நெடில். |

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 56 | ,, | ,, | ,, | ,, |
| 57 | ,, | ,, | ,, | ,, |
| 58 | நோதா. | அக்கினி. | ஜகதி, | 4 காய்ச்சீருள்ள |
| | | | த்ருவ்ஷ்டுப். | அறுசீர்க்கழி நெடில், |
| | | | | அறுசீர்க்கழி நெடில். |
| 59 | ,, | வைச்வாநர | த்ருவ்ஷ்டுப். | அறுசீர்க்கழி நெடில். |
| | | அக்கினி | ,, | ,, |
| 60 | ,, | அக்கினி | ,, | ,, |
| 61 | ,, | இந்திரன் | ,, | ,, |

## 5-வது அத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 62 | நோதா | இந்திரன். | த்ருவ்ஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 63 | ,, | ,, | ,, | ,, |
| 64 | ,, | மருத்துக்கள் | ஜகதி, | 4 காய்ச்சீருள்ள |
| | | | த்ருவ்ஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில், |
| 65 | பராசரன். | அக்கினி | துவிபாதவிராஜ் | கொச்சகக் கலிப்பா |
| 66 | ,, | ,, | ,, | ,, |
| 66 | பராசரன். | அக்கினி | துவிபாதவிராஜ் | கொச்சகம் |
| 67 | ,, | ,, | ,, | ,, |
| 68 | ,, | ,, | ,, | ,, |
| 69 | ,, | ,, | ,, | ,, |
| 70 | ,, | ,, | ,, | ,, |
| 71 | ,, | ,, | த்ருவ்ஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 72 | ,, | ,, | ,, | ,, |
| 73 | ,, | ,, | ,, | ,, |
| 74 | கோதமன் | ,, | காயத்ரி | கலிவிருத்தம். |
| 75 | ,, | ,, | ,, | ,, |
| 76 | ,, | ,, | த்ருவ்ஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 77 | ,, | ,, | ,, | ,, |
| 78 | ,, | ,, | காயத்ரி | கலிவிருத்தம். |
| 79 | கோதமன். | அக்கினி. | த்ருவ்ஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| | | | உஷ்ணி | கந்தரநுபூதிக் கலி |
| | | | | கலிவிருத்தம். |
| 80 | ,, | இந்திரன் | பங்க்தி | அறுசீர்க்கழி நெடில் |
| | | | | ஓரடி மேல்வைப்பு. |

## 6-வது அத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 81 | கோதமன். | இந்திரன் | பங்க்தி | அறுசீர்க்கழி நெடில் |
| | | | | ஓரடி மேல்வைப்பு. |
| 82 | ,, | ,, | ௸ | ௸ |
| | | | ஜகதி | 4 காய்ச்சீருள்ள |
| | | | | அறுசீர்க்கழி நெடில். |
| 83 | ,, | ,, | ,, | ,, |
| 84 | ,, | ,, | அநுஷ்டுப், | கலிநிலைத்துறை, |

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| | | | உஷ்ணி, | கந்தாநுபூதிக்கலி, |
| | | | பங்க்தி காயத்ரி, | அறுசீர் ஓரடி |
| | | | த்ருஷ்டுப், | மேல் வைப்பு, |
| | | | ப்ரஹதி, | கலிவிருத்தம். |
| | | | | அறுசீர்க்கழி |
| | | | | நெடில், 2 காய் |
| | | | | ச்சீருள்ள அறுசீர், |
| | | | ஸதோப்ப்ஹதி | எழுசீர்க்கழிநெடில் |
| 85 | கோதமன் | மருத்துக்கள் | ஜகதி, | 4 காய்ச்சீருள்ள அறு |
| | | | த்ருஷ்டுப். | சீர், அறுசீர்க்கழி நெ |
| 86 | ,, | ,, | காயத்ரி | டில், கலி விருத்தம் |
| 87 | ,, | ,, | ஜகதி | 4 காய்ச்சீருள்ள |
| | | | | அறுசீர் |
| 88 | ,, | ,, | ப்ரஸ்தார பங்தி, | அறுசீர்க்கழி |
| | | | | நெடில் ஓரடி, |
| | | | விராட்ரூபா, | மேல்வைப்பு |
| | | | த்ருஷ்டுப், | அறுசீர் |
| 89 | ,, | விச்வதே | ஜகதி | ஷை 4 காய்ச்சீருள்ள |
| | | வர்கள் | விராட்ஸ்தானம் | அறுசீர் அறுசீர், |
| | | | த்ருஷ்டுப் | அறுசீர்க் கழிநெடில் |
| 90 | ,, | ,, | காயத்ரி | கலிவிருத்தம், |
| | | | அநுஷ்டுப் | கலிநிலைத்துறை. |
| 91 | ,, | ஸோமன் | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழிநெடில், |
| | | | காயத்ரி, | கலிவிருத்தம் |
| | | | உஷ்ணி. | கந்தாநுபூதிக்கலி. |
| 92 | ,, | உஷஸ் | ஜகதி, | 4 காய்ச்சீருள்ள |
| | | அசுவினிகள் | | அறுசீர் |
| | | | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழிநெடில் |
| | | | உஷ்ணி | கந்தாநுபூதிக்கலி |
| 93 | ,, | அக்நிஸோமர் | அநுஷ்டுப், | கலிநிலைத்துறை |
| | | | காயத்ரி, | கலிவிருத்தம் |
| | | | த்ருஷ்டுப், | அறுசீர்க்கழி நெடில். |
| | | | ஜகதி | 4 காய்ச்சீருள்ள அறுசீர் |
| 94 | குத்ஸன் | அக்கினி. | ஜகதி | 4 காய்ச்சீருள்ள |
| | ,, | மித்திரன் | | அறுசீர். |
| | | வருணன் | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி |
| | | அதிதி, | | நெடில் |
| | | ஸிந்து, ரோதஸீ. | | |

## 7-வது அத்தியாயம்

| | | | | |
|---|---|---|---|---|
| 95 | குத்ஸன் | அக்கினி | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 96 | ,, | ,, | ,, | ,, |
| 97 | ,, | ,, | காயத்ரி | கலிவிருத்தம் |

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 98 | குத்ஸன் | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 99 | காச்யபன் | ,, | ,, | ,, |
| 100 | வார்ஷாகிரர் | இந்திரன் | ,, | ,, |
| 101 | குத்ஸன் | ,, | த்ருஷ்டுப் ஜகதி. | அறுசீர். 4 காய்ச்சீருள்ள அறுசீர். |
| 102 | ,, | ,, | த்ருஷ்டுப் ஜகதி | 101 போல |
| 103 | , | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில் |
| 104 | ,, | ,, | ,, | ,, |
| 105 | குத்ஸனும், த்ருதன் ஆப்தியனும். | விச்வ தேவர்கள் | பங்க்தி, மஹாப் ரஹதி யவமத்யா, த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில் ஓரடி மேல் வைப்பு, 2 காய்ச்சீருள்ள அறுசீர் ஓரடிமேல் வைப்பு, அறுசீர்க்கழி நெடில். |
| 106 | குத்ஸன் | ,, | ஜகதி, த்ருஷ்டுப் | 4 காய்ச்சீருள்ள அறுசீர், அறுசீர்க்கழி நெடில். |
| 107 | ,, | ,, | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 108 | ,, | இந்திராக் கினிகள் | ,, | ,, |
| 109 | ,, | ,, | ,, | ,, |
| 110 | ,, | ரிபுக்கள் | த்ருஷ்டுப், ஜகதி | அறுசீர், 4 காய்ச்சீருள்ள அறுசீர் |
| 111 | ,, | ,, | ,, | ,, |
| 112 | ,, | ரோதஸீ அசுவினிகள். அக்கினி. | த்ருஷ்டுப் ஜகதி | அறுசீர், 4 காய்ச்சீருள்ள அறுசீர் |

## 8-வது அத்தியாயம்

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
|---|---|---|---|---|
| 113 | குத்ஸன் | உஷஸ், உஷஸும் இரவும், | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில் |
| 114 | | ருத்ரன் | ஷை ஜகதி | ஷை 4 காய்ச்சீருள்ள அறுசீர் |
| 115 | ,, | ஸூர்யன் | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழி நெடில். |
| 116 | கட்சீவான் | அசுவினிகள் | ,, | ,, |
| 117 | ,, | ,, | ,, | ,, |
| 118 | ,, | ,, | ,, | ,, |

| சூக்தம். | ரிஷி. | தேவதை. | வடமொழிச்சந்தம். | தமிழ்க் கவி. |
| --- | --- | --- | --- | --- |
| 119 | குத்ஸன் | அசுவினிகள் | ஜகதி | 4 காய்ச்சீருள்ள அறுசீர். |
| 120 | ,, | ,, | (a) காயத்ரி, (b) ககுப், தநுசிரா உஷ்ணி, க்ருதி (c) விஷ்டாரப்ரஹதி, (d) நஷ்டரூபி, (e) காவிராஜ், விராஜ். | (a) கலிவிரு (b) கந்தாநுபூதிக் கலி, (c) 2 காய்ச்சீருள்ள அறுசீர், (d) கலிகிளைத்துறை (e) மூன்றடித் தாழிசை |
| 121 | ,, | விச்வதேவர் அல்லது இந்திரன். | த்ருஷ்டுப் | அறுசீர்க்கழிநெடில் |

---

☞ முக்கிய குறிப்பு :—இவ்விடத்து முதல் மண்டலம் முடியவில்லையென்பதைக் கவனிக்கவும். முதல் மண்டலத்தில் இன்னும் 70 சூக்தங்கள் மிகுந்துள்ளன.

# கிருஷ்ண யஜுர் வேதம்

*தைத்திரீய ஸம்ஹிதையில் உபயோகப்பட்டுள்ள ரிக்வேத முதலஷ்டக ரிக்குக்கள். இவற்றுள் சில பத மாறியுமுள. சாய்ந்த எண்கள் ஒரு முறைக்கு மேல் வந்துளதைக் குறிக்கும்.*

## முதற் காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 109 | 2 |
| ,, | 50 | *1* |
| ,, | 91 | 19, 17 |
| ,, | 22 | 19, 20, 3, 5, 15 |
| ,, | 27 | 7 |
| ,, | 71 | 8 |
| ,, | 12 | 10, 6 |
| ,, | 2 | 4 |
| ,, | 3 | 7 |
| ,, | 107 | 1 |
| ,, | 113 | 11 |
| ,, | 84 | 1—3 |
| ,, | 10 | 3 |
| ,, | 115 | 1 |
| ,, | 24 | 8, 9, 14, 15 |
| ,, | 23 | 23 |
| ,, | 74 | 1 |
| ,, | 1 | 7, 8, 9 |
| ,, | 18 | 1 |
| ,, | 98 | 2, 1 |
| ,, | 85 | 12 |
| ,, | 30 | 13 |
| ,, | 25 | 10 |
| ,, | 27 | 1 |

## 2-வது காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| ,, | 87 | 6 |
| ,, | 107 | 1 |
| ,, | 25 | 19 |
| ,, | 24 | 11 |
| ,, | 72 | *1* |
| ,, | 30 | *13* |
| ,, | 7 | 10 |
| ,, | 91 | 8, 4, 16, 18 |
| ,, | 93 | 9, 5, 1, 6, 7 |
| 1 | 85 | 12 |
| ,, | 61 | 9 |
| ,, | 50 | 1, 8 |
| ,, | 115 | 1 |
| ,, | 12 | 2 |
| ,, | 17 | 1 |
| ,, | 91 | 1 |

## 3-வது காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 1 | 3 |
| ,, | 13 | 10 |
| ,, | 7 | 10 |
| ,, | 79 | 1, 2 |
| ,, | 38 | 8 |
| ,, | 64 | 6 |
| ,, | 50 | 1 |
| ,, | 115 | 1 |
| ,, | 54 | 11 |
| ,, | 113 | 6 |
| ,, | 91 | 16. 6 |
| ,, | 22 | *13* |
| ,, | 43 | 2 |
| ,, | 8 | 1 |
| ,, | 5 | 6 |
| ,, | 25 | 1 |
| ,, | 35 | 2 |
| ,, | 24 | 3 |
| ,, | 74 | 3 |
| ,, | 12 | 16 |

## 4-வது காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| ,, | 36 | 13 |
| ,, | 50 | 10 |
| ,, | 96 | 5 |
| ,, | 1 | 4 |
| ,, | 91 | 9, 8, 4 |

## ரிக்வேதமும் யஜுர் வேதமும்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 3 | 11 |
| ,, | 85 | 7 |
| ,, | 90 | 6—8 |
| ,, | 109 | 6 |
| ,, | 86 | 1, 2 |
| ,, | 87 | 6 |
| ,, | 24 | 14, 15 |
| ,, | 84 | 16 |
| ,, | 25 | 19 |
| ,, | 24 | 11 |
| ,, | 91 | 5, 12 |
| ,, | 1 | 1, 3 |
| ,, | 86 | 6 |
| ,, | 37 | 1 |
| ,, | 87 | 3, 2 |
| ,, | 12 | 2 |

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 7 | 10 |
| ,, | 45 | 6 |
| ,, | 79 | 4, 5, 6 |
| ,, | 114 | 2, 7, 10 |
| ,, | 11 | 1 |

5-வது காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 27 | 1 |

6-வது காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 24 | 3 |
| ,, | 74 | 3 |

7-வது காண்டம்

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 6 | 1, 2 |
| ,, | 35 | 11 |

## ஸாம வேதம்

இவ்வஷ்டகத்திலிருந்து ஸாமவேதத்தில் வந்துள்ள ரிக்குக்களின் எண்களை இதன் அடியிற் காண்க. இனி ஸாமவேதத்தை வெளிப்படுத்துங்கால் இப்பட்டி பெரிதும் உதவுமானதுபற்றி இது வெளிப்படுத்தப்படுவதாயிற்று.

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| 1 | 1 | 7 |
| ,, | 2 | 7, 8, 9 |
| ,, | 3 | 4, 5, 6, 10 |
| ,, | 4 | *1*, 2, 3 |
| ,, | 5 | *1*, 2, 3 |
| ,, | 6 | 1, 2, 3, 4, 5, 7 |
| ,, | 7 | *1*—4, 5, 6, 8, 10 |
| ,, | 8 | 1, 5 |
| ,, | 9 | 1, 4 |
| ,, | 10 | *1*—3, 5 |
| ,, | 11 | 1—3, *4*, 5, 8 |
| ,, | 12 | *1*—3, 6, 7, 8, 9 |
| ,, | 13 | 1, 4 |
| ,, | 15 | 5 |
| ,, | 18 | 1, 6 |
| ,, | 19 | 1 |
| ,, | 22 | 16, *17*—21 |
| ,, | 23 | 4—6 |
| ,, | 25 | 19 |
| ,, | 26 | 6, 7, 10 |
| ,, | 27 | *1*—4, 5, 6, 7, 9, *10*, 11, 12 |
| ,, | 30 | 1, *4*—6, *7*—9, *13*—15 |
| ,, | 34 | 2, 5, 9 |
| ,, | 36 | 1, 13, 19 |
| ,, | 37 | 3, 10 |
| ,, | 40 | 3 |

| மண். | சூக். | இருக்கு. |
|---|---|---|
| ,, | 41 | 1 |
| ,, | 44 | *1*, 2, 13 |
| ,, | 45 | 1 |
| ,, | 46 | *1*, 2, 3 |
| ,, | 47 | 1 |
| ,, | 49 | 3 |
| ,, | 50 | *1* |
| ,, | 51 | 1 |
| ,, | 52 | 1 |
| ,, | 57 | 4 |
| ,, | 74 | 1—3 |
| ,, | 75 | 3—5 |
| ,, | 79 | *4*, 5—9 |
| ,, | 80 | 1, 3, 7 |
| ,, | 81 | *1*, 2, *3*, 4 |
| ,, | 82 | 1, 2, 4 |
| ,, | 84 | *1*, 2, 3, *4*, 5, 6, 7, 8, 9, 10, 12, 13, 14, 15, 16, 19, 20 |
| ,, | 86 | 8 |
| ,, | 89 | 5, 8 |
| ,, | 90 | 1 |
| ,, | 92 | 1—3, 13—15, 16, 17 |
| ,, | 94 | *1*, 3, 4 |
| ,, | 101 | 1 |
| ,, | 105 | 1, 5 |
| ,, | 113 | 1—3 |

---

இவ்வகையாக, முதலஷ்டகத்தில் 51 சூக்தங்களில் 200 ஸாமங்கள் ரிக்வேதத்திலிருந்து வந்துள்ளன.

[மூ. சூ. தடித்த எண்கள் ஸாமவேதத்தில் ஒரு முறைக்குமேல் வந்துள்ளன.]

## அதர்வ வேதம்

முதலஷ்டகத்திலிருந்து அதர்வ வேதத்தில் எடுத்தாளப் பெற்றுள்ள இருக்குக்களின் அட்டவணை.

| மண். | சூக். | ரிக்கு. |
|---|---|---|
| 1 | 3 | 4, 6 |
| ,, | 4 | 1—10 |
| , | 5 | 3—10 |
| ,, | 6 | 1—10 |
| ,, | 7 | 1—10 |
| ,, | 8 | 1—10 |
| ,, | 9 | 1—10 (முழுதும்) |
| ,, | 12 | 1—3 |
| ,, | 22 | 15, 17—20 |
| ,, | 23 | 24 |
| ,, | 24 | 9, 15 |
| ,, | 25 | 15 |
| ,, | 29 | 1—7 (முழுதும்) |
| ,, | 30 | 4—9, 13—15 |
| ,, | 31 | 16 |
| ,, | 32 | 1—3 |
| ,, | 46 | 6 |
| ,, | 56 | 1—9, 13 |
| ,, | 53 | (முழுதும்) |
| ,, | 57 | ௸ |
| ,, | 61 | ௸ |
| ,, | 81 | 1—3, 7, 9 |
| ,, | 82 | 2 |
| ,, | 83 | (முழுதும்) |
| ,, | 84 | 7—16 |
| ,, | 85 | 6 |
| ,, | 86 | 1 |
| ,, | 89 | 10 |
| ,, | 94 | 1 |
| ,, | 97 | (முழுதும்) |
| ,, | 102 | 4 |
| ,, | 104 | 9 |
| ,, | 105 | 1 |
| ,, | 114 | 7 |
| ,, | 115 | 1, 2, 4, 5 |



இவற்றுள் சில ரிக்குக்கள் ஒரு முறைக்குமேல் திரும்பி வந்துள்ளன.